# மரணம்

## சொல்லப்படாத ரகசியங்கள்



இப்புத்தகம் இறக்கக்கூடியவருக்கே

**சத்குரு**




# மரணம்

## சொல்லப்படாத ரகசியங்கள்

சத்குரு

isha

ஈஷா அறக்கட்டளை

**மரணம்:** சொல்லப்படாத ரகசியங்கள்



முதல் பதிப்பு: பிப்ரவரி 2021

பதிப்பாளர்:
ஈஷா அறக்கட்டளை
வெள்ளியங்கிரி மலைச்சாரல்
ஈஷான விஹார் அஞ்சல்
கோயம்புத்தூர் - 641114

தொலைபேசி: +91 83000 83111
email: info@ishafoundation.org
website: tamil.sadhguru.org

**ISBN Number:** 978-81-87910-91-6

விலை: ₹ 350

# பொருளடக்கம்

## பாகம் 2: நல்லமுறையில் இறக்கலாம்

# உயிரின் ரகசியம் உடைப்பவர் யாரோ?

சத்குரு அவர்களை ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள் பொருத்திவிட முடியாது. ஒரு ஆன்மீக குரு என்பவர் இப்படித்தான் இருக்கவேண்டும் என்பதைப் பற்றி நாம் வைத்திருக்கும் அத்தனை கருத்துகளையும், முடிவுகளையும் தகர்த்துவிடும் படியே அவருடைய ஒவ்வொரு வெளிப்பாடும் இருக்கும். அப்படித்தான் அவர் தன்னை எப்போதுமே அமைத்துக் கொள்கிறார்.

காலம்காலமாக இருக்கும் மத நம்பிக்கைகளையும், சாத்திரங்களையும், தத்துவங்களையும் துளியும் சாராமல், தன்னுடைய உள் அனுபவத்தில் இருந்து வெளிப்படுவதை உள்ளது உள்ளபடி வார்த்தை பிசகாமல் அப்படியே போட்டு உடைப்பது சத்குருவின் தனிச்சிறப்புகளில் ஒன்று. உலகம் முழுவதும் ஆத்திகர்களும், நாத்திகர்களும், விஞ்ஞானிகளும் ஒரே அளவுக்கு ஒரு ஆன்மீகக் குருவை நேசிக்கிறார்கள் என்றால், அதற்கு சத்குருவின் இந்த அணுகுமுறையே காரணம். வாழ்க்கையின் பல்வேறு அம்சங்களைப் பற்றி சத்குரு அவர்கள் தெள்ளத்தெளிவாக நவீன மனதின் காரண அறிவுக்கு புரியும்படி பேசுகிறார். அதுவே லட்சக்கணக்கான இளைஞர்களை இன்று சத்குருவை நோக்கி ஈர்க்கிறது. இருபத்தியோராம் நூற்றாண்டில் உலகெங்கும் உள்ள இளைஞர்களுக்குள் இப்படிப்பட்ட அலையை உருவாக்கும் ஆன்மீகத் தலைவர் சத்குரு ஒருவர் மட்டுமே என்றால் அது மிகையாகாது.

இமயமலையில் தன் சிஷ்யர்களோடு ஆன்மீகத்தின் ஆழமான அனுபவங்களைப் பகிர்ந்துகொள்கிறார். அதே யாத்திரையில் ஜீன்ஸ் அணிந்துகொண்டு மலை ஏறுகிறார். "காவேரி கூக்குரல்" என்று நதிகளை மீட்க மோட்டார் சைக்கிளில் பயணித்து மக்களை சந்திக்கிறார். மாட்டு வண்டியையும், ஃபார்முலா ஒன் ரேஸ் கார்களையும், ஹெலிகாப்டர்களையும் சுலபமாய் கையாள்கிறார், ஓட்டுகிறார். தமிழகத்தின் சிறைச்சாலைகளிலும் அவருடைய இலவச யோகா வகுப்புகள் உண்டு.

ஐக்கிய நாடுகள் சபையிலும் அவருடைய அறிவுரைக்கும், தொடர்ச்சியான பங்களிப்புக்கும் மனமார்ந்த அங்கீகாரம் உண்டு. சர்வதேச அரங்கில் மிகப்பெரிய தாக்கம் ஏற்படுத்தும் தலைவர்களுடன், தொழிலதிபர்களுடன் சகஜமாக கலக்கிறார். உலகப் பொருளாதார மாநாட்டில் வேறு யாருக்கும் அளிக்கப்படாத வகையில், சத்குருவிற்கு மட்டும் நான்கைந்து முறைகளுக்கும் மேலாக உரையாற்ற பிரத்யேக அழைப்பு தரப்படுகிறது. அதேசமயம், வெள்ளியங்கிரியின் தானிக்கண்டி கிராமத்து பாட்டிகளோடும் குழந்தைகளோடும் சேர்ந்து பழங்குடி இசைக்கு ஆனந்தமாக ஆடுகிறார்.

சித்தர்களும் ஞானிகளும் வாழ்ந்து அருள்புரிந்த வெள்ளியங்கிரி மலையின் அடிவாரத்தில் ஈஷா யோக மையத்தை அமைத்து பண்டைய யோகிகளின் பாரம்பரிய ஞானத்தை, அதன் சாரமும் வீரியமும் துளியும் குறையாமல், இன்றைய மனிதனுக்கு ஏற்றவகையில் எளிமையாக பரிமாறுகிறார். யோக விஞ்ஞானத்தின் உச்சமான வெளிப்பாடாக தியானலிங்கத்தை பிரதிஷ்டை செய்திருக்கிறார். இன்றைய உலகில் ஆன்மீகப் பரிமாணங்களைப் பற்றிய ஒப்பில்லா வல்லமையும், ஆளுமையும் கொண்ட தலைசிறந்த ஞானியாக கொண்டாடப்படுகிறார்.

நம் காலத்திலேயே வாழும் இப்படிப்பட்ட சத்குருவின் அளப்பரிய ஞானத்தின் பிரமாண்டத்தை, நாம் எல்லோரும் கொஞ்சமாவது ருசிக்க வேண்டும் என்ற நோக்கத்தில் உருவானவைதான் ஈஷாவின் செயல்கள் ஒவ்வொன்றும். அதே நோக்கத்தில், ஞானிகளின் சமூகத்திற்குள் மட்டுமே பொதிந்து கிடக்கும் பொக்கிஷங்களை, பொதுமக்கள் எல்லோருக்கும் பரிமாறுவதில் ஒரு புதிய உச்சத்தைத் தொடும் முயற்சிதான் இந்தப் புத்தகம். ஆன்மீகம், யோகா போன்ற விஷயங்களுக்கு அறிமுகமில்லாதவர்கள் கூட புரிந்துகொள்ளும்படி அமைந்திருக்கிறது இந்தப் புத்தகம்.

# புதிரும் புரிதலும்: மதம் விஞ்ஞானம் தாண்டி

பாவம் மரணம், அதற்குத்தான் எவ்வளவு கெட்ட பெயர்! அபச்சாரம், அபசகுணம், அமங்கலம்... இன்னும் எவ்வளவோ, அது உங்களுக்கே தெரியும்.

பாவம் மரணம், அதற்குத்தான் எத்தனை எதிர்ப்பாளர்கள்! இன்று பலரும் மரணம் எனும் சொல்லை ஒரு கெட்டவார்த்தையாகத்தான் பாவிக்கிறார்கள். உலகத்தின் பெரும்பாலான சமூகங்களில் மரணத்தைப் பற்றி உரையாடுவது தடைசெய்யப்பட்டதாகவே இருக்கிறது. வழக்கமாக வீடுகளில் நடக்கும் பேச்சுகளில் யாராவது தப்பித்தவறி 'சாவு' என்ற வார்த்தையை உச்சரித்து விட்டால்கூட அந்தச் சூழ்நிலையே மாறிவிடும். மரணம் என்ற சொல்லை பயன்படுத்தாவிட்டால் அது தங்கள் வீட்டிற்கு வராது என்று நினைத்துக் கொண்டிருப்பவர்கள் ஏராளம்.

இவர்களின் பயம் எல்லாம் முற்றிலும் தேவையற்றதோ? நமக்கு நிகழப்போகும் மாபெரும் பாதகமாக மரணத்தைத் தவறாக சித்தரித்து விட்டார்களோ? ஒருவேளை மரணத்தைப் பற்றிய விளம்பரங்கள் எல்லாம் போலியாக இருந்தால்...? நமக்கு கிடைக்கக்கூடிய ஒரு பாக்கியத்தை பாதகம் என்று சொல்லி நம்பவைத்து விட்டார்களோ? ஆரம்பத்திலிருந்து மரணத்தை முற்றிலும் தவறாகவே புரிந்து கொண்டிருக்கிறோமா? மரணம் என்பது நாம் எதிர்க்க வேண்டிய ஒன்றாக இல்லாமல், நம் வாழ்க்கையின் அத்தியாவசிய அம்சம்தானோ? நாம் பிறவிக் கடலை நீந்திக் கரையேறிட பலப்பல சாத்தியங்களைக் கொண்ட ஆன்மீக வாயிலாக மரணம் அமைந்திடுமோ? முதல்முறையாக இந்தக் கேள்விகளை எல்லாம் நமக்குள் எழுப்புகிறார் ஒருவர். அதோடு நிற்காமல், இதைப் பற்றி நாம் உள்ளது உள்ளபடி ஆழமான தெளிவைப் பெற அறிவுப்பூர்வமான ஒரு புதிய பார்வையையும் நமக்கு திறந்து கொடுக்கிறார்.

சரி, இதையெல்லாம் நாம் ஏன் புரிந்துகொள்ள வேண்டும்? மரணத்தைப் பற்றிய பார்வை மாறினால் வாழ்க்கையைப் பற்றிய உங்கள் பார்வையும் தெளிவாகும், இல்லையா? வாழ்க்கையை அணுகும் விதமும் மாறும், அதனால் வாழ்க்கையை நீங்கள் அனுபவத்தில் உணர்வதும் ஆழமாகும்,

இல்லையா? இப்படியாக உங்கள் வாழ்வின் தரம் உயரும்போது மரணத்தையும் தரமாக நிகழ்த்திக்கொள்வது இயல்பானதாகிவிடும், இல்லையா? உங்களின் வாழ்வும் மரணமும் இனிதாக நிகழ்ந்திட மரணத்தைப் புரிந்துகொள்வது அவசியமானது, அல்லவா?

மரணத்தைப் பற்றி சொல்லப்படாத, அறியப்படாத, மர்மமான, அத்தியாவசியமான விஷயங்களை இந்தப் புத்தகத்தில் ஆழமாகவும், விரிவாகவும் சொல்லியிருக்கிறார் சத்குரு. அதேசமயம் நம் நடைமுறைக்கு ஒத்துவரும் விதத்தில், சுலபமாக புரிந்துகொள்ளும்படி வெளிப்படுத்துகிறார்.

இது சாதாரண புத்தகம் அல்ல. ஆனால், சாதாரணமானவர்களும் புரிந்துகொள்ளும் எளிய நடையில் அமைந்திருக்கிறது. ஆத்திகர், நாத்திகர், பக்தர், பகுத்தறிவாளர், ஆன்மீகத்தில் பழுத்தவர், ஆன்மீகமே அறியாதவர் என்று யாராக இருந்தாலும், எந்த பேதமும் இல்லாமல், ஒருநாள் இறக்கப்போகும் எல்லோருக்குமான புத்தகம்தான் இது.

முதலில் மரணம் என்பதை ஒரு அரக்கனைப்போல நாம் சித்தரிப்பதற்கு காரணம் என்ன? பலரும் அதைத் தவிர்த்து தப்பிக்க நினைப்பது ஏன்? சிறுவயது முதல் நமக்கு சொல்லப்பட்டு வந்த விஷயங்கள்தானே காரணம்! மரணத்தைப் பற்றி உங்களுக்கு அப்படி சொன்னவர்கள் எல்லாம் அதை உணர்ந்து பார்த்தா சொன்னார்கள்?

"நீங்கள் எப்போதாவது ஓர் இறந்த மனிதரைப் பார்த்திருக்கிறீர்களா? இறந்த உடலைப் பார்த்திருக்கலாம், ஆனால் இறந்த மனிதரை நீங்கள் பார்த்ததுண்டா? இல்லை. போகட்டும், இறந்தவர்களைப் பார்த்தவர் ஒருவரையாவது நீங்கள் பார்த்ததுண்டா? அதுவும் கிடையாது. அப்படி பார்த்தவர்களைப் பார்த்த மனிதர்களையாவது நீங்கள் பார்த்ததுண்டா? இல்லை. இதுவரை நீங்களும் இறந்தது இல்லை, இறந்தவர் யாரையும் பார்த்தது கிடையாது, இறந்தவரை பார்த்தவர்களையும் பார்த்தது கிடையாது. பிறகு மரணம் என்று ஒன்று இருப்பதாக எதை வைத்து நம்பிக்கொண்டிருக்கிறீர்கள்? அப்படி எதுவுமே கிடையாது. மரணம் என்பது ஒரு கட்டுக்கதை, வெறும் கட்டுக்கதைதான்," என்கிறார் சத்குரு.

அப்படியென்றால், மரணம் என்பது என்ன? நாம் பார்க்கும் இறப்புகள்தான் என்ன? அதைப் புத்தகத்தில் படித்து தெரிந்துகொள்ளுங்கள்.

இப்போதைக்கு நம் அனுபவத்தில் இல்லாத ஒன்றை நம்பிக் கொண்டிருந்தால், அதெல்லாம் கட்டுக்கதைதானே? நாம் அறியாத விஷயத்தை முழுமையாகத் தெரிந்துகொள்ள முயற்சித்தால்

பரவாயில்லை. அதை விட்டுவிட்டு பலவிதமான கற்பனைகளை ஏற்படுத்திக் கொண்டால், பயம் வருவது இயல்புதானே!

ஏதோ ஒன்றை உள்ளது உள்ளபடியே புரிந்துகொண்டு தெளிந்து விட்டால், அப்போது பயம் கரைந்து மறைந்துவிடுகிறது. புரியாத வரை மட்டும்தான் பயம், எதிர்ப்பு எல்லாம். தெளிவு பிறந்தால் விடுதலையே! ஒருமுறை சத்குருவிடம் ஒரு பேட்டியாளர், "சத்குரு என்ற மனிதரை ஒரே வார்த்தையில் வரையறுத்து விளக்குங்களேன்!" என்று கேட்டார். அதற்கு சத்குரு அளித்த பதில் - "தெளிவு."

இந்தப் புத்தகத்தின் முதல் பகுதி "வாழ்வும் மரணமும் ஒரே மூச்சில்" - மரணம் என்றால் என்ன, உயிர் இயங்குவது எப்படி, எது நல்ல மரணம், மரணத்தை வெல்ல முடியுமா, யோகிகளின் உடல்விடும் சித்திகள் போன்ற பல விஷயங்களை விவரமாக விளக்குகிறார் சத்குரு. இறப்பின் பல ரகசியங்களை இங்கே நமக்காக உடைக்கிறார். உதாரணமாக, இறப்பு என்பது ஒரு கண நிகழ்வாக இல்லை என்றும், அது கொஞ்ச நேரத்திற்கு நிகழ்ந்திடும் ஒரு தொடர் நிகழ்வு என்பதும் இதுவரை பெரும்பாலானவர்கள் அறியாதது, இல்லையா?

இரண்டாவது பகுதி, "நல்லமுறையில் இறக்கலாம்" - நாம் நன்றாக வாழும்போதே நம் மரணத்திற்கு தயார் ஆவது எப்படி என்று சொல்கிறார் சத்குரு. அப்படி நம்மைத் தயார்படுத்திக் கொள்வதற்கு என்ன அவசியம் என்பதையும் விளக்குகிறார். மரண பயத்தைக் கையாள்வது எப்படி, இறக்கும் நிலையில் இருக்கும் ஒருவருக்கு அவருடைய மரணம் நல்லமுறையில் இனிதாக நிகழ்ந்திட எப்படி எல்லாம் உதவமுடியும், இறந்தபிறகு அந்த உயிருக்கு எப்படி எல்லாம் உதவமுடியும், நம் பாரம்பரியத்தில் அமைந்த சடங்குகளின் அடிப்படை என்ன, இன்றைய நவீன உலகில் அதெல்லாம் அவசியமா இல்லையா, நேசமானவர்களின் மரணம் ஏற்படுத்தும் துக்கத்தைக் கையாள்வது எப்படி என்றெல்லாம் பல கோணங்களில் பார்க்க வைக்கிறது இரண்டாம் பகுதி.

மூன்றாம் பகுதி "மரணத்திற்கு பிறகு என்ன?" - உயிர் உடலை விட்ட பிறகு என்ன ஆகிறது, உடலற்ற உயிர்கள், பேய்கள் உண்மையா பொய்யா, மறுஜென்மம் போன்ற புதிரான விஷயங்களைப் பற்றியெல்லாம் காலம்காலமாக இருக்கும் கற்பனைகளையும் கதைகளையும் உடைத்து ஒரு புதிய மாறுபட்ட பார்வையை அளிக்கிறது இந்தப் பகுதி. பேய் என்ற வார்த்தையை பயத்தோடு தொடர்புப்படுத்துவது மறைந்து, அந்த உயிர்களை ஒரு அப்பாவியான சிசுவை நோக்கும் நேசத்துடன் பார்க்கும்

வாய்ப்பு இருக்கிறது. உள்ளதை உள்ளபடியே பார்ப்பதால் ஏற்படும் வித்தியாசம் இதுதான்.

கடந்த 200 ஆண்டுகளில் மருத்துவ விஞ்ஞானத்தின் அபாரமான வளர்ச்சியால் மனிதனின் வாழ்நாள் பெரிதளவு அதிகரித்திருக்கிறது. குழந்தைகளின் இறப்பு விகிதம் வெகுவாக குறைந்திருக்கிறது. இன்று உலகின் ஜனத்தொகை 775 கோடி என்ற ஒரு விஷயமே மருத்துவ விஞ்ஞானத்தின் அபரிமித வளர்ச்சியை அங்கீகரிக்க போதுமானதாகும். மனிதகுலத்திற்கு மருத்துவத்தின் இந்த பங்களிப்பு விலைமதிப்பற்றதாகும். இதனால், மரணத்தைப் பற்றிய கேள்விகளுக்கு பதில்தேட ஆரம்பத்தில் மதங்களை மட்டுமே சார்ந்து இருந்த மனிதர்கள் மருத்துவத்தின் பக்கம் திரும்பினார்கள்.

இருந்தாலும், விஞ்ஞானம் அனைத்தையும் புரிந்துகொண்டு விட்டதா என்ன? விஞ்ஞானிகளும் வாழ்க்கையை ஒரு சாவி துவாரத்தின் வழியாகவே பார்க்கிறார்களோ? நிச்சயமாக உடலைப் பற்றி நிறைய விஷயங்கள் அவர்களுக்கு ஆழமாக தெரிந்திருக்கிறது. உடல்ரீதியாக வாழ்வு எப்போது முடிகிறது, மரணம் எப்போது ஆரம்பமாகிறது என்பதை நன்றாக புரிந்திருக்கிறார்கள். மனதைப் பற்றியும் பல விஷயங்கள் ஓரளவுக்கு தெரிந்திருக்கிறது. ஆனால், அடிப்படையில் உடலுக்கும் மனதுக்கும் அப்பாற்பட்ட ஒன்று இருப்பதால்தானே அவை இரண்டும் ஒழுங்காக இயங்க முடிகிறது. இந்த அம்சத்தைப் பற்றி அவர்களுக்கு எதுவும் தெரிவதில்லை. வாழ்வும் மரணமும் ஏன் நடக்கிறது, எப்படி நடக்கிறது போன்ற ஆழமான கேள்விகளைப் பற்றிய புரிதல் இன்னும் இல்லை.

துரதிர்ஷ்டவசமாக, நவீன விஞ்ஞானத்தின் ஆதிக்கம் வாழ்க்கையின் ஆரம்பத்திலிருந்து முடிவு வரை மட்டுமே இருக்கிறது. பிறப்பதற்கு முன்பும், மரணத்திற்கு பிறகும் வேறு ஏதோ ஒன்று இருக்கமுடியுமோ என்ற சாத்தியத்தைக்கூட விஞ்ஞானம் ஒப்புக்கொள்வதில்லை. பொருளால் ஆன ஓர் உடல், திடீரென்று உயிர்பெற்று குறிப்பிட்ட காலத்திற்கு இருந்த பிறகு திடீரென்று உயிர்விடும் இந்த நிகழ்வு மிகவும் வியக்கத் தகுந்தது, அல்லவா? ஆனால் இது ஆராயப்படாமலேயே இருப்பதை விஞ்ஞானத்துடைய அளவுகோள்களின்படி பார்த்தால்கூட ஏற்றுக்கொள்ள முடியாது, இல்லையா?

விஞ்ஞானமாவது உடல் முடிந்துபோகும் இடத்தில் நின்றுவிடுகிறது. ஆனால், உலகின் மதங்கள் என்னவோ அப்படி நின்றதில்லை. மரணத்திற்கு பிறகு என்ன நடக்கிறது என்பதைப் பற்றி எல்லா மதங்களும் ஏகப்பட்ட

கற்பனைகளையும் ஊகங்களையும் உருவாக்கி வைத்திருக்கின்றன. தெரியாத விஷயத்தை தெரிந்ததுபோல் காட்டிக்கொள்கின்றன. இந்த விஷயங்கள் எல்லாம் மனிதர்களை மேலும் குழப்பமடைய செய்கின்றன.

இந்த நேரத்தில்தான் எந்த மதத்தையும் சாராமல், மத போதனைகளை உபதேசிக்காமல், சாத்திரங்களையும் புத்தகங்களையும் பரிந்துரைக்காமல், தான் தனக்குள் உணர்ந்த அனுபவங்களை மட்டுமே பகிரங்கமாக பகிர்ந்துகொள்ளும் சத்குருவைப் போன்ற ஒரு ஞானி நம்முடன் வாழ்வது விலைமதிப்பற்றதாக ஆகிறது.

எந்த விதத்திலும் இந்தப் புத்தகம் மரணத்தைப் பற்றி நாம் தேடும் அனைத்திற்கும் ஒரு பரிபூரண தீர்வாக ஆகிடாது. சத்குரு மனிதர்களுக்கு வழங்கக்கூடிய அத்தனை அம்சங்களின் மொத்த வடிவமும் ஆகிடாது. ஆனால் நிச்சயமாக உலகத்தில் மரணத்தைப் பற்றி பரவிக் கிடக்கும் அத்தனை தவறான கருத்துகளையும் போக்கிடும் என்று நம்புகிறோம். அனைத்திற்கும் மேலாக, சத்குரு அவர்களின் இருப்பும், அவர் வழங்கும் கருவிகளும் நம்முடைய மரணத்தை நாம் நல்லமுறையில் நிகழ்த்திக்கொள்ளவும், நமது மரணம் ஒரு ஆன்மீக வாய்ப்பாக அமைந்திடவும் உதவிடும் - இந்த செய்தியை பகிர்வதுதான் நம் அடிப்படை நோக்கம்.

"நான் சொல்வது எதையும் நீங்கள் நம்பத் தேவையில்லை. உங்கள் அனுபவத்தில் இல்லாத விஷயத்தை வெறுமனே நம்புவதால் எந்தப் பயனும் இல்லை. அதேசமயம் அதை அவநம்பிக்கையுடன் நிராகரிப்பதும் புத்திசாலித்தனம் ஆகாது. யாரோ ஒன்று சொல்கிறாரே, அது என்ன என்று பார்ப்போம் - இந்த அளவுக்கு திறந்தநிலையில் நீங்கள் இருந்தால், ஒருவேளை அது உண்மையாக இருந்தால், அப்போது அது உங்கள் அனுபவத்திலும் உண்மை ஆவதற்கு சாத்தியம் இருக்கிறது, அல்லவா?" என்று எப்போதும் சொல்வார் சத்குரு. இந்தப் புத்தகத்தில் உள்ள விஷயங்களையும் நீங்கள் இவ்விதத்திலேயே அணுகுவது சிறந்தது.

தமிழ் பதிப்பகக் குழு,<br>
ஈஷா யோக மையம்

பாகம் 1

# வாழ்வும் மரணமும் ஒரே மூச்சில்

## *மரணம்*

வாழ்வும் மரணமும் ஒன்றாய் உறைகின்றன என்னில்
ஒன்றினும் இன்னொன்று உயர்ந்ததென
ஒருபோதும் கருதியதில்லை
என்னிடமிருந்து விலகி நிற்கையில்
வாழ்வை வழங்குகிறேன்.
நெருங்கி வருகையில் கையாள்வது
மரணத்தை மட்டுமே.
எல்லைக்குட்பட்டவையின் மரணத்தில்தான்
மரணம் அற்றது இருக்கிறது
களங்கமில்லாத என் தீமையை
எப்படிச் சொல்வேன் முட்டாள்களுக்கு!

அத்தியாயம் 1

# மரணம் என்றால் என்ன?

மரணம் என்பது இருப்பதிலேயே மிகவும் அடிப்படையான கேள்வி. இருந்தாலும், மனிதர்களால் அதைக் கண்டுகொள்ளாமல் இருக்க முடிகிறது. அதைத் தவிர்க்க முடிகிறது. அப்படியே தாங்களுடைய அறியாமையிலேயே வாழ்ந்திட முடிகிறது. ஏனென்றால், உலகில் மதம் என்ற பெயரில் எல்லாவிதமான மூடக்கதைகளும் பரப்பப்பட்டுள்ளன.

## அடிப்படையான கேள்வி

நீங்கள் ஒருநாள் இறந்துவிடுவீர்கள், தெரியுமா? நீங்கள் நீண்டகாலம் வாழவேண்டும் என்று நான் உங்களுக்கு ஆசி வழங்குகிறேன்: அப்படி இருந்தாலும் நீங்கள் ஒருநாள் இறந்துபோவீர்கள். உங்கள் வாழ்க்கையின் மற்ற விஷயங்களைப் பற்றி நாம் உறுதியாக சொல்ல முடியாது. உங்களுக்கு திருமணம் ஆகுமா இல்லையா என்று நமக்கு தெரியாது, உங்களுக்கு வேலை கிடைக்குமா இல்லையா என்று தெரியாது, நீங்கள் வாழ்க்கையில் வெற்றி பெறுவீர்களா என்று தெரியாது. ஆனால், உங்கள் வாழ்வில் இந்த ஒரு விஷயத்திற்கு மட்டும் நாம் உறுதியாக உத்தரவாதம் தரமுடியும் - அதாவது நீங்கள் நேராக உங்கள் கல்லறைக்குத்தான் போய்க் கொண்டிருக்கிறீர்கள்.

மனிதர்களின் மடமையில் மிகப்பெரியது இதுதான், அவர்கள் மரணம் என்பதை ஏதோ மூன்றாம் மனிதனோடு மட்டுமே தொடர்புப்படுத்திக் கொள்கிறார்கள். இறப்பு என்பது ஏதோ மற்றவர்களுக்குத்தான் நிகழும், நமக்கு நிகழவே நிகழாது என்பதுபோல வாழ்கிறார்கள். உங்களுக்கு ஒன்று தெரியுமா? இந்த உலகில் நேற்று உயிரோடு இருந்தவர்களில் 1,60,000 பேர் இன்று இல்லாமல் போய்விடுகிறார்கள், தெரியுமா? உலகில் ஒரு நொடிக்கு இரண்டு மனிதர்கள் இறந்து போகிறார்கள். ஒருநாள், உங்களுக்கும் இது நிகழப்போகிறது, எனக்கும் நிகழப்போகிறது. இதைப் புரிந்துகொள்ள பெரிய அளவிலான ஆராய்ச்சியோ, புத்திசாலித்தனமோ, ஏன், கல்வியோகூட தேவையில்லை. இந்த அறிவு ஒவ்வொரு

மனிதனுக்குள்ளும் பொதிக்கப்பட்டுள்ளது. ஆனாலும், நாம் என்றென்றும் வாழப்போவதாக நினைத்துக்கொள்கிறோம். இதனை மகாபாரதக் கதை, ஒரு இடத்தில் சிறப்பாக எடுத்துரைக்கிறது.

கதையின் நாயகர்களான பாண்டவர்கள் ஒரு கட்டத்தில் காட்டில் தொலைந்துபோய் விடுகிறார்கள். பயங்கரமான பசியிலும் தாகத்திலும் தவிக்கிறார்கள். உணவும் தண்ணீரும் கிடைக்குமா என்று பக்கத்தில் உள்ள மலைகளில் தேடி அலைகிறார்கள். அப்போது ஒரு ஏரி தென்படுகிறது. அந்தத் தண்ணீரை அவர்கள் குடிக்கப் போகும்போது ஒரு யட்சன் (வானுலகத்தவர்) நாரை வடிவில் தோன்றுகிறான். முதலில் என் கேள்விகளுக்கு பதில் சொல்லிவிட்டு பிறகு தண்ணீரை குடியுங்கள் என்று சொல்கிறான். "ஒரு அற்பப் பறவை எங்களை நிறுத்துவதா?" என்ற எண்ணத்தில் ஏரியிலிருந்து நீரைக் குடிக்க முற்பட்டு ஒவ்வொருவராக செத்து விழுகிறார்கள். கடைசியில் எஞ்சியிருப்பது யுதிஷ்டிரன் மட்டுமே. அவன் பணிவானவன், தர்மத்தில் நிலைத்திருந்தவன். யுதிஷ்டிரன் தன் தாகத்தை பொருட்படுத்தாமல் யட்சனுடன் உரையாடுகிறான். யட்சன் வாழ்க்கையைப் பற்றி ஏராளமான கேள்விகளை வீசுகிறான். அதில் ஒன்று, "வாழ்விலேயே மிகவும் வியக்கத்தக்கது என்ன?" அதற்கு யுதிஷ்டிரன் துளியும் தயங்காமல், பிரபலமான இந்த பதிலைக் கூறுகிறான் - "ஒவ்வொரு கணமும் பல நூற்றுக்கணக்கான உயிர்கள் மரணத்தை சந்திக்கின்றன. இருந்தாலும் இந்த முட்டாள் மனிதன், தனக்கு மரணமே இல்லை என நினைத்துக்கொண்டு, அந்த மரணத்திற்காக தயார் ஆகாமலேயே இருக்கிறான். வாழ்விலேயே மிகவும் வியக்கத்தக்கது இதுதான்," என்று சொல்கிறான். இந்த பதிலால் யட்சன் மிகவும் மகிழ்ச்சி அடைந்து, ஏரியிலிருந்து தண்ணீர் குடிக்க அனுமதிக்கிறான். அதோடு, இறந்துபோன தம்பிகளை மீண்டும் உயிர்பெறச் செய்கிறான். இது நடந்து 5,000 ஆண்டுகள் ஆகியிருந்தாலும், மரணத்தைப் பற்றி மனிதனின் மனப்பான்மையில் இன்றும் எந்த மாற்றமும் இல்லை.

மரணம் என்பது மிக அடிப்படையான ஒரு கேள்வி. மரணத்தைப் பற்றி நாம் படிக்கும் புள்ளிவிவரங்களை விட, நிஜத்தில் அது நமக்கு மிகவும் அருகில் உள்ளது. ஒவ்வொரு கணமும், மரணம் நமக்கு நிகழ்ந்து கொண்டுதான் இருக்கிறது - நமது உறுப்புகளின் நிலையிலும், செல்களின் நிலையிலும் இறப்பு நிகழ்ந்துகொண்டேதான் இருக்கிறது. அந்த அடிப்படையில்தான், உங்கள் உள்ளுறுப்புகளை ஒருமுறை பார்த்தவுடனேயே, உங்கள் டாக்டரால் உங்கள் வயதை அறிய முடிகிறது. உண்மையில், நாம் பிறப்பதற்கு முன்பாகவே நமக்குள் இறப்பு ஆரம்பித்துவிட்டது. விழிப்புணர்வில்லாமல் அறியாமையில் இருப்பவருக்குத்தான், மரணம் பின்னர் ஒருநாள் என்றோ வரும் என்று

தோன்றும். நீங்கள் விழிப்புணர்வுடன் இருந்தால், வாழ்வும் மரணமும் ஒவ்வொரு கணமும் நிகழ்ந்து கொண்டிருப்பதை காணமுடியும். நீங்கள் சுவாசிக்கும்போது இன்னும் கொஞ்சம் கவனம் கொண்டு வந்தீர்கள் என்றால், ஒவ்வொரு உள்மூச்சுடன் வாழ்க்கை இருப்பதையும், ஒவ்வொரு வெளிமூச்சுடன் இறப்பு இருப்பதையும் கவனிக்க முடியும். பிறந்தவுடன் ஒரு குழந்தை முதலில் செய்வது மூச்சினை உள்ளே எடுப்பதுதான். அதேபோல், உங்கள் வாழ்க்கையில் நீங்கள் கடைசியாக செய்யப்போவது மூச்சை வெளிவிடுவதுதான். மூச்சை இப்போது வெளியே விடுகிறீர்கள், அடுத்த உள்மூச்சு எடுக்காவிட்டால் நீங்கள் இறந்துவிடுவீர்கள். இது புரியாவிட்டால், சும்மா இப்படிச் செய்து பாருங்கள் - மூச்சை வெளிவிடுங்கள், அப்படியே உங்கள் மூக்கைப் பிடித்துக்கொள்ளுங்கள், அடுத்து உள்மூச்சு எடுக்கக்கூடாது. ஒரு சில கணங்களுக்குள், உங்கள் உடலின் ஒவ்வொரு செல்லும், உயிருக்காக அலறும். வாழ்வும் மரணமும் எப்பொழுதும் நிகழ்ந்துகொண்டேதான் இருக்கின்றன. இரண்டும் ஒன்றுக்கொன்று பிரிக்க முடியாதபடி சேர்ந்தே இருக்கின்றன. ஒரே மூச்சில் இருக்கின்றன. இந்த உறவு, மூச்சு என்பதற்கு அப்பாற்பட்டும் நீடிக்கிறது. மூச்சு என்பது ஒரு துணை நடிகர்தான்; நிஜமான நிகழ்வு என்னவோ *பிராணா* எனும் உயிர்சக்திதான். அதுதான் பொருள் நிலையில் இருப்பதையெல்லாம் ஆளுகிறது. பிராணாவின் மீது ஒருவிதமான ஆளுமை இருந்தால், ஒருவர் கணிசமான கால அளவுக்கு சுவாசத்தைக் கடந்து இருக்கமுடியும். சுவாசம் என்பது உடனடி தேவையாக இருக்கிறது என்றாலும், அதுவும் உணவும் நீரும் இருக்கும் வரிசையில்தான் வருகிறது.

மரணம் என்பது இவ்வளவு அடிப்படையான அம்சமாக இருப்பதற்கு காரணம் என்ன? நாளை காலையில் சின்னதாக ஏதாவது நடந்தால் கூட, நீங்கள் இறந்துவிடக்கூடும், அதனால்தான் அடிப்படையாக இருக்கிறது. நாளை காலை என்ன - சின்னதாக ஏதாவது ஒன்று இப்போது நடந்தால்கூட, அடுத்தக் கணமே நீங்கள் போய் சேர்ந்துவிட முடியும். நீங்கள் வேறு ஒரு உயிரினம்போல் இருந்திருந்தால்கூட, ஒருவேளை இதைப் பற்றியெல்லாம் சிந்திக்க முடியாமல் போயிருக்கலாம். ஆனால் இப்போதோ உங்களுக்கு மனித அறிவு அளிக்கப்பட்டிருக்கிறது. உங்கள் வாழ்வின் இவ்வளவு இன்றியமையாத அம்சத்தை இனிமேலும் எப்படி நீங்கள் பொருட்படுத்தாமல் இருக்கமுடியும்? இனிமேலும் எப்படி இதைத் தவிர்த்துவிட்டு, என்றென்றும் இங்கே இருக்கப் போகிறோம் என்பதுபோல வாழமுடியும்? கோடிக்கணக்கான வருடங்கள் இங்கே வாழ்ந்துவிட்ட பிறகும் மரணத்தைப் பற்றி ஒரு துளியும் புரிந்துகொள்ளாமல் வாழ்ந்திட, மனிதர்களால் எப்படி முடிகிறது? அது மட்டுமில்லை, வாழ்க்கையைப் பற்றியும் இவர்களுக்கு ஒன்றும் தெரியவில்லை. வாழ்க்கையின்

வெளித்தோற்றங்கள் அனைத்தைப் பற்றியும் நமக்கு தெரியலாம், ஆனால் அடிப்படையாக வாழ்க்கையைப் பற்றி நமக்கு என்ன தெரியும்?

இந்த மாதிரி சூழ்நிலை உருவானதற்கு அடிப்படையான காரணம் என்னவென்றால், இந்த பிரபஞ்சத்தில் நீங்கள் யார், உங்களுடைய நிலை என்ன என்பதைப் பற்றி உங்களுக்கு ஒரு தெளிவான பார்வை இல்லை, அதை தொலைத்து விட்டீர்கள். நீங்கள் வாழும் சூரியமண்டலம், நாளை காலை ஆவியாகி மறைந்துவிட்டது என்று வைத்துக்கொள்வோம், அதை இந்த பிரபஞ்சத்தில் ஒருவர்கூட கவனிக்க மாட்டார்கள். அது அந்த அளவுக்கு மிகச்சிறியது, ஒரு துகள்தான். இந்தத் துகள் அளவு இருக்கும் சூரியமண்டலத்தில் பூமி என்பது ஒரு நுண்துகள். அந்த நுண்துகளுக்குள், நீங்கள் வாழும் நகரம் இன்னும் நுண்ணிய நுண்துகள். அதற்குள்ளே நீங்களோ ஒரு பெரிய ஆள். இது ஒரு பெரிய பிரச்சனைதான். நீங்கள் யார், என்ன என்பதைப் பற்றியே ஒரு தெளிவான பார்வையை நீங்கள் தொலைத்துவிட்ட பிறகு பிறப்பு-இறப்பு பற்றிய அடிப்படையைப் புரிந்து கொள்வீர்கள் என்று எப்படி நினைக்கிறீர்கள்?

இறப்பின்மேல் கவனம் கொள்ளாமல், தங்களின் அறியாமையிலேயே தொடர்ந்து மனிதர்கள் வாழ்வதற்கு ஒரு காரணம், உலகின் மதங்கள். இந்த உலகின் மதங்கள் எல்லாம் வாழ்வைப் பற்றியும் மரணத்தைப் பற்றியும் பலவகைப்பட்ட முட்டாள்தனமான கதைகளைப் பரப்பி இருக்கின்றன. எல்லாவற்றுக்கும் அவர்கள் அபத்தமான குழந்தைத்தனமான விளக்கங்களை உருவாக்கினார்கள். "நான் எப்படி வந்தேன்?" என்றால், "உன்னை ஒரு கொக்கு கொண்டு வந்தது," என்பார்கள். "நீங்கள் எங்கே போகிறீர்கள்?" என்றால், "சொர்க்கத்துக்குப் போகிறேன்" என்பார்கள். இந்த விளக்கங்கள் எளிமையானவை, ஆனால் அபத்தமானவை. குறைந்தபட்சம் ஒரு கொக்கைவிட திறனுள்ள வாகனத்தையாவது அவர்கள் தேர்வு செய்திருக்கலாம். கொக்குகள் ஒரு குறிப்பிட்ட பருவகாலத்தில் மட்டுமே பறந்து இடம்பெயரும். அப்படியென்றால் அந்தப் பருவகாலத்தில் மட்டுமே எல்லா குழந்தைகளும் பிறந்திருக்க வேண்டும், மற்ற காலங்களில் பிறக்கக்கூடாது, அப்படித்தானே? அது மட்டுமில்லை, அவர்கள் இறந்த பிறகு சொர்க்கத்துக்குத்தான் போகப்போகிறார்கள் என்று அவ்வளவு உறுதியாக இருந்தால், "நீங்கள் ஏன் இப்போதே போகக்கூடாது? நீங்கள் புறப்படுவதில் ஏன் தாமதம்?" என்று நான் கேட்கிறேன். வாழ்க்கைப் பற்றியும் மரணம் பற்றியும் தெரிந்துகொள்ள மனிதனுக்கு இருக்கும் அடிப்படையான ஆர்வத்தை இந்த அபத்தமான கதைகள் அமிழ்த்திவிட்டன. மற்றபடி, தெரிந்துகொள்ள வேண்டும் என்னும் ஆர்வம் - அது இல்லாவிட்டாலும் வாழ்க்கையின் வலியும் துன்பமுமாவது - பலரை இந்த அடிப்படைக் கேள்விக்கு பதில் தேட உந்தியிருக்கும்.

## அழியக்கூடிய இயல்பு

தங்களுக்குள் கடவுளைப் பற்றி நினைவுபடுத்திக் கொண்டால் அது ஆன்மீகம் என்று மனிதர்கள் நினைக்கிறார்கள். இல்லவே இல்லை, நீங்கள் கடவுளை நம்பிக் கொண்டிருந்தாலோ அல்லது அவரைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தாலோ உங்கள் வேலையை சரியாக செய்ய மாட்டீர்கள், ஆனால் அதன் முடிவு மட்டும் சிறப்பாக வரும் என்று நினைத்துக் கொண்டிருப்பீர்கள். தேர்வுக்கு ஒழுங்காக படிக்க மாட்டீர்கள், ஆனால் நீங்கள் பிரார்த்தனை செய்வதால் வகுப்பில் முதல் இடம் கிடைக்கும் என்று நினைப்பீர்கள். மற்றவர்களைவிட இப்படிப்பட்டவர்கள் இன்னும் வெட்கமின்றி தலைக்கனத்தோடு வாழ்க்கையைக் கடக்கிறார்கள், இப்போதுதான் இவர்களுக்கு கடவுளுடைய துணை இருக்கிறதே! கடவுள் தங்களோடு இருக்கிறார் என்று நம்பியவர்கள், எப்போதுமே இந்த பூமியில் அதிகபட்ச வன்முறையை செய்திருக்கிறார்கள். "கடவுள் என்னோடு இருக்கிறார்" என்பது உங்களுக்கு ஒரு புதிய துணிச்சலை கொடுக்கிறது - இது மிகவும் ஆபத்தானது. கடவுளைப் பற்றி இப்படி நினைத்தால் உங்களுக்குள் ஆன்மீகம் ஒன்றும் நிகழாது - உண்மையில் நீங்கள் ஆணவத்திலும் முட்டாள்தனத்திலும்தான் இருப்பீர்கள்.

ஒருமுறை இப்படி நிகழ்ந்தது: அமெரிக்காவில் ஒரு ஊரில் இரண்டு சிறுவர்கள் இருந்தார்கள். மிகவும் துடிப்பான சிறுவர்கள். சிறுவர்கள் துடிப்பானவர்களாக இருந்தால் எப்போதுமே பிரச்சனையில் சிக்குவது வழக்கம். இந்த சிறுவர்களுக்கும் அதுவே நடந்தது. அக்கம்பக்கத்தில் உள்ளவர்கள் எப்பொழுதும் இவர்களைப் பற்றியே பேசிக் கொண்டிருந்ததால் அவர்கள் பெற்றோர்களுக்கும் தர்மசங்கடமாக இருந்தது. என்ன செய்வது என்று தெரியவில்லை. அதனால், அருகிலுள்ள சர்ச்சின் பாதிரியாரிடம் பிள்ளைகளை அழைத்துச் செல்ல முடிவுசெய்தார்கள். இரண்டு பேரையும் ஒன்றாகக் கொண்டுபோனால், அவர்களை சமாளிப்பது மிகவும் கஷ்டம். அதனால் தனித்தனியாக பாதிரியாரிடம் கொண்டு செல்வோம் என்று நினைத்தார்கள். முதலில் இளையவனை கொண்டுபோய் பாதிரியாரின் அலுவலகத்தில் உட்கார வைத்துவிட்டு திரும்பினார்கள். பாதிரியார் தன் நீளமான அங்கியை அணிந்துகொண்டு அறைக்குள் நுழைந்தார். கறாரான முகத்துடன் குறுக்கும் நெடுக்குமாக சிலமுறை நடந்தார். அந்தப் பையனும் அப்படியே அவரை பார்த்து திருதிருவென விழித்தபடி உட்கார்ந்திருந்தான்.

இப்படியும் அப்படியுமாக நடந்து கொண்டிருக்கும்போது பாதிரியார் யோசித்து ஒரு உபாயத்தை செய்தார். "இந்த பையனுக்குள் கடவுள் இருக்கிறார் என்பதை அவனுக்கு நினைவுபடுத்துவோம். அவ்வளவுதான், அவனுடைய குறும்பு எல்லாம் காணாமல் போய்விடும்," என்று நினைத்தார். அப்படியே

பாதி நடையில் சட்டென்று நின்றார், திடுமென திரும்பி உரத்த குரலில் சிறுவனைப் பார்த்து, "கடவுள் எங்கே இருக்கிறார்?" என்று கேட்டார். சிறுவனோ மிரண்டுபோய் அவரைப் பார்த்தான். அவன் அப்படியே சுற்றும்முற்றும் திரும்பிப் பார்த்து தேடினான். கடவுள் அங்கேதான் எங்கேயோ பாதிரியாரின் அலுவலகத்தில் இருப்பார் என்று நினைத்தான். அந்தப் பையனுக்கு விஷயம் புரியவில்லை என்பதை பாதிரியார் கவனித்தார். ஒரு துப்பு கொடுக்கலாம் என்று நினைத்தார். "கடவுள் அவனுக்குள்தான் இருக்கிறார்," என்பதை குறிப்பால் உணர்த்துவோம் என்று, கைகளை அவனை நோக்கி சுட்டிக்காட்டி, உரத்த குரலில் "கடவுள் எங்கே?" என்று கேட்டார். இந்தமுறை சிறுவன் முன்பைவிட மிரண்டுபோய் அங்கிருந்த மேஜைக்கு கீழே தேடினான். இன்னமும் அவனுக்கு உரைக்கவில்லை என்று பாதிரியாருக்கு தெரிந்தது. அதனால் அவனுக்குப் பக்கத்தில் வந்து அவன் நெஞ்சைத் தட்டி, உரத்த குரலில் "கடவுள் எங்கே இருக்கிறார்?" என்றார். அவ்வளவுதான், அப்படியே எழுந்தவன், அந்த இடத்தைவிட்டு தலைதெறிக்க ஓடினான். தன் அண்ணன் நின்று கொண்டிருந்த இடத்திற்கு ஓடிவந்து, "ஐயோ, நாம் மிகப்பெரிய பிரச்சனையில் மாட்டிக்கொண்டோம்!" என்றான். மூத்தவன் "ஏன், என்ன ஆனது?" என்று கேட்டான். "கடவுளைக் காணோமாம். அவர்கள் கடவுளைத் தொலைத்துவிட்டு, அதையும் நாம்தான் செய்தோம் என்று நினைக்கிறார்கள்," என்றான் சிறியவன்.

கடவுளைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பதன் மூலம், உங்கள் வாழ்க்கையில் நீங்கள் என்ன மடத்தனம் செய்தாலும், சும்மா ஒரு பிரார்த்தனை மூலம் எல்லாமே சரியாகிவிடும் என்று நினைப்பீர்கள். இது ஒன்றும் உங்களை ஆன்மீகவாதி ஆக்கிவிடாது. "நானும் இறந்து விடுவேன்," என்ற விழிப்புணர்வு உங்களுக்குள் ஏற்படும்போதுதான் உங்களுக்குள் ஆன்மீகம் நிகழமுடியும். இந்த அழியக்கூடிய இயல்பைப் பற்றிய விழிப்புணர்வு உங்களுக்குள் ஊற்றெடுத்தால்தான், நீங்கள் உள்முகமாக திரும்புவீர்கள். உங்களுடைய நிலையற்ற தன்மையை நீங்கள் உணரவேண்டும். "நான்" என்பதன் அழியக்கூடிய இயல்பை நீங்கள் உணரும்போதுதான் இந்த உயிருக்கு மூலம் என்ன என்பதை தெரிந்துகொள்ளும் ஆர்வமும் உங்களுக்கு ஏற்படும். இதெல்லாம் என்ன, இதன் அடிப்படை என்ன, இதற்கு அப்பாற்பட்டு இருப்பது என்ன என்பதை தெரிந்துகொள்ளும் ஏக்கம் உங்களுக்குள் அதிகரிக்கும். ஒரு இயற்கையான தேடல் ஆகிவிடும். அப்போதுதான் இதை ஆன்மீகம் என்று சொல்லமுடியும்.

"நாம் இறந்து விடுவோம்" என்பதே ஒருவருக்கு தெரியாவிட்டால் யாருமே ஆன்மீகத்தைத் தேடமாட்டார்கள். உங்களது இளமைக் காலத்தில் நீங்கள்

அழிவில்லாதவர் என்று நினைக்கிறீர்கள். மெல்ல, வயதாக வயதாக, குறைந்தபட்சம் உங்கள் உடலாவது நீங்கள் அழியக் கூடியவர் என்பதை நிச்சயம் நினைவுபடுத்தும். மரணம் உங்களை எதிர்கொள்ளும்போதோ, உங்களுக்கு பிரியமானவர் யாராவது இறக்கும்போதோ, இவையெல்லாம் என்ன என்று நிச்சயமாக வியக்கத் தொடங்குவீர்கள். உங்கள் வாழ்க்கை நிலையற்றது என்ற விழிப்புணர்வு இருந்தால், யார் மீதும் கோபம் கொள்ள உங்களுக்கு நேரம் ஏது? யாருடனாவது சண்டைப்போட உங்களுக்கு நேரம் ஏது? முட்டாள்தனமாக எதுவும் செய்வதற்கு நேரம் இருக்குமா என்ன? உங்களின் அழியக்கூடிய இயல்பை நீங்கள் ஏற்றுக்கொள்ளும்போது, உங்களுக்கு இறப்பு நிகழ்ந்திடும் என்பதைப் பற்றி நீங்கள் விழிப்பாக இருக்கும்போது, உங்கள் வாழ்வின் ஒவ்வொரு கணத்தையும், முடிந்தவரை அழகானதாக்கிட விரும்புவீர்கள். இந்த பிரபஞ்சத்தின் நிலையற்ற, அழியக்கூடிய இயல்பைப் பற்றி எப்போதும் விழிப்புணர்வாக இருப்பவர்கள், ஒரு கணத்தைக்கூட இழக்க விரும்ப மாட்டார்கள், இயற்கையாகவே விழிப்புணர்வாக இருப்பார்கள். எல்லாவற்றையும் அதன் மதிப்புணர்ந்து பார்ப்பார்கள். வாழ்வில் முழு ஈடுபாட்டுடன் வாழ்வார்கள். தங்களை அழிவில்லாதவர்கள் என்று நம்பிக் கொண்டிருப்பவர்களால் மட்டுமே, மரணம் வரும் வரைக்கும் சண்டை போட்டுக்கொண்டே இருக்கமுடியும்.

நமது இந்திய பாரம்பரியத்தில், எப்போதுமே மயானபூமி புனிதமாக கருதப்பட்டு வருகிறது. யாராவது இறந்துபோனால், அவர் உங்களுக்கு தெரியாதவராக இருந்தாலும்கூட, எங்கேயோ அது உங்களை பாதிக்கிறது. எந்த ஒரு உண்மையான ஆன்மீக பயிற்சியாக இருந்தாலும், எப்போதுமே அதில் மரணத்தின் வாசனை இருக்கும். அந்தப் பயிற்சியில் நீங்கள் ஆழமாக செல்லும்போது, அது உங்களுடைய நிலையற்ற தன்மையை உங்களுக்கு நினைவுபடுத்தும். நாம் உங்களுக்கு கற்றுக்கொடுத்துள்ள ஆன்மீக சாதனா[1] அனைத்துமே - சூன்ய தியானம், ஷாம்பவி மஹாமுத்ரா, சக்தி சலன க்ரியா, அதிலும் குறிப்பாக சம்யமா[2] - இதில் எல்லாமே, தவிர்க்க முடியாதபடி மரணத்தின் சுவை இருக்கும். அதில் மரணத்தின் சுவை இல்லையென்றால், அதில் ஆன்மீகமே இல்லை, அது வெறும் பொழுதுபோக்குதான். அப்படிப்பட்ட மேலோட்டமான பயிற்சியை யாராவது உங்களுக்கு சொல்லிக்கொடுத்தால், அதனால் உங்களுக்கு சுகமாக இருக்கலாம், ஆனால் அதற்கு மேல் அதில் வேறொன்றுமில்லை.

பாரம்பரியமாக, ஒவ்வொரு யோகியும் தனது ஆன்மீகத் தேடலை சுடுகாட்டில்தான் ஆரம்பித்தார். குறிப்பாக, எத்தனையோ குருமார்கள்

---

1 ஆன்மீகப் பயிற்சிகள்

2 ஈஷாவில் சத்குரு வழங்கும் பல்வேறு வகுப்புகளில் சில.

இதையே ஒரு ஆன்மீக முறையாக பயன்படுத்தியிருக்கிறார்கள். கௌதம புத்தர் தன் துறவிகளுக்கு இதை அத்தியாவசியமாக ஆக்கினார். தன்னிடம் வருபவருக்கு தீட்சை அளிப்பதற்கு முன், முதலில் அவரை பிணங்கள் அதிகமாக வரும் மயானத்தில் போய் மூன்று மாதங்கள் உட்கார்ந்திருக்கும்படி சொல்வார். பிணங்கள் எரிவதை சும்மா பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். இன்றுகூட காசியிலுள்ள மணிகர்ணிகா காட்[3] (படித்துறை) என்ற இடத்திற்கு நீங்கள் சென்றால், எந்நேரமும் குறைந்தது ஐந்து ஆறு பிணங்கள் எரிந்துகொண்டிருக்கும். அதை வழக்கமான வேலையாக வெகு யதார்த்தமாக செய்து கொண்டிருப்பார்கள். இப்போதெல்லாம் உடல்களை முழுதாக எரிக்கக்கூட நேரம் இருப்பதில்லை. ஒரு பிணம் எரிந்து முடிவதற்குள் அடுத்த பிணம் வந்துவிடுகிறது. அதனால் பாதி எரிந்த பிணத்தை நதியில் எறிந்து விடுகிறார்கள். உங்களையும் ஒருநாள் இப்படித்தான் நடத்தப் போகிறார்கள் என்பதை நீங்களே பார்ப்பது உங்களுக்கு மிகவும் நல்லது.

என் சிறுவயதில், இதைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியவில்லை. ஆனால் எட்டு வயதிலிருந்து பதினேழு வயது வரை, மிக அதிக அளவிலான நேரத்தை நான் சுடுகாட்டில்தான் கழித்திருக்கிறேன். இது என் ஆர்வத்தை மிகவும் தூண்டியது. அங்கே நடக்கும் பல பயமுறுத்தும்படியான விஷயங்களைப் பற்றி எல்லோருமே பேசினார்கள். மரத்திலிருந்து பேய்கள் தலைகீழாக தொங்கும் என்றெல்லாம் கதைகள் கேட்டிருக்கிறேன். இவற்றை என் கண்களாலேயே பார்க்க விரும்பினேன். அதனால் சுடுகாட்டிலேயே பல பகல்களையும் இரவுகளையும் கழித்தேன். எங்கள் வீட்டுக்கு மிகவும் பக்கத்திலேயே ஒரு சுடுகாடு இருந்தது. இன்னொன்று சாமுண்டி மலை அடிவாரத்தில் இருந்தது. சாமுண்டி மலை அடிவாரத்தில் இருந்த சுடுகாடு எப்பொழுதும் மும்முரமாகவே இருந்தது. எப்போது போனாலும் அங்கு நான்கைந்து பிணங்களாவது எரிந்து கொண்டிருக்கும். நான் மலைமேல் ஏறிய போதெல்லாம், இரவுகளை அங்குதான் கழித்தேன். மலையில் குளிராக இருக்கும், ஆனால் இங்குதான் எப்போதும் நெருப்பு எரிந்துகொண்டே இருக்கிறதே! அதனால் நெருப்பின் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு பிணங்கள் எரிவதைப் பார்த்துக் கொண்டிருப்பேன்.

அதோடு அந்த சிதையைச் சுற்றி நடக்கும் பல வேடிக்கைகளும் உண்டு. வழக்கமாக, மயானத்திற்கு பிணத்துடன் கூட வருபவர்கள், ஏதோ தங்கள் வாழ்க்கையில் உள்ள எல்லாவற்றையும் தொலைத்துவிட்டது போல அழுது கொண்டிருப்பார்கள். அப்புறம் பிணத்திற்கு தீ

3 கங்கை நதிக்கரையில் உள்ள இடங்களில் ஒன்று. 24 மணிநேரமும் இறந்த உடல்களை தகனம் செய்வதற்கு பெயர்பெற்ற இடம்.

வைப்பார்கள். அரைமணி நேரம், முக்கால் மணிநேரம் இருப்பார்கள், பிறகு போய்விடுவார்கள். தீ இன்னும் எரிந்து கொண்டுதான் இருக்கும், ஆனால் அவர்கள் போய்விடுவார்கள். ஒருவேளை அவர்களுக்கு வேறு வேலை இருக்கலாம். ஆனால் நான் அங்கேயே உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருப்பேன். சிதையில் எரிக்கப்படும் ஒரு பிணத்தை நீங்கள் கூர்மையாக கவனித்திருந்தால், முதலில் எரிந்து முடிவது கழுத்துதான், அதுதானே மெலிதாக இருக்கிறது. இது நடக்கும்போது, அவர்கள் விறகை அதிகமாகவும் ஒழுங்காகவும் அடுக்காமல் விட்டிருந்தால், பாதி எரிந்த தலை ஒரு கால்பந்து போல சிதையிலிருந்து உருண்டு கீழே விழும். இது பார்ப்பதற்கு கொஞ்சம் பயங்கரமாக இருக்கும் - தலை மட்டும் சிதையிலிருந்து உருண்டு ஓடும்! விறகின் விலை அதிகமாக இருந்ததாலோ அல்லது சிதையை அமைக்க அவர்களுக்கு போதிய அனுபவம் இல்லாததாலோ என்னவோ இது அடிக்கடி நிகழும். மூன்றரை அல்லது நான்கு மணி நேரம் சிதை எரிந்த பிறகு இது நடக்கும். இது நடக்கும்போது சொந்தக்காரர்கள் யாரும் இருக்க மாட்டார்கள், அதனால் நான்தான் அந்த தலைகளை எடுத்து மறுபடியும் சிதையில் போடுவேன்.

இதுபோல உட்கார்ந்து பிணங்கள் எரிவதை சும்மா பார்த்துக் கொண்டிருப்பதும், அது முழுதாக எரிந்திட உதவி செய்வதுமாக பல பகல்களும் இரவுகளும் கழித்திருக்கிறேன். இது எனக்குள் முற்றிலும் வித்தியாசமான ஒரு செயல்முறைக்கு வழிவகுத்தது. இதை நீங்கள் தவிர்க்க விரும்புவீர்கள் என்று எனக்கு தெரியும், ஆனாலும் இப்படி உட்கார்ந்து தொடர்ச்சியாக பிணங்கள் எரிவதைப் பார்ப்பது மிகவும் நல்லது. உங்கள் வீட்டின் சௌகரியங்களில் வாழும்போது, மிகவும் சுலபமாக நீங்கள் அழிவில்லாதவர் என்று நினைத்திட முடியும். ஆனால் உங்கள் முன் ஒரு பிணம் எரியும்போது, "ஓ, நாளைக்கு இது நானாக இருக்க முடியும்," என்று பார்ப்பது அவ்வளவு கஷ்டமாக இருக்காது. மனரீதியாகவும் உணர்ச்சிரீதியாகவும் விளைவுகள் ஏற்படலாம். ஆனால், முக்கியமான விஷயம் என்னவென்றால் உங்கள் உடல் இந்த வாழ்வை தனக்கே உரிய விதத்தில் புரிந்துகொள்கிறது. இன்னொரு உடல் எரிந்திடும் காட்சி உங்கள் உடலை ஆழமாக பாதிக்கிறது. இது உங்களுக்குள் வேறுவிதமான அறிவையும் விழிப்புணர்வையும் கொண்டு வருகிறது. சுடுகாட்டில் உட்கார்ந்து, அங்கே நடப்பதையெல்லாம் நீங்கள் கவனித்தால், உங்களைப் பற்றி நீங்கள் செய்து வைத்துள்ள பலவிதமான கற்பனைகள் எல்லாம் எரிந்து சாம்பலாகிவிடும்.

அந்தப் பிணங்கள் எரிவதைப் பார்க்கும்போது, நீங்கள் அதைப் பற்றி நினைக்கக்கூடாது, சும்மா பார்க்கவேண்டும். வெறுமனே பார்க்க வேண்டும், பார்க்கவேண்டும், பார்க்கவேண்டும், அவ்வளவுதான்.

கொஞ்ச நேரம் கழித்து, அது நீங்களேதான் என்று உணர்வீர்கள். ஆம், அது வேறல்ல. அது உங்கள் உடலேதான். எப்போது அந்த உடலின் இடத்தில் உங்கள் உடலை வைக்க முடிகிறதோ, அப்படி வைத்த பிறகும் அங்கே உட்கார முடிகிறதோ, அப்போது நீங்கள் மரணத்தை ஆழமாக ஏற்றுக்கொள்கிறீர்கள். இது ஏதோ மனோரீதியான நிகழ்வு கிடையாது. இந்தப் பிரபஞ்சத்தின் நிலையற்ற தன்மையை உங்கள் உடல் புரிந்து கொள்ளும்போது உங்களுக்குள் மிக ஆழமான ஏற்றுக்கொள்ளுதலும், விடுதலையும் ஏற்படுகிறது. எப்போது மரணத்தை ஆழமாக ஏற்றுக்கொள்கிறீர்களோ, அப்போது உயிர் என்பது உங்களுக்குள் பிரம்மாண்டமாக நிகழும். நீங்கள் மரணத்திடமிருந்து தூரமாக இருக்க முயற்சி செய்வதால்தான், வாழ்க்கையும் உங்களிடமிருந்து தூரமாகவே இருந்திருக்கிறது. அதனால்தான் யோகியர் ஒவ்வொருவரும், தங்கள் வாழ்வின் ஏதோ ஒரு காலகட்டத்தில், ஒரு கணிசமான காலத்தை மயான பூமியில் கழித்துள்ளார்கள்.

## இறந்தவர் போவதெங்கே?

நான் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தபோது அந்த நிகழ்ச்சி நடந்தது. மரணத்தைப் பற்றி தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தை அது எனக்குள் ஆழமாய் தூண்டிவிட்டது. அப்போது எனக்கு பதிமூன்று வயது. பள்ளியில் நான் மற்ற குழந்தைகளைப்போல இருந்ததே கிடையாது. ஆனாலும் என்னை கேலி செய்திட யாருக்கும் தைரியமில்லை. நான் அவர்களை அடித்துவிடுவேன் அல்லவா, அதுதான்! ஆனால் சுசரிதா என்று ஒரு கிறுக்குப் பெண் இருந்தாள். ஏதோ ஒரு காரணத்திற்காக, அவள் எப்போதும் என்னைப் பார்த்து "ஜகி[4] தி கிரேட்! ஜகி தி கிரேட்!" என்று சொல்லி சீண்டிக்கொண்டே இருப்பாள். எனக்கு எரிச்சலாக வரும், ஆனாலும் அதை கண்டுகொள்ள மாட்டேன். ஒருநாள் பள்ளி விடுமுறை முடிந்து, அவள் பள்ளிக்கு திரும்ப வரவே இல்லை. தினமும் வருகைப்பதிவு நேரத்தில் அவள் பெயரை படிப்பார்கள். எங்களில் ஒரு சிலர், வேடிக்கைக்காக பெண் போன்ற கீச்சுக்குரலில், அவளுக்கு பதிலாக "உள்ளேன்" சொல்ல பார்ப்போம். இப்படியே சில நாட்கள் போனது. ஒருநாள், எங்களுக்கு இரண்டு வயது ஜூனியரான அவளது தம்பி எங்களிடம் அதைச் சொன்னான். அவனுடைய அக்கா விடுமுறையின் போது நிமோனியா வந்து இறந்துவிட்டாள் என்று சொன்னான். அது என்னைத் திகைப்பில் ஆழ்த்தியது. யாரோ இறந்து போய்விட்டார்கள் என்பதால் அல்ல. நேற்று உயிருடன் எங்கள் மத்தியில் இருந்தவள்,

---

4 சத்குருவின் குழந்தைப் பருவ பெயர்.

இன்று அப்படியே மறைந்து போய்விட்டாளே, அதனால். இது என்னை யோசிக்க வைத்தது. என் ஆர்வத்தை ஆழமாக தூண்டிவிட்டது.

என் வயதுதான் அவளுக்கும், இங்கே வகுப்பில் பல செயல்கள் செய்து கொண்டிருந்தாள், திடீரென்று போய்விட்டாள். அவள் இறந்துவிட்டாள் என்று சொன்னார்கள், ஆனால் அவள் எங்கே போயிருக்க முடியும் என்பதை தெரிந்துகொள்ள வேண்டும் என்று தோன்றியது எனக்கு. அதுவரைக்கும், என்னைப் பொருத்தவரை வயதானவர்கள் மட்டும்தான் இறந்து போவார்கள். ஆனால் என் வயதை ஒத்த இந்தப் பெண், மரணத்தை என் வாசலுக்கே கொண்டுவந்து விட்டாள். இப்போது, இது வெறும் ஆர்வமிகுதியால் உண்டான கேள்வியாக இல்லாமல் வாழ்வாதார கேள்வியாக ஆகிப்போனது. மரணத்திற்கு பிறகு அவர்களெல்லாம் அப்படி எங்கேதான் போய்விடுகிறார்கள் என்று தெரிந்துகொள்ள விரும்பினேன். இறப்பிற்கு பிறகு என்ன நடக்கிறது என்று அறிய விரும்பினேன். இந்த சம்பவம் நடப்பதற்கு முன்பாகவே, பலரிடம் இதே கேள்வியை நான் ஏற்கனவே கேட்டிருக்கிறேன். எங்கள் ஊரில் உள்ள மயானங்களிலும் பல மணி நேரங்கள் கழித்திருக்கிறேன். அப்படியிருந்தும் இறப்பிற்கு பிறகு என்ன நடக்கும் என்று எனக்கு தெரியாது. அதனால் நாமே நேரடியாக மரணத்திடம் பயணிப்போமே, என்னதான் நடக்கிறதென போய் பார்த்துவிடுவோமே என்று நினைத்தேன்.

என் அப்பா ஒரு டாக்டர், அதனால் எப்போதுமே வீட்டில் மருந்துப்பெட்டி இருந்தது. அதில் பலவிதமான மருந்துகள் இருந்தன என்று எனக்கு தெரியும். அதில் தேடியபோது எனக்கு *கார்டினல் சோடியம்* என்ற பாட்டில் கிடைத்தது. அது ஒருவிதமான தூக்கமாத்திரை. அந்த பாட்டிலில் நூறு மாத்திரைகள் இருந்திருக்க வேண்டும், அதை வெளியில் எடுத்து எண்ணியபோதோ தொண்ணூற்றெட்டுதான் இருந்தது. யாரோ அதை திறந்து இரண்டை பயன்படுத்தியிருக்கிறார்கள். தொண்ணூற்றெட்டு மாத்திரைகளுக்கு மரணத்தை ஏற்படுத்தும் அளவுக்கு போதுமான வல்லமை இருக்கும் என்று எனக்கு தோன்றியது. அடுத்து என்னுடைய அலமாரிக்குள் பார்த்தேன். கொஞ்சம் பணம் இருந்தது. எனக்கென்று தனிப்பட்ட சொத்து நிறைய இருந்தது - ஒரு சிறுவனுக்கு விலைமதிப்புமிக்க பொருட்களாகிய கோலிகுண்டுகள், உண்டிவில்கள், சில செல்லப் பறவைகள் எல்லாம் இருந்தன. நான்தான் எப்படியும் சாகப்போகிறேனே, அதனால் எல்லாவற்றையும் தானம் செய்துவிட முடிவுசெய்தேன். கொஞ்சம் பொருட்களை என் அண்ணனுக்கு கொடுத்தேன், மீதியை என் நெருக்கமான நண்பர்களுக்கு கொடுத்தேன். நான் விடைபெறுகிறேன் என்று அவர்களிடம் சொன்னேன். அவர்களுக்கு அது ஒரு பெரிய கேலிக்கூத்தாக தோன்றியது. அதன்பின் ஒருநாள்,

அன்றிரவே இதைச் செய்வோம் என்று முடிவெடுத்தேன். அன்று இரவு சாப்பிடவில்லை, ஒருவேளை வயிற்றில் உணவு இருந்தால் இது சரியாக வேலை செய்யாமல் போகலாம் என்று எனக்கு தெரிந்திருந்தது. எனக்கு பசிக்கவில்லை என்று வீட்டில் உள்ளவர்களிடம் சொல்லிவிட்டு, மாத்திரையுடன் மொட்டை மாடிக்குப் போனேன். தொண்ணூற்றெட்டு மாத்திரைகளையும் விழுங்கிவிட்டு தூங்கப் போய்விட்டேன். இதன்மூலம், இறந்தவர்கள் எல்லோரும் எங்கே போகிறார்கள் என்று தெரிந்துகொள்ளலாம் என்பதே என் எதிர்பார்ப்பு.

காலையில் என்னை எழுப்புவதற்கு அவர்கள் என்னென்னவோ செய்து பார்த்தார்கள், ஆனால் நானோ எழவில்லை. வழக்கமாகவே, தினமும் காலையில் என்னை எழுப்புவது கொஞ்சம் கஷ்டம்தான், ஆனால் இன்று நான் எழுந்துக்கொள்ளவே இல்லை. என் உடல் மிகவும் தளர்ந்துபோய் அசைவற்று இருப்பதை என் அப்பா கவனித்திருக்கிறார். எல்லோரும் மிரண்டு போய்விட்டார்கள். உடனே என்னை மருத்துவமனைக்கு கொண்டுபோனார்கள். அங்கே என் வயிற்றை *ஸ்டமக் வாஷ்* (வயிற்றை சுத்தம் செய்தல்) செய்தார்கள். ஆக்சிஜன் கொடுத்தார்கள், ஆனால் நான் எழுந்துக்கொள்ளவே இல்லை. மூன்று நாட்களுக்கு ஆழ்ந்த தூக்கத்தில் உயிரற்று கிடந்தேன். மூன்றாவது நாள், மெதுவாக விழிப்பு வந்தது.

படுக்கையில் கிடந்தபடியே மெதுவாக கண்களைத் திறந்தேன். என் கண்ணில் முதலில் பட்டது அந்த கூரையின் விட்டங்கள்தான். உடனே நான் எங்கே இருக்கிறேன் என்று எனக்கு புரிந்துவிட்டது. அந்த விட்டத்தை பலமுறை நான் பார்த்திருக்கிறேன். இரயில்வே மருத்துவமனையில் டாக்டராக பணிபுரியும் என் அப்பாவைப் பார்க்க வந்தபோது, அந்த விட்டத்தைப் பார்த்திருக்கிறேன். அப்படியென்றால், இப்போது நான் அவருடைய மருத்துவமனையில், இந்த படுக்கையில், எல்லாவிதமான டியூப்களும் என் உடலிலிருந்து தொங்கியபடி படுத்துக் கிடக்கிறேன். இது எனக்கு விரக்தியாக இருந்தது. இந்த கஷ்டங்களை எல்லாம் நான் ஏற்றுக்கொண்டதற்கு ஒரே காரணம், மரணத்திற்குப் பிறகு ஒருவர் எங்கே போகிறார் என்பதை தெரிந்துகொள்வேன் என்ற நம்பிக்கையில் தான். ஆனால், இங்கு நான் பார்ப்பதோ இந்த பாழாய்ப்போன இரயில்வே மருத்துவமனையின் விட்டத்தைத்தான்!

நான் முயற்சி செய்ததோ, எப்படியாவது மரணத்திற்குப்பின் என்ன நடந்திடும் என்று தெரிந்துகொள்வதற்கு, ஆனால் அதைப் பற்றி நான் தெரிந்து கொண்டதோ ஒன்றுமேயில்லை. ஒரே ஒரு ஆறுதல் - அதை தெரிந்துகொள்ளும் வழி இதுவல்ல என்று புரிந்துகொண்டேன். அதற்குப் பிறகு எப்படியோ என் நண்பர்களை உருட்டிமிரட்டி, நான் தானம் செய்த பொருட்களை எல்லாம் அவர்களிடமிருந்து ஓரளவுக்கு

திரும்ப வாங்கிவிட்டேன், வாழ்க்கையும் தொடர்ந்தது. அதற்குப்பின் பல வருடங்கள் கழித்து, ஒரு துடுக்கான இளைஞனாக, வாழ்க்கையை என் கர்வத்தின் உச்சத்தில் நான் வாழ்ந்துகொண்டிருந்த நேரத்தில், ஒரு ஆழமான உள்ளனுபவம் நான் கேட்காமலேயே எனக்குள் நிகழ்ந்தது. வாழ்க்கையையும் மரணத்தையும் பற்றிய என் கண்ணோட்டத்தை இந்த அனுபவம் முழுவதுமாக மாற்றிவிட்டது.

ஒரு செப்டம்பர் மாதத்தில், மதியவேளையில், சாமுண்டி மலையில் ஒரு பாறையின்மேல் நான் தனியாக உட்கார்ந்துகொண்டிருந்தேன். நான் கண்மூடக்கூட இல்லை - கண்திறந்தே இருந்தது - அப்போது எனக்குள் ஏதோ நிகழ ஆரம்பித்தது. என் வாழ்நாள் முழுதும் அதுவரை "நான்" என்று எதை நினைத்திருந்தேனோ, அது திடீரென்று என்னைச் சுற்றி எல்லா இடத்திலும் இருந்தது - எனக்குள் இருப்பதும் எனக்கு வெளியே இருப்பதும் ஒன்றாகிப் போனது. "எது நான், எது நானில்லை," என்றே தெரியாமல் போனது. நான் சுவாசித்துக் கொண்டிருந்த காற்று, நான் உட்கார்ந்திருந்த பாறை, என்னை சுற்றியிருந்த சூழல் எல்லாமே "நான்" ஆகியிருந்தது. எனக்குள் என்ன நிகழ்ந்து கொண்டிருந்ததோ, அது விவரிக்க முடியாததாக இருந்தது. அதனால் அது கிறுக்குத்தனமாக தோன்றியது. நான் எனப்பட்டது, அவ்வளவு பிரமாண்டமாகிவிட்டது, இப்போது எல்லா இடத்திலும் இருக்கிறது. இது ஏதோ ஒருசில நிமிடங்கள் என்றுதான் எனக்கு தோன்றியது. ஆனால் என் வழக்கமான நினைவுக்கு திரும்பியபோது, சூரியன் மறைந்துபோய் இருட்டியிருந்தது. என் கண்கள் திறந்தே இருந்தன, நான் முற்றிலும் விழிப்பாய் இருந்தேன், ஆனால் அந்தக் கணம் வரை "நான்" என்று எதை நினைத்திருந்தேனோ, அது மறைந்துவிட்டது. எனக்கு எட்டு வயதாக இருந்ததிலிருந்து, நான் ஒரு சொட்டு கண்ணீர்கூட விட்டதில்லை. ஆனால் இப்போது, நான் உட்கார்ந்தபடி இருக்க, கண்ணீர் பெருக்கெடுத்து வழிந்துகொண்டிருக்கிறது, என் சட்டையே நனைந்து போய்விட்டது. நான் எப்போதுமே அமைதியாகவும் சந்தோஷமாகவும் இருந்திருக்கிறேன், அதெல்லாம் ஒரு பிரச்சனையாகவே எப்போதும் இருந்ததில்லை. ஆனால் இப்போது இங்கேயோ, முற்றிலும் புதுவிதமான பரவசத்தில் நனைந்து கிடந்தேன். அப்போது நேரம் மாலை 7.30 இருக்கும். தோராயமாக நாலரை மணிநேரம் இப்படியே போயிருக்கிறது.

வீட்டுக்குத் திரும்ப சென்றேன். இந்த மாதிரி அனுபவம் மறுபடியும், மறுபடியும் ஏற்பட்டது. அடிக்கடி நிகழ்ந்தது. என்னுடைய மிக மிக சாமர்த்தியமான காரண அறிவு, விவரிக்கமுடியாத மகத்தான பேரனுபவத்துடன் வந்த பழைய நினைவுகளின் வெள்ளம் - இந்த இரண்டிற்குமிடையே ஒரு சின்ன யுத்தமே, எனக்குள் கொஞ்ச

காலத்திற்கு நடந்தது. காரண அறிவு விட்டுக்கொடுக்க முடியாமல் போராடியது, இணங்க மறுத்தது. என் அறிவால் சொல்லமுடிந்தது ஒன்றே ஒன்றுதான் - நான் என் சமநிலையை தொலைத்து வருகிறேன் என்பது. ஆனால், என் அனுபவமோ மிகவும் அழகாக, இனிதாக இருந்தது. அதைத் தொலைக்க நான் கொஞ்சமும் விரும்பவில்லை. அது மிகமிக அற்புதமாக இருந்தது. அதேசமயம், இது ஒருவிதமான பைத்தியமோ என்றும் எனக்கு தோன்றிடும். காரணம், இது நிஜம்தானா என்று நம்பமுடியாத அளவுக்கு, அவ்வளவு அற்புதமான அனுபவம் அது.

எனக்குள், உயிர்த்தன்மை என்பது அவ்வளவு பிரமாண்டமாக நிகழ்ந்து கொண்டிருந்ததால், இறப்பு என்பதைப் பற்றி ஒரு கேள்விக்கும் இடமில்லாமல் போனது. ஆனால், இந்த அனுபவம் எனக்குள் ஒரு புரிதலை கொண்டு வந்தது. அதாவது, மனிதர்கள் இறப்பதில்லை. உங்களுடைய உணரும் தன்மையில் இருந்து அவர்கள் மறைந்திருக்கலாமே தவிர, அவர்கள் இறப்பதில்லை. அவர்கள் தொடர்ந்து உயிர்வாழ்கிறார்கள். பலப்பல முன்ஜென்மங்களின் ஞாபகங்களும், அனுபவங்களும் பெரும்வெள்ளமாக கொட்டியது. இந்த அனுபவம் தந்த தெளிவும், புரிதலும் என்னவென்றால் - கடந்த சில ஜென்மங்களாகவே, என்னுடைய பணி ஒன்றேதான்; அதே வேலை, அதே இடம், ஓரளவிற்கு அதே மனிதர்களுடன். அப்போதிலிருந்து, பிறப்பு-இறப்பு பற்றிய இந்தப் புரிதல்தான் என்னுடைய வாழ்க்கையை வடிவமைத்திருக்கிறது.

ஒருவிதத்தில் பார்த்தால், அறியாமையில் இருப்பவர்கள் உருவாக்கிய கட்டுக்கதைதான் மரணம் என்பது. விழிப்புணர்வு இல்லாதவர்கள் உருவாக்கியதுதான் மரணம் என்பது. நீங்கள் விழிப்புணர்வுடன் இருந்தால் இது வெறும் வாழ்வு மட்டுமே - இருப்பதெல்லாம் வெறும் உயிர், உயிர், உயிர் மட்டுமே - வாழ்வின் ஒரு பரிமாணத்திலிருந்து இன்னொரு பரிமாணத்திற்கு நகர்வது, அவ்வளவுதான்.

## துக்கமா? கொண்டாட்டமா?

இறப்பு என்பது சோகமானது என்று நினைக்கிறார்கள் மனிதர்கள். அப்படி இல்லை, வாழ்நாள் முழுவதும் மனிதர்கள் தங்கள் உயிரை உணராமல் வாழ்ந்து கொண்டிருப்பதே மிகவும் சோகமானது. நீங்கள் இறக்கும்போது, அதில் சோகம் ஒன்றுமேயில்லை. நீங்கள் வாழ்க்கையில் அனுபவித்து வரும் பிரச்சனைகள் எல்லாவற்றிற்கும் முடிவல்லவா அது? ஆனால், நீங்கள் உயிருடன் இருந்துகொண்டே, இந்த வாழ்வை முழுமையாக உணராமல் இருப்பதுதானே உண்மையான சோகம். ஒரு சமஸ்கிருத பாடல் வரி இதை மிக அழகாக வெளிப்படுத்துகிறது.

அது: *"ஜனனம் சுகதம், மரணம் கருணம்."* ஜனனம் என்றால் பிறப்பு அல்லது வாழ்க்கை. பிறப்பு என்பது இனிமையானது, மகிழ்ச்சியானது என்று சொல்கிறது. உண்மைதான் அது. உங்கள் உடலையும் மனதையும் சரியாக கையாள தெரிந்தால், வாழ்வின் அனுபவம் இனிமையானதாக, மகிழ்ச்சியாகவே இருக்கும். அதேபோல், மரணம் என்பது கருணையானது என்று சொல்கிறது. மரணம் என்பது உங்களை விடுவிக்கிறது, அதனால் மரணம் கருணையானது.

ஆனால் இப்போது, வாழ்க்கையைப் பற்றிய மனிதர்களின் கண்ணோட்டமும், புரிதலும் திரிக்கப்பட்டு இருக்கிறது. அவர்களுக்கு இறக்க விருப்பமில்லை. அவர்களுக்கு ஒரு விஷயம் புரியவில்லை - உங்களிடமிருந்து மரணம் பறிக்கப்பட்டாலோ அல்லது நீங்கள் அழிவே இல்லாமல் சிரஞ்சீவியாக இருப்பீர்கள் என்ற நிலைக்கு ஒடுக்கப்பட்டாலோ, அதுதான் உங்களுக்கு ஏற்படக்கூடிய மிகப்பெரிய கொடுமையாக இருக்கும். உங்களுடைய வாழ்க்கை எவ்வளவுதான் அழகானதாக இருந்தாலும், உங்களுடைய மரணம் சரியான நேரத்தில் வந்தது என்றால், நீங்கள் பெரிய பாக்கியசாலிதான். அது தாமதமாக வந்தால், ஒரு குறிப்பிட்ட கட்டத்திற்கு மேல் வாழ்க்கை நீடித்தது என்றால், அதுதான் இருப்பதிலேயே மிகவும் கொடிய துன்பமாகும். அப்போது மரணம் வரும்போது அதை பெரிய விடுதலையாக உணர்வீர்கள். வாழ்க்கை தொடர்ந்து நடைபெற, அதற்கு கொஞ்சம் விசை (டென்ஷன்) தேவைப்படுகிறது. ஆனால், மரணத்திலோ ஓய்வு (ரிலாக்சேஷன்) ஏற்படுகிறது. குறிப்பாகச் சொன்னால், மரணம் தான் உச்சகட்ட ஓய்வுநிலை. ஆனால், மரணத்தின் அந்த ஓய்வு நிலையை நீங்கள் உயிருடன் இருக்கும்போதே அறிந்துகொள்வீர்கள் என்றால், அதன்பின் வாழ்க்கை என்பது முற்றிலும் முயற்சியின்றி எளிமையானதாகிவிடும்.

வாழ்வையும் மரணத்தையும் உங்களுடைய அனுபவத்தின் அடிப்படையில் பார்த்தால், உங்கள் உள்மூச்சு என்பது வாழ்க்கை, வெளிமூச்சு என்பது மரணம். இதை நீங்கள் பரிசோதித்துப் பார்க்கலாம்: நன்கு ஆழமாக உள்மூச்சு எடுங்கள், உங்கள் உடலும் மனமும் எப்படி இருக்கிறது என்று பாருங்கள். இப்போது ஆழமாக ஒரு வெளிமூச்சு செய்யுங்கள், உடலும் மனமும் எப்படி இருக்கிறது என்று பாருங்கள். எது மிகவும் ஓய்வு தருவதாக இருக்கிறது? குறிப்பாக, எப்போதெல்லாம் உங்களுக்குள் இறுக்கம் ஏற்படுகிறதோ, இயற்கையாகவே அமைக்கப்பட்ட முறைப்படி, உங்கள் உடல் மூச்சை வெளிவிடத்தான் விரும்பும். இதைத்தான் நீங்கள் பெருமூச்சு என்று சொல்கிறீர்கள். அது உங்களுக்குள் கொஞ்சம் ஓய்வை உருவாக்குகிறது. வாழ்க்கைக்கு என்னவோ ஒருவித விசை தேவைப்படுகிறது. இல்லாவிட்டால் உங்களால் அதைத் தொடர முடியாது.

மரணம் என்பது முழுமையான ஓய்வு. இயற்கையாகவே அது அப்படித்தான் இருந்திருக்கும், ஆனால் இப்போது உங்கள் மனமோ மரணத்தை தீமையானதாக சித்தரித்து விட்டதே!

"மரணம் என்பது தீமையானது, துயரமானது, அதை தவிர்க்க வேண்டும்" என்று உங்கள் கலாச்சாரங்களும் பாரம்பரியங்களும் சொல்லிக் கொடுக்காமல் இருந்திருந்தால், நீங்கள் மூச்சை உள்ளிழுக்கும் விதமும் வெளிவிடும் விதமுமே முற்றிலும் வேறுவிதமாக இருந்திருக்கும். உங்களைச் சுற்றி இருப்பவர்களை நீங்கள் கவனித்துப் பார்த்தால், 99 சதவிகிதம் பேருக்கு அவர்களுடைய வெளிமூச்சு முழுமையானதாகவே இருக்காது. அவர்களின் மனம் மரணத்தை நிராகரித்துவிட்டது, அதனால் அவர்களுடைய வெளிமூச்சு முழுமையாக ஏற்படுவதில்லை. அவர்கள் மூச்சை உள்ளே எடுப்பார்கள், ஆனால் வெளிமூச்சு முழுமையாக நடக்காது. இதனால்தான் காலப்போக்கில் உங்களுக்குள் அவ்வளவு இறுக்கத்தை உருவாக்கிக் கொள்கிறீர்கள் - எந்தளவுக்கு என்றால், ஒரு நிலையில் உங்கள் அமைப்பு உடைந்தே போய்விடும் என்ற அளவுக்கு - உடல், மனம் இரண்டு நிலைகளிலும் இது ஏற்படுகிறது.

மனித மனத்தின் மிகவும் துக்ககரமான விஷயம் என்னவென்றால், மனம் மரணத்திற்கு எதிரானதாக இருக்கிறது. மரணத்தை நீங்கள் நிராகரிக்கும் நொடியிலேயே வாழ்க்கையையும் நிராகரித்து விடுகிறீர்கள். வாழ்க்கை என்பது சரியானது, மரணம் என்றால் தவறானது என்று நினைக்கிறீர்கள். அது அப்படி கிடையாது. மரணம் என்பது இருப்பதால்தான் வாழ்க்கை எப்படி இருக்கிறதோ அப்படி இருக்கிறது. ஒரு நதி எப்போதுமே இரண்டு கரைகளுக்கு நடுவில்தான் ஓடும். ஆனால், நீங்கள் வலது கரையில் நின்றுகொண்டு, "நான் இடது கரையை விரும்பவில்லை, அது மறைந்துவிட வேண்டும்," என்று சொல்கிறீர்கள். இடது கரை மறைந்துவிட்டால், நதியும் மறைந்துவிடும், வலது கரையும் மறைந்துவிடும்.

வலது கரை என்ற ஒன்று இருக்க வேண்டும் என்றால், இடது கரையும் இருந்தாக வேண்டும். இருள் என்பது இல்லாமல் வெளிச்சம் எப்படி இருக்க முடியும்? மரணத்தை ஏற்றுக் கொள்ளாதவர்களால், வாழ்க்கையையும் உணர முடியாது. நீங்கள் உட்கார்ந்து கொண்டு, "நான் இறக்கக்கூடாது, நான் இறக்கக்கூடாது, நான் இறக்கக்கூடாது," என்று சொல்லிக்கொண்டு இருந்தால், என்ன நடக்கும்? நீங்கள் வாழ்க்கையை வாழவே மாட்டீர்கள், அவ்வளவுதான் - அதுதான் நடக்கும். எப்படி இருந்தாலும் நீங்கள் இறக்கத்தான் போகிறீர்கள். ஆனால், மரணத்தை ஏற்றுக்கொள்ளாமல் இருப்பதால், அது வரும்வரை, இருக்கும் வாழ்க்கையையும் நீங்கள் நலமாக வாழமாட்டீர்கள். மரணத்தைப் பற்றி பயத்துடன் இருந்தால்,

நீங்கள் தவிர்ப்பது வாழ்க்கையைத்தான், மரணத்தை அல்ல. மரணத்தை உங்களால் தவிர்க்க முடியாது.

இன்றுகூட சில கலாச்சாரங்களில், மரணம் என்பது கொண்டாடப்பட வேண்டியதாக கருதப்படுகிறது, துக்கப்பட வேண்டிய விஷயமாக இல்லை. எப்படியோ, நீங்கள் இந்த பூமியில், அதன் காற்றுமண்டலத்தின் எல்லைக்குள் எங்கிருந்தோ வந்திருக்கிறீர்கள். அந்த வரம்புக்குள் நீங்கள் வகிக்கும் இடம் அளவில் எவ்வளவு பெரியதாக இருந்தாலும், இது என்னவோ ஒரு சிறிய சிறைதான். ஆனால் மரணம் என்பது முடிவற்ற ஒரு வாய்ப்பாகும். அதனால் பிறப்பைவிட, இறப்பைப் பற்றி அதிகமான மகிழ்ச்சியும் உற்சாகமும் இருக்கவேண்டும் அல்லவா? இந்த வாய்ப்பைப் பற்றி விழிப்புணர்வு இருப்பவருக்கு, வாழ்வு-மரணம் என்றெல்லாம் எதுவுமே இல்லை. வாழ்வே மரணம், மரணமே வாழ்வு; இவை இரண்டும் வெவ்வேறு கிடையாது.

குறிப்பாகச் சொன்னால், வாழ்வின் மிகத் தீவிரமான வடிவம் மரணம். தங்கள் வாழ்க்கையில் மிகப்பெரிய ஆபத்துகளை அனுபவித்தவர்களுக்கு இது தெளிவாக புரிந்திருக்கும். ஒருமுறை இப்படி நடந்தது. அமெரிக்காவில் உள்ள இந்தியானா என்ற ஊரில் வயதானவர்கள் இரண்டு பேர் ஒரு பாரில் சந்தித்தார்கள். இரண்டு பேருமே வெவ்வேறு மேஜைகளில் உம்மென்று உட்கார்ந்து குடித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர்களில் ஒருவர் இன்னொருவரை பார்த்தபோது, அவர் நெற்றியில் இருந்த மச்சத்தை கவனித்தார். உடனே அவரிடம் போய், "அட நீயா, நீ ஜோஷுவாதானே?" என்று கேட்டார். "ஆமாம், நான்தான். நீங்கள் யார்?" என்றார் அவர். "என்னைத் தெரியவில்லையா? நான்தான் மார்க். போரின்போது நாம் ஒன்றாக இருந்தோமே!" அதற்கு அவர், "அட ஆமாம், ஓ மை காட்!" என்றார். சட்டென்று இருவரும் உற்சாகமாகி விட்டார்கள். அவர்கள் இரண்டு பேருமே இரண்டாவது உலகப்போரின் போது ஒன்றாக இருந்தவர்கள். அது முடிந்து ஐம்பது வருடங்கள் ஆகியிருந்தது.

இரண்டு பேருமே ஒரே மேஜையில், சாப்பிட்டுக்கொண்டும் குடித்துக்கொண்டும் வெகுநேரம் பேசினார்கள். ஐரோப்பாவில் இரண்டாவது உலகப் போரின்போது ஆபத்தான பதுங்கு குழிக்குள் இருந்தபடி நாற்பது நிமிடங்களுக்கு மிக பயங்கரமான சண்டையில் ஈடுபட்டிருந்தார்கள். அந்த நாற்பது நிமிடங்களைப் பற்றி மிகவும் விலாவாரியாக சுமார் இரண்டு மணி நேரத்துக்கும் மேல் பேசிக்கொண்டிருந்தார்கள். இப்படியாக, எல்லாம் பேசிமுடித்த பிறகு, ஒருவர் இன்னொருவரைப் பார்த்து, "அப்புறம், இவ்வளவு நாளாக நீ என்ன செய்து கொண்டிருந்தாய்?" என்றார். "ஓ அதுவா, நான் வெறும் ஒரு சேல்ஸ்மேனாகத்தான் இருக்கிறேன்."

போரில் நடந்த அந்த நாற்பது நிமிடங்களைப் பற்றி அவ்வளவு உற்சாகமாக இரண்டு மணி நேரத்துக்கு பேசிக்கொண்டிருந்தார்கள். ஆனால், அதற்குப் பிறகு நடந்த ஐம்பது வருட வாழ்க்கையை சும்மா ஒரே வரியில் "நான் வெறும் ஒரு சேல்ஸ்மேனாகத்தான் இருக்கிறேன்," என்று முடித்துவிட்டார் பாருங்கள். இது இப்படித்தான் நடக்கிறது.

ஆபத்தான கணங்கள்தான் வாழ்க்கை, மரணம் என்ற இரண்டையுமே ஒரே சமயத்தில் நீங்கள் அனுபவிக்கும் கணங்கள். இந்த கணங்களில் தான், வாழ்வும் மரணமும் இங்கே ஒரே சமயத்தில் இருப்பதை நீங்கள் உணர்கிறீர்கள். இவை இரண்டும் வெவ்வேறு இல்லை, இரண்டும் ஒன்றுக்குள் ஒன்று இருக்கிறது. வாழ்க்கை இப்படித்தான் கட்டமைக்கப்பட்டுள்ளது. படைத்தலும் படைத்தவரும், வாழ்வும் மரணமும் - எல்லாம் ஒன்றுக்குள் இன்னொன்று பொதிக்கப்பட்டு இருக்கின்றன. இதை பார்ப்பதற்கு கவனம் தேவை - பெருமளவிலான கவனம் தேவைப்படுகிறது. இல்லாவிட்டால், ஒருவர் வெறும் மேலோட்டமாக, பாதி-உயிராக வாழ்ந்து போய்விடுவார். வாழ்வையும் மரணத்தையும் ஒரே நேரத்தில் நீங்கள் அறியவில்லை என்றால், உங்களுக்கு வாழ்வின் ஒருபாதி மட்டுமே தெரிந்திடும். பாதி-உயிராக வாழ்வது எப்போதுமே மிகப்பெரிய கொடுமையாக இருக்கும்.

நீங்கள் ஒரு முழுமையான உயிராக வாழ வேண்டுமென்றால், உங்களுடைய அழியக்கூடிய இயல்பைப் பற்றிய கவனம் உங்களுக்கு தினம்தோறும் இருக்க வேண்டும். ஏதோ ஒரு குறிப்பிட்ட வயதைக் கடந்த பிறகுதான் நீங்கள் மரணத்தை கவனிக்க வேண்டும் என்று இல்லை. வாழ்வின் ஒவ்வொரு நாளும், நீங்கள் இறக்கக்கூடியவர், உங்கள் வாழ்க்கை நிலையற்றது என்பதைப் பற்றி நீங்கள் விழிப்பாக இருக்க வேண்டும். "இன்றே இறக்க வேண்டும்" என்று ஒன்றும் நான் விரும்பவில்லை, ஆனால் ஒருவேளை அது நிகழ்ந்தால் எனக்கு சரிதான். என்னை கவனித்துக் கொள்வதற்கு, என்னை வளர்த்துக் கொள்வதற்கு, என்னை பாதுகாத்துக் கொள்வதற்கு தேவையான அனைத்தையும் நான் செய்வேன். ஆனால் இன்றைக்கே இறக்க வேண்டும் என்றாலும் எனக்கு சரிதான். அப்போதுதான் நான் முன்னோக்கி அடியெடுத்து வாழ்ந்திட முடியும். இல்லாவிட்டால் என்னால் வாழவே முடியாது.

## மரணத்தை அழைப்பானேன்?

"மரணத்தைத் தவிர்ப்பது" என்பது "வாழ்க்கையையும் தவிர்ப்பது" ஆகிறது. அப்படியென்றால், "வாழ்க்கையிலிருந்து தப்பிக்கப் பார்ப்பது" என்பது "மரணத்திற்கு அழைப்பு விடுப்பது" ஆகும். பெரும்பாலான

மனிதர்களுக்கு, வாழ்க்கை கசப்பாகவோ, பாரமாகவோ ஆகும்போது தங்களுக்கு தெரிந்தோ தெரியாமலோ அவர்கள் வாழ்க்கையிலிருந்து தப்பிக்கப் பார்க்கிறார்கள். இப்படி வாழ்க்கையை ஏமாற்றி தப்பிக்க ஆரம்பிக்கும்போது, நீங்கள் தவிர்க்க முடியாதபடி மரணத்தைத்தான் அழைக்கிறீர்கள். வாழ்க்கையிலிருந்து தப்பித்துக்கொள்ள, மரணத்தை அழைப்பதைவிட சிறந்த வழி வேறு இல்லை. ஒன்று நீங்களாக அதைத் தெரிந்தே செய்கிறீர்கள் அல்லது தெரியாமல் செய்கிறீர்கள். இன்று இந்த உலகில் நீங்கள் பார்க்கும் பலவித சிக்கலான நோய்களுக்கு ஒரு மிகப்பெரிய காரணம் - மனிதர்கள் வாழ்க்கையிடமிருந்து தப்பிக்கும் முயற்சியில் மரணத்தை கூப்பிடுகிறார்கள். இதற்கு உங்கள் உடலும் ஒத்துழைக்கிறது, அவ்வளவுதான். இறப்புக்கு அழைப்பு வைக்கும் உங்களுடைய ஆசையை பூர்த்தி செய்வதில், உங்களுடன் உங்கள் உடலும் ஒத்துழைக்கிறது. கேளுங்கள், அது கொடுக்கப்படும் அல்லவா?

வாழ்க்கை பாதுகாப்பானது இல்லை என்று மனிதர்கள் நினைக்கிறார்கள், அதனால்தான் அதை தவிர்த்திட பார்க்கிறார்கள். இதில் நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டியது என்னவென்றால், இந்த உலகத்தில் பாதுகாப்பான இடம் என்று ஒன்றே ஒன்றுதான் இருக்கிறது - அது உங்களுடைய கல்லறைதான். அங்கே போய்விட்டால் உங்களுக்கு எதுவுமே ஆகாது. வாழ்க்கையில் அப்படிப்பட்ட பாதுகாப்பெல்லாம் ஒன்றும் கிடையாது. நான் ஏற்கனவே சொன்னதுபோல, உங்களுக்காக நீங்கள் எவ்வளவு பாதுகாப்பு உருவாக்கி வைத்தாலும், நாளை காலையே நீங்கள் இறந்துவிட முடியும். உங்களுக்கு இப்படி ஆகவேண்டும் என்று நான் ஒன்றும் விரும்பவில்லை, ஆனால் உண்மை இதுதான் - நீங்கள் இப்போதைக்கு எவ்வளவு ஆரோக்கியமாக இருந்தாலும், எவ்வளவு நலமாக இருந்தாலும், நாளைக்கே நீங்கள் இறந்துவிட முடியும். நிஜமாகவே இதற்கு வாய்ப்பு இருக்கிறது. அதனால், பாதுகாப்பு என்றெல்லாம் உங்கள் வாழ்க்கையில் எதுவும் இல்லை. நீங்கள் பாதுகாப்பைத் தேட ஆரம்பிக்கும் கணத்திலேயே, இயற்கையாகவே நீங்கள் மரணத்தை நோக்கிப் போகிறீர்கள். உங்களை அறியாமலேயே மரணத்தை அழைக்கிறீர்கள்.

நம் பாரத தேசத்தில் பாரம்பரியமாக இப்படி ஒரு வழக்கமிருக்கிறது - ஒரு சாதுவையோ முனிவரையோ பார்க்கும் போதெல்லாம், தவறாமல் அவரிடம் ஆசி பெறவேண்டும். அதனால் பலமுறை பலரும் என்னிடம் வந்து, "சத்குரு, தயவுசெய்து எனக்கு எதுவுமே நடக்கக்கூடாது என்று ஆசிர்வாதம் செய்யுங்கள்," என்று கேட்பார்கள். சரிதான், இது என்ன மாதிரியான ஆசி? என்னுடைய ஆசி என்னவென்றால் "எல்லாமே உங்களுக்கு நடக்கட்டுமே!" என்பதுதான். வாழ்க்கை என்பது அதன் முழுமையில் உங்களுக்கு

நடக்கட்டுமே! நீங்கள் இங்கே வாழ்க்கையை தவிர்க்க வந்திருக்கிறீர்களா, இல்லை வாழ்க்கையை அனுபவிக்க வந்திருக்கிறீர்களா? உங்களுக்கு வாழ்க்கையை தவிர்க்கத்தான் வேண்டுமென்றால், அதற்கு ஈஷா யோகா[5] தேவையில்லை, அதைவிட சிறந்த தொழில்நுட்பம் என்னிடம் இருக்கிறது. வாழ்க்கையை தவிர்ப்பதுதான் உங்கள் நோக்கம் என்றால், அதற்கு இரண்டு மீட்டர் கயிறு இருந்தால் போதும், நீங்கள் கூரையிலிருந்து தொங்க முடியும். அது மட்டுமில்லை, அதற்கு அதிக செலவும் ஆகாது. நான் செயல்திறனைப் பற்றித்தான் பேசுகிறேன். நீங்கள் உயிரோடு வாழ்ந்து கொண்டிருக்கும்போது, வாழ்க்கையை தவிர்க்க முயற்சிப்பது எதிர்மறையானதே! அளவில் பார்த்தால், நாம் உயிர்வாழும் காலம் ஒரு குறுகிய நிகழ்வுதான். ஆனால், நாம் இறந்தநிலையில் இருக்கும் கால அளவோ மிகவும் நீண்டது. அதனால் ஒருவரின் உயிரை மாய்த்துக்கொள்வது என்ற ஒரு வாய்ப்பே இருப்பதில்லை. அப்படி ஏற்பட காரணம், மனதில் நிகழும் நாடகத்தைப் போய் உயிரின் நிகழ்வு என்று தவறுதலாக புரிந்துகொள்கிறார்கள்.

பாதுகாப்பைப் பற்றி யோசிக்க ஆரம்பித்த உடனேயே, நீங்கள் மரணத்திற்கு துணை போகிறீர்கள். நீங்கள் ஒன்றை புரிந்துகொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன்: மரணத்திற்கு உங்களுடைய துணை தேவையில்லை. மரணம் என்பது மிகமிக திறமையானது. குறிப்பாக சொன்னால் வாழ்க்கைக்குத்தான் உங்கள் உதவி தேவை. நீங்கள் கவனித்துப் பார்த்தால், வாழ்க்கைக்கு நீங்கள் என்னவே செய்தாலும், எவ்வளவுதான் செய்தாலும், அதைப்பற்றி நீங்கள் செய்வதற்கு எப்போதுமே இன்னும் கொஞ்சம் ஏதோ மிச்சம் இருக்கும். வாழ்க்கைக்கு உங்களுடைய முழுமையான கவனமும் முயற்சியும் தேவை. மரணத்திற்கு உங்கள் துணை தேவையே இல்லை, எப்படியும் அது நிகழும். அது மட்டுமில்லை, அது உச்சபட்ச திறனோடு நிகழும். தோல்விக்கு இடமே கிடையாது, எல்லோருமே வெற்றி பெறுவதுதான். மரணத்தைப் பொறுத்தவரை யாரும் ஃபெயில் ஆகமுடியாது, எல்லோருமே பாஸ்தான்!

தங்களுக்கு புதிதாக எதுவுமே நடந்துவிடக்கூடாது என்று மனிதர்கள் நினைக்கிறார்கள், ஆனாலும் அவர்களுக்கு ஒரு சுவாரஸ்யமான வாழ்க்கை வேண்டும் என்று நினைக்கிறார்கள். இது எப்படி சாத்தியம்? எந்தவிதத்திலும் எந்தநேரத்திலும் இதில் வெற்றிக்கு சாத்தியமே இல்லை. ஆனால் இந்த சூழ்நிலையைத்தான் நீங்கள் உங்களுக்கு உருவாக்கிக் கொள்கிறீர்கள். அதிகபட்சம் உங்களுக்கு என்ன நடந்துவிட முடியும்? அதிகபட்சம், நீங்கள் இறந்து போவீர்கள். அதைவிட ஒன்றும் உங்களுக்கு

5 சத்குரு கற்றுக்கொடுக்கும் ஆன்மீக வகுப்பைக் குறிக்கிறது.

நடந்துவிடப் போவதில்லை. அதோடு, உங்கள் வாழ்க்கையில் என்னதான் நடந்தாலும், நீங்கள் ஒன்றும் எந்தவிதமான முதலீட்டுடனும் இங்கு வரவில்லையே! வெறும் கையோடுதானே வந்தீர்கள். இந்த வாழ்க்கையில் நீங்கள் தோற்பதற்கு ஒன்றுமே இல்லை, இழப்பதற்கு ஒன்றுமே இல்லை. பாருங்கள், இது அற்புதமானது அல்லவா? என்னவே நடந்தாலும் உங்கள் பக்கம் லாபம்தான், வேறென்ன வேண்டும்? பிறகு எதைப்பற்றி குறைப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள்?

பத்து வருடங்களுக்கு முன்பு இது நடந்தது. அந்த சமயத்தில் இந்தியாவின் பங்குச்சந்தை சரிந்து கொண்டிருந்தது. சிலர், மும்பையில் இருந்து ஒருவரை என்னிடம் அழைத்து வந்தார்கள். இதற்குமுன் அவருடைய மதிப்பு இருபத்தைந்து கோடியாக இருந்தது. பிறகு பங்குச்சந்தையில் அடிவாங்கிவிட்டார். எட்டு மாத காலத்திற்குள் மதிப்பு மூன்று கோடிக்கு சரிந்துவிட்டது. அதனால் மனிதர் நொறுங்கிப் போய்விட்டாராம்! மன உளைச்சலில் தற்கொலை செய்துகொள்ள வேண்டும் என்று விரும்பினாராம்! ஏனென்றால், கைவசம் அவரிடம் வெறும் மூன்று கோடி ரூபாய்தான் இருந்ததாம். மிகவும் மோசமான நிலையில் இருந்தார், அதனால் அவருக்கு நான் உதவவேண்டும் என்று அவர்கள் விரும்பினார்கள். எனக்கு இது மிகவும் வேடிக்கையாக இருந்தது. இந்தியாவில் எத்தனையோ பேருக்கு, மூன்று கோடி ரூபாய் என்றால், அது சொர்க்கத்துக்கும் மேலான ஒரு மதிப்பு. மூன்று கோடிக்கும் சொர்க்கத்துக்கும் இடையே ஒரு சாய்ஸ் கொடுத்தால், அவர்கள் நிச்சயம் மூன்று கோடியைத்தான் தேர்ந்தெடுப்பார்கள். ஆனால் இந்த மனிதரோ மன உளைச்சலில் இருக்கிறார், அதோடு தற்கொலைப் பற்றி வேறு யோசிக்கிறார், அவரிடம் வெறும் மூன்று கோடியே இருக்கிறது என்ற காரணத்திற்காக! இது அவரைப் பற்றியது மட்டும் இல்லை; இதைத்தான் எல்லா நேரத்திலும் நீங்களும் உங்களுக்கே செய்து கொண்டிருக்கிறீர்கள்.

புதிய விஷயங்கள்தான் உங்களுக்கு நடக்கட்டுமே! "ஐயோ, எனக்கு எதுவுமே நடக்கக்கூடாது" என்ற சூழ்நிலையை உங்களுக்குள் உருவாக்கிக் கொண்டால், நீங்கள் தேங்கிப் போய்விடுவீர்கள். தேக்கநிலை என்பது மரணம். வாழ்க்கை முன்னோக்கி நகராவிட்டால், உங்களுக்குள் புதிய வாய்ப்புகள் மலராவிட்டால், நீங்கள் வாழும் பிணம்தான். தெருவில் போகும் நபர்களின் முகங்களை எல்லாம் பாருங்கள். எத்தனையோ பேரின் திருமுகங்கள் உம்மென்று, உயிரோட்டம் இல்லாமல் இருப்பதைப் பார்க்கலாம். அவர்கள் வாழ்க்கையில் ஒன்றும் பிரச்சனை ஆகிவிடவில்லை, நன்றாகத்தான் இருக்கிறது.

பெரும்பாலானவர்களுக்கு அவர்கள் கற்பனை செய்ததைவிட, எதிர்பார்த்ததைவிட, அவர்கள் வாழ்க்கை மிகமிக சிறப்பாகவே

அமைந்திருக்கிறது. பொருள் அளவில் பார்த்தால், நம் அப்பாக்களும், தாத்தாக்களும் வாழ்ந்ததைவிட பலமடங்கு சிறப்பாகவே நாம் வாழ்ந்து வருகிறோம். அப்படி இருந்தாலும் தெருவில் இவ்வளவு பேருடைய முகங்கள் உயிரோட்டம் இல்லாமல் இருக்கின்றன. ஏதோ பிரச்சனை ஆகிவிட்டதனால் இது நிகழவில்லை. இதற்குக் காரணம் அவர்கள் தேங்கிப் போய்விட்டார்கள். தேங்கிய நிலையில் நீங்கள் உயிர்வாழ முடியாது, அது வாழும் மரணம் போன்றது.

உயிர்ரீதியாக உங்கள் இருப்பு "வாழும் மரணமாக" இருந்தால், அது என்னவோ அற்புதமான அனுபவமாகவே இருந்திருக்கும். ஆனால், உயிருடன் இருக்கும்போதே இறந்ததுபோல் இருப்பது, மிகவும் மோசமான கொடுமையாகும். நீங்கள் உயிருடன் இருந்தால் அது அற்புதமானது. நீங்கள் இறந்துவிட்டால் உங்களைப் பற்றி எங்களுக்கு கவலையில்லை. ஆனால் இங்கே நிறைய இறந்த மனிதர்கள் நடந்து கொண்டிருக்கிறார்கள், அதனால்தான் இந்த பூமியில் இவ்வளவு துன்பம் இருக்கிறது. இவர்கள் எல்லோருமே ஒருகாலத்தில் பிரகாசமாகவும் உயிரோட்டமாகவும் இருந்தவர்கள்தான். மெதுவாக காலப்போக்கில் அவர்கள் வாழும்போதே கல்லறைக்குள் ஒரு கால் வைத்துவிட்டார்கள். ஆமாம், காலப்போக்கில் உடல் என்பது குன்றிப்போகத்தான் செய்யும். அதனால்தான், வாழ்க்கையை நீங்கள் உணர்வது வெறும் உடலளவிலும் மனதளவிலும் மட்டுமே நடந்தால், காலப்போக்கில் நீங்கள் உயிரோட்டம் குன்றிப்போவீர்கள், இது இயல்புதான். எப்போது அடிப்படையான இந்த உயிர்சக்தி உங்கள் அனுபவத்தில் இருக்கிறதோ, இந்த உயிர்தன்மையைப் பற்றி சரியான விஷயங்களை செய்தீர்கள் என்றால், அப்போது காலப்போக்கில் வயதாகும்போது உங்களுடைய உயிரோட்டம் குறையாது, மாறாக உயிரோட்டம் அதிகரிக்கவே செய்யும்.

அதனால், இந்த உயிரைத்தான் நீங்கள் தொடர்ந்து தீவிரப்படுத்தி கொண்டிருக்க வேண்டும். நீங்கள் மரணத்திற்கு அழைப்பு விடுக்க வேண்டாம். அதைப் பயிற்சி செய்யவும் வேண்டாம். ஏனென்றால், மரணத்திற்கு உங்களுடைய உதவி ஒன்றும் அவசியமில்லை, வாழ்க்கைக்குத்தான் தேவை.

அத்தியாயம் 2

# இறப்பின் ரகசியங்கள்

இப்போது நீங்கள் வாழ்க்கை என்று எதைச் சொல்கிறீர்களோ, அது சோப்பு நுரையில் ஊதிய குமிழிகளை போன்றது. அத்தனை யோகமுறைகளின் அல்லது ஆன்மீகமுறைகளின் நோக்கமே இந்த குமிழியை மிகவும் மெலிதாக ஆக்குவதுதான். அப்போது ஒருநாள் அது உடைந்திடும்போது, மீதம் ஏதும் இல்லாதபடி முற்றிலும் ஒன்றுமில்லாமல் போகிறது. இருப்பு எனும் கட்டுகளிலிருந்து இல்லாமை எனும் கட்டில்லா விடுதலைக்கு, முக்திக்கு நகர்கிறது.

## உயிரின் இயக்கம் எப்படி நிகழ்கிறது?

அடிப்படையாக இந்த வாழ்வும் மரணமும் இயங்கும் விதத்தை புரிந்துகொள்ள வேண்டுமா? அப்படியென்றால், இந்தப் படைப்பு இயங்கும் விதத்தை புரிந்துகொள்வது அவசியம். இந்தப் படைப்பில் உள்ள பலவிதமான ஞாபகங்களைப் பற்றியும், அவற்றின் பங்களிப்பையும் முக்கியத்துவத்தையும் புரிந்துகொள்வது அவசியம். ஞாபகம் என்று சொல்லும்போது, நம் நினைவில் வைத்துக் கொண்டிருப்பது மட்டுமில்லை. ஞாபகம் என்பது இதைவிட மிகவும் ஆழமாக போகிறது, பல அடுக்குகளில் இருக்கிறது. யோகமுறையின் அடிப்படையில், பல பதிவுகளின் ஒரு குவியல் அல்லது சேகரிப்புதான் "ஞாபகம்" என்பது. மேலும், இந்த படைப்பில் அடிப்படையாக எட்டு விதமான ஞாபகங்கள் இருக்கின்றன. இந்த ஞாபகங்களில் மிகவும் அடிப்படையானது பூத அளவிலான ஞாபகம்.

யோகமுறையின் படி, உருவில்லா நிலையிலிருந்து உருவம் வெளிப்படும் நிலைக்கான முதல்படி பஞ்சபூதங்களின் உருவாக்கம்தான். இந்த ஐந்து பூதங்கள் என்பவை - நிலம் (ப்ருத்வி)), நீர் (ஜலம்), நெருப்பு (அக்னி), காற்று (வாயு) மற்றும் ஆகாயம் (ஆகாஷ்). இந்த பெயர்கள் ஒரு குறிப்பிட்ட தன்மையைத்தான் வர்ணிக்கின்றனவே தவிர, அந்த வஸ்துவை (பொருளை) அல்ல. இந்த அடிப்படையான பூதங்களுக்கு வெவ்வேறு குணாதிசயங்கள் இருக்கின்றன. இந்த ஐந்து பூதங்களும்,

படைப்பின் எல்லா அம்சங்களிலும் வெளிப்படுகின்றன, எல்லா படைப்புக்கும் இன்றியமையாத அடிப்படை இவைதான். இந்த ஐந்து பூதங்களும் ஒன்றுக்கொன்று எப்படி செயல்பட வேண்டும், வாழ்வில் எப்படி வெளிப்பட்டு இயங்கவேண்டும் என்பதை நிர்ணயம் செய்வதுதான் பூத அளவிலான ஞாபகம்.

படைப்பின் அடுத்த அடுக்கு பொருள்தன்மை. இந்த பொருள்தன்மையால் தான் பிரபஞ்சமே உருவாக்கப்பட்டிருக்கிறது. இந்த பொருள்தன்மை எப்படி இயங்குகிறது என்பதை உள்ளடக்கியதுதான் *அணு அளவிலான ஞாபகம்*

இன்று பள்ளிகளில் எல்லா குழந்தைகளுக்கும் "அடாமிக் தியரி" எனப்படும் அணுக்கோட்பாடு சொல்லித்தரப்படுகிறது. 'அடாமிக்' என்ற வார்த்தைக்கு மூலம் அடாமோஸ் எனப்படும் கிரேக்க வார்த்தை - இதற்கு "வகுக்க முடியாதது" என்று அர்த்தம். நவீன விஞ்ஞானம் அணுவை கண்டுபிடித்த சமயத்தில், அணு என்பது இதற்குமேல் வகுக்கமுடியாதது என்றும், பிரபஞ்சத்தின் மிக அடிப்படையான கட்டுமானப்பொருள் அணுதான் என்றும் நம்பப்பட்டது. ஆனால் இன்றைக்கோ அது அப்படி கிடையாது என்பது நமக்கு தெரிந்ததுதான். "சப்-அடாமிக் பார்ட்டிகிள்" என சொல்லப்படும் அணுவுக்குள் இருக்கும் பொருட்கள் இரண்டு டஜனுக்கும் மேலாக இதுவரை கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இதற்குமேலும், இன்னும் இருக்கலாம்!

அணுக்களும், அணுவுக்குள் இருக்கும் பொருள்களும், அதன் விளைவாக பல்வேறு பொருள்களில் உள்ள மாலிக்யூல்களும் (மூலக்கூறுகள்) எப்படி அமைகின்றன, எப்படி நடந்துகொள்கின்றன என்பதை அணு அளவிலான ஞாபகம்தான் முடிவுசெய்கிறது.

பூத அளவிலான ஞாபகம், அணு அளவிலான ஞாபகம் - இவை இரண்டையும் *"அசைவில்லா நிலையிலான ஞாபகம்"* என்று சொல்லலாம். இந்த ஞாபகங்கள் வாழ்க்கையின் அசைவில்லாத அம்சங்களை ஆள்கின்றன. மற்ற விதமான ஞாபகங்கள் அசையும் நிலையில் உள்ள அம்சங்களை சார்ந்திருக்கின்றன - இதை *"அசைவு நிலையிலான ஞாபகம்"* என்று சொல்லலாம்.

பல அடுக்குகளாக இருக்கும் இந்த ஞாபகங்களில், மிகவும் அடிப்படையானது, *பரிணாம ஞாபகம்*. இது வாழ்க்கையின் பரிணாம வளர்ச்சி எப்படி நிகழ்ந்திருக்கிறது என்பதை சார்ந்தது. உங்களுக்கு இரண்டு கண்கள் இருப்பதற்கு, இரண்டு கைகள் இருப்பதற்கு, நீங்கள் வேறு ஏதோ பிராணியைப்போல் இல்லாமல் இப்படி மனித உருவில் இருப்பதற்கு - இதற்கெல்லாம் காரணமாக இருப்பது பரிணாம ஞாபகம்தான்.

இதற்கு அடுத்த அடுக்கு *மரபணு ஞாபகம்* - இது உங்கள் பெற்றோர்கள் வழிவந்த மரபணுவில் உள்ளது. உலகிலுள்ள அத்தனை மனிதர்களுக்குள்ளும் நீங்கள் தனித்தன்மை வாய்ந்தவராக ஆவதற்கு, இதுதான் காரணம். உங்கள் தோலின் நிறம், மூக்கின் வடிவம், இது மாதிரியான மற்ற விஷயங்களை முடிவுசெய்வது இந்த மரபணு ஞாபகம்தான்.

அடுத்தது *கர்ம ஞாபகம்*. நீங்கள் பிறந்ததிலிருந்து இதுவரை சேகரித்துள்ள எல்லா பதிவுகளின் குவியல்தான் கர்ம ஞாபகம். அது மட்டுமில்லை, உங்களுடைய முன்பிறவிகள் மற்றும் பரிணாம வளர்ச்சியின் பல நிலைகள் என எல்லாவற்றிலும் நீங்கள் சேகரித்த பதிவுகளும் இதில் அடங்கும். இந்தப் பதிவுகள் எல்லாம் உங்கள் புரிதலுக்கும் அப்பாற்பட்ட பல விதங்களில் உங்கள் வாழ்க்கையில் வெளிப்படுகின்றன.

ஞாபகத்தின் அடுத்த மூன்று அடுக்குகள், உங்கள் மனம் அல்லது மானசீக உடலுக்கு தொடர்புடைய பதிவுகள் அல்லது சேகரிப்புகள். துளிகூட உங்கள் விழிப்புணர்வில் இல்லாத ஞாபகங்கள் மிகப்பெரிய அளவில் இருக்கின்றன. இதை நாம் *ஆழ்மன ஞாபகங்கள்* என்று சொல்லலாம். உங்கள் மேல்மன ஞாபகங்களுக்கு கீழே ஒரு அடுக்கு இருக்கிறது, இதை *உள்மன ஞாபகங்கள்* என்று சொல்லலாம். கடைசியாக *மேல்மன ஞாபகங்கள்*. இதை நீங்கள் நினைவுபடுத்த முடியும், வார்த்தைகளால் விவரிக்க முடியும்.

உங்களுக்குள் சேகரிக்கப்பட்ட பதிவுகளின் அடிப்படையிலும், நீங்கள் எதிர்கொள்ளும் சூழ்நிலையைப் பொருத்தும் இந்த எட்டு விதமான ஞாபகங்களும் தினசரி வாழ்க்கையில் வெளிப்படும். பொதுவாகச் சொன்னால், நீங்கள் எந்த மாதிரி உயிராக இருக்கிறீர்கள் என்பதற்கு இந்த ஞாபகங்களின் அடுக்குகள்தான் அடிப்படையாகும்.

உயிரின் அடிப்படையான தன்மையைப் பற்றி பல விதங்களில் காணலாம். ஒரு விதத்தில் பார்த்தால், நம் வாழ்வுக்கு அடிப்படையாக இரண்டு விதைகள் இருக்கின்றன. ஒன்று நம் பெற்றோர்கள் விதைத்த விதை, இதுதான் நமக்கு உடலை கொடுத்தது. இன்னொன்று படைத்தவன் விதைத்த விதை, இதுதான் நமக்கு உள்ளிருக்கும் உயிரை கொடுத்தது. அந்த இரண்டு விதமான விதைகள், அதாவது இயற்கையின் இரண்டு பரிமாணங்கள் இவைதான். முதலாவது விதை திடமாக, உறுதியாக இருப்பதற்காக வடிவமைக்கப்பட்டுள்ளது. இரண்டாவது விதை வாய்ப்புகளுக்காக, சாத்தியங்களுக்காக வடிவமைக்கப்பட்டுள்ளது. உடல் என்பது பொருள் நிலையில் இருக்கிறது, அதன் இருப்பைப் பற்றி நமக்கு உறுதியாக தெரிகிறது. பொருள்தன்மைக்கு அப்பாற்பட்ட உயிர் என்பதோ

பெரும்பாலானவர்களுக்கு ஒரு விவாதப் பொருளாகவே இருக்கிறது. பெரும்பாலானவர்களுக்கு தங்களுடைய இருப்பின் இயல்பைப் பற்றி உறுதியாக தெரிவதில்லை.

நமது பெற்றோர்கள் அளித்த விதை, பொருள்தன்மை (உடல்) சார்ந்தது. அதற்கே உரிய விதிமுறைகளும், குணாதிசயங்களும், நிர்பந்தங்களும் இருக்கின்றன. இயற்கையின் இந்த அம்சத்தின் ஒரே முயற்சி பிழைப்பு மட்டும்தான். பிழைப்பு என்று சொல்லும்போது அதில் இனப்பெருக்கமும் அடங்கும். தான் பிழைத்திருப்பதற்கு அச்சுறுத்தலாக இருக்கும் எந்த ஒரு விஷயத்தையும் அது தவிர்க்கவே பார்க்கும். நமக்கு நம் பெற்றோர்கள் ஒரு விதையை மட்டுமே கொடுத்தார்கள், அதுவே இந்த உடம்பாக ஆனது. ஆனால் அந்த விதத்தில் பார்த்தால், "படைப்பின் மூலம்" நமக்கு கொடுத்தது என்னவோ ஒரு விதை இல்லை. அது தன்னையே கொடுத்திருக்கிறது. அந்தக் காரணத்தினால்தான், இந்த படைப்பின் மூலத்திடம் இருக்கும் அத்தனை சாத்தியங்களும், ஒருவிதத்தில் நமக்குள்ளும் பொதிந்துள்ளன. ஒரு தனி மனிதனின் வாழ்வில் அந்த சாத்தியங்கள் நிஜமாகிறதா இல்லையா என்பது கேள்விக்குரியது, ஆனால் அந்த சாத்தியங்கள் எப்போதும் இருக்கவே செய்கின்றன.

இந்த இரண்டு விதைகளோடு, ஒரு மனிதன் பிறக்கும்போது உள்ளுக்குள்ளே குறிப்பிட்ட ஒரு சாஃப்ட்வேர் அமைக்கப்பட்டுள்ளது. இந்த சாஃப்ட்வேர் என்பது என்ன? காலம், சக்தி, முன்பிறவிகளிலிருந்து ஒருவர் எடுத்துவரும் தகவல்கள், ஆகியவற்றின் ஒரு கலவை அல்லது சேர்மானம்தான் இந்த சாஃப்ட்வேர். இந்த மூன்றும் ஒன்றுசேர்ந்து உங்கள் வாழ்க்கையின் பலவிதமான அம்சங்களை நிர்ணயிக்கும்.

தாங்கி வந்துள்ள தகவல்களுக்கு ஏற்றபடி, சக்தியின் அளவு வாழ்க்கையின் வெவ்வேறு அம்சங்களுக்கு பங்கிட்டு ஒதுக்கப்படுகிறது. இதைப்பற்றி இன்னும் சற்று நேரத்தில் பார்ப்போம். இப்படி தாங்கி வரப்படும் தகவல்தான் இந்தியாவில் கர்மா என்று அழைக்கப்படுகிறது. ஒருவரின் ஞாபகக் குவியல் அல்லது கர்மக் குவியல் மொத்தத்திலும், பரிணாம ஞாபகம்தான், ஒருவர் யாராக இருக்கிறார் என்பதை கட்டமைப்பதற்கு இன்றியமையாததாக இருக்கிறது. அதை ஒருபுறமாக விட்டுவிடுவோம். ஆனால், உங்களுடைய மரபணு ஞாபகமும், கர்ம ஞாபகமும், உங்களுக்குள் இருக்கும் ஆழ்மன ஞாபகங்களும் உள்மன ஞாபகங்களும் மொத்தமாக உங்களுடைய மேல்மன ஞாபகத்திற்குள் இப்போது வெள்ளப்பெருக்காக ஓடியது என்றால் - உங்களால் அதை சமாளிக்கவே முடியாது. அதனால்தான், இயற்கை தனக்கே உரிய வழியில், இந்தப் பிறவியில் நீங்கள் கையாள்வதற்கு, நீங்கள் கரைத்திடுவதற்கு, அந்த மொத்த குவியலிலிருந்து ஒரு பகுதியை

மட்டும் ஒதுக்கி தருகிறது. பலவிதமான செயல்களின் வடிவத்தில் அதை உங்களுக்கு ஒதுக்கித் தருகிறது.

நமது இந்திய பாரம்பரியத்தில், ஒருவர் வைத்திருக்கும் கர்ம ஞாபகங்களின் மொத்த சரக்கையும் *சஞ்சித கர்மா* என்று அழைக்கிறோம். ஒருவிதத்தில், சஞ்சித கர்மா என்பது ஒருவர் தன் கர்மாவின் சரக்கு மொத்தத்தையும் குவித்துவைத்துள்ள ஒரு கோடவுன் என்று சொல்லலாம். இந்த குவியலில் இருந்து ஒரு குறிப்பிட்ட பங்கு மட்டும், ஒரு குறிப்பிட்ட பிறவியில் கையாளுவதற்காக ஒதுக்கப்படுகிறது. இப்படி இந்தக் குறிப்பிட்ட ஜென்மத்திற்காக ஒதுக்கப்பட்டுள்ள கர்மாவை *பிராரப்த கர்மா* என்று அழைக்கிறோம். இந்த பிராரப்த கர்மாவில் ஒரு அவசரத்தன்மை இருக்கிறது, குவியலின் மற்ற பகுதியைக் காட்டிலும் வெளிப்படுவதற்கு இது அதிகமான கட்டாயத்தை காட்டுகிறது.

இப்படிப் பல அடுக்குகளைக் கொண்ட சவாலான ஒரு விஷயத்தை, இயற்கை தனக்கே உரிய விதத்தில் கையாள்கிறது - எளிமையான, இடைநிலை படிகளை அமைத்து கையாள்கிறது. பிறப்பின்போது, பிராரப்த கர்மா என்பது வாழ்க்கை பயணிக்கும் திசையை அமைக்கிறது. சஞ்சித கர்மாவை பொருத்து, விழிப்புணர்வற்ற நிலையில், வெவ்வேறு விஷயங்களை நோக்கி உங்களுடைய போக்கு அமைகிறது. தினமும் நீங்கள் செய்யும் கர்மாவின் அளவை பொருத்தும், அதோடு அதை எந்த அளவுக்கு விழிப்புணர்வுடன் செய்கிறீர்கள் என்பதை பொருத்தும் பிராரப்த கர்மத்திலிருந்தும், சஞ்சித கர்மத்திலிருந்தும் நீங்கள் விடுபடுவீர்கள். அல்லது மேற்சொன்ன கர்மங்களை இன்னும் அதிகப்படுத்துவீர்கள். சுருக்கமாக சொன்னால், இவைதான் ஒருவர் எப்படி வாழ்கிறார், எவ்வளவு காலம் வாழப்போகிறார் என்பதை முடிவுசெய்கின்றன.

வாழ்க்கையின் இயற்கையான போக்கில், ஒருவர் எந்த விதமான விழிப்புணர்வும் இல்லாமல் வாழ்ந்தாலும்கூட, பிராரப்த கர்மா என்பது எப்படியோ கழிக்கப்படும். ஆங்காங்கே கொஞ்சம் துன்பமும் வலியும், ஆங்காங்கே கொஞ்சம் இன்பமும் நன்மையும் என்று, ஒருவர் பிராரப்த கர்மாவை எப்படியோ கழித்துவிடுவார். "இந்தப் பிறவியில் புதிய கர்மாவை உருவாக்காமல் இருப்பது எப்படி," என்பதை மட்டும் அவர் அறிந்துகொள்ள வேண்டும், அவ்வளவுதான். இப்படியே, அடுத்தமுறை பிராரப்த கர்மாவின் இன்னொரு பங்கு ஒதுக்கப்படும்போது அதுவும் கழிக்கப்படும். இப்படியே ஜென்ம ஜென்மமாக தொடரும்.

பிராரப்த கர்மா என்பது உங்களுடைய வெளிசூழ்நிலையை குறிப்பாக நிர்ணயம் செய்வதில்லை, ஆனால் நிச்சயமாக உங்களை சுற்றி பல விஷயங்களை அது அமைக்கிறது. ஏனென்றால், உங்களுக்குள்

இருக்கும் பதிவுகள் தொடர்ச்சியாக வெளிசூழ்நிலைகளில் வெளிப்பட்டு வடிவம் பெறுகின்றன. அதனால்தான் இந்தியாவில் யாராவது பாதிப்பில் இருப்பதைப் பார்த்தால், "ஐயோ பிராரப்தம்!" என்று சொல்வார்கள். பெரும்பாலான பாதிப்புகள் உள்ளுக்குள்ளே இருந்துதான் வருகிறது. அதனால் பேச்சுவழக்கில் அந்த வார்த்தையைப் பொதுவாகவே பயன்படுத்தினார்கள்.

பாதிப்பு ஏற்படக் காரணம், உங்கள் ஞாபகங்களின் பொருளடக்கம் அல்ல, அந்த ஞாபகங்களை நீங்கள் கையாளும் விதம்தான். அதனால் ஒருவருடைய வாழ்க்கையில் சரிசெய்யப்பட வேண்டியது - அதன் பொருளடக்கம் அல்ல - சரிசெய்யப்பட வேண்டியது அதை பார்க்கும் விதத்தையும், கையாளும் விதத்தையும்தான். அதற்காகத்தான் ஆன்மீகமுறைகள்.

வெவ்வேறு விதமான மனிதர்கள், வெவ்வேறு விதமான கர்ம மூட்டைகளோடு வருகிறார்கள். இதை நீங்கள் பார்க்க வேண்டுமென்றால், கைக்குழந்தைகளை கவனித்து பாருங்கள். ஒரு குழந்தை எந்த அளவிற்கு கைகளையும் கால்களையும் ஆட்டுகிறதோ, அதே வயதுடைய இன்னொரு குழந்தைக்கு அது முற்றிலும் வேறுவிதமாக இருக்கும். இதற்கு காரணம், அவர்களைப் பெற்றவர்களிடம் உள்ள வித்தியாசங்கள் அல்ல. குறிப்பாகச் சொன்னால், ஒரு குழந்தை தன் தாயின் வயிற்றில் உதைக்கும் அளவு, அதே தாயின் வயிற்றில் இன்னொரு குழந்தை உதைக்கும் அளவிலிருந்து முற்றிலும் மாறுபட்டது. வழக்கமாக, இதில் பெற்றோர்களின் சம்பந்தம் மிகவும் குறைவு. சொல்லப் போனால், சோம்பேறித்தனம் மிக்க பெற்றோர்கள் பலரின் குழந்தைகள் சூப்பர் சுறுசுறுப்போடு இருப்பதே அவர்களுக்கு பிரச்சனையாக இருக்கிறது. இதற்கு காரணம், அந்த குழந்தைகளின் மனப்பான்மையோ, மனதளவிலான கட்டுப்பாடுகளோ அல்ல, அதெல்லாம் உருவாகி வளர்வது பின்னாட்களில்தான். அந்தக் குழந்தைகளில் இருக்கும் வித்தியாசத்திற்கு காரணம் - ஒவ்வொரு உயிரும் பிறக்கும்போதே, செயலுக்கு என்று ஒதுக்கப்பட்ட ஒரு குறிப்பிட்ட அளவிலான சக்தியுடன் வருகிறது, அதுதான் காரணம்.

இப்படி பிறக்கும்போதே ஒவ்வொருவருக்கும் ஒதுக்கப்பட்டுள்ள சக்தி, மேலும் அதற்குள்ளேயே பல்வேறு அம்சங்களுக்காக பிரிக்கப்படுகிறது. உதாரணமாக, உங்களுடைய கர்ம கட்டமைப்பின்படி, நீங்கள் பிறக்கும்போது 1000 யூனிட்டுகள் சக்தியுடன் வந்தீர்கள் என்று வைத்துக்கொள்வோம். இதில் 250 யூனிட்டுகள் உடலளவிலான செயலுக்காக ஒதுக்கப்படலாம் - அதற்குள்ளேயே 100 யூனிட்டுகள் அனிச்சையான செயல்களுக்கும், 150 யூனிட்டுகள் தன்னிச்சையான

வெளிப்புற செயல்களுக்கும் அமையலாம். இதில் 300 யூனிட்டுகள் மனதளவிலான செயலுக்கும், இன்னொரு 200 யூனிட்டுகள் உணர்ச்சி நிலையிலான செயலுக்கும் என்று ஒதுக்கப்படலாம். உங்களுக்குள் எந்த மாதிரியான சாஃப்ட்வேர் பதிந்துள்ளது என்பதைப் பொருத்து இந்த ஒதுக்கீடு நடக்கும். இதனால்தான் ஒவ்வொரு தனிமனிதனுக்கும் வாழ்க்கையின் வெவ்வேறு அம்சங்களில் ஒரு குறிப்பிட்ட அளவிலான சக்தி இருப்பதை காணமுடிகிறது. சிறு குழந்தைகளிடம் இந்த வித்தியாசத்தை நன்றாக கவனிக்கலாம். குழந்தைகளிடம் பெரியளவில் தாக்கங்கள் இன்னும் நிகழவில்லை, அதனால் அவர்களிடம் இந்த வித்தியாசம் தெளிவாக தெரிகிறது. பெரியவர்களிடமும் இதைப் பார்க்க முடியும், ஆனால் அவர்கள் வாழ்க்கையில் ஏற்படும் பலவிதமான தாக்கங்களும் அதற்கு ஒரு காரணமாக இருந்திட வாய்ப்பிருக்கிறது.

இப்போது, உங்களுக்கு ஒதுக்கப்பட்ட இந்த சக்திகளை எல்லாம் நீங்கள் எப்படி செலவு செய்கிறீர்கள் என்பது முக்கியமானது. இது உங்கள் வாழ்க்கையின் மீதும் மரணத்தின் மீதும் மிக முக்கியமான விளைவுகளை ஏற்படுத்துகிறது. இன்றைய உலகில் தொழில்நுட்பம் பரவலாக பயன்படுத்தப்படுகிறது. அதனால், உடலளவிலான செயலுக்காக ஒதுக்கப்பட்ட சக்தி, மனிதர்களில் பெரும்பாலும் பயன்படுத்தப்படாமல் இருக்கிறது. 200 வருடங்களுக்கு முன்பாக இந்த பூமியில் நீங்கள் இருந்திருந்தால் எப்படி இருக்கும்? வாழ்க்கையில் உள்ள தினசரி தேவைகளை நிறைவேற்ற இயல்பாகவே செய்யும் உடல்செயல்கள், நிச்சயம் இன்று இருப்பதைவிட இருபது மடங்காவது இருந்திருக்கும். ஈஷா யோக மையத்திற்கு பக்கத்தில் உள்ள பழங்குடி கிராமத்தில் ஒருவருக்கும் தூக்கம் சம்பந்தப்பட்ட பிரச்சனைகள் கிடையாது. அந்தளவுக்கு அவர்கள் உடலளவில் உழைக்கிறார்கள். இரவு படுக்கப் போவதற்குள் இறப்பதற்கு தயார்நிலையில் இருக்கிறார்கள். சும்மா தலையணையில் தலை வைத்தவுடனே தூங்கிப் போகிறார்கள்.

நம் சாலைகளில் இது வழக்கமான காட்சி. சரக்குகள் ஏற்றப்பட்ட லாரிகளின் மீது வேலையாட்கள் பயணிப்பார்கள். அந்த லாரியில் கற்கள், செங்கல் அல்லது வேறெதாவது சரக்கை நிரப்பியிருப்பார்கள். சேருமிடத்தில் அதை இறக்கி வைப்பதற்காக அவர்களும் வண்டியிலேயே பயணிப்பார்கள். ஓடும் வண்டியில், கல்லின் மீதோ, செங்கல்லின் மீதோ அல்லது வேறு ஏதோ சொரசொரப்பான பொருளின் மீதோ படுத்துக்கொண்டு, கொளுத்தும் வெயிலில் அப்படியே ஆழமாக தூங்கிப் போயிருப்பார்கள். இது வழக்கமான காட்சிதானே? இதற்கு காரணம், தங்களுக்கு ஒதுக்கப்பட்ட சக்தி எல்லாவற்றையும் காலி செய்யுமளவிற்கு அவர்களுடைய உடல்செயல் இருந்திருக்கிறது. இப்போது இவர்களுக்கு

தியானத்தில் தீட்சை கொடுத்தால், அவர்களால் சுலபமாக தியானம் செய்யமுடியும். நீங்கள் பார்க்கலாம், படித்தவர்களால்தான் ஒழுங்காக தூங்கமுடிவதில்லை, தியானம் செய்யமுடியாது, ஒரு இடத்தில் சும்மா உட்கார முடியாது. காரணம், உடல்செயலுக்காக ஒதுக்கப்பட்ட சக்தியை அவர்கள் பயன்படுத்துவதே இல்லை. அதை அவர்கள் பயன்படுத்தாதபோது அவர்களால் ஒரு இடத்தில் உட்கார முடியாது. சமீப காலங்களில் மலையேற்றம், சைக்கிளிங், ரன்னிங் போன்ற விஷயங்களில் ஈடுபடுவது பெருமளவில் அதிகமாகியுள்ளது. இது உடலை நன்றாக வைத்துக் கொள்வதற்காக மட்டுமல்ல. பெரும்பாலானவர்களுக்கு புரிந்துவிட்டது - சும்மா ஒரு தீவிர உடல்செயலில் ஈடுபடுவதன் மூலம் அவர்களால் நன்றாக தூங்க முடிகிறது, யோசிக்க முடிகிறது, செயல்பட முடிகிறது என்று புரிந்துள்ளது. இதன்மூலம், உறவுகளிலும் வேலையிலும் அவர்களுடைய உற்சாகமும் ஆற்றலும் மேம்படுகிறது. ஒருவிதத்தில், தங்களுடைய உள்ளுணர்வில், உடலைப் பற்றிய கவலைகளை அவர்கள் எப்படியோ தள்ளிவைத்து விட்டார்கள்.

அதனால்தான், நீங்கள் ஆன்மீகப் பாதையில் நுழைந்தவுடனே, உடல்செயலுக்காக ஒதுக்கப்பட்டுள்ள சக்திகளை மிகவேகமாக செலவு செய்துமுடிக்க விரும்புகிறோம். உதாரணமாக, 500 யூனிட்டுகள் சக்தி உடல்செயலுக்காக உங்களுக்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். இதை பத்தே வருடங்களில் முடித்தாகவேண்டும் என்பது நம் விருப்பம் - அதன்பிறகு நீங்கள் உட்கார்ந்தால், உடல் சும்மா அப்படியே உட்காரும். அசைவுக்கான எந்த தேவையும் அதற்கு இருப்பதில்லை. உடலளவில் அசைவதற்கான எந்தத் தேவையும் இல்லாமல், அது அப்படியே சாந்தம் அடைந்திடும். போதுமான உடல்செயல் இல்லையென்றால் பெரும்பாலானவர்களால் தியானம் செய்யவே முடியாது. அதனால், ஈஷா யோக மையத்தில் இருப்பவர்களுக்கு வேலை ஒதுக்கும்போது, மிகுந்த கவனத்துடன் அதை கொடுப்போம். சிலர் ஒரு நாளில் நான்கு மணிநேரம் வேலைசெய்வார்கள். சிலர் ஆறு மணிநேரம் வேலை செய்வார்கள், சிலர் பத்து மணிநேரம் செய்வார்கள், சிலபேர் பதினான்கு மணிநேரங்கள் வேலை செய்வார்கள். ஒரு சிலரோ ஒருநாளில் பதினெட்டு முதல் இருபது மணி நேரம்கூட வேலை செய்வார்கள். நோக்கம் அவர்களுடைய உடலளவிலான சக்தியை செலவுசெய்து முடிப்பதுதான்.

நீங்கள் முழுநேரமாக ஆன்மீகப் பாதையில் இருப்பவரென்றால், நீங்கள் ஒரு பிரம்மச்சாரியாக இருந்தால், உங்கள் பிராரப்த கர்மாவை மட்டும் காலிசெய்தால் போதாது, உங்களுடைய சஞ்சித கர்மாவையும் செலவுசெய்து முடிக்க நாம் விரும்புகிறோம். அதாவது,

மொத்த சரக்கையும் காலி செய்திட பார்ப்போம். ஆன்மீகப் பாதையில் இருப்பதன் நோக்கமே, இந்த வாழ்வை மிகமிக வேகமாக முன்னோக்கி ஓட்டுவதுதான் - அதாவது ஃபாஸ்ட் ஃபார்வர்ட். ஞாபகங்களின் இந்த கோடவுன் முழுவதையும் கையாள பத்துப் பிறவிகள் எடுப்பதற்கு நாம் விரும்பவில்லை, எல்லாவற்றையும் இப்போதே முடித்துவிட விரும்புகிறோம். அதனால் இந்த ஞாபகங்களின் மற்ற பரிமாணங்களை உங்களுக்குள் திறந்திட பார்க்கிறோம். யோகப் பயிற்சிகளில், எப்போதுமே அந்தளவுக்கு சீரான ஒழுங்குமுறைகளை கொண்டு வந்ததற்கு இதுதான் காரணம் - சாமானியமாக உங்களால் சமாளிக்க முடியாத விஷயங்கள் வெளிப்பட்டாலும், அதை கையாளும்திறன் அப்போதும் உங்களுக்கு இருக்கவேண்டும், அதற்காகத்தான். சில விஷயங்களுக்கு ஒருவர் தயாராக இல்லாதபோது, அவருக்குள் அதை திறந்துவிட்டால், கர்மா அவரை மொத்தமாக நசுக்கிவிடக் கூடும்.

ஆன்மீகப் பாதையில் நீங்கள் முழுநேரமாக இருக்கும்போது, இதைக் கையாள்வதற்கான சாதனாவை (கருவிகளை) உங்களுக்கு அளிப்போம். இப்போது நீங்கள் பிரச்சனையை நோக்கி நடப்பதற்கு விருப்பமாக இருப்பீர்கள். நீங்கள் இனி பிரச்சனையிலிருந்து தப்பிக்க விரும்புவதில்லை. மனிதர்களால் அதை கையாள முடியவில்லை என்பதால்தான், வாழ்க்கையில் ஏற்படும் பிரச்சனைகளிலிருந்து தப்பிக்கப் பார்க்கிறார்கள். முதலில் உங்களுடைய பிராரப்த கர்மாவை உங்களால் நன்றாக கையாள முடியும் என்பதை தெளிவாக தெரிந்து கொள்வோம். அதன் பிறகுதான் உங்கள் ஞாபகங்களின் மொத்த குவியலையும் திறந்திட முடியும்.

துன்பத்திற்கு இதுவும் ஒரு காரணம் - அதாவது ஒருவர் ஆன்மீகப் பாதையில் நடக்கும்போது, சூழ்நிலையை அவர்கள் சரியாக கையாளாவிட்டால், அவர்கள் மற்றவர்களைவிட மிகவும் அதிகமான துன்பத்தை அடைவார்கள். மற்றவர்கள் எல்லாம் தங்களுக்கு ஒதுக்கப்பட்டதை மட்டும் கையாளும்போது, இவரோ மொத்த சரக்கையும் எடுக்கப் பார்க்கிறார் அல்லவா?

யோக மையத்தில் ஒரு சில பேருக்கு சில சமயங்களில் இப்படி நடந்திருக்கிறது: அவர்கள் முதலில் வந்தபோது, அவர்களுக்கு அதிக வேலைகள் கொடுத்தோம். ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு அதில் ஈடுபட்டார்கள், அதன்பிறகு குறைந்தது. கொஞ்ச காலத்திற்கு அவர்களால் எதுவும் செய்ய முடியவில்லை. உடலளவில் நலமின்றி இருப்பதாக அவர்கள் நினைத்தார்கள். பல டாக்டர்களிடம் சென்றார்கள். நான் அவர்களிடம், "டாக்டரிடம் போகத் தேவையில்லை, கொஞ்ச காலத்திற்கு ஓய்வாக இருங்கள், வேறு ஏதோ ஒன்று நடக்கும்," என்று சொன்னேன்.

அதேபோல் கொஞ்சநாள் கழித்து, மறுபடியும் அவர்கள் வேலையில் ஆழமாக ஈடுபட்டார்கள். ஏனென்றால் அந்த கோடவுனிலிருந்து இன்னொரு அறையை அவர்களுக்காக நாம் திறந்துவிட்டோம். அடுத்த பிறவியில் அவர்கள் செய்ய வேண்டியதை இப்போதே செய்கிறார்கள். உண்மையில் இதற்குள் இன்னும் பல அம்சங்கள் இருக்கின்றன - நான் இதை மிக மிக எளிமையான விதத்தில் சொல்லிக் கொண்டிருக்கிறேன். எப்படியோ, முக்கியமான நோக்கம் - மொத்தத்தையும் இப்போதே முடித்துவிட வேண்டும் என்பதுதான்.

இந்தக் காரணத்தினால்தான், கிழக்கத்திய நாடுகளிலிருந்து தோன்றிய பல ஆன்மீக முறைகள், இலக்கணத்தையும் கணிதத்தையும் உள்ளடக்கி இருந்தன. யோகிகள் தங்களுடைய உடலையும் மனதையும் நன்கு வளர்த்துக்கொள்ள விரும்பினார்கள். அவர்கள் மீண்டும் பிறந்து வரும்போது, குறைந்த அளவிலான பிராரப்த கர்மாவுடன் பிறக்க விரும்பவில்லை. அப்படியே பல பிறவிகளுக்கு அதைத் தொடர அவர்களுக்கு விருப்பமில்லை. அதையெல்லாம் கழிப்பதை தள்ளிவைக்க விரும்பவில்லை. எல்லாவற்றையும் ஃபாஸ்ட் - ஃபார்வர்ட் செய்ய விரும்பினார்கள். அதனால், தங்களுடைய மனதின் திறமைகளை மேம்படுத்திக்கொள்ள விரும்பினார்கள். ஒருவேளை இம்முறை அவர்களால் இதையெல்லாம் முடிக்க முடியாமல் போகலாம். அதனால், இம்முறை அவர்கள் மகத்தான உடல்திறனும் மனத்திறனும் கொண்டவர்களாக இறப்பதன் மூலம், அடுத்தமுறை பிறந்து வரும்போது, அவர்களுக்கு அதிக அளவுடைய சாஃப்ட்வேர் கிடைத்திடும், அவர்களுக்கு அதிகமான பிராரப்த கர்மா கிடைக்கும். அதனால் ஆன்மீகத்தோடு இலக்கணம், இசை, கணிதம், வானசாஸ்திரம் போன்றவற்றையும் கற்றுக்கொண்டார்கள். அவர்களுடைய புத்தியை எல்லாவிதங்களிலும் பயன்படுத்த விரும்பினார்கள்.

இப்போது, இந்த ஞாபகங்கள் மற்றும் சக்தி என்ற இரண்டுடனும் சேர்ந்து, மூன்றாவது பரிமாணம் ஒன்று இருக்கிறது - அதுதான் "காலம்." காலம் என்பது ஒருவரின் வாழ்க்கை மற்றும் மரணத்தின் நீளத்தையும் தன்மையையும் நிர்ணயிக்கிறது. வாழ்வு - மரணம் இரண்டுமே, காலத்தின் வரையறைக்குள்தான் நிகழ்கின்றன. காலம் எப்போதுமே ஓடிக் கொண்டேதான் இருக்கிறது. அதை வேகப்படுத்தவும் முடியாது, மெதுவாக்கவும் முடியாது. உங்கள் சக்தியை வேண்டுமென்றால் நீங்கள் சேமித்து வைக்கலாம், அல்லது அதை சுற்றிலும் வீசி எறியலாம், அதை வளர்த்துக்கொள்ளலாம், மிகவும் பிரம்மாண்டமானதாக்கலாம் அல்லது மிகவும் மெல்லியதாக்கலாம். ஆனால் காலம் என்பது அப்படி இல்லை - அது நழுவிப்போய்க் கொண்டே இருக்கிறது. அதற்கென்று சுயமான ஒரு

புத்தி இருக்கிறது. ஒருவரின் கட்டமைப்பில் பொதிந்துள்ள கர்ம தகவல்கள், அவருக்கு ஒதுக்கப்பட்ட சக்தி - இந்த இரண்டின் அடிப்படையிலும் காலம் ஓடுகிறது.

அப்படி என்றால் காலத்தைப் பற்றி நம்மால் எதுவும் செய்யமுடியாதா? முடியும், ஆனால் அது ஞாபகம், சக்தி ஆகிய இரண்டு பரிமாணங்களை போல் இல்லை. காலம் என்பது அவ்வளவு எளிதில் பிடிபடுவது இல்லை. மற்ற இரண்டையும் ஒருவரின் வாழ்வில் எளிதாக கையாள முடியும், வெளிப்படுத்த முடியும். சக்தியை உருவாக்கி அதை நீங்கள் வேண்டியதுபோல் பயன்படுத்த முடியும். ஞாபகத்தில் பதிந்துள்ள பழைய வாசனைகள், உங்களுடைய தற்போதைய எண்ணம், உணர்ச்சி, செயல் ஆகியவற்றின் தன்மையை நிர்ணயிக்க முடியாதபடி கர்மாவை கையாள முடியும். காலத்தின் மேல் ஆளுமை கொண்டு வருவதைவிட இவை இரண்டும் எளிதானவை. ஆதியோகி[1] கூட, அவர் குறிப்பிட்ட நிலைகளில் இருந்தபோது மட்டுமே காலத்தின் மேல் ஆளுமை உடையவராக இருந்தார். அப்படி காலத்தை தன் கையில் எடுத்தபோது, அந்த நிலைகளில் அவர் இருந்தபோது, அவரை காலபைரவர்[2] என்று அழைக்கிறோம்.

தன் பதிவில் உள்ள தகவல்கள் மேல் ஆளுமை உடைய ஒருவரால், அல்லது அந்தப் பதிவுகள் உருவாக்கும் வாசனைகள் (விழிப்புணர்வற்ற போக்கு) மேல் ஆளுமை உடைய ஒருவரால், தன் வாழ்வின் தரத்தின் மீதும் ஆளுமை உடையவராக இருக்கமுடிகிறது. இந்த உயிரை இனிமையாக வைத்திருப்பதா இல்லையா என்பது அவர் கையில் இருக்கிறது.

அதேபோல், தன் சக்திகளின் மேல் ஆளுமை உடைய ஒருவரால் அவர் எப்படி வாழ்கிறார், அவருடைய செயலின் தன்மை எப்படி இருக்கிறது என்பதை நிர்ணயம் செய்யமுடிகிறது. அவருக்கு தன் வாழ்வின் மீது பரிபூரண ஆளுமை இருக்கிறது, ஆனால் மரணத்தின் மீது இல்லை.

ஆனால், காலத்தின் மேல் ஆளுமை உடைய ஒருவரால், தன் வாழ்வு, மரணம் இரண்டையும் பற்றி நிர்ணயிக்க முடியும். தான் வாழவேண்டுமா அல்லது இறக்கவேண்டுமா என்று அவரே முடிவுசெய்ய முடியும். இப்படித்தான், உங்கள் வாழ்க்கையை ஆக்கிடும் இந்த மூன்று பரிமாணங்களும், உங்கள் மரணத்துடன் சம்பந்தப்பட்டுள்ளன.

---

1 முதல் யோகி, சிவனின் பல பெயர்களில் ஒன்று.

2 சிவனின் உக்கிரமான சொரூபம், காலத்தின்மேல் ஆளுமை கொண்ட சொரூபம்.

## நீர்க்குமிழி - பெரிதா சிறிதா?

வாழ்வையும் மரணத்தையும் பற்றி சிந்திக்கும்போது, மனிதர்கள் அதை இருமை நிலைகளாகவே பார்க்கிறார்கள். ஒன்று நீங்கள் உயிரோடு இருக்கிறீர்கள் அல்லது இறந்து விட்டீர்கள். ஒன்று நடந்துகொண்டும் பேசிக்கொண்டும் இருப்பீர்கள் அல்லது போய் சேர்ந்திருப்பீர்கள் - இப்படித்தான் பார்க்கிறார்கள். வாழ்க்கையையும் மரணத்தையும் பற்றி இந்த புரிதல் மிகவும் மேலோட்டமானது, சிறுபிள்ளைத்தனமானது. இன்னும் சொல்லப்போனால் இது தவறானதும்கூட.

உயிருடன் இருப்பது என்றால் ரத்த ஓட்டம் இருக்கவேண்டும், இல்லையென்றால் அவர் உயிருடன் இல்லை என்பதே மனிதர்களின் பொதுவான புரிதல். ஆனால், இனி அப்படி இல்லை. விஞ்ஞானம் முன்னேறிக் கொண்டிருக்கிறது. அதனால் உயிருடன் இருப்பது, உயிரற்றது என்பதைப் பற்றிய நமது புரிதல் மெதுவாக மாறிவருகிறது. செடிகளும் மிருகங்களும் மட்டுமல்ல, இந்த கற்களும் மண்ணும்கூட உயிருள்ளவைதான் என்று இப்போது நமக்கு தெரிகிறது. காற்றுக்கு உயிர் உள்ளது, நீருக்கு உயிர் உள்ளது, நாம் நடக்கும் இந்த மண்ணிற்கு உயிர் உள்ளது - பிரபஞ்ச வெளி முழுவதுமே உயிருடன்தான் இருக்கிறது. தண்ணீருக்கு தனக்கே உரிய ஞாபகமும் புத்தியும் இருக்கிறது என்று விஞ்ஞானமே இன்றைக்கு சொல்கிறது. இந்தப் பிரபஞ்சத்தில் உயிருடன் இல்லாதது எதுவுமே இல்லை. ஒருநாள் விஞ்ஞானம் போதிய அளவிற்கு முன்னேறும்போது அவர்கள் இதை புரிந்துகொள்வார்கள். முக்கியமான கேள்வி என்னவென்றால், அதை உணர்ந்திடும் அளவிற்கு நீங்கள் இருக்கிறீர்களா?

என் அனுபவத்தில், ஒரு பாறைகூட மிகுந்த உயிரோட்டத்தோடுதான் இருக்கிறது. அதற்கு தனக்கே உரிய சக்தி இருப்பதோடு, தனக்கென்று ஒரு ஞாபகத்தையும் அது சேகரித்துக் கொள்வதை நான் பார்க்கிறேன். அந்தக் கல் அந்த ஞாபகங்களுடனேயே உயிர்வாழ்கிறது. இந்த அடிப்படையில்தான் தியானலிங்கம்[3] பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. இந்தியாவில் உள்ள ஒவ்வொரு தெய்வத்திற்கும் அடிப்படை இதுதான். சக்தியும், ஞாபகமும் சேர்ந்த இந்த கலவைக்கு, நாம் ஓரளவு உயிர்ப்பை அளித்தால், மெதுவாக தனக்கென்று ஒரு புத்தியை அது சேகரித்துக்கொள்ளும். சக்தி, ஞாபகம், புத்தி என்ற இந்த மூன்றும் சேர்ந்துவிட்டால், அதற்கு நோக்கம் உருவாக்க முடியும். நோக்கமும்,

---

3 கோவை ஈஷா யோக மையத்தில் சத்குரு அவர்கள் பிரதிஷ்டை செய்துள்ள ஆற்றல்மிக்க சக்தி வடிவம்.

அதை வலுப்படுத்த தேவையான சக்தியும் அமைந்த பிறகு, செயலுக்கான திறமையும் அதற்கு உருவாகிறது. உயிர் என்பது இப்படித்தான்.

இப்போதைக்கு, இறப்பு என்பதைப் பற்றி நம்முடைய புரிதல் இப்படித்தான் இருக்கிறது: ஏதோ ஒன்று இறந்துவிட்டது என்று சொல்லும்போது, அதற்கு என்ன அர்த்தம்? இருப்பு என்பதன் அசைந்து இயங்கிக்கொண்டிருக்கும் நிலையிலிருந்து, இருப்பின் அசைவற்ற, இயக்கமற்ற நிலைக்கு திரும்பிவிட்டது என்று அர்த்தம். ஒரு மனிதன், ஓரளவுக்கு அசைந்து இயங்கிக் கொண்டும், நோக்கத்துடனும், செயல் செய்யும் திறனுடனும் இருந்தால் அவர் உயிருடன் இருப்பதாக நாம் புரிந்துகொள்கிறோம். இப்படி அசைந்து இயங்கும் தன்மை ஒரு குறிப்பிட்ட அளவுக்குக் கீழே இறங்கிவிட்டால், அவர் இறந்துவிட்டார் என்று சொல்கிறோம். ஏனென்றால் நம்முடைய புரிதலில், நம் நடைமுறையில் ஒரு மனிதனிடம் நாம் எதிர்பார்க்கும் எதுவும் இவருக்கு இனி சாத்தியமில்லை. அவர் அழுகிவிடலாம், அதில் புழுக்கள் நெளியலாம், இந்த மண்ணுக்கு அவர் உரமாகலாம், ஒரு மாங்காயாகவும், தேங்காயாகவும் ஆகலாம். இது எல்லாம் உயிர்தான். அப்படியிருந்தாலும், அவர் உயிருடன் இருப்பவராக கருதப்படுவதில்லை. ஏனென்றால், ஒரு மனிதனிடம் நாம் எதிர்பார்க்கும் விஷயங்களை அவரால் வெளிப்படுத்த முடியவில்லை.

அடிப்படையில், அசைந்து இயங்கும் தன்மைக்கு ஒரு அளவுகோல் இருக்கிறது - அது பூஜ்யத்திலிருந்து எல்லையற்றது (முடிவிலி எனும் இன்ஃபினிட்டி) வரைக்கும் இருக்கிறது. (உண்மையில் பூஜ்யம் என்று எதுவுமே இல்லை, அதுதான் பிரச்சனையே!) சிவா என்றால் "இல்லாதது" என்று அர்த்தம். சிவன் என்பதை பூஜ்யம் என்று வைத்துக்கொள்வோம். எதை நாம் தெய்வீகம் என்று சொல்கிறோமோ, அதுதான் இயங்கும் நிலையின் உச்சம் என்று வைத்துக்கொள்வோம். மனிதர்களுக்குள்ளேயே கூட இயங்கும் தன்மைக்கு பல நிலைகள் இருக்கிறது. உதாரணமாக, ஒருவருக்கு அல்சைமர் நோய் ஏற்பட்டு தன் நினைவுகளை இழந்துவிட்டார் என்று வைத்துக்கொள்வோம். அப்போது அவருக்குள் எந்த ஞாபகமும் இல்லை என்று அர்த்தம் கிடையாது. ஞாபகங்கள் இன்னும் அப்படியேதான் இருக்கின்றன. ஆனால், அந்த ஞாபகங்கள் இயங்காத நிலையில் இருக்கின்றன, அதன் இயக்கம் போய்விட்டது. ஞாபகம் மொத்தமாக போய்விட்டது என்றால், உடனடியாகவே உங்களுடைய உடல் உதிர்ந்து விழுந்துவிடும். ஏனென்றால், எதை "இந்த உடல்" என்று சொல்கிறீர்களோ, அது ஒன்றாக சேர்ந்திருக்கும்படி பிடித்து வைக்கப்பட்டிருப்பது ஞாபகங்களால்தான்.

இப்போது ஒரு ஆண் ஒரு மாம்பழத்தை சாப்பிட்டால், அது ஆணாகவே மாறுகிறது. ஒரு பெண் ஒரு மாம்பழத்தை சாப்பிட்டால்,

அது பெண்ணாகவே மாறுகிறது. அதே மாம்பழத்தை ஒரு பசுவுக்கு கொடுத்தால், அது பசுவுக்குள் போகிறது, ஒரு பசுவாகத்தான் மாறுகிறது. இது அந்த மாம்பழத்தின் சாமர்த்தியமா? இல்லை. உங்களுக்குள் அந்தளவுக்கு வலிமைமிக்க ஞாபகங்களின் அமைப்பு ஏற்பட்டிருக்கிறது. அதனால் உங்களுக்குள் எதைப் போட்டாலும், நிச்சயமாக அது நீங்களாகவே ஆகும்படி அந்த ஞாபகம் பார்த்துக் கொள்கிறது. அது வேறு யாராகவோ ஆவதில்லை. அதனால்தான் ஒரு மாம்பழத்தை சாப்பிட்டீர்கள் என்றால், அதன் ஒரு பாகம் உங்களுடைய தோலாக மாறுகிறது - அந்த தோல் நிறம் உங்களுடையது போலவே இருக்கிறது. அந்த மாம்பழம் மஞ்சளாக இருப்பதால், உங்களுடைய தோல் ஒன்றும் மஞ்சளாக மாறுவது இல்லையே!

அது மட்டுமில்லை, உடல் உறுப்புகளின் அமைப்பிலும் ஓரளவுக்கு இயங்கும் தன்மை தேவைப்படுகிறது, உயிர்ப்பு தேவைப்படுகிறது - அப்போதுதான் எல்லா உறுப்புகளையும், செல்களையும், அணுக்களையும் ஒன்றாக பிணைந்திருக்கும்படி வைத்திருக்க முடியும். அப்போதுதான் அவையெல்லாம் நம் வாழ்வின் நோக்கத்திற்கு ஏற்றபடி ஒத்திருக்கும்.

இப்போது உங்களுடைய உடலில் இருக்கும் கோடிக்கணக்கான செல்கள் எல்லாம் நீங்கள் விரும்பியபடி இயங்கிட காரணம் என்ன? இவை அனைத்தையும் ஒன்றாக பிணைத்து வைத்திருக்கும் வலுவான நோக்கம் இருக்கிறது. இந்த நோக்கத்தை நீங்கள் இழந்துவிட்டால் - அதாவது இந்த அணுக்களையும் செல்களையும் நீங்கள் விரும்பியபடி இயங்க வைக்கும் திறனை இழந்துவிட்டீர்கள் - இப்போது நீங்கள் இறந்துவிட்டீர்கள் என்று சொல்கிறோம். இப்போது உடல் சிதைந்து போக ஆரம்பிக்கும். இந்த உயிரி ஒருவிதத்தில் நிலைகுலைந்து போகிறது. அதேசமயம், இன்னும் பெரிய உயிரி ஆகிய பூமி, பிரபஞ்சம் ஆகியவற்றின் பாகமாக அது ஆகிறது. ஒரு உயிரிக்கு வயதாகும்போது, அதன் நோக்கத்தை இழக்கிறது. உங்களுடைய நோக்கத்தை இழக்கும்போது, முதலில் உங்கள் செயல் போய்விடுகிறது. பிறகு உங்களுடைய மேல்மன ஞாபகம் நீங்க ஆரம்பிக்கும். அதை பின்தொடர்ந்து உங்களுடைய சக்திகள் வெளியேறும்.

காற்று உயிரோடு இருக்கிறது, ஒரு பாறை உயிரோடு இருக்கிறது, ஒரு மரம் உயிரோடுதான் இருக்கிறது; ஒரு மிருகமும் உயிரோடு இருக்கிறது, ஒரு பறவையும் உயிரோடு இருக்கிறது, ஒரு மனிதன் உயிரோடு இருக்கிறான். என்ன, இவர்களுக்கெல்லாம் இருக்கும் நோக்கமும், புத்திசாலித்தனமும், எல்லாவற்றிற்கும் மேலாக ஞாபகங்களின்[4] பல பரிமாணங்களும் - ஒவ்வொருவருக்கும் வெவ்வேறு அளவுகளில் இருக்கின்றன, அவ்வளவுதான். உங்களுடைய மேல்மன

ஞாபகத்தின் அளவைப் பொருத்துத்தான், உங்களுடைய நோக்கம் எந்தளவுக்கு இருக்கமுடியும் என்பது அமைகிறது. ஒரு-செல் உயிரியான அமீபாவிலிருந்து மனிதன் வரைக்கும் - ஒவ்வொன்றும் எந்தளவுக்கு நுட்பமானது என்பதுதான் விஷயமே! ஒவ்வொரு உயிரினத்துக்கும் ஒரு நோக்கம் உருவாக்கும் திறன் இருக்கிறது. ஆனால், பெரும்பாலும் அது விழிப்புணர்வு இல்லாத நோக்கமாக இருக்கிறது. விழிப்புணர்வோடு ஏற்படும் நோக்கம் மனிதனுக்கு மட்டும்தான் அமைந்திருக்கிறது. அதுதான் நம்மை அவர்களிடமிருந்து வேறுபடுத்துகிறது. உதாரணமாக, நான் சாப்பிட வேண்டும் என்பது என்னுடைய விழிப்புணர்வற்ற நோக்கமாக இருக்கலாம். ஆனால், இந்த புத்தகத்தை உருவாக்க வேண்டும் என்பதுதான் என்னுடைய விழிப்புணர்வான நோக்கமாக இருக்கிறது - வேறு எந்த உயிரும் இப்படி யோசிப்பதில்லை. அவர்களுக்கு இருக்கும் விழிப்புணர்வற்ற நோக்கம்தான் பெரும்பாலும் அவர்களின் நோக்கமாகவும் இருக்கிறது. ஒருவேளை, நாய்களும் இன்னும் சில பிராணிகளும் விழிப்புணர்வான நோக்கத்தை சிறிதளவு கொண்டிருக்கலாம் - அதைத்தாண்டி மற்றதெல்லாம் விழிப்புணர்வற்ற நோக்கமாகத்தான் இருக்கும். ஆனால் ஒரு மனிதன் விரும்பினால், பல நிலைகளில் இருக்கும் தன் ஞாபகத்தின் களஞ்சியத்திலிருந்து மிகப்பெரிய விழிப்புணர்வான நோக்கத்தை வளர்த்துக்கொள்ள முடியும். அந்தளவுக்கு மகத்தான அடித்தளம் இந்த உயிருக்கு இருக்கிறது.

இதற்கு ஒத்திருக்கும் ஒரு உதாரணத்தை பார்ப்போம்: உயிர் என்பது சோப்பு நுரையில் ஊதப்படும் குமிழிகளைப்போல (bubble) இருக்கிறது. பாறை, செடி, மனிதன் என்பவை எல்லாமே வெவ்வேறு விதமான சோப்பு குமிழிகளை போலத்தான். நம் ஞாபகங்களின் நுட்பமான கலவைதான் அந்த சோப்புக் குமிழியை போர்த்தியிருக்கும் பரப்பு - வெவ்வேறு விதமான ஞாபகம். இந்த அடிப்படையில் பார்த்தால், நம் பாரம்பரியத்தில் சொல்லப்படும் ஒன்பது அவதாரங்களும் வெவ்வேறு நிலைகளில் இருக்கும் ஞாபகம்தான் - பரிணாம ஞாபகம், மரபணு ஞாபகம், கர்ம ஞாபகம், ஆழ்மன ஞாபகம், மேல்மனம் ஞாபகம் போன்ற ஞாபகங்கள்தான்.

ஒரு "மனித-குமிழி"க்கும்[5], ஒரு "பாறை-குமிழி"க்கும் உள்ள வித்தியாசம் இதுதான்: ஒரு பாறை-குமிழி பெரும்பாலும் பொருள்தன்மை கொண்டதாகவே

---

4 ஞாபகம் என்ற சொல் இந்த உரையாடலில் நரம்பியல் சம்பந்தப்பட்ட அர்த்தத்தில் மட்டுமே பயன்படுத்தப்படவில்லை. கடந்த காலத்திலிருந்து தக்கவைக்கப்பட்ட தாக்கங்களின் எந்த ஒரு பதிவும் ஞாபகம் என்று குறிக்கப்படுகிறது.

5 ஒரு குறிப்பிட்ட வடிவத்தை எடுத்துள்ள உயிர் சக்தியை குறிக்கிறது - அதாவது மனிதரையோ கல்லையோ.

இருக்கிறது - அதன் மேற்போர்வை மிகவும் தடியாக இருக்கிறது, குமிழிக்கு உள்ளிருக்கும் காற்று மிகவும் குறைவாக இருக்கிறது - ஏனென்றால் அதில் இருப்பதெல்லாம் பொருள்நிலையிலேயே இருக்கிறது. அதை ஒருநிலையாக சேர்ந்திருக்கும்படி பிடித்து வைத்திருப்பது, அதன் பொருள் நிலை உறுதி மட்டும்தான். அதன் *அசைவில்லா நிலையிலான* ஞாபகமே அந்த உறுதிக்கு காரணம். அந்த பாறை-குமிழியை ஒரு சம்மட்டியால் உடைத்தால், அது போய்விடுகிறது. அதே சமயம், ஒரு மனித-குமிழியை சம்மட்டியால் உடைத்தால், உடல் மட்டும்தான் உடைகிறது - அதற்குள் பின்னப்பட்டிருக்கும் கர்ம ஞாபகத்தின் வலை எப்போதுமே இன்னொரு குமிழியை உருவாக்கிக்கொள்ளும், அதாவது இன்னொரு பொருள் உடலை தேடிக்கொள்ளும். அந்த கர்ம ஞாபகத்தின் தன்மை அப்படித்தான். ஒரு பாறை-குமிழிக்கு இப்படிப்பட்ட வலை இருப்பதில்லை.

இந்த மனித-குமிழியின் போர்வையை, அதாவது சுவர்களை முடிந்த அளவுக்கு தேய்த்து, கரைத்து அதை மிகவும் மெலிதாக செய்வது அவசியம் - இதுதான் எல்லா யோக முறைகளின் நோக்கம், எல்லா ஆன்மீக முறைகளின் நோக்கம். இப்படி ஒரு மெலிதான குமிழியாக இருந்தால், ஒரு நாள் அது உடைந்து போகும்போது, அதில் விட்டுப்போனது எதுவும் இருப்பதில்லை - அது முற்றிலுமாக இல்லாமல் போய்விட்டது. இருப்பின் கட்டுப்பாட்டிலிருந்து, இல்லாமையின் கட்டில்லாத விடுதலைக்கு, அதாவது முக்திக்கு நகர்ந்துவிட்டது.

நான் சொல்லிக் கொண்டிருப்பது பலருக்கும் ஏமாற்றத்தை ஏற்படுத்தலாம். அதாவது, உள்ளுக்குள் பொதிந்திருக்கும் உயிர் என்றெல்லாம் எதுவுமே கிடையாது. அதைத்தான் நான் வேறு வார்த்தைகளில் மேலே சொல்லியிருந்தேன். ஆத்மா, ஜீவம் மற்றும் இதுபோன்ற பல கற்பனையான விஷயங்களெல்லாம் மனிதர்களுக்கு ஆறுதலைத் தருவதற்காகத்தான் உருவாக்கப்பட்டிருக்கின்றன. அப்படியெல்லாம் அவர்களுக்குள் எந்த பொருளும் இல்லை என்று அவர்களிடம் சொன்னால் அவர்கள் மிரண்டு போவார்கள்.

சரி, அப்படியென்றால் இந்த தனி மனிதர் அல்லது தனி ஆள் என்பது என்ன? அப்படியெல்லாம் ஒன்றுமே கிடையாது - "இந்த ஆள்" என்றும் எதுவும் கிடையாது. ஞாபகத்தால் பின்னப்பட்டிருக்கும் வலைதான், "இந்த ஆள்" எனப்படும் ஒரு மாயையை உருவாக்குகிறது. அதனால்தான், ஒருவரின் ஞாபகங்களை நீக்கிவிட்டால், ஏதோ ஒரு விதத்தில் அகற்றிவிட்டால் - அல்சைமர் நோய்போல அல்லது வேறு ஏதோ ஏற்பட்டு ஞாபகம் போய்விட்டால் - இப்போது முதலில் அழிந்துபோவது அவருடைய அடையாளங்கள்தான், "இந்த ஆளாக" அவர் வைத்திருந்த

அடையாளங்கள்தான். திடீரென்று அவர்கள் அதே ஆளாக இனி இருப்பது இல்லை. ஆனால், அவர்களுக்கே உரிய குணாதிசயங்கள் இன்னும் இருக்கிறது. அதாவது, ஒரு தேளுக்கு இருக்கும் குணாதிசயங்கள் வெட்டுக்கிளியின் குணாதிசயங்களை விட மிகவும் வித்தியாசமானவை. அதைப் போலவே, ஞாபகங்களை இழந்தவர்களுக்கு குணாதிசயங்கள் இருக்கும், ஆனால் ஒரு ஆளுக்கான அடையாளங்கள் இருக்காது. மேல்மன ஞாபகங்களும், உள்மன ஞாபகங்களும், ஆழ்மன ஞாபகங்களும் போய்விட்டால் - அது அகற்றப்பட்டிருக்கலாம் அல்லது அழிக்கப்பட்டிருக்கலாம் - அப்போது மரபணு ஞாபகம் செயல்பட ஆரம்பிக்கும். அதுவும் அழிக்கப்பட்டால், பிறகு பரிணாம ஞாபகம் வெளிப்பட்டு இயங்கும். அப்போதுகூட, உயிர் என்பது முழுமையாக போய்விடவில்லை. ஏனென்றால், அது இன்னும் முழுமையாக கரைந்து விடவில்லை.

ஞாபகங்களை மொத்தமாக அகற்றிவிட்டால், அதாவது அதை முழுமையாக கரைந்து போகும்படி செய்துவிட்டால், அப்போது அது முழுமையாக மறைந்து விடுகிறது. அப்போது அந்தக் குமிழியால் காற்றை பிடித்து வைக்க முடியாமல் போகிறது. இங்கு நாம் காற்று என்று எதை உதாரணமாக குறிப்பிடுகிறோம்? நமக்குள் இருக்கும் அடிப்படையான உயிர்சக்தியைத்தான் குமிழிக்குள் இருக்கும் காற்று என்று ஒப்பிட்டு குறிப்பிடுகிறோம். வேண்டுமானால் அதை பிரக்ஞை என்றும் சொல்லலாம். பிரக்ஞை என்பது ஒரு தன்மை, அது ஒரு பொருள் கிடையாது. இந்த பிரபஞ்சத்தின் இயல்பு பிரக்ஞை. ஒரு குமிழியை ஊதினீர்கள், அப்போது இந்தப் பிரக்ஞையை கொஞ்சம் பிடித்துக் கொண்டீர்கள். ஆன்மீக சாதனை மூலமும், விழிப்புணர்வோடு வாழ்வதன் மூலமும், நாம் செய்ய முயற்சிப்பது இதுதான் - நம்மால் எந்தளவுக்கு முடியுமோ அந்தளவுக்கு அதிகமாக காற்றை குமிழிக்குள் பிடித்துக்கொள்ள வேண்டும் - இதனால் நீங்கள் முடிந்தளவுக்கு ஒரு பெரிய குமிழியாக ஆகிட முடியும், குமிழியின் சுவரும் மிக மெல்லியதாக ஆகிடும். நீங்கள் ஒரு சின்ன குமிழியாக இருக்க விரும்பவில்லை. உங்களுக்கு ஒரு பெரிய குமிழியாக இருக்கவேண்டும். ஏனென்றால், போதிய அளவுக்கு பெரிய குமிழிக்குத்தான் உடனடியாக கரைந்து போய்விடும் சாத்தியம் இருக்கிறது.

ஆன்மீக சாதனை மூலம், நீங்கள் பெரிய குமிழியாக ஊதிக் கொள்ளலாம். அது மீண்டும் ஒருபோதும் வேறு எங்கேயும் அதே ஞாபகங்களின் வடிவில் இருக்க முடியாதபடி ஊத வேண்டும். அப்படி செய்ய வேண்டும் என்றால், நீங்கள் அதை மிகவும் பெரியதாக ஆக்கிட வேண்டும். அடிப்படையில், குமிழியை பெரிதாக ஆக்குவது என்றால்

என்ன அர்த்தம்? அதன் சுவர்களை கரைத்து கரைத்து மெல்லியதாக ஆக்கிவிட்டீர்கள் என்று அர்த்தம். ஆன்மீக சாதனையின் மூலம், அதை உள்பக்கத்திலிருந்து கரைக்கிறீர்கள். ஒரு நாள் அது உடைந்து போகும் அளவுக்கு அதை பெரிதாக ஆக்குகிறீர்கள். ஞாபகம் எல்லாம் கரைந்து மிகவும் மெல்லியதாக ஆகும்போது அது உடைந்து போகிறது, மொத்தமாக முடிந்து போகிறது.

ஒருவேளை, வாழ்க்கை அனுபவத்தால் அல்லது புத்திசாலித்தனத்தால் அல்லது விவேகத்தால் - ஏதோ ஒரு விதத்தில் ஒருவர் பெரிய குமிழியை ஊதினால், அதை இனிமேல் அலட்சியம் செய்ய முடியாது. அப்படிப்பட்ட உயிர் தாயின் கர்ப்பத்திலிருந்து வெளியே வந்த உடனேயே சிலவிதமான குணங்களை வெளிப்படுத்தும். அது ஒரு பெரிய குமிழியாக இருக்கும் காரணத்தினாலேயே அவை வெளிப்படும். அது எல்லோருக்குமே தென்படும். இன்னும் நூறு குமிழிகள் மிதந்து கொண்டு இருக்கலாம், ஆனால் எல்லோருமே இதைப் பார்ப்பார்கள். இப்படிப்பட்டவரையே உன்னதமான "உயிர்" என்று சொல்கிறோம்.

அவர் ஒரு ஆன்மீக குருவாக இருந்தாலும், தெருவில் நடந்துபோகும் சாதாரண மனிதராக இருந்தாலும் - அவர் எங்கே இருந்தாலும், மனிதர்களால் அந்த உயிரை அலட்சியப்படுத்த முடியாது. அந்தளவுக்கு நோக்கமும், செயலும் அவருக்குள் இருக்கிறது.

இந்த உதாரணத்தின் அடிப்படையில் பார்த்தால், ஒருவர் இறந்தபிறகு என்ன நிகழ்கிறது? உங்களுடைய பொருள் உடல் என்பது பெரும்பாலும் மரபணு மற்றும் பரிணாம ஞாபகங்களின் ஒரு சேகரிப்புதான். ஞாபகங்களின் மற்ற அம்சங்கள் பொருள் உடலில் அவ்வளவாக இருப்பதில்லை. அந்த ஞாபகங்கள் எல்லாம் பெரும்பாலும் சக்தி உடலில்தான் பதிந்து இருக்கிறது. மரணம் ஏற்படும்போது உடல் போய்விடுகிறது. அதனால், மேலோட்டமாக நீங்கள் சேகரித்த ஞாபகம் எல்லாம் - அதாவது மரபணு ஞாபகமும், பரிணாம ஞாபகமும், மற்ற ஞாபகங்களும் போய்விடுகின்றன - ஆனால், ஆழமான அடுக்குகளில் இருக்கும் கர்ம ஞாபகம் எல்லாம் அப்படியே இருக்கின்றன. அதனால், உங்கள் அனுபவத்தில் இது என்னவோ என்றென்றைக்கும் இருப்பதுபோல தோன்றுகிறது. இந்த விதத்தில்தான் ஆத்மா என்பது என்றென்றைக்கும் இருப்பது என்று சொல்கிறார்கள். இது என்றென்றைக்கும் இருப்பது கிடையாது. ஆனால் உங்கள் அனுபவத்தில், ஏதோ ஒன்று உடலுக்கு அப்பாற்பட்டு போனால், அதை என்றென்றைக்கும் என்று சொல்கிறீர்கள். அந்த விதத்தில் பார்த்தால், உங்களுக்குள் இருக்கும் இந்த நீண்டகால ஞாபகம், மரணத்திற்குப் பிறகும் தொடரும் இந்த ஞாபகம் - என்றென்றைக்கும் இருப்பதாக

தோன்றுகிறது - அதுவே உங்களுடைய எதிர்கால வாழ்க்கையின் தன்மையையும், அனுபவத்தையும் நிர்ணயிக்கிறது.

உங்களுக்குள் நீங்கள் வைத்திருக்கும் எட்டு விதமான ஞாபகத்தில், ஏழுவிதமான ஞாபகமும் நீங்கள் இறக்கும்போதே போய்விடும். நீங்கள் மனித வடிவத்தை எடுப்பதற்கு அடிப்படையான பரிணாம ஞாபகம் போய்விடுகிறது. உங்களுடைய தோலின் நிறத்தையும், மூக்கின் வடிவத்தையும், இதுபோன்ற விஷயங்களையும் நிர்ணயிக்கும் மரபணு ஞாபகமும் போய்விடுகிறது. மேல்மன, உள்மன, ஆழ்மன ஞாபகங்கள் எல்லாமும் போய்விடுகிறது. நீங்கள் உடல் இல்லாமல் போனபிறகு, பெரும்பாலும் கர்ம ஞாபகம் மட்டுமே உங்களை ஒன்றாக பிடித்து வைக்கிறது. உங்களுக்கு கர்ம ஞாபகம் மட்டும்தான் இருக்கிறது. மரணம் நிகழும்போது, அதாவது உடல் இல்லாமல் போகும்போது, உயிர்ச்செயல் என்னவோ தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறது. இந்த நிலையில் இருக்கும்போது, கர்ம ஞாபகம் என்ற ஒரே ஒரு ஞாபகம் மட்டும்தான் நமக்குள் மீதம் இருக்கிறது. இதில் சிலவற்றை சஞ்சித கர்மா என்றும், சிலவற்றை பிராரப்த கர்மா என்றும் நாம் வகைப்படுத்தலாம். ஆனால் அடிப்படையில், மீதமிருப்பது கர்மா மட்டும்தான்.

இப்போது, இந்த குமிழியை கையாள ஒரு வழி என்னவென்றால், அதிக அளவில் உயிர்சக்தியை பிடித்துக்கொள்ளலாம். இப்போது, கர்மாவை கழிப்பதைப் பற்றி நீங்கள் அவ்வளவாக எதையும் செய்யாவிட்டாலும், கர்ம சுவர்கள் மிகவும் மெல்லியதாக ஆகிவிடும். "உயிரின் அளவு" பெரியதாக இருக்கும் காரணத்தினால் மட்டுமே இப்படி ஆகிடும்.

இன்னொரு வழி என்னவென்றால், கர்ம சுவர்களை கரைத்திடலாம். தங்களுடைய கர்மா எல்லாம் உள்ளது உள்ளபடி இருக்கும்போதே, ஒரு நாள் அந்த கர்ம சுவரை சரியாக திறந்துகொண்டு வெளியேறுவது எப்படி என்பதை அறிந்தவர்கள் மிகவும் சிலர்தான். மற்றவர்களெல்லாம் அதை கரைத்து கரைத்துதான் கழிக்கவேண்டும். ஆன்மீகப் பாதையில் இருப்பவர்களுக்கு மிகப்பெரிய அளவில் வேலைகள் கொடுக்கப்படும். ஒருவரால் உள்பக்கத்தில் இருந்து குமிழியை கரைத்து மெல்லியதாக்க முடியாவிட்டால், அதிகமான செயல் செய்வது மூலம் அதை வெளிப்பக்கத்திலிருந்து கரைக்க பார்க்கிறார்கள். இரண்டு விதத்திலும், அதன் சுவர்களை மெல்லியதாக்கவே முயற்சிக்கிறார்கள்.

ஒருவரின் கர்ம உடலை முறையாக கையாள்வதற்கு பல வழிகளை நம் பாரம்பரியத்தில் சொன்னார்கள் - தியானலிங்கம் போன்ற ஒரு புனிதமான இடத்தில் போய் உட்காரலாம், மற்ற சக்திமிக்க இடங்களுக்கு போகலாம், தீர்த்த யாத்திரைக்கு போகலாம் - இதுபோல இன்னும் பல

வழிகள் இருக்கின்றன. ஒருவரது கர்ம உடலின் மேல் தாக்கத்தை ஏற்படுத்துவது சாத்தியம் - ஏனென்றால், அடிப்படையாக பல தாக்கங்களின் சேகரிப்பாகத்தான் இந்த கர்ம உடல் முழுவதுமே உருவாகியிருக்கிறது. அதனால், சரியான தாக்கங்களை ஏற்படுத்தும்போது - அதாவது சரியான இடங்களில் இருப்பது, சரியான மனிதர்களின் சேர்க்கை, சரியான சூழல்களில் இருப்பது - இவை மூலம் கர்ம உடலை கரைத்திட வாய்ப்பிருக்கிறது.

இந்த காரணத்தால்தான் ஆன்மீக பாதையில் இருப்பவரின் வாழ்க்கைமுறை குறிப்பிட்ட விதத்தில் இருக்கும்படி வடிவமைக்கப்பட்டிருக்கிறது. அதாவது, ஒருவர் தொடர்ந்து செயல் செய்துகொண்டே இருப்பார், அதே சமயம், அவருடைய செயல் தன்னை பற்றியதாகவே இருக்காது. ஒரு செயல் தன்னைப் பற்றியதாக ஆகிடும்போது, கர்மா அதிகமாக வளர்ந்திடும், கர்ம சுவர்களில் பொருள் சேர்ந்து அது மேலும் மேலும் கெட்டியாகிவிடும். உங்களுடைய செயல் என்பது உங்களைப் பற்றியதாக ஆகிடும்போது, உடனே உங்களுக்கு பலமான விருப்பங்களும் வெறுப்புகளும் ஏற்படும் - இதைச் செய்வேன் அதைச் செய்யமாட்டேன், இவரிடம் பேசுவேன் அவரிடம் பேசமாட்டேன், இவரை நேசிப்பேன் அவரை வெறுத்திடுவேன் - இப்படி போய்க்கொண்டே இருக்கும். அது உங்களை பற்றியதாக ஆகிடும்போது, இப்படிப்பட்ட விஷயங்கள் இயல்பாகவே உங்களுக்குள் ஒரு பாகமாக மாறிடும்.

அதனால்தான் நம் நாட்டில், கர்ம சுவரின் மேல் பொருள்களை சேகரிக்காத விதத்தில் அமையும்படி ஆன்மீக பாதையை உருவாக்கினார்கள். அதேசமயம், உங்களுக்குள் சேகரிக்கும் உயிர்த்தன்மையின் அளவை அதிகரித்துக் கொண்டே இருக்கவேண்டும். உங்களுக்கு மூளை எவ்வளவு இருக்கிறது என்பது முக்கியமல்ல, அறிவு எவ்வளவு இருக்கிறது என்பது முக்கியமல்ல - நீங்கள் பிடித்து வைத்திருக்கும் உயிர்த்தன்மையின் அளவை பொருத்துத்தான் உங்களுடைய வாழ்க்கையின் முக்கியத்துவம் நிர்ணயிக்கப்படுகிறது. இப்படியாக, உயிரின் அடிப்படையான பொருளை அதிகரிப்பதுதான் நோக்கமாக இருக்கிறது. இதன்மூலம், மேற்புறமாக மூடியிருக்கும் பரப்பு அல்லது போர்வை முக்கியம் இல்லாமல் போகிறது. அதன் முக்கியத்துவத்தை இழக்கும்போது, அது கரைந்து போகிறது. அந்த போர்வை கரைந்த பிறகு என்ன ஆகும்? நீங்கள் பிடித்து வைத்திருந்த உயிர்தன்மையோடு - அந்த உயிர்தன்மை உங்களுக்கு சொந்தமானது கிடையாது, எப்படியும் அது எல்லா இடத்திலும் இருக்கிறது - நீங்கள் அதோடு கலந்து ஐக்கியமாகிப் போகிறீர்கள்.

உங்களுடைய சுவர் கெட்டியாக இருக்கும்போது, நீங்கள் ஒரு கோல்ஃப் பந்தைப்போல இருக்கிறீர்கள் - உயிர் என்பது குறைவாகவே இருக்கிறது,

மீதி இருப்பதெல்லாம் கர்மாவாக இருக்கிறது. இப்போது உங்களை கொஞ்சம் தள்ளிவிட்டால், நீங்கள் குதித்து குதித்து எல்லாப் பக்கமும் போவீர்கள். ஆனால், நீங்கள் ஒரு பெரிய குமிழியாக ஆகும்போது, ஏதாவது அதை தள்ளினால் அது சும்மா மிதந்திடும், அவ்வளவுதான். அது இந்த சுவற்றிலும் அந்த சுவற்றிலும் முட்டிமோதி எல்லாப் பக்கமும் எகிறாது. மனிதர்கள் இந்த விதத்தில்தான் தங்களுடைய வாழ்க்கையை வாழ்கிறார்கள்: தங்களுடைய கர்மாவின் கட்டமைப்புக்கு மிகவும் அடிமைப்பட்டு இருப்பவர்கள் இப்படித்தான் அவர்களை இலேசாக தோளில் தட்டினால் போதும் - அவர்கள் எல்லா பக்கமும் எகிறிக் குதிப்பார்கள். அதே சமயம், ஒருவிதமாக வளர்ந்த நிலையில் இருப்பவர்களுக்கு - அவர்களின் மேல் எது மோதினாலும், ஒரு பஸ் மோதினாலும்கூட - அவர்கள் எல்லா பக்கமும் போக மாட்டார்கள், அவர்கள் அப்படியே மிதப்பார்கள்.

ஆன்மீகப் பாதையை அல்லது ஆன்மீக சாதனைகளை மேற்கொள்ளும் ஒவ்வொருவருமே ஞானம் பெற்று மலரப் போவதில்லை. பிறகு ஏன் அவர்கள் அப்படி வாழ்கிறார்கள்? அவர்கள் தங்களுடைய கர்ம உடல்களை கரைத்து கொண்டிருக்கிறார்கள். நேரம் வரும்போது, அந்த குமிழி மரபணு ஞாபகத்தையும் பரிணாம ஞாபகத்தையும் வைத்திருக்க முடியாத நிலையை அடையும்போது, அதனால் இன்னொரு உடலை எடுத்திட முடியாதபடி ஆகிடும். இனிமேல் உடலை எடுத்துக்கொள்வதற்கு எந்த சாத்தியமும் இருக்காது: அது முடிந்து போகிறது. அது முழுமையாக போய்விடாமல் இருக்கலாம். ஆனால் அந்த குமிழியால் இனி திரும்ப வரவே முடியாது - அந்த வாய்ப்பு முடிந்துவிட்டது.

அந்த குமிழியை முழுமையாக உடைத்துவிட்டால், இந்த சுழற்சியில் இருந்து முழுமையாக வெளியேறிட வாய்ப்பிருக்கிறது. அப்போது அதை மரணம் என்று சொல்ல மாட்டோம். அது உயிரின் உச்சகட்ட முடிவாக இருக்கிறது. பெரிய குமிழியாக இருந்தால், அதை சும்மா தொட்டால் போதும், அது முழுமையாக கரைந்து போய்விடும். இதைச் செய்திட அதிக செயல் தேவையில்லை. தன்னுடைய இயல்பாலேயே அது உடைந்து போக முடியும். ஒரு நிஜமான சோப்புநுரை குமிழியைகூட, சின்னதாக இருக்கும்போது குத்திப் பார்த்தால் உடையாது. அது கையில்தான் ஒட்டிக்கொள்ளும். அதை உடைத்திட அதிக செயல் தேவைப்படும். ஆனால் பெரிய குமிழிகளோ தொட்டாலே உடைந்திடும், அல்லது தானாகவேகூட உடைந்துவிடும்.

அதனால்தான் பல ஆன்மீகப் பாதைகளில் இப்படிச் செய்ய பார்க்கிறார்கள்: ஒவ்வொரு பிறவியிலும் அந்த குமிழியை மேலும் மேலும் பெரிதாகும்படி செய்கிறார்கள். அப்படி செய்யும்போது, ஒருநாள் அது தானாகவே உடைந்து போகிறது. ஆனால், கெட்டியான சுவர்களுடன் குமிழி சின்னதாக

இருக்கும்போதும், ஒருவருக்கு தேவையான விவேகமும் நோக்கமும் ஏற்பட்டால், அல்லது மிகவும் சக்திவாய்ந்த ஆன்மீக பயிற்சிகளை அவர் செய்தால், இந்தப் பிறவியிலேயே அதை கரைத்துவிட முடியும். அதை பெரிதாக செய்வதற்கு பல ஜென்மங்களுக்கு காத்திருக்க வேண்டிய அவசியம் இருக்காது.

## யோகிகளின் புரிதலில் வாழ்வும் மரணமும்

மரணத்தின்போது என்ன நடக்கிறது என்பதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டுமா? அப்படியென்றால், முதலில் ஒரு மனிதன் எப்படி கட்டமைக்கப்பட்டிருக்கிறான் என்ற தொழில்நுட்பத்தை புரிந்துகொள்ள வேண்டும். யோகத்தில், இந்த மனித உயிரின் அனைத்து அம்சங்களையும், எல்லாவற்றையுமே உடலாக பார்க்கிறார்கள். இந்த உடல் ஐந்து அடுக்குகளால் ஆனது. இந்த அடுக்குகளை கோஷங்கள் என்று சொல்வோம். அவை - அன்னமய கோஷம், மனோமய கோஷம், பிராணமய கோஷம், விஞ்ஞானமய கோஷம் மற்றும் ஆனந்தமய கோஷம். ஒவ்வொரு அடுக்குக்கும் தனிப்பட்ட தன்மைகள் உள்ளன, குறிப்பிட்ட நோக்கம் உள்ளது.

வெளிப்புறத்தில் அமைந்துள்ள அடுக்கு இந்தப் பொருளுடல், இதை அன்னமய கோஷம் என்கிறோம். இது உணவால் ஆன உடல். நீங்கள் பிறந்தபோது 2.5 அல்லது 3 கிலோ எடையுடன் இருந்தீர்கள். இப்போது அதைவிட இருபது மடங்கு ஆகிவிட்டீர்கள். அதெல்லாம் எங்கிருந்து வந்தது? நீங்கள் சாப்பிட்ட உணவும் அதனால் கிடைத்த ஊட்டமும்தானே? அப்படியென்றால், உங்களுடைய "உடல்" என்று சொல்லப்படுவது நீங்கள் சேகரித்த உணவின் ஒரு குவியல்தான். அதனால் இந்த அன்னமய கோஷம் என்ற பெயர்.

இரண்டாவது அடுக்கு மனோமய கோஷம். இது மன உடல். இதில் உங்கள் எண்ணங்கள், உணர்வுகள் மற்றும் மனரீதியான செயல்கள் எல்லாம் அடங்கும் - விழிப்புணர்வு நிலையில் நடப்பவை, விழிப்புணர்வு இல்லாத நிலையில் நடப்பவை - இரண்டுமே அடங்கும். பல நாட்பட்ட நோய்களுக்கு அடிப்படை மனரீதியான பாதிப்புதான் என்று டாக்டர்கள் இன்று சொல்கிறார்கள். அப்படி என்றால் என்ன அர்த்தம்? மனதை எது பாதிக்கிறதோ அது உடலையும் பாதிக்கிறது. உங்கள் மனதில் ஏற்படக்கூடிய ஒவ்வொரு அசைவுக்கும் ஏற்றபடி உங்கள் உடலில் ரசாயன மாற்றம் ஏற்படுகிறது. அதேபோல் உடலில் ஏற்படும் ஒவ்வொரு ரசாயன மாற்றமும் மனதளவில் ஒரு அசைவை ஏற்படுத்துகிறது. பொதுவாகவே, மனம் என்று சொல்லும்போது அது குறிப்பிட்ட இடத்தில்

அமைந்துள்ளதாக நினைக்கிறார்கள். அப்படி கிடையாது. மனம் என்பது ஒரு குறிப்பிட்ட இடத்தில் இல்லை. மனதிற்கு என்று முழுமையான ஒரு உடற்கூறு இருக்கிறது. உங்கள் உடலின் ஒவ்வொரு செல்லிலும் ஞாபகமும் புத்தியும் இருக்கிறது. மனதளவில் முழுமையான ஒரு உடல் இருக்கிறது, இதைத்தான் மனோமய கோஷம் என்று சொல்கிறோம், அதாவது மன உடல்.

பொருள் உடலும், மன உடலும் உங்களுடைய ஹார்ட்வேர் மற்றும் சாஃப்ட்வேர் போன்றது. கணிசமான மின்சக்தியுடன் இணைக்கப்பட்டாலே ஒழிய ஹார்ட்வேரும் சாஃப்ட்வேரும் எதையும் செய்ய முடியாது. அதனால் ஒரு உயிருக்கு மூன்றாவது அடுக்கு இருக்கிறது, இதற்கு பிராணமய கோஷம் என்று பெயர். பிராணா என்பது உயிர் சக்தி. அன்னமய கோஷத்திற்கும் மனோமய கோஷத்திற்கும் ஆற்றல் அளித்து இயங்க வைப்பது இந்த சக்தி உடல்தான்.

இந்த மூன்று உடல்களுமே - அதாவது அன்னமய கோஷம், மனோமய கோஷம், பிராணமய கோஷம் ஆகிய மூன்றுமே இயற்கையில் பொருள் தன்மை கொண்டவைதான். அன்னமய கோஷத்தை புரிந்துகொள்வது சுலபம், ஏனென்றால் பொருள்நிலையில் ஸ்தூலமாக இருப்பதை உங்களால் பார்க்கமுடியும், உணரமுடியும். ஆனால் மனோமய கோஷம், பிராணமய கோஷம் இவைக்கூட பொருள்தன்மை கொண்டவைதான். இது எப்படி என்றால், பொருள்தன்மையில் இருக்கும் அந்த லைட் பல்ப் உங்கள் கண்ணுக்கு தெளிவாக தெரிகிறது. ஆனால் அதற்குள் ஓடும் மின்சாரமும் பொருள்தன்மை கொண்டதுதான். அதேபோல அதிலிருந்து வெளிவரும் வெளிச்சமும் பொருள்தன்மை கொண்டதுதான். இந்த மூன்றுமே பொருள் நிலையில்தான் இருக்கிறது. அதேபோல, பொருள் உடல் என்பது ஸ்தூலமான உடல், மன உடல் அதைவிட கொஞ்சம் சூட்சுமமாக இருக்கிறது, சக்தி உடல் என்பது மிகவும் சூட்சுமமானதாக இருக்கிறது - ஆனால் மூன்றுமே பொருள் நிலையை சேர்ந்தவைதான். இந்த உயிரைப் பற்றி, உங்கள் விழிப்புணர்வில் இப்போதைக்கு நீங்கள் அறிந்த மூன்று பரிமாணங்கள் இவைதான். பொருள்நிலையில் உள்ள இந்த பரிமாணங்கள் மூன்றிலுமே, உங்கள் கர்ம ஞாபகம், கர்மாவின் பதிவுகள் பதிக்கப்பட்டுள்ளன. உடல், மனம், சக்தி இந்த மூன்றிலுமே உங்கள் கர்மா பதிக்கப்பட்டுள்ளது. கர்மாவின் இந்தக் கட்டமைப்புதான், இந்த உயிரை ஒன்றாக பிடித்து வைத்திருக்கிறது.

நான்காவது அடுக்கு விஞ்ஞானமய கோஷம். விஞ்ஞானம் என்றால் "விசேஷ ஞானம்." அதாவது, அசாதாரணமான ஞானம் அல்லது ஐம்புலன்களுக்கு அப்பாற்பட்ட ஞானம். இதை ஆகாச உடல் என்றும் சொல்வார்கள். இந்த உடல் பொருள்தன்மையில் இருந்து பொருளற்ற

தன்மைக்கு மாறிடும் ஒரு மாற்ற நிலையில் உள்ளது. இது பொருள்தன்மையும் அல்ல பொருளற்றதும் அல்ல. இது உங்களுடைய தற்போதைய அனுபவத்தில் இல்லாததற்கு காரணம், உங்கள் அனுபவம் என்பது ஐம்புலன்களுக்கு உட்பட்டு இருக்கின்றது. ஐம்புலன்களால் பொருளுக்கு அப்பாற்பட்ட ஒன்றை உணரமுடியாது. இந்த பரிமாணத்துடன் தொடர்பு ஏற்படுத்திட நீங்கள் விழிப்புணர்வுடன் கற்றுக்கொண்டால், இந்த பிரபஞ்ச நிகழ்வுகளை புரிந்துகொள்ளும் உங்களுடைய திறன் பலமடங்கு அதிகரிக்கும்.

ஐந்தாவது அடுக்கிற்கு பெயர் ஆனந்தமய கோஷம். இதற்கும் வாழ்வின் பொருள் நிலையிலான பரிமாணங்களுக்கும் எந்த சம்பந்தமும் கிடையாது. பொருள்நிலையில் உள்ளது மட்டும்தான் இங்கேயும் அங்கேயும் இருக்கமுடியும். பொருள்தன்மை இல்லாதது இங்கேயும் அங்கேயும் என இருக்கமுடியாது, அல்லவா? அதுதான் எல்லாமும்; ஒன்றும் இல்லாததும் அதுதான். இருப்பதிலேயே ஆழமான, உள்மையப் பகுதியாக இருக்கும் அந்தப் பரிமாணம் பொருள்தன்மைக்கு அப்பாற்பட்டது. இது "ஒன்றும் இல்லாத" தன்மை. ஒன்றும் இல்லாதது என்று நான் சொல்லும்போது, இது ஏதோ ஒன்று அல்ல, இது ஒரு பொருள் அல்ல. பொருள் தன்மைக்கு அப்பாற்பட்டது. இதை விளக்கவும், வரையறுக்கவும் முடியாது. அதனால் அனுபவரீதியில் மட்டுமே யோகமுறை இதைப்பற்றி பேசுகிறது. பொருள்தன்மைக்கு அப்பாற்பட்ட அந்த பரிமாணத்துடன் தொடர்பு கொள்ளும்போது, நாம் ஆனந்தம் அடைகிறோம். அதனால் இதை ஆனந்தமய கோஷம் என்று சொல்கிறோம். அப்படி என்றால் உங்களுடைய பொருளுடலின் கட்டமைப்புக்குள் ஆனந்தத்தின் ஒரு குப்பி அல்லது குமிழி இருக்கிறது என்று அர்த்தம் இல்லை. அப்படி ஒன்றும் கிடையாது. வரையறுக்க முடியாத இந்த பரிமாணத்துடன் நாம் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளும்போது, நம்மையே மூழ்கடிக்கும் ஆனந்த அனுபவத்தை இது உருவாக்குகிறது, அவ்வளவுதான். இதற்கென்று தனி வடிவம் ஒன்றும் கிடையாது.

ஒருவர் இறந்துபோகும் போது உடல் விழுகிறது, அப்படி என்றால் வெளிப்புறத்தில் உள்ள அடுக்குகள் - அன்னமய கோஷமும், மனோமய கோஷத்தில் மேல்மன பாகங்களும் மட்டுமே இழக்கப்படுகின்றன. மீதமுள்ள கட்டமைப்பு முழுதும் அப்படியே இருக்கிறது. இது இன்னொரு கருப்பையைத் தேடி, மறுபடியும் பொருள்நிலையின் பரிமாணத்தில் தோன்றி வெளிப்படும். அதனால்தான் மரணம் என்பது முற்றிலுமான கரைதல் கிடையாது - சொற்ப நேரத்திலே நீங்கள் மீண்டும் எழும்பி விடுவீர்கள். ஆனால் சக்தி உடலும், மன உடலும், பொருள் உடலும் எடுக்கப்பட்டுவிட்டால், ஆனந்தமய கோஷம் பிரபஞ்சத்தோடு

ஒன்றாகிவிடும். சக்தி உடலும், மன உடலும், பொருள் உடலும் சேர்ந்திருந்தால் மட்டுமே ஆனந்த உடலை பிடித்து வைத்திருக்க முடியும். அவை மூன்றும் இல்லாமலேயே போகும் பட்சத்தில் ஆனந்த உடலும் இல்லாமல் போகிறது. இப்போது அவர் முற்றிலுமாக இல்லாது போகிறார். வாழ்வு, மரணம் மற்றும் முக்தி எனப்படும் முழுமையான கரைதல் ஆகியவற்றின் மொத்த கதை இதுதான்.

## இன்றியமையா சக்திகள் ஐந்து

மரணத்தின்போது பொருள் உடலிலிருந்து உயிர் பிரிவது எப்படி என்று நீங்கள் மேலும் புரிந்துகொள்ள வேண்டுமென்றால் பிராணமய கோஷம் பற்றி, அதாவது உயிரின்மேல் ஆளுமை செய்யும் இன்றியமையாத சக்திகளைப் பற்றி புரிந்துகொள்ளுதல் அவசியம். யோகத்தில் இதைத்தான் பிராணன் அல்லது பிராணா என்று சொல்கிறோம். பிராணா ஐந்து அடிப்படையான பரிமாணங்களில் வெளிப்படுகிறது. இதை பஞ்ச வாயு அல்லது பஞ்ச பிராணங்கள் என்று சொல்வோம். இதற்கு வேறு வடிவங்களும் இருக்கின்றன, ஆனால் இப்போது அதற்குள்ளே போனால் குழப்பமாகிவிடும். அதனால் இந்த ஐந்து பரிமாணங்களை மட்டும் பார்ப்போம்.

இந்த பஞ்ச பிராணங்கள் உடலின் வெவ்வேறு செயல்களுக்கு பொறுப்பாக இருக்கின்றன. முதலில் சமத் பிராணா அல்லது சமான வாயு. இந்த சமான வாயு என்பது உங்கள் உடலில் உஷ்ணத்தை பராமரிப்பதற்கு அடிப்படையாக உள்ளது. சமான வாயுவை செயல்படுத்துவதன் மூலம் உங்களுடைய சக்திகள் குறிப்பிட்ட விதமாக தூண்டப்படுவதால், உங்கள்மேல் இயற்கையின் வெளிப்புற அம்சங்களின் தாக்கம் குறைகிறது. இமயமலையின் சில பகுதிகளுக்கு நீங்கள் பயணித்திருந்தால், குறிப்பாக கோமுக், தபோவன் போன்ற இடங்களுக்கு போயிருந்தால், அங்கு கடுங்குளிரில் சில சாதுக்கள் உடலில் ஆடை இல்லாமல் இருப்பதை பார்க்கமுடியும். உறைந்துபோன பனிப்பாறைகளில், தட்பவெப்பம் பூஜ்ஜியத்துக்கு கீழ் மைனஸ் டிகிரிகளில் இருக்கும்போது, வெறும் கால்களுடன் சாதுக்கள் நடந்து கொண்டிருப்பார்கள். காரணம், சில விதமான கிரியைகளை செய்வதன் மூலமாகவோ, சில மந்திரங்கள் மீது ஆளுமை இருப்பதாலோ உங்களுடைய சமான வாயுவை செயல்படுத்த முடியும். இதனால் உங்களை சுற்றி ஒரு கவசம் உருவாக்கிக் கொள்ளமுடியும். உங்களுக்கென ஒரு சக்தி கவசத்தை உருவாக்கிக் கொள்வதால், இயற்கையின் இந்த அம்சங்கள் உங்களை இனி பொருட்படுத்துவதில்லை. இது குளிரை பற்றி மட்டுமல்ல, வெப்பமும் உங்களை தொந்தரவு செய்யாது. உங்களுக்குள் ஒரு ஏர் கண்டிஷன்

பொருத்தப்பட்டது போல் ஆகிவிடும். இப்போது வெப்பமோ குளிரோ உங்களை ஒன்றும் செய்யாது.

உடலில் உஷ்ணத்தை உருவாக்குவது சமான வாயுவின் ஒரு அம்சம்தான். இயற்கையாகவே, சிறப்பான குணப்படுத்தும் தன்மை கொண்டதாகவும் இது இருக்கிறது. உங்களுடைய சமான வாயு அதிகமாக இருந்தால், உங்களுடைய இருப்பே மற்றவர்களுக்கு குணப்படுத்துதலாக ஆகிறது.

இது உங்களுடைய ஜீரணச் செயலையும் பார்த்துக் கொள்கிறது. சமான வாயு உங்களில் அதிகமாக இருந்தால் நீங்கள் என்ன சாப்பிட்டாலும் ஒன்றரை மணி நேரத்திற்குள் உங்கள் வயிறு காலியாகிவிடும். உங்கள் வயிறு எப்போதுமே காலியாக இருக்கவேண்டும். அப்போதுதான் உங்கள் உடலும் மனமும் அவற்றின் உச்சத் திறனுக்கு இயங்கும். அதனால் யோகிகள் எப்போதுமே வயிற்றைக் காலியாக வைத்திருக்க விரும்புவார்கள். காலியான வயிறு என்றால் பட்டினி இருக்க வேண்டும் என்று அர்த்தம் இல்லை. எவ்வளவு முடியுமோ அவ்வளவு வேகமாக உணவை எரித்து விடுகிறீர்கள் என்று அர்த்தம்.

சக்திக்கும் வெப்பத்திற்கும் அடிப்படையான மூலமாகிய சூரியனுடன் சமான வாயுவிற்கு ஒரு தொடர்பு உண்டு. இந்த பூமிக்கும் உடலுக்கும் வெப்பத்தை அளிப்பது சூரியன்தான். ஒருவரின் வாழ்க்கையும் அதனுடைய கால அளவும் சூரியனின் சுழற்சிகளை சார்ந்ததாக இருப்பதால், சமான வாயு மிகவும் முக்கியமானது. சூரியனின் மூலம் இந்த பூமியும் வெப்பத்தை அளிக்கும் ஒரு குட்டி சூரியன்போல ஆகிவிட்டது. அதனால் இந்த பூமியுடன் ஆழமான ஒரு தொடர்பை நிலைப்படுத்திக் கொண்டால், சக்தியையும் வீரியத்தையும் பொருத்தவரை, ஒருவர் இங்கே முடிவே இல்லாதவர்போல் வாழமுடியும். இதன்மூலம் ஒரு யோகி தனது சூரிய சுழற்சிகளை[6] கடந்துபோய் அதனுடைய பிடியிலிருந்து விடுபட முடியும். இந்த சூரிய மண்டலத்தில், உயிர் நிகழ்வதற்கு மூலமான பொருளிடமிருந்து அவர் விடுபடமுடியும். அப்படிப்பட்ட யோகியின் வாழ்வும், மரணமும் காண்பதற்கே சுவாரசியமாக இருக்கும். சுவாசிப்பது எவ்வளவு எளிமையானதோ, அதே விதமான எளிமையுடன் அவர் மரணத்தையும் கையாள்வார்.

பிராணத்தின் அடுத்த அம்சம் பிராண வாயு, இது உங்களுடைய சுவாச மண்டலத்தின் இயக்கத்தையும், எண்ணங்களின் செயல்பாட்டையும் கவனித்துக் கொள்கிறது. உங்களுடைய எண்ணத்தில் ஏற்படக்கூடிய

---

6 மனிதனின் உடலமைப்பில் ஒரு சூரிய சுழற்சி என்பது 4356 நாட்கள் அல்லது தோராயமாக 12 ஆண்டுகள் ஆகும். ஒருவரது வாழ்க்கையில் அந்த நேரத்தில் என்ன நடக்கிறது என்பதை நிர்ணயிப்பதில் இந்தச் சுழற்சி பெரும்பங்கு வகிக்கிறது.

ஒவ்வொரு மாற்றத்திற்கும் ஏற்றபடி உங்களுடைய சுவாசத்திலும் ஒரு சூட்சுமமான மாற்றம் நடக்கிறது. இதை கவனித்திருக்கிறீர்களா? இப்போது இங்கே உட்கார்ந்தபடி கடல் பற்றி நினைத்தீர்கள் என்றால், உங்கள் சுவாசம் ஒருவிதமாக இருப்பதைக் கவனிப்பீர்கள். மலைகளைப் பற்றி நினைத்தால், அப்போது சுவாசம் வேறுவிதமாக இருக்கும். ஒரு புலியை பற்றி நினைத்தால், அது இன்னொருவிதமாக இருக்கும். உங்கள் சுவாசத்திற்கும் எண்ண ஓட்டத்திற்கும் நேரடியான தொடர்பு இருக்கிறது. ஏனென்றால், இரண்டையும் கையாள்வது பிராண வாயு என்ற ஒரே சக்திதான். பிராண வாயு பூமியுடன் தொடர்புடையது. அதன் இயல்பு நிலத்தின் தன்மைகள் கொண்டது. இந்த சூரிய மண்டலத்திலேயே பூமி என்ற இந்தக் கோளில் மட்டும்தான், சுவாசம் செய்வதற்கேற்ற காற்று மண்டலம் உள்ளது, அதனால்தான் நம்மால் சுவாசிக்க முடிகிறது. அதனால் இந்த ஒரு கோளில் மட்டும்தான் செயல்படக்கூடிய அறிவு இருக்கிறது, அதாவது எண்ணங்களின் செயல்பாடு இருக்கிறது.

பிராணத்தின் அடுத்த அம்சம் உதான வாயு. உதான் என்ற வார்த்தைக்கு பறப்பது என்று அர்த்தம். எடை மெஷினில் உங்கள் எடை 70 அல்லது 80 கிலோகிராம் இருக்கலாம், ஆனால் அந்த 70 அல்லது 80 கிலோகிராம் எடையின் பளுவை நீங்கள் உணர்வதில்லை. ஏனென்றால் உதான வாயு உங்களுக்குள் மிதக்கும் தன்மையை உருவாக்குகிறது, அதனால் புவியீர்ப்பின் தாக்கம் குறைகிறது. இந்த உதான வாயுவை செயல்படுத்திட பயிற்சிகள் இருக்கின்றன. சீனாவில் உதான வாயுக்கென்று முழுநேரப் பள்ளிகள் இருந்தன, அங்கே உதான வாயு மேல் ஆளுமை கொண்டுவந்தவர்கள், அப்படியே காற்றில் கொஞ்சம் மிதப்பார்கள். இதை சினிமாவில் பார்த்திருக்கலாம். படங்களில் அது கொஞ்சம் மிகைப்படுத்தப்பட்டு இருந்தாலும், உடலில் உதான வாயு அதிகரிப்பதால், உடல் மிகவும் லேசாக முடியும் என்பது நிஜம்தான்.

ஒரு தற்காப்புக்கலை வீரருக்கு, உடல் மிகவும் லேசாக இருப்பது முக்கியம். பல சமயங்களில் தற்காப்புக்கலை வீரர்களும், கால்பந்து வீரர்களும், பாலே நடன வித்தகர்களும் நம்பமுடியாத அளவுக்கு உயரமாக எம்பி குதித்தது உண்டு. விஞ்ஞானிகளால் இதை சாத்தியம் என்று ஏற்றுக்கொள்ளவே முடியாது. புவியீர்ப்பையே மீறிடும் அளவுக்கு அவர்கள் எகிறி குதித்ததற்கு காரணம் அவர்களுடைய உடலை மிகவும் இலேசாக, மிதக்கும் தன்மையுடையதாக ஆக்கியதுதான். உதானா மீது முழுமையான ஆளுமை இருந்தால் உங்களால் பறக்கக்கூட முடியுமென்று சொல்கிறார்கள். ஆனால் அதைவிட முக்கியமாக, உங்களுடைய உதானாவை செயல்படுத்தினால் உங்கள் மீது புவியீர்ப்பின் தாக்கம் குறைவாகிவிடும். எடைமெஷின் மேல் நின்றால், அதே எடைதான்

இருக்கும்; ஆனால் உங்கள் அனுபவத்தில், உங்கள் உடலை மிகவும் இலேசானதாக உணர்வீர்கள். அதை நீங்கள் தூக்கிக்கொண்டு போகத் தேவையில்லை. உடல் அப்படியே மிதப்பதுபோல் இருக்கும். உங்கள் உடல்சார்ந்த தன்மையை குறைத்திடும் இன்னொரு வழி இது.

உதான வாயு உங்களுடைய பேச்சு தொடர்பையும் ஆள்கிறது. உங்களுடைய உதான வாயு நன்றாக இயங்கினால், மற்றவர்களுடன் உங்களுடைய பேச்சுத் தொடர்பு இயல்பாக நிகழும்.

உதான வாயு சந்திரனுடன் தொடர்புடையது. சந்திரனுடைய சுழற்சிக்கும் பெண்ணின் உடலுக்கும் நெருக்கமான தொடர்பு உண்டு. சந்திரனின் சுழற்சியோடு நம் தாய்மார்களின் உடல்கள் ஒத்திருந்ததால்தான் நாம் பிறந்தோம். இந்த பூமியில் பெண்தன்மையை கையாள்வது சந்திரன். சந்திரன் என்ற அடிப்படையான மேடையின் மீதுதான் உயிர் கட்டமைக்கப்படுகிறது. அதனால் இந்த உடல் எப்போது ஒரு முடிவுக்கு வரும் என்பதை அது நிர்ணயிக்கிறது. இறக்கும்போது, உதான வாயு பிரிந்தவுடன், உயிர் தன்னை கட்டமைத்துக்கொள்ள அடிப்படையாக இருந்த அஸ்திவாரமே போய்விட்டதால், அப்போதிலிருந்து அடுத்த கருவறையை மும்முரமாக தேட ஆரம்பிக்கிறது.

பிராணத்தின் அடுத்த அம்சம் அபான வாயு. அபான வாயு உங்களுடைய கழிவுநீக்கு மண்டலம் செயல்படுவதற்கும் புலன்களின் இயக்கத்துக்கும் அடிப்படையான சக்தியாகும்.

செல்களின் நிலையில் கழிவுநீக்கம் திறம்பட நடந்தால்தான் உங்களுடைய புலன்களுக்கு தேவையான உணரும் திறன் இருக்கும். அதனால்தான் யோகத்தில் கழிவுநீக்கத்திற்கு அத்தனை முக்கியத்துவம் தரப்படுகிறது.

கழிவுநீக்கம் என்றால், ஜீரணத்தின் கழிவு மட்டுமல்ல, செல் நிலையில் நடக்கவேண்டிய கழிவுநீக்கமும் இதில் அடங்கும். ஒவ்வொரு கணமும் ஏராளமான அசுத்தங்களை செல்கள் வெளியேற்றிக் கொண்டிருக்கின்றன. இந்த கழிவுநீக்க மண்டலம் திறம்படச் செயல்பட வயிறு காலியாக இருப்பது அவசியம். வயிற்றில் உணவு இருக்கும்போது ஜீரணம் நடக்கிறது, அப்போது கழிவுநீக்கு மண்டலத்தின் செயல்பாடு மெதுவாகி விடுகிறது. கழிவுநீக்கம் சரியாக நடக்காவிட்டால், உடல் சுத்தமின்றி போய்விடுகிறது. உடல் சுத்தமில்லாமல் போனால், சோம்பலும், எல்லாவிதமான மந்தத்தன்மையும் வந்து சேர்கிறது. உடலில் இந்த மந்தம் வெளிப்பட ஆரம்பித்தால், அது மெதுவாக மனதுக்கும் பரவுகிறது. இப்படித்தான் அபான வாயு நமது உடலமைப்பு முழுவதுமே தூய்மையாக இருப்பதற்கு பெரும்பங்கு வகிக்கிறது.

பிராணத்தின் அடுத்த அம்சம் வியான வாயு. உடலின் கோடிக்கணக்கான செல்கள் எல்லாம் ஒரே உயிராக பிணைந்து இருப்பதற்கு அடிப்படையான சக்தி வியான வாயு.

சில சந்தர்ப்பங்களில், சில யோகிகள் இறந்தபின் பல மாதங்களுக்குப் பிறகும், அவர்களுடைய உடல் அழுகுவதற்கான எந்த அறிகுறியும் இருந்ததில்லை - அந்த உடலை பதனப்படுத்தி பாதுகாத்திட எந்த முயற்சியும் செய்யப்படாமலேயே, இப்படி அழுகாமல் இருந்துள்ளது. குறிப்பாக திபெத்திய துறவிகளுக்குள் இது வழக்கமான ஒன்று. இதற்கு காரணம், இறக்கும்போது அவர்கள் உடலில் குறிப்பிட்ட அளவுக்கு வியான பிராணாவை விட்டுச்செல்கிறார்கள், அதுவே நீண்டகாலத்திற்கு உடலை பாதுகாக்கிறது.

“கூடுவிட்டு கூடு பாய்வது” பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். வியான வாயுவின் மீது ஆளுமை உடையவர் தன் விருப்பப்படி இந்த உடலைவிட்டுச் செல்ல முடியும். இந்த உடலைவிட்டு வெளியேறுவது ஒன்றும் யோகத்தின் உச்சமெல்லாம் கிடையாது. இது யோகத்தின் எளிமையான ஒரு அம்சமாகும். உங்கள் உடலில் வியான வாயுவை செயல்படுத்தினால், காலப்போக்கில் உங்கள் உடலுக்குள் அதிகப் பிடிப்பின்றி, கட்டுதளர்ந்து இருப்பீர்கள். இப்போது உங்கள் உடலுடன் அடையாளப்படுவது என்பதைப் பற்றி கேள்வியே எழும்பாது. “நான் இந்த உடல் அல்ல” என்ற விழிப்புணர்வு மிகவும் இயல்பாகவே உங்களுக்கு நிலைக்கிறது, அதனால் உங்கள் வாழ்வில் முற்றிலும் வேறுவிதமான ஒரு சுதந்திரம் ஏற்படுகிறது. இது எப்படி என்றால், உங்களுடைய உடைகள் உடலோடு ஒட்டியபடி இறுக்கமாக பிடித்திருந்தால், மெதுவாக அதுதான் நீங்கள் என்று நினைத்திடும் போக்கு ஏற்படும். ஆனால் தளர்வான உடைகளை போட்டிருந்தால், இவை உடைகள்தான், நானல்ல என்ற விழிப்புணர்வு உங்களுக்கு அதிகமாக இருக்கும்.

வியான வாயுவின் இன்னொரு அம்சம், அது உங்களுடைய நகரக்கூடிய திறனுக்கும் அடிப்படையாக இருக்கிறது. உங்கள் வியான வாயு அதிகமாக இருந்தால், அவ்வளவாக நடைப்பழக்கம் இல்லாதவராக இருந்தாலும், நன்கு நடக்கக்கூடிய திறன் உங்களுக்கு இயல்பாகவே வருவதை கவனிக்கலாம். ஆன்மீக வளர்ச்சியின் ஒரு முக்கியமான அம்சமாக வியான வாயு இருக்கிறது. உங்களுடைய உள்ளுணர்வு திறனையும் இது மேம்படுத்துகிறது.

இந்தப் பிராணங்கள் அல்லது வாயுக்களுக்கு தொடர்பான இன்னும் பல அம்சங்கள் இருக்கின்றன. ஆனால் இந்த பொருள் உடலின்மேல் அவற்றின் தாக்கத்தைப் பற்றிதான் நாம் இப்போது பார்த்தோம். மரணம்

எப்படி நடக்கிறது, ஒருவர் இறந்திடும்போது என்ன நடக்கிறது என்பதை புரிந்துகொள்ள, இந்த பிராணங்களை பற்றிய புரிதல் அவசியம். ஏனென்றால், இறக்கும் நொடியில் இந்தப் பிராணங்கள் ஒவ்வொன்றும் வெவ்வேறு விதமாக பிரிகின்றன, இறந்தவர் மீதான இவற்றின் தாக்கம் வெவ்வேறு விதமாக இருக்கின்றன. நாம் புரிந்துகொள்ள வேண்டியது என்னவென்றால், இறப்பு எனும் நிகழ்வு அல்லது உடலற்றுப் போகும் நிகழ்வு என்பது, வெறும் மூச்சு நின்றுபோகும் தருணத்துடன் முடிந்து விடுவதில்லை, அதையும் தாண்டி வெகுதூரம் செல்கிறது.

## நிகழ்வல்ல இது தொடர்நிகழ்வு

பொருள் விளக்கம் என்பது நவீன விஞ்ஞானத்தின் முன்னேற்றத்தில் மையமாக இருக்கிறது. ஏதோ ஒன்றைப் பற்றி அவர்கள் படிக்க வேண்டுமென்றால், முதலில் அதை அவர்கள் வரையறுத்து, பொருள் விளக்கம் தரவேண்டும். ஆனால் மரணத்திற்கு பொருள் விளக்கம் என்று வரும்போது, நவீன விஞ்ஞானம் சிக்கி குழம்பிப்போகிறது. "உயிர் இல்லாமல் இருப்பது" என்பதுதான் மரணத்திற்கு அவர்களால் தரமுடிந்த அதிகபட்ச பொருள் விளக்கம். ஆனால், அவர்களிடம் "உயிர்" என்றால் என்ன என்பதற்கும் பொருள் விளக்கம் இல்லை. மரணத்திற்கு பொருள் விளக்கம் தருவது, மரணம் நிகழ்ந்த சரியான தருணத்தை நிர்ண யிப்பது - இதெல்லாம் வாழ்க்கைக்கும் மரணத்திற்கும் சம்பந்தப்பட்ட சமூக ரீதியான, மருத்துவரீதியான, சட்டரீதியான காரணங்களுக்காகத்தான்.

பழைய காலங்களில், மூச்சு நின்றுவிட்டாலே அந்த மனிதர் இறந்துவிட்டதாக கருதினார்கள். இந்த பொருள் விளக்கத்தின்படி "இறந்தவர்" என்று அறிவிக்கப்பட்டவர்கள் சில சமயம் உயிர் திரும்பிய கதைகள் உண்டு. இந்த நிகழ்வுகளால் மிகப்பெரிய குழப்பங்கள் ஏற்பட்டன. அதனால் ஒரு படி மேலே சென்றார்கள். நாடித்துடிப்பு நின்றுவிட்டால், அதாவது, இதயம் நின்றுபோய் விட்டால், அதுவே மரணம் என்று வரையறுக்கப்பட்டது. ஆனால் அதேபோல, தங்களின் சுவாசமும் இதயமும் நின்ற பிறகும்கூட, சிலபேர் உயிர் திரும்பிய நிகழ்வுகள் ஏற்படத்தான் செய்தது. இன்றைக்கு நமக்கு பலவிதமான சொற்கள் இருக்கின்றன - க்ளினிக்கல் டெத் (மருத்துவத்தின்படி இறந்தவர்), ப்ரெயின் டெத் (மூளை மரணம்), சோமாட்டிக் டெத், ஹார்ட் - லங் ஃபெயிலியர் (இதயம், நுரையீரல் செயலிழப்பு), ஹோல்-ப்ரெயின் டெத் (முழுமையான மூளை மரணம்) - இப்படி போய்க்கொண்டே இருக்கிறது. அவர்களால் மரணத்தை துல்லியமாக வரையறுத்து விளக்க முடியவில்லை. அதை மறைத்திடத்தான், இந்த வார்த்தைகளுக்குப்பின் ஒளிந்து கொள்கிறார்கள்.

பிரச்சனை என்னவென்றால், மரணம் நிகழும்போது வெளிப்படும் விஷயங்களை மட்டுமே இவர்கள் கவனிக்கிறார்கள், அதன் அடிப்படைக் காரணத்தை கவனிப்பதில்லை. காரணம்தான் என்ன? இந்த பஞ்ச பிராணங்கள் பொருள் உடலைவிட்டு வெளியேறுவதுதான் காரணம்.

பல வருடங்களுக்கு முன்பு இது நடந்தது. ஒருமுறை ஒரு ஆராய்ச்சி நிறுவனத்தார் என்னை அழைத்தார்கள். அவர்கள் என்னுடைய காம்மா அலைகளை பரிசோதிக்க விரும்பினார்கள். அதாவது, மூளையில் உள்ள நரம்புகளில் நிகழும் சில இயக்கங்களை ஆய்வுசெய்து, அதை மனத்தின் செயல்திறனோடு தொடர்புபடுத்தி விளக்குவார்கள். அந்த சமயத்தில் காம்மா அலை பற்றியெல்லாம் எனக்கு ஒன்றும் தெரியாது, என் மூளையில் அப்படி ஒன்று இருந்ததுகூட எனக்கு தெரியாது. இப்போதெல்லாம் இதுபோன்ற அவமதிப்புகளுக்கு என்னை நான் உட்படுத்திக் கொள்வதில்லை. ஆனால், அன்று ஒரு வாக்கை நிறைவேற்றுவதற்காக சரி என்று சொல்லிவிட்டேன்.

என் மீது பதினான்கு எலக்ட்ரோடுகளை இணைத்துவிட்டு, என்னை தியானம் செய்யச் சொன்னார்கள். நான், "எனக்கு தியானம் செய்ய தெரியாதே," என்று சொன்னேன். சற்று அதிர்ந்து போனார்கள். "என்னது, நீங்கள்தான் எல்லோருக்கும் தியானம் சொல்லிக் கொடுக்கிறீர்களே, பிறகு எப்படி?" என்றார்கள். "ஆமாம், சொல்லித்தருகிறேன். ஆனால் எந்த அசைவும் இல்லாமல் நிஷ்சலமாக உட்கார அவர்களுக்கு தெரியவில்லை, அதனால் தியானம் சொல்லிக்கொடுக்கிறேன்," என்றேன். உண்மையில் தியானம் என்று ஒன்றுமில்லை. இருப்பதெல்லாம் அசைவற்ற தன்மைதான் - அசைவற்ற தன்மையின் பல நிலைகள், அவ்வளவுதான். மக்களுக்கு அசைவற்ற தன்மையை சொல்லிக்கொடுப்பது கடினம், அதனால் "தியானம்" என்ற ஒரு வார்த்தையை நடுவில் நுழைக்கிறோம். அதனால் நான், "உங்களுக்கு வேண்டுமென்றால் நான் அசைவில்லாமல் உட்காருகிறேன், எல்லா நிலைகளிலும் முற்றிலும் அசைவின்றி உட்காருகிறேன்," என்று சொன்னேன். அதற்கு அவர்கள், "சரி, அசைவில்லாமல் உட்காருங்கள்; நாங்கள் அதையே பரிசோதிக்கிறோம்," என்றார்கள். அதனால் நானும் உட்கார்ந்தேன்.

பதினைந்து நிமிடங்களுக்கு பிறகு, ஏதோ உலோகப் பொருளால் என் முட்டிகளை தட்ட ஆரம்பித்தார்கள். அதற்குப் பிறகு என் கணுக்கால்களில் தட்டினார்கள், அப்புறம் முழங்கைக்கு மாறினார்கள். முழங்கையில் மிகவும் வலித்திடும் அந்த வினோதமான இடம் உங்களுக்கு தெரியும்தானே? அங்கே தட்டினார்கள். நான், "இதுவும் அவர்களுடைய பரிசோதனையில் ஒரு பகுதி" என்று நினைத்து சும்மா இருந்தேன். ஆனால் தட்டுவது அதிகமானது, வலியும் அதிகமானது. இப்போது

நான் மெதுவாக கண்களை திறந்து, "என்ன, நான் ஏதாவது தவறாக செய்துவிட்டேனா?" என்று கேட்டேன். அவர்கள் எல்லாரும் என்னை விசித்திரமாகப் பார்த்தார்கள். நான், "ஏன் எல்லோரும் என்னை இப்படிப் பார்க்கிறீர்கள்?" என்று கேட்டேன். அவர்கள், "எங்களுடைய கம்ப்யூட்டர் திரைகள் எதையும் காட்டவில்லை. எங்களுடைய மெஷின் சொல்லும் முடிவுப்படி நீங்கள் இறந்துவிட்டீர்கள்," என்றார்கள். நான், "ஆஹா, அற்புதமான கண்டுபிடிப்பு அல்லவா?" என்றேன். அவர்கள், "ஒன்று நீங்கள் இறந்துவிட்டீர்கள் அல்லது உங்களுடைய மூளை இறந்துவிட்டது," என்றார்கள். நான் சொன்னேன், "நீங்கள் முதலில் சொன்னதையே ஏற்றுக்கொள்கிறேன். நான் இறந்துவிட்டேன் என்பதே பரவாயில்லை. ஆனால், என் மூளை இறந்துவிட்டது என்று சொல்லாதீர்கள், அதுதான் எனக்கு அவமானமாக இருக்கிறது," என்றேன். மெஷின்கள் உங்கள் மரணத்தை முடிவுசெய்ய அனுமதித்தால் இதுதான் நடக்கும். உங்கள் சுவாசம் நின்று போவது, இதயம் நின்று போவது, கம்ப்யூட்டர் திரை உங்கள் மூளையின் இயக்கத்தை காண்பிக்க மறுப்பது - இதெல்லாம் மரணமில்லை. பஞ்ச பிராணங்கள் உங்களுடைய பொருள் உடலைவிட்டு முழுமையாக வெளியேறினால்தான் அது மரணம்.

சுவாசம் நின்றிடும்போது, அல்லது இறப்பு என்று நீங்கள் சொல்வது நிகழும்போது இந்தப் பிராணங்கள் உடலைவிட்டு வெளியேறுவது உடனே நிகழ்வதில்லை, அது காலப்போக்கில் நடக்கிறது. இந்த பிராணங்கள் எல்லாம் ஒரே சமயத்தில் உடலைவிட்டுப் பிரிவதில்லை. உடலைவிட்டு இந்த பிராணங்கள் வெளியேறுவதில் ஒரு தெளிவான முறை இருக்கிறது.

இதை சில விதங்களில் எளிதாக கவனிக்கலாம். உதாரணமாக, இறந்த ஒரு உடலை இரண்டு மூன்று நாட்கள் வைத்திருந்தால் அதில் முடி வளர்வதை பார்க்கலாம். இது எல்லோரும் நன்கு அறிந்ததே. அது ஒரு ஆணாக இருந்து, அவர் ஷேவிங் செய்பவராக இருந்தால், முகத்தின் முடி வளர்வதை கவனிக்கலாம். நகங்களும் வளரும். இறந்த உடல்களை பல நாட்களுக்கு வைத்திருக்கும் வழக்கமுள்ள நாடுகளில், அண்டர்டேக்கர் எனும் உடலை பதனப்படுத்தும் தொழிலில் இருப்பவர்கள், அந்த நகங்களை வெட்டிவிட்டு, தாடியை ஷேவிங் செய்து விடுவார்கள். இது நிகழ்வது தோல் சுருங்கியதாலோ, காய்ந்து விட்டதாலோ அல்ல, அதன் பங்களிப்பு இதில் கொஞ்சம்தான். முக்கியமாக, முடியும் நகமும் ஒருவிதத்தில் தனித்தன்மை கொண்டவை. ஏனென்றால் நீங்கள் உயிரோடு இருக்கும்போதுகூட அந்த பகுதிகளில் உணர்ச்சியே கிடையாது. அதில் உணர்ச்சியில்லாமல் இருப்பதற்கு காரணம், உயிரோடு இருக்கும்போதுகூட அதில் பிராண வாயு இல்லை.

மற்ற வாயுக்கள் இருக்கின்றன. அதனால், மரணம் ஏற்பட்ட உடனே பிராணவாயு உடலைவிட்டு வெளியேறி இருந்தாலும், முடியும் நகமும் அவ்வளவாகப் பாதிக்கப்படுவதில்லை. அதனால்தான் மற்ற பிராணங்கள் எல்லாம் உடலைவிட்டு வெளியேறும்வரை, சிறிய அளவில் அவை வளர்வதை பார்க்கமுடிகிறது.

பஞ்ச பிராணங்கள் உடலைவிட்டு வெளியேறுவது ஒரே சமயத்தில் நடக்காமல் காலப்போக்கில் நிகழ்வதால்தான், சில சமயங்களில், இறந்தவரை "மீண்டும் உயிர்த்தெழச்" செய்ய வெளியிலிருந்து செய்யப்படும் தலையீடுகளுக்கு வாய்ப்பு திறந்திருக்கிறது - ஆனால் குறிப்பிட்ட அந்த கால அளவிற்குள் மட்டுமே அது சாத்தியம். அதேபோல, குறிப்பிட்ட அந்த கால அளவிற்குள், மரணத்திற்குப் பின் உள்ள பயணத்தில் அந்த உயிருக்கு துணைசெய்ய முடியும். அதேபோல, கூடு விட்டு கூடு பாய்வது போன்ற விஷயங்களுக்கும் வாய்ப்பு திறந்திருக்கிறது. இதைப்பற்றி அத்தியாயம் நான்கில் நாம் இன்னும் விவரமாக பார்க்கலாம்.

பரவலாக பார்த்தால், பிராணங்கள் உடலைவிட்டு வெளியேறும் முறையை கீழ்கண்டவாறு நாம் தொகுக்கலாம்:

| | |
|---|---|
| சமான வாயு | சுவாசம் நின்றவுடன், ஐந்து பிராணங்களும் உடலைவிட்டு மெதுவாக வெளியேறுவது ஆரம்பிக்கும். இதில் சமான வாயு உடலின் உஷ்ணத்தை பராமரிப்பதற்கு அடிப்படையானது. இறந்தவுடன் முதலில் நடப்பது என்னவென்றால், இந்த உடலின் உஷ்ணம் குறைய ஆரம்பித்து குளுமை அடைகிறது. உடலின் வெப்பத்திற்கும், சுற்றியுள்ள சூழ்நிலையின் வெப்பத்திற்கும் உள்ள வித்தியாசம் கணிசமாக இருப்பதால், பிராண வாயுவைவிட சமான வாயு வேகமாக வெளியேறுகிறது. சுவாசம் நின்று இருபத்தொன்று முதல் இருபத்து நான்கு நிமிடங்களுக்குள் சமான வாயு உடலைவிட்டு முழுமையாக வெளியேறிவிடுகிறது. |
| பிராண வாயு | சுவாசம் நின்றவுடன் பிராண வாயுவும் உடலைவிட்டு வெளியேற ஆரம்பிக்கிறது. அப்படியென்றால் பிராண வாயு வெளியேற ஆரம்பித்தவுடன் கூடவே சுவாச மண்டலத்தின் இயக்கமும், எண்ணத்தின் செயல்பாடும் குறைய ஆரம்பிக்கிறது. சுவாசம் நின்றவுடன், மரணம் ஏற்பட்ட தன்மைக்கேற்ப நாற்பத்தெட்டு முதல் தொன்னூறு நிமிடங்களுக்குள் பிராண வாயு உடலைவிட்டு முழுமையாக வெளியேறிவிடுகிறது. முதுமையால் ஏற்பட்ட இயல்பான மரணம் என்றால் அறுபத்து நான்கு நிமிடங்களுக்குள் அது |

| | |
|---|---|
| | முடிந்துவிடும். ஆனால் இளமையான உயிர்ப்பான உடல் என்றால், தொன்னூறு நிமிடங்கள் வரை நீடிக்கும். அந்த நேரம் வரைக்கும் சுவாச மண்டலமும் எண்ணங்களும் இயங்கிடும் - வழக்கம்போல் இல்லையென்றாலும் லேசாக இயங்கிடும். அதனால்தான் தகனத்தை குறைந்தது ஒன்றரை மணி நேரத்திற்காவது தள்ளிவைக்க வேண்டும். சுவாசம் நின்றுபோன ஒருவருடைய உடலை பூமியில், அதாவது திறந்த மண்ணில் வைத்தால், வெளியிலிருந்து கொஞ்சம் தலையீடும் இருந்தால், மீண்டும் உயிர்பெறச் செய்ய வாய்ப்பிருக்கிறது. அவருடைய அமைப்பின் மற்ற அம்சங்கள் எல்லாம் சாதகமாக இருந்தால், அப்போது உயிரை மீட்பதற்கு தேவையான சக்தியை மண்ணும் மற்ற பூதங்களும் அளித்து புத்துயிர் கொடுக்கும். அதனால்தான் பழைய காலங்களில், இறந்து கொண்டிருப்பவர்களை வீட்டிற்கு வெளியே நிலத்தின்மேல் வைப்பார்கள், ஒருவேளை உயிர் திரும்பலாம் என்று. ஆனால் இன்று உடலை கட்டிலிலோ, சிமெண்ட் தரையிலோ வைப்பதால், அதற்கான வாய்ப்புகள் மிகவும் குறைவு. |
| உதான வாயு | சுவாசம் நின்றவுடன், 6 முதல் 12 மணி நேரங்களுக்குள் உதான வாயு வெளியேறுகிறது. உதான வாயு பிரிந்தவுடன் உடலின் லேசான தன்மையும் போய்விடுகிறது, திடீரென்று உடல் கனமாகி விடுகிறது. உடலின் எடை அதிகரிப்பதில்லை, ஆனால் கனம் அதிகமாகிவிட்டதை கவனிக்கலாம். காரணம், உதான வாயு பிரிந்து வெளியேறிவிட்டது. அதனால்தான் உயிரோடு இருக்கும் ஒருவரையும், இறந்த உடலையும் சுமந்து போவதில் அவ்வளவு பெரிய வித்தியாசம் தெரிகிறது. |
| அபான வாயு | சுவாசம் நின்றபின், 8 முதல் 18 மணி நேரங்களுக்குள் அபான வாயு உடலைவிட்டு வெளியேறுகிறது. அபான வாயு பெருமளவில் பிரிய ஆரம்பித்தவுடனே, உடலின் புனைறிவு அம்சங்கள் எல்லாம் போய்விடுகிறது. ஒருவருடைய சுவாசம் போன பிறகும், அவரை இறந்தவர் என்று அறிவித்த பிறகும், புலன்களால் அவர் உணர்ந்திட முடியும். எத்தனையோ சந்தர்ப்பங்களில், இறந்த உடலில் கொஞ்சம் அசைவு காணப்படுவதால் சுற்றியிருந்தவர்கள் நடுங்கி போனதுண்டு. புலன்களின் செயல்பாடு இன்னும் இருப்பதால் உடலில் லேசான அசைவுகள் ஏற்படலாம். |

| | |
|---|---|
| வியான வாயு | பாதுகாக்கும் இயல்புடைய பிராணனாகிய வியான வாயு அனைத்தையும் விட மிகவும் மெதுவாக வெளியேறுகிறது. வயதாகி, முதுமையால் முற்றிலும் உயிர்ப்பு குன்றிப் போய் ஏற்படும் மரணமென்றால், பதினொன்று முதல் பதினான்கு நாட்கள் வரை அது தொடர்ந்து பிரிந்து கொண்டிருக்கும். விபத்தின் காரணமாக, உயிர்ப்பு மிக்கவராக இருக்கும்போதே மரணம் ஏற்பட்டால் (உடல் முழுவதுமாக சேதம் அடையாமல் இருந்தால்) இந்த உயிரின் அதிர்வுகள் நாற்பத்தெட்டு முதல் தொன்னூறு நாட்கள் வரை நீடிக்கும். அந்த காலத்திற்கு சில செயல்பாடுகள் தொடர்ந்து நிகழும். உயிரின் ஒரு சில அம்சங்கள் இன்னும் இருக்கும். அந்தக் காலத்திற்குள் அந்த உயிருக்கு உதவியாக சில விஷயங்களை நாம் செய்ய முடியும். அந்த உயிருக்கு உதவும் இந்த வாய்ப்பை நிறைவேற்றும் முயற்சியாகத்தான் நம் இந்திய பாரம்பரியத்தில் மரணத்திற்கான சடங்குகள் அமைந்தன. |

இதையெல்லாம் புரிந்துகொண்ட பிறகு மரணம் என்பதை எப்படி விளக்குவது?

மரணம் என்று இப்போது நாம் எதற்குப் பெயர் கொடுத்து இருக்கிறோமோ - உயிர் உடலைவிட்டு பிரியும் மொத்த நிகழ்வில் - ஒரு குறிப்பிட்ட கட்டம்தான் அது.

பொதுவாக ஒருவரை இறந்துவிட்டார் என்று கண்டறிவது இல்லை, அவர் இறந்துவிட்டதாக அறிவிக்கப்படுகிறார். உங்கள் தூண்டுதல்களுக்கு அவர் பதில் அளிக்காதபோது, அவருடன் எந்த விதமான தொடர்பும் ஏற்படுத்த முடியாது என்றான பின், அவர் இறந்துவிட்டார் என்று நீங்கள் அறிவிக்கிறீர்கள்.

நாம் கூப்பிடுவதற்கு பதில்கொடுக்காமல் இருந்தாலோ, வேறுவிதமாக உடலை சோதித்துப் பார்த்தபோது அவரிடம் எந்த பதிலும் இல்லை என்றாலோ, அவர் இறந்துவிட்டார் என்று ஒரு சாதாரண ஆள் நினைக்கலாம். ஆனால் ஒரு டாக்டர் அதை ஏற்றுக்கொள்ள மாட்டார். அவரைவிட டாக்டருக்கு வாழ்வைப் பற்றி நுட்பமான புரிதல் இருக்கிறது, அதோடு பரிசோதிக்க சூட்சுமமான, மேன்மையான கருவிகள் இருக்கின்றன. முறையான விதத்தில் தலையிட்டால் உயிரை மீட்க முடியும், திரும்பவும் உடலுக்குள் கொண்டுவர முடியும் என்று டாக்டருக்கு தெரியும். ஆனால் உடலை நீத்திடும் நிகழ்வு ஒரு குறிப்பிட்ட நிலையை தாண்டிவிட்டால், அதற்குப் பிறகு மருத்துவரீதியான தூண்டுதல்களுக்கும் அவர் பதில் தரமாட்டார். அப்போது அந்த மனிதரை மருத்துவ ரீதியாக

இறந்தவர் என்று அறிவித்து விடுவார்கள். ஆனால் யோக பாரம்பரியத்தில், நாம் அப்போதும் அதை ஆன்மீகரீதியாக மரணம் என்று ஏற்றுக்கொள்ள மாட்டோம்.

யோக முறைகளிலும் மாந்திரீகத்திலும் கைதேர்ந்த ஒருவருக்கு, மற்றவர்களை எல்லாம்விட வாழ்வைப் பற்றி சிறப்பான, நுட்பமான புரிதல் இருக்கிறது. அவரிடம் இன்னும் சூட்சுமமான கருவிகளும் முறைகளும் இருக்கின்றன. அதன்மூலம் அவரால் உயிரை இன்னும் சிறப்பாக தொடர்பு கொள்ளவும், சாத்தியபட்டால் அதை மீட்கவும் முடியும். அதனால் அவர்கள் அப்போதும்கூட அவரை ஆன்மீகரீதியாக இறந்தவர் என்று அறிவிக்க மாட்டார்கள். ஆனால் உடலை நீத்திடும் இந்நிகழ்வு ஒரு குறிப்பிட்ட நிலைக்கு அப்பாற்பட்டு போய்விட்டால், அவர்களாலும் உயிரை உடலுக்குள் திரும்ப செய்திட முடியாது. இப்போது நடைமுறையில் எல்லாவிதங்களிலும் அந்த மனிதர் முழுமையாக போயே விட்டார் - அவரை திரும்ப கொண்டு வர வாய்ப்பே இல்லை. முன்னோக்கி தொடரும் அவருடைய பயணத்திற்கு[7] துணை செய்திடவே நம்மால் முடியும், அவ்வளவுதான்.

இப்போது நமது கேள்விக்கு வருவோம். "ஒருவர் இறந்தவர் ஆவது எப்போது?" என்ற கேள்விக்கான பதில், பெருமளவில், என்ன நோக்கத்திற்காக அப்படி அறிவிக்கப்படுகிறது என்பதை பொருத்தது. மேலும், உடலை நீத்திடும் வெவ்வேறு நிலைகளில் அந்த உயிருடன் தொடர்புகொள்ள ஒருவர் எந்த அளவுக்கு திறமைசாலியாக இருக்கிறார் என்பதையும் பொருத்தது. உங்கள் திறமை அதிகமானதாக இருந்தால் அந்த சூழ்நிலையில் உங்களது வாய்ப்புகளும் அதிகமாக இருக்கும்.

## சக்கரங்கள்: வெளியேறுவதற்கான வாயில்கள்

பிராணமய கோஷம் என்பது பிராண உடல் அல்லது சக்தி உடலாகும். இதில் சக்தி நகரக்கூடிய பாதைகளுக்கு நாடிகள் என்று பெயர். இந்த நாடிகள் சேர்ந்து பிரியும் சந்திப்புகளுக்கு சக்கரங்கள் என்று பெயர். இதுபோன்று மொத்தம் 114 சக்கரங்கள் உள்ளன, அதில் 112 சக்கரங்கள் உடலிலும், இரண்டு சக்கரங்கள் உடலுக்கு வெளியிலும் உள்ளன. உடலுக்குள் இருக்கும் சக்கரங்களை முக்கியமாக ஏழு வகைகளாக பிரிக்கிறோம், ஒவ்வொன்றிலும் 16 சக்கரங்கள் அடங்கும். இந்த சக்கரங்கள் எந்த அளவுக்கு செயல்படுத்தப்பட்டுள்ளன என்பதை பொருத்தே நம் வாழ்வின் தரமும், தன்மையும் பெருமளவில் நிர்ணயிக்கப்படுகின்றன. அதேபோல்

---

7 பார்க்கவும் - அத்தியாயம் 8: உடலற்ற உயிருக்கு உதவுவது எப்படி?

மரணத்தின்போது, இந்த சக்கரங்கள் வழியாக பிராண சக்தி நகரும் விதத்தைப் பொருத்து உங்களுடைய மரணத்தின் தரமும் தன்மையும் அமைகிறது. அதனால் இந்த பஞ்ச பிராணங்கள் உடலைவிட்டு எப்படி வெளியேறுகின்றன என்பது மட்டுமன்றி, அவை எந்த சக்கரம் அல்லது சக்கரங்கள் வழியாக வெளியேறுகின்றன என்பதும் ஒருவருடைய மரணத்தின் தன்மையை வரையறுக்கிறது.

உங்களுக்குள் நீங்கள் விடுப்பட்டவராக, முக்தி பெற்றவராக இருந்தாலும், உங்களுக்குள் ஒரு குறிப்பிட்ட நிலையை அடைந்தவராக இருந்தாலும், அப்போதும் சுயமாக, விழிப்புணர்வுடன் இந்த பொருள் உடலை நீத்திட ஏராளமான திறமை வேண்டும். இந்த உடலும் உயிரும் பிணைந்து இருப்பது எப்படி, அந்த பந்தத்தின் கட்டுகளை விடுவிப்பது எப்படி என்ற விஞ்ஞானம் உங்களுக்கு புரிந்திருக்க வேண்டும். இல்லையென்றால் உங்களால் விழிப்புணர்வுடன் உடலை நீத்திட முடியாது. யோகப் பாதையில் இருப்பவர்களால் அப்படியே திறந்தவெளியில் சும்மா உட்கார்ந்தபடி உடலை விடமுடியும். அவர்களுக்கு உடலை நீத்திடும் தொழில்நுட்பம் புரிந்துள்ளது, அதனால் சும்மா உடைகளை கழட்டிப் போட்டுவிட்டு போவதுபோல மரணத்தையும் கையாளுகிறார்கள். ஒருவர் எந்தளவுக்கு திறமையுடன் சுதந்திரத்துடன் உடலை நீத்தார் என்பதைப் பொருத்தும், எந்த சக்கரத்தின் வழியாக வெளியேறினார் என்பதைப் பொருத்தும், அந்த மரணத்தை சுற்றியிருக்கும் சூழல் அமையும். இது ஒவ்வொரு மரணத்திற்கும் வித்தியாசப்படும். எளிமையாக புரிந்து கொள்வதற்காக, பொதுவாக நாம் முக்கியமான ஏழு சக்கரங்களைப்[8] பற்றி மட்டும் பேசுவோம். ஒவ்வொன்றுக்கும் அதற்கான பெயரும் அதற்குரிய தனிப்பட்ட தன்மைகளும் உள்ளன.

மூலாதார சக்கரம் மலவாய்க்கும் பிறப்புறுப்புக்கும் நடுவில் அமைந்திருக்கிறது. உடலுக்கு அடிமையாக ஒருவர் வாழ்ந்திருந்தாலோ, அல்லது ஒருவர் பயத்தில் இறந்தார் என்றாலோ - அப்படிப்பட்டவர்கள் மூலாதாரச் சக்கரத்தின் வழியாக வெளியேறுகிறார்கள். பல பேருக்கு இப்படி நடக்கிறது. அதனால்தான் இறக்கும் நேரத்தில் பல மனிதர்களுக்கு மலமும், சிறுநீரும் ஒரு அழுத்தத்துடன் வெளிவரும். அவர்களால் அதை அடக்க முடியவில்லை, அதனால்தான் அப்படி வெளிவருகிறது என்று நம்மில் பலர் நினைக்கிறார்கள். ஆனால் அது அப்படியல்ல. மூலாதாரச் சக்கரத்தின் வழியாக உயிர் வெளியேறுவதால்தான் அப்படி ஏற்படுகிறது. இறப்பதற்கு இது நல்ல வழியே இல்லை. நாம் விரும்பிய நேரத்தில், விரும்பிய விதத்தில் உடலை விட்டுச்செல்லும் திறமை இல்லாவிட்டால்

8 யோக விஞ்ஞானத்தின்படி, உடலில் அமைந்துள்ள ஏழு சக்தி மையங்கள்.

பரவாயில்லை. ஆனால் மரணம் அதுவாக வரும்போது, அதை வரவேற்று, அந்த நிகழ்வை அனுமதிக்க வேண்டியது குறைந்தபட்சத் தேவை அல்லவா? அப்படி இல்லாமல், அதை எதிர்த்து போராடி பயத்தில் சாவது நல்ல மரணமா? பொதுவாக ஒருவர் மூலாதார சக்கரத்தின் மூலம் வெளியேறினால் அது மிகவும் இழிவான மரணமாக கருதப்படுகிறது. ஆனால் சில அபூர்வமான நிகழ்வுகளில், விழிப்புணர்வுடன் மூலாதாரச் சக்கரத்தின் மூலமாக வெளியேறும் ஒருவர் திரும்ப வரும்போது, மகத்தான மாந்திரீக சக்திகளுடன் வந்திட முடியும்.

சுவாதிஷ்டான சக்கரம் பிறப்புறுப்பிலும் அதற்கு கொஞ்சம் மேலேயும் அமைந்திருக்கிறது. சுவாதிஷ்டான சக்கரத்தின் மூலம் ஒருவர் வெளியேறினால் அவர் அசாதாரணமான படைப்பாற்றல் கொண்டவராக மறுபிறவி எடுக்கலாம்.

தொப்புளுக்கு கீழேயே அமைந்திருக்கும் மணிப்பூரக சக்கரத்தின் மூலம் வெளியேறுபவர் மீண்டும் வரும்போது, பெருமளவிலான செயல்களை முறைப்படி செய்யும் திறன் உடையவராக இருக்கமுடியும் - அவர் சிறந்த தொழிலதிபராகலாம் அல்லது மிகச்சிறந்த படைத்தளபதியாகவும் ஆகலாம். அடிப்படையில், அவர் தன்னுடைய அடுத்த பிறவியில் செயல்களை முறைப்படி ஒருங்கிணைப்பதில் வல்லமை மிக்கவராக இருப்பார்.

விலா எலும்புகள் ஒன்றாக சந்திக்கும் இடத்தில் அமைந்திருக்கும் அனாஹதச் சக்கரத்தின் மூலம் வெளியேறுபவர் இசையிலோ அல்லது மற்ற கலைகளிலோ மாமேதையாகிட முடியும் அல்லது அவர் மிகவும் உணர்ச்சிகரமான கவிஞராகவும் இருக்கலாம் அல்லது பலரின் அன்புக்குரிய ஒரு பக்தராகவும் இருக்கமுடியும். மற்ற பரிமாணங்களுக்கும் வழிகாணும் சாத்தியம் அனாஹதச் சக்கரத்திற்கு இருக்கிறது. இதனால் ஒருவர் பல்துறை வல்லுநராகவும் இருக்க முடியும்.

தொண்டைக்குழியில் அமைந்திருக்கும் விஷுத்தி சக்கரத்தின் மூலம் ஒருவர் வெளியேறுவது மிகவும் அரிதானது. ஆனால் அப்படி நடந்தால், அவருக்கு இந்த உலகத்தைப் பற்றியும் அதற்கு அப்பாற்பட்டது பற்றியும் நம்ப முடியாத அளவிற்கான புரிதல் இருந்திடும். அப்படிப்பட்டவர் வாழ்வின் எல்லா அம்சங்களிலும் பயமின்றி முழுமையாக ஈடுபடுவார், அதேசமயம் எதிலும் பற்று வைத்து சிக்கமாட்டார். அப்படிப்பட்டவர்களிடம் பிரமிக்கத்தக்க அளவிற்கு ஒரு தெளிவை நன்றாக காணலாம்.

புருவமத்தியில் இருக்கும் ஆக்ஞா சக்கரம் என்பது உயர்ந்த நிலையில் உள்ளது என்றாலும், பலரும் விஷுத்தியை விட ஆக்ஞா சக்கரத்தின் வழியாக வெளியேறுவதே வழக்கம்.

முழுமையான விழிப்புணர்வுடன் இருக்கும் ஒருவர் உச்சந்தலையில் உள்ள சகஸ்ராரச் சக்கரத்தின் மூலம் வெளியேறுவார். அதுதான் உடலை துறப்பதற்கு மிகச்சிறந்த வழி. வழக்கமாக, பிராணன் அப்படியே சாதாரணமாக விடுபடும். ஆனால் சிலசமயம், மரணத்தின் அந்த தருணத்தில், அதனால் தலையில் ஒரு ஓட்டை ஏற்பட வாய்ப்பிருக்கிறது. நம் உச்சந்தலையில், கபாலத்தில் சிறிய பகுதி ஒன்று இருக்கிறது - பிறந்த குழந்தைகளில் கொஞ்ச காலத்திற்கு அது உருவாகி இருக்காது - அந்த குறிப்பிட்ட இடத்திற்கு பிரம்மரந்திரம் என்று பெயர். சிலபேருக்கு, அவர்கள் உடலை பிரியும்போது அந்த இடத்தில் நிஜமாகவே ஒரு ஓட்டை காணப்படும். ஒரு மனிதன் சகஸ்ரார சக்கரத்தின் மூலம் வெளியேறினால் அவர் முழுமையான விழிப்புணர்வுடன் இருந்திருக்கிறார் என்று அர்த்தம்.

மரணத்தின் அந்த தருணத்தில் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டுமென்றால், வாழ்க்கையையும் விழிப்புணர்வுடன் வாழ்ந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் அந்தக் கணத்தில் நீங்கள் விழிப்புணர்வுடன் இருப்பதற்கு வாய்ப்பே இல்லை. விழிப்புணர்வுடன் இருக்கும் ஒரு மனிதர் தனக்கு எப்படி விருப்பமோ அப்படி வெளியேறலாம். ஆனால் விழிப்புணர்வு இல்லாதவரோ வரையறுக்கப்பட்ட விதத்தில் வேறுவழி இல்லாமல் செத்துப் போகிறார். அவர் வாழும்போதும் கட்டுகளோடு வாழ்ந்தார், இறக்கும்போதும் கட்டுகளோடுதான் இறக்கிறார். மரணத்தின் அந்தக் கணத்தில் ஒருவர் 100 சதவிகிதம் விழிப்புணர்வுடன் இருந்தால் அவருக்கு மறுபிறவி எடுத்திடும் தேவை கிடையாது. அவர் இன்னொரு உடலை எடுக்கவே மாட்டார். அவர் முக்தி அடைந்துவிடுகிறார்.

அத்தியாயம் 3

# மரணத்தின் தரம்

எப்போதுமே இந்த உலகில் இரண்டு மனிதர்கள் தங்கள் வாழ்க்கையை ஒரே மாதிரி வாழ்வதில்லை. அதேபோல், எப்போதுமே இரண்டு பேர் ஒரேமாதிரி இறப்பதும் இல்லை. மனிதர்கள் ஒரே சூழ்நிலையில் இறந்திடலாம், ஒரே காரணத்தால் இறந்திடலாம், அப்படி இருந்தாலும், அவர்கள் ஒரே விதத்தில் இறப்பதில்லை.

## எது நல்ல மரணம்?

சரி இப்போது, மரணத்தில் சில மரணங்கள் நல்லது என்றும் சில மரணங்கள் கெட்டது என்றும் இருக்கிறதா? நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டியது என்னவென்றால், ஒருபோதும் உலகில் எங்கேயும் இரண்டுபேர் தங்கள் வாழ்க்கையை ஒரே விதமாக வாழ்வதில்லை. அவர்கள் ஒரே தாய்க்குப் பிறந்திருக்கலாம், ஒரே வீட்டில் வாழ்ந்து கொண்டிருக்கலாம், ஒரே விஷயங்களை செய்துகொண்டிருக்கலாம், அப்போதுகூட வாழ்க்கையை அவர்கள் உணரும் விதம் ஒரேமாதிரி இருப்பதில்லை. அதேபோல, இரண்டு பேர் ஒரே விதமாக இறப்பதும் இல்லை. அவர்கள் ஒரே சூழ்நிலையில் இறந்திடலாம், ஒரே காரணத்தால் இறந்திடலாம், அப்படி இருந்தாலும், அவர்களின் மரணம் ஒரே விதமாக இருக்காது. இப்போதே இந்த வானம் நம்மேல் விழுந்து அதற்கடியில் நாம் எல்லோரும் நொறுங்கி இறந்து போனால்கூட, அப்போதும் நாம் எல்லோரும் ஒரே விதத்தில் இறந்திட மாட்டோம்.

ஒரு சமயம் இப்படி நடந்தது: பெரிய பணக்காரர் ஒருவர் தன் குடும்பத்திற்காக மிகப்பெரிய வீட்டைக் கட்டினார். கிரகபிரவேசம் செய்தார். பாரம்பரியமாக நம் இந்தியாவில் புதுவீடு கட்டினால் ஒரு சாதுவோ, துறவியோ அல்லது யோகியோ உங்கள் வீட்டுக்கு வந்து அருள்புரிய வேண்டும் என்பது வழக்கம். இப்போதெல்லாம் அப்படி செய்வதில்லை, ஏனென்றால் வீடுகளும் எக்கச்சக்கம் ஆகிவிட்டது, போதிய அளவுக்கு யோகிகளும் இல்லை. அதனால், இந்த பணக்காரர் ஒரு யோகியை

தன் வீட்டிற்கு அழைத்தார். யோகியும் வந்தார். ஒரு மகாராஜாவை வரவேற்பதுபோல அவரை வரவேற்றார்கள். அவருக்கு பாதபூஜை செய்தார்கள், இன்னும் பல பூஜைகள் செய்தார்கள். பிறகு அவருக்கு அறுசுவை விருந்து அளித்தார்கள். கடைசியில் அவர் கிளம்பும் நேரம் வந்தபோது, கணவனும் மனைவியும் ஆசி பெறுவதற்காக அவர் கால்களில் விழுந்தார்கள், அதுதானே பாரம்பரியம். யோகி தன் கையை உயர்த்தி, "முதலில் உன் அப்பா இறந்து போகட்டும், அதற்குப்பின் நீ இறக்க வேண்டும், அதற்குப்பின் உன் பிள்ளைகள் இறந்திட வேண்டும்," என்றார். இவரோ கோபமாக, "என்னது இது அபத்தம்? எங்களுடைய புதுவீட்டிற்கு உங்களை அழைத்து வந்து ஒரு மகாராஜாவைப் போல உபசரித்து, பலமான அறுசுவை விருந்தெல்லாம் பரிமாறினோம். ஆனால், நீங்களோ முதலில் என் அப்பா இறக்கவேண்டும், பிறகு நான் இறப்பேன், அதற்குப்பின் என் குழந்தைகள் இறக்கவேண்டும் என்று சொல்கிறீர்களே? என்ன அபத்தம் இது?" என்றார். யோகி அதிர்ந்து போனார், "ஏன் நான் ஏதாவது தவறாக சொல்லிவிட்டேனா? நல்லதாகத்தானே சொன்னேன். முதலில் உன் அப்பா இறந்து, பிறகு நீ இறந்து, அதற்குப்பின் உன் குழந்தைகள் இறக்கவேண்டும், இது உங்களுக்கு நல்லது இல்லையா? அப்போதுதானே வாழ்வு அதன் சரியான, இயல்பான போக்கில் இருக்கிறது என்று அர்த்தம்? உன் அப்பா இறப்பதற்கு முன் நீ இறந்து போனால் அது நல்லதல்ல. நீ இறப்பதற்கு முன்பாகவே உன் குழந்தைகள் இறந்துவிட்டால் அதுவும் நல்லதே அல்ல. அதனால்தான் முதலில் உன் அப்பா இறக்கவேண்டும், பிறகு நீ இறக்கவேண்டும், அப்புறம் உன் குழந்தைகள் இறக்கவேண்டும்," என்றார்.

சமீபத்தில், கொஞ்சம் காலமாக, மரணத்தின் தரத்தைப் பற்றிய விழிப்புணர்வு அதிகமாகிக் கொண்டிருக்கிறது. வாழ்க்கைத் தரத்தை குறிப்பிட்டுக் காட்ட எப்படி ஒரு அளவுகோல் குவாலிட்டி ஆஃப் லைஃப் இன்டெக்ஸ் இருக்கிறதோ, அதேபோல் மரணத்தின் தரத்தை குறிப்பிட்டுக்காட்டும் குவாலிட்டி ஆஃப் டெத் இன்டெக்ஸ் என்பதை உருவாக்கியுள்ளார்கள். மேலும், மனிதர்கள் தங்களுக்காக "வாழ்க்கைக் குறிக்கோள்கள்" உருவாக்கிக் கொள்வதுபோல், ஒருவர் தனக்கு "மரணக் குறிக்கோள்கள்" உருவாக்கிக்கொள்ள வேண்டும் என்ற விழிப்புணர்வும் அதிகமாகிக் கொண்டிருக்கிறது. இது வரவேற்கத்தக்க மாற்றம்தான்: இருந்தாலும் மரணத்தின் தரத்தைப் பற்றிய மேலோட்டமான புரிதலோடுதான் அவர்கள் அதை செய்கிறார்கள். அவர்களைப் பொருத்தவரை நல்ல மரணம் என்றால் என்ன? வலி இல்லாமல், துன்பம் இல்லாமல் இறக்கவேண்டும், மரணத்துடன் போராடாமல் போகவேண்டும், மரணம் சடாரென்று நடக்கக்கூடாது, எங்கோ

தனிமையில் சாகாமல் தனக்கு நேசமானவர்கள் சுற்றி இருக்கும்போது சாகவேண்டும் - இப்படியெல்லாம் இருந்தால் அது நல்ல மரணம் என்று நினைக்கிறார்கள். அதேப்போல, ஒருவர் திடீரென்று இறந்துவிட்டாலோ, கொடூரமான விதத்தில் இறந்துபோனாலோ அதை கெட்ட மரணம் என்று சொல்கிறார்கள். இவையெல்லாமே மருத்துவரீதியான, சமூகரீதியான கருத்துகள்தான். உயிரின் அடிப்படையில் இதெல்லாம் முக்கியமானதே இல்லை.

"மரணம் எப்படி ஏற்பட்டது" என்பது முக்கியமானது - இதுபோன்ற, உயிர்தன்மையின் அடிப்படையில் முக்கியமான, ஆழமான விஷயங்களை கருத்தில் கொண்டே நம் தேசத்தில் மரணத்தை வகைப்படுத்தினார்கள். இது மிகவும் முக்கியமானது, ஏனென்றால் இறப்பிற்குப் பிறகு என்ன நிகழ்கிறது, இறந்த உயிருக்கு எந்த மாதிரியான உதவியை வழங்கமுடியும் போன்ற விஷயங்கள் அதைப் பொருத்துதான் அமைகின்றன. நமது பாரம்பரியத்தில், மரணத்தை இரண்டே விதமாகத்தான் வகைப்படுத்தினார்கள் - காலத்தே நிகழும் மரணம் அதாவது சுப மரணம் (சும்ரித்யு), மற்றொன்று காலம் தவறிய மரணம் அதாவது அகால மரணம் (அகால மிருத்யு). ஒரு யோகி முப்பது வயதில் முழு விழிப்புணர்வுடன் தன் உடலை நீத்தார் என்றால் அது அகால மரணம் இல்லை. அந்த நேரத்தை அவரே முடிவுசெய்கிறார் என்பதால் அது காலத்தே நிகழும் மரணம்தான்.

ஒருவருக்கு வாழவேண்டும் என்ற நோக்கம் இருக்கிறது, அதாவது அவர் கழிக்கவேண்டிய பிராரப்த கர்மா இன்னும் இருக்கிறது, ஆனால் திடீரென்று, ஏதோ ஒன்று அவரை தாக்கி சாய்த்துவிட்டது என்றால் அது அகால மரணம். அவருடைய நோக்கம் முழுவீச்சில் இருக்கும்போதே அவருடைய உடல் பாழாகிவிட்டால் - அது அகால மரணம். நோக்கமே போய்விட்டது என்றால், அது அகால மரணம் ஆகாது. அந்த உயிருக்கு அது உகந்த காலத்தில் நிகழ்ந்தது என்றுதான் அர்த்தம். உங்களுக்கு 35 வயதா, 65 வயதா அல்லது 95 வயதா என்பது முக்கியமல்ல. நோக்கம் போய்விட்டது என்பதுதான் அடிப்படை. அப்போது உயிரைப் பொருத்தவரை அது காலத்தே நிகழ்ந்த மரணம்தான். என்னால் மிகச்சரியான சதவிகிதத்தை சொல்லமுடியாது, ஆனால் இப்போதெல்லாம் 80 சதவிகிதத்திற்கும் அதிகமான மனிதர்களுக்கு காலத்தே நிகழும் இயல்பான மரணம் ஏற்படுவதில்லை என்று சொல்ல முடியும். அவர்களுடைய நோக்கம் முழுவீச்சில் இருக்கும்போதே, இயற்கைக்கு மாறாக, காலத்திற்கு முன்பே இறந்து போகிறார்கள். இது மிகவும் துரதிர்ஷ்டவசமானது. இதன் தாக்கம் - அதாவது, இறப்பு நிகழும் முறையையும், இறப்பிற்குப்பின் நிகழக்கூடியதையும் இது பாதிக்கிறது.

காலத்தே நிகழும் இயல்பான மரணத்தில் பிராரப்த கர்மா கழிந்துவிட்டது, அதாவது வாழ்க்கையை ஓடவைக்கும் பதிவுகள் தீர்ந்துவிட்டதால் உயிர்ப்பு குன்றிப்போகிறது. பதிவுகள் தீர்ந்து போனவுடன் உயிர் மங்கலாகி, கரைந்து, மெதுவாக பிரிகிறது. இது துன்பமானது அல்ல. இது மிகவும் அழகானது, இனிதானது. ஒருவரின் பிராரப்த கர்மா தீரும்போது அவர் ஒரு மோசமான வாழ்க்கையை வாழ்ந்திருந்தாலும்கூட, கடைசி நொடிகளில் அமைதி மிக்கவராகவும், புரிதல் மிக்கவராகவும், அற்புதமானவராகவும் ஆகிவிடுகிறார். திடீரென்று மனிதர்கள் விவேகத்துடன் வாழ்வதை நீங்கள் கவனிக்கலாம். அவர்களுக்கு சுற்றியுள்ள எதிலும் பற்று இருக்காது. அவர்கள் வாழ்நாள் முழுவதும் வெளிப்படுத்தாத, வழக்கத்திற்கு மாறான ஒரு முதிர்ச்சியை வெளிப்படுத்துவார்கள். அது இயல்பான மரணமாக இருப்பதால்தான் இதெல்லாம் நடக்கிறது. இயல்பான மரணம் என்பது கெட்டது அல்ல. நீங்கள் ஒன்றும் உடலிலிருந்து கட்டாயமாக வெளியேற்றப்படவில்லையே. அது உங்களுக்கும் நல்லது, நீங்கள் உங்களுக்கு பின்னால் விட்டுச் செல்பவர்களுக்கும் நல்லது. உங்களின் உடல் தேய்ந்துபோவதற்குள், உங்கள் பிராரப்த கர்மாவை காலி செய்தால்தான் இதுபோல் இறந்திட முடியும்.

நீங்கள் எவ்வளவு வேகமாக வாழ்க்கையின் ஒரு அம்சத்திலிருந்து இன்னொரு அம்சத்திற்கு நகர்ந்து போகிறீர்களோ, அவ்வளவு வேகமாக உங்களுடைய பிராரப்த கர்மா கழிந்திடும். எண்பது வயதில்கூட ஒரு டீனேஜ்காரர் போல் யோசித்தால், இன்னும் யாரையாவது கவர்ந்திட விருப்பம் இருக்கிறது என்றால், உங்கள் பிராரப்த கர்மா கழிய வாய்ப்பே இல்லை. அதை பதினாறு, பதினெட்டு வயதில் செய்தால் பரவாயில்லை. எண்பது வயதான பின்பும் அதையெல்லாம் விட்டொழிக்காமல், இன்னும் தெருவில் போகிற வருகிற பெண்களையெல்லாம் பார்க்கவேண்டும் என்று போய் உட்கார விரும்பினால், உங்கள் பிராரப்த கர்மா கரைந்திடாது. இப்படி இருந்தால், உங்களுக்கு 100 வயது ஆனாலும் கூட, உங்கள் மரணம் இயல்பான மரணமாக இருக்காது, அது அகாலமாகத்தான் இருக்கும். ஏனென்றால் உடல் முடிவுக்கு வந்திருக்கும், ஆனால் பிராரப்த கர்மா இன்னும் முடிந்திருக்காது. ஒருவரின் மரணம் இயல்பாக ஏற்பட்டால், அவர் இறக்க போகிறார் என்று அவருக்கு தெளிவாக தெரிந்திடும். அவரிடம் வழக்கத்திற்கு மாறான ஒரு விவேகத்தை நீங்கள் பார்க்க முடியும். அந்த வாய்ப்பு இன்று நவீன சமுதாயம் என்று கூறிக்கொள்பவர்களிடம் முற்றிலுமாக அழிந்துவிட்டது. அவர்கள் எல்லாரும் எப்படியாவது, என்ன விலை கொடுத்தாவது முடிவில்லாமல் வாழ்வதற்கு முயற்சிக்கிறார்கள். இந்த காரணத்தால் அவர்களுடைய மரணம் மோசமானதாகவே இருக்கும். உங்களுடைய அழியக்கூடிய இயல்பை ஏற்றுக்கொண்டால் மட்டுமே, நல்லமுறையில் இறந்திடமுடியும்.

இன்னொரு விதமான மரணம் இருக்கிறது, இதற்கு இச்சா மிருத்யு என்று சொல்வார்கள் - அதாவது உங்கள் சுய விருப்பப்படி இறப்பது. ஒருவிதத்தில் பார்த்தால், இதை மரணம் என்று சொல்லமுடியாது. உண்மையில் இது பிறப்பு-இறப்பு எனும் சுழற்சியை கடந்து விடுபடுவதாகும். ஆன்மீக சாதனையில் ஈடுபட்டுள்ள ஒருவருக்கு இப்படி நிகழமுடியும். அவர் தன் சக்திகளின் மீது ஒரு ஆளுமையை அடைந்து, அதனால் பொருள் உடலிலிருந்து தன் உயிர்சக்திகளை விடுவித்துக் கொள்ள முடிகிறது. அதேசமயம், உடலுக்கு எந்த சேதமும் இருக்காது. தன்னுடைய கர்ம கட்டிடத்தின் சாவிகள் எங்கு இருக்கிறது என்று அவருக்கு புரிந்துவிட்டது, அதனால் அதை முழுமையாக பிரித்துக் கழட்டிவிட முடிகிறது. அப்படிப்பட்டவர் முற்றிலும் இல்லாமல் போகிறார். இதுதான் இருப்பதிலேயே மிகவும் உன்னதமான மரணமாகும். இதைத்தான் இந்துப் பாரம்பரியத்தில் *மஹாசமாதி* என்று சொல்கிறார்கள், பௌத்த பாரம்பரியத்தில் *மஹாபரி நிர்வாணா* என்று சொல்கிறார்கள். எளிமையாக சொன்னால், இதை முக்தி என்று சொல்லலாம். அதாவது அவர் பிறப்பு-இறப்பு எனும் உயிர் நிகழ்விலிருந்து முற்றிலுமாக விடுபட்டு போகிறார். உடலையும் மனதையும் ஒன்றாக பிடித்து வைக்கும் கர்ம கட்டமைப்புகள் எல்லாவற்றிலிருந்தும் விடுபட்டு போகிறார். ஏற்கனவே பார்த்த உதாரணத்தை போல, ஒருவர் குமிழியை முழுமையாக உடைத்திட வேண்டும். ஆன்மீகத் தேடலில் இருக்கும் ஒவ்வொருவருக்கும் உள்ள உச்சக்கட்ட குறிக்கோள் இதுவே.

## மரணத்தை முன்கூட்டியே கணிக்க முடியுமா?

மக்கள், ஜோசியரிடம் போய் கேட்கும் வழக்கமான கேள்விகளில் முக்கியமான ஒன்று: "நான் எவ்வளவு காலம் உயிர் வாழ்வேன்?" "எப்போது இறப்பேன்?" வாழ்க்கை என்பது ஒரு முறையான கணக்குப்படி ஓடுகிறது என்றால், அது எப்போது முடியும் என்பதையும் உறுதி செய்யமுடியுமா? இன்னும் குறிப்பாக சொல்லப்போனால், நாம் ஏற்கனவே பார்த்தபடி, வாழ்க்கையின் சாஃப்ட்வேராகிய கர்மாதான் ஒருவரின் ஆயுள்காலத்தை நிர்ணயிக்கிறது. அப்படியென்றால், எப்படியாவது அதை ஆராய்ந்து மரணத்தை முன்கூட்டியே கணித்து சொல்லமுடியுமா?

கர்மா என்பது உங்களுடைய பொருள் உடலிலும், மன உடலிலும் பதியப்பட்டு இருப்பதுபோல், உங்களுடைய சக்தி உடலிலும் பதியப்பட்டுள்ளது. நமக்கு ஒதுக்கப்பட்ட பிராரப்த கர்மா அதன் முடிவை நெருங்கும்போது, பிராண உடலுக்கு பொருளுடலோடு ஒட்டியிருக்கும் திறன் குறைய ஆரம்பிக்கிறது. பொருள் உடல் தன் உயிர்ப்பை இழக்க ஆரம்பிக்கிறது, அதேசமயம் சூட்சும உடலின் உயிர்ப்பு அதிகமாகிறது.

ஏனென்றால் பொருள் உடலுக்கு சூட்சும உடலின் மேலிருந்த பிடி தளர்ந்துவிட்டது. அதனால்தான், உடலுக்கு அடிமையாக வாழ்ந்திருந்த ஒரு மனிதர்கூட மரணத்தை நெருங்கிய கடைசி நாட்களில் ஒரு தெய்வீகமான அமைதியுடன் இருப்பதைக் காணமுடியும். அப்படிப்பட்டவர் எதிர்பாராத விதத்தில் விவேகத்துடன் காணப்படுவார். வழக்கமாக, ஒருவரின் விழிப்புணர்வு ஆழமாகும் போதுதான் அப்படி நடக்கும். ஆனால் ஒருவரின் இறப்பு இயல்பாக நிகழும்போது, கொஞ்சமான விழிப்புணர்வுடனேயே - குறைந்தது ஆறிலிருந்து எட்டு மாதங்களுக்கு முன்பாகவே - மரணம் வரப்போவது அவருக்கு தெளிவாக தெரிந்திடும். தங்களை அறியாமலேயே அதைப்பற்றி பேசிடுவார்கள். வினோதமாக எதையாவது சொல்ல ஆரம்பிப்பார்கள், விசித்திரமாக நடந்து கொள்வார்கள். இது ஏதோ புத்திசுவாதீனம் குறைவதால் நடப்பதல்ல. தங்களை அறியாமலேயே அதையும் இதையும் உளறுவார்கள். அப்புறம் அவர்கள் இறந்தபின் மற்றவர்கள் அதை திரும்பிப் பார்க்கும் போது, "அட அவர் இப்படி சொன்னாரே, அப்படி செய்தாரே" என்று சொல்வார்கள், தங்களுக்கு வர இருக்கும் மரணத்தைப் பற்றி அவர்கள் அறிந்திருந்ததை குறிக்கும்படி அந்த செயல் இருந்திருக்கும். என்னுடைய மாமா ஒருவருக்கு தன்னுடைய மரணத்தின் துல்லியமான தேதியும், நேரமும் நன்றாக தெரிந்திருந்தது.

மரணம் ஒன்றும் திடீரென்று நடப்பது அல்ல. அது காலப்போக்கில் அமையப் பெறுகிறது. பல சமயங்களில், இந்த உடலே அதை அமைக்க ஆரம்பிக்கிறது. அந்த மனிதருக்கு அதைப்பற்றி முழுமையான கவனமில்லாமல் இருக்கலாம், அதை புரிந்துகொள்ளும் அளவிற்கு மனம் விழிப்பாக இல்லாமல் இருக்கலாம், ஆனால் உடல் அதை பலவிதங்களில் வெளிப்படுத்தும்.

ஒரு சில ஆய்வுகள் இதை நமக்கு சொல்கின்றன - விபத்து, கொலை போன்ற கோரமான நிகழ்வுகளில் இறந்தவர்களுடைய ரத்தத்தை தற்செயலாக பரிசோதித்தபோது இது புரிந்தது. தாங்கள் இறக்கப் போகிறோம் என்றெல்லாம் இவர்களுக்கு தெரியாது, தற்செயலாக, மரணம் நிகழ்வதற்கு கொஞ்சம் முன்னதாக எதற்காகவோ ரத்தப்பரிசோதனை செய்திருக்கிறார்கள். அந்த பரிசோதனைகளின் ரிப்போர்ட்டுகள் கன்னா பின்னாவென்று இருக்கின்றன, எதை எதையோ சொல்கின்றன. இது எந்த அளவுக்கு உண்மை என்று எனக்கு தெரியவில்லை, ஆனால் இது சாத்தியம்தான். அந்த ரிப்போர்ட்டுக்கும் உடல் பிரச்சனைகளுக்கும் எந்த சம்பந்தமும் இருந்திருக்க அவசியமில்லை. உடல் தன் முடிவை நெருங்குவதால், மொத்த உடலும் மரணத்தின் மொழியை பேச ஆரம்பித்துள்ளது, அதனால்தான் அப்படிக் காட்டியுள்ளது.

அப்படி என்றால் மரணத்தை முன்கூட்டியே அறிய முடியுமா? அது சாத்தியம்தான், ஆனால் அதற்கான வாய்ப்பு மிகவும் குறைவானது, அதோடு மிகவும் மிகைப்படுத்தப்பட்டதும் ஆகும். ஒரு தென்னை மரத்தைப் பார்த்தால் அதற்கு என்ன வயதாகிறது, எவ்வளவு ஆரோக்கியமாக இருக்கிறது என்று என்னால் சொல்லமுடியும். அதில் முதல் பூவும், முதல் காயும் எப்போது வரும் என்றும் சொல்லமுடியும். தோராயமாக, அது எப்போது இறக்கும் என்றும் முன்கூட்டியே சொல்லமுடியும். இதையெல்லாம் நான் இப்போதே சொல்லலாம், ஆனால் இப்போதைக்கும் அந்த நேரத்திற்கும் நடுவில் நீங்கள் அந்த தென்னைமரத்தை வெட்டிவிட்டால், என்னுடைய கணிப்பு தவறாகிவிடும் அல்லவா? இது மனிதர்களுக்கும் பொருந்தும். உங்கள் ஜாதகம் என்னதான் சொன்னாலும், ஒருவர் சும்மா அப்படியே இறந்துபோக முடியும். நேற்றைய தினம் எவ்வளவோ பேர் விபத்தாலோ அல்லது நோயாலோ அல்லது இதைப்போன்ற காரணத்தினாலோ இறந்துவிட்டார்கள். அவர்கள் எல்லோரும் நேற்று இறக்கப் போகிறார்கள் என்று அவர்களுடைய ஜாதகங்கள் சொன்னதா என்ன? இல்லையே. அவர்கள் "நீடூழி வாழ்வார்கள்" என்றுதான் ஜாதகம் சொல்லியது, ஆனால் இருபத்தைந்து வயதிலேயே போய்விட்டார்களே.

இதை நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம்: பாரம்பரியமாக, நம் நாட்டில், தங்களுடைய குழந்தைகளுக்கு கல்யாணம் செய்து கொடுப்பதற்கு முன்பாக, அவர்களுடைய ஜாதகங்களை ஆராய்ந்து பார்ப்பார்கள். அந்த இரண்டு பேருடைய குணங்களும் ஒருவருக்கு ஒருவர் பொருந்திட வேண்டும் என்று உறுதி செய்வதற்காக அப்படி செய்கிறார்கள். தங்களின் குழந்தைகளுக்கு ஒரு தீர்க்கமான செழிப்பான வாழ்க்கையை நிச்சயப்படுத்துகிறார்கள். அப்படி இருந்தாலும், பல நேரங்களில், அவர்களின் பெண்ணை கல்யாணம் செய்துகொண்டவர் சில நாட்களிலேயே இறந்துபோனது உண்டு. அந்த மாப்பிள்ளை மூன்றே நாட்களில் இறந்து போய்விடுவார் என்று தெரிந்திருந்தால், நிச்சயமாக ஒருபோதும் தங்கள் பெண்ணை அவருக்கு கொடுத்திருக்க மாட்டார்கள் இல்லையா? அப்படியென்றால் இந்தக் கணிப்புகளுக்கு எந்த அடிப்படையும் இல்லை என்று நான் சொல்லவில்லை. இந்த கணிப்புகள் நிஜமாவதற்கான வாய்ப்புகள் மிகவும் குறைவு. அதோடு இந்த கணிப்புகள் அவ்வளவு முக்கியமல்ல, அது மிகைப்படுத்தப்பட்டுள்ளது.

ஒரு சூரிய சுழற்சி என்பது தோராயமாக 12 வருடங்கள் ஆகும். ஒருவரின் சூரிய சுழற்சிகளை சார்ந்துதான் அவருடைய மரணம் அமைகிறது. பெரும்பாலும், ஒரு சூரிய சுழற்சியின் குறிப்பிட்ட காலகட்டத்திற்குள் உங்களுடைய மரணம் அமையப் பெறுகிறது. அதன் தேதியும் நாளும் முக்கியமானதல்ல, ஏனென்றால் அது துல்லியமாக அப்படியே நடந்திட

போவதில்லை. அது கொஞ்சம் முன்னும் பின்னும் இருக்கமுடியும். சற்று அதிகமான நேரத்திற்கு உங்கள் சுவாசம் நீடிக்கலாம், அல்லது ஒரு டாக்டர் கொடுத்த மருந்தால் நீங்கள் அதையும் தாண்டி வாழலாம் - இப்படியெல்லாம் நடக்க வாய்ப்பிருக்கிறது. ஆனால், தேவையான உணரும் திறன் உங்களுக்கு இருந்தால், ஒருவரை பார்த்தாலே சூரிய சுழற்சியின் எந்த காலகட்டத்தில் அவர் காலமாவார் என்று சுலபமாக சொல்லிவிடலாம். என் அனுபவத்திலேயே இப்படி நடந்திருக்கிறது - அதாவது ஒரு குறிப்பிட்ட சமயத்தில் ஒருவர் இறக்கப்போவது போல் தோன்றலாம், அவருடைய மருத்துவ ரிப்போர்ட்டில் கூட மரணத்தின் அறிகுறி இருக்கலாம், அப்படியிருந்தாலும் இப்போதைக்கு அவர் இறக்கமாட்டார் என்று நான் சொல்லியிருக்கிறேன். ஏனென்றால், அவர் தன்னுடைய சூரிய சுழற்சியின் சரியான காலகட்டத்தில் இல்லை. சூரிய சுழற்சியில் அவருக்காக வரையறுக்கப்பட்ட குறிப்பிட்ட காலகட்டத்தில் கூட, அந்த நோயையோ சூழ்நிலையையோ அவர் கடந்துபோய்விட்டால், ஒருவேளை அவர் இறக்காமல் வாழ்வை தொடரக்கூடும். இன்னும் சில சுற்றுகள் நடக்கும்வரை மரணம் தள்ளிவைக்கப்படலாம்.

நமது வரலாற்றில் எத்தனையோ சந்தர்ப்பங்களில் யோகிகள் தங்கள் உடலை விடுவதற்கான குறிப்பிட்ட நேரத்தை அவர்களே முடிவு செய்திருக்கிறார்கள். சித்திகள் கொண்ட யோகிகள் மட்டுமல்ல, அரசர்களும் மற்றும் பலரும்கூட தங்கள் மரணத்தின் நேரத்தை தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். எல்லோருக்குமே பீஷ்மரின் கதை நிச்சயம் தெரிந்திருக்கும். மகாபாரதப் போரில், அவருடைய உடல் முழுவதுமாக அம்புகளால் துளைக்கப்பட்டு இருந்தது. (அவர் அம்புப் படுக்கையில் கிடந்தார் என்பது கவித்துவத்திற்காக சொல்லப்பட்டிருக்கலாம். நிஜத்தில் அவருக்கு அம்புகள் உருவாக்கிய காயங்கள் ஏராளமாக இருந்தன). அப்படி இருந்தாலும் அவர் குறிப்பிட்ட நேரம் வரை உயிருடன் தாக்குப்பிடித்தார். அவருடைய காலக்கட்டம் வரவில்லை, அதற்காக காத்திருந்தார். சூரிய சுழற்சியின் குறிப்பிட்ட காலகட்டத்தில் உயிர்விட விரும்பியதால், உத்தராயணத்தில்[1] இறப்பதற்காக காத்திருந்தார்.

அடிப்படையில், முன்கூட்டியே கணித்தல் என்றால் என்ன? ஒரு நிகழ்வு நடந்திடுவதற்கான சாத்தியக்கூறுகளை ஒரு சில விஷயங்களின் அடிப்படையில் எடைபோட்டு கணிப்பதை பற்றியதே அது. அது துல்லியமாகவும் இருக்கமுடியும். இப்போது வானத்தைப் பார்த்தால், இன்றைக்கு மழை பெய்யுமா பெய்யாதா என்று நான் சொல்லமுடியும். 90 சதவிகித நேரங்களில் நான் சரியாகவே இருந்திருக்கிறேன், சிலசமயம்

1 டிசம்பரில் குளிர்கால கதிர்த்திருப்பம் முதல் ஜுன் மாதத்தில் கோடைகால கதிர்த்திருப்பம் வரை உள்ள ஆறு மாதக் காலங்கள்.

தவறாகவும் இருந்திருக்கிறேன். வாழ்க்கையைப் பொருத்தவரைக்கூட இப்படித்தான். கனகச்சிதமான கணிப்பு என்று எதுவுமே இல்லை, ஆனால் உங்கள் அறிவும் புரிதலும் எவ்வளவு சிறப்பானதாக இருக்கிறதோ, உங்கள் கணிப்புகளும் அவ்வளவு துல்லியமாக இருக்கமுடியும். மரணத்தை கணித்திடுவதும் இப்படித்தான்.

உதாரணமாக, ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்துக்கு ஒரு பொருள் பறந்து சென்று விழுகிறது என்று வைத்துக்கொள்வோம். இப்போது அதனுடைய வேகம், கோணம், அதன் சூழ்நிலை, இதையெல்லாம் கவனித்தால் அது எந்த இடத்தில் விழுந்திடும் என்று சொல்லமுடியும். ராக்கெட், ஏவுகணை, பீரங்கி, கோல்ஃப் பந்து, இவையெல்லாம் செயல் படுவதே அவற்றின் வேகத்தையும் கோணத்தையும் பொருத்துத்தான். அதேபோல உங்களுடைய சக்தியை கவனித்துப் பார்த்து, உங்களுடைய பிராரப்த கர்மாவை எப்படி கழிக்கிறீர்கள் என்பதை பார்த்து, அதோடு மற்ற அம்சங்களையும் பார்த்து, "சரி இந்த வாழ்க்கையின் போக்கு இப்படித்தான் இருக்கும்," என்று சொல்லலாம். இந்த அடிப்படையில்தான் நம் கலாச்சாரத்தில் இந்த மாதிரி விஷயங்களில் கைதேர்ந்தவர்கள், ஒருவரை பார்த்தாலே அவர் மரணத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறார் என்று சொல்லிவிடுவார்கள். அதனால், "நீ காசிக்குப் போய் விடுவது நல்லது," என்று சொல்வார்கள். ஆனால் காசிக்குப் போயும் கூட, சிலர் அங்கேயே இருபது முப்பது வருடங்கள் வாழ்ந்துவிட்ட கதைகளும் உண்டு, அது வேறு விஷயம்.

நுட்பமான கணக்குகள் போட்டுப் பார்த்து உங்கள் உடல் எவ்வளவு வருடங்களுக்கு நீடிக்கும் என்று ஒருவரால் சொல்லமுடியும். அதேசமயம், இதற்கு நடுவில் நீங்கள் ஈஷா யோகா[2] செய்ய ஆரம்பித்தால், ஆருடம் சொன்னவரை ஆச்சரியத்தில் ஆழ்த்தமுடியும். ஏனென்றால், அந்த பயிற்சிகளால் உங்கள் வாழ்க்கையின் போக்கையே மாற்றிவிட முடியும், அதை அவர் தன் கணக்கில் சேர்த்திருக்க மாட்டார் அல்லவா? அதனால்தான் பாரம்பரியமாகவே ஜோசியர்கள், "நீங்கள் ஆன்மீகப் பாதையில் இருக்கிறீர்கள் என்றால் உங்களுக்கு கணித்துச் சொல்ல மாட்டோம்," என்பார்கள். ஏனென்றால் இந்த ஆன்மீகப் பயிற்சிகளால் அவர்களுடைய கணக்குகளை குலைக்கிறீர்கள். நீங்கள் அவர் சொன்னதற்கு முன்பாகவே இறக்கமுடியும் அல்லது பலகாலம் கழித்தும் இறக்கமுடியும். அவர் சொன்ன மற்ற விஷயங்களும் ஒருவேளை நடக்கலாம், நடக்காமலும் போகலாம்.

---

2 சத்குரு கற்றுத்தரும் பயிற்சிகள்.

கணிப்புகள் என்பவை துல்லியமாகவும் இருக்க முடியும், தவறாகவும் அமைய முடியும். ஆனால் மரணம் நெருக்கமாக இருக்கும்போது, அதை பலவிதங்களில் உணர்ந்திட முடியும். உங்களுக்கு மிருகங்களைப் பற்றிய ஆர்வம் இருந்தால், சில பிராணிகள் மரணம் வரும் முன்பே அதை அறிந்திடும் என்பதை கவனித்திருப்பீர்கள். நாய், பூனை, நாகப்பாம்பு, இன்னும் பல மாமிச உண்ணிகள் - இவையெல்லாம் மரணத்தை மோப்பத்தால் அறிந்திடும். ஒரு விதத்தில் பார்த்தால், மரணத்திற்கு என்று ஒரு வாசனை உள்ளது. பொருள்தன்மையில் சூட்சுமமாக இருக்கும் எல்லா அம்சங்களுக்கும் அதற்கென்று ஒரு வாசனை இருக்கும்.

மாமிச உண்ணி விலங்குகள் எல்லாமே சிறப்பான மோப்ப சக்தியை கொண்டிருக்கும். அவை உயிருடன் பிழைத்திருப்பதே தங்கள் நாசிகளை நம்பித்தான். அவர்களுக்கு பார்வைத் திறனும் கேட்கும் திறனும் இருந்தால்கூட, அது மோப்ப சக்தியைபோல் அவ்வளவு கூர்மையாக இருப்பதில்லை. அதனால் எதையாவது தெரிந்துக்கொள்ள விரும்பினால், அந்தப் பிராணிகள் பார்ப்பதில்லை - சும்மா வாசனையிலேயே புரிந்து கொள்வார்கள். அந்தளவு கூர்மையான மோப்ப சக்தி இருப்பதால், பெரும்பாலான மாமிச உண்ணிகளுக்கு மரணத்தின் வருகை தெரிந்திடும். அவர்களால் முன்கூட்டியே மரணத்தை மோப்பம் பிடித்துவிட முடியும். மாதங்களுக்கு முன் அல்ல, கண்டிப்பாக 48 நாட்களுக்கு முன்பாக புரிந்துகொள்ள முடியும். இதை மனிதர்களாலும் புரிந்துகொள்ள முடியும். உதாரணமாக, நமது பிரம்மச்சாரிகள் கடைபிடிப்பது போன்ற உணவு முறையால் - இதுபோன்ற விஷயங்களை வாசனையால் அறிந்திடும் கூரிய திறனை மிகவும் சுலபமாக வளர்த்துக்கொள்ள முடியும்.

பஞ்ச பிராணங்கள்[3] உடலைவிட்டு வெளியேற ஆரம்பிக்கும்போது, அதற்கென்று தனிப்பட்ட வாசனை இருக்கும். இன்று, நவீன விஞ்ஞானம்கூட இதை அறிய ஆரம்பித்துள்ளது. மனிதர்களுக்கு தனித்தன்மை வாய்ந்த மரண வாசனை இருக்கிறது என்று கண்டுபிடித்துள்ளார்கள். இதைப் பயன்படுத்தி மனிதப் பிணங்களை தேடிக் கண்டுபிடிக்க நாய்களுக்கு பயிற்சி தருகிறார்கள். மனிதர்களின் மரண வாசனையில் அடங்கியுள்ள எட்டு முக்கியமான ரசாயன கலவைகளை கண்டுபிடித்துள்ளார்கள். ஏனோ தெரியவில்லை, பன்றிகளுக்கும் நமக்கும் இது பொதுவாக இருக்கிறதாம்!

ஒரு பேயைக்கூட மோப்பத்தால் அறியலாம். நீங்கள் பேய் என்று சொல்வது பொருள் நிலையிலிருக்கும் ஒரு சூட்சுமமான வடிவம்தான், அதனால் அதை வாசனையால் அறியமுடியும். எல்லா நாய்களும் இதை

3 அத்தியாயம் 2ல், "நிகழ்வல்ல இது தொடர்நிகழ்வு" என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்

செய்கிறது. பேய் என்று சொல்லப்படும் உடலற்ற உயிர் ஒரு இடத்தில் இருந்தால், உடனே நாய்கள் குரைக்க ஆரம்பிக்கும். அதை அந்த நாய் மோப்பம் கண்டுவிட்டது. நாயால் அதைப் பார்க்க முடியாது, ஆனால் அந்த வாசனையை அறிய முடியும். அந்த நாய்க்கு அங்கே ஏதோ நிகழ்கிறது என்று புரிகிறது, ஆனால் சுற்றிலும் என்ன நடக்கிறது என்று பார்க்க முடியவில்லை, இதனால் மிகவும் பதற்றமாகிவிடும். அப்படியே ஒரு மூலையில் போய் உட்கார்ந்து, தன் வாலை கால்களுக்கு நடுவே வைத்துக்கொண்டு குரைக்கும். இருந்தாலும், மரணத்தின் அறிகுறியாக இருப்பது வாசனை மட்டுமல்ல. மரணம் வருவதை பார்க்கவும் முடியும்.

நம்முடைய யோக மையத்தில் உள்ள ஆசிரமவாசி ஒருவருக்கு இப்படி நடந்தது. ஒரு நாள் ஈரோட்டில் நடந்த ஒரு பிரம்மாண்ட நிகழ்ச்சிக்கு முன், நமது ஈஷா யோகா ஆசிரியர்கள் மூன்று நான்கு பேருடன் நிகழ்ச்சி ஏற்பாடு பற்றி பேசிக்கொண்டிருந்தேன். அதில் ஒரு ஆசிரியரான இந்த ஆசிரமவாசியும் அங்கே நின்று கொண்டிருந்தார். அவருடைய மனைவியும் ஒரு ஆசிரியர்தான், அவரும் அங்கே இருந்தார். நான் அவரைப் பார்த்தேன், ஆனால் நான் ஒன்றும் செய்யவில்லை. நான் அவரை கண்டுகொள்ளவே இல்லை. பொதுவாக நான் ஒருவரை பார்த்தேனென்றால், ஒருபோதும் அவரை பொருட்படுத்தாமல் இருக்கவே மாட்டேன். என்னுடைய குணத்திலேயே அது கிடையாது. அவர் யாராக இருந்தாலும், தலையையாவது அசைப்பேன், ஒரு நமஸ்காரமோ ஒரு புன்னகையோ - அந்த அளவுக்காவது செய்வேன். அவர்கள் அங்கே இருப்பதை ஏதோ ஒரு விதத்தில் நிச்சயம் அங்கீகரிப்பேன். எப்போதுமே அப்படித்தான். அதனால் நிகழ்ச்சி முடிந்தபிறகு சடாரென்று இந்த விஷயம் என் நினைவுக்கு வந்தது. "நான் ஏன் இப்படி செய்தேன்? ஏன் அவரை கண்டுகொள்ளவில்லை? ஏன்?" என்று யோசித்தேன். அப்புறம் அடுத்த நாள் மாலையில், "அவர் எங்கே?" என்று கேட்டேன். அவர்கள், "அவர் இமயமலைக்கு போய் இருக்கிறார்," என்றார்கள். அதோடு நான் விட்டுவிட்டேன், அதன்பிறகு கவனம் செலுத்தவில்லை. எங்கள் வாழ்க்கை இப்படித்தான். ஈஷாவில் நிகழ்வுகள் நிகழ்ந்திடும் வேகத்தில் எதையும் அசைபோட்டு பார்க்க நேரம் இருப்பதில்லை. அன்றைக்கு அதை அசைபோட்டுப் பார்ப்பதற்கு கொஞ்சநேரம் கிடைத்திருந்தால், அது வேறு மாதிரி இருந்திருக்கும். நான் அதைப் பற்றி யோசித்துவிட்டு அப்படியே விட்டுவிட்டேன். மூன்று நாள் கழித்து அவர் இமயமலையில் ஒரு நதியில் மூழ்கிவிட்டார்.

என் கண்முன் நின்றபோது, அவரின் இருப்பு குறைவாக இருந்தது எனக்கு அப்பட்டமாக தெரிந்தது. அவர் என் முன் உடலோடு நின்று கொண்டிருந்தாலும், நான் அவரை சட்டை செய்யவில்லை. மரணம் நெருக்கமாக இருக்கும்போது, உடலின் வரையறுக்கப்பட்ட எல்லைகள்

திட்டவட்டமாக இல்லாமல் மங்கலாக இருக்கும். இதனால் ஒருவருடைய பொருள்ரீதியான இருப்பு உங்கள் பார்வையில் தெளிவாக இல்லாமல் மங்கலாக தெரியும். ஒரு பொருளுக்கு திட்டவட்டமாக வரையறுக்கப்பட்ட எல்லைகள் இருப்பதால்தான், நம்மால் அதை உணர்ந்திட முடிகிறது; அந்த எல்லைகள் மங்கிடும்போது, நம் பார்வையில் அதை நாம் உணர்வதும் குறைகிறது.

நான் நிகழ்ச்சிக்காக மேடையின் மேல் போவதில் அந்த அளவுக்கு ஈடுபட்டிருந்தேன். இல்லாவிட்டால் கொஞ்சம் கவனம் செலுத்தியிருந்தால், அப்படியே அவரிடம் சொல்லியிருப்பேன். பொதுவாகவே, அந்த நாட்களிலாவது, ஆசிரமவாசிகள் யாராவது இமயமலை அல்லது அதுபோன்ற இடங்களுக்கு போக வேண்டுமென்றால், எப்போதும் என்னிடம் சொல்லிவிட்டுத்தான் போவார்கள். ஆனால் இவர்கள் - இந்த ஆசிரமவாசி, அவரின் மனைவி, இன்னும் சிலபேர் - என்னிடம் சொல்லாமல் போக முடிவுசெய்தார்கள். அவருடைய மரணம் ஒரு விபத்தாக நடந்திருக்கிறது. ஆனால், அப்படி நடந்திருக்காவிட்டாலும், வேறு ஏதாவது விதத்தில் அது நடந்திருக்கும். அவர் அதை நோக்கித்தான் போய்க் கொண்டிருந்தார். அவர் போய்க் கொண்டிருப்பது அவ்வளவு அப்பட்டமாக இருந்தது, ஆனால் அந்த சமயத்தில் நான் போதுமான கவனம் செலுத்தவில்லை.

அப்படியென்றால், ஒரு சாதாரண மனிதன் ஒருவருக்கு வரப்போகும் மரணத்தை முன்கூட்டியே கணிக்க ஏதாவது அறிகுறிகள் இருக்கிறதா? ஆமாம், நிச்சயமாக இருக்கிறது. வாழ்விலிருந்து மரணத்திற்கு நகர்ந்திடும் நிகழ்வு என்பது, ஓரளவுக்கு அசைந்து இயங்கும் நிலையிலிருந்து ஒருவித அசைவற்ற நிலைக்கு மாறுவதாகும். அது நிகழும்போது, உங்களுக்குள் சில விஷயங்களை நீங்கள் நிச்சயமாக கவனிக்க முடியும். குறிப்பிட்ட சில அறிகுறிகள் இதை உங்களுக்கு அறிவிக்கலாம், ஆனால் இது மிகவும் நுட்பமான ஒரு நிகழ்வாக இருப்பதால், கணிப்பு தவறாக போவதற்கு வாய்ப்பு எப்போதுமே இருக்கிறது. இது சிரமமாக இருப்பதற்கு இன்னொரு காரணம், மனிதர்கள் இப்போதெல்லாம் தினசரி வாழ்வில் தங்களுடைய உடல் என்ன சொல்கிறது என்பதை கவனிக்கும் உணர்வில்லாமல் போய்விட்டார்கள். இந்த உடல் எப்போதும் மாறிக்கொண்டே இருக்கிறது - தினம் தினம் மாறிக்கொண்டே இருக்கிறது - ஒரு நாளுக்குள்ளேயே இந்த உடல் மாறிக்கொண்டிருக்கிறது. நாம் நவீனமயமாகி விட்டதால், நமக்கு இந்த அம்சங்கள் பற்றியெல்லாம் ஒரு விஷயமும் தெரிவதில்லை. பெரும்பாலானவர்களுக்கு காலண்டரை பார்க்காமல், பௌர்ணமி எப்போது, அமாவாசை எப்போது என்று சொல்ல தெரியாது. ஆனால், இந்த உடல் இதையெல்லாம் தெளிவாக புரிந்துகொள்ளும், அதை

வெளிப்படுத்தும். இந்த உடல் சொல்வதை நீங்கள் கவனித்தால், நிச்சயமாக இந்த உடல் எதை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறது என்று உங்களுக்கு புரிந்திடும்.

உங்களுடைய புலன் உறுப்புகளில் எளிமையான அறிகுறிகளை கவனிக்கலாம். உதாரணமாக, ஒருவர் மரணத்தை நெருங்க ஆரம்பித்தவுடன், அவரால் தன்னுடைய மூக்கின் நுனியை பார்க்கமுடியாது. சாதாரணமான நேரங்களில், ஒருவருடைய மூக்கு சின்னதாக இருந்தாலும் கூட, அவரால் மூக்கு நுனியை பார்க்கமுடியும். ஆனால் மரணத்தின் நிகழ்வு ஆரம்பித்த பிறகு, விழிகளால் பார்வையை குவிக்க முடியவில்லை. *புருவமத்திய சாதனையில்*[4] ஈடுபடுபவர்களாக இருந்தால், அவர்கள் எதிர்பாராதவிதமாக விழிகள் கழண்டு போனதுபோல் சுழன்று அலைவதை உணர்வார்கள். விழிகளால் அங்கே கவனிக்கவே முடியாது. அறிகுறிகள் சுவாசத்திலும் தென்படும். சுவாசிக்கும்போது கவனமாகப் பார்த்தால், மரணம் நெருங்க நெருங்க, மூச்சு நுரையீரலின் கீழ் அடுக்குக்குள் நுழைவதில்லை என்று தெரியும். பெரும்பாலும் மேலடுக்கிலிருந்தும் நடு அடுக்கிலிருந்தும் மட்டும் சுவாசம் நிகழும். உங்களுடைய உடல் உறுப்புகள் ஒவ்வொன்றாக தங்கள் இயக்கத்தை நிறுத்த இது உதவியாக உள்ளது. அதேசமயம், உங்களுக்கு ஒருவேளை ஆஸ்துமா இருக்கலாம் அல்லது பெரும்பாலான நேரங்களில் அப்படிப்பட்ட சுவாசம் கொண்டவராக இருக்கலாம். உடனே, "ஐயோ, நான் சாகப் போகிறேனோ!" என்று நினைத்துக்கொள்ள வேண்டாம்.

நமது உடலில் வெவ்வேறு விதமான *அக்னிகள்*[5] இருக்கின்றன. உங்கள் விழிப்புணர்வில் அதை கவனிக்க முடிந்தால், அக்னியின் ஒரு சில அம்சங்கள் வெளியேறிவிட்டது என்று தெரியும். அது போய்விட்டால் இன்னும் கொஞ்சம் அவகாசம்தான் இருக்கிறது என்று அர்த்தம். மரணத்தை நான்கு அல்லது ஆறு மாதங்களுக்கு முன்கூட்டியே கவனித்து அறிவது சாத்தியம். அதனால் அந்த சமயத்தில் நீங்கள் தியானத் தன்மையோடு இருந்தால் அமைதியாக ஆனந்தமாக போய்ச் சேர்வீர்கள். இறுதி நிகழ்வும் சிறப்பாக நடக்கும். அதை விட்டுவிட்டு, இதையும் அதையும் செய்து மரணத்தோடு போராடினால், மோசமான விதத்தில் போவீர்கள், அது இம்சையாகவும், வலியாகவும் ஆகிடலாம்.

இதைப்பற்றி இன்னும் சில விஷயங்கள்கூட நாம் சொல்லமுடியும், ஆனால் அப்படி சொல்வதால் ஏற்படக்கூடிய விளைவுகளை புரிந்திருக்கவேண்டும்.

---

4 பிரம்மச்சாரிகளுக்கு கற்றுத் தரப்படும் ஒரு குறிப்பிட்ட பயிற்சி - புருவங்களுக்கு மத்தியில் கண் விழிகளின் கவனத்தை குவிக்கும் பயிற்சியைக் குறிக்கிறது.

5 யோக பாரம்பரியத்தின்படி உடலில் ஏற்படும் ஐந்து அக்னிகளைக் குறிக்கிறது.

இதை கேட்பவர்கள் அதை தங்களோடு வைத்துக்கொள்ள மாட்டார்கள். யாரையாவது பார்த்து, அவருடைய தாடி கொஞ்சம் பழுப்பாக ஆகியிருந்தால், உடனே அவர் மூன்று நாட்களில் இறந்துவிடுவார் என்று ஆருடம் சொல்வார்கள். பாவம், அதுவும் ஒரு அறிகுறி என்று யாரோ அவர்களுக்கு சொல்லியிருக்கிறார் போல. இப்படி, அவர்களால் சும்மாவே இருக்கமுடியாது. அந்த நபரிடமும், அவரை சுற்றியிருப்பவர்களிடமும் அவர் இன்னும் மூன்று நாட்களில் போய் சேர்ந்துவிடுவார் என்று தம்பட்டம் அடிப்பார்கள். அவர்களுடைய ஆருடம் நிஜமாகிறதா என்பதை தெரிந்துகொள்ளவும் பார்ப்பார்கள், அவரை சுற்றி ஒரு கும்பலை சேர்ப்பார்கள். மடத்தனமாக பெரிய குழப்பத்தை உருவாக்குவார்கள். அதோடு அந்த மனிதர் இறக்கவில்லை, உயிருடன் இருந்துவிட்டால், அவ்வளவுதான். அவர் இறப்பதற்கு இவர்கள்தான் உதவி செய்யவேண்டும் என்று நினைப்பார்கள். ஒருவர் எப்போது இறந்து போவார் என்பதை அறிந்து கொள்வதில் எந்த அர்த்தமும் கிடையாது என்று நான் சொல்லவில்லை. இதனால் மனிதர்களுக்கு நாம் இன்னும் கொஞ்சம் உதவிட வாய்ப்பு இருக்கிறது. ஆனால், இந்த விஷயங்களை மனிதர்கள் சரியாக பயன்படுத்துவார்களா இல்லையா என்று நம்மால் சொல்லவே முடியாது. அவர்கள் மொத்தமாக குழம்பிப்போக வாய்ப்பிருக்கிறது. எல்லாவற்றிற்கும் மேலாக, அவர்கள் தங்களுக்குள்ளேயே ஏதாவது அறிகுறியை பார்த்துவிட்டால் - அது சரியோ தவறோ - தாங்களும் மூன்று நாட்களில் இறக்கப்போவதாக நினைத்துக்கொள்ளலாம். இப்போது அமைதியையும் நிதானத்தையும் வளர்த்துக்கொள்வதற்கு பதிலாக, பயம் நிறைந்தவர்களாக ஆகிவிடுவார்கள். இதெல்லாமே நடக்க வாய்ப்பிருக்கிறது.

இதனால்தான், உங்கள் வாழ்க்கையின் ஒவ்வொரு கணத்திலும் நீங்கள் மரணத்திற்கு தயாராக இருக்கவேண்டும் என்று சொல்லப்பட்டது. அடுத்த கணமே உயிர்விட நேர்ந்தாலும், அந்த முடிவு ஓரளவுக்கு இனிதான முடிவாக அமையும்படி உங்கள் வாழ்க்கையை வாழ்ந்திட வேண்டும். கடைசி நேரத்தில் அதை சமாளிக்க பார்ப்பது சரியான வழியில்லை. அதோடு, உங்கள் வாழ்வு நிலையற்றது என்பதை, நீங்கள் அழியக்கூடியவர் என்பதை புரிந்துகொண்டால் இந்த கவனம் உங்களுக்கு எப்போதுமே இருந்திடும். இப்படி, எப்போதுமே அதைப்பற்றி கவனம் இருக்கும்போது, அது வரும் நேரத்தில் பார்த்திடுவீர்கள்.

தக்க சமயத்தில், சரியான விதத்தில், சாதகமான சூழ்நிலையில் உட்கார்ந்து உயிர்விடுவீர்கள். இதுவே மிகச்சிறந்த வழியாகும்.

## தீய சக்திகள்

ஒருவருக்கு தீங்கு ஏற்படுத்துவதற்காக எதிர்மறை சக்திகளை பயன்படுத்துவது உலகில் தொன்றுதொட்டு பழக்கத்தில் இருந்துள்ளது. இதற்கென்று நம் நாட்டில் விரிவான ஒரு தொழில்நுட்பமே இருக்கிறது. நான்கு வேதங்களில், அதர்வண வேதம் முழுவதும் மாந்திரீக பயிற்சிகளைப் பற்றியதுதான். சக்திகளை உங்களுக்கு சாதகமாகவும் இன்னொருவருக்கு பாதகமாகவும் எப்படியெல்லாம் பயன்படுத்தலாம் என்று இது ஆழமாக விளக்குகிறது. இதன்மேல் ஆளுமைக்கொண்ட ஒருவர், தான் விரும்பினால் இதன்மூலம் அளவுகடந்த துன்பத்தையும், ஏன் மரணத்தையும்கூட ஏற்படுத்த முடியும் என்பதை இது விளக்கமாகச் சொல்கிறது. இதைப்பற்றி எந்த சந்தேகமும் இல்லை. மற்றவர்களை துன்புறுத்த பயன்படுத்தப்படும் எளிமையான ஒரு வழி சாபம். சாபம் என்றால் என்ன? உங்களை நோக்கி செலுத்தப்படும் தீமை நிறைந்த, எதிர்மறையான ஒரு எண்ணம்தான் சாபம். இதனால் நீங்கள் நோய்வாய்ப்படலாம். அப்போது ஒரு நல்ல டாக்டர் கிடைக்காவிட்டால் நீங்கள் மனநிலை ஸ்திரமில்லாமல் போகலாம் அல்லது இறந்துகூட போகலாம். அந்தக் காலத்தில், மனநிலை ஸ்திரமில்லாமல் போகும் பெரும்பாலானவர்கள் சில நாட்களிலேயே இறந்து போவார்கள். தங்கள் உயிரை மாய்க்கும்படி ஏதாவது ஒரு செயலை செய்திடுவார்கள். இல்லாவிட்டால் உணவு எடுத்துக்கொள்ளாமல் அப்படியே இருந்து தேய்ந்து போவார்கள். ஒரு அமைதியான, இதமான சித்தம் கலங்கிய நிலையில் இருக்கும் குறிப்பிட்ட விதமானவர்கள் மட்டும்தான் அதிக காலம் தாக்குப்பிடிப்பார்கள்.

சாபம் கொடுக்கும் மனிதரையே அந்த சாபம் கொன்று விடுவதற்கு சாத்தியம் இருக்கிறது. அவர்கள் உருவாக்கும் விஷத்தை வெளியே விடுவது எப்படி என்பது புரியவில்லையென்றால், அது அவர்களையே கொன்றிட முடியும். இல்லாவிட்டால் வேறுயாரையாவது கூட கொல்ல முடியும். இப்போது நீங்கள் சாகவேண்டும் என்று யாரோ சபிக்கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். அவர் தன் மனத்தில் குறிப்பிட்ட அளவில் தீய எண்ணத்தை உருவாக்கி அதை வெளியே விட்டிருக்கிறார். ஆனால் தற்செயலாக நீங்கள் கொஞ்சம் தொலைவாக இருக்கிறீர்கள் அல்லது வேறு ஏதோ காரணத்தால் அதனால் உங்களை தொட முடியவில்லை. இப்போது, உங்களுக்கு பதிலாக அருகாமையில் இருக்கும் வேறுயாரோ ஒருவர் அதனால் தொடப்பட்டு இறந்து போகலாம். உதாரணமாக, நீங்கள் துப்பாக்கியால் சுடும்போது ஒவ்வொரு முறையும் நீங்கள் குறிபார்த்தவர் மீது மட்டுமே குண்டு பாய்ந்திட அவசியமில்லை. பக்கத்தில்

நிற்பவரைக்கூட அது அடிக்கலாம். சொல்லப்போனால், பெரும்பாலான நேரம் அது பக்கத்தில் இருப்பவரைத்தான் அடிக்கிறது.

சில பேர் ஏதோ ஒரு இடத்திற்கு போய்விட்டு வருவார்கள். அதன்பிறகு, புரிந்துகொள்ள முடியாத அளவுக்கு தொந்தரவும், சோக நிகழ்வுகளும் அவர்களுக்கு ஏற்படும். அவர்கள் வாழ்க்கையில் எல்லாம் தப்பாகவே போகிறது. அதைப்போலவே, சட்டென்று ஒருநாள் எல்லாம் சரியாகி விடுகிறது, அவர்களும் இயல்புக்கு திரும்புகிறார்கள். இதையெல்லாம் சொல்வது மிகவும் அபாயமானது. உடனே, பலரும் ஏராளமான விஷயங்களை கற்பனை செய்ய ஆரம்பித்து விடுவார்கள், ஏகப்பட்ட ஆர்ப்பாட்டம் செய்வார்கள். அதேசமயம், அவர்களின் புரிதலிலும் கவனத்திலும் இல்லாத ஏதோ ஒன்றுடன் தொடர்புக்கு வந்திருக்கலாம், அதன் தாக்கம் இருந்திருக்கலாம். அந்த சாத்தியமும் நிச்சயம் உள்ளது.

ஆனால் இன்று, மாந்திரீகமும் சூனியமும் செய்யும் திறமை பெற்றவர்கள் அவ்வளவாக இல்லை, மிகவும் குறைவாகவே இருக்கிறார்கள். அதனால் உங்களுக்கு தீங்கு செய்பவர்களைப் பற்றி நீங்கள் அவ்வளவாக கவலைப்பட தேவையில்லை. அப்படியே இதையெல்லாம் செய்யமுடியும் என்று யாராவது சொல்லிக்கொண்டாலும், அவர்களுடைய திறமை சந்தேகத்திற்கு உரியதுதான். கடந்த காலத்தில், எப்படி ஒவ்வொரு குடும்பத்திற்கும், ஒரு குடும்ப வக்கீல், குடும்ப டாக்டர் என்று இருந்தார்களோ, அதேபோல எல்லோருக்கும் குடும்ப மந்திரவாதி இருந்தார். தென்னிந்தியாவில் அப்படித்தான் இருந்தது, வட இந்தியாவில் இது ஓரளவுக்கு இருந்தது - அவர்களிடம் ஆலோசிக்காமல் அந்த குடும்பத்தில் எதுவும் செய்யமாட்டார்கள். துரதிர்ஷ்டவசமாக, அந்தப் பாரம்பரியம் கிட்டத்தட்ட முழுமையாக இறந்துவிட்டது.

இன்றைய காலத்தில் இந்த விஷயங்களைப் பற்றி நாம் பார்ப்பவற்றில் பாரம்பரியத்தின் புரிதல் அவ்வளவாக இல்லை, வெறும் மிகைப்படுத்தப்பட்ட பயம்தான் இருக்கிறது. மனிதர்களின் கற்பனைக்குத்தான் கட்டுப்பாடே கிடையாதே. துரதிர்ஷ்டவசமாக, இன்று பல போலிகள் இந்த பயத்தை ஒரு கருவியாக பயன்படுத்திக் கொள்கிறார்கள். பயம் என்பது இருந்தால் தீயவிளைவு ஏற்பட்டு கொண்டேதான் இருக்கும். ஏனென்றால், பயம் என்பதே ஒரு சூனியம்தான். இல்லையென்றால், சினிமாவில் பேய் படம் பார்ப்பவர்கள், எதற்காக திகிலடைந்து பயப்படவேண்டும்? அங்கேயே கத்துகிறார்கள், பயத்தில் கைகளை பிடித்துக்கொள்கிறார்கள், சிலரோ எழுந்து வெளியில் ஓடியே விடுகிறார்கள். சினிமா ப்ரொஜக்டர் வெளிப்படுத்தும் வெளிச்சம்தான் திரையில் வந்து விழுகிறதென்று அவர்கள் எல்லோருக்குமே தெரியும். ப்ரொஜெக்டர் மீது சும்மா கையை வைத்து மறைத்தால் பேய் காணாமல் போய்விடும். இது எல்லோருக்குமே

தெரியும். இருந்தாலும் இந்த விளையாட்டு நடக்கிறதுதானே? அவர்கள் பயமாக இருப்பதுபோல் நடிக்கவில்லை, நிஜமாகவே பயப்படுகிறார்கள். அதனால்தான் சொல்கிறேன், பல நேரங்களில், இந்த பயமே சூனியம் வைத்ததுபோல் வேலைசெய்ய முடியும், தனியாக அதற்கென்று இன்னும் ஒன்றை செய்யத் தேவையில்லை.

அடிப்படையில், அதர்வண வேதம் முழுவதுமே, உங்கள் சக்தியைப் பயன்படுத்தி ஒருவருக்கு நன்மையை உருவாக்குவதோ, ஒருவரின் வாழ்வை அழிப்பதோ எப்படி என்று சொல்கிறது. இந்தக் கலைகள் எல்லாம் இருமுனை வாள் போன்றவை. அதனால் இதை இரண்டு பக்கமும் வீசலாம். இவற்றின் மூலம் நோய், துன்பம், மரணம் ஆகியவற்றை ஏற்படுத்தவும் முடியும், தவிர்த்திடவும் முடியும். யாரையோ கொல்வதற்கான திறமை ஒருவருக்கு வேண்டுமென்றால் அது அவ்வளவு எளிமையானது அல்ல. அதற்கு மிகவும் திறமை வேண்டும். ஒருவருடைய உணவில் எதையாவது போட முடிந்தால் மட்டுமே, அது கொஞ்சம் எளிதாக இருக்கலாம். நான் ரசாயன விஷம் பற்றி பேசவில்லை. உணவில் சில சக்தியூட்டப்பட்ட வடிவங்களை போட முடியும். அது உணவின் மூலம் ஒருவருக்குள் போக முடியும்.

இந்த விஷயங்களால் ஒருவர் எவ்வளவு எளிதாக தாக்கப்படுகிறார் என்பது ஒவ்வொருவருக்கும் மாறுபடும். இதை பொருத்து, அதற்கேற்ற வேகத்திலும் தீவிரத்திலும் அது ஒருவருக்குள் மெதுவாக வளர ஆரம்பிக்கும். அது அவருக்குள் வளர வளர, அவரைப் பற்றிய எல்லாவற்றையும் மெதுவாக அழித்துவிடும். இப்படியே போனால் மரணம்கூட ஏற்படலாம். ஆனால் இதையெல்லாம் செய்ய அவர்களுக்கு முதலில் அந்த மனிதருடைய உணவைத் தொட ஒரு வழிவேண்டும். இதெல்லாம் இல்லாமல் ஒருவருக்கு மரணத்தை ஏற்படுத்த வேண்டுமென்றால், அதற்கு ஏராளமான திறமை வேண்டும். அப்படிப்பட்டவர்கள், இன்றைக்கு உலகில் மிகவும் குறைவு, அவர்கள் கையளவுதான் இருக்கிறார்கள். அந்தளவுக்கு திறமையை சம்பாதிப்பதற்கு ஒருவருக்கு மிகுந்த முயற்சி தேவை. அதோடு அதில் அவருடைய சொந்த நலனுக்கும் உயிருக்குமேகூட ஆபத்து இருந்திடும். அதிர்ஷ்டவசமாக, இது ஒரு தடையாக அமைந்துவிடுகிறது. இன்றைக்கு பெரும்பாலானவர்கள், இதுபோன்ற விஷயங்களை செய்ய, பயத்தை பயன்படுத்தித்தான் இயங்கிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அதுவும் ஏராளமான தொந்தரவை நிச்சயமாக உருவாக்க முடியும். இதுபோல மனரீதியான பாதிப்புகளைத் தாண்டி, ஒருவரின் சக்தி நிலையையும் குலையச் செய்ய சாத்தியம் இருக்கிறது. அதன்மூலம் உடல்நிலையிலும் பாதிப்பு உருவாக்கலாம்.

தொந்தரவு என்று பார்த்தால், மனதளவில் தொந்தரவு ஏற்படுத்துவது ஓரளவுக்கு சுலபமானது, குறிப்பாக பெண்களின் அமைதியை கெடுக்க முடியும். ஒரு குழந்தையை தன் கருவில் சுமந்து, மனித இனத்தை விருத்தியடைய செய்யும் மகத்தான பொறுப்பு பெண்களுக்கு இருக்கிறது. அதனால், மாதம்தோறும் அவர்கள் உடலளவில் ஒரு காலகட்டத்தை கடக்க வேண்டியிருக்கிறது. அந்த சமயங்களில் எளிதில் தாக்கத்திற்குள்ளாகும் நிலையில் இருக்கிறார்கள்.

தீங்கு விளைவிப்பதில் பார்த்தால், உடலுக்கு தீங்கு ஏற்படுத்துவது அவ்வளவு சுலபம் கிடையாது. இந்த உடல் ஒவ்வொரு நாளும் தன்னை புதுப்பித்துக் கொள்கிறது. அதாவது, நீங்கள் ஒரு கிலோ உணவு சாப்பிட்டீர்கள் என்று வைத்துக்கொள்வோம். இந்த ஒரு கிலோ உணவில், 300-400 கிராம் உடலாக போகிறது. அதனால் ஒருவிதமான புதுப்பித்தல் அல்லது மறுசுழற்சி (ரீசைக்கிளிங்) ஏற்படுகிறது என்று சொல்லலாம். இப்படி தினம்தோறும் தன்னை மீண்டும் மீண்டும் புதுப்பித்துக் கொள்வதால், உடலுக்கு தனக்கே உரிய ஒரு பாதுகாப்பு இருக்கிறது. அதனால் இந்த உடலுக்கு பாதிப்பு உருவாக்க வேண்டுமென்றால், உதாரணமாக அந்த மனிதருக்கு ஒரு நோயை உருவாக்க வேண்டுமென்றால், அதற்கு அதிகமான திறமை வேண்டும். மனத்தை பேதலிக்க செய்வதைவிட உடலுக்கு பாதிப்பு ஏற்படுத்த அதிகமான திறமை வேண்டும். மனதிற்குள் புதுப்பிக்க என்ன இருக்கிறது? பழைய விஷயங்களைத்தான் மனம் ஒட்டிக்கொண்டிருக்கிறது. அதனால் மனதை பேதலிக்க வைப்பது இருப்பதிலேயே மிகவும் சுலபமாக இருக்கிறது.

உடலை ஆக்கிடும் பஞ்சபூதங்களில், நீர் என்பது திரவத்தன்மை கொண்டிருக்கிறது. அதனால் நீரின் மேல் ஒரு தாக்கத்தை ஏற்படுத்துவது தான் இருப்பதிலேயே மிகவும் சுலபமானது. பூதசுத்தி[6] எனும் விஞ்ஞானத்தில் - எண்ணங்கள், உணர்வுகள், ரத்தம் ஆகிய மூன்றும் இயங்க அடிப்படையாக இருப்பது நீர்தான். எளிதில் தாக்கத்திற்கு உள்ளாகும் தன்மை கொண்டதாக இவை இருப்பதால், தீயநோக்கம் கொண்டவர்கள் நம் உடலில் உள்ள பஞ்சபூதங்களில் நீர்த்தன்மையை இயல்பாகவே குறிவைப்பார்கள்.

ஒருவர், யாருக்காவது உடல் அளவில் ஏதாவது செய்ய வேண்டுமென்றால், இருப்பதிலேயே எளிதானது, ரத்தத்தில் பாதிப்பு ஏற்படுத்துவது. ஒருவர் சூனியம் அல்லது அதைப்போன்ற விஷயங்களின் தாக்கத்தில் இருக்கும்போது, அவர்களுடைய இரத்தத்தைப் பரிசோதனை செய்து

---

6 யோகரீதியாக உடலிலுள்ள ஐந்து பூதங்களையும் சுத்தம் செய்தல். யோகத்தின் ஒரு அடிப்படையான அம்சம்.

பார்த்தால், அது கன்னா பின்னாவென்று இருக்கும். எப்போதுமே இது ஒரு அறிகுறி. இதற்கும் உறுப்புகள் செயல்படுவதற்கும் எந்த சம்பந்தமும் இல்லை. ரத்தத்தின் வெளிப்பாடு ஒவ்வொரு நாள் ஒவ்வொரு மாதிரி இருக்கும், மாறிக்கொண்டே இருக்கும். ஏனென்றால் ரத்தம் என்பது ஓட்ட நிலையில் இருக்கிறது. மனதிற்கு பிறகு எளிதாக தாக்கத்திற்கு உள்ளாகும் தன்மை உடையது ரத்தம். அதற்கடுத்து பாதிக்கப்படக்கூடியது உங்களுடைய கல்லீரலும் சிறுநீரகமும். ஏனென்றால் இதிலும் சில விஷயங்கள் ஓட்டத்தில் இருக்கின்றன, அதனால்தான். ஆனால் யாருக்காவது மாரடைப்பு உருவாக்க வேண்டுமென்றால், அது மிகவும் கடினமானது. உங்கள் இதயம் ஒரு பம்ப் போலத்தான் வேலை செய்கிறது, இதயத்தில் ரசாயன செயல் எதுவுமில்லை. சில சமயம் குறிப்பிட்ட திறமையுடையவர்கள் நரம்பு சம்பந்தப்பட்ட பாதிப்பையும் உருவாக்க முடியும். ஆனால், பரவலாக பார்த்தால், ஒருவருக்கு தீங்கு ஏற்படுத்துவதற்கான முக்கியமான வகைகள் இவைதான்.

இந்த இருபத்தோராம் நூற்றாண்டில் இதுபோன்ற விஷயங்கள் எல்லாம் சாத்தியமானது என்று நம்புவது மிகவும் கடினம்தான். ஆனால் துரதிர்ஷ்டவசமாக இவை இருக்கத்தான் செய்கின்றன. அனைத்துக்கும் மேலாக, பயத்திற்கு உள்ளாகும் தன்மைதான் பொதுவாக இதில் பெரும் பங்கு வகிக்கிறது. பக்தியின் மூலமோ, தியானத் தன்மையின் மூலமோ ஒருவர் பயமற்ற நிலைக்கு வரமுடிந்தால், இதுபோன்ற இருண்ட கலைகளுக்கு அப்பாற்பட்டு இருந்திட அதுவே சிறந்த வழியாகும்.

## தீய சக்திகளின் தாக்கத்திலிருந்து விடுபடுவது எப்படி?

ஒருவர் ஏற்கனவே சூனியத்தால் ஏற்பட்ட பாதிப்புகளால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தால், அந்த பாதிப்பிலிருந்து விடுபட சிறந்த வழி என்ன? இந்த சூழ்நிலைகளை சரிசெய்வதற்கு பல வழிகள் இருக்கின்றன. ஒரு எளிய வழி என்னவென்றால், அவர்கள் இங்கே வந்து தியானலிங்கத்தில் மூன்று நாட்கள் இருக்க முடியும். தியானலிங்கத்திற்குள் நுழைவதற்குமுன், வாசலில் இரண்டு சந்நிதிகள் இருப்பதைப் பார்க்கலாம் - வனஸ்ரீ மற்றும் பதஞ்சலி சந்நிதிகள். இரண்டும் சேர்ந்து தியானலிங்கத்தோடு 15 டிகிரி கோணத்தை உருவாக்குகின்றன. இப்படி அமைக்க காரணம், இங்கே வருபவர்கள் கோவிலுக்குள் நுழைவதற்கு முன்னதாகவே, அவர்கள் வேறெதையும் நாடிடும் முன்னதாகவே, தீயசக்திகள் எதுவாயிருந்தாலும் அது களையப்படும் - அப்படித்தான் அமைக்கப்பட்டிருக்கிறது. இந்த வளாகத்திற்குள் சும்மா நடந்தாலே போதும், தியானலிங்கத்திற்கு 60

அல்லது 70 அடிகளுக்கு முன்பாகவே இந்த தீயசக்திகள் எல்லாம் அகற்றப்படும்.

மனித மனம் என்பது லட்சக்கணக்கான அறைகள் கொண்ட ஒரு கட்டிடம் ஆகும். ஒருவர் தன் மனதில் ஒரு புதிய பகுதிக்குள் தற்செயலாக நுழைந்துவிட்டால், அவருக்கு தெரிந்த விஷயங்கள், அவருக்கு தெரியாத விஷயங்கள், அவருடைய அடிப்படை குணங்கள் ஆகியவை எல்லாம் மாறிப் போகலாம்; சில சமயங்களில் புதிதான மொழிகள்கூட வெளிப்பட முடியும். இதைப் பார்த்து ஏதோ ஒரு புதிய சக்தி அவரை பிடித்துக் கொண்டதாக மற்றவர்கள் தவறாக புரிந்துகொள்வதற்கு அதிக வாய்ப்பிருக்கிறது.

தியானலிங்கத்திற்கு உள்ளே வந்தபின், தாங்கள் உடலற்ற உயிர்களால் ஆட்கொள்ளப்பட்டவர்கள் என்று நினைப்பவர்கள் அல்லது மாந்திரீகம் போன்றவற்றால் பாதிக்கப்பட்டவர்கள் - தியானலிங்கத்திலிருந்து 15 டிகிரி கோணத்திற்குள் உட்காரவேண்டும் (லிங்கத்திற்கு முன்னால் அல்லது பின்னால்). அந்த இடம் குறிப்பாக இந்த மாதிரி தாக்கங்களை விடுவிக்கவே உருவாக்கப்பட்டிருக்கிறது. இந்த தீய சக்திகளால் தாக்கப்பட்டவர்கள் மூன்று குறிப்பிட்ட நாட்களில் தியானலிங்கத்திற்கு வரவேண்டும் - அமாவாசைக்கு முந்தைய நாள், அமாவாசை மற்றும் அமாவாசைக்கு அடுத்த நாள் - இந்த மூன்று நாட்களும் அங்கு இருக்கவேண்டும். அப்போது அவர்கள், ஒவ்வொரு நாளும் தியானலிங்கத்திற்கு ஒரு எலுமிச்சை பழம் அர்ப்பணிக்க வேண்டும். அவர்கள் லிங்கபைரவி[7] தேவி சந்நிதியிலும் உட்காரலாம், ஒரு அபிஷேகம் செய்யலாம். அவ்வளவுதான், எல்லாம் முடிந்து போய்விடும்.

லிங்கபைரவி யந்திரம்[8] இருந்தால்கூட இதை நிச்சயமாக கவனித்துக் கொள்ளும். அந்தளவுக்கு ஆற்றல்மிக்க சக்தி உருவம் ஒருவரின் வீட்டில் இருந்தால், எந்த கவலையும் தேவையில்லை. ஆனால் லிங்கபைரவி யந்திரம் ஒரு குறிப்பிட்ட எல்லைக்கு உட்பட்டது. 2000 - 2500 சதுர அடி பரப்பளவுக்கு மட்டுமே அது செயல்படமுடியும். அதுகூட வீட்டின் வடிவமைப்பை பொருத்துதான் இருக்கிறது. கோணல்மாணலாக வளைவுகளுடன் இருந்தால், வீட்டின் ஓரத்தில் உள்ள பகுதிகள், சக்தி வளையத்திற்கு வெளியே போக வாய்ப்பிருக்கிறது. அவிக்ன யந்திரம் 4000 சதுர அடி வரை வேலை செய்யலாம். ஆனால், அதையும் வீட்டின் நடுவில் வைத்திருக்க வேண்டும், அப்போதுதான் அதிகபட்ச

---

7 சத்குரு அவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள பெண் தெய்வம்.

8 ஆரோக்கியம், வளம், ஆன்மீக வளர்ச்சி ஆகியவற்றை மேம்படுத்திட சத்குரு அவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்ட சக்தி வடிவம்.

பயன் கிடைக்கும். அதனுடன் தொடர்பில் இருப்பவர்களுக்கு தனிப்பட்ட முறையில் தீய சக்திகள் தாக்கமுடியாது, இது நிச்சயம்.

லிங்கபைரவி யந்திரம் அல்லது அவிக்ன யந்திரம் வைத்துக்கொள்வது எல்லோருக்கும் சாத்தியமில்லை. அதனால், எளிமையான தீர்வு தியானலிங்கம். இங்கே வந்து தியானலிங்கத்தில் கொஞ்ச நேரம் செலவுசெய்ய வேண்டும். அதுவே மிகப்பெரிய யந்திரம். அவர்கள் இங்கே வந்து அதை பயன்படுத்திக்கொள்ளலாம். பிரச்சனை மிகவும் தீவிரமாக இருந்தால், அவர்களுக்கு கொடூரமானது ஏதாவது நிகழ்ந்திடலாம் என்று நினைத்தால், அந்த மாதிரி சூழ்நிலையில், அவர்களுக்கென்று பிரத்தியேகமாக வேறொரு கருவியை உருவாக்கலாம். ஆனால் அப்படி ஒருமுறை அல்லது இரண்டு முறைதான் செய்திருக்கிறேன். ஆனால் அப்படி செய்ய பெருமுயற்சி தேவை, அதில் ஏகப்பட்ட வேலை இருக்கிறது. அது நல்லவிதமான வேலை இல்லை. அது எனக்கு பிடித்தமான வேலையே இல்லை. ஆதியோகி பிரதிஷ்டை, லிங்கபைரவி பிரதிஷ்டை போன்ற வேலையென்றால் அது மகிழ்ச்சியானது. இந்த மாதிரி வேலையெல்லாம் பயங்கரமானது, ஆனாலும் பயனுள்ளது.

உறுதியான ஆன்மீக சாதனை இருந்ததென்றால் இதையெல்லாம் பற்றி ஒருவர் கவலைப்படவே தேவையில்லை. அப்படிப்பட்டவருக்கு இதெல்லாம் ஒரு பொருட்டேயில்லை. உதாரணமாக, நமது பிரம்மச்சாரிகள் சித்தாசனத்தில்[9] உட்கார்ந்து கண்களை மூடி தீவிரமாக இருந்தால் இரண்டே நிமிடங்களில் இதெல்லாம் காணாமல் போய்விடும். அப்போது மயானத்தில் போய் படுத்து தூங்கினாலும் பிரச்சனை ஒன்றும் இருக்காது. சிவன் எப்போதுமே மயானத்தில்தான் தூங்குவான் என்று சொன்னார்கள் அல்லவா? ஒருவர் தன் உள்நிலையில் தீவிரமாக எரிந்து கொண்டிருந்தால், அவர் எந்த மாதிரி இடத்தில் இருந்தாலும் அதெல்லாம் ஒரு பொருட்டே இல்லை. இதை உணர்த்தவே அப்படி சொன்னார்கள். ஆனால் தங்களை சுற்றி இருக்கும் சூழலால் பாதிக்கப்படக்கூடிய சாதாரண மக்கள் அவ்வப்போது தங்களை சுத்திகரித்துக் கொள்வது அவசியம். இல்லையென்றால் மெதுவாக ஒரு மந்தநிலை ஏற்படும்.

இதென்னவோ பெரிய விஷயம் கிடையாது. ஆனால் இந்த சின்ன விஷயங்களால் ஒருவர் மந்தமாகி போகலாம். மனிதர்களுக்கு இது நிகழ்ந்து கொண்டேதான் இருக்கிறது. பல இடங்களுக்கு போகிறீர்கள், நீங்கள் எதை எங்கிருந்து தொற்றிக் கொண்டீர்கள் என்றே உங்களுக்கு தெரிய வாய்ப்பில்லை. நீங்கள் சாப்பிடும் உணவின் மூலம் வரலாம், நீங்கள்

---

9 பிரம்மச்சாரிகளுக்கு கற்றுத் தரப்படும் ஆன்மீகப் பயிற்சி.

நடந்துசெல்லும் இடத்திலிருந்து வந்திருக்கலாம், சுவாசிக்கும் காற்றிலிருந்து வந்திருக்கலாம். ஏன், நீங்கள் போன இடத்திலுள்ள சூழலிலிருந்தும், இன்னும் பல விதங்களில் கூட அதை பிடித்திருக்கலாம். இதனால் மந்தத்தன்மை ஏற்பட்டு வாழ்க்கை கடினமானதாக ஆகலாம். என்ன, இது அதிக சுமையாகிப் போகும், அவ்வளவுதான். ஆனால் இந்த பாரம் கொஞ்சமாக கூடினாலுமே, திடீரென்று வாழ்க்கையில் எல்லாமே அதிக சிரமத்துடன் செய்ய வேண்டியதாக இருக்கும். அதனால், அவ்வப்போது இதையெல்லாம் சுத்தம் செய்துகொள்வதே மிகவும் உகந்தது.

பாரம்பரியமாகவே, சில நாட்களுக்கு ஒருமுறை, சமுதாயத்தில் வாழ்பவர்கள் இதுபோன்ற சுத்திகரிப்புகளை செய்துகொள்ள நம் முன்னோர்கள் சில முறைகளை அமைத்திருந்தார்கள். எந்த புனித ஸ்தலத்திற்கு போனாலும் அங்கே நதியில் ஸ்நானம் செய்யவேண்டும் என்று சொன்னார்கள், அல்லவா? அதன் முக்கியத்துவம் இதுதான். நதியில் மூன்று முறை முங்கிக் குளித்தால், நதியின் அந்த நீரோட்டமே ஒரு பெரிய சுத்திகரிப்பாகும். நதியில் நீராடுவதற்கான காரணங்களில் இது முக்கியமான ஒன்று. உங்களைத் தாக்கக்கூடிய அம்சங்களிலிருந்து சுத்தமாகிட இது ஒரு எளிய வழியாகும்.

ஆனால், இன்றைக்கு நதியில் குளிப்பதற்கு வாய்ப்பில்லை. ஓடும் நதிகளே குறைந்து போய்விட்டன, அப்படி ஓடினாலும் அது சுத்தமாக இல்லை. ஆனால் நல்ல நீரோட்டத்துடன் சுத்தமாக இருக்கும் ஒரு நதியில் தினம்தோறும் ஸ்நானம் செய்தால், அது மிக சுலபமாக எல்லாவற்றையுமே சுத்தம் செய்துவிடும். இதை க்ளேஷ நாஷனம்[10] என்று சொல்வோம். அக்னிக்கு பதிலாக இங்கே நீரோட்டத்தை பயன்படுத்துகிறோம், அவ்வளவுதான். ஷவரில் குளிப்பது அந்தளவுக்கு சிறப்பாக பயனளிக்காது. பெரும்பாலும், ஷவரில் வரும் தண்ணீரின் கொள்ளளவு இந்த மாற்றத்தை ஏற்படுத்தும் அளவுக்கு இருப்பதில்லை. அப்படிப் பார்த்தால் ஒரு வாளியை பயன்படுத்துவது மேலானது. தீர்த்தகுண்டம்[11] இதில் நிச்சயம் பயனளிக்கும். மழையில் நனைவதுகூட ஒரு நல்ல க்ளேஷ நாஷனம் ஆகும். மழைநீர் ஒருவரின் சக்தியில் அற்புதமான மாற்றங்களை செய்திடும். ஒருவர் தன்னை அறியாமலேயே எதிர்மறை சக்திகளால் தொடப்படலாம். அப்படிச் சின்னச் சின்னதாக சேகரித்த தாக்கங்களிலிருந்து விடுபட்டு தன்னை பாதுகாத்துக்கொள்ள சில எளிய வழிகளைத்தான் இப்போது பார்த்தோம்.

---

10 லிங்கபைரவியில் நடத்தப்படும் ஒளிவட்டத்தை(ஆரா) சுத்திகரிக்கும் சடங்கு.

11 ஈஷா யோக மையத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள தீர்த்த குளங்கள்.

## தற்கொலை: ஒரு தெளிவான பார்வை

மனித இனத்தின் சரித்திரத்திலேயே, இன்று நாம் அனுபவிக்கும் சௌகரியங்களும் சுகங்களும் போல யாரும் எந்த காலத்திலும் அனுபவித்ததே இல்லை. வரலாற்றிலேயே அதிகபட்ச வசதிகளுடன் சுகமாக வாழ்ந்திடும் தலைமுறை நாம்தான். அப்படியிருந்தும், நமது காலத்தில்தான் மரணத்தின் ஒரு வகையான தற்கொலை என்பது பரவலாக பெருகிவரும் நோயாகி உள்ளது. இன்று பல ஆய்வுகள் சொல்வது என்னவென்றால் - உலகின் ஜனத்தொகை மொத்தத்தில், பெருமளவிலான மனிதர்கள் தங்கள் வாழ்வில் தற்கொலை செய்துகொள்ள வேண்டுமென்று குறைந்தது ஒருமுறையாவது யோசித்திருக்கிறார்கள். இவர்களில், கணிசமானவர்கள் குறைந்தது ஒரு முறையாவது தற்கொலைக்கு முயற்சி செய்துள்ளார்கள். இன்று அமெரிக்காவில், போரிலும் கொலை குற்றங்களிலும் கொல்லப்பட்டு இறப்பவர்களைவிட, தங்களைத் தாங்களே கொன்று கொள்பவர்களின் எண்ணிக்கை அதிகம். சமீபகாலங்களில், சாலை விபத்தில் இறப்பவர்களைவிட தற்கொலையால் இறப்பவர்கள் அதிகமாக உள்ளார்கள். இதற்கு என்ன அர்த்தம்? மனித இனத்தின் அடிப்படையே மோசமாகிக் கொண்டிருக்கிறது என்று அர்த்தம், நாம் வாழும் அடிப்படையிலேயே ஏதோ மிகவும் தவறாகிப் போய்க்கொண்டிருக்கிறது என்று அர்த்தம். மனிதர்கள் இப்படி பெருமளவில் தற்கொலையை நோக்கிப் போக ஏதாவது காரணம் இருக்கிறதா? தற்கொலை செய்துகொள்வதற்கு நல்ல காரணம் மோசமான காரணம் என்றெல்லாம் ஒன்றுமில்லை. அவர்களுக்கு ஒரு காரணம் வேண்டும், அவ்வளவுதான். வேண்டுமென்றால் நீங்கள் எந்த காரணத்தையும் நல்ல காரணமாக ஆக்கிவிடலாம். வேண்டுமென்றால், இன்றைக்கு காலையிலிருந்து மாலைக்குள் நிகழும் விஷயங்களில் நூறு காரணங்களை கண்டுபிடிக்கலாம் - "நான் ஏன் உயிருடன் இருக்கக்கூடாது என்பதற்கான நூறு காரணங்கள்" சொல்லிவிடலாம். என்னைப் பொருத்தவரை நானோ எப்போது பார்த்தாலும் உயிருடன் இருப்பதற்கான ஒரு காரணத்தை தேடிக்கொண்டிருக்கிறேன்.[12] இல்லாவிட்டால் என்னிடம் காரணமே இல்லை. அதனால் நல்ல காரணமா இல்லையா என்பதைப் பற்றி கேள்வியே இல்லை. எப்படியும் ஒரு காரணத்தை கண்டுபிடிக்கிறார்கள். தற்கொலையை நோக்கி தங்களை தள்ளுமளவிற்கான ஒரு காரணத்தை பிடிக்கிறார்கள்.

---

12 சத்குரு தனது இக்கட்டான நிலையைப் பற்றி குறிப்பிடுகிறார் - தன்னுடைய கர்ம கட்டமைப்பை அவர் ஏற்கனவே அகற்றியிருப்பதால், தனது உடலை தக்கவைத்திட அவர் தொடர்ந்து முயற்சி செய்துகொண்டிருக்க வேண்டியிருக்கிறது.

பெரும்பாலானவர்களுக்கு தற்கொலை உணர்வு வரக் காரணம் - வாழ்க்கை அவர்கள் விரும்பியதுபோல் நடக்கவில்லை என்பதுதான். மருத்துவரீதியான காரணங்களை தவிர, மற்றதெல்லாம் நிகழ்ந்திட காரணம் யதார்த்தம் இல்லாத எதிர்பார்ப்புகள்தான். இந்தப் படைப்பில் நீங்கள் மிக நுண்ணிய ஒரு துகள்தான். இந்த பிரபஞ்சம் முழுவதையும் எடுத்துக்கொண்டால், அதில் நீங்கள் ஒன்றுமே இல்லை! நீங்கள் என்பது ஒன்றுமில்லாதது என்பதை புரிந்துகொண்டால், எல்லாம் இப்போது எந்தளவுக்கு நடந்துகொண்டிருக்கிறதோ அதைப்பற்றி அளவுக்கதிகமான மகிழ்ச்சியை அடைவீர்கள். நீங்கள் என்பது ஒன்றுமில்லை, ஒன்றுக்கும் மற்றொன்றுக்கும் உங்களுக்கு வித்தியாசம் தெரியவில்லை, இவ்வளவு பிரம்மாண்டமான பிரபஞ்சத்தில், அளவில்லாத வெளியின் நடுவில், இந்த பூமியின் ஒரு ஓரத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்கள் - இந்த கவனம் இருந்தால் நீங்கள் மகிழ்ச்சிதான் அடைவீர்கள். குறைந்தபட்சம் இவ்வளவாவது நடக்கிறதே என்று - உங்கள் சுவாசம் நடக்கிறது, இதயம் துடிக்கிறது, உயிர் நிகழ்கிறது, எல்லாமே சரியாக நடக்கிறது. இதையெல்லாம் பற்றி உங்களுக்கு எதுவுமே தெரியாது, அதை கட்டுப்படுத்தவும் முடியாது, அதைப்பற்றி ஒன்றுமே செய்யமுடியாது, அப்படி இருந்தும் எல்லாம் நன்றாகவே நடந்துகொண்டிருக்கிறது - வாழ்க்கை நிஜங்கள் பற்றிய இந்த கண்ணோட்டம் இருந்தால், இப்போது உயிருடன் இருக்கிறோமே என்ற விஷயமே உங்களை ஆழமான சந்தோஷத்தில் ஆழ்த்திடும்.

ஒருமுறை இப்படி நடந்தது: ஒரு சேல்ஸ்மேன் புதிதாக கட்டப்பட்டுள்ள ஒரு அப்பார்ட்மெண்ட் கட்டிடத்திற்குள் நுழைந்தார். அவருக்கு ஒரே பெருமை, ஏனென்றால் இது ஒரு புது குடியிருப்பு, அதனால் வேறு எந்த சேல்ஸ்மேனும் வந்திருக்க வாய்ப்பில்லை. இவரே முதல் ஆளாக இருக்கவேண்டும் என்று விரும்பினார். அங்கே தென்பட்ட முதல் வீட்டின் கதவை தட்டினார். ஒரு பெண்மணி கதவைத் திறந்தார். அந்தப் பெண் வாயை திறந்து பேசுவதற்குள் இவர் வீட்டிற்குள் நுழைந்துவிட்டார். தன் பையிலிருந்து ஏராளமான மாட்டுச் சாணத்தை வெளியே எடுத்தார், அதை அங்கிருந்த தரைவிரிப்பின் மீது எல்லா பக்கமும் வீசினார். அந்த பெண்ணைப் பார்த்து, "இங்கே பாருங்கள் என்னிடம் அற்புதமான ஒரு வேக்யும் கிளீனர் இருக்கிறது. இதோ பாருங்கள், துளியும் நாற்றம் இல்லாத அளவிற்கு இந்த தரைவிரிப்பை என்னால் முழுவதாக சுத்தம் செய்யமுடியும். என்னால் அப்படி செய்யமுடியாவிட்டால், இந்தச் சாணத்தை எல்லாம் நானே சாப்பிடுகிறேன்," என்று சொல்லி சவாலும் விட்டார். உடனே அந்தப் பெண்மணி, "சரி, அதோடு தொட்டுக்கொள்ள கொஞ்சம் தக்காளி சட்னியும் தரட்டுமா? ஏனென்றால் இன்னும் இந்த வீட்டிற்கு மின்சார இணைப்பு தரவில்லை, அதுதான் கேட்கிறேன்," என்றார்.

உங்கள் வாழ்க்கையில் நீங்கள் மோசம் செய்யப்பட்டு விட்டீர்கள், அதனால் நீங்கள் தற்கொலை செய்துகொள்ள வேண்டும் என்று தோன்றினால், உண்மையில் உங்களுக்கு தேவையானது கொஞ்சம் தக்காளி சட்னிதான். தக்காளி சட்னி சேர்த்தால் அந்த சுவை கொஞ்சம் பரவாயில்லை என்று தோன்றும், இப்போது திடீரென்று உங்களுக்கு உயிர் வாழ்ந்திடும் விருப்பம் வரும். எவ்வளவோ பேருக்கு அவர்களுடைய வாழ்க்கை அவர்கள் விரும்பியதுபோல் நடக்கவில்லை, ஆனாலும் அவர்கள் தற்கொலையை நோக்கி போகவில்லை, நாளைக்கு சரியாகிவிடும் என்று அவர்கள் நம்புகிறார்கள். தெருவில் இருக்கும் அந்த ஏழை மனிதன் ஒரு லாட்டரி சீட்டு வாங்குகிறான், அதனால் அடுத்து ஒரு மாதத்திற்காவது அவன் வாழ்ந்திட வேண்டும், லாட்டரி முடிவு வரும் வரையாவது. அவன் லாட்டரியில் ஜெயித்த பிறகு ஒரு ராஜாவைப் போல் வாழப்போகிறேன் என்று நம்புகிறான். ஆனால் முடிவுகள் வந்துவிட்டால்? அடுத்த லாட்டரிதான் இருக்கவே இருக்கிறதே! அவன் போய்க்கொண்டே இருப்பது இப்படித்தான்.

அவனுக்கு தற்கொலை நோக்கம் வருவதில்லை. ஆனால் அந்த பணக்காரருக்கோ அந்த லாட்டரி ஏற்கனவே நிகழ்ந்துவிட்டது. அதோடு, அது அவ்வளவு பெரிய வித்தியாசத்தை ஒன்றும் ஏற்படுத்தவில்லை என்றும் அவருக்கு தெரிகிறது. நம்பிக்கை இழந்து மனம் நொந்த உணர்வு ஆழமாக இருக்கிறது. அப்படியென்றால், நீங்கள் தெரிந்தே சுயமாக தற்கொலையை நாடுவீர்கள் என்று அர்த்தமில்லை. வாழ்க்கையை நீங்கள் உணரும் விதம், உங்கள் அனுபவம் கசப்பாகி போய்விட்டதால் மரண நோக்கத்தில் இருக்கிறீர்கள். கசப்பான விஷயம் எதுவானாலும் அதை தவிர்த்து தப்பிக்கப் பார்ப்பது இயல்புதான். அதனால்தான் சொல்கிறேன், வாழ்வின் உங்கள் அனுபவத்தை, அதை உணரும் விதத்தை, உள்நிலையை இனிமையாக வைத்துக்கொள்ளுங்கள். அப்போது மட்டும்தான் நீங்கள் உயிர்நோக்கத்தில் இருப்பீர்கள்; இல்லை என்றால் இயல்பாகவே மரண நோக்கத்தில்தான் இருப்பீர்கள்.

அடிப்படையாக, ஏதோ ஒருவிதத்தில், வாழ்க்கையை கையாள்வது எப்படி என்று புரியாததால்தான் தற்கொலை செய்துகொள்ள விரும்புகிறார்கள். அதாவது, வாழ்க்கையில் ஏற்படும் ஒரு தற்காலிகமான சூழ்நிலைக்கு நிரந்தரமான தீர்வை தேடிக்கொள்ளப் பார்க்கிறார்கள். அவ்வளவுதான் இது. அவர்களுக்கு கையாளத் தெரியவில்லை - அவர்களுடைய உணர்ச்சிகளையோ, எண்ணங்களையோ, உடல் பிரச்சினையையோ, பொருளாதார நிலையையோ, குடும்ப சூழ்நிலையையோ, ஏதோ ஒன்று - அதை கையாள்வது எப்படி என்று தெரியவில்லை. அந்த சூழ்நிலையில் மாட்டிக் கொண்டிருக்கும்போது அதுதான் உலகின் முடிவு என்ற

அளவுக்கு மனதில் தோன்றலாம். ஆனால் அடிப்படையில், வாழ்க்கையின் ஒரு குறிப்பிட்ட அம்சத்தை கையாள்வது எப்படி என்று உங்களுக்கு தெரியவில்லை, அவ்வளவுதானே? அதனால், வாழ்க்கையை முடித்துக் கொள்வதுதான் சிறந்த வழி என்று உங்களுக்கு தோன்றுகிறது. இது அறியாமைதான், வாழ்க்கையின் இயல்பு பற்றிய அறியாமை இது.

என்னுடைய புரிதலில், தோராயமாக 5 சதவிகிதம் பேர் குணப்படுத்த முடியாத நோய்களை கையாள்வது எப்படி என்று தெரியாமல் தற்கொலை செய்துகொள்கிறார்கள். அந்தளவுக்கு வலியாகவும் கொடுமையாகவும் இருக்கிறது, அதைவிட இறப்பதே மேல் என்று நினைக்கிறார்கள். இன்னொரு 2-3 சதவிகிதம் பேர் கொடூரமான சூழ்நிலைகளில் மாட்டிக் கொள்வதால் தற்கொலை செய்துகொள்கிறார்கள் - போர் பிரதேசத்தில் இருக்கிறார்கள் அல்லது எதிரியிடம் சிக்கிவிட்டார்கள் அல்லது வேறெங்கோ மோசமாக கொடுமைப்படுத்தப் படுகிறார்கள் - இப்படி அவர்களுக்கு தப்பிக்க வேறுவழியே இல்லாதபோது தங்கள் உயிரை முடித்துக்கொள்கிறார்கள். இன்னொரு 10-15 சதவிகிதம் பேர் பொருளாதார காரணங்களுக்காக தற்கொலை செய்துகொள்கிறார்கள். பணத்தால் ஆளப்படும் சமூகத்தில் மாட்டிக்கொண்டு விட்டதாக அவர்களுக்கு தோன்றுகிறது. அவர்களுக்கு குடும்பம் இருக்கலாம், பணம் இல்லாமல் போயிருக்கலாம், இந்த நெருக்கடியில் என்ன செய்வதென்றே தெரியாமல் இருக்கலாம். வாழ்க்கையே தெருவுக்கு வரும் அளவுக்கு ஏற்படலாம். அவர்களால் அதை நினைத்துக்கூட பார்க்கமுடியாது - வீடு இல்லாமல் உணவுக்காக பிச்சை எடுத்துப் பிழைக்கும் கொடுமையான வாழ்க்கையை, அந்த அவமானத்தை அவர்களால் கற்பனை செய்துகூட பார்க்கமுடியாது, அதனால் தற்கொலை செய்துகொள்கிறார்கள்.

இப்படியாக, தற்கொலை செய்துகொள்ளும் கிட்டத்தட்ட 20 சதவிகிதம் பேரை நாம் கருணையுடன் நடத்த வேண்டியது அவசியம். ஏதோ ஒருவிதத்தில் வாழ்க்கை அவர்களிடம் கொடூரமாக இருந்துள்ளது. இவர்களெல்லாம் உலகத்தால் கொடுமைப்படுத்தப்பட்டுள்ள மனிதர்கள். இவர்களிடம் இந்த உலகம் தேவையான கருணையை காட்டவில்லை, தங்களை முடக்கிவிடும் சில சூழ்நிலைகளில் அவர்கள் மாட்டிக் கொண்டுவிட்டார்கள். அதனால், துரதிர்ஷ்டவசமாக, தங்கள் உயிரை தாமே எடுத்துக்கொள்ள முடிவு செய்கிறார்கள். ஏனென்றால் உயிருடன் வாழ்வது அதைவிட மோசமானது என்று நினைக்கிறார்கள். இவர்கள் விஷயத்தில், சரிசெய்யப்பட வேண்டியது இந்த உலகம்தான். ஆமாம், இந்த உலகில் சரிசெய்யப்பட வேண்டியது எவ்வளவோ இருக்கிறது. சில நேரங்களில் மனிதர்கள் ஒருவருக்கொருவர் கொடூரமான விஷயங்களை செய்துகொள்கிறார்கள்.

இன்னொரு சிறிய சதவிகிதம் பேர் இருக்கிறார்கள் - இவர்கள் எந்த காரணமும் இல்லாமல் அப்படியே தங்கள் வாழ்வை முடித்துக்கொள்ள விரும்புகிறார்கள். இன்றைக்கு செய்வதற்கு அவர்களிடம் வேறொன்றும் இல்லை, அதனால் தற்கொலை செய்துகொள்கிறார்கள். நான் சொல்வதை நம்புங்கள், அப்படிப்பட்டவர்கள் நிச்சயம் இருக்கிறார்கள்! நான் சொல்வது என்னவென்றால் - அந்த உயிர் முடிவையே விரும்புகிறது. அவர்களுக்கு எந்தத் துன்பமும் இல்லை, மனஅழுத்தம் இல்லை, எதுவுமே இல்லை. சும்மாவே இன்று இறந்துவிட வேண்டும் என்று தோன்றுகிறது. 2-5 சதவிகிதம் பேருக்கு அப்படி ஒரு மனப்போக்கு இருக்கும் என்று நான் ஓரளவுக்கு உறுதியுடன் சொல்லமுடியும். இவர்கள் வேறுவிதமானவர்கள்.

அதற்கப்புறம், ஆன்மீகப் பாதையில் இருக்கும் சிலர் இருக்கிறார்கள் - அவர்களுக்கும் இதை முடித்துக்கொள்ள வேண்டும் என்று தோன்றுகிறது. ஆன்மீகத்தில் ஒருவர் வளரும்போது, தங்களுக்குள் நிகழும் மகத்தான விவரிக்கமுடியாத அனுபவத்தை காரண அறிவால் புரிந்துகொள்ள முடியாதபோது இப்படி ஒரு தருணம் வரலாம். இன்றைக்கு தியானத்தில் உட்கார்ந்தபோது, மொத்தமாக உடலே இல்லாததுபோல் உணர்ந்தீர்கள் என்று வைத்துக்கொள்வோம். இப்போது உங்கள் அறிவு சொல்லும் முதல் விஷயம், "ஒருவேளை நாம் உடல்விடும் நேரம் வந்து விட்டதோ?" என்று சொல்லும். "இதெல்லாம் போதுமே, எல்லாவற்றையும் பார்த்துவிட்டோமே!" என்று தானாக அர்த்தம் கொடுத்து புரிந்துகொள்ளப் பார்க்கும். நிஜமாகத்தான் சொல்கிறேன்! ஆறு மாதத்திற்கு ஒருமுறை, எனக்கு இப்படி கடிதமாக எழுதி தள்ளுபவர்கள் யோக மையத்தில் இருக்கிறார்கள், "நான் உடலை விடுவதற்கு தயாராக இருக்கிறேன் என்று எனக்கு தோன்றுகிறது," என்று எழுதுவார்கள். ஆனால், ஒரு வேளைக்கு மட்டும் அவர்களை சாப்பிடாமல் இருக்கச் சொன்னால், அதுவே அவர்களுக்கு போராட்டமாக இருக்கும்.

நிஜத்தில் என்ன நடந்து கொண்டிருக்கிறதோ, அதற்கு இவர்கள் உருவாக்கிக்கொள்ளும் அர்த்தம் முற்றிலும் தவறானது என்று இவர்கள் புரிந்துகொள்ள வேண்டும். தங்களுக்குள் நிகழும் அனுபவத்தை புரிந்துகொள்ளும் அளவிற்கு அவர்களின் அறிவுக்கு திறமை கிடையாது. உடலுக்கு அப்பாற்பட்டதான ஒவ்வொரு சிறிய அனுபவத்திற்கும் காரண அறிவு, "ஆஹா, இப்போது நான் உயிர்விட தயாராக இருக்கிறேன்," என்று சொல்ல ஆரம்பிக்கும். கிடையாது, நீங்கள் ஒன்றும் உயிர்விடத் தயாராக இல்லை. நடப்பது இவ்வளவுதான் - உடலுக்கு அப்பாற்பட்ட பரிமாணத்தை உணரும்போதெல்லாம் அதை மரணம் என்று நினைத்துக் கொள்கிறீர்கள், அவ்வளவுதான். இந்த பொருள்தன்மைக்கு அப்பாற்பட்ட பூரணமான பரிமாணம் ஒன்று இருக்கிறது என்பதே உங்களுக்கு புரியவில்லை - இந்தப்

பரிமாணமே உயிருடன் இருப்பவர்களுக்காகத்தான், இறந்தவர்களுக்காக அல்ல. துரதிர்ஷ்டவசமாக, பெரும்பாலானவர்கள் இந்த பரிமாணத்திற்குள் நுழைவதே இறக்கும் போதுதான், அதென்னவோ வேறு விஷயம். இப்படியாக, உடலுக்கு அப்பாற்பட்ட அனுபவம் ஏற்படும்போது காரண அறிவின் இயல்பு இப்படித்தான் இருக்கிறது - "சரி, இது உயிர்த்தன்மை இல்லை, வாழ்க்கை இல்லை, அப்படியென்றால் வேறு என்னவாக இருக்கும்? இது மரணமாகத்தான் இருக்க முடியும்," என்று சொல்லிக் கொள்கிறது. அதனால் இப்படிப்பட்டவர்கள் தாங்கள் இறக்கவேண்டும் என்று நினைக்கிறார்கள்.

இப்படி, ஆன்மீகப் பாதையில் இருக்கும்போது, அடிக்கடி தங்களுடைய நேரம் வந்துவிட்டது என்று நினைப்பவர்களுக்கு உறுதியான வழிகாட்டுதல் அவசியம். அதனால்தான் எப்பொழுதுமே ஆன்மீக முறைகள் ஒரு குருவின் மேற்பார்வையில், ஒரு கண்டிப்பான சூழ்நிலையில் வழங்கப்பட்டன. உங்களுடைய ஆன்மீக முறை என்பது உங்களுடையதே அல்ல, அது அவருடையது ஆகும். இருபத்தியோராம் நூற்றாண்டில் இதைக் கேட்பவர்களுக்கு இது பயம் தரக்கூடியதாக இருக்கலாம். ஆனால் ஆன்மீக தேடலில் இருப்பவர்களுக்கு அந்த அளவுக்கான சீரும் ஒழுங்குமுறையும் மிகவும் அவசியம். ஆன்மீகத்தில் நீங்கள் வளரும்போது, உங்களுக்குள் தவறான அபிப்பிராயங்களை ஏற்படுத்திக்கொள்ள வாய்ப்பிருக்கிறது, அதனால் எதையாவது செய்துவிடவும் வாய்ப்பிருக்கிறது. இப்படிப்பட்ட நிகழ்வுகளுக்கு துளியும் வாய்ப்பு கொடுக்கக்கூடாது என்பதற்காகத்தான் அந்த ஒழுங்குமுறைகள். வாழ்க்கையை பற்றி உங்களுக்கு அவ்வளவாக புரியவில்லை என்றால் என்ன அர்த்தம்? உங்களுக்கு போதிய அளவு புத்தி இல்லை என்பதுதான் அர்த்தம். அதுதான் நன்றாக தெரிகிறதே! எனக்கு புத்தி இல்லை என்று பார்ப்பதற்கு பதிலாக, வாழ்க்கை அர்த்தமுள்ளதாக இல்லை என்று மாற்றிப் பேசுகிறீர்கள்.

சரி, இப்போது மீதி உள்ளவர்களில், ஒருசிலருக்கு தற்கொலையைப் பற்றி ஏற்கனவே முன்முடிவாக அமையப்பெற்ற ஒரு ஆர்வம் இருக்கிறது. அதனால், தாங்கள் உயிரை எடுத்துக்கொள்ள விரும்புவார்கள். வெளியிலிருந்து அதற்கான எந்த தூண்டுதலும் இருக்காது, ஆனாலும் வாழ்க்கையை முடித்துக்கொள்ள முயற்சிப்பார்கள். நீங்கள் என்னவே செய்தாலும், அவர்கள் தற்கொலை ஆர்வத்தில்தான் இருப்பார்கள், இவர்களின் எண்ணிக்கை சிறியதுதான். நீங்கள் அவர்களுக்கு எப்படிப்பட்ட ஆலோசனைகள் கொடுத்தாலும், என்னதான் சிகிச்சை கொடுத்தாலும், திரும்பத் திரும்ப தற்கொலை உணர்வுக்குள்ளேயே போய்க் கொண்டிருப்பார்கள். ஏதோ ஒரு காரணத்திற்காக இவர்களுக்குள் கர்மாவின் சாஃப்ட்வேரிலேயே ஒரு பிழை ஏற்பட்டுள்ளது. அது

திரும்பத் திரும்ப இதை முடித்துக்கொள்ளவே முயற்சி செய்கிறது. இப்படிப்பட்டவர்கள் வேறு விதமானவர்கள். மீதமுள்ள மற்றவர்கள் எல்லோருக்கும் தற்கொலைக்கான ஆர்வம், அடிப்படையாக, ஆழமான அறியாமையிலிருந்துதான் உருவாகிறது.

வழக்கமாக, கஷ்டமான சூழ்நிலைகளில் திடமாக போராடிக் கொண்டிருப்பவர்கள் ஒருபோதும் தற்கொலை செய்துகொள்ள மாட்டார்கள். ஆயிரம் விஷயங்கள் அவர்கள் விரும்பியபடி நடக்காமல் போனாலும், இன்னும் கடினமாக உழைப்பார்களே தவிர, எப்போதும் தற்கொலை செய்துகொள்ள மாட்டார்கள். ஆனால், ஒரே இடத்தில் உட்கார்ந்துக் கொண்டு, தாங்கள் விரும்பியதுபோல் வாழ்க்கை நடப்பதில்லை என்று நினைப்பவர்கள் தற்கொலை செய்துகொள்வார்கள். ஏனென்றால், அவர்கள் அந்த ஒன்றை மட்டுமே நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். சொல்லப்போனால், நான் நினைத்தபடி நடக்காத விஷயங்கள், உங்களைவிட என்னுடைய வாழ்க்கையில் மிகவும் அதிகமாக இருக்க வாய்ப்பிருக்கிறது. ஆனால், நான் அதையே நினைத்துக்கொண்டு உட்காருவதில்லை. ஏனென்றால், அதைத்தவிர செய்வதற்கு எனக்கு ஆயிரம் விஷயங்கள் இருக்கின்றன. தனியாக ஒரு அறையில் உட்கார்ந்து கொண்டு, நீங்கள் நினைத்தபடி நடக்காமல் போன விஷயங்கள் எத்தனை என்று யோசிக்க ஆரம்பித்தால் வாழ்க்கையை முடித்துக் கொள்ளலாம் என்றுதான் தோன்றும், அது அப்படித்தான்.

பெரும்பாலானவர்களுக்கு, தங்கள் வாழ்க்கையை முடித்துக்கொள்ள வேண்டும் என்று அவர்கள் நினைப்பது மிகவும் அபத்தமானதுதான். நீங்களே பாருங்கள், எப்போது தற்கொலை எண்ணம் வருகிறது? இந்த வாழ்க்கை நீங்கள் எதிர்பார்த்ததுபோல் நடக்கவில்லை, அந்த ஒரே காரணத்திற்காகதான், வேறொன்றுமே இல்லை. இன்றைக்கு வாழ்க்கை நீங்கள் விரும்பிய மாதிரி நடக்காதபோது, இதை முடித்துக்கொள்ளலாம் என்று தோன்றுகிறது. ஆனால், நாளைக்கு நிலைமை கொஞ்சம் மாறிப்போய் சூழ்நிலை கொஞ்சமாவது சரியாகிவிட்டால், உடனே எதிர்காலத்திற்கான திட்டங்களை ஆரம்பித்துவிடுவீர்கள். நாளை காலைக்குள் ஏதோ கொஞ்சமாவது சரியாக போனால், உடனே எண்ணம் மாறிவிடும் - இப்போது உங்களுடைய மூன்றாவது குழந்தையை பெற்றுக்கொள்ளும் வரையாவது வாழவேண்டும் என்று தோன்றும். பேரக்குழந்தைகளை பார்க்கவேண்டும் என்றுகூட நினைப்பீர்கள், அப்படித்தானே? ஆனால், சூழ்நிலையில் எதுவுமே சாதகமாக இல்லை என்று தோன்றும்போது தற்கொலையை பற்றி யோசிக்கிறீர்கள். இது நீங்கள் ஆடும் விளையாட்டு - உங்கள் மனதில் ஆடும் விளையாட்டு - உங்களுக்கு எதிராக நீங்களே ஆடிடும் விளையாட்டு, அவ்வளவுதான். உயிரின் அடிப்படையில் இதற்கு எந்த அர்த்தமும் கிடையாது.

## தற்கொலை எண்ணம் உடையவர்களுக்கு உதவுவது எப்படி?

நீங்கள் நேர்மையுடன் பார்த்தால், இந்த பிரபஞ்சத்தின் அளவில்லாத பிரம்மாண்டத்தில் உங்களுக்கான முக்கியத்துவம் என்பது தூசி அளவும் கிடையாது. காற்றில் 1000 நீர்க்குமிழிகள் மிதந்தால் என்ன, 999 தான் மிதந்தால் என்ன? என்ன பெரிய வித்தியாசம் வந்துவிடப் போகிறது? உங்களைப் போலவும் என்னைப் போலவும் எத்தனை எத்தனை மனிதர்கள் வந்துபோயிருக்கிறார்கள்? ஆனால் சிலபேர் தங்களுக்கு கடவுளால் விதிக்கப்பட்ட நோக்கம் இருப்பதாக நினைத்துக் கொள்கிறார்கள், ஏதோ குறிப்பிட்ட விஷயத்திற்காக கடவுள் தங்களை ஸ்பெஷலாக படைத்திருக்கிறார் என்று நினைத்துக் கொள்கிறார்கள். தங்களைப் பற்றி இப்படிப்பட்ட பிரம்மாண்டமான நினைப்புகளை வைத்திருக்கும்போது, ஏதாவது அவர்கள் நினைத்ததுபோல் நடக்காமல் போனால் கதிகலங்கி போகிறார்கள். தங்களை தாங்களே மிகவும் முக்கியமானவர்கள் என்று நினைத்துக்கொண்டு இருக்கிறார்கள். நீங்கள் மிகவும் முக்கியமானவர் என்ற நினைப்பு இருக்கும்போது, நீங்கள் ஒரு கொடுங்கோலனைப் போல பயங்கர கர்வத்தோடும் திமிரோடும் திரிவீர்கள். இதே தைரியமில்லாத ஒரு ஆளாக இருந்தால், அதே காரணத்திற்காக வருத்தப்பட்டு பாதிப்படைவார். இந்த இரண்டு பேரில் யாருடைய முட்டாள்தனம் பெரியது? துக்கத்தில் இருப்பவர்தான் பெரிய முட்டாள் என்று நான் நினைக்கிறேன். ஆனால் கொடுங்கோலனோ அதிக பாதிப்பை உருவாக்குவார். துக்கத்தில் இருப்பவர் தனக்கு மட்டுமே பாதிப்பு உருவாக்கிக்கொள்கிறார், ஆனால் பகட்டு திமிரில் இருப்பவரோ மற்ற எல்லோருக்கும் பாதிப்பை உருவாக்குகிறார். நான் உங்களுடைய முட்டாள்தனத்தை கடிந்து உங்களை பழிக்கவில்லை. முட்டாள் என்றால் ஆங்கிலத்தில் 'ஸ்டுபிட்' என்று சொல்வார்கள், அந்த வார்த்தைக்கு 'திகைத்து போவது' என்று அர்த்தம். ஒருவர் தன்னுடைய மனதிற்குள் நிகழும் நாடகத்தால் திகைத்து கிடந்தால், அவர்கள் இந்த உயிர்ச்செயலின் அபரிமிதமான மதிப்பை தவறவிட்டு இழந்து விடுவார்கள். அதனால் உங்களுடைய சொந்த மனத்தின் நாடகத்திலே திகைத்து கிடக்காதீர்கள்.

தற்கொலை செய்துகொள்பவர்களில் பெரும்பாலானவர்கள், இந்த உலகம் தங்களை கொடுமைப்படுத்துவதால் அப்படி செய்துகொள்வதில்லை; தங்களுடைய எண்ணங்களாலும் உணர்ச்சிகளாலும் தங்களைத் தாங்களே அவர்கள் கொடுமைப்படுத்திக் கொள்கிறார்கள். இந்த நிலைக்கு அவர்கள் தள்ளப்படுவதற்கு காரணம் என்ன? இந்த உயிர் எப்படி இயங்குகிறது என்று அவர்களுக்கு புரியவில்லை, அவ்வளவுதான். தங்கள் உயிரின்

அடிப்படையான தன்மை என்ன என்பதை புரிந்துகொள்ள அவர்கள் எந்த முயற்சியும் செய்ததில்லை. தாங்கள் உருவாக்கி வைத்துக்கொண்ட அற்பமான எண்ணங்களும் உணர்ச்சிகளுமே அவர்களுக்கு எல்லாமாக ஆகிவிடுகிறது, அவர்களின் பிரபஞ்சமாகவே ஆகிவிடுகிறது. இப்போது அவர்களுக்குள் உருவாக்கி வைத்த இந்த பிரபஞ்சம் சரிந்து குலைய ஆரம்பிக்கும்போது, தங்களுடைய வாழ்க்கையை முடித்துகொள்ள வேண்டும் என்று தோன்றுகிறது. அவர்களுக்குள் *அசதோமா சத்கமய*[13] என்பது இல்லை, அதுதான் காரணம். அவர்கள் அசதோமாவாகவே இருக்கிறார்கள், இருட்டிலேயே வாழ்ந்திட முடிவு செய்துவிட்டார்கள். அவர்களுக்கு எதை கொடுத்தாலும், அது என்னவாக இருந்தாலும் சரி, அதை இருளாக மாற்றி விடுகிறார்கள், ஒரு பிரச்சனையாக மாற்றிக்கொள்கிறார்கள். அவர்களுக்கு ஒரு ஆன்மீக முறையை கொடுத்தால், அதையே ஒரு பிரச்சனையாக்கிக் கொள்வார்கள். கல்யாணம் செய்து வைத்தால் அதையும் பிரச்சனையாக மாற்றிக்கொள்வார்கள். சரியென்று விவாகரத்து கொடுத்தால் அதையும் பிரச்சனையாக்கிக் கொள்வார்கள். அவர்களைப் படிக்க வைத்தால் அதை ஒரு பிரச்சனையாக மாற்றுவார்கள். சரி படிப்பே இல்லாமல் விட்டுவிட்டால் அதையும் பிரச்சனையாக்கிக் கொள்வார்கள். பணம் இல்லை என்றால் பிரச்சனை, பணம் வந்துவிட்டாலும் பிரச்சனை - இப்படி எல்லாவற்றையுமே அவர்கள் பிரச்சனையாக மாற்றிக்கொள்வார்கள். இதற்கு ஒரே காரணம் அவர்களுடைய அறியாமை மட்டுமே, வேறொன்றுமில்லை.

அறியாமை என்று நான் சொல்லும்போது அவர்களுக்கு அணு விஞ்ஞானம் தெரியாது, ராக்கெட் தொழில்நுட்பம் தெரியாது என்பதையெல்லாம் பற்றி பேசவில்லை. இங்கே அறியாமை என்று சொல்வது இதுதான்-உங்களுடைய உயிரின் அடிப்படை பற்றி உங்களுக்கு ஒரு துளிகூட தெரியவில்லை. உங்களுக்கு நீங்களே உருவாக்கிக் கொண்ட எண்ணங்களோடும் உணர்ச்சிகளோடும் மும்முரமாக இருக்கிறீர்கள். உங்களை சுற்றி உருவாக்கிக்கொள்ளும் அற்பமான விஷயங்களில் ஆழ்ந்து விடுகிறீர்கள். உங்களுடைய சொந்த உலகத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். உங்களுடைய சொந்த உலகம் என்று ஒன்றுமே இல்லை, இதைப் புரிந்துகொள்ள வேண்டியது அவசியம். உங்களுடைய சொந்த உலகம் என்பது ஒரு மாயை - அது நீங்களாக உருவாக்கிக் கொண்டது, அது நிஜம் அல்ல. அதனால்தான் எப்போதுமே உங்களுடைய மாயத்திரை சீக்கிரமாக விலகட்டும் என்றே நான் ஆசி வழங்குகிறேன். உங்கள் மாயை விலகும்போது, நீங்கள் செய்து வைத்துக்கொண்ட அத்தனை

---

13 உள்ளெழுச்சிக்கான ஒரு தொன்மையான சமஸ்கிருத பாடல் - "பொய்மையிலிருந்து உண்மையை அடைவோம்" என்று பொருள்.

கற்பனையும் அழிந்து போகிறது. இந்த மாயைகள் அழிவதைத்தான் ஞானோதயம் என்றும் சொல்கிறோம். இப்போதைக்கு நீங்கள் சில கற்பனைகளை பிடித்து வைத்துக்கொள்கிறீர்கள், சில கற்பனைகளை அழிந்திட அனுமதிக்கிறீர்கள். எல்லாமே விழுந்து போய்விட்டால் நீங்கள் ஞானம் அடைந்தவர் ஆகிறீர்கள். இப்படி வளர்த்து வைத்திருந்த கற்பனைகள் எல்லாம் இடிந்து விழுவதை சந்தோஷமாக கையாள தெரிந்துகொண்டால், அப்போது தற்கொலை எண்ணங்களுக்கு இடமே இல்லை.

நான் தற்கொலை செய்துகொள்வேன் என்று மிரட்டும் பலரும் தங்கள் மீது கவனத்தை ஈர்ப்பதற்காகவே அப்படி செய்கிறார்கள். சில நேரங்களில் அது தப்பாகி போய்விடுகிறது - எல்லாருக்கும் தொந்தரவு கொடுக்க மட்டுமே அவர்கள் முயற்சி செய்தார்கள் - ஆனால், எப்படியோ அது தப்பாகப் போய்விட்டது. இது மிகவும் கொடுமையானது. தற்கொலை செய்துகொள்வதற்கு முன் அவர்கள் அனுபவிக்கும் அந்த கடைசி நிமிடங்கள், அதைத் தொடரும் மரணத்தைவிட கொடியது.

ஒருவர் தற்கொலை செய்துகொள்ள விரும்பினால், உடனே மனிதர்கள், "ஐயோ பாவம், அவர் மேல் பரிதாபம் காட்டவேண்டும்," என்று நினைக்கிறார்கள். ஆனால், இதை நீங்கள் அங்கீகரித்து விட்டால், சின்னப் பிரச்சனை வரும்போதெல்லாம் கூட தங்கள் உயிரை எடுத்துக்கொள்ள பார்ப்பார்கள். ஒருவர் எதிர்கொள்ளும் ஒவ்வொரு சின்ன கஷ்டத்திற்கும், அதுதான் இருப்பதிலேயே மோசமான சூழ்நிலை என்று நினைக்க ஆரம்பிப்பார்கள். அதனால், போய் சேர்ந்துவிடலாம் என்றும் நினைப்பார்கள். சமூகத்தின் வழிமுறைகளிலும், அங்கு வாழ்பவர்களின் மனப்பான்மையிலும் இதை அங்கீகரித்து விட்டீர்கள் என்றால் அவ்வளவுதான், பலரும் தங்கள் உயிரை எடுத்துக்கொள்ள ஆரம்பிப்பார்கள். ஒன்றை எல்லோரும் புரிந்துகொள்வதே சிறந்தது: இந்த உயிரை நீங்கள் உருவாக்கவில்லை, அதனால் இந்த உயிரை எடுத்துக்கொள்ளவும் உங்களுக்கு எந்த உரிமையும் இல்லை - அது உங்களுடையதாக இருந்தாலும் சரி, வேறு யாராக இருந்தாலும் சரி - உயிரை எடுப்பது உங்கள் வேலையில்லை, அவ்வளவுதான். வாழ்க்கையில் பல சூழ்நிலைகள் இருக்கும்; சில சரியாக இருக்கும், சில சரியாக இருக்காதுதான், சில சூழ்நிலைகள் மோசமாகவும் இருக்கும். அப்படி இருந்தாலும் ஒரு உயிரை எடுப்பதற்கான உரிமை உங்களுக்கு ஏது? ஒரு உயிரை உருவாக்க உங்களுக்கு திறமை இல்லாதபோது, அதை எடுப்பதற்கு உங்களுக்கு உரிமையே கிடையாது. தற்கொலை செய்யும் நோக்கத்தில் இருப்பவர்களுக்கு சிலசமயம் பரிவு தேவைதான், ஆனால் பெரும்பாலும் அவர்களுக்கு தேவையானது சிகிச்சைதான். அதோடு

ஜாக்கிரதையான விதத்தில், ஓரளவுக்கு அதை கண்டுகொள்ளாமலும் இருக்கவேண்டும்.

ஒரு சமயம் இப்படி நடந்தது: ஒரு இளம் பெண்ணும், பையனும் உள்ளூரில் இருக்கும் காலேஜில் படிக்கும்போது காதலில் விழுந்தார்கள். பிறகு என்ன? வழக்கம் போலத்தான். பாரம்பரியமான குடும்பங்கள், வெவ்வேறு ஜாதிகள், பெற்றோர்கள் தடுத்தார்கள் - அதே கதைதான். அவர்கள், "கல்யாணமா? முடியவே முடியாது, எங்கள் பிணங்களின் மேல்தான்," என்று சொல்லிவிட்டார்கள். பெற்றோர்கள் வழக்கமாக செய்யும் சூளுரைதான் இது. இது வெறும் பயமுறுத்தல்தான்; அவர்கள் என்னவோ உயிரை விடவே மாட்டார்கள். இந்த குடும்பங்கள் எதிர்க்காமல் இருந்தால், பெரும்பாலான காதல் உறவுகள் தானாகவே முறிந்திடும். ஆனால் எப்போது அவர்கள் எதிர்க்க ஆரம்பிக்கிறார்களோ, அப்போது திடீரென்று காதலர்களுக்கு ஒரு லட்சியம் உருவாகிவிடுகிறது. ஏதோ இவர்கள் பெரிய அநீதியை எதிர்த்துப் போராடுவது போலும், அப்படியே இவர்கள் பின்னாடி ஒரு கூட்டம் சேர்ந்துகொள்வது போலும் தோன்றுகிறது. இந்த விஷயத்திலும் அப்படியே நடந்தது, சர்ச்சை பெரிதாகி ஊருக்குள் பிரச்சனையானது. அப்படியானதும் அந்த காதலர்கள் யோசித்தார்கள் - "இந்த பிரச்சனைக்கெல்லாம் காரணம் நாம்தானே, பேசாமல் நாம் நம்முடைய வாழ்க்கையை முடித்துக்கொள்வோம்!" என்று முடிவுசெய்தார்கள். அதனால், வெள்ளியங்கிரி மலை மேலே ஏறிப் போனார்கள்.

வெள்ளியங்கிரி மலை உச்சியிலே ஒரு இடம் இருக்கிறது, அங்கிருந்து உங்கள் உடலைவிட முடியும். அங்கிருந்து குதித்தால் 700-800 அடிக்கு எந்த இடையூறும் இல்லாமல் நன்கு சுகமாக விழலாம், அதற்குப்பின்தான் பாறையில் மோதி சிதறுவீர்கள். சில மனிதர்கள்[14] முழு விழிப்புணர்வுடன் அந்த இடத்தில் தங்கள் உடலை கழட்டிவிட்டு போயிருக்கிறார்கள். மற்றவர்களால் அப்படி செய்யமுடியாது, அதனால் குதித்து விடுகிறார்கள். இப்போது அந்தப் பையனும் பெண்ணும் மலை உச்சிக்குப் போனார்கள். கையோடு கைகோர்த்து நின்றார்கள். இரண்டு பேரும் ஒன்றாக குதிக்க போய்விட்டார்கள், அப்போதென்று பார்த்து அந்த பெண், "ராஜு எனக்கு ரொம்ப பயமாக இருக்கிறது, நீ முதலில் குதித்துவிடேன்!" என்று சொன்னாள். (ஏனோ தெரியவில்லை, எல்லா காதல் படங்களிலும் அந்த முட்டாளின் பெயர் ராஜு என்றே இருக்கிறது!) அந்த பையனோ முழுவேகத்தில் இருந்தான், அதனால், "வா! என் கையை பிடித்துக்கொள், குதிக்கலாம்!" என்றான். அவள், "இல்லை, நீ முதலில் போ! அப்புறம்

14 அத்தியாயம் 11ல், "என்னுடைய முன்பிறவிகள்" என்கிற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

நான் வருகிறேன், நான் உன் பின்னாடியே இருப்பேன்!" என்று சொன்னாள். பையன் ஏகப்பட்ட தமிழ் படங்கள் பார்த்திருக்கிறான், அப்படியே குதித்துவிட்டான். இந்தப் பெண் அந்தப் பாறையின் விளிம்பில் நின்று, "ஐயோ, ராஜு, ஐ லவ் யூ ராஜு," என்று கத்தினாள். பிறகு அவளுடைய சிந்தனை யதார்த்தத்துக்கு மாறியது. "இப்போது ராஜுவே போய்விட்டான், என் காதலே போய்விட்டது. அதோடு எல்லா பிரச்சனையும் போய்விட்டதே! பிரச்சனையே போய்விட்ட பிறகு இன்னொரு உயிரை எதற்காக வீணாக்க வேண்டும்?" அதனால் மலையில் இருந்து கீழே இறங்கி திரும்ப வீட்டுக்குப் போய்விட்டாள். தற்கொலையின் விளிம்பில் இருக்கும் பலபேருக்கு, ஒரே ஒரு கணம் அவர்களுடைய கவனத்தை மாற்றினால் போதும், அதைத் தடுத்துவிடலாம். எப்படியோ சமாளித்து அந்த ஒரு கணத்தை கடந்துபோனவர்கள் அதற்குப் பிறகு பலகாலம் வாழ்ந்திருக்கிறார்கள்.

தற்கொலை செய்துகொள்ள வேண்டும் என்று உண்மையிலேயே விரும்புபவர்கள் பேசாமல் அமைதியாகி விடுவார்கள். யோக பாரம்பரியத்தில், இப்படி சொல்வதுண்டு: ஒருவர், விளக்கை ஏற்றாமல் வெளிச்சமின்றி இருட்டில் தனியாக ஒரு அறையில் உட்கார்ந்தார் என்றால், இதற்கு இரண்டு அர்த்தம் உண்டு. ஒன்று அவர் தற்கொலை செய்துகொள்ள போகிறார். இல்லாவிட்டால் அவர் ஒரு யோகியாக போகிறார். ஏனென்றால் ஒருவிதத்தில் இரண்டுமே தொடர்புடையதுதான். ஒருவிதத்தில், "நான் யோகி ஆகிவிட்டேன்" என்றால், விழிப்புணர்வுடன் "நான்" என்பதை கொன்றுவிட்டேன் என்று அர்த்தம். தற்கொலை செய்பவருக்குகூட அந்த உடலை கொல்வதற்கு எந்த நோக்கமும் கிடையாது. அவர் தன்னையே கொன்றுகொள்ள விரும்புகிறார். தான் என்பதை எப்படி கொல்வது என்று புரியவில்லை. தான் என்பது இந்த உடல் என்று நினைக்கிறார். அதனால் உடலை தூக்கில் தொங்கவிடுகிறார். இல்லையென்றால், அவர் "நான்" என்ற தன்மையை மட்டுமே தூக்கில் தொங்க விட்டிருப்பார். அதனால், இப்படி வெளிச்சம் இல்லாமல், கண்களைத் திறந்து, தனியாக யாராவது உட்கார்ந்தால் பெரும்பாலும் அவர் தற்கொலையை நோக்கித்தான் போகிறார் என்று புரிந்துகொள்ளலாம். உதாரணத்திற்கு, நம் யோக மையமாக இருந்தால் 10 சதவிகிதமான நேரம் அவர் வேறு ஒரு உயர்ந்த நிலையை நோக்கிப்போகிறார் என்று சொல்லலாம். ஒருவேளை அவர் *சம்யமா*[15] *தியானம்* செய்கிறாரோ என்னவோ! அதுவே வெளியுலகமாக இருந்தால்,

---

15 சத்குரு கற்றுத்தரும் ஒரு ஆன்மீகப் பயிற்சி. நீண்ட நேரத்திற்கு ஏதோ ஒன்றினை தொடர்ந்து பார்த்திடும் முறையைக் கொண்ட பயிற்சி.

உயர்ந்த நிலைக்கான சாத்தியம் 1 சதவிகிதம்தான். மற்றவர்களெல்லாம் தற்கொலை நோக்கில்தான் போகிறார்கள்.

தற்கொலை உணர்வு நாட்பட்டு நீடிக்கும் பிரச்சனையாக இருந்தால், அப்படிப்பட்டவர்களுக்கு நாம் என்ன செய்வது? மேற்கத்திய மருத்துவம், உடல்ரீதியாகவும் மனரீதியாகவும் மட்டுமே தற்கொலை போக்குகளை அணுகுகின்றன. இப்போதெல்லாம் அதைக் கையாள்வதில் கொஞ்சம் வளர்ந்திருந்தாலும், அடிப்படையில் அவர்கள் உடல், மனம் என்ற இரண்டு கோணங்களில் மட்டுமே தற்கொலையை புரிந்து கொண்டிருக்கிறார்கள். யோகத்தைப் பொருத்தவரை உடலிலும் மனதிலும் நிகழ்பவையெல்லாம் வெறும் விளைவுகள்தான். உள்ளே வேறு ஏதோ ஒன்று ஆழமாக இருக்கிறது. அதன் விளைவாகத்தான் உடலும் மனமும் இப்படி இருக்கிறது. விளைவுகளை மட்டும் சரிசெய்வது, அறிகுறிகளை மட்டும் சரிசெய்வது போலாகும். நோயை குணப்படுத்துவது என்றால் இதுவல்ல. ஒருவரின் சக்திநிலையில் ஏதாவது சிதைவு ஏற்பட்டிருந்தால், அதன் விளைவாகத்தான் அவருக்கு தற்கொலையை நாடும் போக்கு ஏற்படுகிறது - யோகமுறை அதை அப்படித்தான் அணுகுகிறது. அப்படிப்பட்டவருக்கு, அவருடைய சக்தி நிலையில் உயிர்ப்பை கொண்டுவர வேண்டியது அவசியம். அப்போதுதான் அவரை அதை விட்டு வெளியே கொண்டு வரமுடியும். இதற்கான வழிமுறைகளும் கருவிகளும் இருக்கின்றன. அதன்மூலம் பெரும்பாலானவர்களை மீண்டும் இயல்புக்கு கொண்டுவருவது சாத்தியமே. காலம், சக்தி மற்றும் முறைப்படுத்துதல் ஆகிய மூன்று விஷயங்கள்தான் இதற்கு இடையூறாக முடியும்.

அவருடைய சக்திநிலையில் உடனடியாக உயிர்ப்பை ஏற்படுத்த முடியவில்லை என்றால், வேறென்ன செய்வது சிறந்தது? நீங்களே உயிர்ப்பு மிக்கவராக வேண்டும், அதுவே சிறந்தது. உதாரணமாக இப்படி வைத்துக்கொள்வோம்: அழுது வடியும் ஆபிசில் உட்கார்ந்திருப்பதால் உங்கள் மனம் சோர்வடைகிறது. உடனே அழகிய மலர்கள் நிறைந்த ஒரு பூந்தோட்டத்திற்கு போகிறீர்கள், சட்டென்று மிகவும் உயிரோட்டம் ஆகிவிடுகிறது அல்லவா? அப்படித்தான், நீங்களும் அவருக்காக ஒரு பூவைப் போலாக வேண்டும், அந்த அழகாலும் நறுமணத்தாலும் மாற்றம் ஏற்படும். அப்போது மனச்சோர்வுடன், துக்கத்துடன் இருப்பவர்கள்கூட ஓரளவுக்கு உயிரோட்டம் பெறுவார்கள். மனச்சோர்வு, துக்கம், சந்தோஷம், இவை எல்லாமே தொற்றக் கூடியவைதானே? இந்த உலகத்துக்கு எதைத் தொற்றவைக்க போகிறீர்கள் என்பதை நீங்கள்தான் முடிவுசெய்ய வேண்டும். நீங்கள் உயிரோட்டம் மிக்கவராக இருக்கவேண்டும். அப்போது அவர்கள் உங்களுடன் இருந்தால் அவர்களுக்கு பெரிய வித்தியாசம் ஏற்படும்.

ஆனால் இந்த காலத்தில், நீங்கள் அர்ப்பணிக்க விரும்புவதெல்லாம் ஒரு தொலைபேசி இணைப்பை மட்டும்தான். அதுவும் ஓரளவுக்கு துணையாக இருக்கலாம்.

நான் ஏற்கனவே சொன்னதுபோல் இந்த உயிரை நீங்கள் உருவாக்கவில்லை, அதனால் அதை முடிப்பதைப் பற்றி நீங்கள் பேசவேகூடாது. நீங்கள் ஒரு தனிமனிதன் அல்லது தனித்தன்மை வாய்ந்த உயிர் என்ற அடையாளத்தை கரைத்துவிட்டீர்கள் என்றால் அது வேறு விஷயம். அப்போது உங்கள் அனுபவத்தில் நீங்கள் என்பதும், படைப்பின் மூலமும் ஒன்றி கலந்துவிட்டது. பரிணாம வளர்ச்சியின் அந்த நிலைக்கு வந்துவிட்டீர்கள் என்றால், அப்போது விழிப்புணர்வுடன் உடலை கழட்டி எறிந்திடலாம். அப்போது உங்களுக்கு அனுமதி உண்டு. ஆனால் உடலை சேதப்படுத்திக் கொண்டோ, மரத்தில் தொங்கியோ உயிரைமுடிக்க ஒருபோதும் அனுமதியே கிடையாது. ஒரு நாள் நீங்கள் போய்சேர்ந்த பின் ஒரு மரத்திற்கு கீழே உங்களை புதைக்கலாம், அதில் ஒன்றும் பிரச்சனை இல்லை. ஆனால் மரத்தில் தூக்குப்போட்டு தொங்குவது, உங்களுக்கும் நல்லதில்லை, அந்த மரத்துக்கும் நல்லதில்லை. எல்லாத்துக்கும் மேலாக, வாழ்க்கை உங்களுக்கு சாதகமாக இருந்திருந்தாலும் பாதகமாக இருந்திருந்தாலும், உங்கள் நோக்கம் மிகப் பெரியதாக இருந்தால், ஒவ்வொரு சூழ்நிலையும் ஒரு படிக்கல்தான். உங்களுடைய உச்சகட்ட நலனுக்கு எல்லாமே ஒரு படிக்கல்தான்.

ஒவ்வொருவருக்கும் அவருடைய உயிர் விலைமதிப்பற்றதுதான். இயல்பாகவே அப்படித்தான். அப்படியிருந்தும், அதையும் தாண்டி ஒருவர் தன் சொந்த உயிரை எடுத்துக்கொள்ள முயற்சி செய்தால் என்ன செய்வது? அவர் இன்னும் உயிருடன் இருந்தால், பரிபூரணமாக அவருக்கு "கூடாது" என்றுதான் சொல்வேன். ஆனால், அது ஏற்கனவே நடந்து முடிந்துவிட்டால், அப்போது அவர் எடுத்த முடிவுக்கு மதிப்பு கொடுக்கவேண்டும், அதோடு அங்கேயே விட்டுவிட வேண்டும். இருப்பதிலேயே விலைமதிப்பு மிக்கது ஒருவரின் உயிர். ஆனால் தன் சொந்த உயிரையே எடுத்துக்கொள்ளும் வரம்பு மீறிய படியை ஒருவர் எடுத்துவிட்டால், அது அவர் செய்த முடிவு. நமக்கு அது எவ்வளவுதான் முட்டாள்தனமாக தோன்றினாலும் நாம் அவருடைய அந்த முடிவை மதித்து, அதோடு விட்டுவிட வேண்டும். ஏனென்றால் இது அப்படித்தான். ஆனால், உயிருடன் இருப்பவர்களுக்கு அப்படிச் செய்ய ஒருபோதும் அனுமதியே கிடையாது.

கர்மாவின் அடிப்படையில், ஒரு உயிரின் ஆன்மீக வளர்ச்சியின் அடிப்படையில் - 100 சதவிகிதம் - தற்கொலை என்பது நியாயப்படுத்த

முடியாத ஒன்றுதான். அதைப் பற்றி கேள்வியே இல்லை. நீங்கள் ஒவ்வொரு சூழ்நிலையையும் உங்கள் விடுதலையை நோக்கி முன்னேறிட ஒரு வாய்ப்பாக பார்க்க வேண்டும். ஒவ்வொரு சூழ்நிலையிலும் நீங்கள் சிக்கிக்கொள்ளத் தேவையில்லை. ஒவ்வொரு சூழ்நிலையையும் ஒரு படிக்கல்லாக பயன்படுத்தினால் தற்கொலையை பற்றிய கேள்வியே இல்லை. சமூகங்களில் ஆன்மீக முறைகள் உயிர்ப்புடன் பரவலாக இருந்தால், அங்கு தற்கொலை என்பது முற்றிலும் இல்லாமல் போகும். மன ஆரோக்கியம் குலைந்து புத்திபேதலித்த உதாரணங்கள் மட்டும் இதற்கு விதிவிலக்கு. அவர்கள் என்ன செய்கிறார்கள் என்பது அவர்களுடைய கட்டுப்பாட்டில் இல்லை. அதனால் அவர்கள் ஏதாவது செய்துகொள்ள வாய்ப்பு இருக்கிறது.

## தற்கொலையின் விளைவுகள்

ஒருவர் தற்கொலையால் இறந்து போனால் அது மிகவும் கொடுமையானது. அதேசமயம், உயிரின் அடிப்படையில் பார்த்தால், அப்படி இறப்பவர்களுக்கு மரணத்திற்குப் பிறகு நிகழும் விஷயங்கள் வித்தியாசமாக இருக்குமா? உயிரின் அடிப்படையில் எந்த வித்தியாசமும் இல்லை என்று நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். அது தற்கொலையா, இயல்பான மரணமா அல்லது விபத்தா - உடல் எந்த விதத்தில் முறிந்தது என்பது ஒரு பொருட்டாக இல்லை. ஒருவரின் சாப்பிடும் பழக்கம் மோசமாக இருந்ததால் உடல் முறிந்து போனதா, புகைத்து புகைத்து அல்லது குடியாய் குடித்து உடல் சேதமானதா, அல்லது காதல் தோல்வியால் இதயம் நொறுங்கியதா, இல்லையென்றால் தன்னைதானே சுட்டுக் கொண்டாரா - அது எப்படி ஏற்பட்டது என்பதெல்லாம் பிரபஞ்சத்திற்கு ஒரு பொருட்டே இல்லை. பிராரப்த கர்மா இன்னும் முடியாமல் இருக்கும்போதே உடல் முறிந்து போய்விட்டது - உயிரை பொருத்தவரை முக்கியமான ஒரே விஷயம் இது மட்டும்தான்.

மரணம் எப்படி நடந்தது என்பது முக்கியமல்ல. அதேசமயம், ஒருவர் அந்த மரணத்திற்கு எந்த விதத்தில் வந்தடைந்தார் என்பது முக்கியமானது. யாரோ ஒருவர் சுயவிருப்பத்துடன், சந்தோஷமாக, புகைபிடித்துத்தள்ளி இறந்துவிட்டார் என்று வைத்துக்கொள்வோம். இன்னொருவருக்கு, ஏதோ பொருளாதார பிரச்சனை இருந்தது; அதனால் மிகுந்த துன்பத்தில் ஆழ்ந்து, நெஞ்சுவெடித்து இறந்துவிட்டார். இந்த இரண்டு மரணங்களும் முற்றிலும் வித்தியாசமானது. சந்தோஷமாக மரணத்தை தேடிக்கொண்டதால், புகைபிடித்தவர் மேலானவராகிறார். இன்னொருவரோ துன்பமயமாக அல்லவா இறந்து போனார். இப்படி சொல்வது சமுதாயத்திற்கு பிடிக்காது

- புகைத்தோ, குடித்தோ, போதை மருந்துக்கு அடிமையாகவோ வாழ்ந்த ஒருவர், இறந்த பிறகு, கஷ்டப்பட்டு உழைத்த அந்த மனிதரை விட மேலான நிலையில் இருப்பது நிச்சயம் பிடிக்காது. ஆனால், உயிரின் அடிப்படையில் இது முக்கியமானதில்லை. அவர் அங்கே எந்த விதத்தில் வந்து சேர்ந்தார் என்பதுதான் முக்கியம். இந்த பிரபஞ்சம் "நல்லது" "கெட்டது" என்ற பாகுபாட்டின் அடிப்படையில் எதையும் அளவிடுவது இல்லை. அது உயிரைப் பற்றியது, உயிரை ஆக்கிடும் அம்சங்களைப் பற்றியது மட்டுமே ஆகும். சமூகரீதியான மதிப்பீடுகளும், மனரீதியான அபிப்பிராயங்களும் பிரபஞ்சத்திடம் வேலை செய்யாது. நான்கு பேரை விட நல்லவராக இருப்பது உங்கள் சமூகத்தில் வேண்டுமானால் பெரிய விஷயமாக இருக்கலாம்; ஆனால் இந்த உயிர் அப்படி நினைப்பதில்லை. உயிரை இனிமையாக உணர்ந்தீர்களா அல்லது உங்களுக்குள் இனிமை இல்லாமல் வாழ்ந்தீர்களா - அது மட்டுமே உயிருக்கு பொருள்படும். அதற்கேற்றபடி விளைவுகள் ஏற்படுகின்றன, அவ்வளவுதான்.

ஒரு விஷயத்தை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். தற்கொலையோ, வேறுவிதமான மரணமோ - எதுவாக இருந்தாலும் பொருள் உடல் மட்டும் தான் கொல்லப்படுகிறது. பொருள் உடலை மட்டும்தான் கொல்ல முடியும், அதோடு அன்னமய கோஷமும், மனோமய கோஷத்தின் விழிப்புணர்வான பாகங்களும் மட்டுமே முடிந்து போகின்றன, அவ்வளவுதான். எல்லாத்தையும் மொத்தமாக முடிக்க முடியாது. அதைச்செய்ய வேண்டுமென்றால் உடலின் சூட்சுமமான பகுதிகள் எல்லாவற்றையும் கரைத்திட வேண்டும். அதற்கு முற்றிலும் வேறுவிதமான செயல் தேவைப்படும். இப்போது, பொருள் உடலை கொன்றாலும் உடலின் மற்ற அம்சங்கள் எல்லாம் அப்படியேதான் இருக்கும். அது இன்னொரு பொருள் உடலை கண்டுபிடிக்க பார்க்கும். அதற்கென்று எல்லைகளும் கட்டுப்பாடுகளும் இருக்கின்றன. அதற்கேற்றபடி அது புதிய உடலை தேர்ந்தெடுக்கும். அதை உடனேயும் தேர்ந்தெடுக்கலாம், பத்து வருடங்கள் கழித்தும் தேர்ந்தெடுக்கலாம், அல்லது நூறு வருடங்கள் கழித்தும் தேர்ந்தெடுக்கலாம். இந்த கால அளவு ஒருசில விஷயங்களை பொருத்து அமைந்திடும். சில விஷயங்கள் தீர்ந்து போகும்வரை, அது அப்படியே சுற்றிக்கொண்டிருக்கும். அதனால் இன்னொரு உடலை தேட முடியாது. அது இங்கும் அங்கும் சுற்றி அலையும். அதற்கு காரணம் தற்கொலையோ, விபத்தோ, மாரடைப்போ அல்ல. உங்களுக்கு ஒதுக்கப்பட்ட கர்மா மரணத்திற்கு முன்பாக தீர்ந்து போகவில்லை, அதுதான் காரணம்.

ஒருவேளை சரியாக உங்களுடைய பிராரப்த கர்மா தீரப்போகும் நேரத்திலேயே உங்களுடைய தற்கொலையும் நிகழ்ந்தால், அப்போது

அது இயல்பான மரணத்திற்கு நிகராகும். அந்த அடிப்படையில் பார்த்தால், உடலைப் பொருத்தவரைக்கும் நீங்கள் எப்படி இறந்தீர்கள் என்பது முக்கியமானதல்ல. உங்களை யாராவது கொன்றார்களா அல்லது நீங்களே கொன்று கொண்டீர்களா, அளவுக்கதிகமாக சாப்பிட்டதால் இறந்தீர்களா அல்லது மாரடைப்பு வந்து இறந்தீர்களா - இப்படிப்பட்ட எதுவும் அதற்கு ஒரு பொருட்டேயில்லை. நீங்கள் முறையாக வாழவில்லை என்றால் ஏதோ ஒரு நோய் ஏற்பட்டு இறந்துபோவீர்கள். அப்படியென்றால் இதை தற்கொலை என்று சொல்லலாமா? சமுதாயம் இதை "தற்கொலைத்தனம்" என்று சொல்கிறது. ஒருவர் எப்போதும் புகையிலையை புகைத்து தள்ளிக் கொண்டிருந்தால், "இது என்ன தற்கொலைத்தனமாக இருக்கிறதே!" என்பார்கள். ஆனால், அதை தற்கொலை என்று சொல்ல மாட்டார்கள். ஆனால், ஒருவர் மலையிலிருந்து குதித்துவிட்டாலோ, தூக்கு மாட்டிக் கொண்டாலோ அதைத்தான் தற்கொலை என்று சொல்வார்கள். ஆனால் இந்த வார்த்தைகளெல்லாம் சமூகரீதியானதுதான், சட்டரீதியானதுதான். உயிரை பொருத்தவரை இதற்கெல்லாம் அர்த்தமே கிடையாது - உங்கள் பிராரப்த கர்மாவை முழுமையாக தீர்த்துவிட்டீர்களா இல்லையா என்பது மட்டுமே முக்கியமானது - இந்த ஒரே விஷயத்தை பொருத்துத்தான் இறப்பிற்கு பிறகு என்ன நடக்கும் என்பது இருக்கிறது.

முப்பது வருடங்களுக்கு முன்பு என் வாழ்க்கையில் இது நடந்தது. அந்தக் காலத்தில், நான் ஒரு தென்னந்தோப்பு வைத்திருந்தேன். தொலைவான இடத்தில் இருந்த இந்த தோப்பை நான் ஆரம்பத்திலிருந்து உருவாக்கினேன். என் தோப்பிற்கு முன் அழகான ஒரு ஏரி இருந்தது. எல்லாம் நன்றாக போய்க்கொண்டிருந்தது. அங்கு சரியான கட்டிடம் கிடையாது, அதனால் நான் போகும் போதெல்லாம் ஒரு கூடாரம் அமைத்து தங்குவேன். அப்படி இருப்பது எனக்கு பிடித்தும் இருந்தது. அவையெல்லாம் என்னுடைய மோட்டார் சைக்கிள் நாட்கள். சிலசமயம், எனக்காக சமைத்திட உதவிக்கு ஒருவர் இருப்பார், மற்ற நேரங்களில் நானே பைக்கில் போய் பக்கத்து கிராமத்தில் இருந்த சின்ன ஹோட்டலில் சாப்பிட்டுவிட்டு வருவேன். அது 5 கிலோ மீட்டர் தூரத்தில் இருந்தது. அன்று காலை வண்டியில் போய்க் கொண்டிருந்தேன். ஹோட்டலுக்கு மிகவும் பக்கத்தில் உள்ள கிணற்றை சுற்றி ஒரு கூட்டம் கூடியிருந்தது. என்னவென்று விசாரிக்க வண்டியை நிறுத்தினேன். அதிகாலை 3:30 அல்லது 4:00 மணியளவில் ஒரு பெண்மணி அந்தக் கிணற்றில் குதித்து தற்கொலை செய்துகொண்டு விட்டாள் என்று சொன்னார்கள்.

அப்படியே மோட்டார் சைக்கிளில் உட்கார்ந்தபடி கொஞ்சம் யோசித்தேன். அந்த அதிகாலை நேரத்தில், இருட்டில், வீட்டைவிட்டு வெளியேறி, கிணற்றுக்குள் குதிக்கும் முன் அந்தப் பெண்ணின் மனத்தில்

என்னவெல்லம் நடந்திருக்கும் என்று யோசித்தேன். தன் குழந்தைகளுக்கு என்ன ஆகுமோ என்ற போராட்டம் அவளுக்குள் இருந்திருக்கும். அவள் தன் வாழ்க்கையில் அனுபவித்த துன்பம் என்னவாக இருந்திருந்தாலும், இந்த முடிவுக்கு வர அவளுக்குள் பெரிய போராட்டமே நடந்திருக்கும். கிணற்றுக்குள் குதிப்பதற்கு முன் நிச்சயமாக அவள் நடுங்கிப் போயிருப்பாள். அப்படியிருந்தும் அவள் அதை செய்துகொண்டாள். ஒருவேளை அவள் கிணற்றின் பக்கங்களில் இருந்த சுவர்களில் மோதி செத்திருக்கலாம். இல்லை, தண்ணீரில் விழுந்து மெதுவாக மூழ்கியிருக்கலாம். எப்படி நடந்தது என்று தெரியவில்லை.

அதுவரைக்கும் கிணற்றுக்குள்ளிருந்து அவளுடைய உடலை வெளியே எடுக்க யாரும் முன்வரவில்லை. அதனால் நான் முன்வந்தேன். ஒரு கயிற்றை பிடித்தபடி கிணற்றுக்குள் 85 - 90 அடிவரை போனேன். அங்கே அவளுடைய உடல் தண்ணீருக்குள் 3 அடிக்கு கீழே மிதந்து கொண்டிருந்தது. மிகவும் இளவயதில் இருந்த பெண், இருபத்தைந்தில் இருந்து முப்பது வயதுக்குள் இருக்கும். அவள் உடலை வெளியே கொண்டு வருவது அவ்வளவு சிரமமாக இல்லை; நான் செய்ய வேண்டியதெல்லாம் கயிற்றை அவள் உடலோடு கட்டிவிட்டு மேலே வரவேண்டும், அவ்வளவுதான். கிராமத்துக்காரர்களே உடலை மேலே இழுத்துவிட்டார்கள்.

அதற்குப்பின் சாப்பிட போய்விட்டேன். என்னுடைய சிறுவயதிலிருந்தே, என் உணவை மென்று சாப்பிடும் கணங்கள் எனக்குள் ஆழமான அனுபவத்தை அளித்த கணங்களாகும். இங்கு வேறு ஏதோ ஒன்று நிகழ்கிறது - நீங்கள் சாப்பிடும் உணவு மெதுவாக உங்களுக்குள் ஒரு பாகமாக மாறுகிறது. எது நீங்கள் இல்லை என்று நினைத்தீர்களோ அது நீங்கள் ஆகிறது. வேறெங்கோ மண்ணில் கிடந்தது, மார்க்கெட்டில் இருந்தது, பாத்திரத்தில் இருந்தது, அடுப்பில் இருந்தது, இப்போது திடீரென்று உங்களுடைய பாகமாக மாறுகிறது. உண்மையில் இதல்லவோ மகத்தான காதல் உறவு! அந்தக் கணங்கள் எப்போதுமே எனக்குள் மிக ஆழமான உணர்வைக் கொடுத்தக் கணங்கள்.

இப்படி, மெதுவாக மென்றபடி என் தோசையை சாப்பிட்டு கொண்டிருந்தேன். அந்த சமயத்தில் இந்தப் பெண் இன்னும் என்னை சுற்றியே இருந்தாள். நான் அவளுடன் ஆழமாக ஈடுபட்டு போனேன். அவளுடைய வாழ்க்கை முழுவதையும் நிஜமாகவே எனக்குள் அனுபவித்துக் கொண்டிருந்தேன் - அவளுடைய வலி, அவளுடைய பயங்கள், அவளுடைய பாதிப்புகள் எல்லாவற்றையும் உணர்ந்து பார்த்தேன். இதை விளக்கி சொல்வது மிகவும் கஷ்டம். கிட்டத்தட்ட மூன்றரை நாட்களுக்கு தோட்டத்தில் ஒன்றும் செய்யாமல் உட்கார்ந்தேன். பெரும்பாலான நேரம், ஒரு மரத்திற்கு கீழே

உட்கார்ந்து கொண்டிருந்தேன், சாப்பாடு தூக்கம் எதைப் பற்றியும் கவனம் இல்லை. எனக்காக வேலை செய்தவர்கள், நான் சாப்பிட வேண்டும் என்று அவர்களுக்கு தோன்றும்போது எதையாவது கொண்டுவந்து என் முன்னால் வைப்பார்கள். இல்லாவிட்டால் ராத்திரி பகலாக, அங்கேயே மரத்திற்கு கீழே உட்கார்ந்திருந்தேன். இந்த பெண்ணோ என் கூடவே இருந்தாள்.

இளம் வயதில் இருப்பவர்கள் தற்கொலை செய்துகொண்டால், குறிப்பாக மிகுந்த துயரத்தில் போயிருந்தால், நீண்டகாலத்திற்கு அவர்கள் சுற்றிக் கொண்டிருப்பார்கள். பொதுவாகவே இதுபோன்ற மரணம் நடந்துள்ள இடங்களுக்கு போக, ஏன், அந்த வழியாக போகக்கூட மக்கள் பயப்படுவார்கள். ஆனால், அது அந்த இடத்தைப் பற்றியதல்ல, அந்த ஆளைப் பற்றியது. அந்த ஆளை கையாண்டுவிட்டால், அப்போது இடம் சரியாகிவிடும். இந்த சமயத்தில்தான் காலபைரவ கர்மா போன்ற சடங்குகள் மிகவும் முக்கியமாகின்றன. அதைப்பற்றி பின்னால் பார்ப்போம்.

அத்தியாயம் 4

# மரணத்தை வெல்ல முடியுமா?

உடல் இன்னும் உறுதியாக இருக்கும்போது, எது நடக்கவேண்டும் என்று உள்ளதோ, அதைத் தாண்டி, அதற்கு அப்பாற்பட்டு செல்வது எப்போதும் சாத்தியமே.

## தந்திரங்கள் பலிக்குமா?

மரணம் என்பது பெரும் துயரத்தை விளைவிக்கும் ஒரு நிகழ்வு, அதனால் என்ன விலை கொடுத்தாவது அதை தவிர்க்கவேண்டும் என்ற ஒரு கருத்து நிலவுகிறது. இதனால்தான் மரணத்தை ஏமாற்ற வேண்டும் அல்லது மரணத்தின் வாயில் இருந்து ஒருவரை காப்பாற்ற வேண்டும் என்று நினைக்கிறார்கள். அந்த நம்பிக்கையில் எல்லாவிதமான அபத்தமான விஷயங்களையும் செய்கிறார்கள். மனிதர்கள் தீவிரமாக இதைப் பற்றி பல கற்பனைகள் உருவாக்கியிருக்கிறார்கள். பழங்காலத்தில் இருந்து சொல்லப்படும் சுவாரசியமான கதைகள் இதற்கு ஒரு காரணம். "ஒருவேளை மரணத்தை ஏமாற்றி விடமுடியுமோ?" என்ற எதிர்பார்ப்பை இந்தக் கதைகள் ஏற்படுத்தி இருக்கின்றன. சயின்ஸ் ஃபிக்ஷன் படங்கள்கூட இதை ஓரளவிற்கு தூண்டிவிட்டுள்ளன. அண்டம் விட்டு அண்டம் பயணிக்கும்போது, இந்த இடத்தில் உடலை ஸ்லீப் மோடில் போட்டுவிட்டு, பிறகு வேறு ஒரு யுகத்தில் எழுந்து கொள்வார்கள் இல்லையா? அடிப்படையான விஷயம் இதுதான் - மரணத்தை ஏமாற்ற முடியாது. சில விஷயங்களை செய்வதன் மூலம் அதைத் தள்ளிப்போடலாம், ஆனால் அதைத் தவிர்க்கவே முடியாது.

நம் நாட்டில் இந்த மாதிரி ஒரு நம்பிக்கை இருக்கிறது. ஒருவர் மரணப்படுக்கையில் இருக்கிறாரென்றால், அப்போது மஹாமிருத்தியுஞ்சய மந்திரம் உச்சரிக்க வேண்டும், மிருத்யுஞ்ஜய ஹோமம் செய்ய வேண்டும், இது மரணத்தை தவிர்க்கும் என்று சொல்வார்கள். மிருத்யு என்றால் மரணம். ஜெய என்றால் வெற்றி. அந்த மந்திரமும் ஹோமமும் உங்களுக்கு மரணத்தின் மீது வெற்றியை கொடுப்பதற்காக செய்யப்படுகிறது. ஆயிரக்கணக்கான வருடங்களாக மிருத்யுஞ்ஜய ஹோமம் செய்கிறார்கள். அப்படியிருந்தும், ஒருவர்கூட இத்தனை

ஆண்டுகளுக்கு பிழைத்திருக்கவில்லை. மிருத்யுவை ஒருவர் கூட ஜெயிக்கவில்லை. மிருத்யுவை ஜெயிப்பது என்றால், உடலில் சிரஞ்சீவியாக வாழ்வது என்று அர்த்தம் இல்லை. அப்படி நினைத்தால் அந்த புரிதல் அபத்தமானதுதான். இதுவரை அந்த முயற்சியில் ஒருவரும் ஜெயித்தது இல்லை. ஆனால், உடலுக்கு அப்பாற்பட்டு இருப்பவர் ஒருவர் மரணத்தை ஜெயித்தவர் ஆகிறார்.

நான் அந்த சடங்குகளை மொத்தமாக நிராகரிக்க பார்க்கவில்லை. ஆனால், அது எப்படி செய்யப்படுகிறது, அதை யார் செய்கிறார்கள், எவ்வளவு பேர் அதனால் நிஜமாகவே பயன்பெற்றுள்ளார்கள் - இதெல்லாமே கேள்விக்குரியது. நிச்சயமாக ஏதோ ஓரளவுக்கு நடந்திருக்கலாம், சில சூழ்நிலைகள் தவிர்க்கப்பட்டிருக்கலாம் - அதைப்பற்றி எந்த கேள்வியும் இல்லை. ஆனால் ஜெயம் என்பதை வெற்றி என்று அர்த்தப்படுத்திக் கொள்ளக்கூடாது. "மிருத்யுஞ்ஜெய" என்றால் மரண பயத்தை நீங்கள் கடந்துவிட்டீர்கள் என்று பொருள் கொள்ளலாம். மரண பயத்தை கடந்துவிட்டால் ஒருவிதத்தில் உங்களுக்கு மரணம் என்பது இனி ஒரு பொருட்டில்லை. அந்த சடங்கை பற்றி விவரமாக நான் ஆராய்ந்ததில்லை, ஆனால் என் புரிதலில் இப்படித் தோன்றுகிறது - பண்டைய நாட்களில், ஒருவேளை மரண பயத்திலிருந்து விடுதலை பெறவே இந்த சடங்கை செய்தார்கள் என நினைக்கிறேன். காலப்போக்கில் எங்கேயோ விளம்பரங்களும் வியாபார அம்சங்களும் இதை ஆக்கிரமித்துவிட்டது - அப்போது, இப்படி செய்தால் நீங்கள் சிரஞ்சீவியாக வாழ்வீர்கள் என்று சொல்ல ஆரம்பித்து விட்டார்கள்.

பதினைந்து வருடங்களுக்கு முன்னால் இதுபோல ஒன்றை நாம் கடக்க நேர்ந்தது: கோயம்புத்தூரில் ஒருவர் எதற்காகவோ ஜோசியரிடம் தன்னுடைய சொந்த ஜாதகத்தை எடுத்துக்கொண்டு போனார். ஜோசியர் அதிர்ந்து போனார். "இந்த மனிதர்தான் இறந்துவிட்டாரே, இதைப்போய் என்னிடம் எதற்காக கொண்டு வந்தீர்கள்?" என்று இவரிடம் கேட்டார். இந்த மனிதர் அமைதி இழந்து போனார். அதனால் இன்னும் சில ஜோசியர்களிடம் போய் பார்த்தார். எல்லோரும் இதையேதான் சொன்னார்கள் - இந்த ஜாதகக்காரர் இறந்துவிட்டார் என்றுதான் சொன்னார்கள். கடைசியாக யாரோ அவரை நம்மிடம் அழைத்து வந்தார்கள்.

அந்த மனிதரை கவனித்தேன். அவருடைய சக்திநிலையில் குறிப்பிட்ட அம்சங்களை உறுதியாக்கிட, தியானலிங்கத்தில் குறிப்பிட்ட சில இடங்களில் உட்காரும்படி அவரிடம் சொன்னேன். அவர் அதை செய்தார். வீட்டுக்கு போனார். இது அந்த அபூர்வமான ஜாதகங்களில் ஒன்று - அவர் குறிப்பிட்ட நேரத்தில் இறந்துவிடுவார் என்று முன்கூட்டியே சிலரால்

பார்க்கமுடிந்தது: ஆனால், எப்படியோ அவர் முன்கூட்டியே கணிக்கப்பட்ட அந்த மரண நேரத்தை கடந்து போய்விட்டார் - இந்த ஜென்மத்தில் செய்த கர்மாவாலோ, அல்லது அவருடைய சாதனாவின் மூலமோ, அல்லது அவர் வாழ்க்கையை வாழ்ந்த விதத்தாலோ - எப்படியோ கடந்துவிட்டார். ஒருவிதத்தில் பார்த்தால், அவர் உயிருடன் வாழும் இறந்த மனிதர் என்று சொல்லலாம். அதனால் நான், "எப்படியும் ஒரு கோட்டை தாண்டி விட்டீர்கள், வாருங்கள் இன்னும் சில கோடுகளை தாண்டலாம்," என்று சொல்லி, தியானலிங்கத்தில் வெவ்வேறு இடங்களில் உட்காரச் சொன்னேன். அந்த இடங்களை நான் அவருக்காக குறியிட்டு வைத்தேன். எந்த கேள்வியும் கேட்காமல் போய் உட்கார்ந்தார். இன்றைக்கு அவர் உயிரோடு நலமாக இருக்கிறார் என்றால் அது அவருடைய செயல்தான்.

சமீபத்தில் அவர் இன்னும் உயிரோடு நலமாக இருக்கிறார் என்று எனக்கு தெரிய வந்தது. அவர் எப்படிப் பிழைத்தார் என்று இதுவரை அவருக்கு துளியும் புரியவில்லை. இது பெரிய விஷயம் ஆகிப்போனது. என்னிடம் வந்து, "தியானலிங்கத்தில் உட்காருவதால் மரணத்தை தவிர்க்க முடியுமா?" என்று கேட்க ஆரம்பித்தார்கள். மனிதர்கள் வெவ்வேறு காரணங்களுக்காக இறந்து போகிறார்கள், இதில் மருத்துவக் காரணங்களை நான் சேர்க்கவில்லை. இரண்டு பேர் ஒரே நோயின் காரணமாக இறக்கிறார்கள், உதாரணமாக, சிறுநீரக கோளாறு என்று வைத்துக்கொள்வோம். ஆனால், சக்தி அடிப்படையில் இரண்டு பேரும் ஒரே காரணத்தால் இறக்கிறார்கள் என்று அவசியமில்லை. இரண்டு பேரும் இறப்பதற்கான சக்திரீதியான காரணங்கள் இரண்டும் வித்தியாசமாக இருக்கலாம் - சக்திகள் இரண்டும் மாறுபட்ட வழிகளில் வெளியேறலாம்.

சில சமயங்களில், சித்தி பெற்ற யோகிகள் தங்களுக்கு மரணம் நிகழ்ந்திருக்கக் கூடிய ஒரு கணத்தை தவிர்த்திருக்கிறார்கள். சில விஷயங்களை செய்து அதை கடக்கிறார்கள். தங்களுடைய உடலின் எல்லா செயல்பாடுகளையும் குறையச் செய்தும், சமாதி[1] நிலைகளுக்குள் நுழைந்தும் அதைத் தாண்டி போகிறார்கள்.

ஷீர்டி சாய்பாபாவின் வாழ்க்கையில் அப்படி நடந்துள்ளது. பாபா ஆஸ்துமாவால் பாதிக்கப்பட்டிருந்தார். அன்றைக்கு அது அவரை மோசமாக தாக்கியது, மிகவும் கஷ்டமாக இருந்தது. பாபா அப்போது இறக்கப்போவது போல் உணர்ந்தார். அதனால், முழுமையான சமாதி நிலைக்குள் சென்று அந்த நோயிலிருந்து விடுபடலாம் என்று முடிவு

---

1 அத்தியாயம் 5ல், "சமாதியும் மரணமும்" என்ற தலைப்பில் இதைப் பற்றி மேலும் பார்க்கலாம்.

செய்தார். தன்னை சுற்றி இருந்தவர்களிடம், தன் உடலில் அடுத்த சில நாட்களுக்கு உயிர் நடப்பதற்கான எந்த அறிகுறியும் இருக்காது என்று சொன்னார். அதனால் மூன்று நாட்களுக்கு தன் உடலை அவர்கள் பாதுகாக்க வேண்டுமென்றும், அதற்குப் பிறகும் அவர் திரும்புவதற்கான அறிகுறிகள் தெரியாவிட்டால், அப்போது ஒரு குறிப்பிட்ட இடத்தில் உடலை புதைக்கவேண்டும் என்றும் சொன்னார். அன்றிரவே பாபா சமாதி நிலைக்குள் போய்விட்டார். அவருடைய சுவாசம், நாடித்துடிப்பு எல்லாம் நின்றுபோனது. அடுத்த நாள் கிராமவாசிகள் எல்லாரும் வந்தபோது, அவர் இறந்தே போய்விட்டார் என்று வருத்தப்பட்டார்கள். அதனால் பாபாவின் உடலையாவது அவர் குறிப்பிட்டிருந்த இடத்தில் முறைப்படி புதைக்கலாம் என்று நினைத்தார்கள். நல்லவேளையாக பாபாவின் சிஷ்யர் ஒருவர் இதற்கெல்லாம் பிடிகொடுக்காமல் இருந்தார், அவர்கள் அப்படி செய்யாமல் பார்த்துக்கொண்டார். தன் குருவின் உடலை தன் மடியிலேயே எந்நேரமும் வைத்திருந்தார். ஒருவழியாக மூன்று நாள் கழித்து, பாபாவிடம் இருந்து உயிருக்கான அறிகுறிகள் தெரிந்தன, அவர் மீண்டும் இயல்பு நிலைக்கு வந்துவிட்டார். அதற்குப் பிறகு அவர் 32 ஆண்டுகள் வரை வாழ்ந்தார். சமாதி நிலைக்குள் சென்று தன் பிராண உடலை ரீசார்ஜ் செய்து கொண்டதால், வரையறுக்கப்பட்ட அந்த நேரத்தில் அவரால் மரணத்தை தவிர்க்க முடிந்தது.

சமாதி நிலைகளில் கால உணர்வு இல்லாமல் போகிறது. காலம் என்பதை எப்படி அளக்கிறீர்கள்? பொருள் நிலையில் ஏற்படும் சுழற்சிகளை வைத்துதானே காலத்தை அளக்கிறீர்கள். நீங்கள் சீரான வெளிச்சம் கொண்ட ஒரு ஏசி அறையில், காலையிலிருந்து மாலை வரை உட்கார்ந்து இருக்கிறீர்கள் என்று வைத்துக்கொள்வோம். இப்போது உங்களுக்கு நேரம் போவது எப்படி தெரியும்? உடல் களைப்படைவதால் மட்டுமே தெரிந்துகொள்ள முடியும். நாள் கழியும்போது, உங்கள் உடல் நேரத்தை வைத்துக்கொள்கிறது. மூன்று அல்லது நான்கு மணி நேரத்துக்கு ஒருமுறை நீங்கள் கழிவறைக்கு போகவேண்டும் என்று உங்களிடம் சொல்கிறது. உங்களுக்கு தாகம் எடுக்கிறது என்று சொல்கிறது, பசிக்கிறது என்று சொல்கிறது. இந்த ஒரே விதத்தில் மட்டும்தான் நேரத்தை அறிய முடியும். உடலில் ஏற்படும் சுழற்சிகள் இல்லை என்றால், உங்களுக்கு நேரம் போவதே தெரியாது. அதனால், சமாதிக்குள் சென்று உடலில் ஏற்படும் சுழற்சிகளை குறைத்தால் காலம் பற்றிய உணர்வில்லாமல் போவீர்கள். அப்போது, உங்கள் அனுபவத்தில் காலம் என்பதே இல்லை. அதனால் மற்றவர்களுக்கு பத்து வருடமாக இருப்பது, உங்களுக்கு ஒரு வருடமாக குறைந்திருக்கலாம். ஏனென்றால், உங்களுடைய சுழற்சிகளை பத்து மடங்கு குறைத்துவிட்டீர்கள், அதனால்தான்.

இப்படியாக, வெளியே இருக்கும் கடிகாரத்தை ஏமாற்றிவிட்டீர்கள். ஆனால் காலத்தையே நீங்கள் ஏமாற்றவில்லை. ஏனென்றால் காலம் என்பது கடிகாரத்தில் இல்லை. கடிகாரம் உங்களுடைய சிறுநீரகத்தை போன்றது. அது உங்களுக்காக உள்ளுக்குள் இருந்து கணக்கு வைத்துக்கொள்கிறது. கடிகாரம் காலத்தை உருவாக்குவதில்லை. காலம் என்பது முற்றிலும் மாறுபட்ட ஒரு பரிமாணம். பொருள்நிலையில் உள்ள சுழற்சிகள் - இந்த பூமி சுழல்கிறது, சூரியனை சுற்றி வருகிறது - இப்படித்தான் நாம் நேரத்தை எண்ணுகிறோம் - பொருள் தன்மையில் வெளிப்படும் விஷயங்களோடு தொடர்புபடுத்தி நேரத்தை எண்ணுகிறோம். அப்படியென்றால் கோள்கள் எல்லாம் இல்லாமலிருந்தால் காலம் என்பது இருக்காதா? அப்போதும் இருக்கும். இந்த படைப்பு இருப்பதற்கான அடித்தளமே காலம்தான். காலம் இல்லாமல் படைப்பு என்பதே இல்லை.

இப்போது, உங்களுடைய உள்ளுறுப்புகளின் இயக்கத்தை, அதாவது வளர்சிதை மாற்றத்தை குறைத்துவிட்டால் - ஒரு நிமிடத்திற்கு நீங்கள் எடுக்கும் சுவாசத்தின் எண்ணிக்கையை குறைத்தால் கூட - நீங்கள் அதிக காலம் வாழமுடியும். நீங்கள் காலத்தை ஏமாற்றவில்லை. இந்த உடலை மெதுவாக போகச்செய்து காலத்தை நீட்டிக்கிறீர்கள், அவ்வளவுதான். உங்களுக்கும் உங்கள் உடலுக்கும் ஒரு இடைவெளி உருவாக்கினால், காலத்தை ஏமாற்ற முடியும். சமாதி இப்படித்தான் வேலை செய்கிறது. ஒருவேளை, உங்கள் உடலை கடுங்குளிரான ஃப்ரீசரில் வைத்துவிட்டு வாழ்க்கையை உணராமல் வாழ்ந்தால், உதாரணமாக நூறு வருடங்களுக்கு வைத்துவிட்டீர்கள் என்று வைத்துக்கொள்வோம். நூறு வருடங்களுக்குப் பிறகு எழுந்தீர்கள் என்றால், உங்களுடைய வாழ்நாள் அதிகரிக்காது. ஏனென்றால் அந்த நூறு வருடங்களுக்கு நீங்கள் வாழவே இல்லை. அந்த நூறு வருடங்களுக்கு நீங்கள் வாழ்க்கையை அனுபவித்திருந்தால் அப்போது அதில் அர்த்தம் இருக்கிறது. நீங்கள் இல்லாமல் போய்விட்டு, நூறு வருடங்கள் கழித்து சும்மா அப்படியே எழும்பினால் - அது இருபது ஆண்டுகள் சிறையில் இருந்துவிட்டு திரும்பிய ஒரு கைதியை போலத்தான். அதில் எந்த ஆதாயமும் இல்லை. இனப்பெருக்கம் ஏற்பட்டு புதிய உடல் கிடைக்கும் வாய்ப்புத்தான் இருக்கிறதே. பிறகு ஏன் பழைய உடலை பாதுகாக்க வேண்டும்? அதில் என்ன அர்த்தம் இருக்கிறது? இதெல்லாம் வெறும் எகிப்திய கனவுதான்? அந்த மம்மிகள் எல்லாம் இப்போது எப்படி இருக்கிறது என்று நீங்கள் பார்க்கவேண்டும் - காய்ந்துபோன குப்பையாகத்தான் இருக்கிறது.

நான் வேறு சில சூழ்நிலைகளில் அல்லது யோகா நிகழ்ச்சிகளில் இருக்கும்போது, அங்கே இருப்பவர்களிடம், "கவலைப்படாதீர்கள், அடுத்த சில நாட்களுக்கு அல்லது வாரங்களுக்கு நீங்கள் இறக்கமாட்டீர்கள், அதை

நான் பார்த்துக் கொள்கிறேன். இது என் உறுதி," என்று சொல்வேன். ஒரு தடவை நான் ஒரு நிகழ்ச்சியின் நடுவில் இருக்கும்போது ஒரு பிரம்மச்சாரியை பாம்பு கடித்துவிட்டது. அவரை என்னிடம் கொண்டு வந்தார்கள். "தரையில் ஊர்ந்து செல்லும் ஒரு ஜந்து கடித்ததால் ஒன்றும் இவர் சாகமாட்டார். அந்த அளவுக்கு உயிரை நம் கையில் எடுத்திருக்கிறோம்," என்று சொன்னேன். அவர் பிழைத்தார். இன்னும் சில சூழ்நிலைகளில்கூட இப்படி நடந்திருக்கிறது. அதனால் காலப்போக்கில், "சத்குரு, உங்களால் மரணத்தை ஏமாற்ற முடியுமா?" என்று கேட்க ஆரம்பித்துவிட்டார்கள்.

நாம் ஒன்றும் மரணத்தை ஏமாற்றவில்லை. உயிர் நிகழ்வதை உறுதிசெய்கிறோம், அவ்வளவுதான்! இப்போது, என்னுடைய உடலை ஸ்திரமாக வைத்துக் கொள்வதற்கு - குறிப்பிட்ட விதத்தில் அதை செய்வதற்கு - நான் வெளியில் இருந்து சில உதவிகளை பயன்படுத்துகிறேன்.[2] அதேபோல், ஈஷாவில் நிகழும் உயர்நிலை ஆன்மீக வகுப்புகளின்போது, நான் இழுத்துப் பிடித்து வைக்கும் ஒரு கருவியாக செயல்படுகிறேன். ஏனென்றால் அந்த கணத்தில் எல்லாமே என்னோடு இணைக்கப்பட்டுள்ளது. அதனால்தான் வகுப்புகளின்போது ஒவ்வொரு சின்ன விஷயத்தைப் பற்றியும் அவ்வளவு கறாராக இருக்கிறேன். நிகழ்ச்சிக்கு வருபவர்கள் - அவர்கள் எங்கே உட்கார வேண்டும், எங்கே நிற்கவேண்டும், எப்போது வரவேண்டும், எப்போது போகவேண்டும் - எல்லாமே இப்படித்தான் இருக்கவேண்டும் என்று சொல்கிறோம். வகுப்பின் நடுவில் அவர்கள் கழிவறைக்குப் போக எழுந்தால்கூட விடமாட்டோம். ஏனென்றால், சூழ்நிலையில் அந்தளவுக்கு கண்டிப்பாக இல்லை என்றால், அவர்களை இழுத்து பிடித்து வைத்து துணைசெய்யும் கருவியாக நாம் செயல்பட முடியாது. அந்த சூழ்நிலையில் எல்லாமே குறிப்பிட்ட விதத்தில்தான் நடக்கவேண்டும் என்றே நாம் விரும்புவோம். ஏனென்றால் இந்த சூழ்நிலை கொஞ்சம் தளர்ந்து போய்விட்டால் கூட, அதற்குப்பின் அதை சமாளிப்பதற்கு சாத்தியமே இல்லை என்ற அளவுக்கு ஆகிவிடும். எல்லோருமே சிரத்தையுடன் ஒரே நோக்கமாக இருந்தால் உங்களுக்கு தேவையானதை செய்வது சுலபம். நமக்கு போதிய இடவசதி இல்லாதபோது நிகழ்ச்சிகளை வெளியிடங்களில் நடத்தினோம். அப்போது என்னுடைய முதுகுத்தண்டில் எலுமிச்சம் பழம் அளவுக்கு பெரிய கட்டிகள் தோன்றுவது வழக்கம். அது இரண்டு மூன்று நாட்களுக்கு இருந்திடும். ஏனென்றால், உடலின் மேல் அந்தளவிற்கு பளு இருந்தது. இப்போது சொந்தமாக நமக்கென்று கட்டப்பட்ட இடம்

---

2 தனது பொருள் உடலை தக்கவைத்திட, சத்குரு அவர்கள் வெளியிலிருந்து எடுத்துக்கொள்ளும் குறிப்பிட்ட சக்திரீதியான உதவியைக் குறிக்கிறது.

இருப்பதால் அந்த ஒரு அம்சமாவது சரியாகி இருக்கிறது. இந்த வகுப்புகளையெல்லாம் பிரத்யேகமாக அதற்காகவே உருவாக்கப்பட்ட இடத்தில் நடத்துவது மிகவும் எளிதானது. வேறேதோ இடம் என்றால் அங்கே தினமும் வெவ்வேறு விஷயங்கள் நடந்துகொண்டிருக்கும், அது அவ்வளவு சிறந்ததாக இருக்காது.

இன்னொருவரின் வாழ்வையும் மரணத்தையும் நம் கைகளில் எடுத்துக் கொள்வது மிகவும் சாத்தியமானதே! அப்படிப் பார்த்தால், ஒவ்வொரு உயிருக்கும் அதற்கே உரிய வாழ்க்கைப் பாதை இருக்கிறது - அது எப்போது பிறக்கிறது, எப்படி வாழ்கிறது, என்னவெல்லாம் அனுபவிக்கிறது, எப்போது இறக்கிறது - இப்படி நிறைய இருக்கிறது. ஆன்மீக முறைகளின் சாரமே எல்லோரையும் ஒரே பாதையில் கொண்டுவருவதுதான். ஆளாளுக்கு ஒரு பாதையில் போய்க்கொண்டு இருப்பதில்லை. குறிப்பாக வகுப்புகளின்போது, எல்லோரையும் ஒரே பாதையில் கொண்டு வருவதுதான் அடிப்படை நோக்கம். அவர்கள் எல்லோரும் ஒரே நோக்கத்தில் சிரத்தையுடன் இருக்கும்படி செய்தால், அந்த கணத்தில் எல்லோருடைய வாழ்வும் ஒரே பாதையில் இருக்கின்றது; அப்போது அவர்களை பிடித்து வைப்பது சுலபமாக இருக்கும். அவர்களின் வாழ்க்கை குறிப்பிட்ட தன்மையில் நடக்கும்படி நாம் உறுதிசெய்யலாம், அதை எளிதாக செய்யலாம். வகுப்பின்போது இப்படியே நடக்கும்படி நாம் பார்த்துக் கொள்கிறோம். ஆளாளுக்கு சொந்தமாக ஒரு பாதையில் பறந்து கொண்டிருந்தால், 500 பேரை ஒன்றாக பிடித்துவைக்க முடியாது. அவர்களுக்கு வேண்டியது தவறாமல் நடக்கும்படி செய்யமுடியாது.

இது துளியும் பிசிறு இல்லாதளவுக்கு கச்சிதமானதா? இல்லை. ஆனால் முயற்சித்துப் பார்க்கும் அளவுக்கு கச்சிதமானது. பரிபூரணமானது என்று சொல்லமுடியாது, ஆனால் 99.9 சதவிகிதம் பரிபூரணமானது. மற்றதெல்லாம் அந்த சூழ்நிலையை நாம் எப்படி சமாளிக்கிறோம் என்பதைப் பொருத்தது. இது மட்டுமே என்று கிடையாது, இன்னும் எவ்வளவோ விஷயங்கள் இதற்காக செய்யப்படுகிறது. ஆனால் அதையெல்லாம் பற்றி நான் பேசினால், அது ஏதோ புரியாத பாஷை போல் இருக்கும்.

மரணப்படுக்கையில் இருப்பவர்களின் புகைப்படங்கள் தினமும் எனக்கு வந்து கொண்டிருக்கும், தினமும் ஒரு டஜனாவது வரும். அவர்கள் இறப்பார்களா, இல்லையா என்று மற்றவர்கள் தெரிந்துகொள்ள விரும்புவார்கள். அல்லது அவர் மீண்டும் நலமாகிட ஏதாவது செய்யமுடியுமா அல்லது அவருடைய மரணத்துக்கு இதுதான் சரியான நேரமா அல்லது அந்த உயிருக்காக ஏதாவது செய்யமுடியுமா என்றும் கேட்பார்கள். இதெல்லாம் அதிக சத்தமும் ஆர்ப்பாட்டமும் செய்யாமல்

கையாளப்படுகிறது. மிகுந்த ஆர்ப்பாட்டம் செய்து இதை பெரிய விஷயமாக ஆக்கிவிட்டால், நான் ஒரு சூப்பர்மேன் போல் ஆகிவிடுவேன். ஆனால் அதற்குப் பிறகு வெளியேபோய், முன்பின் தெரியாதவர்போல் என்னால் கோல்ஃப் விளையாட முடியாதே, அதுதான் பிரச்சனை! அதனால் இப்படி இருப்பதே நல்லது.

இதற்கு முன்னுள்ள அத்தியாயத்தில்[3], எம்முடைய ஈஷா யோகா ஆசிரியர் ஒருவர் இமயமலைக்கு போனபோது இறந்துவிட்டார் என்று விவரமாகச் சொல்லியிருந்தேன். இப்போது, மரணத்தை தவிர்க்கவும் தள்ளிப்போடவும் சிலசமயம் வாய்ப்பிருக்கிறது எனும்போது, அவருடைய மரணத்தையும் தவிர்த்திருக்க முடியாதா? அதுபோன்ற விஷயங்களில் தலையிட்டால் அதற்காக எத்தனையோ விஷயங்களை செய்ய வேண்டியிருக்கும். இன்றைய உலகில் அப்படி செய்வதற்கு, அந்த பரிமாணத்தில் மனிதர்கள் நமக்கு திறந்த நிலையில் இல்லை. இதற்கு பல்வேறு விதமான கலாச்சார சூழ்நிலைகளும் மனப்பான்மைகளும் காரணமாக இருக்கின்றன. யோக மையத்தில் இருப்பவர்கள் வேண்டுமென்றால் ஓரளவுக்கு திறந்தநிலையில் இருக்கிறார்கள், அவர்களுக்கு ஏதாவது செய்யலாம். ஆனால் அவர்கள்கூட முழுமையாக திறந்து இல்லை. இந்த நவீன வாழ்க்கைமுறையின் மிகவும் மோசமான விஷயம் இதுதான் - எல்லாவற்றிற்குமே விளக்கம் தர வேண்டியிருக்கிறது. ஆனால் இந்த உயிரோ அப்படி வேலை செய்வதில்லையே! நீங்களே சொல்லுங்கள், நீங்கள் உயிருடன் இருப்பது எப்படி? உங்களுடைய விஞ்ஞானத்தை எல்லாம் வைத்துக்கொண்டே சொல்லுங்கள், நீங்கள் உயிரோடு இருப்பது எப்படி என்று எனக்கு விளக்கமாக சொல்லுங்களேன்! உங்களுடைய விளக்கத்தில் எத்தனை ஓட்டை இருக்கிறது என்று என்னால் காட்டிடமுடியும்.

இப்போது எல்லாவற்றுக்கும் விளக்கம் தரவேண்டியிருக்கிறது. அதனால் அவர்களுக்கு பல விஷயங்களை நம்மால் செய்ய முடிவதில்லை. எல்லாவற்றையும் அவர்களுடைய எல்லைக்குட்பட்ட தர்க்க அறிவின் கண்ணாடி வழியாக பார்ப்பார்கள், தங்களுக்குத்தானே எதையாவது முடிவுசெய்து கொள்வார்கள். ஒருசில பேரிடம் மட்டுமே ஓரளவுக்கு தலையிடமுடியும், மற்றவர்களையெல்லாம் தொடவே முடியாது. காரண விளக்கம் சொல்லாமல் அவர்களிடம் எதுவும் செய்யமுடியாது. இன்றைய வாழ்க்கையின் தன்மை இப்படித்தான் இருக்கிறது. சும்மா அவரைப் பார்த்து, "நீ போகாதே" என்று மட்டும் சொல்லியிருந்தால், அது வேலை செய்திருக்காது.

---

3 அத்தியாயம் 3ல், "மரணத்தை முன்கூட்டியே கணிக்க முடியுமா?" என்ற தலைப்பின் கீழ் குறிப்பிடப்பட்ட ஆசிரியரின் மரணம்.

அப்படியென்றால், அது எப்படியும் நடக்கவேண்டியதாக இருந்ததா? அவசியம் இல்லை. உடல் இன்னும் உறுதியாக இருக்கும்போது, எது நடக்கவேண்டும் என்று உள்ளதோ, அதை கடந்துசெல்வது எப்போதும் சாத்தியம்தான். ஒருவேளை அவரை நீண்டகாலத்திற்கு ஆன்மீக சாதனையில் ஈடுபட சொல்லியிருப்பேன். ஆனால், நான் சொன்னேன் என்பதற்காக மட்டுமே அவர் ஒத்துப்போயிருக்க மாட்டார். 45 நாட்களுக்கு அவரை மௌனத்தில் இருக்கச் சொன்னேன் என்றால் அதை அவர் ஏதோ தண்டனை என்று நினைத்திருப்பார். ஒருவேளை பின்கதவு வழியாக வெளியே நழுவிட பார்த்திருப்பார். மரணம் வேறு பலவிதங்களில் அவருக்கு ஏற்பட்டிருக்கலாம்.

இன்றைய உலகத்தில் ஒருவரை பார்த்து, "சும்மா இதைச் செய்யுங்கள்" என்று சொல்லிட முடியாது. அவருக்கு அதை விளக்கமாக சொல்ல வேண்டும்; ஆனால் இதையெல்லாம் விளக்கிச் சொல்லவும் முடியாது. ஒன்று - இது காரண அறிவுக்கு அப்பாற்பட்டு இருக்கலாம். இன்னொன்று - இது "வெட்டு ஒன்று துண்டு இரண்டு" என்ற விஷயமும் கிடையாது. நம்முடைய புரிதலிலேயே அவர் இறக்கப் போகிறார் என்று 100 சதவிகிதம் நிச்சயமாக இருக்கிறதா என்றால் - இல்லை. இறந்துவிடுவார் என்பதுபோல் தெரிகிறது. சில அறிகுறிகள் இருக்கின்றன. அது மரணம் நெருங்கிவிட்டது என்று சொல்கிறது, அதனால் அவர் இறந்திடலாம் என்று நினைக்கிறேன். ஆனால், அவர் இறக்காமலும் இருக்கலாம். அதற்கான அறிகுறி தெரிகிறது, அபாயத்தை கவனிக்கிறீர்கள், அதனால் பின்னால் நகர்ந்து கொள்கிறீர்கள், அவ்வளவுதான். "ஆமாம், இது இப்படித்தான்; இது நிச்சயமாக நடக்கப்போகிறது," என்றெல்லாம் சொல்லமுடியாது. வாழ்க்கை என்பது அப்படி கிடையாது. இரவுக்கும் பகலுக்கும் நடுவே இருக்கும் பகுதி ஒன்று எப்போதும் இருக்கிறது.

இப்போது, ஒரு குருவோ அல்லது இதில் தலையிடும் திறமை கொண்ட ஒருவரோ இருந்தாலும்கூட, எதற்காக அவர் தலையிட வேண்டும்? ஆன்மீக காரணங்கள் இருந்தால், நாம் தலையிடுவோம். இல்லையென்றால் சில கணங்களில் கருணை மிகுதியால், நாம் தலையிடலாம். ஆனால் எல்லா நேரமும் இப்படி தலையிடுவது நல்லதல்ல. ஏனென்றால் நீங்கள் ஒன்றும் மரணத்தை தவிர்க்கவில்லை, அதை தள்ளித்தான் வைக்கிறீர்கள். அப்படி செய்யும்போது, அடுத்து வரவிருப்பது இப்போது வந்திருப்பதைப் போல நன்றாகவே இருக்கும் என்று சொல்ல முடியாது. அதனால் எப்போதுமே தலையிட வேண்டும் என்று அவசியம் இல்லை. ஆனால் இன்று இருபத்தோராம் நூற்றாண்டின் நீதிகள், "நீங்கள் தலையிட்டிருக்கலாம், அப்படியிருந்தும் அதை செய்யவில்லை, இது கொலைக்கு சமமாகும்," என்று சொல்லலாம். இருபத்தோராம்

நூற்றாண்டின் மனிதர்கள் தங்களை சிரஞ்சீவிகள் என்று நினைத்துக் கொள்கிறார்கள்: அவர்களுக்கு மரணமே கிடையாதாம். ஆமாம், அவருக்கான இரங்கல் செய்தியை செய்தித்தாளில் அச்சடிக்கும் வரை அவர்களுக்கு மரணமே கிடையாதுதான். அந்தளவுக்கு தங்களுடைய அழியக்கூடிய இயல்பை ஏற்காமல், மறுக்கும் நிலையில் மனிதர்கள் இருக்கிறார்கள்.

## இறந்தவர் மீளும் கதை

இறந்தவரை மீண்டும் உயிர் பெறச் செய்வது என்பது பெரும்பாலானவர்களுக்கு இருக்கும் தீவிரமான மோகம். அவர்களைப் பொருத்தவரை, ஒருவரின் ஆன்மீக சக்திகளை சோதிக்க அதுதான் உச்சபட்ச சோதனை என்று நினைக்கிறார்கள். பெரும்பாலானவர்கள் உயிருடன் இருக்கும்போதே இறந்தவர்கள் போலத்தான் வாழ்கிறார்கள். ஏனென்றால், தங்களுக்குள் இருக்கும் ஏராளமான விஷயங்களைப் பற்றி அவர்களுக்கு உணர்வே இல்லை. விழிப்புணர்வில்லாமல் வாழ்வதே இறந்ததுக்கு நிகரானதுதான். அப்படிப் பார்த்தால், ஆன்மீக முறைகள் எல்லாமே இறந்தவர்களை உயிர்ப்பிப்பது போலத்தான். அந்த அர்த்தத்தில், இறந்தவர்களை உயிரோட்டம் ஆக்குவதுதான் என் வேலை. ஆனால், அவர்கள் கேட்பது அந்த அர்த்தத்தில் அல்ல. என்னால் ஒரு பிணத்தை மீண்டும் உயிருடன் வாழவைக்க முடியுமா என்று தெரிந்து கொள்வதில்தான் அவர்களுக்கு பெரிய ஆர்வம். இந்த ஆசை குழந்தைத்தனமானது, பக்குவமில்லாதது. வரலாற்றில் பிரசித்தமான சில நிகழ்வுகள்தான் இந்த ஆசைக்கு காரணம்.

நான் முதல்முறையாக அமெரிக்காவுக்கு பயணித்தபோது ஒரு கூட்டத்தில் பேசிக்கொண்டிருந்தேன். அப்போது தீவிர மதநம்பிக்கை கொண்ட ஒருவர் எழுந்து, “உங்களால் இறந்தவரை உயிர்த்தெழச் செய்யமுடியுமா?” என்று கேட்டார். நான், “அப்படிப்பட்ட முட்டாள்தனத்தை ஏன் செய்வேன்?” என்று சொன்னேன். அது முட்டாள்தனம்தான். இறந்தவர்கள் இறந்தவர்களாகவே இருக்க வேண்டுமல்லவா? இறந்துபோனவர்கள் எல்லாம் திரும்பவும் வந்துவிட்டால், நாம் இங்கே உயிர்வாழ முடியுமா? அவர்கள் போய் சேர்ந்துவிட்டார்கள் என்பதில் உங்களுக்கு சந்தோஷம் இல்லையா? உங்களுடைய கணவர், மனைவி, அம்மா, அப்பா என்று இப்படி யாரோ ஒரு ஆளைப்பற்றி மட்டும் நீங்கள் நினைத்துக்கொண்டிருக்கலாம். நான் சொல்வதோ - இந்த பூமியில் இதுவரை கோடான கோடி பேர் இறந்து போயிருக்கிறார்கள், டைனோசர்கள் உட்பட. அவர்கள் எல்லாம் போய் சேர்ந்ததால்தானே, நம்மால் இங்கே வாழமுடிகிறது. எந்த மாதிரி முட்டாள், இறந்தவர்களை மீட்டுக்கொண்டு வருவான்? உயிருக்காக

துளியும் உணர்வில்லாத, வாழ்க்கையைப் பற்றி துளியும் புரிதல் இல்லாத ஒருவர்தான், உயிர்ச்செயலோடு தலையிட்டு இறந்தவரை மீட்க பார்ப்பார். உங்களுக்குள் ஆழமான மாற்றத்தை கொண்டுவருவது என்பது ஒரு விஷயம். ஆனால், உயிர் விஷயத்தில் தலையிட்டு அதை சரிசெய்வது வேறு விஷயம். நாம் புரிந்துகொண்டுள்ளதை விட, உயிரின் நிகழ்வு என்பது மிகவும் ஆழமானது. அதனால், அதற்குள் குத்தி குடைந்திட முயற்சிப்பது அபத்தமானது.

ஒருமுறை இப்படி நடந்தது: அமெரிக்காவில், டெக்சஸ் என்ற ஊரில் வாழ்ந்த வயதான தம்பதிக்கு ஒரு கனவு இருந்தது - புனித பூமியான ஜெருசலேம் நகருக்கு போகவேண்டும். எனவே யாத்திரைக்கு போனார்கள். அந்த இடத்தில் எடுத்துவைத்த ஒவ்வொரு அடியையும் பூரிப்புடன் அனுபவித்தார்கள். சிலுவையுடன் இயேசு நடந்துபோன அதே சாலையில் நடந்தார்கள். இயேசு நீரின் மேல் நடந்த அதே இடத்திற்கு போய் பார்த்தார்கள். இப்படி பல இடங்களுக்கு போனார்கள். துரதிர்ஷ்டவசமாக, இந்த பூரிப்பில், மனைவிக்கு மாரடைப்பு ஏற்பட்டு இறந்து போனார். இறுதிச்சடங்கு செய்யும் தொழிலில் இருக்கும் உள்ளூர்க்காரர் ஒருவர் கணவரிடம் வந்தார், "பாருங்கள், நாங்கள் 6,000 டாலருக்கு எல்லா சடங்குகளையும் இங்கேயே செய்துகொடுப்போம். நீங்கள் மனைவியை மீண்டும் டெக்சஸ் நகருக்கு எடுத்துப்போக வேண்டுமென்றால் 24,000 டாலர் செலவாகும், அதோடு உங்கள் ஊரில் இறுதிச்சடங்குக்கு எவ்வளவு வாங்குவார்கள் என்று தெரியாது. நாங்களே செய்து தருகிறோம்," என்று சொன்னார். கணவர் யோசித்தார். பிறகு அவர், "இல்லை வேண்டாம். நான் டெக்சஸ் நகருக்கே அவளை எடுத்துச் செல்கிறேன்," என்றார். அவர்கள், "ஏன்? இதுதானே புனிதபூமி, அவரை புதைப்பதற்கு இதுதானே சிறந்த இடம், அதோடு செலவும் குறைவுதானே?" என்று கேட்டார்கள். அவர் மறுபடியும் யோசித்தார், "வேண்டாம், நான் அவளை டெக்சஸ் நகருக்குத்தான் எடுத்துச் செல்கிறேன்," என்று சொல்லிவிட்டார். அவர்கள், "ஏன்? அதில் எந்த அர்த்தமும் இல்லையே. ஏன் அப்படி செய்ய விரும்புகிறீர்கள்?" என்று கேட்டார்கள். அவர் சொன்னார், "டெக்சஸ் நகரில், இறந்தவர்கள் இறந்தவர்களாகவே இருப்பார்கள்."

வரலாற்றில், இறந்துவிட்டதாக அறிவிக்கப்பட்ட பல மனிதர்கள் கொஞ்ச நேரம் கழித்து உயிருடன் வந்த நிகழ்வுகள் இருந்திருக்கிறது. சில சமயங்களில், இறுதிச்சடங்கின் போது சவப்பெட்டியிலிருந்து எழுந்து உட்கார்ந்த சம்பவங்களும் உண்டு. தங்களுக்குப் பிரியமானவர்கள் இறந்துவிட்டால், அவர்களை மீண்டும் உயிர்ப்பிக்க ஏதாவது அற்புதம் நிகழாதா என்று பலரும் நினைப்பதற்கு இதுவும் ஒரு காரணம். ஆனால் இந்த நிகழ்ச்சிகள், ஏதோ அற்புதத்தினாலோ அல்லது உயிர்ச்செயலில்

தலையிட்டதாலோ அப்படி நிகழவில்லை. சரியாக கவனிக்காமல் அப்படி அறிவித்துவிட்டார்கள், அவ்வளவுதான். இன்று மரணத்திற்கு பொருள் விளக்கம் தருவது அவர்களுக்கு பெரிய சவாலாக இருக்கிறது. ஏனென்றால் இன்று, மரணம் என்பது ஒரே கணத்தில் ஏற்படும் நிகழ்வு அல்ல, அது ஒரு தொடர் நிகழ்வு என்று விஞ்ஞானம் புரிந்து கொண்டுள்ளது. அந்த தொடர் நிகழ்வு, மேலும் முன்னேறாமல் அப்படியே நின்றிட முடியும் அல்லது சில சமயம் பல காரணங்களால் மீண்டும் பழைய நிலைக்கே திரும்பிட முடியும் என்று இப்போது புரிந்து கொண்டுள்ளார்கள். சொல்லப்போனால், மருத்துவத்தில் இதற்காக ஒரு வார்த்தைகூட உருவாக்கியிருக்கிறார்கள் - இதை *லாசரஸ் நிகழ்வு* என்று சொல்கிறார்கள் - இறந்துவிட்டதாக அறிவிக்கப்பட்ட ஒருவர், விளக்க முடியாத விதத்தில், கொஞ்ச நேரம் கழித்து மீண்டும் உயிர் திரும்பினால் அதற்குத்தான் இந்த பெயர்.

இந்தியாவில், பல சந்தர்ப்பங்களில், இறந்தவர்களின் உடலை ஒரு யோகியிடமோ அல்லது அப்படிபட்டவரிடமோ எடுத்துச் சென்றபோது, அவர்கள் மீண்டும் உயிர் பெற்றிருக்கிறார்கள். ஆனால், இதெல்லாம்கூட உண்மையிலேயே "மீண்டும் உயிர்த்தெழுவது" என்று சொல்ல முடியாது. இது இன்னொரு விதமான டாக்டரிடம் போவது போலத்தான். பெரும்பாலும் அந்த மரணங்கள் பாம்புக் கடியால் ஏற்பட்டிருக்கும். ஒருவரை பாம்பு கடித்தவுடன், அவருடைய பிராணசக்தி உடலைவிட்டு வெளியேற நீண்டநேரம் எடுக்கிறது. அந்த அவகாசத்திற்குள், விஷத்தின் தாக்கம் மறைந்திருக்கலாம் அல்லது வெளியிலிருந்து பிராணசக்தி செலுத்தப்பட்டு இருக்கலாம் - இதனால் அவர் உயிர் திரும்பிட வாய்ப்பிருக்கிறது. பாம்புக் கடியால் ஏற்படும் மரணங்களை கையாளும் டாக்டர்கள் இதை கவனித்திருக்கலாம்: சிலவிதமான பாம்புக் கடிகளில், குறிப்பாக நாகப்பாம்பு வகையாக இருந்தால், எல்லாமே செய்த பிறகும் அவர் பிழைக்கவில்லை என்ற நிலையில், சில சமயம் அவருக்கு வென்டிலேட்டர் (சுவாசக் கருவி) வைத்தால், கொஞ்ச நேரம் கழித்து அவர் சும்மா அப்படியே இயல்புக்கு திரும்பிட வாய்ப்பிருக்கிறது.

இதுபோன்ற அனுபவம் எனக்கே, என் வாழ்க்கையிலேயே ஏற்பட்டிருக்கிறது. என் வாழ்க்கையில் ஐந்து அல்லது ஆறு தடவையாவது நாகப்பாம்பிடம் கடி வாங்கியிருக்கிறேன். ஒருமுறை, என் உயிரே போய்விட்ட அளவுக்கு ஆகிவிட்டது. நான் அந்த நாகப்பாம்பை கையில் எடுத்தேன். ஆனால், அதில் இரண்டு நாகங்கள் ஒன்றோடு ஒன்று பிண்ணி இருந்ததை நான் கவனிக்கவில்லை. அது ஜோடிசேரும் பருவகாலம்கூட இல்லை, ஏனோ இரண்டும் சேர்ந்திருந்தன. நான் ஒன்றை தூக்கியபோது, இன்னொன்று என் பாதத்தின் மேல் விழுந்தது. நான்கு முறை கடித்தது. விஷம் ஜிவ்வென்று ஏறி தன் வேலையை காட்ட ஆரம்பித்தது. முதலில்

கடித்தபோது ஒன்றிரண்டு தடவை எலும்பில் பட்டிருக்கும், அதனால் என்னுடைய சதை அகப்பட்டு விஷத்தை கக்கும்வரை கடித்து தள்ளியது. விஷம் உடலுக்குள் நுழைந்தவுடனே ஏற்படும் வலி வேறுவிதமாக இருக்கும். கடிப்பதால் ஏற்படும் வலியல்ல, குத்துவது போன்ற வலியல்ல. இது டாக்டர் ஊசி போடுவதுபோல - ஊசி குத்தும்போது ஒருவிதமாக வலிக்கும், ஆனால் அந்த மருந்து உள்ளே ஏறும்போது வலி வேறுவிதமாக இருக்கும். அதனால் நான் அந்த நாகத்தை தூரமாக தள்ளி வைத்துவிட்டு கடியை கவனிக்க ஆரம்பித்தேன்.

என்ன நடந்தாலும் நான் தூங்கிப் போகக்கூடாது என்று எனக்கு தெரியும். இது ஊரிலிருந்து தூரமான இடத்தில் இருந்தது. அக்கம்பக்கத்தில் யாருமே இல்லை. என்னிடம் சைக்கிள் இருந்தது. நான் சைக்கிளை மிதித்துக்கொண்டு கண்ணில் தென்பட்ட முதல் வீட்டுக்கு போனேன். அங்கே ஒரு பெண்மணி இருந்தார். என்னை ஒரு நாகப்பாம்பு கடித்துவிட்டது, எனக்கு நிறைய தேனீர் தேவைப்படுகிறது என்று சொன்னேன். அவர் மிகவும் பதறிப்போனார். ஆனால் ஒரு பெரிய பாத்திரம் நிறைய வற-டீ கொடுக்கும் அளவுக்கு அவருக்கு சுதாரிப்பு இருந்தது. அதை குடித்தேன். தூங்கிவிடாமலும், மயங்கி விழாமலும் இருக்க எப்படியோ சமாளித்தேன். அதற்குப் பிறகு திரும்ப வீடு வந்து சேர்ந்தேன்.

முதலில் என் அப்பாவிடம் சொல்லலாம் என்று நினைத்தேன், அவர் டாக்டர் அல்லவா, அதனால். அவர் என்னை மருத்துவமனைக்கு கொண்டுபோய் ஏதாவது செய்வார் என்று நினைத்தேன். ஆனால் சட்டென்று எனக்குள் என்னவோ இப்படி தோன்றியது, "சரி என்னதான் நடக்கிறது என்று பார்த்துவிடுவோமே!" என்று பட்டது. நான் சரியாகத்தான் இருந்தேன், ஆனால் கண்ணின் இமைகள் மட்டும் கொஞ்சம் பாரமாக இருந்தது. அதோடு, என்னுடைய பெற்றோர்களைப் பதறவைக்கவோ, என்னுடைய செயல்பாடுகளில் தேவையற்ற கவனத்தை ஈர்க்கவோ நான் விரும்பவில்லை. அதனால் அப்படியே உட்கார்ந்தேன், கொஞ்சம் யோகப் பயிற்சி செய்தேன். விஷத்தை தவிர்ப்பதற்காக யோகா செய்யவில்லை, தூக்கமாக வந்தது, அதனால் கொஞ்சம் யோகா செய்தேன். அதற்கு பிறகு, கொஞ்சம் முன்னதாகவே சாப்பிட்டுவிட்டு, படுக்கப் போய்விட்டேன். காலையில் எழுந்தபோது, கொஞ்சம் தள்ளாட்டமாக இருந்தது, கண்ணின் இமைகள் வீங்கி கனமாக இருந்தது, ஆனால் நான் பிழைத்துவிட்டேனே!

ஒருவேளை, அந்த நாகப்பாம்பு தன்னுடைய விஷத்தை முழுமையாக பாய்ச்சவில்லையோ என்னவோ! இல்லையென்றால், தூங்காமல் விழித்துக்கொண்டிருந்தது வேலை செய்திருக்கலாம், அதனால் விஷத்தின் தாக்கத்தை தாண்டியிருக்கலாம். அதனால்தான் இப்படி நடந்திருக்க

முடியும். ஆனால் இங்கே உயிர்ச்செயலில் தலையிட்டு மாற்றிடும் முயற்சி எதுவும் இல்லை. பொதுவாகவே, நாகப்பாம்பு கடிகளில், உயிர் திரும்புவதற்கான வாய்ப்புகள் அதிகம். நாகப்பாம்பு கடிகளில், பிராணசக்தி வழக்கத்தைவிட மிகவும் மெதுவாக வெளியேற ஆரம்பிக்கும். உதான வாயு உடலிலிருந்து முழுமையாக வெளியேறிய நிலை வரும்வரை, உயிர் திரும்ப வாய்ப்பிருக்கிறது. ஏட்டளவிலாவது இந்த சாத்தியம் இருக்கிறது. அதற்கு சில தாந்திரீக முறைகளும் இருக்கின்றன. ஆனால், உதான வாயு உடலைவிட்டு பிரிந்தபின் ஒருவரை மீட்க சுத்தமாக வாய்ப்பே கிடையாது.

இறந்தவரை உயிர்ப்பிப்பது கிழக்கு தேசங்களில் அவ்வளவாக இல்லை. ஆனால் இந்தியாவில், ஒரு பிணத்தை எழுப்பி நடக்க வைப்பதில் எப்போதும் தாந்திரீக முறைகள் தேர்ச்சியுடன் இருந்துள்ளன. உடல் கழண்டுவிட்ட பிறகு, கால்களெல்லாம் விழுந்துபோன பிறகு யாராலும் நடக்க முடியாது. இறந்துபோன மனிதன் நடக்க முடியுமா என்ன? முடியாதுதானே? ஆனால், அது உண்மை அல்ல. அவர்களை நடக்கவைக்க முடியும். எப்படியென்றால், ஏற்கனவே பார்த்ததுபோல, மரணம் என்பது மெதுவாக ஏற்படும் நிகழ்வு - உயிர்சக்திகள் வெளியேறுவது மெதுவாக படிப்படியாக நடக்கிறது. நுரையீரல், இதயம், மூளை ஆகியவற்றின் இயக்கம் நின்றுபோய்விட்டால், ஒருவரை இறந்தவர் என்று அறிவித்துவிடுகிறார்கள். ஆனால் உயிர்ச்செயல் இன்னும் மெதுவாக நடந்து கொண்டுதான் இருக்கிறது. அதற்கு புத்துயிரூட்டவும் முடியும். இதைப் பயன்படுத்தித்தான் தாந்த்ரீகம் செய்பவர்கள், இறந்த உடல்களை நடக்க வைக்கிறார்கள். சில சமயம், சிதையில் எரிந்துகொண்டிருக்கும் பிணங்களைக்கூட நடக்க வைப்பார்கள்.

இதை நான் நேரில் பார்த்ததில்லை; ஆனால் சிலர் சொல்லிக் கேள்விப்பட்டிருக்கிறேன். இதுபோன்ற விஷயங்களில் அவர்கள் பொய் சொல்லமாட்டார்கள், அப்படிப்பட்டவர்கள் அவர்கள். சிதையில் எரிந்து கொண்டிருக்கும் உடலை எழுப்பி நடக்க வைப்பதை அவர்கள் பார்த்திருக்கிறார்கள். அந்தக் கணத்தில், உடல் வெளிப்புறத்திலிருந்து எரிய ஆரம்பிக்கும்போது, உயிர்ச்செயல் ஒடுங்கிப் போய் ஓரிடத்தில் குவிந்து தீவிரமான நிலையில் நிகழ்கிறது. சிலர் இதைப் பயன்படுத்தி உடலை தூண்டிவிடுவார்கள். அப்போது இறந்த உடலால் எழுந்து ஒரு சில அடிகள் நடந்திட முடியும். கொஞ்ச நேரத்திற்கு, அது உயிருடன் இருப்பதுபோல் தோன்றிடும், உயிர்சக்தி முழுவதுமாக தீர்ந்து போனவுடன் செத்து விழுந்துவிடும்.

இந்த பிணத்தை மயானத்திற்கு கொண்டுவந்தபோது, அதில் இன்னும் கொஞ்சம் உயிர்சக்தி மிச்சம் இருக்கிறது, அதனால்தான்

இப்படி நடக்கக்கூடிய சாத்தியம் இருக்கிறது. அந்த சக்தியின் அளவு, இதயத்தை துடிக்க வைக்கவோ, ரத்த ஓட்டத்தை ஏற்படுத்தவோ, மூளையை இயக்கவோ போதுமானதாக இல்லை. ஆனால், செல்களின் அளவில் சக்தி இருக்கிறது, நிறைய சக்தி இருக்கிறது. நெருப்பு அதை தீண்டும்போது, இந்த சக்தியை ஒருவிதத்தில் தூண்டிவிடுகிறது. இப்போது அந்தப் பிணத்திற்குள் ஓரளவுக்கு சக்தியை செலுத்துவதன் மூலம், அதை மாந்திரீக நோக்கங்களுக்காக ஏதாவது செய்ய வைக்கமுடியும் - எப்படி உங்களுடைய செல்ஃபோன் பாட்டரி செத்துவிட்டாலும், உங்களால் எமர்ஜென்சி கால் செய்ய முடிகிறதோ, அப்படித்தான் இதுவும்.

தாந்திரீகத்திலும், அகோரி[4] முறைகளிலும் செய்யப்படும் பயிற்சிகள் எல்லாம் இந்த காரணத்தினால்தான் வேலை செய்கின்றன. இல்லையென்றால் இறந்துபோன உடலின் மீது உட்கார்ந்துகொண்டு இதையெல்லாம் செய்வதில் என்ன அர்த்தம் இருக்கிறது? இறந்தது என்றால் முற்றிலுமாக இறந்தது கிடையாது. இல்லையென்றால், அந்த சதையையும் எலும்புகளையும் வைத்து இவர்கள் செய்வதற்கு என்ன இருக்கப்போகிறது? அந்த உயிரை மீட்பதற்காக அந்த பிணத்தின் மேல் அவர்கள் உட்காரவில்லை. உயிரை மீட்பதில் எல்லாம் அவர்களுக்கு ஆர்வமும் இல்லை. அந்த சமயத்தில் சிறிதளவாக வெளிப்படும் சக்தியை பயன்படுத்தி அவர்களுக்குள் வேறுவிதமான நிலைக்கு போக விரும்புகிறார்கள். அங்கிருக்கும் சிறிதளவு உயிர்சக்தியை பயன்படும்படி உள்வாங்கிக்கொள்ள பார்க்கிறார்கள். மிருகங்களை பலிகொடுக்கும் வழக்கத்தின் அடிப்படை இதுதான். பலி கொடுப்பது சாத்தியம் இல்லாதபோது, சமீபத்தில் இறந்த உடலை பயன்படுத்திக் கொள்கிறார்கள். அந்த இறந்த மனிதர் மீண்டும் உயிருடன் வந்துவிடுகிறார் என்றெல்லாம் இதற்கு அர்த்தம் இல்லை. அதேபோல, இதற்கு ஆன்மீக முக்கியத்துவமும் அவ்வளவாக இல்லை.

இப்போதெல்லாம், மேற்கு நாடுகளில், சிலர் இப்படி ஒரு திட்டத்தை ஆரம்பித்திருக்கிறார்கள். அதற்கு பெரிய அளவில் பணம் செலவு செய்யவேண்டும். அதாவது, நீங்கள் இறந்த பிறகு, கிரையோஜெனிக் (கடுங்குளிர் முறை) முறைப்படி உங்கள் உடலை உறையவைத்து, அது கெடாமல் அப்படியே இருக்கும்படி செய்கிறார்கள். ஒருவேளை எதிர்காலத்தில் உடலை இயங்கவைக்கும் ஒரு தொழில்நுட்ப விந்தை ஏற்படும்போது, நீங்கள் உயிர் திரும்பலாம் என்று நம்புகிறார்கள். இது பரிபூரணமான மடத்தனமாகும். துளியும் முதிர்ச்சி இல்லாத போக்கு இது.

---

4 சைவத் துறவிகளின் ஒரு பிரிவு. அவர்களின் நடைமுறைகள் பெரும்பாலும் அச்சுறுத்துவதாகவும், மரபுமுறை சார்ந்த இந்து வழக்கத்திற்கு முரணானதாகவும் தோன்றுகிறது.

சாதாரணமாக, ஏதோ அடிபட்டதாலோ, வேறேதோ காரணத்தினாலோ ஒருவர் உணர்விழந்த நிலைக்கு ஆழமாக போய்விட்டால், இந்த உடல் அந்த வலியையும் பாதிப்பையும் தப்பிக்க முயற்சி செய்யும். அந்த நிகழ்வின் அதிர்ச்சியையும் வலியையும் தாங்குமளவுக்கு அதற்கு வலிமை இல்லாமல் இருக்கலாம், அதனால். இது ஒருவிதமான தற்காப்பு செயல்பாடு - எல்லாமே சுவிட்ச் ஆஃப் ஆகிவிடுகிறது. உயிரை பராமரிக்க உடலுக்கு போதிய தெம்பு வந்தவுடன், அந்த மனிதர் இயல்புக்கு திரும்பலாம். ஆனால், உயிர் உடலை விட்டு முழுமையாக பிரிந்துவிட்ட நிலையில், அந்த உடலில் யாருமில்லை. அதேபோல், செயற்கை முறையில் உடலை மட்டும் பல வருடங்களாக காப்பாற்றி வரும் சில கோமா நிலைகளில், உடலில் ஆள் கிடையாது. சும்மா ஒரு இதயத்தையும் இரண்டு சிறுநீரகங்களையும், இன்னும் சில உறுப்புகளையும் இயங்கவைத்துக் கொண்டிருக்கிறீர்கள், அவ்வளவுதான். இதில் உயிர் கிடையாது. இது எப்படியென்றால், யாரோ தன் சிறுநீரகத்தை அளிக்கிறார், அந்த சிறுநீரகத்தை கொஞ்ச நேரத்திற்கு வேறு எங்கேயோ செயலிழக்காமல் பார்த்துக் கொள்வார்கள். இன்னொருவரின் உடலில் அல்ல, அப்போதைக்கு வெளியில் வேறெங்கேயோ செயற்கை முறையில் பராமரிப்பார்கள். இப்படி ஒரு சிறுநீரகத்தை பராமரித்தாலும் சரி, இரு சிறுநீரகங்களுடன் ஒரு இதயத்தையும், மற்றதையும் சேர்த்து பராமரித்தாலும் சரி, எல்லாம் ஒரே மாதிரிதான். அங்கே அந்த ஆள் இல்லை, அவர் போய்விட்டார்.

இன்று, உடலை செயலிழக்காமல் பார்த்துக்கொள்ள தொழில்நுட்பம் இருக்கிறது. எதிர்காலத்தில் இறந்த உடலையும் இயங்கவைக்க முடியுமோ என்னவோ. ஆனால், குறிப்பிட்ட அதே உயிர் மீண்டும் அங்கே வந்து, அதே உடலை தேர்ந்தெடுத்துக்கொள்வது எட்டாத தூரத்தில் இருக்கிறது. அதாவது, ஒருவர் இருபத்தைந்து வருடங்களுக்கு பிறகு மீண்டும் வந்து அதே உடலை எடுத்துக்கொள்வது என்பது அபத்தமானது. ஒருவேளை அப்படியே ஏதாவது நடந்துவிட்டாலும்கூட, அவர் அதே மனிதராக இருக்க வாய்ப்பே இல்லை. ஒருவேளை தற்செயலாக, வேறேதோ உடலற்ற உயிர் அதற்குள் புகுந்திருக்கலாம், அவ்வளவுதான். ஆனால் இது வியாபாரம் செய்வதற்கான சிறந்த வழி. எகிப்தின் பாரோக்கள், அந்த காலத்தில் மம்மிகள் உருவாக்குவதற்கு தங்கள் சொத்துக்களை செலவழித்தார்கள். ஆனால், இப்போதும் இது நல்ல வியாபாரம்தான். ஏனென்றால், தொகையை நீங்கள் உயிருடன் வந்த பிறகு கட்டாமல், இப்போதே முன்பணமாக கட்டி விடுகிறீர்களே!

சரி, எப்போதாவது இப்படி நடந்திடுமா? எனக்கு நம்பிக்கை இல்லை. ஆனால் இதுபோன்ற ஒரு விஷயம் வேறுவிதமாக நிகழலாம்.

யோகிகள் தங்களுடைய உடல்களை விட்டுவிட்டு, வேறு எங்கேயோ போய்விட்டு, திரும்பவந்து அதே உடல்களை எடுத்த கதைகளை கேள்விப்பட்டிருக்கலாம். சில சமயம் அவர் திரும்புவதற்குள், வேறொரு யோகி அந்த உடலில் புகுந்து, அதை எடுத்துகொண்டு போய்விடும் வாய்ப்பும் இருக்கிறது. அதாவது, உங்களுடைய மோட்டார் சைக்கிளை எங்கேயோ நிறுத்திவிட்டு போனீர்கள். நீங்கள் திரும்பி வருவதற்குள், வேறு யாரோ எடுத்துக்கொண்டு போய்விட்டார், அதுபோலத்தான் இது. இதற்கான வாய்ப்புகள் மிகவும் குறைவுதான். இருந்தாலும் இப்படி நிகழமுடியும்.

## கூடு விட்டு கூடு பாயும் சித்தி

கிழக்கத்திய நாடுகளின் கலாச்சாரத்திலும், செவ்விந்தியர்களின் கலாச்சாரத்திலும், கூடு விட்டு கூடு பாய்வது பரவலாக இருந்தது. அதாவது, ஒருவர் இன்னொருவரின் உடலில் நுழைந்திடும் நிகழ்வை அப்படி சொல்வோம். வழக்கமாக, அது சமீபத்தில் இறந்த மனிதரின் உடலாக இருக்கும். நம் பாரம்பரியத்தில், இதை *பரகாயப் பிரவேசம்* என்று சொல்வோம் - அதாவது இன்னொரு உடலுக்குள் நுழைவது என்று பொருள். ஒரு யோகியிடமிருக்கும் *அஷ்ட மா சித்திகளில்* இதுவும் ஒன்று - அதாவது மகத்தான எட்டு திறன்களில் ஒன்று. இப்படி கூடு விட்டு கூடு பாய்ந்த பல உதாரணங்கள் நமது சொல்வழிக் கதைகளில் உண்டு. அதில், ஆதிசங்கரர் வாழ்வில் நடந்தது பிரபலமானது.

பண்டைய பாரதத்தில், உங்களிடமிருந்து வித்தியாசமான நம்பிக்கை கொண்டவர்களை தள்ளிவைத்து எதிரியாக பார்க்கவில்லை. ஒருவரின் தனிப்பட்ட நம்பிக்கைகளுக்காக அவரை தண்டிக்கவும் இல்லை. யாராவது புதிதாக ஒன்றை பரப்ப விரும்பினால், அவருக்கு எதிரான கருத்துக்களை கொண்டவர்களிடம் போய் வாதம் செய்வார்கள். ஆதிசங்கரர், அவருடைய காலத்தில், விவாதத்தில் வெல்ல முடியாதவராக இருந்தார். அவருடைய தர்க்க அறிவு அவ்வளவு கூர்மையாக இருந்தது. அப்படிப்பட்ட மனிதரிடம் யாரும் வாதம் செய்யவே முடியாது. ஒருசமயம், புகழ்பெற்ற பண்டிதர் ஒருவர், ஆதிசங்கரரை வாதத்திற்கு வருமாறு சவால்விட்டார். அதில் தோற்றும் போனார். அதற்குப்பின் அவருடைய மனைவி விவாதத்திற்குள் நுழைந்தார். பெண்கள் என்றால் எப்படி என்று உங்களுக்குத்தான் தெரியுமே, தங்களுக்கு நேசமானவர்களை விட்டுக் கொடுக்காமல் தீவிரமாக பாதுகாப்பார்கள் அல்லவா? அவர் சங்கரரிடம், "நீங்கள் என் கணவரை தோற்கடித்தீர்கள், ஆனால் அவர் முழுமையானவர் இல்லை. நாங்கள் ஒரே அம்சத்தின் இரண்டு பாதிகள்

ஆவோம். அதனால், நீங்கள் என்னிடமும் விவாதம் செய்ய வேண்டும்," என்றார். இந்த தர்க்கத்தை நிராகரிக்க முடியுமா என்ன?

அதனால் அந்த பெண்மணியோடு வாதம் தொடங்கியது. அதற்குப் பிறகு தானும் தோற்கப் போகிறோம் என்று அவருக்கு தெரிந்தது. உடனே அவர் ஆதிசங்கரரிடம் மனிதர்களின் பாலின சேர்க்கையைப் பற்றிய கேள்விகளைக் கேட்க ஆரம்பித்தார். அப்படியிருந்தாலும், சங்கரர் விவாதத்தை தொடர்ந்தார். அதற்குப்பின் அவர் நுட்பமான விஷயங்களுக்குள் போனார். சங்கரரை பார்த்து, "அனுபவப்பூர்வமாக உங்களுக்கு என்ன தெரியும்?" என்று கேட்டு அவரை சிக்கவைக்க பார்த்தார். ஏனென்றால், சங்கரரோ ஒரு பிரம்மச்சாரி. தன்னை தோற்கடிப்பதற்கான ஒரு தந்திரம்தான் இது என்று அவருக்குப் புரிந்துவிட்டது. அவர் அந்த பெண்மணியிடம், "எனக்கு ஒரு மாதம் அவகாசம் வேண்டும். இப்போதைக்கு நாம் வாதத்தை நிறுத்திவைப்போம். ஒரு மாதம் கழித்து தொடர்வோம்," என்று சொன்னார். அதற்குப்பின் அங்கிருந்து ஒதுக்குபுறமாக இருக்கும் ஒரு குகைக்கு போய்விட்டார். தன் சிஷ்யர்களை பார்த்து, "நான் கொஞ்ச காலத்திற்கு, என் உடலை இங்கே விட்டுவிட்டு, வேறு ஒரு சாத்தியத்தை தேடிப் போகிறேன். அதனால் என்ன நடந்தாலும் சரி, யாரையும் இந்த குகைக்குள் வரவே விடாதீர்கள்," என்று சொன்னார். தன் உடலைவிட்டு வெளியேறினார்.

தற்செயலாக அதே சமயத்தில், ஒரு அரசரை நாகப்பாம்பு கடித்துவிட்டதால், அப்போதுதான் அவர் இறந்திருந்தார். சாதாரணமாக, ஒருவர் இறக்கும் போது, சுவாசம் நின்றுபோன கணத்திலிருந்து பிராண வாயு உடலைவிட்டு முழுவதும் வெளியேற கிட்டத்தட்ட ஒன்றரை மணிநேரம் எடுக்கும். மற்ற பிராணங்கள் எல்லாம் இன்னும் அப்படியே இருக்கும், மெதுவாகத்தான் வெளியேறும். ஆனால், அதற்குள் பிராண வாயு முழுமையாக போயிருக்கும். ஆனால், நாகப்பாம்பு கடிப்பதால் ஏற்படும் மரணங்களில், பிராண வாயு வெளியேற நான்கரை மணிநேரம் வரைக்கும் எடுக்கும். அதனால், அந்த உடலுக்குள் நுழைய விரும்பும் ஒருவருக்கு பல விதங்களில் இது மிகவும் உகந்த சூழ்நிலையாக இருக்கும்.

சங்கரர் தன் உடலைவிட்டு பிரிந்து அரசரின் உடலுக்குள் நுழைந்தார். தன்னுடைய உடலில் வியான பிராணனை அப்படியே இருக்கும்படி விட்டுச் சென்றார். ஏனென்றால், அவர் திரும்ப வரும்வரை, உடல் கெட்டுப்போகாமல் அப்படியே இருக்க வேண்டுமல்லவா? அந்தப் பெண்மணி கேட்ட கேள்விகளுக்கு அனுபவபூர்வமான பதிலை அளிக்க விரும்பினார், இதனால் அரசரின் உடலுக்குள் புகுந்தார். அரச வாழ்வில் ஈடுபட்டார். அரசரை சுற்றி புத்திசாலித்தனம் மிக்க சிலர் இருந்தார்கள், அவர்கள் கண்டுகொண்டு விட்டார்கள். தங்களால் இறந்துவிட்டதாக

அறிவிக்கப்பட்ட ஒருவர் திடீரென்று எழுந்து உட்கார்ந்துவிட்டார், அதோடு உயிரோட்டம் மிக்கவராக இருக்கிறார் - அவர்களுக்கு சந்தேகம் வலுத்தது. இவர் நடந்துகொள்ளும் விதத்திலிருந்து, இந்த மனிதர் வேறு ஒருவர்தான் என்பது அவர்களுக்கு புரிந்துவிட்டது. அதே உடலில் வேறு யாரோ இருப்பது தெளிவாக தெரிந்தது. உடனே நாடு முழுவதும் சிப்பாய்களை அனுப்பினார்கள். நாடு முழுவதும் போய் இறந்த உடல்களை தேடிக் கண்டுபிடித்து, அதையெல்லாம் உடனே எரித்துவிட ஆணையிட்டார்கள். உயிர் மீண்ட அரசர் மறுபடியும் போய்விடக்கூடாது என்பதுதான் அவர்களின் நோக்கம். அது வேறு மனிதராகவே இருக்கட்டுமே, அதற்கு என்ன இப்போது? தோற்றத்தில் மாற்றமில்லை. முக்கியமாக, நாட்டுக்கு அரசன் இருப்பது அவசியம். அதனால், இறந்த உடல்களை கண்டுபிடித்து அதை உடனே எரித்துவிட சொல்லி சிப்பாய்களை எல்லா பக்கமும் அனுப்பினார்கள்.

ஒருவழியாக சிப்பாய்கள் சங்கரரின் உடல் இருந்த குகையை கண்டுபிடித்தார்கள், அதை எரிக்கவும் முற்பட்டார்கள். அங்கிருந்த சிஷ்யர்கள் எப்படியாவது சமாளிக்க பார்த்தார்கள். "எங்கள் குரு இறக்கவில்லை, சவாசனத்தில்தான் இருக்கிறார். சீக்கிரமே எழுந்து விடுவார்," என்றார்கள். இதில் ஏதோ ஏமாற்று வேலை இருக்குமோ என்று சிப்பாய்களுக்கு தோன்றியது. அதனால் உடனே அந்த குகையிலேயே ஒரு சிதையை உருவாக்கினார்கள். சங்கரரின் உடலையும் அதில் வைத்துவிட்டார்கள். அவர்கள் சிதைக்கு தீ வைக்கப்போகும் சமயத்தில், சங்கரர் சூழ்நிலையை உணர்ந்து, அரசரின் உடலை துறந்தார். மீண்டும் தன் உடலுக்குள் திரும்பினார். அரசர் மீண்டும் இறந்து விழுந்தார், சங்கரர் திரும்பினார். பாதியில் நிறுத்திவிட்டு போன வாதத்தை தொடர்ந்தார், அதில் வெற்றியும் பெற்றார்.

தன் சக்திகளை வைத்து இதுபோன்ற வித்தைகளை செய்பவர்கள், வழக்கமாக அதன்பின் நிறைய நாட்களுக்கு வாழமாட்டார்கள். ஏனென்றால், இவற்றை எல்லாம் செய்திட பெரும் அளவிலான சக்தி செலவாகும். இந்த சம்பவத்துக்குப் பிறகு சங்கரர் தன் உடலை நீத்தார் என்று சொல்வார்கள். அவர் முப்பத்திரண்டு வயதிலேயே போய்விட்டார். உண்மையில், அவர் எங்கே, எப்படி உடலைவிட்டு பிரிந்தார் என்று யாருக்குமே தெரியாது. கடைசியாக அவரை கேதார்நாத்தில் பார்த்ததாக சொல்லப்படுகிறது. இந்த சம்பவத்தால் அவர் சீக்கிரமாகவே மறைந்திருக்க வாய்ப்பிருக்கிறது.

இதுபோல், ஒரு யோகியை பற்றிய இன்னொரு பிரபலமான நிகழ்ச்சி இருக்கிறது. பிற்காலத்தில் அவரை தமிழ்நாட்டில் திருமூலர் என்று சொன்னார்கள். அவரின் உண்மையான பெயர் சுந்தரநாதர். அவர்

தென் தமிழ்நாட்டை சேர்ந்தவர். இங்கிருந்து கைலாய மலைக்கு பயணித்து சென்றார். இவர் ஆதியோகி சிவனிடமே தீட்சை பெற்றதாக சொல்லப்படுகிறது. கைலாய மலையிலேயே பல வருடங்கள் வாழ்ந்தார். தன்னுடைய சமகாலத்தவரும் நண்பருமான அகத்திய முனிவர் தமிழ்நாட்டிலேயே தங்கிவிட்டதால் அவரை பார்க்க தென்னகம் திரும்பினார். வரும் வழியில் ஒரு காட்டைக் கடக்கும்போது, ஒரு பசுக்கூட்டம் அழுது கொண்டிருப்பதைப் பார்த்தார். அந்த பசுக்களை மேய்ப்பவர் அப்போதுதான் பாம்பு கடித்து இறந்து போயிருந்தார். சுந்தரநாதர் பசுக்களின் துயரத்தைப் பார்த்து மனம் இரங்கினார். தான் அந்த மாடு மேய்ப்பவரின் உடலில் புகுந்து சற்று நேரம் இருந்தால் பசுக்கள் ஆறுதல் அடையும் என்று நினைத்தார். அதனால், ஒரு மரத்தின் பொந்துக்குள் தன் உடலை விட்டுவிட்டு, மாடுமேய்ப்பவரின் உடலுக்குள் நுழைந்தார்.

பசுக்களுக்கு ஒரே சந்தோஷமானது. அதையெல்லாம் கூட்டிக்கொண்டு கிராமத்துக்கு திரும்பினார். பசுக்களை விட்டுவிட்டு, மறுபடியும் காட்டில் அந்த மரத்திற்கு திரும்பினார். தன் உடலை அடைந்து மீண்டும் அதற்குள் நுழையலாம் என்று பார்த்தால், அங்கு பெரிய ஆச்சரியம் காத்திருந்தது. அவருடைய உடல் அங்கே இல்லை, எங்கே தேடியும் காணவில்லை. அதனால் மாடுமேய்ப்பவரின் உடலிலேயே தொடர்ந்து வாழ்ந்தார். கிராமத்தில் இருந்தவர்களுக்கு ஒரே அதிசயமாக இருந்தது. ஊரில் மாடு மேய்த்துக் கொண்டிருந்த சாதாரண மனிதன் இப்போது ஆன்மீக விஷயங்களை பேசுகிறானே, ஆன்மீக செய்யுள்களை பாடுகிறானே என்று ஆச்சரியப்பட்டார்கள். அவர் பெயர் மூலன். அதனால் அவரை திருமூலர் என்று அழைத்தார்கள். அவர் அந்த பெயராலேயே அறியப்பட்டார். அவர் மூவாயிரத்திற்கும் அதிகமான ஆன்மீக செய்யுள்களை எழுதியுள்ளதாக சொல்கிறார்கள், அது இன்றும் பாடப்படுகிறது.

இதுபோன்ற விஷயங்கள் சாத்தியம்தானா? நிச்சயம் சாத்தியம். கூடுவிட்டு கூடு பாய்ந்த உதாரணங்கள் இன்னும் எத்தனையோ நம் நாட்டில் இருக்கின்றது. இது பெரிய சாதனையா? அப்படி ஒன்றும் கிடையாது. இதற்கு தேவையானதெல்லாம் இந்த உயிர் உங்களுக்குள் எப்படி நிகழ்கிறது என்ற புரிதல் மட்டுமே.

இப்போது, உயிருடன் இருக்கும் ஒருவருடைய உடலுக்குள் நுழைய வேண்டுமென்றால் அதற்கு இன்னும் நிறைய தேவைப்படும். யாருடைய உடலில் நுழையப் பார்க்கிறார்களோ, அவரும் அதே அளவுக்கு வல்லவராக இருக்கவேண்டும். அப்போதுதான், அவரால் புதிதாக நுழையும் இன்னொருவருக்கு இடம் ஏற்படுத்தி தரமுடியும். இல்லாவிட்டால், அவர் மிகவும் வலுவிழந்து போயிருக்கவேண்டும். நோயோ, ஏதோ ஏற்பட்டு,

அவர் பாதியளவுக்கு போய்விட்டார் என்ற நிலையிலிருந்தால், அப்போது அது சாத்தியம். உடல் முழு தீவிரத்தில் இருக்கிறது, ஆனால் அவருக்கு எதைப்பற்றியும் எந்த விழிப்புணர்வும் இல்லை - அப்படிப்பட்ட நிலையில் இதற்கு சாத்தியமே இல்லை.

இதெல்லாமே தாந்த்ரீக முறைகள்தான். உண்மையில், இதற்கு ஆன்மீகத்தில் எந்த விதமான முக்கியத்துவமும் கிடையாது. சில சமயம், இதுபோன்ற விஷயங்களை செய்யமுடியும் என்று தங்களுக்கும் அடுத்தவர்களுக்கும் நிரூபித்துக் காட்டுவதற்கு இது ஒரு வழி. சில சமயம், தங்களுடைய சொந்த உடலில் இருந்துகொண்டு செய்ய விரும்பாததை செய்ய வேண்டியிருக்கும்போது, இதுமாதிரி விஷயங்கள் நிகழலாம். காரணங்கள் மாறுபட முடியும். தன்னுடைய குருவின் கனவை[5] நிறைவேற்றும் முயற்சியில், வாழ்வின் கடைசி காலத்தில் ஒரு நெருக்கடி ஏற்பட்டபோது, சத்குரு ஸ்ரீபிரம்மாவும் இப்படிச் செய்திருக்கிறார்.

## சிரஞ்சீவிகளின் கனவு

மரணமே இல்லாமல் நிரந்தரமாக வாழவேண்டும் என்பது காலம்காலமாக பணக்காரர்களின் கனவாக இருந்திருக்கிறது. செல்வச்செழிப்பு வந்தவுடன் அவர்களுக்கு எல்லாமே கிடைத்துவிட்டது போல் தோன்றியதுதான், ஆனால் அவர்கள் வாழ்க்கை என்பதை இன்னும் உணரவே இல்லை. அதனால் அவர்கள் போக விரும்புவதில்லை. உலகத்தில் சந்தோஷம் இல்லாமல் வாழும் மனிதர்களும் தாங்கள் மரணம் இல்லாமல் வாழவேண்டும் என்று ஏங்குகிறார்கள். தங்கள் வாழ்க்கையை நல்லமுறையில் சந்தோஷமாக வாழ்ந்தவர்கள், இறப்பதற்கு மனமில்லாமல் சிரஞ்சீவியாக இருக்க விரும்புகிறார்கள் என்று புரிந்துகொண்டால் அது தவறு. சந்தோஷம் என்பது உங்களுடைய சகபயணி ஆகிவிட்டால், உங்கள் வாழ்க்கையில் மற்ற விஷயங்களுக்கு தேவையில்லாமல் போகலாம். நீங்கள் சந்தோஷமாக இருக்கும்போது, உங்களுக்கு எந்த பேராசையும் இருப்பதில்லை என்பதை கவனித்திருப்பீர்கள். அப்போது தயாளகுணம் மிக்கவராக இருப்பீர்கள். அந்த கணத்தில் எதை வேண்டுமானாலும் கொடுத்துவிட தயாராக இருப்பீர்கள்.

நீங்கள் சந்தோஷம் இல்லாமல் இருக்கும்போதுதான் பேராசை மிக்கவராக இருப்பீர்கள். சந்தோஷமான மனிதர்கள் வாழ்க்கையில் அவ்வளவு இறுக்கமாக பற்றிப் பிடித்து கொள்வதில்லை. எப்போது

---

5 அத்தியாயம் 11ல், "என்னுடைய முன்பிறவிகள்" என்ற தலைப்பின் கீழ் இதைப் பற்றி மேலும் பார்க்கலாம்.

வேண்டுமானாலும் தங்கள் பிடியை விட்டுவிட தயாராக இருக்கிறார்கள். சந்தோஷம் இல்லாமல் வாழ்பவர்கள்தான் உயிரைவிட விரும்புவார்கள் என்று எப்போதும் கருதப்படுகிறது. அப்படி கிடையாது. சந்தோஷம் இல்லாமல் துக்கத்தில் வாழ்பவர்கள்தான் வாழ்க்கையை மற்றவர்களைவிட இறுக்கமாக பற்றிக்கொள்வார்கள். எந்தளவுக்கு சந்தோஷம் இல்லாமல் இருக்கிறார்களோ, அந்தளவுக்கு தங்களைச் சுற்றியிருக்கும் எல்லாத்தையும் கெட்டியாக பிடித்துக் கொள்வார்கள். அவர்கள் நூறு வருஷம் வாழ்ந்தாலும்கூட, மேலும் மேலும் எதையாவது பற்றிப் பிடித்துக் கொண்டுதான் இருப்பார்கள். ஏனென்றால், இதுவரை அவர்கள் வாழ்க்கையை வாழ்ந்திடவே இல்லை. எப்போது பார்த்தாலும், தங்களுடைய வருத்தங்களிலேயே மூழ்கியிருந்தால், வாழ்க்கையை வாழ்ந்திட நேரம் எங்கே கிடைக்கும்?

சந்தோஷத்தில் இருக்கும் ஒருவர் யாரையுமே பற்றிக்கொள்ள மாட்டார். தன் வாழ்வில் ஆனந்தமான நிலையில் இருக்கும்போது, தான் மறுபடியும் பிறக்க போகிறோமா இல்லையா என்பதை பற்றியெல்லாம் அவருக்கு கவலையே இல்லை. நாளைக்கு உயிருடன் இருக்கப் போகிறோமா இல்லையா என்பதைப் பற்றிக்கூட அவருக்கு கவலை இல்லை. அந்தளவுக்கு ஆனந்தமாக இருக்கிறார். உண்மையிலேயே நீங்கள் சந்தோஷமாக இருக்கும்போது, உங்களுக்கு யாருமே தேவையில்லை. உங்கள் மனைவி தேவையில்லை, உங்கள் கணவர் தேவையில்லை, உங்கள் கடவுள்கூட தேவையில்லை. நீங்கள் மிகவும் சந்தோஷமாக இருக்கும்போது, எல்லா கடவுள்களையும் மறந்து விடுகிறீர்கள்தானே? சந்தோஷம் இல்லாதவர்களின் படைப்புதான் கடவுள்கள். அப்படி சந்தோஷம் இல்லாதவர்கள் உலகில் பெருமளவில் இருப்பதால்தான் கடவுள் என்பவர் செழித்து வந்திருக்கிறார். உலகம் முழுவதும் ஆனந்தமான உயிர்களாக இருந்தால் கடவுள் மறைந்துவிடுவார். நாம் எல்லோருமே உண்மையிலேயே சந்தோஷமாக இருந்தால், இந்த உலகத்தில் கடவுளுக்கு வேலையே கிடையாது, நம்மை நாமே பார்த்துக் கொள்வோம். நமக்குள் அந்தளவுக்கு துயரத்தை உருவாக்கி வைத்துக் கொண்டிருப்பதால்தான், அனைத்துக்கும் மேலாக துன்பத்தைப் பற்றிய பயம் இருப்பதால்தான் நமக்கு கடவுள் தேவைப்படுகிறார்.

நீங்கள் உண்மையிலேயே சந்தோஷமாக மாறிவிட்டால், அதாவது வார்த்தைகளுக்கு அப்பாற்பட்ட சந்தோஷம் - உங்களுடைய சந்தோஷம் எல்லா எல்லைகளையும் தாண்டிவிட்டால் - அப்போது நீங்கள் இறப்பதற்கு தயாராக இருக்கிறீர்கள். "அவ்வளவுதான், இதுதான் எல்லாமே; நான் கரைந்து போய்விட தயாராக இருக்கிறேன்," என்று தோன்றும். சந்தோஷம் உங்களை மரணத்துக்காக தயார்படுத்துகிறது. எல்லாமே

நன்றாக போய்க்கொண்டிருக்கும்போது, அப்படியே இறந்துபோவதற்கு தயாராக இருப்பவர், வாழ்க்கையை உணர்ந்திருக்கும் மனிதராவார். தாங்கள் ஒன்றுசேர்ந்து இருப்பதின் சந்தோஷத்தை ருசி பார்த்துவிட்ட காதலர்கள், உயிரை விடவும் தயாராக இருக்கிறார்கள். அது குறுகிய நேரத்துக்காக இருந்தாலும்கூட, அவர்கள் உயிரைவிட தயாராக இருக்கிறார்கள், பார்த்திருக்கிறீர்கள் அல்லவா? சந்தோஷம் இல்லாத மனிதன் இறப்பதற்கு தயாராகவே இல்லை. அவன் இதுவரை வாழ்ந்ததே இல்லை. அதனால், இன்னும் ஒரு வருடம் கிடைத்தால், இன்னும் நன்றாக வாழ்ந்திடுவோமோ என்று அவனுக்கு தோன்றுகிறது. பெரும்பாலான மனிதர்கள் இப்படித்தான் இருக்கிறார்கள்.

கடந்த காலத்தில், பூமியில் வாழ்ந்த ஒவ்வொரு அரசனும், சக்தியுடன் வாழ்ந்த ஒவ்வொருவரும், எப்படியாவது மரணமே இல்லாமல் வாழ்ந்திட வேண்டும் என்று விரும்பினார்கள். எப்போதுமே இப்படித்தான். ஆனால் நிஜத்தில், நீங்கள் யாருக்காவது சாபம் கொடுக்க வேண்டுமென்றால், அவர் சாகவேண்டும் என்று நினைக்காதீர்கள், அவர் முடிவில்லாமல் சிரஞ்சீவியாக இருக்கவேண்டும் என்று விரும்புங்கள். இருப்பதிலேயே மோசமான சாபம் அதுவாகத்தான் இருக்கமுடியும்.

ஒருவர் ஆன்மீக சாதனைகள் செய்வதிலேயே தன் வாழ்நாளை கழித்திருந்தால், அதோடு ஆன்மீக சாதனைகள் மூலம் தன் வாழ்நாளை நீட்டித்துக்கொண்டால், அது வேறு விஷயம். இது கட்டாயப்படுத்தி வாழ்க்கையை நீட்டிப்பது கிடையாது: அதற்கு மாறாக, உயிர் தன்னைத்தானே மேலும் கரைத்துக்கொள்ள, அதற்குத் தேவையான உதவியைத்தான் செய்துகொடுக்கிறீர்கள்.

மனிதர்கள் 160 வயதுவரை வாழமுடியும் என்று யோகத்தில் காலம்காலமாகச் சொல்லி வந்திருக்கிறோம். ஆனால், இந்த காலத்தில் அவ்வளவு நாள் வாழ்ந்தவர்கள் இருந்ததாக தெரியவில்லை. மேற்கு நாடுகளில், மனிதனின் ஆயுட்காலம் குறிப்பிடத்தக்க அளவுக்கு அதிகரித்திருக்கிறது. அங்கு கிடைக்கும் மருத்துவ வசதிகளும், அவர்கள் வழக்கமாக தொடர்ந்து உட்கொள்ளும் ஊட்டச்சத்து மாத்திரைகளும்தான் இதற்கு முக்கிய காரணம். இதனால் மற்ற பிரச்சனைகள் ஏற்படுகிறது, ஆனால் வாழ்க்கையை நீட்டிக்கிறது. ஒருவர் எடுத்துக்கொள்ளும் ஊட்டப் பொருள்களும் மினரல்களும் ஆற்றல்மிக்கதாக இருக்கின்றன, இதனால் பல உள்ளுறுப்புகள் புத்துயிர் பெறுகின்றன. எப்படியாவது அடுத்த 50 ஆண்டுகளுக்கு உயிருடன் இருக்கும்படி தாக்குப் பிடித்துவிட்டால், நாம் 500 வருடங்கள் வரை உயிர்வாழ முடியும் என்று இப்போது சொல்கிறார்கள். 50 ஆண்டுகளுக்குள் தொழில்நுட்பம் எந்தளவுக்கு முன்னேறியிருக்கும் என்றால், பரிசோதனை கூடத்திலேயே நம்மால்

உடல் உறுப்புகளை உருவாக்க முடியும் - புது இதயம், புது கல்லீரல், புது சிறுநீரகம் என்று வேண்டியதை உருவாக்கி புதுசு புதுசாக பொருத்திக்கொள்ளலாம்.

அடுத்த 400 ஆண்டுகளுக்கு தாங்கள் எப்படியெல்லாம் வாழப்போகிறார்கள் என்று சில பேர் என்னிடம் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் திட்டமெல்லாம் போட்டுவிட்டார்கள். பரிசோதனைக் கூடங்களோடும், டாக்டர்களோடும் ஒப்பந்தம் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள். இப்போது எந்த உறுப்பு வேலைசெய்கிறது, வேலைசெய்யாமல் இருக்கிறது, அதை எப்போது மாற்றி அமைத்துக்கொள்ளலாம் என்று டாக்டர்களுடன் பேசிக்கொண்டிருக்கிறார்கள். தங்களுடைய மரபணு அமைப்பையும், உடல்சார்ந்த அறிகுறிகளையும் ஆராய்ந்து, இப்போதே எல்லாவற்றையும் முடிவு செய்துவிட்டார்கள். எண்பது வயதில் இதயத்தை மாற்றிக்கொள்வேன், எண்பத்தைந்தில் சிறுநீரகத்தையும், எல்லா எலும்புகளையும் மாற்றிக்கொள்வேன், இப்படியே அடுத்த 400 ஆண்டுகளுக்கு வாழ்வதெப்படி என்று திட்டமிட்டுள்ளார்கள். அப்படிப்பட்டவர்கள், இதற்காக ஆழமாக துன்பப்படுவார்கள்.

உடலின் ஆயுளை நீட்டிக்க சாத்தியம் இருக்கலாம். ஆனால், உங்கள் வாழ்வில் ஆன்மீக சாதனையும், உடலின் மேல் ஓரளவுக்கு ஆளுமையும் இல்லாமல், அவ்வளவு காலம் வாழ, உங்களிடம் மனம் என்பது இருக்காது. நீங்கள் ஒரு ஜடத்தைபோல வாழ்ந்திடலாம். தேவையான ஆன்மீக சாதனைகள் இல்லாமல் உடலின் ஆயுட்காலத்தை நீட்டித்தால் மனம் கழண்டு கொண்டுவிடும். நீங்கள் பார்த்திருக்கலாம், பலபேருக்கு உடல் உறுதியாக இருக்கும், ஆனால் மனமோ போய்விடுகிறது - ஏனென்றால் அவருடைய பிராரப்த கர்மா தீர்ந்து போய்விடுகிறது. அதாவது, உங்களிடம் ஹார்டுவேர் இருக்கிறது, ஆனால் அதை ஓடச்செய்யும் சாஃப்ட்வேர் தீர்ந்து போய்விட்டது. அவர்களிடம் ஆன்மீக சாதனை இல்லாததால், ஞாபகங்களின் அடுத்த பரிமாணத்தை திறந்து கொள்ளவும் திறமையில்லாமல் இருக்கிறார்கள். இதனால் திரையில் ஒன்றும் இல்லாமல் வெறுமையாக இருக்கிறது, அவ்வளவுதான்.

நீண்டநாள் வாழ நினைப்பது ஒன்றும் பிரச்சனை இல்லை. ஆனால், கட்டாயப்படுத்தி வாழ்நாளை அதிகப்படுத்த பார்ப்பது, வாழ்க்கைக்கு எதிரான ஒருவித ஆணவமாகும். அது எனக்கு பிடிப்பதில்லை. 2050ஆம் ஆண்டு இப்படி நடந்தது: ஒரு சில விஞ்ஞானிகள் கடவுளுடன் ஒரு சந்திப்புக்கு நேரம் குறித்திருந்தார்கள். கடவுளை சந்தித்தார்கள். அப்போது, "அடேய் கிழவா, இந்தப் படைப்பில் நீ செய்த வேலை எல்லாம் நன்றாகத்தான் செய்திருக்கிறாய். ஆனால் இப்போது, நீ செய்வதை எல்லாம் நாங்களும் செய்யமுடியும். அதனால், நீ ரிட்டையர்மென்ட்

எடுத்துக்கொள்வதே நல்லது, சரியா?" என்று சொன்னார்கள். கடவுள், "அடேயப்பா, அப்படியா? சரி, நீங்கள் என்னவெல்லாம் செய்யமுடியும் என்று சொல்லுங்களேன்," என்றார். அவர்கள், "சும்மா இதை பாருங்கள்!" என்று சொல்லி தங்கள் திறமையை காட்ட ஆரம்பித்தார்கள். டெஸ்ட் ட்யூபை வெளியே எடுத்தார்கள், அதோடு பரிசோதனை கூடத்தில் இருக்கும் எல்லாவற்றையும் எடுத்தார்கள். பிறகு கையில் கொஞ்சம் மண்ணை எடுத்தார்கள். அந்த மண்ணோடு இன்னும் பல வகையான விஷயங்களை கலந்தார்கள், என்னென்னமோ செய்தார்கள். இப்படியே ஒரு குழந்தையை உருவாக்கிவிட்டார்கள். அந்த குழந்தைக்கு உயிர் இருந்தது, அது அழவும் ஆரம்பித்தது. "பார்த்தாயா இப்போது? இது எப்படி இருக்கிறது? இப்போது நாங்களே உயிரை உருவாக்க முடியும். இனி உனக்கு என்ன வேலை இருக்கிறது? நீ பேசாமல் ரிட்டையர் ஆகிவிடுவதே நல்லது," என்று ஜம்பமாக சொன்னார்கள். கடவுள் நிதானமாக அவர்களைப் பார்த்து, "இதெல்லாம் சரிதான். ஆனால், முதலில் அந்த மண்ணை நீங்களே சொந்தமாக உருவாக்குங்களேன் பார்ப்போம்," என்று சொன்னார்.

உங்களுடைய உடலின் ஆயுளை நீட்டிக்க வேண்டுமென்றால், அதற்கு சரியான ஆன்மீக சாதனை தேவை. வெளியிலிருந்து சரிசெய்ய முயற்சித்தால் அது வேலைக்கு ஆகாது. முறைப்படி சாதனா செய்தால், உடலின் ஆயுள் அதிகரிக்கும்போது, அதன் கூடவே, அதற்குத் தேவையான பிராரப்த கர்மாவும் திறக்கப்படும். கர்ம ஞாபகங்களில் இருந்து அடுத்த அம்சம் திறக்கப்பட்டு, அது இயங்குவதற்குத் தேவையான சாஃப்ட்வேர் கிடைக்கும். உயிருக்கு தேவையான சரக்கு இல்லாமல், உடலுக்கு தேவையான பொருள் மட்டும் இருந்ததென்றால், நீங்கள் ஒரு பேயைப்போல ஆகிவிடுவீர்கள். பேயாவது சாப்பிடாமல் இருக்கும், இடத்தையும் அடைத்துக் கொள்ளாது. நீங்கள் சாப்பிடுவீர்கள், இடத்தை அடைத்துக் கொள்வீர்கள், ஆனால் பேய்ப்போல காலம் தள்ளுவீர்கள். நீங்கள் சாதனா செய்து 400 வருடங்கள் வாழ்ந்தால், அப்போது உங்களால் இந்த உலகிற்கு மகத்தான பயன் இருக்கும். நீங்கள் அதிகநாள் வாழ்வதாலும் புத்திமிக்கவராக இருப்பதாலும் மட்டும் இது மகத்தானதாக இல்லை. நீங்கள் யார் என்பதன் தன்மையால், உங்களுக்குள் நீங்கள் அடைந்துள்ள நிலையால் மகத்தான பயன் இருக்கும். இந்த உயிர் அந்தளவுக்கு முதிர்ச்சியாக, பக்குவமாக இருக்கிறது. அதே முறையில் அது உங்கள் உடலுக்குள்ளும் தன்னை அமைத்துக்கொள்ளும். இந்த "உயிர்" என்பது, அதாவது நீங்கள் யார் எனும் தன்மை, முயற்சியின்றி அப்படியே ஒரு குமிழிபோல மிதந்திடும். சாதனைகளை பொருத்தவரை, ஹடயோகா மிகவும் முக்கியமானது. அது உடலளவில் உறுதியான அடித்தளத்தை ஏற்படுத்திக் கொடுக்கும்.

அதோடு, கண்களை மூடி உட்காரும்போது உங்களுக்குள் காலத்தைப் பற்றிய உணர்வே இல்லாத நிலையில் இருந்தீர்கள் என்றால், அப்போது நீங்கள் காலத்தை ஏமாற்றிவிடுகிறீர்கள். உங்களுடைய செல்களின் உயிரோட்டத்தை இளமையில் இருப்பதுபோலவே பராமரித்தால், இந்த உடல் நீடித்திருக்கும். ஏனென்றால், அப்போது உடலால் தன்னை புதுப்பித்துக்கொள்ள முடிகிறது. எல்லாவற்றிற்கும் முக்கியமாக, உங்களுடைய கர்மாவை நீங்கள் போதிய தீவிரத்துடன் எரித்துக் கொண்டிருந்தீர்கள் என்றால், கர்மத்தின் புதிய அடுக்குகள் தானாகவே திறந்துகொள்ளும். சாதனா இல்லாமல், சஞ்சித கர்மா என்று சொல்லப்படும் கர்மத்தின் மொத்தமான குவியலுக்குள், உங்களால் ஆழமாக தோண்ட முடியாது. அப்படிப்பட்ட நிலையில், ஒருவரால் வாழ்நாளின் நீட்டிப்பை கையாள முடியாது.

அது மட்டுமில்லை, அதிகமான ஆண்டுகள் வாழ்வதால் நீங்கள் வாழ்க்கையை அனுபவத்தில் உணர்வது ஒன்றும் மேம்படப் போவதில்லை. அளவில் வேண்டுமானால் ஆயுட்காலம் அதிகமாக இருக்கலாம், ஆனால் வெறுமனே வருடங்களின் எண்ணிக்கையை அதிகரிப்பதால், உங்கள் அனுபவத்தில் வாழ்க்கை ஒன்றும் சிறப்பானதாக ஆகப்போவதில்லை. "எனக்கு 150 வயது ஆகிறது," என்று சொன்னீர்கள் என்றால், அடுத்தவர்கள் வேண்டுமானால் பிரமித்துப் போகலாம். ஆனால், உங்கள் அனுபவத்தைப் பொருத்தவரை, அதில் என்ன வித்தியாசம் ஏற்படப் போகிறது? உங்கள் வாழ்க்கை என்பது கணக்கு வைத்துக்கொள்ளும் புத்தகமா, இல்லை ஒரு மகத்தான நிகழ்வா? அதை நீங்கள்தான் முடிவுசெய்ய வேண்டும். அது கணக்கு வைத்திடும் புத்தகமென்றால், அப்போதுதான் வருடங்களின் எண்ணிக்கை முக்கியமானது. வாழ்க்கை என்பது உங்கள் அனுபவத்தில் உணரவேண்டிய மகத்தான நிகழ்வு என்றால், அப்போது எந்த எண்ணிக்கைக்கும் அர்த்தமே கிடையாது.

## அடுத்த பரிமாணங்களைத் தேடி

மனிதர்களுக்கு இந்த கேள்வி இருக்கிறது: என் வாழ்க்கைதான் நன்றாக போய்க் கொண்டிருக்கிறதே, பிறகு நான் ஏன் இதை முடிவில்லாமல் தொடரக்கூடாது? அதில் என்ன தவறு இருக்கிறது? ஏன் வேறு எதையோ தேடிப் போகவேண்டும்? இப்போது, நாமென்னவோ இதை துன்பமாக உணர்வதால் இதை விட்டுவிட்டு அடுத்ததற்கு நகரவேண்டும் என்று அர்த்தம் கிடையாது. அடிப்படையாக, உயிரின் இயல்பிலேயே, அது அடுத்த பரிமாணத்திற்கு போக விரும்புகிறது. உச்சகட்ட பரிமாணத்தை அடைந்திட விரும்புகிறது.

அதாவது, நீங்கள் பிறந்த பிறகு நடக்கக் கற்றுக்கொண்டீர்கள். அது மிகுந்த சிலிர்ப்பூட்டும் விஷயமாக இருந்தது. பிறகு வளர்ந்தீர்கள், அப்புறம் கல்யாணம் செய்து கொண்டீர்கள், பணம் சம்பாதித்தீர்கள், குழந்தை பெற்றீர்கள், அதன்பின் இறந்து போனீர்கள்.

பிறகு மறுபடியும் பிறந்தீர்கள், மறுபடியும் எழுந்து நின்றபோது சிலிர்ப்படைந்தீர்கள், அப்புறம் சைக்கிள் ஓட்டியபோதும் சிலிர்ப்படைந்தீர்கள், மறுபடியும் உங்களுடைய காதலரை பார்த்த சமயத்தில் மிகவும் சந்தோஷம் அடைந்தீர்கள், பிறகு வருத்தம் அடைந்தீர்கள், மறுபடியும் கல்யாணம் ஆனது - இது இப்படியே திரும்பத் திரும்ப நடந்துகொண்டே இருக்கிறது. யாரோ உங்களுக்கு சொன்னதால் அல்ல, உண்மையில் நீங்களே இதை உணர்ந்தீர்கள் என்றால் - அதாவது, இதைத்தான் திரும்பத் திரும்ப ஆயிரம்முறை செய்துவிட்டோமே, மறுபடியும் மறுபடியும் இதையே செய்து கொண்டிருக்கிறோமே என்று நீங்கள் உணர்ந்தால் - மறுபடியும் இதையே தொடர்ந்து செய்ய விரும்புவீர்களா?

வாழ்க்கை நன்றாகத்தானே போய்க்கொண்டிருக்கிறது என்றால் என்னவென்று பார்ப்போம். கல்யாணமாகி, வீடு கட்டி, குழந்தைகள் பெற்று, வங்கியில் பல லட்சங்கள் வைத்திருந்தால் - நன்றாக வாழ்ந்து கொண்டிருக்கிறோம் என்று நினைக்கிறார்கள். அப்படி கிடையாது. நன்றாக வாழ்வது என்றால் வாழ்க்கையின் எல்லா பரிமாணங்களையும் புரிந்து உணர்ந்துவிட்டீர்கள் என்று அர்த்தம். இந்த உயிரைப் பற்றி புரிந்துகொள்ள வேண்டியது எல்லாவற்றையுமே உணர்ந்துவிட்டீர்கள் என்றால், அப்போது ஞாபகங்களின் குமிழிகளை உடைத்து விட்டீர்கள். அதில்தானே வெவ்வேறு விஷயங்களை பதிவுசெய்து வைத்திருக்கிறீர்கள். உங்களுக்குள் எல்லாமே உடைந்து போய்விட்டால், அப்போது நிச்சயமாக அடுத்த பரிமாணத்திற்கு நகர்ந்திட விரும்புகிறீர்கள். ஒரே விஷயத்தை திரும்பத் திரும்ப செய்து கொண்டிருக்கிறோம் என்ற புரிதல் வந்துவிட்டால், அவர் அதற்காக வருத்தப்படுவார். அடுத்த பரிமாணத்திற்கு நகர்ந்திட வேண்டும் என்ற விருப்பம் தானாகவே தோன்றிடும்.

இப்படிப் பார்க்கலாம் - உங்களுக்கு பிடித்த திரைப்படம் எதுவோ, அதையே திரும்ப திரும்ப பார்க்க வைக்கிறோம். ஒரு நாளைக்கு ஏழு முறை, தினமும், அடுத்த ஒரு மாதத்திற்கு அதையே பார்க்க வேண்டும். என்னதான் இருந்தாலும் அது பிரமாதமான படம், உங்களுக்கு மிகவும் பிடித்த படம் அல்லவா? முதல் ஐந்து தடவை அல்லது பத்து தடவை பார்த்தபோது, கண்ணீருடன் வெளியே வருவீர்கள். அதற்குப் பிறகு, நீங்கள் முழுவதுமாக போய்விட்டால் ஒழிய, அது வெறும் ஒளியும் ஒலியும் மட்டும்தான் என்று பார்ப்பீர்கள். உங்களிடமிருந்து எந்த ஈடுபாடும் இருக்காது. அப்போது சும்மா அப்படியே உட்கார்ந்து வெறுமனே அதை

பார்ப்பீர்கள். அதற்குமேல், நான் உங்களை ப்ரொஜெக்டர் ரூமுக்கும் கொண்டுபோய் காட்டிவிடுவேன். இதெல்லாம் இரண்டு வீல்களும் ஒரு லைட் பல்பும் சேர்ந்து உருவாக்கும் தந்திரம்தான் என்று உங்களுக்கு புரிந்துவிடுகிறது. அதுதான் உங்களுக்குள் இந்த உணர்ச்சிகளை எல்லாம் உருவாக்கி உங்களை நம்பவைக்கிறது என்று நன்றாக புரிந்துவிடுகிறது. இப்போது, நீங்கள் இன்னும் அந்த திரைப்படத்தை சந்தோஷமாக அனுபவிக்கலாம், ஆனால் அதில் உங்கள் ஈடுபாடு இனி இருக்காது.

அடுத்த பரிமாணத்திற்கு போய் பார்க்கவேண்டும் என்ற ஏக்கம் மிகவும் தீவிரமாகிவிடும். குறிப்பாக, நீங்கள் திரும்பிப் பார்த்து, அதே திரைப்படத்தில் நீண்டகாலமாக இருக்கிறீர்கள் என்று புரிந்துவிட்டால், இந்த ஏக்கம் தீவிரமாகிவிடும். இப்போதிருக்கும் பரிமாணம், "இதை" பற்றியும் "அதை" பற்றியும் ஆனது. இப்போதைய மனநிலையில், "இதுவும் அதுவும்" அல்லது "அதுவும் அதுவும்" என்பது ஆர்வத்தை ஏற்படுத்துகிறது. ஆனால் அடுத்த பரிமாணம் என்பது, "இதுவும் இதுவும்தான். இது மட்டுமேதான்." பலவாக தோன்றுவது எல்லாம், ஒன்றேதான் என்றாகிவிடும். இப்போதைக்கு இது சுவாரசியமாக தோன்றாமல் இருக்கலாம். ஏனென்றால், இப்போதைக்கு நீங்கள் இருக்கும் பரிமாணத்திலிருந்து மட்டுமே உங்களால் யோசிக்கவும், உணரவும், புரிந்துகொள்ளவும் கற்பனை செய்யவும் முடியும். ஆனால், இது அப்படித்தான். நாம் நீண்டகாலமாக அதே பரிமாணத்தில்தான் இருந்து கொண்டிருக்கிறோம் என்பதை எவ்வளவு சீக்கிரமாக உணர்ந்து விடுகிறீர்களோ, அவ்வளவு ஆழமாக, இதற்கு அப்பாற்பட்ட பரிமாணத்தை அடைய ஏங்குவீர்கள். அதுவரை, உங்களுக்கு அது சுவாரஸ்யமானதாக தோன்றாது.

அத்தியாயம் 5

# மஹாசமாதி

மஹாசமாதி என்றால் விளையாட்டு முடிவுக்கு வந்துவிட்டது என்று அர்த்தம். சுழற்சி இதோடு முடிந்துவிட்டது. இனி மறுபடியும் பிறப்பதைப் பற்றிய கேள்வியே இல்லை, இது பரிபூரணமாக கரைந்துவிட்டது. அந்த மனிதர் முற்றிலும் இல்லாமல் போய்விட்டார் என்று சொல்லலாம்.

## சமாதியும் மரணமும்

மனிதர்கள் அடிக்கடி சமாதியையும் மரணத்தையும் தொடர்புபடுத்திக் கொள்கிறார்கள். சமாதி என்றால் அதுவும் மரணத்தைப் போன்ற சூழ்நிலை என்று நினைக்கிறார்கள். இல்லை, இரண்டிற்கும் நடுவே பலதூர இடைவெளி இருக்கிறது. சமாதி என்ற வார்த்தை மிகவும் தவறாகப் புரிந்துகொள்ளப்பட்டுள்ளது. இது சமா மற்றும் தி என்ற இரண்டு சொற்களால் ஆகியுள்ளது. சமா என்றால் சமநிலை, தி என்றால் புத்தி. உங்கள் புத்தியில் ஒரு சமநிலை ஏற்பட்டால், அது சமாதி என்று அழைக்கப்படும்.

அடிப்படையில் புத்தியின் இயல்பே, பிரித்துப்பார்த்து புரிந்து கொள்வதுதான். இப்படி பாகுபடுத்திப் பார்க்கும் திறன் இல்லையென்றால் நீங்கள் உயிர்பிழைக்கவே முடியாது. பாகுபடுத்தும் தன்மை உங்களுடைய பிழைப்புக்கு மிகவும் முக்கியமானது. உங்களுடைய புத்தி வேலைசெய்து கொண்டிருப்பதால்தான், உங்களால் ஒரு மனிதரையும் ஒரு மரத்தையும் வித்தியாசப்படுத்தி பார்க்கமுடிகிறது. ஒரு கல்லை உடைக்க வேண்டுமென்றால், உங்கள் விரலையும், அந்த கல்லையும் பாகுபடுத்திப் பார்த்தால்தான் உடைக்கமுடியும். இல்லாவிட்டால், உங்கள் விரலையே உடைத்துக்கொள்வீர்கள். இப்படி, பிழைத்திருக்கும் உணர்வுக்கு உதவிடவும், அந்த உணர்வை செயல்படுத்தவும் இந்த பாகுபடுத்தும் திறன் ஒரு கருவியாக இருக்கிறது. பிழைப்புணர்வு என்பது உங்கள் உடலின் ஒவ்வொரு செல்லிலும் இருக்கிறது. உங்களுடைய புத்தியை தாண்டிய நிலைக்குச் சென்றால், நீங்கள் சமநிலை அடைகிறீர்கள். அப்படியென்றால் உங்களுடைய பாகுபடுத்தும் திறன் தொலைந்துவிட்டது

என்று அர்த்தமில்லை. பாகுபடுத்தும் புத்தியை இழந்துவிட்டால், நீங்கள் பைத்தியம் ஆகிவிடுவீர்கள்.

சமாதி நிலையில் உங்களுடைய பாகுபடுத்தும் புத்தி சரியாக அப்படியே இருக்கும், அதேசமயம், நீங்கள் அதைத் தாண்டி இருக்கிறீர்கள். நீங்கள் எதையும் வித்தியாசப் படுத்தவில்லை - சும்மா அப்படியே இருக்கிறீர்கள், வாழ்க்கையில் உள்ளதை உள்ளபடி உண்மையாக பார்க்கிறீர்கள். உங்கள் புத்தியை தாண்டிவிட்டீர்கள் என்றால், பாரபட்சம் என்பது இல்லாமல் போய்விடும். அனைத்துமே பூரணமான ஒன்றாக ஆகிவிடுகிறது, நிஜம் இப்படித்தான் இருக்கிறது. இந்த நிலையில், பிரபஞ்சத்துடன் ஐக்கியமாகிய அனுபவத்தை பெறுகிறீர்கள், இருப்பது அனைத்துமே சங்கமித்து விடுகிறது. இந்த நிலையில் காலம் கிடையாது, இடம் கிடையாது. உங்கள் மனத்தின் படைப்புதான் காலமும் இடமும். தடையாக இருக்கும் மனத்தை தாண்டிடும்போது, உங்கள் அனுபவத்தில் காலமும் இடமும் இல்லாமல் போகிறது. இங்கே இருப்பது அங்கேயும் இருக்கிறது, அப்போது என்பது இப்போது ஆகிறது. உங்களுக்குள், கடந்தகாலம் எதிர்காலம் என்றெல்லாம் ஒன்றுமில்லை. சர்வமும் இங்கேயே இருக்கிறது, இந்த கணத்திலேயே இருக்கிறது.

சமாதி என்ற சமநிலையில், புத்தி தன்னுடைய வழக்கமான பாகுபடுத்தும் தன்மைக்கு அப்பாற்பட்டு இயங்குகிறது. இந்த காரணத்தால், ஒருவருக்கு தன் பொருள் உடலுடன் இருக்கும் பிடிப்பு தளர்ந்துபோகிறது. உங்களுக்கும் உங்கள் உடலுக்கும் நடுவில் ஒரு இடைவெளி உருவாகிறது. மரணம் என்றால் பொருள் உடல் என்பது முழுமையாகப் போய்விடும். பொருள் உடலுடன் எந்த தொடர்புமே இருக்காது. சமாதி என்றால் பொருள் உடல் நன்றாக அப்படியே இருக்கிறது, ஆனால் பொருள் உடலுடன் இருக்கும் தொடர்பு மிகவும் குறைந்துவிட்டது, குறைந்தபட்சம் ஆகிவிட்டது.

நாம் எளிமையாக புரிந்துகொள்வதற்காக, சமாதி நிலைகளை எட்டு விதங்களாக அல்லது அடுக்குகளாக வகைப்படுத்தி உள்ளார்கள். இந்த எட்டையும், பரவலாக இரண்டு வகையாக பிரிக்கலாம் - *சர்விகல்ப சமாதி மற்றும் நிர்விகல்ப சமாதி.* குறிப்பிட்ட குணங்களையும், தன்மைகளையும் கொண்ட சமாதிகள் சர்விகல்ப சமாதி என்று அழைக்கப்படும். அவை இனிமையாக இருக்கும், ஆனந்தமாக இருக்கும், பரவசமாக இருக்கும். நிர்விகல்ப சமாதிகளுக்கு எந்த விதமான குணங்களும் தன்மைகளும் கிடையாது. இனிமையானது, இனிமை இல்லாதது, இதற்கெல்லாம் அப்பாற்பட்டது நிர்விகல்ப சமாதி. நிர்விகல்ப சமாதி நிலைக்குள் ஒருவர் போய்விட்டால், அவரை மிகவும் பத்திரமாக பராமரிக்க வேண்டும். ஏனென்றால் அவருக்கு, தன் பொருள் உடலுடன் இருக்கும் தொடர்பு மிக மிக குறைவே. ஒரு சின்ன சத்தம் வந்தாலும் அல்லது ஒரு ஊசி

குத்தினால்கூட, இப்படி துளியளவு தொந்தரவு ஏற்பட்டாலும், உடலில் இருந்து அவர் வெளியேறிட வாய்ப்பிருக்கிறது.

தனக்கும், தன் உடலுக்கும் உள்ள இடைவெளி உறுதியாக நிலைத்திடும் படி செய்ய, குறிப்பிட்ட காலத்திற்கு, இதுபோன்ற நிலைகளில் தொடர்ந்து இருப்பார்கள். ஒருவரின் ஆன்மீக வளர்ச்சியில், இது மிகவும் முக்கியமான ஒரு படி என்று சொல்லலாம், ஆனால் இதுவே உச்சம் கிடையாது.

நாம் ஏற்கனவே பார்த்ததுபோல, சில சமயம் யோகிகள் குறிப்பிட்ட காலத்திற்கு ஆழமான சமாதி நிலைகளுக்குள் போய் இருப்பார்கள். அது தங்களுக்குள் குறிப்பிட்ட சூழ்நிலைகளை தவிர்ப்பதற்காகவோ, தங்களின் கர்மாவை கழிப்பதற்கு அதிக அவகாசம் பெறுவதற்காகவோ இருக்கலாம். ஒரு யோகியின் வாழ்க்கை சூழ்நிலை இப்படி இருக்கிறது என்று வைத்துக்கொள்வோம்: தன் உடலை விடவேண்டிய சமயம் நாளைக்கே என்பது அவர் புரிதலில் இருக்கிறது, ஆனால் அவருடைய கர்மாவின் கணக்கு இன்னும் முடியவில்லை, கர்மா இன்னும் தீரவில்லை. அதனால், அவருக்கு போக விருப்பம் இல்லை. அதற்கு பதிலாக அவர் சமாதி நிலைக்குள் போய்விடுகிறார், ஒரு வாரம் அல்லது பத்து நாட்களுக்கு என்று வைத்துக்கொள்வோம். இப்போது ஒரு குறுகிய காலத்திற்கு அவகாசம் கிடைக்கிறது - அதற்குள் அவர் முடிக்க வேண்டியதை முடித்துக்கொள்ளலாம். ஒருவிதத்தில், இது கடிகாரத்தை பின்னோக்கி சுற்றுவது போலாகும், ஒருவிதத்தில் இது காலத்தை ஏமாற்றுவது ஆகும். ஒருவர் தான் உடலும் இல்லை மனமும் இல்லை என்ற நிலையில் இருக்கும்போது, அவர் காலச்சக்கரத்தை தவிர்த்து விடுகிறார். இப்படி காலத்தை ஏமாற்றி, இன்னும் கொஞ்சம் அவகாசம் பெற்று இங்கேயே தங்கியிருக்கிறார்.

தன்னை உணர்வதற்கு அல்லது இந்த உயிரின் உண்மையான தன்மையை உணர்வதற்கு சமாதிகள் ஒன்றும் அவ்வளவு முக்கியமானது இல்லை. கௌதம புத்தரின் சிஷ்யர்கள் பலரும், நீண்ட சமாதி நிலைகளுக்குள் போனார்கள். வருடக்கணக்கில் அவர்கள் அதைவிட்டு வெளியே வரவில்லை. ஆனால், கௌதம புத்தரே ஒருபோதும் அப்படிச் செய்யவில்லை. தன்னுடைய ஞானோதயத்திற்கு முன்பாகவே, எட்டு விதமான சமாதிகளையும் அவர் அனுபவித்து இருந்தார், அப்போதே அதை ஒதுக்கியும் வைத்துவிட்டார். அவர், "இதுவே உச்சம் இல்லை. இதனால் நீங்கள் ஞானத்திற்கு நெருக்கமாக வரப்போவதில்லை. இது இன்னொரு உயர்ந்தநிலை அனுபவம், அவ்வளவுதான். அதோடு, தற்போதுள்ள நிஜத்தின் அனுபவத்தைவிட, அது மிகவும் இனிதாக இருப்பதால், அதில் நீங்கள் சிக்கிப்போகவும் வாய்ப்பிருக்கிறது," என்று சொல்வார்.

வாழ்க்கையில் உங்களுடைய குறிக்கோள் உறுதியாக இருக்கிறதென்றால், தன்னை உணர்வதுதான் எல்லாவற்றுக்கும் மேலானது என்று ஆகிவிட்டால், அதை நோக்கி உங்களை ஒரு படிகூட எடுத்து செல்லாத எந்த விஷயமும் அர்த்தமற்றதுதான்.

## ஞானோதயமும் மரணமும்

மரணத்திற்கும் ஞானோதயத்திற்கும் என்ன தொடர்பு இருக்கிறது? மரணமும் ஞானமும் ஒன்றோடு ஒன்று பின்னிப் பிணைந்தது. அதாவது, உயிர்சக்தியின் தீவிரம் உச்சத்துக்கு போய்விட்டால், உடலைப் பிடித்து வைத்துக்கொள்ள முடியாது. அதேபோல, உயிர்சக்தி மிகவும் உயிர்ப்பு குன்றி போனாலும், உடலைப் பிடித்து வைத்துக்கொள்ள முடியாது. சக்தியின் தீவிரத்தை ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேல் அதிகரித்தால், நீங்கள் ஞானமடைந்து உடலை விட்டுவிடுவீர்கள். ஒரு குறிப்பிட்ட அளவுக்கு கீழே சக்தியின் தீவிரம் குறைந்துவிட்டால், அப்போது இறந்து போவீர்கள். இயற்கையாகவே இப்படித்தான் நிகழும். ஞானம் அடைந்த பெரும்பாலான மனிதர்களால், அதற்குமேல் தங்களின் உடலில் தங்க முடியாது. அப்படி தங்கவேண்டும் என்றால், அதற்கு சில தந்திரங்களை செய்யவேண்டும். ஒன்று, அவர்கள் இந்த உடலின் தொழில்நுட்பத்தை நன்றாக புரிந்திருக்கவேண்டும். அல்லது அவர்கள் விழிப்புணர்வுடன் ஏதாவது கர்மாவை தொடர்ச்சியாக உருவாக்கிக்கொண்டு இருக்கவேண்டும் - ஏதாவது ஒரு ஆசை, எதைப் பற்றியாவது ஒரு ஏக்கம் என்று எதையாவது உருவாக்கவேண்டும். அதைப் பார்த்தால், அவர்களின் வாழ்விற்கு கொஞ்சமும் பொருந்தாதது போல் அபத்தமாக தோன்றும். ஏனென்றால், அதற்கும் அந்த மனிதரின் மற்ற குணங்களுக்கும் துளியும் சம்பந்தம் இருக்காது. ஆனால் தன் உடலை தக்கவைத்துக் கொள்வதற்காக அவர் அதையெல்லாம் தொடர வேண்டியிருக்கும்.

உங்களுடைய கர்மாவை படிப்படியாக கரைக்க வேண்டும் என்றால், அப்போது ஆன்மீக சாதனை மிகவும் அத்தியாவசியமாகிறது. ஈஷாவில், திடீர் ஞானோதயம் பற்றியெல்லாம் எங்களுக்கு நம்பிக்கை இல்லை. திடீரென்று ஞானோதயம் ஏற்பட்டுவிட்டால், பெரும்பாலானவர்களுக்கு அதை தாக்குப்பிடிக்கும் திறன் இருக்காது. ஒன்று அவர்கள் இறந்து போகலாம் அல்லது முழுக்க முழுக்க உள்முகமாக மட்டுமே இருந்துவிடலாம். இதை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும்: உலகில் ஆயிரக்கணக்கானவர்களுக்கு ஞானம் நிகழ்கிறது, ஆனால் அதில் 90 சதவிகிதம் பேர் தன்னை உணரும் அந்த கணத்திலேயே

உடலை விட்டுவிடுவார்கள். நான் இந்த உடல் இல்லை என்று புரிந்தவுடனேயே, அதற்குமேல் அவரால் இந்த உடலில் தங்கமுடியாது. இந்த உடலில் தங்கியிருந்து தன் பணியை தொடரத் தேவையான பக்குவமும் அவரிடம் இல்லை, அதற்கான புரிதலும் இல்லை. அதனால் தன்னை உணரும் அந்த கணத்திலேயே, அவர் இந்த உடலை விட்டு வெளியேறி விடுவார்; கதை முடிந்துவிடுகிறது. அதனால்தான் ஞானம் பெற்றவர்களில் பெரும்பாலானவர்கள் அறியப்படாமலேயே போய்விடுகிறார்கள். அபூர்வமான ஒரு சிலர் மட்டும்தான் ஓரளவுக்கான புரிதலை அடைகிறார்கள், அவர்களுக்கு ஞானத்திற்கு பின்பும் உடலை பிடித்துவைக்கும் சாமர்த்தியம் இருக்கிறது.

இங்கு ஈஷாவில், பெருமளவில் ஆன்மீக சாதனைகள் நடக்கின்றன. என்னுடைய உண்மையான வேலை என்னவென்று பார்த்தால், யோகா நிகழ்ச்சிகள் என் வாழ்வின் ஒரு சிறிய அங்கம்தான். இந்த நிகழ்ச்சிகளிலேயே அதிகமான நேரம் செலவானாலும், என்னுடைய உண்மையான வேலை என்பது இதுவல்ல, அது முற்றிலும் வித்தியாசமானது. இங்கு நிறைய பேர் இப்படி இருக்கிறார்கள் - நான் அவர்களை விட்டால், அவர்கள் பரிபூரண ஞானம் அடைந்தவர்களாக ஆகிவிடுவார்கள். ஆனால், அவர்களுக்கு தங்களுடைய உடல்களை தக்கவைத்துக்கொள்ள தெரியாது, அந்தளவுக்கு உடலின்மேல் ஆளுமை கிடையாது. அதனால் வழக்கமாக, அவர்களை கடைசிப்படி வரைக்கும் கொண்டு போய்விட்டு, பிறகு அங்கேயே இழுத்துப் பிடித்து வைப்போம். இப்போது உடல் தன்னுடைய இயற்கையான ஆயுள் பாதையில் போகும்படி விட்டுவிடுவோம். இப்படி அவர்களை பிடித்துவைப்பது நல்லதல்ல, ஆனால் நாம்தான் சமூகத்தில் ஏராளமான பொறுப்புகளை எடுத்துக் கொண்டுள்ளோமே. அதனால் எப்போதுமே கடைசி படியில் அவர்களை பிடித்துவைப்பேன், இப்போது உடல் தன்னுடைய இயற்கையான பாதையில் பயணிக்கட்டும். அது ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தை நிறைவு செய்தவுடன், அதன்பிறகு நடக்கவேண்டியதை அவர்களிடமே விட்டுவிடுவோம்.

இப்படி கடைசிபடியை அடைந்து, உடலை தக்க வைத்துக்கொள்ள, ஒன்று இந்த உடலின் தொழில்நுட்பம் புரிந்திருக்க வேண்டும், அல்லது இதை பிடித்துக்கொள்ள ஏதாவது வித்தை செய்யவேண்டும். பலரும் என்னிடம், "உடலை தக்கவைக்க உங்களுடைய தந்திரம் என்ன?" என்று கேட்பார்கள். எனக்கு எந்த கட்டுப்பாடுகளும், கட்டாயங்களும் கிடையாது. என் பாதத்தில் ஒரு தண்டை அணிந்திருக்கிறேன். இது ஒருவிதமான கட்டிப்போடும் விலங்கு என்று சொல்லலாம். இது வெறும் தண்டை அல்ல, இது ஒரு உபாயம் ஆகும். இது குறிப்பிட்ட விதத்தில்

உருவாக்கப்பட்டிருக்கிறது. இதற்குள் பாதரசம் நிரம்பியிருக்கிறது, மேலும் சில விஷயங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. இது உயிருடன் இருக்கிறது. ஒருநாள் என் காலில் இந்த தண்டை தென்படாவிட்டால், அப்போது மிகவும் குறைவான நேரமே எனக்கு இருக்கிறது என்று புரிந்துகொள்ளுங்கள்.

## முக்தியும் மஹாசமாதியும்

நமது பாரதத்தின் வாழ்க்கை முறையில், கடவுளை அடைவதோ, சொர்க்கத்திற்குப் போவதோ வாழ்க்கையின் உச்சக்கட்ட குறிக்கோள் அல்ல. முக்திதான் வாழ்க்கையின் உச்சக்கட்ட குறிக்கோள் என்று இங்கே எப்போதுமே சொன்னார்கள். முக்தி என்றால் உச்சபட்ச விடுதலை, அதாவது பிறப்பு-இறப்பு எனும் சுழற்சியிலிருந்து விடுபட்டுப் போவது. ஆனால் விடுதலை, விடுபடுவது என்றெல்லாம் சொன்னால் வானத்தில் பறந்திடும் ஒரு பறவையை கற்பனை செய்வார்கள். பறவைகளை கவனித்திருந்தால் பார்த்திருப்பீர்கள், கழுகு, கருடன் போன்ற கம்பீரமான பறவைகள்கூட பறக்கும்போது தரையைத்தான் தொடர்ந்து பார்த்துக் கொண்டிருக்கும். மேலே பறந்து கொண்டிருந்தாலும், கீழே சாப்பிட ஏதாவது கிடைக்குமா என்றுதான் அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் பறப்பதை சந்தோஷமாக உணரவில்லையோ என்னவோ! அவர்களைப் பொருத்தவரை, அது பிழைப்புக்கான ஒரு வழி, அவ்வளவுதான். நீங்கள் எப்படி அலுவலகத்திற்கு போகிறீர்களோ, அப்படித்தான். அதனால், முக்தி என்பதை வேறு வார்த்தையில் சொன்னால் ஒருவரின் மனதில் தவறான உருவங்கள் தோன்றலாம்.

நிர்வாணா, மோட்சம் ஆகிய வார்த்தைகளும் முக்தியைத்தான் குறிக்கின்றன. நிர்வாணா என்பது இன்னும் சரியான வார்த்தையாக அமைகிறது. நிர்வாணா என்றால் இல்லாமை. அதாவது, இருப்பு என்ற சுமை இனி உங்களுக்கு இல்லாமல் விடுபட்டுப் போனீர்கள் என்று அர்த்தம். இருப்பில் இருந்து விடுபடுவது என்றால் என்ன? அளவிடப்படும் ஒன்றாக இருந்து, அதிலிருந்து விடுபடுவது என்று அர்த்தமில்லை. உங்களுடைய இருப்பிலிருந்தே விடுபடுகிறீர்கள். உங்களுடைய இருப்பு முடிந்துபோனது, இல்லாமல் போனது. இதுதான் உச்சபட்ச விடுதலை. பொருள் உடலில் இங்கு இருந்தால், அது ஒருவிதமான கட்டுப்பாடு. பொருள் உடலை விட்டுவிட்டு, வேறு விதத்தில் இருந்தால், அப்போதும் அது வேறுவிதமான கட்டுப்பாடுதான். இருக்கும் எல்லாமே ஏதோ ஒரு விதியால் ஆளப்படுகிறது. முக்தி என்றால் இப்போது எல்லா விதிகளையும் உடைத்துவிட்டீர்கள் என்று அர்த்தம். நீங்கள் இருப்பது முடிவடைந்தால்தான், நீங்கள் இல்லாமல் போனால்தான், அந்த விதிகள் உடையும். இதுவே உச்சபட்ச விடுதலை ஆகும்.

ஒவ்வொருவரின் உச்சபட்ச தேடலும், இந்த இருப்பை கடந்து போவதுதான். இருப்பு எனும் நிகழ்வில் அவருக்கு விருப்பமில்லை; பிறப்பு-இறப்பு என்று இருந்து கொண்டிருப்பது அல்லது சுற்றி அலைந்து கொண்டிருப்பது - அதில் எல்லாம் அவருக்கு விருப்பம் இல்லை. நீங்கள் பொருள் உடலோடு பிறந்தாலும் பிறக்கவில்லை என்றாலும், நீங்கள் இருக்கும் வரை உங்களுக்கு ஏதோவொன்று நிகழ்ந்து கொண்டுதான் இருக்கிறது. இருப்பு என்பது எப்போதுமே ஒரு நிகழ்வுதான். அது ஒரு பொருள் அல்ல. சூரியன் நிகழ்கிறது, சூரிய மண்டலமே நிகழ்கிறது, நட்சத்திர மண்டலங்கள் நிகழ்கின்றன, அவை எல்லாம் சேர்ந்த அண்டம் என்பதும் ஒரு நிகழ்வுதான். இந்த நிகழ்வுகளில் இருந்தெல்லாம் விடுபட விரும்பினால், உங்களின் இருப்பு முடியவேண்டும், நீங்கள் இல்லாமல் போகவேண்டும், வேறு வழியே இல்லை. இருப்பு என்பது, அதை நீங்கள் அறிந்தபடி, இல்லாமல் போகவேண்டும். அப்போது மட்டுமே எந்த நிகழ்வும் இருந்திடாது.

இதனால் என்ன பயன்? ஒருவர் தன் வாழ்க்கையை உண்மையாக கவனிக்கும்போது, "இதனால் என்ன பயன்?" என்று புலப்படுகிறது, இந்த எண்ணம்தான் அவரை முக்தியை நோக்கிய தேடலில் போகவைக்கிறது. இப்போதைக்கு, "இதில் என்ன அர்த்தம் இருக்கிறது?" என்ற கேள்வி மனிதர்களில் அவ்வளவு ஆழமாக ஏற்படவில்லை. அவர்கள் இன்னும் குழந்தைகளாகத்தான் இருக்கிறார்கள். அவர்களுடைய உடல் வளர்ந்து இருக்கலாம், ஆனால் புரிதலை பொருத்தவரை குழந்தைகளாகத்தான் இருக்கிறார்கள். அவர்களுக்கு இன்னும், இதைப் பார்க்கவேண்டும், அதை பார்க்கவேண்டும் என்றுதான் தோன்றுகிறது. ஒரு நூறு பிறவிகளின் ஞாபகம் உங்களுக்குள் திறந்துகொண்டது என்று வைத்துக்கொள்வோம். அதே மடத்தனத்தைதான் மறுபடியும் மறுபடியும் செய்துகொண்டிருக்கிறோம் என்று உங்களுக்குப் புரிந்திடும். அப்போது நிச்சயமாக, "இதில் என்ன அர்த்தம் இருக்கிறது? இன்னொரு பெண்ணின் கருவுக்குள் நுழைகிறேன், மறுபடியும் குழந்தையாக பிறக்கிறேன், இன்னொரு முட்டாள்தனம் செய்கிறேன் - இதனால் என்ன பயன்?" என்ற கேள்வியை கேட்பீர்கள். உங்களுக்குள் இந்த கேள்வி உண்மையிலேயே ஆழமிக்கதாகிவிட்டால், அப்போது முக்திக்கான உங்களுடைய ஏக்கம் முழுமையானதாகும்.

முக்தி என்றால் பிறப்பு-இறப்பு எனும் நிகழ்வுகளிலிருந்து நீங்கள் முழுமையாக விடுபட்டு விட்டீர்கள் என்று அர்த்தம். நீங்கள் ஏதோ துன்பத்தில் இருக்கிறீர்கள், அதனால் விடுபட விரும்புகிறீர்கள் என்று கிடையாது. துன்பத்தில் வாழும் மனிதர்கள் முக்தி அடையமுடியாது. நீங்கள் நன்றாகத்தான் இருக்கிறீர்கள், சந்தோஷமாக இருக்கிறீர்கள், ஆனால் மழலையர் பள்ளியிலேயே பலகாலம் இருந்து போதும்போதும்

என்று ஆகிவிட்டது - அதனால் முன்னேறி நகரலாம் என்ற நோக்கம். உங்கள் பள்ளி வாழ்க்கை எவ்வளவுதான் அழகாக இருந்திருந்தாலும், கல்லூரிக்குப் போக விரும்புவீர்களா மாட்டீர்களா? அப்படித்தான் இதுவும். மரணம் என்பது பொருள் உடலின் முடிவுதான். மற்றவையெல்லாம் அப்படியே தொடர்கிறது, சீக்கிரமே இன்னொரு உடலை எடுக்கிறது. ஆனால், முக்தி என்றால் அப்படியில்லை, எல்லாமே முடிவுக்கு வந்துவிடுகிறது. ஒருவிதத்தில், முக்தி என்பது மரணத்தின் முடிவு - பிறப்புக்கும்தான். முக்தி என்பது மஹாசமாதி என்றும் அழைக்கப்படுகிறது.

மஹாசமாதி என்றால் ஒருவர் முழு விழிப்புணர்வுடன், தன் உடலுக்கு எந்த சேதமும் ஏற்படுத்தாமல், அதை விட்டு வெளியேற முடிகிறது என்று அர்த்தம். பொதுவாகவே, இந்த உடலை விடவேண்டும் என்றால், நீங்கள் எவ்வளவு முயற்சி செய்தாலும், ஏதோ ஒருவிதத்தில் இந்த உடலுக்கு சேதம் ஏற்படுத்தாமல், உங்களால் வெளியேறவே முடியாது. உள்ளிருக்கும் உயிரை பராமரித்திடும் தகுதியை உடல் இழந்தால் ஒழிய, உயிர் வெளியேறாது. சூழ்நிலை மோசமாகும்போது பலரும், "நான் இறக்க வேண்டும்," என்று சொல்கிறார்கள். ஆனால் அவர்கள் இறக்கமாட்டார்கள், ஏனென்றால் அவர்களால் முடியாது, அதுதான் காரணம். மஹாசமாதி என்றால், வெளியிலிருந்து எந்த உதவியையும் பயன்படுத்தாமல், சுயமாக நீங்கள் விரும்பியபோது உடலை விடுவது என்று அர்த்தம். முழு விழிப்புணர்வுடன், இந்த உடலை சேதப்படுத்தாமல், அதிலிருந்து வெளியேற முடியுமென்றால், அதற்கு மஹாசமாதி என்று பெயர். இப்படி செய்யும் திறனை ஒருவர் பெறவேண்டும் என்றால், அதற்கு மகத்தான சக்தி தேவைப்படும். அப்படிப்பட்டவருக்கு இந்த உயிர் உடலுடன் எங்கே கட்டப்பட்டிருக்கிறது என்று நன்றாக தெரியும். அவர் அதை அவிழ்த்துவிட்டு போய்விடுகிறார்.

மஹாசமாதியின் போது பாகுபடுத்திப் பார்க்கும் புத்தியையும் கடந்து விடுகிறீர்கள் என்று அர்த்தம். இப்போது நீங்கள் என்றும், மற்றொன்று என்றும் எதுவுமே இல்லை. எல்லாமே பூரணமாக முடிந்து போய்விட்டது. இப்போது நீங்கள் இங்கே உட்காரும்போது, நீங்கள் என்றும் மற்றொன்று என்றும் இருக்கிறது. இப்போதைக்கு இதுதான் நிஜம் - இது ஒருவிதமான நிஜம். ஆனால், மஹாசமாதி என்றால் தனியாளாக இருந்தது கரைந்து போய்விட்டது, நீங்கள் என்பது இனி இல்லாமல் போனது.

சமநிலையின் உச்சக்கட்ட பரிமாணம் மஹாசமாதி. இது எந்தளவுக்கு தீவிரமாக இருக்கிறதென்றால், இந்த நிலையில் ஒருவர், எளிதாக முயற்சியின்றி உடல் தன்மையை கழட்டிவிட முடியும். அப்படியென்றால், வெறும் அன்னமய கோஷம் எனும் பொருள் உடலை மட்டுமல்ல, மனோமய கோஷம், பிராணமய கோஷம், விஞ்ஞானமய கோஷம்,

ஆகியவற்றையும் சேர்த்துத்தான். உள்ளுக்குள் இருக்கும் உயிரும், உங்களுக்கு வெளியே இருக்கும் உயிரும் ஒன்றாக ஐக்கியமாகிடும்போது, இயல்பாகவே கழண்டு போவது ஏற்படுகிறது. இந்த நான்கு கோஷங்களும் கழண்டு போனபிறகு, அந்த உயிர் உண்மையிலேயே, உண்மையிலேயே இல்லாமல் போகிறது. ஐந்தாவது உடலாகிய ஆனந்தமய கோஷம்தான் அடிப்படையான உயிர் அம்சம். அதில் கரைப்பதற்கு ஒன்றுமில்லை. அது, எப்போதும் உள்ளது போலவே, உயிருடன் கலந்துவிடும். இதோடு ஆட்டம் முடிந்தது. சுழற்சி எல்லாம் முடிந்தது. இன்னொரு முறை பிறப்பதைப் பற்றி கேள்வியே இல்லை. அந்த மனிதர் முற்றிலுமாக இல்லாமல் போய்விட்டார் என்று சொல்லலாம். ஈஷாவில் இருக்கும் ஆன்மீக சாதகர்கள் மஹாசமாதியின் இருப்பில் இருந்திருக்கிறார்கள் என்பது அவர்களுடைய பாக்கியம்தான். அதன் சாரமும் நறுமணமும் ஈஷா யோக மையம் முழுவதிலும் பரவியிருக்கிறது.

நிஜத்தில், மரணம் என்பது முடிவு இல்லை. ஏனென்றால் மரணம் என்று ஒன்று இல்லவே இல்லை. உயிரைப் பற்றிய விழிப்புணர்வு இல்லாதவருக்குதான் மரணம் என்பது இருக்கிறது. இருப்பதெல்லாம் வெறும் உயிர், உயிர், உயிர்தான். உயிர் மட்டும்தான். ஆனால் மஹாசமாதி என்பது உண்மையான முடிவு ஆகும். ஆன்மீக தேடலில் இருக்கும் ஒவ்வொருவருடைய குறிக்கோளும் இதுதான். நல்ல வல்லமை பெற்ற ஒரு யோகிகூட இந்த விஷயத்தில் சிரமப்படுவார், ஏனென்றால் அது அவ்வளவு எளிதானது இல்லை. இன்னொரு விதத்தில் சொன்னால், அது மிக மிக எளிமையாக இருக்கிறது. எந்தளவுக்கு எளிமையாக இருக்கிறது என்றால், புத்திசாலிகள் தங்கள் மனதின் மூலம் இதைப் புரிந்துகொள்ள முடிவதில்லை, அவ்வளவு எளிமையாக இருக்கிறது.

ஜீவசமாதி என்று ஒருவிதமான சமாதி இருக்கிறது. இதில் ஒருவர் தன்னை சுற்றிலும் ஒரு சுவர் எழுப்பி, அதற்குள் தன் உயிரை முடித்துக் கொள்கிறார். இதற்கு ஒரு காரணம், அவர் தன் மரணத்திற்குப் பிறகு மற்றவர்களுக்கு தொந்தரவு கொடுக்க விரும்பவில்லை. அவர் போவதற்கு முன்பாகவே தன் உடலுக்கு செய்ய வேண்டியதை தானே செய்துவிட நினைக்கிறார். இன்னொரு காரணம், சில ஞானம் பெற்ற உயிர்கள் தங்களுக்குள் குறிப்பிட்ட நிலையில் விடுபட்டு வாழ்கிறார்கள், ஆனால் அவர்களுக்கு விரும்பியபோது உடலை விடுவது எப்படி என்ற புரிதல் இல்லை. உங்களுக்குள் நீங்கள் விடுபட்டவராக இருந்தாலும், உங்களுக்குள் ஒரு உயர்ந்த நிலையை அடைந்திருந்தாலும், பொருள் உடலை விட்டு வெளியேறிப் போவதற்கு, வேறுவிதமான திறமைவேண்டும். இந்த உடல் எங்கே கட்டப்பட்டிருக்கிறது, அதை அவிழ்ப்பது எப்படி என்ற விஞ்ஞானம் தெரிந்திருக்க வேண்டும். இந்த புரிதல் இல்லாமல், விரும்பியபோது

போகமுடியாது. இப்படிப்பட்டவர் - தனக்குள் விடுபட்டவர், ஆனால் உடலை கழட்டிவிட்டு போவது எப்படி என்று புரியாதவர் - தன்னை சுற்றி ஒரு சுவரை அமைத்துக்கொள்வார். மெதுவாக சுவாசம் நின்றுப்போக போக, அவரும் வெளியேறிவிடுவார். ஆனால், அந்த சமயத்தில் உடலில் எந்த போராட்டமும் இருக்கக்கூடாது. துளியளவு போராட்டம் இருந்தாலும், அது தற்கொலைக்குத்தான் சமமாகும்.

யோகப் பாதையில் இருப்பவர்கள் அப்படிப்பட்ட ஒன்றை செய்யவே மாட்டார்கள். அவர்கள் திறந்தவெளியில் உட்கார்ந்துதான் உடலை விடுவார்கள். ஏனென்றால் அவர்களுக்கு உடலில் இருந்து வெளியேறுவது எப்படி, விட்டு விடுதலை ஆவது எப்படி என்று நன்றாக தெரியும். உங்கள் உடைகளை கழட்டிப் போட்டுவிட்டு நடப்பதுபோல, உங்கள் உடலையும் கழட்டிப் போட்டுவிட்டு போய்விட முடியும். இது சாத்தியமே. இதுதான் மஹாசமாதி.

தீக்ஷை ம்ருத்யு என்று சொல்லப்படும் ஒன்று இருக்கிறது. ஒரு குரு ஒருவருக்கு மரணத்திற்கான தீட்சை வழங்கினால் அது தீக்ஷை ம்ருத்யு. இது மரணத்துக்கு நிகரான அனுபவம் அல்ல, மரணமேதான். அதற்கு எல்லோருடைய அனுமதியையும் பெற்றிருந்து, நீங்கள் வாழும் சமுதாயமும் பக்குவப்பட்டதாக இருந்தால், இப்படிச் செய்வது நல்லதுதான். பொதுவாக, ஒருவருக்கு மஹாசமாதி அடையும் எல்லா தகுதியும் திறனும் இருக்கிறது, ஆனால் அவருக்கு அதைச் செய்வது எப்படி என்ற புரிதல் மட்டும் இல்லை, இந்தப் பட்சத்தில் - குரு இதை பார்க்கும்போது, அவருக்கு இப்படி தீக்ஷை ம்ருத்யு அளிப்பார். அவர் வெளியேறிடும் விதமாக தீட்சை அளிக்கப்படும். இது முற்றிலும் சரியானதுதான். உண்மையிலேயே அந்த உயிரை பொருத்தவரை, இது மிகவும் உன்னதமானது. ஆனால் இன்றைய சமூகத்தில், தீட்சையை அளிப்பவருக்கு இது பெரும் கேடாக முடியும், இதன் விளைவாக சமூகத்தில் பெரிய அமளியே ஏற்படும்.

## சில மஹாசமாதிகள்

எனக்கு பரிச்சயமான இரண்டு பேருடைய மஹாசமாதியை நான் பார்த்திருக்கிறேன். அவர்கள் இரண்டு பேருமே எனக்கு மிகவும் நேசமானவர்கள். ஒருவர் சுவாமி நிர்மலானந்தா, அவரை எனக்கு நீண்டகாலமாக நன்கு தெரியும். இன்னொன்று, என் அன்பு மனைவி விஜி.

சுவாமி நிர்மலானந்தா, கர்நாடகத்தில் உள்ள பி.ஆர் ஹில்ஸ் என்று சொல்லப்படும் பிலிகிரி ரங்கநாத மலைகளில் வாழ்ந்தார். தன்னுடைய

இளவயதில், நிர்மலானந்தா பல வருடங்களாக வெளிநாடுகளுக்கு பயணம்செய்து, எல்லா மதங்களையும் சேர்ந்த இறை அடியார்களையும் சந்தித்து வந்தார். இரண்டாம் உலக யுத்தத்தின்போது ஐரோப்பாவில் இருந்தார். அங்கு கண்முன் பார்த்த அவலங்களும் துயரங்களும், அவரை ஆழமாக பாதித்தது. 1960களில் இந்தியா திரும்பினார். தன் வாழ்க்கையின் கடைசி கட்டத்தில் பி.ஆர் ஹில்ஸ் பகுதியில் ஒரு ஆசிரமத்தை அமைத்தார். அங்கு பதினோரு ஆண்டுகள் மௌனத்தில் இருந்தார்.

எனக்கு தோராயமாக இருபத்தொன்று வயது இருக்கும்போது முதன்முதலாக அவரை சந்தித்தேன். பி.ஆர் ஹில்ஸ் பகுதியில் நான் ஏகப்பட்ட டிரெக்கிங் செய்திருக்கிறேன், பெரும்பாலும் தனியாகத்தான் மலையேறுவேன். குறிப்பிட்ட ஒரு சமயம், நான் அந்த காடுகளில் ஐந்து ஆறு நாட்களுக்கு இருந்தேன். அதனால் நான் வெளியே வந்தபோது எனக்கு பயங்கரமாக பசித்தது. இருபத்து நான்கு மணி நேரத்திற்கும் மேலாக எதுவும் சாப்பிடவில்லை.

என்னுடைய மோட்டார் சைக்கிளை நிறுத்தியிருந்த இடத்திற்கு திரும்பினேன். வண்டியில் உட்கார்ந்து மலையின்மேல் ஏறினேன். அங்கே ஒரே ஒரு உணவகம்கூட கிடையாது. ஆனால் நிர்மலானந்தாவின் ஆசிரமம் அங்கே இருந்தது என்று எனக்கு தெரியும். அவரிடம் உணவு இருக்கும் என்றும் தெரியும். அந்த ஆசிரமத்தில் ஒரு சின்ன கோவில் இருந்தது. தோராயமாக, இருபத்தைந்து படிகளுக்கு மேலே ஒரு சின்ன குடிலும் இருந்தது. அந்த நாட்களில் எல்லாம் நான் எதற்காகவும் என்னுடைய மோட்டார் சைக்கிளை விட்டு கீழே இறங்கவே மாட்டேன். அதனால் படிகளிலும் வண்டியை ஓட்டியபடியே ஏறிப்போய் அந்தக் குடிலின் சுவற்றில் வண்டியை சாய்த்து வைத்தேன். என் உடல் முழுக்க சேறும் சகதியுமாக இருந்தது. பல நாட்களுக்கு இரவு பகலாக காட்டிற்குள் மழையில் இருந்திருந்தேன், அல்லவா?

தன்னுடைய அறைக்கு வெளியிலேயே மோட்டார் சைக்கிள் சத்தம் கேட்பதால், நிர்மலானந்தா அவர்கள் வெளியே வந்து என்னைப் பார்த்தார். அவர் முகத்தில் எப்போதும் ஒரு புன்னகை நிரந்தரமாகவே இருந்தது. அவர் ஒரு குறிப்பிட்ட காலகட்டத்திற்கு மௌனத்தில் செல்வது வழக்கம், அதனால் அன்றைக்கு மௌனத்தில் இருந்தார். எனக்கு பயங்கரமாக பசிக்கிறது என்று சொன்னேன். அப்போது நான் எதிர்பார்க்காத விதத்தில் விசித்திரமான ஒன்றை அவர் செய்தார்.

அவர் வெளியே வந்து என் பாதங்களை தொட்டு வணங்கினார். நானோ என் வாழ்நாள் முழுவதும் கோவிலில்கூட குனிந்து வணங்கியது

கிடையாது. நான் ஒருபோதும் யாருடைய பாதங்களையும் தொடவே மாட்டேன். அது என்னால் நினைத்துக்கூட பார்க்க முடியாததாக இருந்தது. ஆனால் இந்த மனிதரோ நேராக என்னிடம் வந்து, சகதியாக இருந்த என் பூட்ஸ்களை பிடித்துக்கொண்டார். எனக்கு மிகவும் சங்கடமாகிவிட்டது. எல்லோரும் அவரை உயர்ந்த மனிதராக கருதினார்கள் என்று எனக்கு தெரியும், ஆனால் அவர் எந்தளவுக்கு உயர்ந்தவர் என்று தெரிந்துகொள்ள நான் விரும்பவில்லை - அவர் ஒரு சன்னியாசியா அல்லது ஞானியா என்றெல்லாம் தெரிந்துகொள்ள விரும்பவில்லை. அதெல்லாம் எனக்கு ஒரு பொருட்டாகவே தோன்றவில்லை. எனக்கு வேண்டியதெல்லாம் அவருடைய ரொட்டி மட்டும்தான். ஆனால் அவரோ வந்து என் பாதத்தை தொட்டுவிட்டார். ஏதோ ஒரு விதத்தில் இது என்னை பாதித்தது. எது எப்படியோ, நான் பயங்கர பசியில் இருந்தேன், அப்போதைக்கு அவர் கொடுத்த ரொட்டியையும் தேனையும் சாப்பிட்டேன்.

அதன்பின், நான் பி.ஆர் ஹில்ஸ் சென்று அவரை பலமுறை பார்த்திருக்கிறேன். எங்களுக்குள் ஒருவிதமான உறவு வளர்ந்தது - ஒருவருக்கொருவர் இணக்கம் ஆனோம். (உண்மையில் இணக்கம் ஆனது நான்தான் - அவர் எப்போதுமே எல்லோரிடமும் இணக்கமாகத்தான் இருந்தார்). பெரும்பாலும் அவர் மௌனத்தில்தான் இருந்தார். சிலசமயம் என்னிடம் பேசுவார், ஆனால் பெரும்பாலான நேரம் அவர் எழுதிக் காட்டுவார், நான் பேசுவேன். அதன்பிறகு கொஞ்ச காலம்கழித்து, எனக்கே ஒரு அனுபவம்[1] ஏற்பட்டு, நான் யோகா கற்றுக்கொடுக்க ஆரம்பித்தேன். பல வருடங்கள் கழித்து, நீண்ட இடைவெளிக்குப் பிறகு நான் அவரை சந்தித்தேன். அப்போது எனக்கு பெரிய தாடியெல்லாம் வளர்ந்துவிட்டது. என் மனைவி விஜியும் என்னுடன் இருந்தாள். அவளுக்கும் நிர்மலானந்தாவை மிகவும் பிடித்துப்போனது. அதன்பிறகு அவரை சந்திக்க நாங்கள் இரண்டு பேரும் சேர்ந்து சிலமுறை வந்திருக்கிறோம். அந்த சந்திப்புகளின்போது நீண்டநேரம் பேசிக்கொண்டிருப்போம்.

ஏப்ரல் அல்லது மே 1996ல், விஜியும் நானும், எங்கள் மகள் ராதேயுடன் அவரைப் பார்க்க வந்தோம். எங்களுடன் பேசிக் கொண்டிருக்கும்போது, சட்டென்று அவர், வரும் ஜனவரியில் உத்தராயணம் ஆரம்பிக்கும்போது தான் போய்விட விரும்புவதாக சொன்னார். நான் அவரிடம் ஏன் என்று கேட்டேன். அவர், "நான் ஒரு யோகியாகவே வாழ்ந்துவிட்டேன், இனி ஒரு ரோகி (நோயாளி) போல வாழ்ந்திட விருப்பமில்லை," என்று சொன்னார். அப்போது அவருக்கு எழுபத்து மூன்று வயது. அவர் கண்களில் கண்ணீர் நிரம்பியிருந்தது. தனக்கு எப்படி வெளியேறுவது

---

1 சாமுண்டி மலையில் சத்குரு அவர்களுக்கு நிகழ்ந்த அனுபவம் - அத்தியாயம் 1ல், "இறந்தவர் போவதெங்கே?" என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

என்பது தெளிவாக இல்லை என்று என்னிடம் சொன்னார். ஏற்கனவே தனக்காக ஒரு சிறு சமாதியை அவர் கட்டியிருந்தார். அந்த சமாதியில் உட்கார்ந்து உடலைவிட விரும்புவதாக சொன்னார். அது நிகழ்ந்திடுமா இல்லையா என்ற தயக்கம் அவருக்கு இருந்தது, அதைப் பற்றி ஏராளமான கேள்விகளும் இருந்தது.

திடீரென்று அந்தச் சூழ்நிலை வேறுவிதமாக ஆகிவிட்டது. இதற்கு மேல் அது ஒரு வழக்கமான சாதாரண சந்திப்பாக இல்லை. அந்த இடமோ நிர்மலானந்தா அவர்களின் ஆசிரமம் - வழக்கமாக, எல்லோருமே அவரை பார்க்கத்தான் அங்கே வருவார்கள். என் மனைவியையும் குழந்தையையும் அழைத்துக்கொண்டு நான்கூட அவரைப் பார்க்கத்தான் வந்திருக்கிறேன். ஆனால் இப்போது அவர் என்னிடமே அல்லவா ஆலோசனை கேட்கிறார். நான் அவரைப் பலமுறை சந்தித்திருந்தாலும் இப்போது தன்னுடைய கடைசி கட்டத்தை நோக்கி போய்க்கொண்டிருந்தார், அதில் லேசான குழப்பம் இருந்தது. இதை செய்வது எப்படி என்று அவருக்கு தெரியவில்லை. அவர் மிகவும் ஆனந்தமாக வாழும் எளிமையான ஒரு மனிதர், அவ்வளவுதான். அவர் சில விஷயங்களை உணர்ந்திருந்தார். ஆனாலும் "இது எப்படி?" என்ற தொழில்நுட்பம் அவருக்கு தெரியாது. ஏனென்றால் அவர் தன்னுடைய உடலின் பல்வேறு அம்சங்களைப் பற்றி ஆராய்ந்து உணரவில்லை. விழிப்புணர்வுடன் மட்டும் இருந்தார், அவ்வளவுதான்.

அதனால் இப்போது நான், என்னை திறந்து அவரிடம் முற்றிலும் வேறுவிதமான நிலையில் வெளிப்பட்டேன். வேறெங்கும் யாரிடமும் பேசாத விஷயங்களை நான் அவருடன் பேச ஆரம்பித்தேன். அவர் என்ன செய்யவேண்டும், என்ன செய்யக்கூடாது என்பதைப் பற்றி பேசினேன். எப்போதுமே நோய் அல்லது காயம் போன்ற காரணத்தால் உடல் சேதம் அடைவதால் மரணம் ஏற்படுகிறது. ஒருவர் தனக்கு வாய்த்த உடலுக்கு எந்த வகையான சேதமும் இல்லாமல், அதைவிட்டு வெளியேறிட ஒருவிதமான ஆளுமை தேவைப்படுகிறது. அதனால், அவர் தன்னை எப்படி தயார்படுத்திக்கொள்ள வேண்டும் என்பதைப் பற்றிய நுட்பங்களுக்குள் நான் ஆழமாக சென்று விளக்க வேண்டியிருந்தது. விஜியும் கூடவே இருந்தாள், இதையெல்லாம் கவனமாக கேட்டுக் கொண்டிருந்தாள். அப்போது அவள் கண்களில் கண்ணீர் பீறிட்டுக்கொண்டு வழிந்தது, அவள் விடாமல் அழுது கொண்டிருந்தாள். நான் அவளைக் கண்டுகொள்ளவில்லை, தொடர்ந்து அவரிடம் பேசிக்கொண்டிருந்தேன். ஏனென்றால் அவள் எதற்கு வேண்டுமானாலும் அழுவாள் - சந்தோஷத்திலும் அழுவாள், என்ன நடந்தாலும் அழுவாள். அவளுக்குள் இருந்த தீவிரமான நிலையில்,

எப்போதுமே அவளுக்கு அழுகை வந்தது. அவள் அப்படித்தான் இருந்தாள். இப்படி நான் பேசிக்கொண்டிருக்க, நான் விளக்கிய விஷயங்களின் நுட்பத்தாலும் ஆழத்தாலும் நிர்மலானந்தா பிரமிப்பில் ஆழ்ந்துபோனார். அவரும் விட்டு விட்டு அழ ஆரம்பித்தார். தொடர்ந்து இன்னும் கேள்விகளை கேட்டுக்கொண்டிருந்தார். அப்போதுதான் எனக்கு நிர்மலானந்தா போய்விடுவார் என்று தெரிந்தது.

அவர் கூடிய சீக்கிரம் போய்விடுவார் என்று எனக்கு தெரிந்ததால் டிசம்பர் 1996ஆம் ஆண்டு, ஏராளமான தியான அன்பர்களை அழைத்துக்கொண்டு கடைசியாக ஒருமுறை அவரைப் பார்ப்பதற்கு போனோம். அப்போது ஏற்கனவே பலரிடம் அவர் தேதியை அறிவித்திருந்தார். தன் தொடர்பில் இருந்த அத்தனை பேருக்கும், தன்னுடைய கடைசி கடிதத்தை அவர் அனுப்பியிருந்தார். இந்தச் செய்தி செய்தித்தாள்களிலும் வெளியானது. அதற்குள் கர்நாடகாவில் "பகுத்தறிவுவாதிகள்" என்று கூறிக்கொள்பவர்கள், ஊடகங்களில் இவருக்கு எதிராக ஒரு பிரச்சாரத்தை ஆரம்பித்திருந்தார்கள் - "இந்த ஆள் தற்கொலை செய்துகொள்ளப் போகிறார், அந்த தற்கொலைக்கு பலவிதமான அபத்தங்களை கற்பித்து பெருமை தேடிக்கொள்ளப் பார்க்கிறார்," என்று சொன்னார்கள். இந்த தற்கொலையை அரசாங்கம் தடுக்கவேண்டும், அப்படி, இப்படி என்றெல்லாம் சொன்னார்கள். இதை தடுக்க ஆசிரமத்தில் இரண்டு போலீஸ்காரர்களையும் நியமிக்கும்படி செய்திருந்தார்கள்.

நான் அவரை கடைசியாக பார்க்க போனபோது, அவர் உடைந்துபோய் அழ ஆரம்பித்தார். இதையெல்லாம் பார்த்து அவருக்கு மிகவும் வேதனை ஆகிவிட்டது. அவரோ மிகவும் மென்மையான ஒரு உயிர். அவருடைய கோவிலுக்கு, தன்னுடைய செடிகளிலிருந்து பூக்களை பறிக்கக்கூட மாட்டார். அந்த பூக்கள் தரையில் விழுந்தபோது மட்டும்தான், தன்னுடைய கடவுளை வழிபடுவார், அந்தளவுக்குகூட செடிகளை வருத்திட அவர் விரும்பவில்லை. மரத்திலிருந்து ஒரு பழத்தைக்கூட பறிக்கமாட்டார். அது கீழே விழுந்தால்தான் எடுப்பார். அப்படிப்பட்டவராக இருந்தார். அவர் என்னிடம், "நான் ஒரு செடியிலிருந்து ஒரு பூவைக்கூட பறிக்க மாட்டேன். எனக்கு போய் போலீஸ் எல்லாம் வைத்திருக்கிறார்கள்," என்று சொல்லிவிட்டு அழுதார். "உங்களுக்கு என்ன பிரச்சனை? போலீஸ் அங்கேதான் உட்கார்ந்திருக்கிறார்கள். நீங்கள் இதைப் பற்றியெல்லாம் கவலைப்படாதீர்கள்," என்றேன். எப்படியோ அதற்குப்பின், திரும்ப அழைக்கப்பட்டதால் போலீஸ்காரர்கள் போய்விட்டார்கள். ஆனால் ஒரு சிலபேர், பெங்களூரிலும் மைசூரிலும் விடாமல் சர்ச்சையை ஏற்படுத்திக் கொண்டிருந்தார்கள்.

அவர் ஜனவரி 15ஆம் தேதி போவதாக இருந்தது, ஆனால் 10ஆம் தேதியே உடலை விட்டுப் போய்விட்டார். பகுத்தறிவாளர்கள் வந்து பிரச்சனை

செய்யலாம் என்று நினைத்ததால், ஐந்து நாட்கள் முன்னதாகவே போய்விட்டார். அந்த நாளன்று, தன்னுடைய குடிலுக்கு வெளியே ஒரு பெஞ்சில் உட்கார்ந்தார். நடுப்பகலுக்கு ஒரு சில நிமிடங்கள் முன்னதாக, ஒரு சிறிய கூட்டத்தின் முன்னிலையில், சும்மா அப்படியே போய்விட்டார். நிர்மலானந்தா போன்ற ஒருவருக்கு தீக்ஷை ம்ருத்யு அவசியம். அதற்கு பதிலாக, நாம் அவருக்கு மஹாசமாதியை பற்றி ஒருவித புரிதலை அளித்தோம்.

நிர்மலானந்தாவின் மஹாசமாதி என் மனைவி விஜியின் மேல் ஆழமான தாக்கத்தை ஏற்படுத்தியிருந்தது. ஒருவர் உடலைவிட்டு போவதென்றால் இப்படித்தான் போகவேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது. ஒரு சமயத்தில் ஒரு படி எடுத்து வைத்தவள் இல்லை விஜி. அவளுடன் தொடர்பில் இருந்த எல்லோருக்கும் இது தெரியும். யோகத்தில் அவள் ஒரு அடிகூட எடுத்து வைக்கவில்லை. அவள் தன்னுடைய ஆரோக்கியத்திற்காக யோகா செய்யவில்லை, அவள் தன்னுடைய நன்மைக்காக யோகா செய்யவில்லை. தன்னுடைய நன்மையைப் பற்றியெல்லாம் அவளுக்கு அக்கறையே கிடையாது. அவள் யோகா செய்ததற்கு ஒரே காரணம், யோகா எனக்கு மிகவும் மதிப்பானது என்பதால் மட்டும்தான். அவளைப் பொருத்தவரைக்கும் அதில் எந்த அர்த்தமும் இல்லை. எவ்வளவோ தடவை இதைப்பற்றி அவள் வெளிப்படையாக பலரிடம் பேசியிருக்கிறாள். அவர்களுக்கோ இது பெரிய அபச்சாரமாக பட்டது, "சத்குருவின் மனைவியை பாருங்கள், இப்படி முட்டாள்தனமாக பேசுகிறாளே!" என்று தோன்றியது. ஆனால் அவளுக்குள் எது உண்மையாக இருந்ததோ அதைத்தான் அவள் பேசினாள்.

அப்போது ஏப்ரல் - மே மாத வாக்கில், நான் நிர்மலானந்தாவுடன் உடலை விடுவதை பற்றியெல்லாம் பேசிக்கொண்டிருந்தபோது, இவள் அங்கு உட்கார்ந்து கொண்டிருந்தாள், சத்தமில்லாமல் அழுது கொண்டிருந்தாள். திரும்ப மலையிலிருந்து கீழே இறங்கும்போது, பாதி வழியில் மிகவும் அழகான ஒரு இடம் இருக்கிறது, இங்கு ஏராளமான வன உயிர்கள் இருக்கும். அதனால், நாங்கள் திரும்ப காரில் வரும்போது வண்டியை அங்கே நிறுத்தினேன். விஜி அப்பவும் அழுது கொண்டிருந்தாள். அதனால் நான் இதைப் பற்றியும், அதைப் பற்றியும் ஜோக் அடித்துக்கொண்டிருந்தேன். அப்போது அவள், "நிர்மலானந்தாவிடம் நீங்கள் எதைப் பற்றி பேசிக்கொண்டிருந்தீர்களோ, அது எனக்கும் வேண்டும்," என்றாள். நான் வேடிக்கையாக, "ஆஹா பிரமாதம்! உனக்கு போகணுமா? எப்போது கிளம்புகிறாய்?" என்றேன், இது மாதிரி இன்னும் என்னென்னவோ சொன்னேன். ஆனால் அவள் விளையாடவில்லை, உண்மையாகத்தான் பேசிக் கொண்டிருந்தாள்,

அதோடு அதன் தீவிரமும் ஏறிக்கொண்டிருந்தது. "சரி, இதற்குமேல் இதில் கேலி செய்ய எதுவும் இல்லை. விஷயம் வலுத்துக் கொண்டிருக்கிறது," என்று எனக்கு பட்டது. அப்போது நான், "சரி, உன்னால் செய்யமுடியுமா என்று பார்ப்போமே! நீ வெறுமனே "ஷம்போ"[2] உச்சாடனம் மட்டும் செய், என்னவென்று பார்க்கலாம்," என்று சொன்னேன். அந்தக் காட்சி இப்போதும்கூட என் மனதில் தெளிவாக தெரிகிறது. என்னுடைய சிறிய கார் சாலையின் ஒரு பக்கமாக நிறுத்தப்பட்டிருந்தது. நான் அங்கே நின்று கொண்டிருந்தேன், ராதே எதையோ வைத்து விளையாடிக் கொண்டிருந்தாள். ஆள் நடமாட்டமே இல்லாத சாலை, தோராயமாக அரை மணி நேரத்திற்கு ஒருமுறைதான் ஏதாவது வண்டி கடந்துசெல்லும். விஜி அங்கே நடுரோட்டில் மண்டியிட்டு இருந்தாள். தனக்கு போய்விட விருப்பமாக இருக்கிறது என்று என்னிடம் சொல்லிக் கொண்டிருந்தாள். அப்போது நான், "சரி, நீ ஷம்போ உச்சாடனம் செய்," என்று சொன்னேன். அவளுக்கு நான் கொடுத்த ஒரே சாதனா இது மட்டும்தான். அதையும் மிக சாதாரணமாக கொடுத்தேன். நான் உட்காரவில்லை, உட்கார்ந்து குறிப்பிட்ட விஷயத்திலோ அல்லது மகத்தான ஒன்றிலோ அவளுக்கு தீட்சையெல்லாம் கொடுக்கவில்லை.

அவள் அதை எப்படி செய்தாளோ, அந்த விதத்தில் செய்யும் அளவுக்கு உறுதியும் தீவிரமும் அவளுக்கு இருக்குமென்று நான் ஒருபோதும் நினைக்கவில்லை. இதை செய்வதற்கு பெருமளவிலான ஈடுபாடு அவசியம். உங்களுடைய கவனம் இதில் 24 மணி நேரமும் இருந்துகொண்டே இருக்கவேண்டும். இல்லையென்றால் இதெல்லாம் உங்களுக்குள் வளரவே வளராது. அவளுக்குள் குறிப்பிட்ட தன்மைகள் இருந்தது என்று எனக்கு தெரியும்; ஏதோ ஒரு விஷயத்தில் தன் மனத்தை வைத்துவிட்டால், அதில் முழு தீவிரத்துடன் ஈடுபடுவாள். ஆனால் இப்படி கடைசி வரைக்கும் சென்றடையும் அளவுக்கு, அவ்வளவு உறுதி அவளுக்கு இருக்கும் என்று நான் நினைக்கவேயில்லை. குறிப்பாக அவள் ஒரு உணர்ச்சிகரமான ஆளாக இருந்ததால் - என்னைப் பற்றியும் ராதேவைப் பற்றியும் அவளுக்கு இருக்கும் உணர்ச்சிகளே - அவளை தடுத்து நிறுத்திட போதுமானதாக இருக்கும் என்று நினைத்திருந்தேன். ஆனால் அந்த தீவிரத்தை அவளாகவே உருவாக்கிக் கொண்டாள். குறுகிய காலத்திற்குள்ளாகவே முற்றிலும் வேறு நிலையை அடையும் அளவுக்கு வேகத்தை உருவாக்கிக் கொண்டாள். இப்போது அவள் அந்த பழைய ஆளாகவே இல்லை. அவள் விலகி போய்க்கொண்டிருந்தாள். இப்போது அவள் என்னுடைய மனைவியாகவே இல்லை, படுதீவிரமான ஒரு ஆன்மீக சாதகர் ஆகிவிட்டாள்.

---

2 சிவனின் பல பெயர்களில் ஒன்று, ஒரு சக்திவாய்ந்த மந்திரமும் ஆகும்.

யாராலும் நீண்டகாலத்திற்கு அந்த அளவுக்கு தீவிரத்தை தாக்குபிடிக்க முடியாது, அது எரிந்து முடிந்துவிடும். அதனால், அவளுடைய வேகத்தை கொஞ்சம் குறைத்திட முயற்சித்தேன். நான், "இப்போது என்ன அவசரம்?" என்பேன். எங்கள் மகள் ராதேவுக்கு ஏழு வயதுகூட முடியவில்லை. விஜியே தனக்குள் பிரச்சனைகளும் போராட்டங்களும் நிறைந்த ஒரு காலகட்டத்தை அனுபவித்திருந்தாள். இப்போதுதான் ஒரு அற்புதமான சாத்தியமாக மலர்ந்து கொண்டிருந்தாள். அதனால் நான், "இப்போதுதான் உனக்கும் எல்லாம் நன்றாக அமைந்து கொண்டிருக்கிறது, இப்போது போய் எதற்காக இப்படி?" என்று கேட்டேன். அவள், "இப்போது எனக்குள் எல்லாமே முற்றிலும் அற்புதமாக உணரமுடிகிறது. வெளியிலும் எல்லோருமே என்னிடம் அற்புதமாக இருக்கிறார்கள். இந்த சமயத்தில்தான் நான் போக விரும்புகிறேன். தற்சமயம், எனக்குள் நான் அடைய விரும்பிய நிலையில் இருக்கிறேன். இப்படியே போய்விட விரும்புகிறேன்," என்று சொன்னாள். நான் மறுபடியும், "இப்போது என்ன அவசரம்? இன்னும் கொஞ்ச நாள் காத்திருக்கலாமே, இதையெல்லாம் சந்தோஷமாக அனுபவித்துவிட்டு பிறகு போகலாமே," என்று சொன்னேன். அதற்கு அவள், "இப்போது நான் போவதில் உங்களுக்கு விருப்பமில்லை. இன்னும் கொஞ்ச வருடம் கழித்து மட்டும் நான் போகலாம் என்று விரும்புவீர்களா என்ன?" என்று கேட்டாள். இதற்குமேல் அவளிடம் வேறு என்ன சொல்லி புரியவைப்பது என்று எனக்கு தெரியவில்லை, அவளை நிறுத்துவது எப்படி என்று தெரியவில்லை. நான் எல்லா விதங்களிலும் முயற்சிசெய்து பார்த்தேன், ஆனால் எதுவுமே வேலை செய்யவில்லை.

அவள் ஏற்கனவே தியானலிங்க பிரதிஷ்டையில் ஈடுபட்டிருந்தாள். பிரதிஷ்டையின் ஒரு பகுதியாக செய்ய வேண்டிய பல விஷயங்கள் சுலபமானதே கிடையாது. கஷ்டம் என்ற வார்த்தை சரியாக இருக்காது, ஏனென்றால், எந்த ஒரு சாதாரண மனிதருக்கும் இதையெல்லாம் செய்வது எல்லை மீறிய கஷ்டமாக இருந்திருக்கும். ஆனால் அவள் தன்னை அதில் முழுமையாக கொடுத்தாள், அற்புதமாக ஈடுபட்டாள்.

தன் உடலை விடும் அந்த நிகழ்வுக்கு அவள் தயாராக ஆரம்பித்திருந்தாள். பிரதிஷ்டை முடிந்தவுடன் போய்விட வேண்டும் என்று அவள் விரும்பினாள். தொடர்ச்சியாக மூன்று மாதங்களுக்கு - டிசம்பர், ஜனவரி, பிப்ரவரி மாதங்களுக்கு - பௌர்ணமி அன்று பிரம்மச்சாரிகளுக்கு தானே உணவு சமைத்து பரிமாற விரும்பினாள். கரண்டியால்கூட பரிமாறாமல், தன் கைகளாலேயே பரிமாற விரும்பினாள். தன் கைகளாலேயே பரிமாற வேண்டும் என்ற ஆசை நம் பாரத கலாச்சாரத்தின் ஒரு அங்கம். மூன்று பௌர்ணமிகளுக்கு அப்படி செய்யவேண்டும், பிப்ரவரியில் வரும் பௌர்ணமி அன்று போய்விட வேண்டும் என்பதுதான் அவளுடைய விருப்பம்.

பிரதிஷ்டை போய்க்கொண்டிருந்த விதத்தில், அது நிச்சயமாக ஜனவரி 23ஆம் தேதிக்கு முன்பாகவே முடிந்துவிடும் என்ற நிலையில் இருந்தது. ஆனால் ஏதோ ஒன்று நடக்கப் போகிறது என்று எனக்கு தோன்றியது. அந்தக் காரணத்தால் எல்லாவற்றையும் பெரிய அளவில் தள்ளிப்போட வேண்டி வரும், எல்லாமே ஒரு அபாயநிலைக்கு தள்ளப்படும் என்று தோன்றியது. அதனால், ஜனவரி 14ஆம் தேதி அளவில், பிரதிஷ்டையில் ஈடுபட்டிருந்த எல்லோரையும் அழைத்து, ஒரு உறுதிமொழி எடுத்துக் கொள்ளும்படி சொன்னேன் - "பிப்ரவரியில் வரும் அடுத்த பௌர்ணமிக்கு முன்பாக, இதை முடித்துவிடுவோம். என்ன ஆனாலும் சரி, என்ன தேவைபட்டாலும் சரி, இதை நிச்சயமாக முடித்துவிடுவோம்," என்று உறுதி எடுக்கச் சொன்னேன். அவர்களும் சரி என்றார்கள். ஆனால் நான், "அதெல்லாம் போதாது, நிஜமாகவே வாய்விட்டு உறுதிமொழி எடுக்கவேண்டும்," என்று சொன்னேன். "இதை நாங்கள் செய்து முடிப்போம்" என்று அவர்களை மூன்று முறை நிஜமாகவே வாய்விட்டு சத்தமாக உறுதிமொழி எடுக்கவைத்தேன்.

என்னுடைய குருவின் விருப்பத்தை நிறைவேற்றுவதில் நான் பரிபூரண உறுதியோடு இருந்தேன். அந்த ஒரே குறிப்பிட்ட நோக்கத்துடன், அதற்காக எதையும் செய்யத் தயாராக இருந்தேன் - ஒருவருடைய கருவுக்குள் புகுந்தேன், பிறப்பெடுத்தேன், அந்தப் பெண் அதையெல்லாம் அனுபவிக்கும்படி செய்தேன், வளர்ந்தேன் - இதையெல்லாம் அந்த ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காகத்தான் செய்தேன். அந்த அளவுக்கு விடாமுயற்சி கொண்டிருந்தேன். தியானலிங்கத்தை பிரதிஷ்டை செய்வது என்னுடைய குருவின் கனவு. எப்படியோ அது என்னிடம் கொடுக்கப்பட்டது. இதை உருவாக்கும் முயற்சியில் நான் சில ஜென்மங்கள் செலவு செய்திருக்கிறேன். இவ்வளவு கடுமையான முயற்சிக்குப் பிறகு, இப்போது இது நிறைவுபெறும் நிலைக்கு வந்து கொண்டிருக்கிறது. விஜி என் அருகில் இருக்க இது நிறைவடைய வேண்டும் என்பதே என் விருப்பம். அவள் இல்லாமல், இதை முதலில் இருந்து ஆரம்பிப்பதுபோல் ஆகிவிடும், அதற்குப்பின் அதைச்செய்வது சாத்தியமே இல்லாத அளவுக்கு ஆகிவிடும்.

பிரதிஷ்டைக்குரிய திட்டங்கள் முன்னேறிக் கொண்டிருந்தபோது, அதே சமயத்தில், உடலை விடுவதற்கான விஜியின் திட்டமும் கூடவே போய்க்கொண்டிருந்தது. நாங்கள் அவளுடைய பெற்றோர்களையும், என்னுடைய உறவினர்களையும் கடைசியாக ஒரு தடவை பார்ப்பதற்காக போயிருந்தோம். அதையே அவர்களிடம் அவள் தெரிவிக்க முயற்சி செய்தாள். ஆனால் அதை யாரும் புரிந்துகொள்ளவே இல்லை, அவள்தான் ஆரோக்கியமாக நலமாக இருக்கிறாளே. இதுதான் தன்னுடைய கடைசி வருகை என்று அவள் சொன்னபோது, அவள் தங்கள் மீது

கோபமாக இருக்கிறாள் என்றுதான் அவர்கள் எடுத்துக்கொண்டார்கள். நீண்டகாலத்திற்குப் பிறகு ஒரு குடும்பத் திருமணத்திலும் கலந்து கொண்டோம். இந்த மாதிரி குடும்ப விழாக்களில் எல்லாம் நான் பலகாலமாக கலந்துகொள்ளவே இல்லை. அதனால் அவர்களில் பலரும் இப்போதுதான் விஜியை முதல் தடவையாக சந்தித்தார்கள். பிறகு ஜனவரி 21ம் தேதியன்று எங்கள் மகள் ராதேயை அவளுடைய பள்ளிக்கூடத்தில் கொண்டுவிடச் சென்றோம். விஜி கொஞ்ச நாளாகவே ராதேயிடம் தான் போய்விடப் போவதாக சொல்லிக்கொண்டிருந்தாள். ராதேயின் பிறந்தநாள் மார்ச்சில் வருகிறது. அதனால் அவளுடைய அடுத்த பிறந்தநாளுக்கு தான் இருக்கமாட்டேன் என்றும், அதற்குள் போயிருப்பேன் என்றும் சொல்லிக் கொண்டிருந்தாள். அம்மாவும் மகளும் இதை வெறும் தகவல்போல பேசிக்கொண்டிருந்தார்கள் - அதாவது அவள் இருக்கப்போவதில்லை, அதனால் பிறந்தநாளன்று எப்படி நான் மட்டும் வந்து இதைச்செய்வேன், அதைச்செய்வேன் என்று ஒரு தகவல்போல் சொல்லிக் கொண்டிருந்தாள். நான், "ஏன் அந்த குழந்தையிடம் இப்படி நடந்து கொண்டிருக்கிறாய்? அவளை சும்மா தனியாக விடு," என்று சொன்னேன். அதற்கு அவள், "இல்லை, இல்லை. அவளிடம் சொல்லித்தான் ஆகவேண்டும். நான் அவளிடம் சொல்லாமல் போய்விட்டேன் என்று அவளுக்கு தோன்றக்கூடாது," என்றாள்.

ஜனவரி 21ஆம் தேதியன்று நாங்கள் ஊட்டியிலிருந்து திரும்பினோம். 23ஆம் தேதி மாலைப்பொழுதில் அவள் போய்விட்டாள். எது பிப்ரவரி மாதத்தில் பௌர்ணமி அன்று நடந்திடும் என்று அவள் நினைத்தாளோ, அது ஒரு மாதத்திற்கு முன்பாகவே நடந்துவிட்டது. அன்றைய தினம், மிகவும் அபூர்வமாக நிகழும் கோள்களின் அமைப்பு தோதாக உருவாகி இருந்தது. 200 வருடங்களுக்கு ஒருமுறைதான் அதுபோல அமையும் என்று சொல்கிறார்கள். தைப்பூசமும் அதேநாளில் அமைந்திருந்தது. கடந்த காலத்தில் எத்தனையோ முனிவர்கள் தங்களுடைய மஹாசமாதிக்கு இந்த தைப்பூசத்தையே தேர்ந்தெடுத்திருந்தார்கள். இது எல்லாம் சேர்ந்து அதற்கு உதவியிருந்தது.

அன்று மாலை, யோக மையத்தில் இருந்த சிலர் எங்கள் வீட்டில் இருந்த சந்நிதியில் குழுமியிருந்தார்கள். ஒவ்வொரு பௌர்ணமிக்கும் மாலையில் இது வழக்கமானது. அவர்களுக்காக விஜி ஏற்கனவே உணவு சமைத்து வைத்திருந்தாள். நாங்கள் ஒன்றாக சேர்ந்து தியானம் செய்ய இருந்தோம், அதற்குப்பிறகு விஜி அவர்களுக்கு உணவு பரிமாறுவதாக இருந்தாள். எல்லோரும் உட்கார்ந்து தியானத்திற்கு கண்மூடினார்கள். சில நிமிடங்களுக்குப் பிறகு இவள் எழுந்து குளியலறைக்குப் போனாள். இதனால் எனக்கு லேசான எரிச்சல் ஏற்பட்டது. ஏனென்றால்,



விஜி அவர்கள் மஹாசமாதி அடைவதற்கு
சில வாரங்களுக்கு முன்

தியானத்திற்கு என்று கண்களைமூடி உட்கார்ந்துவிட்டால், யாரும் துளியும் அசையக்கூட மாட்டார்கள். அப்படியிருக்க, அங்கிருந்து எழுந்து வெளியே போவதைப் பற்றி கேள்வியே இல்லை. ஆனால், அவள் குளியலறைக்கு போய்விட்டு சில நிமிடங்கள் கழித்து திரும்ப வந்தாள். தன்னுடைய தங்க வளையல்களையும் தோடுகளையும் மெட்டியையும் கழட்டி குளியலறையில் வைத்துவிட்டு திரும்பியிருக்கிறாள். சில நிமிடங்கள் கழித்து, சும்மா மூன்றுமுறை "ஷம்போ" என்று உச்சரித்தாள். அப்படியே இடதுபக்கமாக சரிந்தாள் - அதோடு அவ்வளவுதான். எனக்கு ஏதோ சரியில்லை என்று தோன்றியது, அங்கிருந்த ஒரு பிரம்மச்சாரியிடம் விஜியை கவனிக்கச் சொன்னேன். இன்னொருவர் கொஞ்சம் தண்ணீர் கொண்டு வந்தார். அதற்குள் அவள் போய்விட்டிருந்தாள்.

அவள் எதை சாதித்திருக்கிறாளோ, அது சாதாரண விஷயமல்ல, இது ஒன்றும் குழந்தைகள் ஆடும் விளையாட்டல்ல. கைதேர்ந்த யோகிகள்கூட இந்நிலையை அடைந்திட சிரமப்படுவார்கள். நிர்மலானந்தாவைபோல் வாழ்நாளையே ஆன்மீக சாதனாவில் கழித்த ஒரு ஞானிக்கூட, இதை அடைந்திட சிரமப்பட்டார். உடலை சேதப்படுத்தாமல், உயிர் உடலைவிட்டு வெளியேறுவதற்கு என்னென்னவோ தேவை. ஒருவர் மகத்தான அளவுக்கு தனக்குள் சக்தியை உருவாக்கிட வேண்டும், அதற்கு தீவிரமான சாதனா தேவை. இதை அடைந்திடும் முறைகள் அவளுக்கு தெரியும், அதைநோக்கி முயற்சித்துக் கொண்டிருந்தாள். ஆனால் என்னுடைய உதவியே இல்லாமல், தேவையான அளவுக்கு தீவிரமான சக்தியை உருவாக்கிடுவாள் என்று நான் ஒருபோதும் கற்பனைகூட செய்யவில்லை.

அது மட்டுமில்லை, இதை அடைவதற்கு குறிப்பிட்ட சில விஷயங்களை செய்யவேண்டும், அதைப்பற்றி அவளுக்குத் தெரிந்திருக்க எந்த வழியும் இல்லை. உதாரணமாக, நாம் சிலருக்கு குறிப்பிட்ட விதமான சாதனைக்குள் தீட்சை கொடுக்கும்போது, அவர்களுக்கு உலோகத்தில் செய்யப்பட்ட ஒரு மோதிரத்தையோ, மணிக்கட்டில் அணியும் வளையத்தையோ கொடுப்போம். குருவே சொன்னால் தவிர, அதை அவர்கள் கழட்டவே கூடாது. இது எதற்கென்றால், சில சமயம் அந்த மாதிரி சாதனாவில் இருக்கும்போது, நீங்கள் தற்செயலாக உடலைவிட்டு வெளியே நழுவிட வாய்ப்பிருக்கிறது. அந்த சமயத்தில் உங்கள் உடலின் குறிப்பிட்ட இடங்களில் ஏதாவது உலோகப்பொருள் இருந்தால், அது அப்படி நிகழாமல் தடுத்திடும். இதெல்லாம் விஜிக்கு தெரிந்திருக்க வாய்ப்பில்லை. ஆனாலும் எப்படியோ தன்னுடைய உள்ளுணர்வால், அந்த கணத்தில் தன் நகைகளையெல்லாம் அவள் கழட்டிவிட்டாள். தான் உடலை விட்டு வெளியேற, இதெல்லாம் தடையாக இருக்கிறதென்று அவள் உணர்ந்திருக்க வேண்டும்.

"அவளைத் தடுத்திருக்க முடியுமா?" என்று சிலபேர் என்னிடம் கேட்கிறார்கள். பிரதிஷ்டையோ இன்னும் முழுமையாக முடியவில்லை. அதோடு, அவள் என் மனைவியும் ஆவாள், சின்ன குழந்தை வேறு இருக்கிறது. அப்படி இருக்க ஏன் அவளை நான் தடுக்கவில்லை? நான் அவளைத் தடுத்திருக்க முடியுமா? ஆமாம், அது சாத்தியமானது என்றே நான் சொல்கிறேன். யார் வேண்டுமானாலும் அவளை தடுத்திருக்கலாம். உங்களுக்கே தெரிந்திருக்கும், குரு மட்டுமல்ல, யார் வேண்டுமானாலும் உங்களை தடுக்கலாம். அந்தப் புராண கதைகளில் கேட்டிருக்கிறீர்கள்தானே? ஒரு முனிவர் உட்கார்ந்து தவம் செய்துகொண்டிருப்பார், அப்போது யாரோ வந்து அவர் தியானத்தைக் கலைப்பார்கள் அல்லவா? அவ்வளவு ஏன், சிவனின் தியானமே கலைக்கப்பட்டதே[3]. இப்படியாக, அதைச்செய்ய ஒரு சின்ன தொந்தரவே போதுமானது. இதற்கு ஒரு குருவோ, வேறு விதமான ஆன்மீக திறமையோ அவசியமில்லை. ஆனால் அவர்கள் ஒரு குறிப்பிட்ட கட்டத்தை கடந்து போய்விட்டார்கள் என்றால், பிறகு யார் என்ன செய்தாலுமே, அதெல்லாம் அவர்கள் கவனத்தை கலைக்கவே முடியாது. அப்போதும், குரு மனம் வைத்தால் அவர்களை பிடித்துவைக்க முடியும். அதேசமயம், ஒருவர் அவ்வளவு தூரம் போய்விட்ட பிறகு, அவரைப் பிடித்துவைக்க யாருக்கு மனம் வரும்? அந்த கட்டத்திற்கு அவர்கள் போவதற்கு முன்பாக பிடித்துவைக்கலாம், ஆனால் அவர்கள் அதை தாண்டிப்போன பிறகு, அவரைப் பிடித்துவைக்க மாட்டோம். அப்படிப்பட்ட ஒரு மனிதரை பிடித்துவைப்பதில் அர்த்தமே இல்லை; அது நம்முடைய இருப்பின் அடிப்படை இயல்புக்கே முற்றிலும் எதிரானது ஆகும்.

மஹாசமாதியை தற்கொலையோடு சேர்த்து குழப்பிக்கொள்ளக்கூடாது. நான் ஏற்கனவே விளக்கியதுபோல, இது உடலுக்கு சேதம் ஏற்படுத்துவது கிடையாது, அதனால் இது மிகவும் மாறுபட்டது. அது மட்டுமில்லை, உயிர்ப்புடன் இருக்கும் ஆரோக்கியமான உடலை ஒருவர் கழட்டிவிட்டு வெளியேற வேண்டுமென்றால், அவருக்கு உயிரின் மேல் அந்தளவுக்கு ஆளுமை இருக்கிறது, அவரால் அதை ஆக்கவும் முடியும் அழிக்கவும் முடியும் என்று அர்த்தம். இப்படி, அந்தளவுக்கு தீவிரத்துடன் ஒருவர் போகும்போது, அவரை தடுக்க முயற்சிக்கக் கூடாது. அந்த ஆணோ பெண்ணோ யாராகவே இருக்கட்டும் - அப்பா, அம்மா, மனைவி, குழந்தை என்று உங்களுக்கு அவர் எந்த உறவாக வேண்டுமானாலும் இருக்கட்டும் - இதெல்லாம் ஒரு பொருட்டா என்ன? இந்த பரிமாணத்தில் அப்படியெல்லாம் ஒன்றுமே இல்லை. ஒருவர் கணவராகவோ

3 சிவனின் தியானத்தை மலர் அம்புகளால் காமதேவன் கலைக்கும் புராணக் கதையை குறிப்பிடுகிறார்.

மனைவியாகவோ இருப்பது என்பது நம்முடைய உடலளவிலும், மனதளவிலும் மட்டுமே நிஜமானது. ஆமாம், விஜி என் அன்பிற்குரிய மனைவியாக இருந்தாள், ஆனால் அவள் ஒரு குறிப்பிட்ட நிலையை அடைந்தபின், அப்போதிலிருந்து நான் அவளை என் மனைவியாக பார்க்கவேயில்லை. அவள் ஒரு சாத்தியமாக ஆகிப் போனாள். அந்த சாத்தியம் தனிப்பட்ட உறவுமுறைகளுக்கு அப்பாற்பட்டது.

அவள் பெயர் விஜயகுமாரி - அப்படியென்றால் "வெற்றியின் திருமகள்" என்று அர்த்தம். எந்த உயிருக்கும் வெற்றியின் உச்சமாக இருக்கக்கூடியது அவளுடையதாக ஆனது. வாழ்நாள் முழுவதும் அவள் என்னுடைய மனைவியாக இருப்பதில் பெருமைப்படுவதாக சொல்லிக்கொண்டே இருப்பாள். ஆனால் இந்த விஷயத்தில், ஒரு கணவனாகவும் குருவாகவும் எனக்கு பெரிய பெருமையை சேர்த்துவிட்டாள்.

## விஜி

*அவளுக்கு தெரிந்தது அன்பு*
*வேறொன்றும் இல்லை*
*அவள் அன்பே உருவானவள்*
*வேறொன்றும் இல்லை*
*இறைவனுக்கு தேவை அன்பு*
*வேறொன்றும் இல்லை*
*அவனை தன் அன்பால் கரைத்தாள்*
*அவள் இனி இல்லை*

தாங்கள் விரும்பியபோது உடலை விட்டவர்கள் பற்றி பல உதாரணங்கள் இருக்கின்றன. லேமான் பாங் என்பவருக்கும் அவருடைய மகளுக்கும் ஏற்பட்ட நிகழ்வு மிகவும் சுவாரசியமான ஒரு உதாரணம். லேமான் பாங் என்பவர், கி.பி 9ஆம் நூற்றாண்டில் சீனாவில் வாழ்ந்தவர், பௌத்த மதத்தைச் சேர்ந்த பிரபலமான ஒருவர். அவர் ஒரு செல்வச்செழிப்புள்ள குடும்பத்தில் பிறந்தார். இருந்தாலும் ஒரு கட்டத்தில், அவரும் அவருடைய மனைவியும், மகனும், மகளும், தங்களுடைய உடைமைகளை எல்லாம் துறந்தார்கள். ஆன்மீகத் தேடலில் முழுமையாக ஈடுபட்டார்கள். ஒரு இடத்தில் தங்காமல் ஊர் ஊராக போகும் நாடோடி வாழ்க்கையை வாழ்ந்தார்கள். ஒருநாள் அவருக்கு எழுபது வயதானபோது, தன் உடலை விடுவதற்கான நேரம் வந்துவிட்டது என்று முடிவெடுத்தார். குறிப்பிட்ட நாளையும் தேர்ந்தெடுத்தார். அந்த சமயத்தில் அவருடைய மகள் மட்டுமே அவருடன் வாழ்ந்து கொண்டிருந்தாள். குறிப்பிட்ட அந்த நாளும் வந்தது. அன்றைக்கு, இரண்டு பேரும் சேர்ந்து அவர் கிளம்புவதற்காக அறையை

தயார்செய்து கொண்டிருந்தார்கள். அவர் குளித்து முடித்தார், தன்னுடைய அங்கியை அணிந்தார், அப்படியே தன்னுடைய மெத்தையில் கால்களை மடித்து உட்கார்ந்தார். அவர் நண்பகலில் உடலை விடலாம் என்று நினைத்திருந்தார். அதனால் தன் மகளிடம், ஜன்னல் வழியாக வெளியே பார்த்து, சரியாக நடுப்பகல் எப்போது வருகிறது என்று பார்த்துச்சொல்ல சொன்னார்.

லேமான் பாங் அவர்களின் மகள் பெயர் லிங்-சாவோ. அவள் வளர்ந்ததெல்லாம் தன் அப்பாவின் வழிகாட்டலில்தான். அதனால் அவளும் வல்லமை பெற்ற ஆன்மீக சாதகராகவே திகழ்ந்தாள். லிங்-சாவோ எதையும் மிக வேகமாக புரிந்துகொள்ளும் கெட்டிக்காரி என்று லேமான் பாங் அடிக்கடி சொல்வார். அன்றைக்கு, லிங்-சாவோ ஜன்னல் வழியாக வெளியே பார்த்தபடி, நடுப்பகலுக்காக காத்து உட்கார்ந்திருந்தாள். திடீரென்று, தன் தந்தையை பார்த்து ஒரு கிரகணம் நிகழ்வதாக அறிவித்தாள். "என்னது, அப்படியா?" என்றார் லேமான் பாங். அவள், "ஆமாம், நீங்களே வந்து பாருங்களேன்," என்று சொன்னாள். லேமான் பாங் தன் இருக்கையிலிருந்து எழுந்து வந்து, ஜன்னல் வழியாக வெளியே பார்த்தார். உடனடியாக, லிங்-சாவோ தன்னுடைய அப்பாவின் மெத்தைமேல் தாவி, கால்களை மடித்து உட்கார்ந்தாள். ஒரே கணத்தில் தன் உடலைவிட்டு வெளியேறினாள்.

லேமான் பாங் திரும்பிவந்து நடந்ததை பார்த்தபோது, "என் மகள் எப்போதுமே வேகமாகவே இருந்தாள். இப்போதும் எனக்கு முன்பாகவே போய்விட்டாள்," என்று சொன்னார். லிங்-சாவோ தன் அப்பாவுக்கு முன்பாக தந்திரமாக போய்விட்டாள் என்று மக்கள் சொல்கிறார்கள். ஆனால் அது அப்படி இருந்திருக்காது. ஒருவேளை, லேமான் பாங் அந்த சூழ்நிலையை அந்தளவுக்கு உகந்த விதத்தில் உருவாக்கியிருக்கலாம். அதனால் அவள் உள்ளுணர்வால் அந்த இருக்கையை நோக்கி ஈர்க்கப்பட்டிருக்கலாம். அவளும் ஆன்மீக சாதனைகளில் தேர்ச்சி பெற்றிருந்ததால், ஒரே கணத்தில் உடலை விட்டுவிடும் அளவுக்கு, அவளுடைய சக்தியின் இயல்பு இருந்திருக்கிறது. லேமான் பாங் அந்த சூழ்நிலையை பார்த்தார். அமைதியாக வெளியே போய், விறகுகளை சேகரித்து, அவளுக்கு இறுதிச்சடங்கு செய்துமுடித்தார். அதற்குப்பின், பாரம்பரியமாக அனுசரிக்கும் துக்க காலத்தை ஏழு நாட்களுக்கு கடைபிடித்தார். அதன் கடைசி நாளில், அந்த மாகாணத்தின் கவர்னர் தன் இரங்கலை தெரிவிப்பதற்காக லேமான் பாங் அவர்களை பார்க்க வந்தார். அப்போது அவர்கள் பேசிக்கொண்டிருக்கும் போதே, கவர்னரின் பக்கத்திலேயே உட்கார்ந்தபடி, லேமான் பாங் தன் உடலை விட்டுச்சென்றார்.

பாகம் 2

# நல்லமுறையில் இறக்கலாம்

## நானாக மாறுங்கள்

நான் என் தாயின் கருப்பையில் தோன்றினேன்
ஆனால், அவள் என்னைப் படைக்கவில்லை.
நான் இந்த பூமியின் உப்பைத் தின்றேன்
ஆனால், நான் அவளுக்குச் சொந்தமில்லை.
இந்த உடம்பின் மூலமாக நான் நடக்கிறேன்
ஆனால் நான் அதுவல்ல.
என் மனதின் மூலமாக நான் பணிபுரிகிறேன்
ஆனால் அதற்குள் நான் இல்லை.
காலம், வெளி என்ற எல்லைக்குள் என் வாழ்க்கை
ஆனால், அது என் எல்லையற்ற தன்மையை மறுக்கவில்லை.
உங்களைப் போல பிறந்தேன்
உங்களைப் போல உண்கிறேன்.
உங்களைப் போல துயில்கிறேன்
உங்களைப் போலவே இறப்பேன்.
ஆனால், எல்லைகள் என்னைக் குறுக்கவில்லை
வாழ்வின் தளைகள் என்னைப் பிணைக்கவில்லை
வாழ்க்கை நடனம் வளர்ச்சியடையும்போது
இந்த வெளியும் இந்தக் கட்டற்றத் தன்மையும்
தாங்க முடியாத இனிப்பாகி விட்டது.
அன்பாய் மலருங்கள், வெளிப்படுங்கள்
- நானாக மாறுங்கள்

அத்தியாயம் 6

# நல்ல மரணத்திற்கு தயாராவது எப்படி?

*உலகில் பெரும்பாலானவர்கள், அவர்கள் தூங்கும்போது இறந்து போனால் அது அற்புதமானது என்று நம்புகிறார்கள். ஐயோ, இப்படி மோசமான விதத்திலா போக வேண்டும்?*

## இறப்பதற்கு தயாராவது அவசியமா?

மரணம் என்பது தவிர்க்க முடியாதது என்றால், பிறகு அதற்காக தயாராவதில் நேரத்தையும் சக்தியையும் ஏன் செலவு செய்யவேண்டும்? ஒன்றை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும் - எதை நீங்கள் மரணம் என்று அழைக்கிறீர்களோ அது முற்றிலும் தனித்துவம் வாய்ந்த ஒரு நிகழ்வாகும். உங்கள் வாழ்க்கையின் கடைசி கணம் அதுதான். உங்கள் வாழ்க்கையில் மற்ற விஷயங்கள் எல்லாமே திரும்பவும் பல தடவை நடந்திட முடியும். ஆனால், அந்த கடைசி கணம் உங்கள் வாழ்க்கையில் ஒரே ஒரு முறைதான் நிகழப்போகிறது. பொருள் உடலின் கட்டுப்பாடுகளை நீங்கள் கடந்திடும் அந்த கடைசி கணம். ஒரே ஒரு முறைதான் நிகழப்போகிறது. உங்கள் வாழ்க்கையில் நீங்கள் செய்யப்போகும் கடைசி விஷயம் அதுதான். பொருள் தன்மையில் இருந்து பொருளற்ற நிலைக்கு நகர்வதே உங்கள் வாழ்க்கையின் மிக உன்னதமான கணமாகும். அப்படிப்பட்ட தருணம் மிகுந்த பாங்குடன் அற்புதமாக நிகழும்படி செய்வது மிகவும் முக்கியம், இல்லையா?

இப்போது நீங்கள் யோக மையத்திலிருந்து கோயம்புத்தூருக்கு போகவேண்டும் என்று வைத்துக்கொள்வோம். இங்கிருந்து 30 கிலோ மீட்டர் தூரம்தான். நீங்கள் ஒரு பஸ்ஸில் ஏறிப் போவீர்கள். நீங்கள் பத்து நாட்களுக்கு முன்பாகவே பஸ்ஸிற்கு டிக்கெட் புக்கிங் செய்வதில்லை. பெரிய சூட்கேஸ் எடுத்துக் கொள்வதில்லை. போகும் வழிக்கு சாப்பாடு, தண்ணீரெல்லாம் எடுத்துக் கொள்வதில்லை, அப்படித்தானே? வாகன வசதி எதுவும் இல்லாதபட்சத்தில், நீங்கள் நடந்து போகக்கூட முடியும்.

அதேசமயம், நீண்டதூர பிரயாணம் என்று வைத்துக்கொள்வோம் - இப்போது டிக்கெட் புக் செய்கிறீர்கள். பயணத்திற்காக சாப்பாடு, தண்ணீர் என்று தேவைப்படும் பொருட்கள் அனைத்தையும் எடுத்துக்கொள்கிறீர்கள், நீண்ட பயணம் அல்லவா. அண்டார்டிகாவுக்கு போகிறீர்கள் என்று வைத்துக்கொள்ளலாம். இப்போது, ஒவ்வொன்றையும் பார்த்துப் பார்த்து எடுத்துக்கொண்டு போவீர்கள்தானே? இன்னொன்றையும் நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும்: இறந்த பிறகு நிகழும் பயணத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தால் உங்கள் பிறப்பிலிருந்து இறப்பு வரை நிகழும் பயணம் மிகவும் சிறியதுதான். ஒரு உயிர் உடலற்ற நிலையில் இருந்திடும் கால அளவுடன் ஒப்பிடும்போது உடலுடன் இருக்கும் காலமெல்லாம் ஒன்றுமே இல்லை. ஆனாலும், இந்த குறுகிய பயணத்திற்கு இவ்வளவு ஏற்பாடுகள் செய்திருக்கிறீர்கள். மூன்று ஜென்மங்களுக்கு போட்டுக்கொள்ளும் அளவுக்கு துணிமணி வாங்கி வைத்திருக்கிறீர்கள், எட்டு ஜென்மங்களுக்கு தேவையான செருப்புகள் வைத்திருக்கிறீர்கள், இப்படி என்னென்னமோ வைத்திருக்கிறீர்கள். ஆனால், மரணத்திற்குப் பிறகு நிகழும் நீண்டதூர பயணத்திற்கு தேவையான ஏற்பாடுகளை செய்துகொள்ள வேண்டுமா, இல்லையா?

நல்லமுறையில் இறப்பது மிகவும் முக்கியமானது. ஒரு உயிர் உடல் இல்லாமல் போன பிறகு, அவருடைய அனுபவம் சொர்க்கம்போல இருக்கிறதா அல்லது நரகம் போல இருக்கிறதா என்பது அவர் மரணமடையும் விதத்தைப் பொருத்துதான் அமைகிறது. முழுக்க முழுக்க இதைப் பொருத்து மட்டுமே இல்லை. ஆனால், பெரும்பாலும் இதைப் பொருத்துதான் அமைகிறது. மரணத்திற்கு தயாராகிறோம் என்றால் நிறைய தகவல்களை தெரிந்துகொண்டு. வரப்போகும் ஒன்றைப் பற்றிய ஆர்வத்தை தனித்துக்கொள்வது என்று அர்த்தமல்ல.

மரணம் நமக்கு அளிக்கப்போகும் வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்றால், அதை நீங்கள் பயத்துடன் எதிர்கொள்ளக் கூடாது. இது ஒன்றும் அந்த கடைசி கணத்தில் சட்டென்று கையாளக்கூடிய விஷயம் இல்லை. அதனால்தான், மரணம் வருவதற்கு முன்பே பல நிலைகளில் அதற்காக தயாராவது மிகவும் முக்கியமானது. வாழ்க்கையின் இந்த கடைசி விழிப்புணர்வான கணத்தை பாங்குடன் கையாள முடிந்ததென்றால், உடலற்ற நிலையில் இருக்கும் காலத்தையாவது நல்ல முறையில் அனுபவிப்பீர்கள். அதை நரகவேதனையாக ஆக்கிக்கொள்ள மாட்டீர்கள்.

துரதிருஷ்டவசமாக, பெரும்பாலானவர்கள் அந்தக் கணத்தில் பயத்தை உருவாக்கிக் கொள்கிறார்கள். எதையாவது பற்றிக்கொண்டு, "எனக்கு சாகவேண்டாம்," என்கிறார்கள். பயத்தில் சிலர் நிஜமாகவே ஏதோவொரு

போர்வையையோ, கையில் கிடைக்கும் எதையோ ஒன்றை கெட்டியாகப் பிடித்துக்கொள்கிறார்கள். இந்த விதத்தில் உயிர்விடுவது நல்லதே இல்லை. இதை பெரிய துன்பமாக நினைத்திருக்கிறார்கள். ஆனால், அப்படி கிடையாது. ஓரளவுக்கு தயாராக இருந்தால், வழிகாட்டுதல் இருந்தால், ஓரளவுக்கு உதவியும் இருந்தால், ஆன்மீக வளர்ச்சிக்கான மகத்தான வாய்ப்பாக இது மாறமுடியும். ஆன்மீக அடிப்படையில் பார்த்தால், வாழும்போது ஏற்படாததைக்கூட மரணம் நிகழும் கணத்தில் சாதிக்க முடியும். அதற்கு அந்தக் கணத்தை அர்த்தமுள்ள விதத்தில் கையாள வேண்டும். அப்படிச் செய்தால். அந்தக் கடைசி கணத்தில் நீங்கள் சேர்த்து, குவித்து முடிந்து வைத்துள்ள எல்லாவற்றையும் மிகச் சுலபமாக அவிழ்த்துவிட முடியும். ஆனால், நீங்கள் அதற்கு தயாராகாமல் பயத்துடன் இருந்தால், இல்லை வாழ்வின் தன்மையைப் பற்றி அறியாமல், அதைப் பற்றி எதிர்ப்பு உருவாக்கிக்கொண்டு இருந்தால், அப்படிப்பட்ட ஒரு சாத்தியத்தை மொத்தமாக இழந்துவிடுவீர்கள்.

தாங்களாகவே எப்படி உயிர்விடுவது என்று எல்லோருக்கும் தெரிந்திருக்க வேண்டும். நான் எப்போதுமே இவர்களிடம் சொல்லிக் கொண்டிருக்கிறேன்: என்னை யாரும் என்னுடைய கல்லறைக்கு தூக்கிக்கொண்டு போகும் அவசியமில்லாதபடி நான் நிச்சயம் பார்த்துக்கொள்வேன், என் கல்லறைக்கு நானே நடந்துபோவேன் என்று சொல்லியிருக்கிறேன். பல வருடங்களுக்கு முன்பாகவே, யோக மையத்தில் எனக்காக ஒரு சமாதியை கட்டினார்கள், தெரியுமா? யோக மையத்தில் அது இன்னும் அப்படியே இருக்கிறது. தியானலிங்க பிரதிஷ்டை முடிந்தவுடனே குறிப்பிட்ட சமயத்தில் உடலை விடுவதுதான் எப்போதுமே என்னுடைய திட்டமாக இருந்தது. அதற்காகத்தான் அதை கட்டினோம். அப்போது இதைப்பற்றி பல கலந்துரையாடல்கள் செய்தோம். "ஒருவேளை, அன்றைய தினம் என்னால் ஆழத்தில் இறங்கி நடக்க முடியாமல் போகலாம். அதனால் அதிகமான படிக்கட்டுகள் வைக்காதீர்கள்," இப்படி பல விஷயங்களை யோசித்துக் கட்டினோம். அதன் கதவு எப்படி இருக்கவேண்டும். தாழ்ப்பாள் எப்படி இருக்கவேண்டும், பூட்டிடும் முறை எப்படி இருக்கவேண்டும் - கடைசியாக ஒருமுறை உள்ளேயிருந்து நானே பூட்டிக்கொள்ள வேண்டுமல்லவா! இதுபோல நுட்பமாக சிந்தித்து வடிவமைத்தோம். இவற்றை எல்லாம் ஏன் செய்தோம்? என்னுடைய கல்லறைக்கு நானே சுயமாக நடந்துபோக திட்டமிட்டிருந்தேன். நான்கு பேருக்கு வேலை குறையும் அல்லவா? அதனால்தான் அப்படி செய்தோம். ஆனால், கட்டப்பட்ட அந்த சமாதிக்கு பயனில்லாமல் போனது. வீணாக பணம் செலவானதுதான் மிச்சம் என்பதெல்லாம் வேறு விஷயம்.

அதனால், அனைவருமே தங்களுடைய மரணத்திற்கு தயாராகிட ஏற்பாடுகள் செய்யவேண்டும் - வெளிநிலையில் மட்டுமல்ல, உள்நிலையிலும்

செய்யவேண்டும். அப்படியே சும்மா உட்கார்ந்து உயிரை விடும் திறன் உங்களுக்கு இருக்க வேண்டும். மரணம் நெருக்கமாக வந்தவுடன் பெரும்பாலான காட்டுமிருகங்கள் தனிமையான ஒரு இடத்திற்கு போய் அப்படியே சும்மா உட்கார்ந்து கொள்ளும். எதையும் சாப்பிடாமல் இருந்து அப்படியே உயிரை விட்டுவிடும். இப்படி மிருகங்கள், தரையில் தவழும் உயிரினங்கள் கூட இவ்வளவு கண்ணியமாக மரணத்தை எதிர்கொள்ளும்போது, மனிதர்களுக்கு மட்டும் தங்களை சுற்றி நாடகம் தேவைப்படுவது ஏன்? வாழும்போதுதான் அவ்வளவு நாடகம் தேவைப்படுகிறது. ஆனால், மரணத்தையாவது கண்ணியமாக நிகழ்த்திடலாமே.

முடிந்தால், இந்த உலகில் உள்ள ஒவ்வொருவருக்கும் சில வழிமுறைகளை கற்றுக்கொடுக்க வேண்டும் என்று விரும்புகிறேன். அதன்மூலம் அவர்கள் வாழ்வின் ஒவ்வொரு கணத்திலும் ஆனந்தமாக அற்புதமாக வாழ்ந்திட முடியும். அப்போது, இயல்பாகவே அவர் உன்னதமான விதத்தில்தான் இறந்துபோவார். ஆனால், வயது ஆக ஆக இந்த நோக்கத்தை அடைய பெருமளவில் நேரமும் செயலும் தேவைப்படுகிறது என்று புரிந்துகொள்கிறேன். அதனால், முதல் நோக்கம் சாத்தியமில்லை என்றால் அவர்களுக்கு நல்லமுறையில் இறப்பது எப்படி என்றாவது கற்றுக்கொடுக்க விரும்புகிறேன். அப்போது, வாழ்வின் கடைசி கணத்தையாவது அவர்கள் புத்திசாலித்தனமாக கையாள முடியும். ஏதோ ஒரு காரணத்தால், அவர்களால் ஆனந்தமாக வாழ முடியவில்லை என்றாலும் அவர்களுடைய மரணமாவது நல்லமுறையில் நடக்கவேண்டும் - இதுதான் என் விருப்பம். ஆனால், ஒருவர் இந்த நோக்கத்தில் முயற்சி செய்தால், இதைவிட எவ்வளவோ செய்வதற்கு சாத்தியம் உண்டு. இந்த சாத்தியம் திறமைபெற்ற யோகிகளுக்கு மட்டுமே கிடைக்கும் என்றில்லை. தன்னுடைய புரிதலுக்கு அப்பாற்பட்ட விஷயத்தில் தனக்கு சொல்லப்படும் குறிப்புகளை ஏற்றுக்கொள்ள தயாராக இருக்கும் புத்திசாலி யாராக இருந்தாலும், அவருக்கும் இது சாத்தியம்தான்.

ஆன்மீகப் பாதையில் இருப்பவர்கள் பலமுறை இதைவிட ஒருபடி அதிகமாகவே போகிறார்கள். தங்களுடைய மரணத்திற்கான தேதி, நேரம், இடம் எல்லாவற்றையும் அவர்களே தேர்ந்தெடுக்கிறார்கள். இதை முன்கூட்டியே முடிவு செய்து அந்த நேரத்திலேயே அவர்களால் போகமுடிகிறது. அவர்கள் தங்களுக்கு தேவையான விழிப்புணர்வை உருவாக்கியிருக்கிறார்கள். அதனால் நேரம் வரும்போது தங்களுடைய உயிர்சக்திகளை மூட்டை கட்டிக்கொண்டு, விழிப்புணர்வுடன் உடலை விடமுடிகிறது. ஆடைகளை கழட்டிவிட்டு போவதுபோல, இந்த உடலுக்கு சேதமில்லாமல் அதைவிட்டு விழிப்புணர்வுடன் வெளியேறுவதுதான் உங்கள் வாழ்வில் நிகழக்கூடிய உச்சக்கட்ட சாத்தியம். நீங்கள் ஆகிய

உயிரும், நீங்கள் சேகரித்துள்ள உடலும் எந்த இடத்தில் ஒன்றாக கட்டப்பட்டு இருக்கிறது என்பதை அறியும் அளவுக்கு உங்களுடைய விழிப்புணர்வு வளர்ந்திருக்க வேண்டும். அப்போது, உங்களுக்கு உகந்த நேரத்தில் அதை எப்போது வேண்டுமானாலும் கழட்டிவிட்டு வெளியேறலாம். உங்களுடைய மரணத்திற்காக நீங்கள் செய்யக்கூடிய உச்சக்கட்ட ஏற்பாடு இதுதான்.

மரணத்திற்கு தயாராக வேண்டும் என்று நாம் சொல்லும்போது, "மரணம் திடீரென்று ஏற்பட்டால் என்ன செய்வது? அப்படிப்பட்டவர் எப்படி நல்லமுறையில் இறந்திட முடியும்?" என்று சிலர் கேட்கிறார்கள். மரணம் ஒருபோதும் திடீரென்று நடப்பதில்லை. நீங்கள் அதை முன்கூட்டியே பார்க்காமல் இருக்கலாம். ஆனால், மரணம் ஒருபோதும் திடீரென நடப்பதில்லை. இம்மாதிரி, திடீர் மரணம் என்ற தவறான புரிதலை பரப்பிடும் பெரிய குற்றத்தை செய்வது இன்றைய சினிமாக்கள்தான். உயிர் என்றால் அது ஏதோ உங்களுக்குள் குறிப்பிட்ட அளவில் இருக்கும் பொருள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். யாராவது உங்களை துப்பாக்கியால் சுட்டுவிட்டால் "பொசுக்" என்று உயிர் போய்விடுமாம். அது அப்படி கிடையாது. இப்படி பார்க்கலாம்: இப்போது உங்களை தலையில் சுட்டுவிட்டேன் என்று வைத்துக்கொள்வோம். உடனடியாகவே உங்கள் சுவாசம் போய்விடுமா என்ன? கிடையாது. அது மெதுவாகத்தான் நடக்கும். உங்களுடைய விலா எலும்புகளில் அழுத்தம் போய்விட்டால். சுவாசம் மெதுவாக வெளியேற ஆரம்பிக்கும். இதைப்போலத்தான் உயிரும். மெதுவாக கொஞ்சம் நேரம் எடுத்துதான் உயிர் வெளியேறும். ஆனால், உடல் இயக்கம் இல்லாமல் போன அந்த கணத்திலேயே வாழ்க்கையை உணரும் திறன் போய்விட்டது. உடலின் அனுபவமும், ஐம்புலன்களின் அனுபவமும் போய்விட்டது. ஆனால், அனுபவம் என்பதோ இன்னும் அப்படியே இருக்கிறது. நீங்கள் தூங்கும்போது கூட இப்படித்தானே நடக்கிறது. அங்கே ஒரு அனுபவம் இருக்கிறது. ஆனால் உங்களால் உள்முகமாக திரும்பி அந்த அனுபவத்தை எட்டிட முடிவதில்லை. உங்களுடைய ஐம்புலன்கள் தொடர்பு இழந்துவிட்டால். உலகத்தை அனுபவத்தில் உணரமுடியாது. உடலையும் அனுபவத்தில் உணரமுடியாது. ஆனால் உங்களுடைய இருப்பின் அனுபவம் இன்னும் இருக்கவே செய்கிறது.

இப்போது, ஒருவரை தலையில் சுட்டுவிட்டால், அவருக்கும் அமைதியாக உயிர்விட வாய்ப்பிருக்கிறதா? யாரோ ஒருவர் கூரையிலிருந்து கீழே விழுந்து இறந்துவிட்டார் என்று வைத்துக்கொள்வோம். உடல் உடைந்து போவதை நீங்கள் பார்ப்பதால், உங்களைப் பொருத்தவரை அது பயங்கரமான மரணமாக தோன்றலாம். ஆனால், கீழே விழுந்தவரோ அமைதியான முறையில் இறந்திருக்கலாம். அந்த கடைசி கணங்களை

அவருக்குள் அமைதியாக உணர்ந்திருக்க வாய்ப்பிருக்கிறது. இல்லை, அவர் பயங்கரமாக இறந்திருக்கவும் வாய்ப்பிருக்கிறது. அவர் உடல் உடைந்துபோன விதத்தால் இது பயங்கரமானது என்று சொல்லவில்லை, அந்த உயிர் அந்த கணத்தை அனுபவிக்கும் விதம் பயங்கரமாக இருந்திருக்கலாம். அவரின் அனுபவத்தைப் பொருத்துதான் அதை சொல்லமுடியும். வெளியிலிருந்து பார்க்கும் நீங்கள் உடலுக்கு என்ன நடந்தது என்பதை பொருத்துதான் பயங்கரமானது என்று முடிவு செய்கிறீர்கள். ஆனால், அந்த உயிருக்கு என்ன நடந்தது என்று நீங்கள் தெரிந்துகொள்ள வாய்ப்பில்லை. அது அவருக்கு மட்டும்தான் தெரியும். அதைத் தெரிந்துகொள்ளும் முறைகளை நீங்கள் அறிந்திருந்தால் தவிர, அது அவருக்கு மட்டும்தான் தெரியும்.

ஒருவர் இறக்கும் சமயத்தில், அவருடைய குடும்பத்தார் சுற்றி இருக்கும்போது தன் உயிரை விட்டிருக்கலாம். அதனால், அவர் நன்றாக அமைதியான முறையில் தன்னுடைய படுக்கையிலேயே இறந்துபோனார் என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால், அவரோ அந்தக் கடைசி கணத்தில் தன்னுடைய கொடுமைக்கார உறவினரை பார்த்திருக்க வாய்ப்பிருக்கிறது. அதனால் அவர் மிரண்டுபோய், அது பயங்கரமான மரணமாகவும் நிகழ்ந்திருக்க வாய்ப்பிருக்கிறது. யாரோ ஒருவர் கார் விபத்தில் உடல் நொறுங்கி இறந்து போயிருக்கலாம்; ஆனால், அவர் அந்தக் கடைசி கணத்தில், "சிவசிவா" என்றோ, வேறொன்றோ சொல்லிவிட்டு அமைதியாக உயிரை விட்டிருக்கலாம், யாருக்கு தெரியும்? அந்த மரணம் பயங்கரமானதா இல்லையா என்பது, உடலுக்கு என்ன நடந்தது என்பதைப் பொருத்து இல்லை. அந்த மனிதருக்குள்ளே அதை எப்படி உணர்ந்தார் என்பதைப் பொருத்துதான் அமைகிறது.

ஒருவர் நோய்வாய்ப்பட்டோ, வயதாகிவிட்டதாலோ அல்லது வேறு ஏதோ காரணத்தினாலோ இறந்து போகிறார் என்று வைத்துக்கொள்வோம். இவரைவிட, தலையில் சுடப்பட்டு இறப்பவருக்கு எந்த விதத்திலும் எந்த குறையும் கிடையாது. இதை நீங்கள் நன்றாக புரிந்துகொள்ள வேண்டும்: மரணம் எவ்வளவுதான் எதிர்பாராமல் திடீரென்று நடந்திருந்தாலும் - மாரடைப்பு, கார் விபத்து, விமான விபத்து அல்லது தலையில் குண்டு துளைத்து என்று எந்த விதத்தில் மரணம் ஏற்பட்டிருந்தாலும் - அவருக்கு அடிபட்ட நேரத்திற்கும், மரணத்திற்கும் நடுவில் சில கணங்கள் இருக்கின்றன. எதிர்பாராத சமயத்தில் சடாரென்று ஒருவரின் தலையையே வெட்டிவிட்டால் கூட, அப்போதும் வெட்டுப்பட்ட நேரத்திற்கும், மரணத்திற்கும் நடுவில் சில கணங்கள் இருக்கின்றன. ஒருவேளை அவர் தன் வாழ்க்கையில் ஓரளவுக்கு விழிப்புணர்வை உருவாக்கி வைத்திருந்தார் என்றால், அந்தக் கடைசி ஒரு சில கணங்கள்

விழிப்புணர்வுடன் நிகழ்ந்திடும் வாய்ப்பு இருக்கிறது. அதேசமயம், சிலருக்கு நூறு வருட ஆயுள் கிடைத்திருந்தாலும், நூறு வருடங்களில் கூட அவர்களுக்குள் விழிப்புணர்வு ஏற்படுவதில்லை. வாழ்க்கையின் நிஜம் இப்படித்தான் இருக்கிறது. திடீரென்று சுடப்பட்டவருக்கு ஒரு சில கணங்கள் மட்டும்தான் இருக்கிறது, அவருக்கும் அதே நிலைமைதான். ஒருவேளை உங்களுடைய வாழ்க்கையை விழிப்புணர்வுடன் வாழ்ந்திருந்தால், அப்போது அந்தக் கடைசி கணத்திலும் நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்கும் சாத்தியம் நிச்சயம் இருக்கிறது. அப்போது மட்டும்தான் நீங்கள் உங்களுடைய மரணத்திலும் விழிப்புணர்வுடன் இருக்க முடியும்.

நீங்கள் உயிருடன் இருக்கும்போதே வாழ்க்கையில் விழிப்புணர்வை உருவாக்கிக்கொள்வது மிகவும் அவசியம். அப்போது மரணம் எந்த விதத்தில் ஏற்பட்டாலும் அது ஒரு பொருட்டாக இருக்காது - நல்லமுறையில் இறந்திடும் திறன் உங்களுக்கு இருந்திடும். சிலபேருக்கு, அவர்களின் வாழ்க்கையில் சூழ்நிலைகள் நன்றாக அமைந்தால் மட்டுமே அவர்களால் நல்லபடியாக வாழமுடிகிறது. சில பேருக்கோ, வாழ்க்கையின் சூழ்நிலைகள் எந்தமாதிரி அமைந்தாலும், அவர்கள் நலமாகவே வாழ்கிறார்கள். மரணத்திலும் இதுவே உண்மை. உங்களுக்குள் தேவையான திறனை உருவாக்கிக்கொண்டால், மரணம் எந்த விதத்தில் ஏற்பட்டாலும், இறக்கும்போதும் விழிப்புணர்வுடன் இருந்து நல்லமுறையில் இறந்திட முடியும். அதற்கு நீங்கள் வாழும்போதே விழிப்புணர்வுடன் வாழ்ந்திருக்க வேண்டும். இல்லையென்றால், மரணத்தைப்போல ஒரு மிகையான சூழ்நிலை வரும்போது திடீரென்று விழிப்புணர்வுடன் இருப்பதற்கு வாய்ப்பே கிடையாது. உதாரணமாக, ஒரு டாக்டர் ஒரு மனிதரை பார்த்து, "உங்களுக்கு புற்றுநோய் வந்துவிட்டது, உயிர்வாழ ஒரு மாதம்தான் இருக்கிறது," என்று சொல்கிறார் என்று வைத்துக்கொள்வோம். அட, மரணத்திற்கு தயாராகிட இன்னும் ஒரு மாத அவகாசம் இருக்கிறதே என்று எவ்வளவு பேர் தங்களுக்குள் விழிப்புணர்வை உருவாக்கிக்கொள்வார்கள்? பெரும்பாலானவர்கள் நடுங்கி கதிகலங்கிப் போகவே வாய்ப்பிருக்கிறது. தகவல் முன்கூட்டியே கிடைத்துவிட்டதே என்று அதைப் பயன்படுத்தி தங்களுக்குள் விழிப்புணர்வு அடைபவர்கள் மிகவும் சிலர்தான்.

## தூக்கம், ஓஜஸ், மரணம்

தூக்கத்தின் மூலமும், ஓஜஸ்[1] எனும் தன்மையை உருவாக்கிக் கொள்வதன் மூலமும், ஒருவர் தன்னுடைய மரணத்திற்கு சில விதங்களில் தயாராக முடியும். தூக்கத்திற்கும் மரணத்திற்கும் தொடர்பிருக்கிறதா?

---

1 ஆன்மீகப் பயிற்சியால் உருவாக்கப்படும் பொருள்தன்மை அல்லாத சக்தி.

அடிப்படையிலேயே, பொருள்தன்மையின் அசைவுநிலை பொருளற்ற தன்மையின் அசைவில்லா நிலையை அடையத்தான் வேண்டும். இதைத்தான் சிவ-சக்தி தத்துவம் என்று சொல்கிறார்கள். சிவன் என்பது அசைவற்ற நிலை, நிஷ்சலம். சக்தி என்பது அசைவு நிலை, உயிர்ப்பு. அண்டத்தில் உள்ள பொருள் அனைத்திற்கும் இது நிகழ்ந்தே ஆகவேண்டும். பிரபஞ்சத்தில் இது பல்வேறு விதங்களில் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. ஒரு அணுவிலிருந்து அமீபா, மனிதன், பூமி, கோள்கள், சூரிய மண்டலம் என சர்வமும் இந்த அசைவு - அசைவின்மை என்ற சுழற்சிக்கு உள்ளாகின்றன. இதுதான் அனைத்துக்கும் அடிப்படையான சுழற்சி. ஒவ்வொன்றின் ஆயுள்காலமும் வித்தியாசப்படலாம், ஆனால் சர்வமும் இயங்குவது இந்த அடிப்படையில்தான். உள்மூச்சு - வெளிமூச்சு, தூக்கம் - விழிப்பு, பகல் - இரவு, படைப்பு - கரைதல் (முக்தி) என்ற எல்லா நிகழ்வுகளும் அடிப்படையில் ஒன்றேதான்.

ஒருவிதத்தில், நீங்கள் தூக்கம் என்று சொல்வதும் மரணத்தைப் போன்றதுதான். தூக்கத்தில் நீங்கள் இறந்து போய்விடுகிறீர்கள். ஆனால் என்ன, மறுபடியும் எழுந்துகொள்ளும்போது அதே பழைய உடல்தான் இருக்கிறது. சொல்லப்போனால், நீங்கள் மிகவும் களைத்துப்போய் படுக்கப் போனீர்கள் என்றால் - நன்றாக தூங்கிவிட்டு எழுந்து கொள்ளும்போது ஏதோ புதிய உடம்போடு இருப்பதுபோல் தோன்றுகிறது, அல்லவா? மரணம் என்றால் - நீங்கள் தூங்கப் போனீர்கள், என்ன, மறுபடியும் எழுந்து கொண்டபோது உடலின் அளவு மிகவும் சின்னதாகிவிட்டது, அவ்வளவுதான். அதை மறுபடியும் வளர்த்தாக வேண்டும்! இந்த அசைவு நிலையில் இருந்து அசைவற்ற நிலைக்கு மாறும்போது நீங்கள் விழிப்புணர்வுடன் இருந்தால், இந்த சுழற்சி யிலிருந்து விடுபட வாய்ப்பிருக்கிறது. நீங்கள் விழித்திருக்கும் நிலை யிலிருந்து தூக்க நிலைக்குள் போகும்போது முழு விழிப்புணர்வுடன் இருந்தால், வாழ்க்கையிலிருந்து மரணத்திற்குள் போகும் நிகழ்வும் முழு விழிப்புணர்வுடன் முயற்சியின்றி நிகழ்ந்திடும். ஏனென்றால், இரண்டுக்கும் அடிப்படை ஒன்றுதான். இரண்டின் சாரமும் வேறுவேறு அல்ல - அது அசைவிலிருந்து அசைவற்ற நிலைக்குத்தான் போகிறது. சக்தியிலிருந்து சிவத்தை சென்றடையும் இந்த சுழற்சியில், ஒரு நிலை யிலிருந்து இன்னொரு நிலைக்கு விழிப்புணர்வுடன் மாறிடும்போது, நீங்கள் ஏராளமான விஷயங்களை கடந்து அப்பாற்பட்டு போகிறீர்கள்.

இன்று இரவு தூங்கும்போது இதை முயற்சித்துப் பாருங்களேன்! தூக்கம் வரும்போது, விழித்த நிலையிலிருந்து தூக்கத்திற்குள் போகும் அந்த கணத்தில், விழிப்புணர்வுடன் இருக்க முடியுமா என்று பாருங்கள். அந்த கணத்தில் நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்க முடிந்தால், உடலுடன்

இருக்கும் நிலையிலிருந்து உடலற்ற நிலைக்கு மாறும்போதும் உங்களால் விழிப்புணர்வுடன் இருக்க முடியும். பெரும்பாலானவர்கள் எந்த விழிப்புணர்வும் இல்லாமலே தூங்குகிறார்கள். ஆனால், விழித்த நிலையில் இருந்து தூக்கத்திற்குள் போகும் அந்தக் கடைசி கணத்தில் அப்படியே விழிப்புணர்வுடன் இருக்க முடிந்தால், நீங்கள் தூக்கத்திலும் விழிப்பாக இருப்பீர்கள். இந்த விழிப்புணர்வை உருவாக்கிக்கொள்ள முடிந்தால், உங்களுக்குள் மகத்தான ஒன்று நிகழ்ந்திடும்.

தூக்கம் வரும்போது விழிப்புணர்வுடன் அந்தக் கடைசி ஒருசில கணங்களுக்கு ஒரு தன்மையை கொண்டுவந்தால், அந்தத் தன்மை தூக்கத்தின்போதும் நீடிக்கும். தூங்குவதற்கு முன் அந்தக் கடைசி கணங்களில், உங்களுக்குள் அன்பாகவோ, சந்தோஷமாகவோ இருக்கும்படி செய்துகொண்டால், நீங்கள் தூங்கிடும்போதும் அந்தத் தன்மை தொடர்ந்து நீடிக்கும். மரணத்தின்போதும் இப்படித்தான் நடக்கும். ஆனால், இதைவிட பல மடங்கு அதிகமாக நடந்திடும். அந்தக் கடைசி கணத்தில் ஒரு குறிப்பிட்ட தன்மையை உள்ளே கொண்டுவந்தால், அந்தத் தன்மையே தொடர்ந்து நீடிக்கும்.

தூங்கும்போது விழிப்பாக இருக்கக் கற்றுக்கொள்வது கொஞ்சம் கஷ்டமாக இருக்கலாம். அதற்கு பதிலாக, நீங்கள் விழித்திருக்கும் போதே தூங்கிட கற்றுக்கொள்ளலாம். அது கொஞ்சம் சுலபமாக இருக்கும். கொஞ்சம் சாதனா செய்தால் அதை நீங்கள் அடைய முடியும். ஷூன்ய[2] தியானத்தில் இதுதான் நடக்கிறது - நீங்கள் விழித்திருக்கிறீர்கள், இருந்தாலும் தூக்கத்தில் இருக்கிறீர்கள். உடம்பு நீங்கள் தூங்கிக் கொண்டிருப்பதாக நினைத்துக்கொள்கிறது. அதனால் “மெட்டபாலிசம்” எனப்படும் வளர்ச்சிதை மாற்றத்தை உடல் குறைத்துக்கொள்கிறது. ஆனால், நீங்கள் விழித்துக் கொண்டுதான் இருக்கிறீர்கள். ஷூன்ய தியானத்தில் உட்கார்ந்திருக்கும்போது, சட்டென்று நீங்கள் போய்விட்டதாக உடலுக்குத் தோன்றுகிறது. உங்கள் உணர்வில் உங்கள் கைகளோ, கால்களோ, மற்றதோ இல்லாமல் போனதுபோல் ஆகிடும். ஒருவிதத்தில், மறைமுகமாக ஒளிந்து உடலை ஏமாற்றிவிட்டீர்கள். நீங்கள் விழித்துக் கொண்டுதான் இருக்கிறீர்கள் என்று உடலுக்கு தெரியவில்லை. ஆனால், மனதில் ஏதாவது ஒரு எண்ணம் எழுந்துவிட்டால், நீங்கள் ஒளிந்திருப்பது அதற்கு புரிந்துவிடுகிறது. உடனே கைகளும் கால்களும் உணர்வில் வந்துவிடுகின்றன. தூங்கும்போது விழிப்புடன் இருக்க மிகுந்த முயற்சி தேவைப்படலாம். ஆனால், விழித்திருக்கும்போது தூங்குவது சாத்தியம்தான்.

---

2 சத்குரு வழங்கும் 15 நிமிட தியானம்.

இப்படி, இரண்டில் ஏதாவது ஒருவிதத்தில், ஒரு நிலையிலிருந்து இன்னொரு நிலைக்கு மாறும்போது விழிப்புணர்வுடன் இருக்கக் கற்றுக்கொண்டால், உடலிலிருந்து உடலற்ற நிலைக்கு மாறும்போது அது மிகப்பெரிய உதவியாக இருக்கும். அப்படிப் பார்த்தால், இதையெல்லாம் விட மிகவும் எளிமையான ஒரு வழி ஈஷா க்ரியா[3]. ஆனால், அது அந்தளவுக்கு திறன்மிக்க வழி என்று சொல்லமுடியாது.

உங்களால் பெருமளவில் ஓஜஸ் சேகரித்துக்கொள்ள முடிந்தாலும், அது உங்களுடைய மரணத்தின்போது பெரிதாக உதவிடும். ஆசியாவின் தூரக் கிழக்கில் உள்ள சில கலாச்சாரங்களில், ஞானம் அடைந்தவர்களை "என்சோ" என்று அழைப்பார்கள். என்சோ என்றால் ஒரு வட்டம் என்று அர்த்தம். வட்டம் எதற்காக? இப்போது உங்களுடைய வண்டிகளின் சக்கரங்கள் ஏன் வட்டமாக இருக்கின்றன? சக்கரங்கள் முக்கோணமாக இருந்தால் இன்னும் ஸ்டைலாக இருக்கும், அல்லவா? அது ஏன் சதுரமாகவோ முக்கோணமாகவோ இல்லாமல் வட்டமாக இருக்கிறது? ஏனென்றால், வட்ட வடிவத்துக்குத்தான் அனைத்தையும் விட எதிர்ப்பு குறைவாக இருக்கிறது. அதனால்தான் ஞானம் அடைந்தவர்களை "என்சோ" என்று அழைக்கிறார்கள். அவருடைய உடல் உருண்டையாக இருக்கிறது என்று அர்த்தம் அல்ல. குறைந்தபட்ச எதிர்ப்பே ஏற்படுமளவுக்கு வாழ்வையும் மரணத்தையும் அவர் கடந்துபோகிறார். அந்தளவுக்கு அவர் தேவையான ஓஜஸ் உருவாக்கியிருக்கிறார்.

யோகக் கலாச்சாரத்தில் இதையே செல்லமாகவும் குறும்பாகவும் வேறுவிதமாக சொல்வோம் - பூமித்தாயிடம் இருந்து திருடுவது என்போம். இந்த உடல் என்பதை பூமித்தாயிடம் இருந்து நாம் கடனாகத்தான் வாங்கி இருக்கிறோம். அவள் தாராளமானவள்தான். ஆனால், கடனை திரும்ப வசூல் செய்வது என்று வந்துவிட்டால் மிகவும் கறாராக இருப்பாள். நினைவுப் பரிசாக, ஒரு அணுவைக்கூட எடுத்துப்போக விடமாட்டாள். ஒவ்வொரு அணுவையும் திரும்ப வாங்கிக் கொண்டுதான் விடுவாள். அதனால், யோகிகள் பூமித்தாயிடம் இருந்து திருடுவது எப்படி என்று கற்றுக்கொண்டார்கள். அதாவது, பொருளை பொருளற்ற தன்மையாக மாற்றிவிடுவார்கள். இப்போது, அவளால் அதை மீட்க முடியாது. ஏனென்றால், அதை அவளால் அடையாளம் தெரிந்துகொள்ள முடியாது. இந்த பொருளற்ற தன்மைதான் ஓஜஸ் என்று அழைக்கப்படுகிறது.

ஒரு சிலர் குறிப்பிட்ட விதமான சாதனா செய்யும் காலத்தில் பார்த்தால், அவர்கள் சாப்பிடும் உணவின் அளவு எக்கச்சக்கமாக இருக்கும்.

3 தினமும் 11 நிமிடங்களுக்கு செய்யும் ஒரு எளிமையான தியானமுறை. ஒருவரின் காலம் வரும்போது நல்லமுறையில் அவர் உடலைவிட்டு போவதற்கு உதவியாக இருக்க இதை வடிவமைத்திருக்கிறார் சத்குரு.

வழக்கமாக, இதையெல்லாம் யாரும் பார்க்காதபடி தனிமையில்தான் செய்வார்கள். அவர்கள் சாப்பிடும் அளவைப் பார்த்தால், எந்த மனித உடலும் அவ்வளவு உணவை உட்கொள்ள முடியாது, அந்தளவுக்கு இருக்கும். அவர்கள் பத்து ஆள் சாப்பாடு சாப்பிடுவார்கள். ஆனால், ஒரு கிராம் எடைக்கூட அதிகரிக்காது. எந்த உடல் உபாதையும் இருக்காது. சாதாரணமாக, அவ்வளவு சாப்பாடு சாப்பிட்டால் வயிறு வெடித்துப்போகும். ஆனால், இங்கே எடை துளியும் அதிகமாகாது. அந்த காலகட்டத்தில் அவர்கள் பொருள் தன்மையை பொருளற்ற தன்மையாக மாற்றிக் கொண்டிருக்கிறார்கள். சாதாரணமாக, நாம் சாப்பிடும் உணவு சதையாகவும் ரத்தமாகவும் மாறுகிறது. ஆனால், சிலவிதமான சாதனா செய்யும்போது, உங்களுக்குள் பொருளை பொருளற்றதாக மாற்றமுடிகிறது. உங்களுக்குள் ஓஜஸ் மட்டுமே வளர்கிறது, உடல் வளர்ந்திடாது. உங்களை சுற்றி போதிய அளவில் ஓஜஸ் இருந்தால், வாழ்வையும் மரணத்தையும் கடப்பது மிகவும் சுலபமாக முயற்சியின்றி இருக்கும். எல்லாவற்றையும் சுமுகமாக எந்த உராய்வும் இல்லாமல் மென்மையாக கடப்பீர்கள்.

ஓஜஸ் இருக்கிறதென்றால் என்ன அர்த்தம்? உங்கள் உடலை நீங்கள் இழந்த பிறகு ஒருவிதமான உடலை தருகிறது என்று அர்த்தம். அதாவது, நீங்கள் ஒரு மீனைப்போல தண்ணீரில் வாழ்ந்திட உருவாக்கப்படவில்லை. ஒருவேளை கடலில் தொலைந்து போனால், உங்களுக்கு ஒரு சின்ன மரக்கட்டையாவது தேவைப்படும். அப்படிப்பட்ட சூழ்நிலையில் அந்த சின்ன மரக்கட்டை மிகவும் விலைமதிப்பானதாக தோன்றிடும். அதுவே, உங்களிடம் ஒரு கட்டுமரம் இருந்தால் அது போதுமானதாக இருக்கும். இரண்டு கட்டுமரங்கள் இருந்துவிட்டால் அதை வைத்து எங்கு வேண்டுமோ அங்கு போகலாம். அதேபோல, உங்கள் பொருள் உடலை இழந்தபிறகு உங்களுக்கு உடலின் ஒரு சின்னப் பகுதி கிடைத்தது என்றால், அதை வைத்துக்கொண்டு உங்களுடைய படகை போகவேண்டிய வழியில் செலுத்திடலாம். ஓஜஸ் உருவாக்கிக் கொள்வதின் நோக்கம் இதுதான். உங்கள் வாழ்க்கையை உராய்வில்லாமல் வாழ்ந்துபோக உதவிடும் கிரீஸ் எண்ணெய் போன்றது ஓஜஸ். இதனால் இந்த உலகில் நீங்கள் சுலபமாக நகர்ந்து போகமுடிகிறது.

சரி, இந்த ஓஜஸை சேகரிப்பது எப்படி? காலையிலும் மாலையிலும் நீங்கள் பயிற்சி செய்யும் யோகக் க்ரியைகள் மூலம் சுலபமாக ஓஜஸ் உருவாகும். இது ஒரு வழி. நீங்கள் *கபாலபாதி*[4] செய்பவர் என்றால், அதை சக்தியாக செய்தால் ஓஜஸ் வளரும். இப்போது கபாலபாதி

4 ஒரு குறிப்பிட்ட யோகப் பயிற்சி சக்தியாக சுவாசிக்கும் முறையைக் கொண்டது.

செய்யும்போது, பொதுவாக தலையிலும் முகத்திலும் உஷ்ணத்தை உணரலாம். அது உங்களுடைய ஆரோக்கியத்திற்கும் நன்மைக்கும் உகந்ததுதான். நீங்கள் முழுமையான கபாலபாதி செய்தால் உஷ்ணம் ஒருமுகம் ஆகிடும். உங்கள் உச்சந்தலையில் மட்டுமே ஒரே இடத்தில் உஷ்ணம் குவியும். அப்படி கபாலபாதி செய்தால், அப்போது ஓஜஸ் உருவாகிடும். இப்போது நமது பிரம்மச்சாரிகள் சூரிய க்ரியாவின் பலவகையான சாதனைகளை செய்து வருகிறார்கள். அதை செய்வதால் ஓஜஸ் வளரும். அவர்கள் செய்யும் *கும்பக சாதனா*[5] மூலம் பெருமளவில் ஓஜஸ் உருவாகும். உங்களுடைய ஓஜஸ் அதிகரிக்கும்போது, கவனமாக பார்த்தால், உங்களுடைய நிழல் திட்டவட்டமாக தெளிவாகவே இருக்காது. ஓஜஸ் இருப்பதால் வெளிச்சம் சிதறிப்போகிறது, அதனால் அது குழம்பிப் போகிறது. பொருள் உடலை சேதப்படுத்தாமல் தன்னை ஓஜஸால் போர்த்திக் கொண்டு, பொருள் உடலின் எல்லைகளை கரைத்திட முடியும் - இதையே ஐக்கியம் ஆகுதல் என்றும் சொல்லலாம், யோகநிலை என்றும் சொல்லலாம்.

## மரண பயம் ஏன்?

ஒருவித அறியாமையும், விழிப்புணர்வு இல்லாமையும்தான் மரணத்தைப் பற்றிய பயம் வரக் காரணம். பெரும்பாலானவர்கள் ஒரு பிணத்தைப் பார்த்தவுடனேயே நடுங்கிப் போய்விடுவார்கள். இறந்துபோனவருக்கு நேசமானவர்கள், அவர் மீது பாசம் வைத்திருந்தவர்கள், தங்களுக்கு பிரியமான ஒருவரை இழந்துவிட்டதால் வருத்தப்படுகிறார்கள், அதை புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால், அவருடைய பிணத்தை பார்க்கும் மற்றவர்களுக்கு ஏன் பயம் ஏற்பட வேண்டும்? உயிருடன் இருக்கும் உடல்கள் வேண்டுமானால் பயங்கரமானதாக இருக்கமுடியும். அவர்கள் உங்களுக்கு என்ன வேண்டுமானாலும் செய்ய வாய்ப்பிருக்கிறது. அவர்கள் உங்களை விரும்புவதைபோல் நடித்திடலாம். ஆனால், நாளைக்கே உங்களை அவர்கள் கொன்றுவிடவும் வாய்ப்பிருக்கிறது. ஆனால் உயிரற்ற உடல்கள், பிணங்கள் முற்றிலும் ஆபத்தில்லாதவை - இருந்தாலும் அதைப் பார்த்து பயப்படுகிறார்கள் பாருங்களேன்!

உலகின் பல பகுதிகளில், "மரணம்" அல்லது "சாவு" என்ற வார்த்தையைக் கூட வீட்டுக்குள்ளே உச்சரிக்கக்கூடாது என்று குழந்தைகளிடம் சொல்லி வைப்பார்கள். அப்படி அந்த வார்த்தையை உச்சரிக்காமல் இருந்தால், மரணம் வீட்டுக்குள் நுழைந்திடாது என்ற மடத்தனமான நம்பிக்கை

5 பிரம்மச்சாரிகளுக்கு கற்றுத் தரப்படும் ஒரு உயர்நிலை யோகப் பயிற்சி, நீண்டநேரத்திற்கு சுவாசத்தை பிடித்து வைக்கும் முறை.

அவர்களுக்கு. மரணத்தைப் பற்றிய பயம் என்பது ஆரோக்கியம் இல்லாத போக்கு. மரணத்தைப் பற்றி ஏற்படும் பயம் இயல்பானதே கிடையாது. இன்று பெரும்பான்மையான மனிதர்கள் இந்த பயத்தில் இருக்கலாம், அது வேறு விஷயம். ஆனால், அதைப் பற்றிய பயம் என்னவோ இயற்கையாக ஏற்படுவது கிடையாது. மரணம் என்பதுதான் இயற்கையாக ஏற்படுவது. வாழ்க்கை என்பது நிகழ்கிறது என்றால், அப்போது மரணம் நிகழ்வதும் இயற்கைதானே? இயற்கையாக நிகழும் ஒன்றைப் பற்றி பயப்படுவது இயற்கையானதே கிடையாது. உண்மையுடன் தொடர்பில்லாமல் இருப்பதால்தான் மரணத்தைப் பற்றிய பயமே ஏற்படுகிறது. இந்த உடம்போடு ஆழமாக அடையாளப்பட்டு போய்விட்டோம் - அதனால்தான் நமக்குள் மரணத்தைப் பற்றிய பயம் வந்துவிட்டது. நாம் மற்ற பரிமாணங்களை உணர்ந்து பார்க்காததால்தான், இந்த உடம்புடன் இறுக்கமாக அடையாளப்பட்டுப் போகிறோம். மற்ற பல பரிமாணங்களை அனுபவித்து உணர்ந்திருந்தால், அந்த மற்ற பரிமாணங்களின் அனுபவத்தில் நன்றாக வேரூன்றி இருந்தால், உடல் ஒன்றும் அவ்வளவு பெரிய விஷயமாக தோன்றாது.

நீங்கள் இந்த உடம்புடன் சேர்ந்தே வந்ததுபோல் பேசுகிறீர்கள். அப்படி ஒன்றும் இல்லை. நீங்கள் வெளியிலிருந்து சேகரித்ததுதான் இந்த உடம்பு. உங்கள் தாயின் கருவில் இருந்தபோது அதை சேகரித்தீர்கள்; பிறந்த பிறகு தொடர்ந்து சேகரித்து வருகிறீர்கள். இப்படி வெளியிலிருந்து சேகரிக்கும் ஒன்றை, "இது என்னுடையது" என்று சொல்லிக்கொள்ளலாம், பரவாயில்லை. ஆனால், "இதுதான் நான்" என்று சொல்ல முடியாதே. நான் தண்ணீர் குடிக்கும் பாத்திரம் இங்கே இருக்கிறது. நான் உங்களிடம் இப்போது பேசிக்கொண்டிருக்கும் போது, "இந்தப் பாத்திரம் என்னுடையது," என்று சொல்லிக்கொண்டால் நீங்கள் என்ன நினைப்பீர்கள்? "ஐயோ பாவம்! சத்குருவுக்கு என்ன பிரச்சனையோ? சரி. இருந்தாலும் எல்லோரும் அவரை ஞானி என்று சொல்கிறார்களே, அதனால் இன்னும் கொஞ்ச நேரம் அவர் பேசுவதைக் கவனிப்போம்," என்று நினைப்பீர்கள். ஆனால், கொஞ்ச நேரம் கழித்து நான், "இந்த பாத்திரம்தான் நான்," என்று சொல்கிறேன். இப்போது என்னவாகும்? அவ்வளவுதான், "போதும், இந்த மனிதரை விட்டு ஓடினால் போதும்," என்றுதான் நிச்சயமாக நினைப்பீர்கள். ஆனால் இதைத்தானே நீங்களும் செய்து கொண்டிருக்கிறீர்கள்? "இந்த உடல்தான் நான்," என்று வாழ்கிறீர்கள். அதனால்தான் அதை விடும் நேரம் வரும்போது அவ்வளவு பெரிய ஆர்ப்பாட்டம் செய்கிறீர்கள்.

நீங்கள் அடுத்த சில வாரங்களில் ஏதோ அளவுக்கதிகமாக சாப்பிட்டீர்கள் என்று வைத்துக்கொள்வோம். இதனால், ஏராளமான அளவு உடலில்

சேர்ந்துவிட்டது, உடம்பு போட்டுவிட்டது. அதற்குப் பிறகு உடலுக்குத் தேவையான வேலையும் பயிற்சியும் கொடுத்து, அந்த உடம்பில் கொஞ்சம் குறைத்துவிட்டீர்கள். வெளியிலிருந்து சேர்த்ததை எரித்து விட்டீர்கள். இதை என்ன மரணம் என்றா சொல்வீர்கள்? அப்படி ஒன்றும் இல்லை. நீங்கள் சேகரித்ததை கொஞ்சம் திரும்ப கொடுத்தீர்கள், அவ்வளவுதான். இது பெரிய விஷயமில்லை. வெளியிலிருந்து சேர்ந்தது குறைந்துவிட்டதால் வருத்தப்பட மாட்டீர்கள். அதற்காக சந்தோஷம்தான் அடைவீர்கள். மரணமும் இப்படித்தானே. மரணத்தைப் பற்றியும் இப்படித்தான் இருக்கவேண்டும், இல்லையா?

மரணம் என்பது ஒருவிதமான கழிவுநீக்கம்தான். வயதாகிவிட்டதால் இந்தச் சதைக்கு வலிமை குன்றிப்போகிறது, அதனால் அதை வெளியேற்றி சுத்தப்படுத்த வேண்டும். இப்படி சேகரித்ததை திரும்ப வைக்கும்போது சந்தோஷமாகவும் வைக்கலாம், அழுதுகொண்டும் வைக்கலாம். அது உங்களுடைய சாய்ஸ். நீங்கள் ஒரு மண்வெட்டி நிறைய மண் எடுத்தீர்கள், பிறகு அதை திரும்ப போட்டுவிட்டீர்கள் - அப்படித்தான் மரணமும். இப்போது இந்த மண்வெட்டியில் மண் நிறைந்திருக்கும்போது, அதைப்பார்த்து மிகவும் பற்று வைத்து அதில் சிக்கிப்போய்விட்டால், என்னவாகும்? மண்வெட்டியில் இருந்து மண் திரும்ப விழும்போது, ஒரு குழந்தை அழுவதைப்போல அழுவீர்கள். அதுதான் நடக்கிறது. ஒரு குழந்தை எங்கிருந்தோ ஒரு கூழாங்கல்லை எடுத்துக்கொண்டு வீட்டிற்கு வந்தது, பிறகு அதை தொலைத்துவிட்டது. இப்போது அந்த குழந்தைக்கு மனம் நொறுங்கிப் போகிறது, தேற்ற முடியாதபடி அழுகிறது. உங்கள் அனுபவத்தில் உங்களுக்கு தெரிந்ததெல்லாம் உடல் மட்டும்தான் என்றால், உங்கள் கதையும் இப்படித்தான். அதேசமயம், வாழ்வில் உடலுக்கு அப்பாற்பட்ட ஒன்றை உணர்ந்திருந்தீர்கள் என்றால், அப்போது உங்களுக்கு உடலை விட்டுவிட்டுப் போவதொன்றும் அவ்வளவு பெரிய விஷயமாக இருக்காது.

வாழ்க்கை என்று நீங்கள் சொல்வது வங்கியில் வாங்கிய கடன் மாதிரிதான். உங்களுக்கு பத்து வருடக் கடன் கொடுத்திருக்கலாம். ஆனால், அது உங்களுக்கு சொந்தமானதில்லை, அதை திரும்ப வைக்கவேண்டும். சில வித்தைகள் செய்து அதை பன்னிரண்டு வருடங்களுக்கு நீட்டிக்கலாம். நீங்கள் கில்லாடியாக இருந்தால், பதினைந்து ஆண்டுகள் வரை நீட்டிக்கலாம். நீங்கள் பலே கில்லாடியாக இருந்தால், இருபது ஆண்டுகள் வரைக்கும் கூட நீட்டிப்பீர்களோ என்னவோ! ஆனால், அவ்வளவுதான். அதற்குமேல் யாரும் இதுவரை நீட்டித்ததில்லை. யாரோ 4,000 வருடங்களுக்கு வாழ்ந்தார்கள், 10,000 வருடங்களுக்கு வாழ்ந்தார்கள் என்றெல்லாம் சிலர் உங்களுக்கு கதை சொல்லியிருக்கலாம். ஒருவேளை அவர்கள் அந்தக் கதையை வைத்து

சினிமா எடுக்கப்போகிறார்களோ என்னவோ, தெரியவில்லை. ஆனால், அந்தளவுக்கு யாரும் வாழ்க்கையை நீட்டித்தது கிடையாது. குளிர்காலம் முழுவதும் சில விலங்குகள் தூக்கத்தில் இருப்பதுபோல், இந்த உயிரையும் சிலகாலம் செயலற்று வைத்திருக்க சில வழிகள் இருக்கிறது. அதன்மூலம் உடலை தாண்டிய பிறகும் நோக்கம் என்பது நிலைக்கமுடியும். திரும்ப இன்னொரு உடலை எடுத்து வரமுடியும் - ஆனால் இதெல்லாம் வேறு விஷயம். இது வாழ்க்கையை நீட்டிப்பது பற்றியது கிடையாது. இது இயற்கையில் நிகழும் சுழற்சியை விழிப்புணர்வுடன் கையாளும் முறையைப் பற்றியது.

பொதுவாக சமுதாயத்தில், "மரணத்தைப் பற்றிய பயம் இயற்கையானது தானே," என்று சொல்லி உங்களை சமாதானப்படுத்தி நம்பவைப்பார்கள். பெரும்பான்மையானவர்கள் என்ன செய்கிறார்களோ, அது இயற்கையானது தான் என்று சொல்லிவிடுவார்கள். பெரும்பான்மையான மனிதர்கள் சிகரெட் பிடிப்பவர்கள் என்றால், உடனே "புகைப்பிடிப்பது நமக்கு இயல்பானதுதானே" என்று சொல்லிவிடுவார்கள், இல்லையா? கடந்த காலத்தில் இதுதான் நடந்துகொண்டிருந்தது. இப்போதுகூட சிலபேர், இது இயற்கையானதுதானே என்று சொல்கிறார்கள். இந்த மனித உடல் புகைப்பதற்காக உருவாக்கப்படவில்லை. நீங்கள் ஒன்றும் மோட்டார் வண்டி இல்லையே! புகைப்பிடிப்பது ஒன்றும் நமக்கு இயல்பான விஷயம் கிடையாது. ஆனால், அதை இயற்கையானது என்று ஆக்கிவிடுவார்கள். நான் வளர்ந்து வந்த பருவத்தில் எனக்கு பயம் என்பதே இல்லாததால் என் அப்பா மிகவும் பதற்றம் அடைவார். அவர் எப்போது பார்த்தாலும், "இந்த பிள்ளைக்கு என்னதான் ஆகுமோ? இவனுக்கு எதைப் பற்றியும் துளியும் பயமே இல்லையே!" என்று புலம்புவார். ஒருநாள் அவரை திரும்ப கேட்டுவிட்டேன், "எப்போதிலிருந்து பயம் என்பது அத்தியாவசியமான பண்பாக மாறிவிட்டது?" என்று. பயம் என்பது ஒரு பண்பு கிடையாது. ஆனால், மனிதர்கள் அதை இயல்பானதாக ஆக்கிவிட்டார்கள். எந்தளவுக்கு என்றால், ஒருவருக்கு பயமே இல்லாதபட்சத்தில், அவரிடம் ஏதோ ஒரு குறை இருக்கிறது என்றளவுக்கு ஆகிவிட்டது. அதேபோல் சமுதாயத்தில் இப்போது, மரணத்தைப் பற்றிய பயமும் இயல்பானதுதான் என்று ஆகிவிட்டது.

போகிற போக்கில் எங்கேயோ, வலியைப் பற்றிய பயமும், மரணத்தைப் பற்றிய பயமும் கலந்து போய்விட்டது. மரணம் என்பது வலிமிக்கதாக இருக்கப்போகிறது என்று ஏராளமானவர்கள் நினைக்கிறார்கள். அதனால்தான், அவர்கள் வலியில்லாமல் இறப்பதற்கு ஏதாவது மருந்து தரும்படி டாக்டர்களிடம் கேட்கிறார்கள். என்னை நம்புங்கள், மரணத்தில் வலி என்பதே கிடையாது, அது மிகவும் நன்றாக இருக்கும். அது

ஏதோ ஒரு குறிப்பிட்ட விஷயத்தால் நிகழ்வதில்லை. அது எப்போதுமே நிகழ்ந்துகொண்டுதான் இருக்கிறது. என்ன, ஒரு கட்டத்தில் அது உங்களுக்கு நிகழ்ந்துவிட்டது என்று மற்றவர்களுக்கு தெரிகிறது, மற்ற நேரங்களில் அவர்களுக்கு அது தெரிவதில்லை, அவ்வளவுதான். உடலுக்கு அடிபடும்போது அது சேதமடைந்தால் வலி ஏற்படலாம், ஆனால் மரணம் என்பது ஒருபோதும் வலிக்காது. மரணத்திற்கு காரணமான நோய் உங்களுக்கு வலியை ஏற்படுத்த முடியும். மரணத்திற்கு காரணமான படுகாயம் வலியை ஏற்படுத்த முடியும். ஆனால், மரணம் என்பதில் வலியே கிடையாது. ஒருமுறை இப்படி நடந்தது: சங்கரன்பிள்ளை இரண்டாவது மாடியிலிருந்து கீழே விழுந்தார், கூச்சலிட்டார். மக்கள் கூடினார்கள், "என்ன ஆச்சு? கீழே விழுந்ததில் வலிக்கிறதா?" என்று கேட்டார்கள். அவரோ, "முட்டாள் பசங்களா! விழும்போது எந்த வலியும் இல்லை. விழுவது நின்றுபோய் நிலத்தில் பட்டதுதான் வலிக்கிறது," என்றார். மனிதர்களின் புரிதலில், அடிக்கடி இரண்டும் ஒன்றோடு ஒன்று கலந்து போய்விடுகிறது.

வலியைப் பற்றிய பயம் மனரீதியானது. உடல் தன் பிழைப்புணர்வின் ஒரு அம்சமாக வலியை எதிர்பார்த்து. தன்னை பாதுகாத்துக்கொள்ளவே இந்த பயத்தை உருவாக்குகிறது. வலி என்பது உடலளவில் உண்மையானது. அது இனிமையானதாக இல்லை, அதனால் அதை அனுபவிக்க உங்களுக்கு விருப்பமில்லை, சரிதான். ஆனால், மரணத்தைப் பற்றிய பயத்திற்கு எந்த அடிப்படையும் இல்லை, அர்த்தமும் இல்லை. ஏனென்றால், மரணம் என்பது வலியானதே இல்லை. அப்படியிருந்தும், மனிதர்கள் ஏன் மரணத்தைப் பார்த்து பயப்படுகிறார்கள்?

உதாரணமாக, இப்படி வைத்துக்கொள்வோம்: நீங்கள் என்னிடம் பத்து லட்ச ரூபாய் கடனாக வாங்கினீர்கள், பத்து வருடங்களில் அது ஒரு பத்து கோடி ரூபாயாக வளர்ந்தது. இப்போது நான் உங்கள் வீட்டிற்கு வருகிறேன் என்று சொன்னால், நீங்கள் என்னை பிரமாதமாக வரவேற்பீர்கள். நான் என்னுடைய பத்து லட்ச ரூபாயை திரும்ப தரும்படி கேட்டால், சந்தோஷமாக அதை தந்துவிடுவீர்கள். ஒருவேளை அதைவிட அதிகமாகவே தருவீர்களோ என்னவோ! பத்து வருடங்களுக்கு முன்னால் பணம் கொடுத்து உதவிய சிறந்த நண்பனாக என்னை மதிப்பீர்கள். ஆனால், நான் உங்களுக்கு கொடுத்த பத்து லட்சத்தை வீணாக கரைத்துவிட்டீர்கள் என்று வைத்துக்கொள்வோம். இப்போது நான் உங்கள் வீட்டுக்கு வருகிறேன் என்றால், மரணமே வருகிறேன் என்று சொன்னதுபோல் தோன்றும். கதிகலங்கிப் போய் நடுங்குவீர்கள், அப்படித்தானே? சொல்லப்போனால், பல பேருக்கு மரணத்தைவிட கடன்காரரைப் பார்த்தால்தான் அதிகமாக பயம் ஏற்படுகிறது.

மரணத்தைப் பற்றிய பயமும் இப்படித்தான். நீங்கள் வாங்கிய கடனை திரும்ப தரும்படி பூமித்தாய் கேட்கிறாள். வட்டியெல்லாம் ஒன்றும் கிடையாது. வாழ்க்கையை உங்கள் அனுபவத்தில் அற்புதமானதாக உணர்ந்திருந்தால், நீங்கள் கடனை சந்தோஷமாக அடைத்துவிட்டு போய்விடுவீர்கள். ஆனால், மனதளவில் மட்டுமே வாழ்க்கையை கழித்து, எதையும் அனுபவத்தில் உணராமல் இருந்தால் கடனை அடைக்கும் நேரத்தில் பயங்கர நடுக்கமாக இருக்கும். இதை நல்லமுறையில் பயன்படுத்தாதவர்கள் எப்போதுமே தவிர்த்து தப்பிக்கவே பார்ப்பார்கள். ஒரு முழு உயிராக இருப்பது எப்படி என்று உணர்ந்து வாழ்பவர்கள் வெற்றிகரமானவர்கள். அவர்கள் எந்தப் பிரச்சனையும் இல்லாமல் சந்தோஷமாக கடனை திருப்பித்தர தயாராக இருக்கிறார்கள். உண்மையில், வாழ்க்கையை வாழ்ந்திடாமல் அதைப்பற்றி நினைத்துக்கொண்டு மட்டுமே இருந்தவர்கள் மிரண்டு போகிறார்கள், பயப்படுகிறார்கள்.

நீங்கள் நன்றாக கவனித்துப் பார்த்தால், உடலின் மரணத்தைப் பற்றி ஒன்றும் உங்களுக்கு பயமில்லை. உங்களுக்கு வயதாகிவிட்டது என்று வைத்துக்கொள்வோம். அப்போது கடவுள் உங்களிடம் வந்து ஒரு ஒப்பந்தம் செய்கிறார். "சரி, நீ இந்தப் பழைய உடலை எனக்கு கொடுத்துவிடு, நான் உனக்கு ஒரு புத்தம்புதிய உடம்பு தருகிறேன்," என்று சொன்னால் அதை வாங்கிக்கொள்வீர்களா, இல்லையா? அதனால் உடலை இழப்பதில் உங்களுக்கு ஒன்றும் பயமில்லை. பிறகு, மரண பயம் எதைப் பற்றியது? மரணத்தால் எதையெல்லாம் இழக்கப்போகிறீர்கள் என்று நீங்கள் நினைக்கிறீர்களோ அதைப் பற்றியதுதான் அந்த பயம். மரணத்தைப் பற்றிய பயம் என்பது அடிப்படையில் இழப்பைப் பற்றிய பயம்தான். யாரோ ஒருவர் தன்னுடைய வேலையை இழக்கப்போகிறார் என்றாலோ, தன்னுடைய பணத்தையெல்லாம் இழக்கப்போகிறார் என்றாலோ, தனக்கு மிகவும் நேசமானவரை அல்லது தனக்கு ஊன்றுகோலாக இருக்கும் நபரை இழக்கப்போகிறார் என்றாலோ, அவருக்குள் மிகப் பெரிய பயம் ஏற்படும். அப்போது அவர்கள் அனுபவிப்பது, மரணம் நிகழ இருந்தால் அவர்களுக்கு ஏற்படக்கூடிய அனுபவத்தைப்போல இருக்கும். அப்படிப்பட்ட சூழ்நிலையை அனுபவிப்பதற்கு பதிலாக சிலர் தங்கள் உயிரை எடுத்துக் கொள்ளவும் செய்கிறார்கள். உண்மையில் பயம், "இந்த உடல் ஒரு நாள் பிரிந்து போய்விடும்" என்பதைப் பற்றியது இல்லை. உண்மையில், "எனக்கு என்ன ஆகுமோ?" என்பதைப் பற்றித்தான் பயம்.

அடிப்படையில், உங்களுக்குள் புண்படக்கூடிய ஒரே விஷயம், மிதிபட்டு நொறுங்கிப் போகக்கூடிய ஒரே விஷயம், நிந்திக்கபடக்கூடிய ஒரே விஷயம், உங்களுடைய அகங்காரம்தான் - "நான்" என்றால் அது இப்படி இப்படி என்று பல விஷயங்களை அடையாளப்படுத்திக்கொண்டு - ஒரு பிம்பத்தை உருவாக்கி வைத்திருக்கிறீர்கள். இதற்கு ஆங்கிலத்தில் பெர்சனாலிட்டி

என்று சொல்வார்கள். "நீங்கள்" என்று உருவாக்கி வைத்திருக்கும் இந்த பிம்பத்தை இழந்துவிடுவீர்களோ என்பதைப் பற்றித்தான் இடைவிடாத பயம் உங்களுக்கு. இதுதான் இருப்பதிலேயே மிகப்பெரிய தடையாக உள்ளது. இந்த கூண்டுக்குள் இருந்து வெளியேவர நீங்கள் தயாராக இல்லை. சொல்லப்போனால், யாரோ ஒருவர் உங்களுக்கு உடலளவில் எந்த பாதிப்பும் ஏற்படுத்தாமல், மற்ற எல்லா விதங்களிலும் உங்களை அசிங்கப்படுத்தவும், பழித்து அவமானப்படுத்தவும் வழிவகுத்தார் என்றால், என்ன செய்வீர்கள்? அதற்கு பதிலாக, மரணமே மேலானது என்று நினைப்பீர்கள். இப்போது மரணம் என்பது ஒரு பரிசாக தோன்றுகிறது. அப்படிப்பட்ட ஒரு நிலையை அனுபவிப்பதற்கு பதிலாக, மரணமே ஒரு வரப்பிரசாதமாக உங்களுக்கு தோன்றிடும்.

சில சமயங்களில், இந்த பயமே பல்வேறு அம்சங்களாக உருவெடுக்கிறது. ஒருவர் தன்னுடைய மரண பயத்தை வேறுவிதமாக மாற்றி, "இறப்பதில் எனக்கு பயமில்லை, ஆனால் என் குழந்தைகள், அவர்கள் எப்படி துன்பப்படுவார்கள், தெரியுமா?" என்று சொல்லி அந்த பயத்தால் பாதிப்படைவார். இன்னொருவரோ, "எனக்கு இறக்க வேண்டாம்," என்ற பயத்தால் பாதிப்பை அனுபவிப்பார். ஏனென்றால் அவருக்கு அதைத் தாண்டி எதுவும் தெரியாது, அவ்வளவுதான். இந்த பயம் இழப்பைப் பற்றியது - நான் என்றும், இந்த உலகம் என்றும், வாழ்க்கை என்றும் நினைத்துக்கொண்டிருக்கும் எல்லாவற்றையும் இழந்துவிடுவோமே என்ற பயம். மரணம் ஏற்பட்டால், அது தங்களுக்கு லாபம்தான் என்று முழுமையாக நம்புபவர்கள், துளியும் பயமில்லாமல் மரணத்திற்குள் காலெடுத்து வைப்பார்கள், பார்த்திருக்கிறீர்களா? எப்படியோ நாம் எதையும் கொண்டுவரவில்லை, ஒன்றுமில்லாமல்தான் வந்தோம். அதனால், நாம் இழப்பதற்கு ஒன்றுமே இல்லை. இதை நீங்கள் புரிந்துகொண்டால், நாம் இழப்பதற்கு ஒன்றுமே இல்லை என்று புரிந்துவிட்டால், மரணத்தைப் பற்றிய பயம் அர்த்தமில்லாமல் போய்விடும்.

## மரண பயத்தை கையாள்வது எப்படி?

இப்போதைக்கு, உங்களுடைய வாழ்க்கை அனுபவம் முழுவதும் உடலுக்கு உட்பட்டு மட்டுமே நிகழ்கிறது. அடுத்தவர்கள் உங்களுக்கு எவ்வளவுதான் போதனை கொடுத்தாலும், அதெல்லாம் ஒரு பொருட்டில்லை. யாரோ ஒருவர் நீங்கள் உடல் அல்ல என்று சொல்லலாம். நீங்கள் ஆத்மா என்று சொல்லலாம். நீங்கள் பரமாத்மா என்று சொல்லலாம் - இப்படி ஏதேதோ சொன்னாலும், உங்கள் அனுபவத்தைப் பொருத்தவரை இந்த உடல்தான் நீங்கள். எவ்வளவுதான் கீதோபதேசங்களும், உபநிஷதங்களும் உங்களுக்கு படித்து சொல்லப்பட்டாலும், உங்கள்

அனுபவம் என்னவோ பொருள் உடலின் எல்லைக்கு உட்பட்டுத்தான் இருக்கிறது. அதனால்தான், அதை இழப்பதற்கு பயமாக இருக்கிறது. மற்ற பலப் பரிமாணங்களை அனுபவித்து உணர்ந்து, அந்த அனுபவத்தில் நன்றாக வேரூன்றி இருந்தால், இந்த உடலை சமாளிப்பது மிகவும் சுலபமாகிவிடும். வாழ்க்கையோ மரணமோ, ஒன்றும் பெரிய வித்தியாசத்தை ஏற்படுத்தாது. அடிப்படையில் மரணம் என்றால் என்ன? இந்த வாழ்க்கையில் உடலளவிலும் மனதளவிலும் நீங்கள் சேகரித்து வைத்திருக்கும் விஷயங்களை விட்டுவிடுவதுதான் மரணம். ஒரு தனிமனிதராக, உங்களைப் பற்றி நீங்கள் எத்தனையோ விதமாக நினைத்துக் கொள்ளலாம். ஆனால், இந்த பூமியைப் பொருத்தவரை அது தன்னைத்தானே ரீசைக்கிள் செய்துகொள்கிறது, தானாகவே மீண்டும் மீண்டும் மறுசுழற்சிக்கு ஆளாகிறது. அது உங்களை தூக்கி நிறுத்துகிறது, மறுபடியும் இழுத்துக்கொள்கிறது. தூக்கி நிறுத்திய அந்த சமயத்தில், இந்த சுழற்சி முழுவதையும் கடந்துபோகும் வாய்ப்பு உங்களுக்கு இருக்கிறது. ஆனால், அதை கடப்பதும் கடக்காததும் முழுவதுமாக உங்கள் கையில்தான் இருக்கிறது.

அது மட்டுமில்லை, பொருள் உடலின் எல்லைக்குள் மட்டுமே நீங்கள் வாழ்க்கையை உணரும்போது, மரணத்தைப் பார்த்து பயப்படுவதோடு மட்டுமில்லாமல், வாழ்க்கையைப் பார்த்தும் பயந்து, பாதுகாப்பை தேடுவீர்கள். வாழ்க்கையைப் பற்றிய இந்த பயத்தால்தான் மனிதர்கள் மரணத்தை நாடுகிறார்கள், ஆமாம். ஏனென்றால், நீங்கள் பாதுகாப்பை தேடும்போது மரணத்தையே நாடுகிறீர்கள். நீங்கள் கவனித்திருக்கிறீர்களா, தங்களுக்குள் பாதுகாப்பில்லாமல் உணர்பவர்கள் அப்படியே தங்கள் உடலை மடித்துக்கொண்டு சுருண்டுபோய் தூங்குவார்கள், கவனித்திருக்கிறீர்களா? அவர்கள் கருவறைக்குள் இருந்ததைப் போன்ற அந்நிலைக்கே மறுபடியும் செல்கிறார்கள். மறுபடியும் கருவறைக்குள் போகவேண்டும் என்பதே அவர்களுடைய தேவையாக இருக்கிறது. கருவறை என்பது உண்மையில் அம்மாவுக்குள் இல்லை; கருவறை என்பது உண்மையில் மரணத்தில்தான் இருக்கிறது. மனிதர்கள் தங்களுக்குள் பாதுகாப்பில்லாது உணரும்போது குடித்துவிட்டு தூங்க விரும்புகிறார்கள். ஏனென்றால், தூக்கம் என்பது மரணத்தின் சிறிய வெளிப்பாடு. மனிதர்கள் ஒரு மரக்கட்டையைப் போல் தூங்க விரும்புவதற்கு காரணம், அது வாழ்க்கையிலிருந்து விடுதலை கொடுக்கிறது. பாதுகாப்பிற்கான தேவை இருப்பதனால்தான் மரணத்தை நாடிடும் போக்கு உருவானது.

முதலில் இந்த பாதுகாப்பில்லாத உணர்வு எங்கிருந்து முளைத்தது? உங்களுடைய அடையாளம் ஒரு எல்லைக்குட்பட்டு இருக்கிறது. அதனால்தான் பாதுகாப்பில்லாமல் உணர்கிறீர்கள். எல்லையுடைய இந்த

உடம்புடன் உங்களை அடையாளப்படுத்திக் கொள்கிறீர்கள், அதனால்தான் இந்த பாதுகாப்பில்லாத உணர்வெல்லாம் ஏற்படுகிறது. உங்கள் உடல் என்பது நீங்கள் ஊதியிருக்கும் மெலிதான, உடையக்கூடிய ஒரு குமிழிதான். இந்தப் பிரம்மாண்டமான எல்லையற்ற பிரபஞ்சத்தில் நீங்கள் மிகச்சிறிய ஒரு தனிமனிதராக இருப்பதால்தான், மரணத்தைப் பற்றிய பயமே ஏற்படுகிறது. இந்த எல்லையற்ற தன்மையை உங்களுக்குள் நீங்கள் ருசித்திருந்தால் - உடல், மனக் கட்டுப்பாடுகளின் எல்லைக்கு அப்பாற்பட்டு உங்களை நீங்கள் உண்மையிலேயே உணர்ந்திருந்தால் - பயம் என்பதற்கு இடமே இல்லை.

ஆனால், மரணத்தைப் பார்த்து பயப்படும் ஏராளமான மனிதர்கள் மரணமே இல்லாத சிரஞ்சீவிகளாக ஆகிவிட பார்க்கிறார்கள். மரணத்தையே ஜெயிக்க பார்க்கிறார்கள். இது தவறான அணுகுமுறையாகும். உங்களுக்கு மரணத்தைப் பற்றி பயம் இருந்தால், நீங்கள், "இதற்கு அடிப்படைதான் என்ன?" என்று பார்க்கவேண்டும். இப்படியாக, உங்களுடைய எல்லைக்குட்பட்ட அடையாளத்தை கடந்துபோவது எப்படி என்று பார்க்கவேண்டும். அதை விட்டுவிட்டு. சிரஞ்சீவியாக இருப்பது எப்படி என்று முயற்சி செய்கிறீர்கள். இதனால் உங்கள் கவனம்தான் சிதறுமே தவிர, இதன்மூலம் நீங்கள் எங்கேயும் போய் சேரப்போவதில்லை.

உங்களுடைய வாழ்க்கை அனுபவம் இந்தப் பொருள் உடலுக்கு அப்பாற்பட்ட பரிமாணத்தில் ஆழமாக வேரூன்றியிருந்தால், உடலை விட்டுவிட்டுப் போவது மிகவும் சுலபமான விஷயமாக இருக்கும். ஆடைகளை மாற்றிக்கொள்ள வேண்டிய சமயத்தில் சும்மா அப்படியே அதை மாற்றிக் கொள்வீர்கள்தானே? இல்லை. உங்களுக்கு அது பிடிக்காவிட்டால், இதெல்லாம் போதும் என்று ஆகிவிட்டால், அதை விட்டுவிட்டு ஆடையே இல்லாமலும் நடந்துபோகலாம், அது உங்கள் விருப்பம். ஒன்றை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும்: இந்த உடல் தன்னுடைய முழு ஆயுளையும் முடித்துவிட்டது என்றால், எப்படியும் அது போய்விடும். உங்களுக்கு பிடிக்கிறதோ இல்லையோ, உங்களுக்கு சம்மதமோ இல்லையோ, அது நிச்சயம் போய்விடும். இந்த உடல் இருக்கும்வரை அதை நன்றாக கவனித்து பராமரிப்பது நிச்சயம் நம்முடைய பொறுப்புதான். ஆனால், உடல்நலக் கேட்டைப் பற்றியும், மரணத்தைப் பற்றியும் பயந்து நடுங்கிக் கொண்டிருந்தால், நீங்கள் இதை நன்றாக கவனித்துப் பராமரிக்க மாட்டீர்கள். உங்களுடைய பதற்றத்தில் இந்த உடலை அழித்துவிடுவீர்கள். "ஐயோ, இந்த உடலுக்கு என்ன ஆகுமோ?" என்ற பதற்றத்திலேயே உடலை அழித்துவிடுவீர்கள்.

உங்களுடைய மரண பயத்தை நேரடியாக எதிர்கொள்வதன் மூலம் மகத்தான தெளிவு பிறந்திட முடியும். ஒருவரின் வாழ்க்கையையே

பூரணமாக மாற்றிவிட முடியும். பல வருடங்களுக்கு முன் இப்படி நடந்தது: நான் ஒருமுறை பெங்களூரில் இருந்தேன். அப்போது காய்கறி மார்க்கெட்டுக்கு போனேன். எதையும் வாங்குவதற்காக அங்கே போகவில்லை. சும்மா அப்படியே காய்கறி மார்க்கெட்டுக்குள் நடப்பது எனக்கு பிடிக்கும். அப்படியே நடந்து போய்க்கொண்டு இருந்தேன். எதிர்பாராதவிதமாக அந்த காய்கறி வியாபாரியைப் பார்க்க நேர்ந்தது - அவரோ பிரகாசமாக ஒளிவீசிக் கொண்டிருந்தார். என்னால் நம்பவே முடியவில்லை. "இப்படிப்பட்ட மனிதரா காய்கறி விற்றுக் கொண்டிருக்கிறார்?" என்று நம்பவே முடியவில்லை. நான் அவரைப் பார்த்தேன், அவரும் என்னைப் பார்த்தார். உடனே எங்கள் இருவரின் பார்வையும் பிரிக்கமுடியாதபடி ஆனது. நான் சிரித்தேன், அவரும் சிரிக்க ஆரம்பித்தார். பிறகு நான் அவரிடம் போனேன், நாங்கள் பொதுவான விஷயங்களைப் பற்றி பேச ஆரம்பித்தோம். பிறகு நான் அவரிடம், "உங்களைப் போன்ற ஒரு மனிதர் இப்படி காய்கறிகள் விற்றுக்கொண்டு இருப்பது எப்படி?" என்று கேட்டேன். அவர், "நான் சும்மா என் வேலையைத்தான் இங்கே செய்து கொண்டிருக்கிறேன்," என்றார். நாங்கள் இன்னும் கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருந்தோம். கடைசியில் ஒருவழியாக என்ன நடந்தது என்று தெரிந்துகொண்டேன்.

அவர் ஒரு சாதாரண காய்கறி விற்கும் ஆளாகத்தான் இருந்திருக்கிறார். ஒருநாள் அவர் நோய்வாய்ப்பட்டார். தான் இறக்கப் போகிறோம் என்று நினைக்கும் அளவிற்கு நோய் வந்திருந்தது. ஆனால், ஒவ்வொரு நாளும் அது தள்ளிப்போய்க் கொண்டே இருந்தது. இன்னும் ஒருநாள், இன்னும் ஒருநாள் என்று போய்க்கொண்டிருந்தது - நான்கு மாதங்களுக்கு இப்படியே போனது - ஒவ்வொரு நாளும் அவர், "அவ்வளவுதான், இன்றோடு முடிந்தது!" என்று நினைப்பார். ஆனால், அந்த நாளின் முடிவில் அவர் இன்னும் உயிருடன் இருப்பார். இந்த நான்கு மாதங்களில், இப்படி இடைவிடாமல் மரணத்தின் கூடவே இருந்ததால், அவருக்குள் மகத்தான ஒன்று நிகழ்ந்தது. அவருடைய சக்திகள் முற்றிலும் வேறு ஒரு நிலைக்கு வெடித்து எழுந்தன - அவர் ஆனந்தம் மிக்கவராக ஆனார். தன்னுடைய உடல் இருக்குமா போய்விடுமா என்பதெல்லாம் அவருக்கு துளியும் ஒரு பொருட்டாக இல்லை. அந்தக் கவலை இல்லாமல் போனவுடன், அவர் உடலும் முழுமையாக சரியாகிவிட்டது.

அழியக்கூடிய இந்த உடலிலிருந்து விடுதலை அளிப்பதுதான் மரணம். "வெளியிலிருந்து சேகரித்த இந்த உடல்தான் நான்," என்ற தவறான புரிதல்தான் அறியாமைக்கெல்லாம் அடித்தளம். அதை உடைப்பதுதான் ஞானோதயம். இப்போது, அவர் திரும்ப காய்கறி கடைக்கே வந்துவிட்டார். பழையபடி காய்கறி விற்றுக் கொண்டிருக்கிறார். தான் ஆரோக்கியம் இல்லாமல் போனதால்தான், இப்படிப்பட்ட அற்புதம் தன் வாழ்க்கையில்

நடந்தது என்று அவர் பார்த்தார். அதனால் தன்னிடம் காய்கறி வாங்க வருபவர்களுக்கெல்லாம், "உங்களுக்கும் என்னைப்போல் உடல்நலம் சரியில்லாமல் போகட்டும்," என்று ஆசி வழங்குகிறார். அப்படியென்றால், நீங்கள் ஆரோக்கியம் இல்லாமல் போய்விட வேண்டும் என்று அவர் விரும்பவில்லை. எப்படியாவது நீங்களும் விழித்தெழ வேண்டும் என்றுதான் விரும்புகிறார். உடல் நலமாக இருக்கும்போது அப்படி நடக்காவிட்டால், உடல் நலமில்லாமல் போகும் போதாவது, உங்களுக்கு அது நிகழட்டுமே என்று விரும்புகிறார். ஏனென்றால், அவருக்கு அப்படித்தான் நடந்திருக்கிறது.

இப்படி எதுவாக இருந்தாலும் - நோய், மரணம் அல்லது சுற்றி நடக்கும் எந்தவிதமான துன்பமாக இருந்தாலும் - ஒன்று நீங்கள் அதை பயன்படுத்தி உங்களை விடுவித்துக்கொள்ள முடியும், இல்லை அதை பயன்படுத்தி சிக்கிக்கொள்ள முடியும். பெருமளவில் துன்பம் தரும் நிகழ்வுகளான நோய், மரணம் போன்றவை ஒரு பெரிய வாய்ப்பாக அமைகின்றன. சாதாரணமாக, வாழ்க்கை என்று எதை நினைத்துக் கொண்டிருக்கிறோமோ, அதன் எல்லைகளைத் தாண்டி அதற்கு அப்பால் பார்ப்பதற்கு இவை மகத்தான வாய்ப்பை ஏற்படுத்துகின்றன. இது உங்களுக்கே நடக்கவேண்டும் என்ற அவசியமில்லை; நீங்கள் புத்திசாலியாக இருந்தால், மற்றவர்களின் அனுபவத்தைப் பார்த்தாலே நீங்கள் கற்றுக்கொள்ள முடியும். கௌதம புத்தரைப் பற்றி கேள்விப்பட்டிருப்பீர்கள். ஒரே ஒரு நோயாளி, ஒரே ஒரு கிழவன், ஒரே ஒரு பிணம் - இதைத்தான் அவர் பார்த்தார். பார்த்த உடனே புரிந்துவிட்டது - "இதெல்லாம் எனக்கும் எந்த சமயத்தில் வேண்டுமானாலும் ஏற்படலாம். அப்படி இருக்கும்போது, இதிலிருந்து தூரமாக ஓடிப்போவதில் எந்த அர்த்தமும் இல்லை," என்று புரிந்துகொண்டார் கௌதம புத்தர்.

யாரோ ஒருவர் நோயில் இருந்தால் அல்லது இறந்து கொண்டிருக்கிறார் என்றால், நீங்கள் அவர்களுடன் உட்காரவேண்டும் என்பேன். உட்கார்ந்து உங்களுக்குள் பாருங்கள் - இது நீங்களாகக்கூட இருந்திருக்கலாம்; என்றைக்கு வேண்டுமானாலும் இது நீங்களாக இருக்க வாய்ப்பிருக்கிறது. இன்னொருவருக்கு வந்துள்ள அந்த கொடிய நோய் - அது நமக்கும் வரவேண்டும் என்று நமக்கு ஆசையில்லை. நமக்கு அது வேண்டும் என்று நாம் விரும்பவில்லை - ஆனால் என்றைக்கு வேண்டுமானாலும் அது நீங்களாக இருக்கமுடியும் என்று தெரிந்துகொள்ள வேண்டும். உங்கள் வயது பதினெட்டாக இருந்தாலும், எண்பதாக இருந்தாலும், இன்றைக்கோ நாளைக்கோ அது நீங்களாக இருக்க வாய்ப்பு உண்டு.

இப்போது, நீங்கள் ஏற்கனவே பயத்துடன் இருக்கிறீர்கள், மேலும் வாழ்க்கையின் இறுதிக்கட்டத்திலும் இருக்கிறீர்கள் என்றால் என்ன

செய்வது? அடிப்படையில் பிரச்சனை என்னவென்றால் - கோபத்திற்கு ஒரு தீர்வு இருக்கிறது, பயத்திற்கு இன்னொரு தீர்வு இருக்கிறது, மன உளைச்சலுக்கு இன்னொரு தீர்வு இருக்கிறது என்று நாம் நினைத்துக் கொள்கிறோம். அப்படி கிடையாது. இதற்கெல்லாம் சிகிச்சை என்றெல்லாம் ஒன்றும் கிடையாது. நான் சொல்வது மிகவும் சாதாரணமானதாக தோன்றலாம். ஆனால் அடிப்படையான உண்மை என்னவென்றால் - உங்கள் மனம் நீங்கள் சொல்வதை கேட்கமாட்டேன் என்கிறது, அவ்வளவுதான். மனிதர்களுக்கு இரண்டு இன்றியமையாத திறன்கள் இருக்கின்றன - தெளிவான ஞாபகத்திறன் மற்றும் தெளிவான கற்பனைத்திறன். பயம் என்றால், உங்களுடைய கற்பனை கட்டுப்பாடு இல்லாமல் அத்துமீறிப் போய்விட்டது என்று அர்த்தம். அதனால், விஷயம் பயத்தோடு போராடுவதைப் பற்றியது அல்ல. அதற்கு பதிலாக உங்களுடைய திறன்களை உங்கள் கைகளில் எடுத்துக்கொள்வது எப்படி என்று பார்க்கவேண்டும். உண்மையில், பயம் என்று ஒன்றுமே இல்லை. சொல்லப்போனால், அதை நீங்கள்தான் கற்பனையாக உருவாக்கிக் கொள்கிறீர்கள்.

பொதுவாகவே, தங்களுடைய பிழைப்பு நல்லபடியாகிவிட்டால், சாப்பாடும், தங்கும் வசதியும் நிச்சயமாகிவிட்டால் பயம் போய்விடும் என்று மனிதர்கள் நினைக்கிறார்கள். ஆனால், அது உண்மையில்லை என்று செல்வச் செழிப்பில் இருக்கும் சமுதாயங்கள் இன்று நிரூபிக்கின்றன. தாங்கள் வாழும் விதத்திலிருந்து அவர்கள் இதைத்தான் நமக்கு சொல்கிறார்கள்: "எங்களுக்கு எவ்வளவுதான் உணவு கிடைத்தாலும், எவ்வளவுதான் சௌகரியமாக தங்கும் வசதி இருந்தாலும், அதெல்லாம் ஒரு வித்தியாசத்தையும் ஏற்படுத்தாது. நாங்கள் எப்படியும் வேறு எதற்காவது பயத்தை அனுபவிப்போம்." ஏதோ ஒரு நாட்டில் போர் நடக்கிறது. அப்போது அந்த நாட்டின் பொதுமக்கள் அனுபவிக்கும் பயமும் நடுக்கமும் பயங்கரமானதாக இருக்கும். ஆனால், அங்கே குண்டு விழுவதில் ஒரு இடைவெளி கிடைக்கும்போது, அவர்கள் சந்தோஷமாக ஆடிப்பாடி விளையாடி மகிழ்ச்சியை அனுபவிப்பார்கள். ஏனென்றால், திடீரென்று அவர்களுக்கு வாழ்க்கையின் மதிப்பு புரிந்துவிட்டது. ஆனால், செல்வச்செழிப்பில் வாழும் சமுதாயங்களை பாருங்கள். அவர்களுடைய பயம் என்பது நீடித்து நிலைக்கும் நோயாக அவர்களை பாதிக்கிறது. ஒவ்வொரு நாளும், இரவும் பகலும் அந்த பயம் இருந்துகொண்டே இருக்கிறது.

பயத்திற்கு காரணம் ஒருவரின் சூழ்நிலை இல்லை. உங்களுடைய மனம் என்பது உங்கள் கைகளில் இல்லை, அவ்வளவுதான். இதுதான் காரணம், உங்கள் மனத்தை நீங்கள் எப்படி வைத்துக்கொள்கிறீர்கள்

என்பதுதான் அடிப்படை. துரதிர்ஷ்டவசமாக, பலரும் காரணத்தை புரிந்துகொள்ளாமல் விளைவை மட்டுமே கையாளப் பார்க்கிறார்கள். உங்களுக்குள் நிலவும் சூழ்நிலையின் ஒரு விளைவுதான் பயம். நீங்கள் பயத்தை கையாள முயற்சி செய்தால், அந்த விளைவை மட்டுமே கையாளப் பார்க்கிறீர்கள். ஆனால், செய்ய வேண்டியது அதுவல்ல. செய்ய வேண்டியது என்னவென்றால்: உங்களுடைய உடலையும் மனதையும் உங்கள் கைகளில் எடுத்துக்கொள்ள வேண்டும் - நம் எண்ணங்களை எப்படி உருவாக்குகிறோம், நம் உணர்ச்சிகளை எப்படி உருவாக்குகிறோம், உடலை எப்படி நடத்துகிறோம், நமக்குள் நடக்கும் ரசாயனத்தை எப்படி வைத்துக்கொள்கிறோம் - இதற்கெல்லாம் முழுமையான கவனம் செலுத்தவேண்டும்.

மரணத்தைப் பற்றி திறந்த விதமாக பேசுவதும், மரணத்தைப் பற்றி அதிகமாக தெரிந்துகொள்வதும், மரண பயத்தை கடந்துபோக உதவியாக இருக்கும் என்று பலர் நினைக்கிறார்கள். அது ஓரளவுக்குத்தான் உண்மை. அதை நீங்கள் செய்யும் விதத்தில்தான் அதன் பலன் இருக்கிறது. இது எல்லோருக்கும் வேலை செய்யுமா என்று தெரியாது. யாரோ ஒருவர் இறந்து கொண்டிருப்பவர்களை பார்த்து நடுங்கி பீதி அடைய வாய்ப்பிருக்கிறது. இன்னொருவர், பலரும் இறந்துபோவதைப் பார்த்து இரக்கம் இல்லாதவராக மாறிடவும் வாய்ப்பிருக்கிறது. இதுபோல் ஏராளமானவர்கள் இருக்கிறார்கள். சுடுகாடு, இடுகாடு, சவக்கிடங்கு ஆகிய இடங்களில், பெரும்பாலும் அங்கிருக்கும் ஆளுக்கு இதெல்லாம் ஒரு பொருட்டாகவே இருக்காது. அவர் தன்னையே சிரஞ்சீவி என்று நினைத்துக் கொண்டிருக்கிறார். அதனால், விஷயம் உங்கள் விழிப்புணர்வையும், உங்களுடைய கண்ணோட்டத்தையும் பற்றியதுதான். நீங்கள் அதற்கு தயாராக இருந்தால், ஏதோ ஒருவிதத்தில் அதை உணர முடிந்தால், அப்போது அதனால் நீங்கள் பயனடைய வாய்ப்பிருக்கிறது. ஆனால், பலரும் உணர்ச்சி மறத்து போனவர்களாகி விடுகிறார்கள். இது எப்போதும் அந்த தனிமனிதரை பொருத்துத்தான் இருக்கிறது.

சரி, மரணம் ஏற்படும் தருணத்தில் கூட நம் உடலையும் மனத்தையும் நம் கையில் வைத்துக்கொள்ள முடியுமா? இப்போதிலிருந்தே படிப்படியாக அதன்மேல் ஒரு ஆளுமையை நாம் கொண்டுவர முடியுமா? அதற்காக ஒருவர் செய்யக்கூடிய பயிற்சிகள் இருக்கிறதா? அதற்காக நம்மைச் சுற்றி நாம் ஒரு சூழலை உருவாக்க முடியுமா? நீங்கள் செய்யக்கூடிய ஒரு விஷயம் என்னவென்றால் - உங்களுடைய மரணத்தைப் பற்றி உங்களுக்குள் ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். தினமும் இதற்காக ஐந்து நிமிடங்கள் செலவிடுங்கள் - உங்கள் வாழ்க்கை நிலையற்றது, நீங்கள் அழியக்கூடியவர், இன்றுகூட உங்களுக்கு மரணம் ஏற்படலாம்

- என்று ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். இந்தளவுக்கு நினைவுபடுத்திக் கொண்டாலே, உங்களுக்குள் பல அற்புதமான விஷயங்கள் நிகழமுடியும்.

ஞானியும், ஆன்மீக குருவுமான குர்ஜிஃப், ஐரோப்பாவில், பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். அவர் வாழ்ந்த காலத்தில், அவரை விஷமக்கார ஞானி என்று செல்லமாக அழைத்தார்கள். ஏனென்றால், அவருடைய செயல்முறைகள் திடுக்கிடும்படி இருக்கும் - மனிதர்களுடன் அவர் செய்யும் செயல்கள் மிகையானதாகவும், சிலசமயம் பித்துக்குளித் தனமாகவும் காரண அறிவுக்கு தோன்றும். அவர் உலகத்திற்கு ஒரு தீர்வை வழங்கினார்: "இந்த உலகம் முழுவதும் ஞானமடைய வேண்டுமென்றால், நாம் ஒவ்வொருவரின் உடலுக்குள்ளும் ஒரு புதிய உறுப்பை பொருத்தவேண்டும். இந்த உறுப்பு தினமும், "நீங்களும் இறந்து விடுவீர்கள்," என்று உங்களுக்கு பல தடவை ஞாபகப்படுத்திக்கொண்டே இருக்கும். இப்படி தினமும் தொடர்ச்சியாக உங்களுடைய அழியக்கூடிய இயல்பைப் பற்றி - நீங்கள் இன்றைக்கு கூட இறந்திட வாய்ப்பிருக்கிறது என்று நினைவுபடுத்திக்கொண்டே இருந்தால், உங்களுடைய மரண பயம் மறைந்துபோகும்.

நாம் மக்களுக்கு ஷூன்ய தியானத்தில் தீட்சை வழங்குகிறோம். இது ஒன்றும் அவர்களுக்குள் பொருத்தப்பட்டுள்ள உறுப்பு கிடையாது. ஆனால் இதுவும் மரணத்தைப் பற்றி உங்களுக்கு ஞாபகப்படுத்துகிறது. நீங்கள் தினமும் ஷூன்ய தியானத்திற்கு உட்காரும்போது உங்களுடைய "நான்" எனும் தன்மை கரைந்துபோய், உங்களுடைய இருப்பு மட்டுமே இருக்கிறது. தியானத்தின்போது "நான்" என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கும் அத்தனையும் ஒன்றுமில்லாமல் போய்விடும். இது நீங்கள் இறப்பதை போலத்தான். நீங்கள் கண்களை திறக்கும்போது மறுபடியும் எல்லாம் அங்கே இருக்கிறது. இப்படி ஒவ்வொரு நாளும், ஒரு நாளைக்கு இரண்டு முறை நீங்கள் விழிப்புணர்வுடன் இறக்கிறீர்கள். இதை விழிப்புணர்வுடன் பயிற்சி செய்து வந்தால், நிஜமாகவே இறக்கும் நேரம் வரும்போது, அது ஒன்றும் பெரிய விஷயமாக தோன்றாது. இது உங்களை மரண பயத்திலிருந்து விடுவித்திடும்.

இன்னும் ஒரு சில பயிற்சிகளும், வழிமுறைகளும் இருக்கின்றன. அவை உங்களுக்குள் இருக்கும் சக்தியின் இரண்டு பரிமாணங்களான *ஈடா* மற்றும் *பிங்களா*[6] ஆகிய இரண்டையும் தெளிவாக வித்தியாசப்படுத்திடும்.

---

6 ஈடா, பிங்களா நாடிகள், உடலின் இரண்டு முக்கிய பிராணப் பாதைகள். இவை பிராண சக்தியின் பெண்தன்மை, ஆண்தன்மை ஆகிய பரிமாணங்களையும் குறிக்கின்றன. சுஷூம்னா நாடி மூன்றாவதான மத்திய பிராணப் பாதையாகும். இந்த நாடி திறப்பதை, ஆன்மீக விழிப்பு ஏற்படுவதன் அறிகுறியாக பார்க்கப்படுகிறது.

இப்படி இருமைகளாகிய இந்த சக்திகளை உங்களுக்குள் தெளிவாக தனித்தனியாக உணரும்போது, உங்களால் சுஷூம்னா என்பதை உணரமுடியும். சுஷூம்னா என்பது இந்த இருமைகளுக்கு அப்பாற்பட்ட சக்தியாகும். இப்படி இருமைகளற்ற தன்மையை அனுபவத்தில் உணர்ந்திடும்போது, வாழ்க்கை-மரணம் என்பதின் இருமை மறைந்து, ஒன்றாகிவிடும். இப்படி இரண்டாக காணப்படும் கற்பனைத் தோற்றமும், அதில் ஒன்றுடன் மட்டும் பற்றுவைத்து சிக்கிப் போவதும்தான் மரண பயத்திற்கு காரணம் - உங்களுக்கு பரிச்சயமான அந்த ஒன்றிலிருந்து உங்களைப் பிரித்து இழுத்துக்கொண்டு போய்விடுமோ என்ற பயம்.

பஞ்ச பிராணங்களின் மேல் ஒரு ஆளுமை கொண்டுவருவதும், பஞ்ச பூதங்களின் மேல் ஒரு ஆளுமை உருவாக்கிக்கொள்வதும் கூட, வாழ்க்கைக்கும் மரணத்திற்கும் இடையே உள்ள வித்தியாசத்தை போக்கிவிடும். வாழ்க்கையும் மரணமும் ஒரே விஷயத்தின் இரண்டு பரிமாணங்கள்தான். வாழ்க்கை, மரணம் - இந்த இரண்டிற்கும் நடுவில் உள்ள கோடு அழிக்கப்படும்போது, நீங்கள் விழிப்புணர்வுடன் இந்த இரண்டோடும் தொடர்புகொள்ள முடியும். இப்போது பயம் என்பதற்கு இடமே இருக்காது.

சரி, இறப்பதைப் பற்றி எப்போதும் பயந்து கொண்டிருப்பவர்களின் மரணம் எப்படி இருக்கும்? அது நல்லமுறையில் இருக்குமா அல்லது பயங்கரமாக இருக்குமா? சொல்லப்போனால் அது இரண்டு விதமாகவும் இருக்கமுடியும். மரணத்தைப் பற்றி எப்போதுமே ஒரு பயத்தோடு வாழ்ந்தவர்கள், அது உண்மையிலேயே வந்த சமயத்தில் அதை சும்மா அப்படியே கடந்து போக வாய்ப்பிருக்கிறது. நிஜத்தில் அந்தக் கடைசி கணம் வரும்போது அவர்கள் எந்த பிரச்சனையும் இல்லாமல் சும்மா அப்படியே போய்விடலாம். அதேசமயம், தங்களை பெரிய தைரியசாலி என்று நினைத்துக் கொண்டிருப்பவர்கள், அந்த நேரம் வரும்போது என்ன செய்வதென்று புரியாமல் முழிக்கவும் வாய்ப்பிருக்கிறது. இதற்கு பல காரணங்கள் இருக்கின்றன. ஒருவருடைய கர்மாவும், அதுவரை அவர் வாழ்ந்து வந்த விதம் எப்படிப்பட்டது என்பதும் நிச்சயம் இதில் ஒரு பங்கு வகிக்கும். அதேசமயம், அந்த மரணம் எந்த வடிவத்தில், எந்த மாதிரி சூழ்நிலையில் வந்தது என்பதும் முக்கியம். சாதாரணமாக, மரணத்தைப் பற்றி எந்தவிதமான கவலையும் இல்லாத ஒருவர்கூட நடுங்கிப் போகும்படி சிலவிதமான சூழ்நிலைகள் அமையலாம். இன்னும் சில சூழ்நிலைகளில், அவர்கள் அந்த மரணத்தை ஏற்றுக்கொள்ள அந்த சூழ்நிலையே காரணமாக அமையலாம். அதனால்தான் நமது பாரத கலாச்சாரத்தில், எப்போதுமே இறந்து கொண்டிருக்கும் ஒருவரை மிகுந்த அக்கறையோடும் மதிப்போடும் கவனித்துக்கொள்ள வேண்டும்

என்று சொன்னார்கள். அதேபோல், அவர் இறப்பதற்கு உகந்த சரியான சூழ்நிலையை உருவாக்க வேண்டும் என்றும் வலியுறுத்தி சொன்னார்கள். இதைப் பற்றி இந்த புத்தகத்தில் பிறகு பார்த்திடுவோம்.

## முதுமையில் எப்படி வாழவேண்டும்?

மனிதனைத் தவிர உலகில் உள்ள ஒவ்வொரு பிராணிக்கும் நேர்த்தியுடன், பாங்குடன் இறப்பது எப்படி என்று புரிந்துள்ளது. நீங்கள் ஒரு காட்டில் நடந்துபோனால் - அது விலங்குகள் அதிகமாக இருக்கும் காடாக இருந்தாலும் - எங்குமே ஒரு பிராணியின் இறந்த உடல் சும்மா அப்படியே கிடப்பதை பார்க்க முடியாது, வேறு ஒரு பிராணியால் அது வேட்டையாடப்பட்டு இருந்தால் தவிர. சாதாரணமாக, ஒரு இறந்த உடல் சும்மா அப்படியே கிடப்பதை பார்க்கமுடியாது. சொல்லப்போனால், இதற்காக காட்டுக்குப் போவானேன், நகரத்திலேயே இதை கவனிக்க முடியும். இன்று நகரங்களில் பறவைகள் என்றால் பெரும்பாலும் அது காக்கைகள்தான். எங்குமே ஒரு காக்கா சும்மா அப்படியே இறந்து கிடப்பதை பார்க்கமுடியாது. அவர்கள் எல்லோருக்குமே மரணம் வரும்போது நேரம் வந்துவிட்டது என்று புரிகிறது. அதனால், சத்தமில்லாத ஒரு இடத்திற்கு போய்விடுவார்கள். அங்கே பாங்குடன் உயிரை விடுவார்கள். மனிதன் மட்டும்தான் இதைப் பற்றி ஒன்றுமே அறியாதவனாக வாழ்கிறான். நயமில்லாத விதங்களில் இறந்து போகிறான். இந்தப் போக்கு நாளுக்கு நாள் மோசமாகிக்கொண்டே வருகிறது. வாழும்போது எப்படி வாழவேண்டும் என்று தெரியாதவர்களுக்கு, மரணம் வரும்போது எப்படி உயிர்விட வேண்டும் என்பது ஒரு பிரச்சனையாக இருக்கும், இது நிச்சயம்.

முதுமை வரும்போது வாழ்க்கையின் அனுபவம் முழுவதும் உங்களுடன் இருக்கிறது. அதனால், பலவிதங்களில் முதுமை என்பது ஒரு வரப்பிரசாதமாக அமையமுடியும். மரணத்தை நோக்கிப் போய்க்கொண்டிருக்கும்போது முதுமை ஒரு வாய்ப்பாக அமைகிறது. உங்களுடைய சக்தி உயிர்ப்பு குன்றிப் போகிறது, இந்த உடலை உதிர்த்திடும் நிலையை நோக்கிப் போகிறது - இந்த சமயத்தில் நீங்கள் உயிரின் தன்மையைப் பற்றிய விழிப்புணர்வை அடைவது மிகவும் சுலபம். நீங்கள் குழந்தையாக இருந்தபோது எல்லாமே அழகாகத்தான் இருந்தது. அப்படியிருந்தும் நீங்கள் வளரவேண்டும் என்று மிகவும் ஆர்வமாக இருந்தீர்கள், வாழ்க்கையை அனுபவிக்க வேண்டும் என்று விரும்பினீர்கள். நீங்கள் இளைஞர் ஆனவுடன், ஹார்மோன்கள் உங்களுடைய புத்திசாலித்தனத்தை களவாடிவிட்டன. நீங்கள் என்ன செய்தாலும், தெரிந்தும் தெரியாமலும் அந்த திசையில்தான் உங்களை

தள்ளியது. ஹார்மோன்களின் இந்த ஆக்கிரமிப்பைத் தாண்டி போகும்படி தங்களுடைய புத்தியை உயர்த்திக்கொள்ளும் திறன் மிகச் சிலருக்கே இருக்கிறது. அவர்களால் வாழ்க்கையை தெளிவாக பார்க்கமுடிகிறது. மற்றவர்கள் எல்லோரும் அந்த வலையில் சிக்கிக்கொள்கிறார்கள். இளமையில், உடல் மிகுந்த உயிர்ப்புடன் இருக்கும்போது உங்களுக்குள் விழிப்புணர்வை உருவாக்கிக்கொள்வது மிகவும் கஷ்டமானது. உடம்புடன் அந்தளவுக்கு அடையாளப்பட்டு இருக்கிறீர்கள். அதனால் அதைத் தாண்டி எதையுமே பார்க்க முடிவதில்லை.

எப்படியோ, வயது ஆக ஆக இந்தப் போக்கு குறைகிறது. உடலுக்கு உயிர்ப்பு குன்றிடும்போது, உங்களுடைய விழிப்புணர்வு மேலும் மேலும் அதிகமாகிறது. ஏனென்றால், இதற்குமேல் அந்த உடலுடன் அடையாளப்பட முடிவதில்லை, அதன் உயிர்ப்புதான் குறைந்து வருகிறதே. நீங்கள் முதுமைக்கு வரும்போது உங்களுடைய ஆர்வங்கள் ஏக்கங்கள் எல்லாம் முடிந்துபோகிறது, வாழ்க்கையின் அனுபவம் முழுவதும் உங்களுடன் நிற்கிறது. இப்போது மறுபடியும் நீங்கள் ஒரு குழந்தையைப்போல ஆக முடிகிறது. அதேசமயம் வாழ்க்கையின் அனுபவமும், விவேகமும் உடன் இருக்கின்றன. இது உங்களுடைய வாழ்க்கையின் மிகவும் பயனுள்ள பகுதியாக, மிகவும் அற்புதமான பகுதியாக அமைய முடியும். உங்களுடைய புத்துணர்வு செயலில் நன்றாக அக்கறை காட்டினால் முதுமை என்பது வாழ்க்கையின் அதிசயமான பகுதியாக அமையமுடியும். துரதிர்ஷ்டவசமாக, பெரும்பாலான மனிதர்கள் தங்கள் முதுமையை பாதிப்பாக உணர்கிறார்கள். அவர்கள் தங்களுடைய புத்துணர்வில் அக்கறை எடுக்காததுதான் இதற்கு காரணம். வயதான பிறகு முகத்தில் ஒரு புன்னகையுடன் இருப்பவர்கள் மிகச் சிலர்தான், மற்றவர்களால் சிரிக்கக்கூட முடியாது. வாழ்க்கையில் அவர்களுக்குத் தெரிந்ததெல்லாம் இந்த உடல் மட்டும்தான், அதனால்தான் அப்படி இருக்கிறார்கள். உடலுக்கு உயிர்ப்பு குறைய ஆரம்பித்தவுடன் அவர்கள் மனம் நொந்து விரக்தியடைகிறார்கள். உடலில் ஏதோ நோய் வந்திருக்கவேண்டும் என்ற அவசியமில்லை, கொடிய புற்றுநோய் வந்திருக்க வேண்டிய அவசியமில்லை. ஆனால், நீங்கள் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியிலும் வயது உங்களிடம் பேசுகிறது, "இது நிரந்தரமானது கிடையாது," என்று சொல்கிறது. உடலுக்கு அப்பாற்பட்ட பரிமாணங்களை அனுபவத்தில் உணர்ந்திருந்தால், அந்த அனுபவத்தில் வேரூன்றியிருந்தால், அப்போது உடலை கையாள்வது சுலபமாகிடும். அப்போது முதுமையும், ஏன் மரணமும்கூட, சந்தோஷமான அனுபவமாக இருந்திடும். இதற்கு, எப்போது உடலை விடுவது என்று தெரியவேண்டும். அதை பாங்குடன் விடுவது எப்படி என்றும் தெரியவேண்டும்.

அடுத்த ஒன்றிரண்டு வாரங்களில் மரணம் நிகழ்வது நிச்சயம் எனும்போது விழிப்புணர்வை அடைவது மிகவும் சுலபமாகி விடுகிறது. ஒரு சில விஷயங்கள் இருக்கின்றன, அந்த சமயத்தில் அதை செய்தால் விழிப்புணர்வை அதிகரிக்க முடியும். ஒருவர் அப்படியே படுத்துக்கொள்ள வேண்டும். இப்போது உங்களுக்கு வேறு எதுவும் தெரியாது, வெளியில் இருந்து எந்த உதவியும் இல்லை எனும்போது சும்மா அப்படியே பார்க்க வேண்டும் - "எதெல்லாம் நான் இல்லை," என்று பார்க்க வேண்டும் - இதுதான் இப்போது உங்களுக்கு சிறந்தது. "எது நான்" என்று பார்க்கமுடியாத போதிலும், "எதெல்லாம் நான் இல்லை" என்று பார்ப்பது எளிமையானதாக இருக்கும். இப்போது, உடலில் உயிர்ப்பு மிகவும் குன்றிவிட்டது, ஆனால் உயிர் இன்னும் இருக்கிறதே. அதனால், "நான் என்பது எது, என் உடல் என்பது எது" என்று வித்தியாசப்படுத்தி பார்க்க முடியும். இப்படி உங்களையும் உடலையும் வேறுபடுத்தி பார்ப்பதிலேயே உங்கள் நேரத்தை கழிப்பது நல்லது. நீங்கள் முயற்சியின்றி உடலை விட்டுப் பிரிவீர்கள்.

தினசரி வழக்கத்தில் கூட, இந்த விழிப்புணர்வை ஒருவர் தன்னுடைய வாழ்க்கையின் அங்கமாக்கிக் கொள்ளலாம். பசிக்கும்போது சாப்பிட வேண்டும் என்று தோன்றுகிறது, அப்போது உணவை பத்து நிமிடங்களுக்கு ஒத்தி வையுங்கள். உங்கள் பசியை கவனியுங்கள். வேறு ஏதோ வேலையில் மும்முரமாகி விடாதீர்கள். விழிப்புணர்வுடன் உங்கள் உணவை கொஞ்ச நேரம் ஒத்திவைத்து காத்திருங்கள். நீங்கள் வழக்கமாக சாப்பிட உட்காரும்போதுகூட, உணவை பார்க்கும்போது உங்களுடைய பசியை விழிப்புணர்வுடன் கவனியுங்கள். இரண்டு நிமிடங்கள் மட்டும் இப்படிச் செய்யுங்கள். இந்த மாதிரி எளிமையான முறைகளால் பொருள் உடலுக்கும், "தான்" என்ற உணர்வுக்கும் உள்ள வேறுபாடு ஆழமாகவும், உறுதியாகவும் நிலைபெறும். இதைவிட நுட்பமான சிறந்த முறைகளும் நிச்சயமாக இருக்கின்றன. மற்ற நேரங்களை விட பசியுடன் இருக்கும் நேரத்தில், "இந்த உடல் என்பது வெளியிலிருந்து சேர்த்ததுதான்" என்ற புரிதல் மிகவும் அப்பட்டமாக இருக்கும். அதனால்தான் எல்லா பாரம்பரியங்களிலும் விரதத்திற்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுத்திருக்கிறார்கள்.

குடும்பத்தினர் மத்தியில் உயிர் விடக்கூடாது என்று இந்தியாவில் எப்போதுமே சொன்னார்கள். இங்கே காட்டிற்குப் போய் உயிர் விடுவதுதான் வழக்கமாக இருந்தது. இதற்கு வானப்பிரஸ்த ஆசிரமம் என்று பெயர். அதாவது, வாழ்க்கையில் குறிப்பிட்ட கட்டம் வந்தவுடன் குடும்பத்திலிருந்தும் சமூகத்திலிருந்தும் விலகி விடைபெற்று, காடுகளுக்கோ ஆசிரமங்களுக்கோ குடியேறுவார்கள். அங்கே போய் சந்தோஷமாக

வாழ்ந்தார்கள். இந்த நோக்கத்திற்காகவே அமைக்கப்பட்ட ஆசிரமங்கள் இருந்தன. இன்றைக்கோ துரதிர்ஷ்டவசமாக, முதுமை வந்தவுடன் "ஹாஸ்பிட்டல் ஆசிரமம்" என்று ஆகிவிட்டது. காலம் வந்தவுடன் உயிரை விடுவதற்கு சிறந்த இடம் திறந்த வானத்திற்கு கீழேதான், ஹாஸ்பிட்டல் இல்லை. மலைகளுக்குள் போய், தனியாக அங்கே உட்கார்ந்து உயிர்விட நீங்கள் விரும்பினால் அது நல்லதுதான். ஒரு காலத்தில் இந்த வழக்கம் பரவலாகவே இருந்தது. மகாபாரதத்தின் போது அரசராக இருந்த திருதராஷ்டிரர் கூட வானப்பிரஸ்தம் எடுத்தார். குருக்ஷேத்திர யுத்தத்திற்குப் பிறகு அவரும், அவருடைய அரசி காந்தாரியும், தம்பியின் மனைவி குந்தியும் காட்டிற்கு போய்விட்டார்கள். சஞ்சயன் மட்டுமே உதவிக்கு இருந்தார். அவர்கள் அனைவருக்கும் வயதாகிவிட்டது. அதனால், மாளிகையில் உயிர்விடுவதை விட காட்டுக்குப் போய் உயிர்விடலாம் என்று முடிவெடுத்தார்கள்.

திருதராஷ்டிரருக்கு பார்வை கிடையாது, மிகுந்த பாரபட்சத்துடன் பல விதங்களில் முட்டாள்தனமாகவும் வாழ்ந்தவர். அப்படியிருந்தும், தன்னுடைய மரணத்தை புத்திசாலித்தனமாக நிகழ்த்திக்கொள்ள வேண்டும் என்ற விழிப்புணர்வு அவருக்கு இருந்தது. இந்த புத்திசாலித்தனம் பாரம்பரியத்திலேயே ஊறியது. இதைத்தான் *சம்ஸ்காரம்* என்று சொல்கிறோம். இன்றைய உலகில் இது காணப்படுவதில்லை. குந்தி தன்னுடைய வாழ்நாள் முழுவதும் எல்லாவிதமான கஷ்டங்களையும் அனுபவித்திருந்தாள். கடைசியாக இப்போதுதான் அவளுடைய மகன்கள் போரில் வெற்றிபெற்று அரசர்களாக இருக்கிறார்கள். இப்போதாவது அவள் மாளிகையை சந்தோஷமாக அனுபவித்து சௌகரியங்களுடன் இறந்து போயிருக்கலாம். ஆனால், அவளும் காட்டிற்குப் போய்தான் உயிர்விட வேண்டும் என்று முடிவெடுத்தாள். இதுதான் உயர்ந்த விவேகம். உண்மையைத் தேடும் பாரம்பரியமாக இருந்ததால் அந்த காலத்தில் இது வழக்கமாக இருந்தது.

ஒருநாள் இந்த நான்கு பேரும் மிகவும் சரிவாக இருந்த ஒரு மலையின் மேல் ஏறிக்கொண்டிருந்தார்கள். அப்போது காட்டுத்தீ ஏற்பட்டது. மூன்று பேருக்கும் வயது முதிர்ந்துவிட்டது, ஓடிப்போகவோ தீயுடன் போராடவோ முடியாது. அதனால், அந்த அக்னிக்கு தங்களை அர்ப்பணித்துக்கொள்ள முடிவு செய்தார்கள். திருதராஷ்டிரர் சஞ்சயனிடம், "இதுவரை நீ எனக்கு சிறப்பாக பணிவிடை செய்திருக்கிறாய். ஆனால் இன்னும் உனக்கு வயது இருக்கிறது, நீ போய்விடு. நாங்கள் மூவரும் அக்னிக்கு எங்களை அர்ப்பணிக்கிறோம்," என்றார். சஞ்சயன் போவதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. நான்கு பேருமே சுயவிருப்பத்துடன் காட்டுத்தீயில் எரிந்துபோனார்கள்.

திருதராஷ்டிரரும் மற்ற மூன்று பேரும் செய்தது மிகையானதாக இருக்கலாம். ஆனால், பொது ஜனங்கள் வானப்பிரஸ்த ஆசிரமம் எனும் முறையாக வகுக்கப்பட்ட பாதையில் நடந்தார்கள். அது ஒவ்வொருவருக்கும் தகுந்த முறையில் வரையறுக்கப்பட்டிருந்தது. எல்லோருக்கும் நன்றாக வேலை செய்தது. வானப்பிரஸ்த ஆசிரமத்தை இன்னும் முறைப்படுத்தப்பட்ட விதத்தில் மேற்கொள்ள முடியும்.

## நம் முன்னோர்களின் விவேகம்

பண்டைய பாரதத்தில், தம்பதியர்கள் வானப்பிரஸ்த ஆசிரமம் ஏற்றுக் கொள்ளும்போது, பெரும்பாலும் அவர்கள் சேர்ந்தே வெளியேறுவார்கள். அடிப்படைத் தேவைகள் மட்டுமே இருக்கும்படி மிகவும் எளிமையாக வாழ்வார்கள். மரணம் வரை இப்படியே இருப்பார்கள். அவர்களுடைய மரணம் நிச்சயமாக நல்லமுறையில் ஏற்படவேண்டும் என்பதற்காக இப்படி செய்தார்கள். நவீன உலகின் இன்றைய மனிதர்களுக்கு இது மிகவும் கடுமையானதாகவும் அர்த்தமற்றதாகவும் தோன்றலாம் - அவர்கள் இளமையாக, ஆரோக்கியமாக எதையும் தாங்கும் உடல்நிலையில் இருந்தபோது, நன்றாக கட்டப்பட்ட வீடுகளில் எல்லா சௌகரியங்களுடன் வாழ்ந்திட அனுமதிக்கப்பட்டார்கள். அதோடு சமூகத்திலும் இருந்தார்கள். இப்போது முதுமை வரும்போது, நோயுடன் உடலும் தளர்ந்துபோய் இருக்கும்போது, எல்லாவற்றையும் விட்டுவிட்டு காட்டுக்கு போய் வாழவேண்டும், உணவு தேட வேண்டும், இது அர்த்தமற்றதாகத்தான் தோன்றும். ஆனால், ஆழமாக பார்த்தால் இந்த வழக்கத்தில் ஏராளமான விவேகம் இருக்கிறது என்று புரியும். தான் விரும்பிய நேரத்தில் விரும்பியபடி உடலைவிடும் வல்லமை இல்லாதவர்களுக்கு கூட, மரணம் நிச்சயமாக நல்லமுறையில் நடக்கும்படி செய்தார்கள். அதற்கான ஒரு எளிமையான வழிதான் இது.

வர்ணாஸ்ரம முறையில் இருந்துதான் இந்த வழக்கம் உருவானது. இந்த முறையில் மனிதனின் இயல்பை ஆழமாக கவனித்து உணர்ந்திருந்தார்கள். மனித வாழ்வின் எல்லா அம்சங்களுக்கும் முக்கியத்துவம் தந்து இதை உருவாக்கினார்கள் - ஒருவரின் தேவைகள், திறமைகள், அவருக்கான சாத்தியங்கள் - இப்படி எல்லாவற்றையும் உள்ளடக்கி வழிகாட்டும் ஒரு முறையை உருவாக்கினார்கள். தனிமனிதனுக்கும் சமூகத்துக்கும் நிச்சயமாக நன்மை ஏற்படும்படி இதை அமைத்தார்கள். அதற்கேற்ற மாதிரி வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திலும் கடைபிடிக்க வேண்டிய கொள்கைகளை அமைத்தார்கள். அப்போது ஒருவர் செய்யும் வேலையின் இயல்பையும் நிர்ணயித்தார்கள்.

இந்த கால நிலைகளை கடைப்பிடிப்பது இறுக்கமான விதிகளாக அமையவில்லை. ஒவ்வொரு காலகட்டத்திலும் நாம் எதற்கு முக்கியத்துவம் தரவேண்டும் என்று வழிகாட்டும் பரவலான குறிப்புகளாகவே இருந்தது. இதெல்லாமே கட்டாயம் என்றும் இல்லை. ஒருவரின் ஆர்வத்திற்கேற்ப ஒன்றிரண்டு நிலைகளை தாண்டி அடுத்த நிலைக்கும் போக சுதந்திரம் உண்டு.

| ஆசிரமம்/ பருவம் | வயது (வருடங்கள்) | விளக்கம் | குறிக்கோள் |
|---|---|---|---|
| பாலவஸ்தா (குழந்தைப் பருவம்) | 0 - 12 | உடலையும் மூளையையும் அதன் முழுத்திறனுக்கு வளர்ப்பதே இதன் நோக்கம். இந்தப் பருவத்தில் சாப்பிடுவது, விளையாடுவது, தூங்குவது ஆகியவைக்கு முக்கியத்துவம் தரப்படுகிறது | உடலை முழுமையாக வளர்ப்பது |
| பிரம்மச்சர்யம் (மாணவப் பருவம்) | 12 - 24 | இந்தக் காலகட்டத்தில் மாணவர் தன் வீட்டிலிருந்து வந்து குருவுடன் தங்குவார். ஆன்மீக விஷயங்கள், உலகியல் விஷயங்கள் இரண்டை பற்றியும் அறிந்துகொள்வார். மாணவருக்கு இரண்டு கடமைகள் இருக்கிறது: வாழ்க்கைக்குத் தேவையான திறன்களை கற்றுக்கொள்வது, தன் ஆசானிடம் அசைவற்ற பக்தியுடன் இருப்பது | அறிவு |
| க்ருஹஸ்தா (குடும்ப வாழ்க்கை) | 24 - 48 | இந்தக் காலகட்டத்தில ஒருவர் பொருள் சம்பாதிப்பதிலும், குடும்பத்தை உருவாக்கி பராமரிப்பதிலும் கவனம் செலுத்துவார் | செல்வமும் வாரிசும் |

| ஆசிரமம்/ பருவம் | வயது (வருடங்கள்) | விளக்கம் | குறிக்கோள் |
|---|---|---|---|
| வானப் பிரஸ்தம் (குடும்ப வாழ்வில் இருந்து விலகுவது) | 48 - 60 | இந்த காலகட்டத்தில் ஒருவர் தன்னுடைய குடும்ப பொறுப்புகளையெல்லாம் அடுத்த தலைமுறையிடம் ஒப்படைத்துவிட்டு, உலக விஷயங்களிலிருந்து விலகிடுவார். பெரும்பாலும் தன்னுடைய நேரத்தை ஆன்மீக ஞானத்தை பெறுவதிலேயே செலவழிப்பார். | ஞானம் |
| சன்னியாசம் (துறவுநிலை) | 60+ | இப்போது பொருளுக்கான ஆசைகள், தன்னுடைய முன்முடிவுகள் எல்லாவற்றையும் துறந்து முழுமூச்சாக தன்னை ஆன்மீக நோக்கில் அர்ப்பணிப்பார். | முக்தி |

வானப்பிரஸ்த ஆசிரமம் என்றால் வயதான காலத்தில் கடுமையான கஷ்டங்களை எதிர்கொள்ள வேண்டும் என்று கிடையாது. அப்படி செய்வதில் அர்த்தமில்லை. கடினமான சூழ்நிலைகளில் யார் வேண்டுமானாலும் உடைந்துபோக வாய்ப்பிருக்கிறது. அடிப்படையில், வானப்பிரஸ்த ஆசிரமத்தின் நோக்கம் - நான்கு சுவர்கள் உடைய ஒரு இடத்திலிருந்து வெளியேறுவதுதான். நான்கு சுவர்களுக்குள் வாழ்ந்திட உங்களுக்கு விருப்பமில்லை. ஏனென்றால், அந்த நான்கு சுவர்களுக்குள் இருக்கும்போது ஒரு மாயபிம்பம் உருவாகிறது. தான் அழிவே இல்லாதவர் போன்ற உணர்வு ஏற்படுகிறது. ஒருவேளை நீங்கள் ஏற்கனவே ஒரு பெட்டிக்குள் இருப்பதால், ஏற்கனவே ஒரு சவப்பெட்டிக்குள் இருப்பதால் என்றென்றும் நிலைத்திருப்பதாக தோன்றுகிறது போலும். ஆனால், வெளியே திறந்த வெளியில் தூங்கிப்பாருங்கள், இது எந்தளவுக்கு உத்தரவாதம் இல்லாதது என்று உணர்வீர்கள். நீங்கள் இதை புரிந்துகொள்ளாவிட்டாலும், திறந்தவெளியில் தூங்கும்போது, உங்களுடைய உடலுக்கு இது நன்றாக புரிகிறது. உங்களில் பெரும்பாலானவர்களுக்கு எந்த உணர்வும் இல்லாமல் இருக்கலாம். ஏனென்றால், நீங்கள் உங்களுடைய அறைக்குள் உட்கார்ந்து பாட்டு கேட்டுக்கொண்டிருப்பீர்கள் அல்லது உங்களுடைய செல்போனுக்குள் தொலைந்து போயிருப்பீர்கள். ஆனால்,

வெளியே காட்டுக்குள் இருந்தால், ஒரு புயல் வந்தால் போதும் - இடி, மின்னல், மழை, புயல் காற்று என்றிருக்கும்போது - இந்த மனித உடல் எந்தளவுக்கு உத்தரவாதம் இல்லாதது என்று புரிந்துவிடும். ஒரே ஒரு இரவிற்கு வெளியே தங்கி பார்த்தால்கூட, திடீரென்று ஒரு புதிய விவேகம் உங்களுக்குள் தோன்றிடும்.

வானப்பிரஸ்த ஆசிரமம் என்றால் வனத்துடன், அதாவது காட்டுடன் ஒன்றி வாழ்வது. அடிப்படையான நோக்கம் இதுதான் - இவ்வளவு காலம் வீட்டிற்குள்ளே வாழ்ந்து வந்தீர்கள். இப்போது முடிவு பக்கத்தில் வரும்போது இயற்கைக்கு நெருக்கமாக போய்விடுகிறீர்கள். உங்களுடைய நிலையற்ற தன்மையைப் பற்றி விழிப்புணர்வுடன் வாழ்கிறீர்கள். தாங்கள் அழிவில்லாமல் சிரஞ்சீவியாக வாழ்வதற்காக ஒன்றும் மனிதர்கள் வீடுகளைக் கட்டிக்கொள்வதில்லை. இயற்கையிலேயே ஒரு மனித குழந்தையால் திறந்தவெளியில் வளரமுடியாது, அப்படித்தான் அது வடிவமைக்கப்பட்டிருக்கிறது. மற்ற மிருகங்களைப் போல் இல்லாமல், உடலும் மனமும் ஓரளவுக்கு பக்குவமாகிட மனிதனுக்கு கொஞ்ச காலம் எடுக்கிறது. நாம் இங்கே இதைப் பார்த்திருக்கிறோம் - யோக மையத்திற்கு அருகில் காட்டிற்குள் ஒரு தாய் யானை தன் குட்டியை பிரசவித்தது. அது அப்படியே மூன்று நாட்களுக்கு தன் குட்டியை சுற்றியே நின்று கொண்டிருந்தது. பிறகு இரண்டு பேரும் நடந்து காட்டுக்குள் போய்விட்டார்கள். அவர்களுக்கு இது இயற்கையானதுதான். ஆனால், இயற்கையில் மனித குழந்தைக்கு இந்த இயல்பு இல்லை. ஒரு மனித குழந்தைக்கு ஒருசில வருடங்களுக்காவது பராமரிப்பும், பாதுகாப்பும் அவசியம். அதனால், இந்த பாதுகாப்புக்காகத்தான் வீடு கட்டுவது போன்ற விஷயங்களை செய்தோம். இப்படி, மேலும் மேலும் பாதுகாப்புகளை உருவாக்கினோம். ஆனால், அந்த பாதுகாப்பை அதிகமாகவும், அளவுக்கு அதிகமாகவும் செய்துவிட்டோம் என்பது வேறு விஷயம். அடிப்படையில், ஒரு வீட்டை கட்டிட வேண்டும் என்ற நோக்கம் வரக் காரணம், குழந்தைகளால் திறந்த வெளியை தாக்குப்பிடிக்க முடியாது என்பதுதான்.

இப்படி அந்தச் சமயத்தில், குழந்தைகளோடு சேர்ந்து பெரியவர்களும் அந்த நான்கு சுவர்களின் வசதியை சுகமாக அனுபவித்தார்கள், பரவாயில்லை. அப்படியிருந்தும் அவர்களுக்கு போதுமான அளவு புத்தி இருந்தது. அவர்கள், "இப்படியே வாழ்ந்தேன் என்றால் நான் அழிவில்லாதவன் என்று நினைத்துக்கொள்வேன். அந்த நினைப்பில் பொய்யாகத்தான் வாழ்வேன்," என்று புரிந்துகொண்டார்கள். மிகவும் தெளிவாக பார்க்க வேண்டுமென்றால், அறிவுப்பூர்வமாக மட்டுமல்ல, எல்லாவிதத்திலும் - இந்த நான்கு சுவர்களை விட்டு வெளியேறுவதுதான் முதல் படி. அதனால்தான், சாதுக்களும் சன்னியாசிகளும் ஒருபோதும்

கட்டிடங்களுக்குள் தூங்கமாட்டார்கள். அவர்கள் தூங்கும்போது ஒரு மரத்திற்கு அடியில்தான் தூங்குவார்கள். குளிரோ, மழையோ கடுமையாக இருந்தால், ஒரு குகையிலோ, அதுபோல இயற்கையாக அமைந்த பாதுகாப்பான இடத்திலோ தூங்குவார்கள். ஆனால், கட்டிடங்களுக்குள்ளே போய் தூங்கமாட்டார்கள். அவர்கள் கட்டிடங்களை உருவாக்கினால்கூட அதற்கு கூரை மட்டும்தான் வைப்பார்கள், நாலாப்பக்கமும் திறந்தே இருக்கும். அப்படியே சுவர்களை கட்டினாலும், எப்போதுமே அது மண் சுவராகத்தான் இருக்கும். பூமியுடன் தொடர்பு இருக்கவேண்டும், ஐந்து பூதங்களுடன் தொடர்பில் இருக்கவேண்டும் என்பதுதான் இதன் நோக்கம். இதைப் பற்றிய புரிதல் உங்கள் மூளையில் இல்லாமல் இருக்கலாம், ஆனால் இந்த மாதிரி அமைப்பு உங்களுடைய உடலுக்கு தொடர்ந்து ஞாபகப்படுத்திக்கொண்டே இருக்கும்: "நீங்கள் இந்த மண்ணிலிருந்து எழுந்து நின்ற அம்சம்தான், திரும்பவும் அதே மண்ணில் விழுந்து விடுவீர்கள்," இதுதான் நோக்கம். இதற்கான பயன்களும் பெருமளவில் இருக்கின்றன.

சாகச மலையேற்றம் செய்பவர்களில் நான் இதைப் பார்த்திருக்கிறேன் - அவர்களிடம் ஒரு குறிப்பிட்ட தன்மை இருக்கிறது. அதுபோன்ற தன்மையை வேறுவிதத்தில் உருவாக்கிக்கொள்வது எளிதானதல்ல. சமீபத்தில், ஐரோப்பாவையும் அமெரிக்காவையும் சேர்ந்த சில மலை ஏறும் வீரர்களை சந்தித்தேன். அவர்கள் ஆல்ப்ஸ் மலைகளிலும், தென் அமெரிக்காவின் பல மலைகளிலும் ஏறி சாகசம் செய்திருக்கிறார்கள். அவர்களைப் பார்த்தவுடனே அவர்கள் இருக்கும் விதத்தை என்னால் உணரமுடிந்தது. அவர்களுக்குள் ஒருவிதமான அசைவற்ற நிலையில் இருக்கிறார்கள், இயல்பு நிலையில் இருக்கிறார்கள். ஏராளமான சாதனா செய்தால்தான் இந்தத் தன்மை வரும். அதை அடைய எவ்வளவோ செய்யவேண்டும். ஆனால் தினமும் தங்களுடைய உயிரை பணயம் வைப்பதால், இன்றைக்கு உயிருடன் இருப்போமா இல்லையா என்று தெரியாமல் தினமும் வாழ்வதால், அவர்களுக்குள் இந்த அசைவற்ற நிலையும், இயல்பு நிலையும் ஏற்பட்டுள்ளது. "எனக்கு மரணம் ஏற்பட முடியும்" என்ற புரிதல் அவர்களுக்கு இருக்கிறது. அவர்கள் ஒரு தவறு செய்தாலும்கூட அது மரணத்தில் முடியும் என்று அவர்களுக்கு தெரியும்.

வானப்பிரஸ்த ஆசிரமத்துக்கு போய்விட்டாலே அவர்கள் இறக்கப் போகிறார்கள் என்றெல்லாம் அர்த்தமில்லை. தாங்களும் ஒருநாள் இறக்கவேண்டும் என்ற விழிப்புணர்வு அவர்களுக்கு வந்துவிட்டது என்று அர்த்தம். அதன் அழியக்கூடிய தன்மையை இந்த உடலுக்கு ஆழமாக புரியவைப்பதுதான் வானப்பிரஸ்த ஆசிரமம். உடலுக்கு, அதன் அழியக்கூடிய தன்மைப் பற்றிய விழிப்புணர்வு முழுமையாக வந்துவிட்டால்,

அது தன்னைத்தானே முறையாக சீரமைத்துக்கொள்ளும். திடீரென்று உங்களுடைய சொத்து, பணம், உறவுகள் என்று எல்லாவற்றையும் - கொஞ்சம் தூரமாக விலகி நின்று பார்ப்பீர்கள். உங்களுடைய பிழைப்புக்காக நீங்களே உருவாக்கிய ஒரு வலைதான் இது என்று புரிந்துகொள்வீர்கள். இந்தப் புரிதல் மிகவும் இன்றியமையாதது. இது இல்லாவிட்டால், ஒரு மனிதன் மிகவும் மடத்தனமான வாழ்க்கையை வாழ்வான். அது அழியக்கூடியது என்று உடலுக்கு தெரிந்துவிட்டால், அதற்கேற்றபடி அது தன்னை நன்றாக முறையமைத்துக்கொள்ளும், தன்னுடைய சக்தியை முட்டாள்தனமாக வீணடிக்காது.

இந்தியாவில் அவ்வளவாக பார்த்ததில்லை, ஆனால் அமெரிக்காவில் இப்படி நடப்பதை பார்த்திருக்கிறோம் - அங்கிருக்கும் நம் யோக மையத்தில் குடியேறியவர்கள், அங்கு குடியேறிய பின் ஆரோக்கியம் அடைந்தார்கள். இந்தியாவில் இருக்கும் யோக மையத்தில் வானப்பிரஸ்த ஆசிரமம் ஆரம்பித்தபோது வந்தவர்கள் பெரும்பாலும் இளவயதினர்களாக இருந்தார்கள். அதனால், இது அவ்வளவு அப்பட்டமாக தெரியவில்லை. ஆனால், அங்கே குடியேறியவர்கள் பலரும் அறுபத்தைந்து வயதை கடந்தவர்களாக இருந்தார்கள், சிலர் எழுபதையும் தொட்டிருந்தார்கள். இப்போது கடந்த ஏழெட்டு வருடங்களில் முன்பைவிட மிகவும் ஆரோக்கியமாக, இளமையாக இருக்கிறார்கள். உடலும் தகுந்தமுறையில் இருக்கிறது. திறந்தவெளியில் அதிகநேரம் வாழ்வதால், அவர்களுடைய தோற்றமும் வலிமையும் முன்பைவிட சிறப்பாக இருக்கிறது. யோகா செய்கிறார்கள் - அது எப்படியும் இருக்கவே இருக்கிறது. ஆனால், உடல் சரியான வடிவத்தில் இருக்க இன்னொரு காரணம் - தொடர்ந்து இங்கும் அங்கும் நடக்கிறார்கள், காட்டில் வேலை செய்கிறார்கள், பஞ்சபூதங்களுடன் தொடர்பில் இருக்கிறார்கள் - இவை எல்லாமே பங்களிக்கின்றன.

வானப்பிரஸ்த ஆசிரமம் வழக்கத்திற்கு வர இன்னொரு காரணம் - ஒருவர் தன் வீட்டில், குடும்பத்தாரும் உறவினர்களும் சுற்றியிருக்க, அவர்கள் மத்தியில் இறப்பது நல்லதே இல்லை. இன்றைய உலகில், கவனிக்கப்படாமல் இறந்துபோவது என்றால் அது மோசமானதாக கருதப்படுகிறது. தாங்கள் இறக்கும்போது, தங்களுடைய குடும்பத்தினர் அனைவரும் தங்களை சுற்றி இருக்கவேண்டும் என்று நினைக்கிறார்கள். இறப்பதற்கு இது மிகவும் மோசமான வழி. நீங்கள் இப்போது ஒரு பரிமாணத்தில் வாழ்ந்துகொண்டிருக்கிறீர்கள், இதைவிட்டு பிரிந்து வேறு பரிமாணத்திற்கு போகப்போகிறீர்கள். அந்த சமயத்தில், உங்கள் குடும்பத்தாரை, உங்களுக்கு பரிச்சயமான அதே முகங்களையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தால், பிரியப்போகும் இதே பரிமாணத்தோடுதான் தொடர்பில் இருக்கிறீர்கள்.

நீங்கள் உங்களுடைய வீட்டில் குடும்பத்தாரின் மத்தியில் இறக்கும்போது, இரண்டு விஷயங்கள் நடக்கின்றன: ஒன்று, உங்களுடைய உடல் அங்கிருக்கும் மற்ற ஒவ்வொரு உடலுடனும் தொடர்பு கொள்கிறது. உடல்ரீதியான, மனரீதியான தொடர்புகளைப் பற்றி நான் பேசவில்லை - அது எப்படியும் இருக்கிறது - அதைத் தாண்டியும் உங்கள் உடல் சில தொடர்புகளை உருவாக்கிக் கொள்ளும். இன்னொன்று, ஒரு குடும்பம் அல்லது வீடு என்றால், ஒருவிதத்தில் அது அளவுக்கதிகமான முறையமைப்பு. இன்றைக்காக, நாளைக்காக, நாளை மறுநாளுக்காக என்று இப்படியே வாழ்க்கையை அளவுக்கதிகமாக முறையமைக்கிறார்கள். நீங்கள் வீட்டில் குடும்பத்தோடு வாழும்போது, இந்த அளவுக்கதிகமான முறையமைப்பில் மூழ்கிப்போவீர்கள். இப்படி மற்ற உடல்களுடன் ஏற்படும் தொடர்பும், வாழ்க்கையின் அளவுக்கதிகமான முறையமைப்பும் ஒருவருக்குள் "தான்" என்ற உணர்வை அதிகமாக்கிடும். அப்படி இருக்கும்போது அவரால் எளிதில் பிடியை தளர்த்த முடியாது. இதை விட்டுப்போவது என்பது மிகவும் சிரமமாகிவிடும். அதோடு, குடும்பத்தின் மத்தியில் இறந்தால் உங்களுடைய பற்றுணர்வு பெரியளவில் இருக்கும். இந்தப் பற்றோடு இறப்பது, அதற்குப்பின் நிகழப்போகும் விஷயங்களுக்கு நல்லதே கிடையாது. குடும்பம் என்றால் பற்று, பாசம் மட்டும் இல்லை என்று நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். உங்களுடைய வாழ்க்கையின் கடைசி கணத்தில் யாரையோ பார்க்கும்போது - உங்களுடைய மகன், மகள், மனைவி, கணவன் என்று ஒருவரை பார்க்கும்போது உங்களுக்கு அன்பு மட்டுமே தோன்றாது, மற்றும் பல விஷயங்களும் தோன்றும். ஏனென்றால், இதற்குமுன் அந்த உறவு அன்பை பற்றியதாக மட்டும் இருக்கவில்லை. அதில் பல விஷயங்களும் இருக்கின்றன. இப்போது அந்த ஞாபகங்களும்கூட சேர்ந்து வரும். அந்த உணர்ச்சிகள் எல்லாம் சேர்ந்து வரும். இப்படி நடப்பதும் மரணத்திற்கு நல்லதே கிடையாது.

அதனால்தான் இந்த கலாச்சாரத்தில், பற்றில்லாத சூழலில் இறக்க விரும்பினார்கள். தங்களுடைய உடல், தங்களுடைய பற்றுகள், போராட்டங்கள், பொருள்கள் - இப்படி தங்களுடைய விஷயங்களுடன் எந்தத் தொடர்பும் இல்லாத விதத்தில் உயிர்விட விரும்பினார்கள். பெரும்பாலும், ஆன்மீகத்தன்மை உடைய ஒரு சூழலில் உயிர்விட விரும்பினார்கள். பழைய காலங்களில் கூட, எல்லோருமே திருதராஷ்டிரர் போனதுபோல காட்டுக்குப் போகவில்லை. பெரும்பாலானவர்கள், நாட்டின் பல பகுதிகளில் இருக்கும் பல ஆசிரமங்களுள் ஒன்றில் குடியேறினார்கள். இன்றைய சூழ்நிலையில் வானப்பிரஸ்த ஆசிரமத்திற்காக காட்டுக்குப் போய் காட்டுத்தீயோடும், யானையோடும், புலியோடும் ஆபத்தில் சிக்கத் தேவையில்லை. நீங்கள் இறப்பதற்கு முன்பாகவே அது உங்களை கொன்றுவிடக்கூடும். அதைவிட, அத்துமீறி நுழைந்ததற்காக வனத்துறை

அதிகாரிகள் உங்களை கைதுசெய்யும் வாய்ப்பும் அதிகமாக இருக்கிறது. ஆம், வனம் என்றால் காடு என்று அர்த்தம். ஆனால், வனம் என்றால் தோட்டம் என்றும் அர்த்தம் உள்ளது. அதனால், திறந்தவெளியில் அமைந்துள்ள பாதுகாப்பான ஒரு சூழலுக்கு போய்விடுவதே சிறந்தது.

இயற்கை சூழலில் உயிர்விடும் வாய்ப்பு இல்லையென்றால், அதற்கடுத்த சிறந்த விஷயம் என்ன? உங்களுக்கு பரிச்சயமான எல்லோரிடம் இருந்தும், குறிப்பாக உங்களுடைய உறவினர்கள் மற்றும் நெருங்கிய நண்பர்களிடமிருந்தும் விலகிப்போவது சிறந்தது. அதுவரை நீங்கள் வாழ்ந்த வாழ்க்கையை ஞாபகப்படுத்தும் எதுவும், உங்களைச் சுற்றி இல்லாமல் இருப்பதே சிறந்தது. உங்களுடைய உறவுகளையும், இருக்கும் எல்லா ருணானு பந்தங்களையும் ஒருபுறம் தள்ளி வையுங்கள். உங்கள் கடவுள்கள் கூட தேவையில்லை. ஏனென்றால், அவர்களும் ருணானு பந்தம்தான் - நீங்களாக உருவாக்கிய ஒரு உறவுதான். உங்களுக்குள் போதிய அளவு விழிப்புணர்வை உருவாக்காமல் இருந்தால், அந்தக் கடைசி கணம் வரும்போது நீங்கள் நடுங்கிப் போகலாம். யாராவது உங்கள் கைகளை பிடித்துக்கொள்ளலாமே என்று தோன்றும், அது பரவாயில்லை. விழிப்புணர்வில் போகாவிட்டால்கூட, ஓரளவுக்கு அன்பிலும் சுகத்திலுமாவது உயிர்விடுவீர்கள், அது பரவாயில்லை. ஆனால், இதை மிகவும் குறைந்த அளவில் வைத்துக்கொள்வது அவசியம்.

சரி, வானப்பிரஸ்த ஆசிரமத்திற்குள் நுழைவதற்கு சரியான காலம் எது? நம் பாரம்பரியத்தில், உங்களுக்கு நாற்பத்தெட்டு வயதானபிறகு அல்லது நான்கு சூரிய சுழற்சிகள் முடிந்தபிறகு வானப்பிரஸ்த ஆசிரமத்திற்குள் நுழையலாம் என்று சொல்லியிருக்கிறார்கள். இன்றைய உலகில், அந்த வயது வாழ்க்கையின் அந்த குறிப்பிட்ட காலகட்டத்தை பிரதிபலிக்காமல் இருக்கவும் வாய்ப்பிருக்கிறது. அதோடு, வாழ்க்கையின் இந்த காலகட்டங்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமாக நிகழலாம். அதனால், வயது ஒரு பொருட்டாக இல்லை. வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திலும் ஒருவர் தான் இருக்கும் சூழ்நிலையை கவனித்துப் பார்த்து எடைபோட வேண்டும், மதிப்பீடு செய்யவேண்டும், பரிசீலனை செய்யவேண்டும். ஒருமுறை இப்படி நடந்தது: பெங்களூரில் சொந்தமாக தொழில் தொடங்கிய இரண்டு பெண்கள் இருந்தார்கள். ஒருநாள் இரண்டு பேரும் சந்தித்துக்கொண்டார்கள். அப்போது ஒருவர், "எனக்காக வேலை செய்பவர்கள் எல்லோருமே ஆறு மாதங்களுக்கு ஒருமுறை, ஒரு வாரத்திற்கு விடுமுறை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று வலியுறுத்தி சொல்வேன்," என்றார். இன்னொரு பெண், "ஆஹா பிரமாதம்! ஆனால் ஏன் இப்படிச் செய்கிறாய்? இதனால் உனக்கு செலவு அதிகம் இல்லையா?" என்று கேட்டார். அதற்கு அந்தப் பெண், "இல்லை.

இல்லை, யார் இல்லாதபோது நான் நன்றாக இயங்கமுடியும் என்று தெரிந்துகொள்ள இதுதான் ஒரே வழி," என்றார்.

இப்படி அவ்வப்போது, வாழ்க்கையின் ஒவ்வொரு நிலைக்குப் பிறகும் ஒருவரின் சூழ்நிலையை மறுபரிசீலனை செய்வது நல்லது. உங்களை சுற்றி இருக்கிற சூழ்நிலையில் நீங்கள் எந்தளவுக்கு பொருத்தமாக இருக்கிறீர்கள் என்று சரிபாருங்கள். வாழ்க்கையின் இந்தக் கட்டத்தில் எதற்கு முன்னுரிமை கொடுக்கவேண்டும் என்று பாருங்கள். விட்டு விலகுவதற்கு இது சரியான நேரமா என்று யோசியுங்கள். ஏற்கனவே பார்த்ததுபோல், வானப்பிரஸ்த ஆசிரமத்தில் நுழைவதென்றால் உயிரை விடப்போகிறோம் என்று அர்த்தமில்லை. அது உங்கள் வாழ்க்கையை ஒருவிதமான விழிப்புணர்வுடன் வாழவும், உங்களை தயார்படுத்திக் கொள்ளவும்தான். இதன்மூலம், மரணம் வரும்போது அது உன்னதமான விதத்தில் நிகழமுடியும். இது ஒன்றும் மரணத்திற்கான அழைப்பு கிடையாது. மனிதர்களின் நிலையை ஆழமாக ஏற்றுக்கொண்ட விவேகம்தான் இது.

## சல்லேகனா என்றால் என்ன?

இந்திய வாழ்க்கை முறையில், வாழ்வதற்கு மூன்று விதங்கள் இருக்கின்றன என்று சொல்வோம். நீங்கள் ஒரு போகியாக வாழலாம், ஒரு ரோகியாக வாழலாம் அல்லது ஒரு யோகியாக வாழலாம். பொருள்களின் சுகத்திலும், புலன்களின் இன்பத்திலும் தொலைந்துபோய் வாழ்பவர் போகி. தனக்கு அவதி தரும் நோயால் கட்டுண்டு வாழ்பவர் ரோகி. இந்தப் பிரபஞ்சத்துடன் ஐக்கியமாகி எல்லாவற்றையும் ஒன்றாக உணர்ந்தவர் யோகி. நீங்கள் வாழும்போது இந்த மூன்றில் ஒரு நிலையில் வாழலாம். ஆனால், இறப்பதற்கோ இரண்டு விதங்கள்தான் இருக்கின்றன. ஒன்று, நீங்கள் ஒரு ரோகியாக இறக்கலாம் அல்லது ஒரு யோகியாக இறக்கலாம். போகியாக இறக்கும் வாய்ப்பு கிடையாது.

ஒரு காலத்தில், நமது கலாச்சாரத்தில் ஏராளமான மனிதர்கள் யோகிகளாக இறந்திடவே விரும்பினார்கள். ஆனால் இன்றைக்கோ, இவர்களெல்லாம் ரோகிகளாக இறந்திடவே விரும்புகிறார்கள். இதைவைத்து சம்பாதிக்க ஒரு தொழில்துறையே உருவாகிவிட்டது. ஒருவேளை இவர்கள் எல்லாம் அந்தத் தொழிலுக்கு உதவவேண்டும் என்று நினைக்கிறார்களோ என்னவோ. இன்றைக்கு அமெரிக்காவில் மருத்துவ வசதிகள் பெருமளவில் உருவாகிவிட்டன. அதனால் ஒரு மனிதனின் கடைசி முப்பது நாட்களில், மருத்துவ உதவி என்ற பெயரில் தேவைக்கு அதிகமாக தலையிடுகிறார்கள். தேவை குறைவாக

இருக்கிறது, மருத்துவ உதவி மிகுதியாக இருக்கிறது. இந்த கடைசி கட்டத்தில் இந்தளவுக்கு மருத்துவ உதவி எதற்காக? இந்த முயற்சியால் நன்மை ஒன்றும் நிகழவில்லை. பெரும்பாலான நேரங்களில், இதனால் மனிதர்கள் கொடுமையின் எல்லைக்கே தள்ளப்படுகிறார்கள். இவர்கள் விரைவிலேயே இறக்கப் போகிறார்கள் என்று எல்லோருக்குமே நன்றாக தெரியும். அதனால் கடைசி முப்பது நாட்களுக்கு முன்பாக - அதற்கு ஆறு மாதங்களுக்கு முன்பாக என்று வைத்துக்கொள்வோம் - அப்போதே நீங்கள் உயிரை கொஞ்சம் கொஞ்சமாக கரைத்து வெளியேறலாமே. உங்களுடைய நிலையற்ற இயல்பை கையாள்வதற்கு இதுவே மிகவும் புத்திசாலித்தனமான வழியாகும்.

ஆன்மீகப்பாதையில் இல்லாத சிலர்கூட தங்கள் உடலை விழிப்புணர்வுடன் விட விரும்புகிறார்கள். ஏனென்றால், உடல் முழுக்க டியூப்களை மாட்டிக்கொண்டு இறப்பதில் அவர்களுக்கு விருப்பமில்லை. எல்லாவிதமான கொடுமைகளையும் அனுபவிப்பதற்கு பதிலாக, அதை மெதுவாக கரைய விட்டு, பாங்குடன் போய்விடவே விரும்புகிறார்கள். மருத்துவமனையில் அவர்கள் அனுபவிப்பது நரகத்தைவிட மோசமாக இருக்கும். இதுதான் நிஜம். உங்களுக்கு இது தெரியாதபட்சத்தில், ஒரு தடவை அரசு மருத்துவமனைகளில் இருக்கும் ஜெனரல் வார்டுகளுக்கு போய் சில நாட்களுக்கு இருந்து பாருங்கள். இந்த ஒரு இடத்துக்கு மட்டும் ஒருபோதும் வந்து சேர்ந்துவிடக் கூடாது என்று தோன்றிடும். அதனால்தான், அமெரிக்காவில் நிறைய மருத்துவ வல்லுனர்கள் தங்களுடைய காலத்துக்கு முன்கூட்டியே *"டு நாட் ரிசஸிடேட்"* (Do not Resuscitate) என்ற ஒப்பந்தத்தில் கையெழுத்திடுகிறார்கள் - அப்படியென்றால், "எங்களை உயிர்ப்பிக்காதீர்கள்" என்று அர்த்தம். அவர்கள் எத்தனையோ பேருக்கு உடலை மட்டும் செயல் இழக்காதபடி வாழவைத்து, அவர்களுடைய துன்பம் நாட்பட்டு நீடிப்பதை பார்க்கிறார்கள். உடம்புக்குள் டியூப்களும் ஊசிகளும் நுழைக்கப்பட்டு கிடப்பது முடிவில்லாத போராட்டமாக இருக்கிறது. தங்களுடைய நோயாளிகளுக்கே இந்த மருத்துவர்கள் அதை செய்திருக்கிறார்கள். ஆனால், தங்களுடைய காலம் வரும்போது தங்களுக்கு அப்படி நடப்பதை அவர்கள் விரும்பவில்லை. அதனால் இப்படி முன்கூட்டியே ஒப்பந்தம் செய்துகொள்கிறார்கள்.

அந்த காலத்தில், நம் கலாச்சாரத்தில், இது வேறுவிதமாக கையாளப்பட்டது. உங்களுக்கு எந்த யோகாவும் தெரியாது என்று வைத்துக்கொள்வோம். உதாரணமாக, உங்களுக்கு எண்பது வயதுக்கு மேல் ஆனபிறகும் நன்றாகவே இருக்கிறீர்கள் என்று வைத்துக்கொள்வோம். அதிகபட்சம் இன்னும் பத்துப் பதினைந்து வருடங்கள் வரைக்கும் நீங்கள் வாழலாம். உடல் மிகவும் தளர்ந்து போய்விட்டதை தெரிந்து நீங்களே ஒரு

முடிவு எடுக்கிறீர்கள், "நானே சுயமாக விழிப்புணர்வுடன் இதை கரைத்துக்கொள்ள நேரம் இதுதான்," என்று உணர்கிறீர்கள். எப்படியோ அதை முடிக்கத்தான் போகிறீர்கள், இப்போது விழிப்புணர்வுடன் செய்யலாம் என்று முடிவுசெய்தீர்கள். அதனால், ஒரு நாளைக்கு இரண்டு வேளைகள் சாப்பிட்டுக் கொண்டிருந்ததை மாற்றி, ஒரு வேளை மட்டும் சாப்பிட ஆரம்பித்தீர்கள். இப்படி சில வருடங்களுக்கு செய்தீர்கள். பிறகு அந்த உணவையும் பாதியாக குறைத்தீர்கள். இப்படியெல்லாம் செய்வதால், ஒருவரின் கர்மாவையும் சக்திநிலையையும் பொருத்து, அவருடைய ஆயுளை அதிகரிக்கவும் முடியும், குறைக்கவும் முடியும். ஆனால், நிச்சயமாக நாட்பட்ட துன்பத்திலிருந்து விடுபடுவார்கள். பழங்காலத்தில், வானப்பிரஸ்த ஆசிரமத்திற்குப் போனபோது வழக்கமாக அவர்கள் பழ உணவிலிருந்து மாறி புதிதாய் துளிர்த்த இலைகளை சாப்பிட ஆரம்பிப்பார்கள். பிறகு அந்த பச்சை இலைகளிலிருந்து காய்ந்த இலைகளுக்கு மாறுவார்கள். பிறகு காய்ந்த இலையிலிருந்து மாறி தண்ணீர் மட்டும் குடிப்பார்கள். கடைசியாக தண்ணீரையும் நிறுத்தி விடுவார்கள். அதன்பின், மூன்றிலிருந்து ஐந்து நாட்களுக்குள் அவர்கள் உடலை விட்டுவிடுவார்கள். ஒரு ரோகியாக இறப்பதற்கு அவர்கள் விரும்பவில்லை, அதனால்தான் இப்படி செய்கிறார்கள்.

இது தற்கொலையா? நிச்சயமாக கிடையாது. விரக்தியால், கோபத்தால், பயத்தால் அல்லது துன்பத்தை தாங்கும் திறன் இல்லாததால் தற்கொலை ஏற்படுகிறது. இது தற்கொலையும் இல்லை, கருணைக்கொலையும் இல்லை. இது விழிப்புணர்வுடன் இருப்பதைப் பற்றியது. எந்தளவுக்கு என்றால், வாழ்க்கையின் சுழற்சி முடிவுக்கு வந்துவிட்டது என்பதை விழிப்புணர்வுடன் புரிந்துகொண்டு அதிலிருந்து வெளியேறுகிறார்கள். வெளியில் இருந்து சேகரித்த இந்த உடலிலிருந்து தங்களை தனியாக பிரித்துப் பார்க்கும் அளவுக்கு போதிய விழிப்புணர்வு உருவாகியுள்ளது. இந்தளவுக்கு விழிப்புணர்வு இருக்கும்போது, ஒருவர் உடலைவிட்டு வெளியேறமுடியும். அந்தளவுக்கு விழிப்புணர்வு உருவாக்கவில்லை என்றால், குறைந்தது அந்த கடைசி கணத்தில் உங்களுக்குள் இனிமையாக, சந்தோஷமாக, ஆனந்தமாக இருக்கும்படியாவது உருவாக்கிக்கொள்ள வேண்டும் - சில விஷயங்களை முன்கூட்டியே நீங்கள் சரியாக செய்திருந்தால் இப்படிப் போவது சாத்தியமே. மேலே சொன்னது எதுவுமே சாத்தியம் இல்லை என்ற நிலையில், குறைந்தபட்சம், இந்த ஒரு விஷயத்தையாவது நிர்ணயிக்க வேண்டும் - அதாவது எந்தவிதமான மருத்துவ தலையீடும் இல்லாமல் உயிர்விட முடிவெடுக்க வேண்டும். இதுதான் உங்களுக்கும் நல்லது, இந்த பூமிக்கும் நல்லது.

நவீன சமூகங்களில், மனிதனின் ஆயுளை எந்த விலை கொடுத்தாவது நீட்டிக்கவேண்டும் என்ற வெறி நாளுக்கு நாள் அதிகமாகிக்கொண்டே

போகிறது. இங்கிருக்கும் எல்லோருமே 100 - 105 வருடங்களுக்கு வாழ்ந்திட தயார்நிலையில் இல்லை என்பதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். அப்படி செய்யவேண்டும் என்றால், நம்முடைய வாழ்க்கையை பல்வேறு விதங்களில் மாற்றியமைத்துக் கொள்வது அவசியம். துரதிர்ஷ்டவசமாக, மரணம் இல்லாமல் வாழத்துடிக்கும் கோடீஸ்வரர்கள் பெரும்பாலானவர்களுக்கு அவர்கள் வாழ்க்கையில் தெரிந்ததெல்லாம் - உடலின் இன்பங்களும், மனதில் நிகழும் நாடகத்தின் வலியும் மகிழ்ச்சியும், அதோடு அவர்கள் வாழும் உலகத்தின் அதிகார போதையும் தான். இதெல்லாமே பொருள்ரீதியானவைதான். அந்தப் பரிமாணத்தை தாண்டி அவர்கள் எதையுமே பார்த்ததில்லை. இன்றைக்கு மருத்துவ தொழில்நுட்பத்தின் உதவியோடு - ஹார்மோன், ஊட்டச்சத்து, ஸ்டெம் செல்கள் என்றெல்லாம் பலவிதமாக - எப்படியாவது இந்த உடலின் ஆயுளை நீட்டிக்கப் பார்க்கிறார்கள், அவ்வளவுதான்.

ஒருவருடைய சாஃப்ட்வேர் தீர்ந்து போய்விட்டது. ஆனால் அவருடைய ஹார்டுவேர், அதாவது உடல் இன்னும் இயக்கத்தில் இருக்கிறது என்றால், அவர் ஒரு காலிப் பாத்திரம் போல்தான் இருப்பார். இன்று மேற்கத்திய நாடுகளில், அப்படிப்பட்ட காலிப் பாத்திரங்கள் ஏராளமாக இருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்களோடு வேலை செய்பவர்கள் என்னிடம் தங்களுடைய அனுபவங்களை பகிர்ந்திருக்கிறார்கள். எண்பத்தைந்து முதல் தொண்ணூறு வயதுள்ள ஆண்களுக்கும் பெண்களுக்கும் அவர்களுடைய ஞாபகங்கள் எல்லாம் போய்விட்டது. ஆனால், ஒன்றே ஒன்று மட்டும் அவர்களுக்கு டீனேஜிலிருந்து இப்போது வரைக்கும் நினைவில் இருக்கிறது - இன்னொரு பாலினத்தை ஈர்க்கவேண்டும் என்பது மட்டும் நினைவில் இருக்கிறது. வாழ்க்கையின் இந்த குறிப்பிட்ட அம்சம் இரசாயன இயல்புடையது. அதனால் ஒருவருக்குள் ஆழமாக பதிந்திருக்கிறது. அதனால்தான் மற்ற அனைத்தையும் மறந்துவிட்டாலும் இது மட்டும் இன்னும் ஞாபகம் இருக்கிறது. அவர்களால் நடக்க முடியாது, சக்கர நாற்காலியில்தான் இருப்பார்கள், இதுதான் அவர்களின் நிலை. இருந்தாலும் அவர்களிடம் யார் வந்தாலும் - ஒரு பார்வையாளரோ, பணியாளரோ, யார் வந்தாலும் - அவர் இன்னொரு பாலினத்தவராக இருந்தால், உடனே அவரைப் பிடித்து இழுத்துக்கொள்ள பார்ப்பார்கள். தாங்கள் கவர்ச்சியாக தோன்றவேண்டும் என்ற முயற்சியில் தினமும் உதட்டில் லிப்ஸ்டிக் தடவிக்கொள்கிறார்கள், பலவிதமான மேக்கப் செய்துகொள்கிறார்கள், பளபளவென்று ஷேவ் செய்ய முயற்சித்து முகத்தை கீறிக்கொள்கிறார்கள். யாரைப் பார்த்தாலும் அவர்களை நெருக்கமாக இழுத்துக்கொள்ளப் பார்க்கிறார்கள். இப்படி இருப்பது மிகவும் மோசமானது, பரிதாபமானது என்று புரிகிறதா? ஆனால், இன்றைய சமூகங்களிலோ இந்த மாதிரி விஷயங்கள் கொண்டாடப்படுகின்றன. உங்களுக்கு

தொண்ணூறு வயதாகியும், யாருடனோ காதல் உறவில் இருக்கிறீர்கள் என்றால், அது மிகவும் உயர்ந்த விஷயமாக கருதப்படுகிறது. அது முட்டாள்தனமாக, மடத்தனமாக பார்க்கப்படுவதில்லை. ஏனென்றால், இதற்குத்தான் அவர்கள் பழக்கப்பட்டு இருக்கிறார்கள்.

மற்ற உயிரினங்களைப்போல, எப்போது எப்படி பாங்குடன் உயிர்விட வேண்டும் என்று மனிதர்களுக்கும் புரிந்திருந்தால், முதலில் இதுபோன்ற சூழ்நிலை உருவாகியே இருக்காது. அப்படியென்றால், விரும்பிய நேரத்தில், விரும்பிய விதத்தில் உடலைவிடும் திறன் இல்லாதவர்கள், நல்லமுறையில் பாங்குடன் உயிர்விட என்ன செய்யமுடியும்? அந்த முடிவை எப்போது எப்படி எடுப்பது? இது எல்லோருக்கும் ஒரே மாதிரி இருப்பதில்லை. யாரோ ஒருவர் எண்பத்தைந்து வயதிலும் நன்கு உறுதியாக இருக்கமுடியும், இன்னொருவர் எழுபது வயதிலேயே போக வேண்டியிருக்கும் - இது பல காரணங்களை பொருத்து அமையும். இதற்கு வயது ஒரு பொருட்டல்ல. ஓரளவுக்கு நிச்சயமாக இதை தெரிந்துகொள்ள வேண்டுமென்றால், ஓரளவுக்கு சாதனா அவசியம். அல்லது வாழ்க்கை பற்றிய தெளிவான பார்வை வேண்டும். அப்போது, உடல் தளர்ந்தநிலை வருவது உங்களுக்கு தெரியும், உடல் உறுதியில்லாமல் தடுமாற்றநிலை வருவது உங்களுக்கு தெரியும், உங்களுடைய கர்மாவை முடித்துவிட்டீர்கள் என்பதையும் உணர்வீர்கள். இல்லாவிட்டால், இந்த உலகில் தொலைந்து போனவராக உணர்வீர்கள். துரதிர்ஷ்டவசமாக, நவீனயுகத்து மனிதர்கள் பெரும்பாலும் இப்படித்தான் உணர்கிறார்கள்.

பண்டைய காலத்தில், ஒருவருக்கு நேரம் வந்தவுடன் பாங்குடன் உடலை விடும் இந்தப் படியை அவர் எடுப்பதற்கு அவருடைய சமூகமும் பெருமளவில் உதவியது. உதாரணமாக, ஜெயின் சமூகத்தினர் மத்தியில் இந்த வழக்கம் இருக்கிறது - இது *சல்லேகனை* அல்லது *சந்தாரா* என்று அழைக்கப்படும். இந்துக்களுக்கும் இதற்கு நிகரான *பிரயோபவேசம்* என்ற முறை இருக்கிறது. நமது பாரம்பரியத்தில், தான் உடலை விடும் நேரம் நெருங்கிவிட்டது என்று ஒருவருக்கு புரிந்தவுடன், அதைப்பற்றி தானே முடிவுசெய்துகொள்ளும் அளவுக்கு அவர் விழிப்புணர்வுடன் இருந்தால் - அது முற்றிலும் ஏற்கக்கூடியதாகத்தான் இருந்தது. ஒருவருக்கு அந்த விழிப்புணர்வு இல்லை என்றால் அப்போது அவர் சுற்றி இருப்பவர்களிடம் ஆலோசித்தார். தன்னுடைய குடும்பத்தார், சமூகத்தில் மூத்தவர்கள், ஆன்மீகத் தலைவர் உட்பட எல்லோரிடமும் கேட்பார். அதன்பிறகு, அவர்கள் அதைப்பற்றி விவாதிப்பார்கள். "நான் சல்லேகனை அல்லது பிரயோபவேசம் செய்ய நேரம் வந்துவிட்டது என்று நினைக்கிறேன்," என்று யாரோ ஒருவர் விண்ணப்பம் கொடுக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். இப்போது அவர்கள் அதைப்பற்றி விவாதித்துவிட்டு,

“இல்லை, உனக்கு இது நேரமில்லை. எதற்காக இப்படி செய்யவேண்டும் என்று நினைக்கிறாய்?” என்று கேட்பார்கள். அவருடைய வாழ்க்கையில் இன்னும் நடக்க வேண்டியிருக்கும் விஷயங்களையும், அவர் நிறைவேற்ற வேண்டியிருக்கும் பொறுப்புகளையும் பட்டியலிட்டுக் காட்டுவார்கள். ஆனால் அவர், “இல்லை இல்லை, நான் எல்லாவற்றையும் போதிய அளவு செய்துவிட்டேன். இதற்குமேல் என் உடல் என்னை இருப்பதற்கு அனுமதிக்க மாட்டேன் என்கிறது. நான் போய்தான் ஆகவேண்டும்,” என்று சொல்கிறார். அப்போது அவர்கள், “நாங்கள் நமது ஆன்மீக குருவிடம் ஆலோசித்த பிறகு சொல்கிறோம்,” என்று சொல்வார்கள். அந்த சமூகத்தின் குருவிடம் கேட்பார்கள். பிறகு எல்லோருமாக சேர்ந்து முடிவெடுப்பார்கள். “சரி, அவன் உடலை விடுவதற்கு நேரம் வந்துவிட்டது என்று தோன்றுகிறது. ஆனால், இப்போது வேண்டாம், அடுத்த வருடம் போகட்டும்,” என்பார்கள். அவரும் சமூகத்தில் உள்ளவர்களின் அறிவுரையை ஏற்றுக்கொண்டு, அடுத்த வருடத்தில் உடலைவிட முடிவுசெய்வார். அதற்குப் பிறகு அவர்களின் குரு ஒரு குறிப்பிட்ட செயல்முறைக்குள் அவருக்கு தீட்சை கொடுப்பார். அந்த செயல்முறை நீண்டதாகவும், பல நிலைகள் கொண்டதாகவும் இருக்கலாம். ஒவ்வொரு நிலையிலும், குரு அந்த மனிதரின் முன்னேற்றத்தை பரிசீலனை செய்வார். உண்மையிலேயே அந்த மனிதருக்கு இது சரியானதுதானா என்று நிச்சயப்படுத்திக் கொள்வார். இதைப் பற்றி சிறிதளவு சந்தேகம் இருந்தாலும்கூட, அது நிறுத்தப்படும். அந்த செயல்முறையிலிருந்து அந்த மனிதர் வெளியே எடுக்கப்படுவார்.

உதாரணமாக, இது என்னைப் பற்றியது என்று வைத்துக்கொள்வோம். ஒருவேளை நான், “சரி, அடுத்த ஆறு மாதங்களில் நான் போய்விட விரும்புகிறேன்,” என்று சொல்கிறேன். அப்போது யோக மையத்தில் இருப்பவர்களிடம் நான் ஆலோசனை செய்யலாம் - “நான் போதிய அளவு செய்துவிட்டதாக நினைக்கிறேன். நீங்களோ யோக மையத்தை அற்புதமாக பார்த்துக் கொள்கிறீர்கள். லிங்கபைரவிக்கும், தியானலிங்கத்திற்கும் என்னுடைய அவசியம் இல்லை. யாருக்கும் நான் தேவையில்லை என்று நினைக்கிறேன். அடுத்த ஒரு வருடத்திற்குள் நான் போய்விடுவது சரி என்று நினைக்கிறேன்,” என்று சொல்கிறேன். அவர்கள், “இல்லை இல்லை, சத்குரு, நீங்கள் இங்கே இருந்தாக வேண்டும்,” என்று சொல்கிறார்கள். நான், “சரி, எவ்வளவு காலம் இருக்கவேண்டும்?” என்று கேட்கிறேன். அவர்கள், “சத்குரு, இன்னும் இருபது வருடங்களுக்கு,” என்று சொல்கிறார்கள். நான், “அதெல்லாம் கிடையாது, அதிகபட்சம் மூன்று வருடங்கள்தான்...” என்று சொல்கிறேன். எல்லோரும் போதிய பக்குவத்துடன், விழிப்புணர்வுடன் இருக்கிறார்கள் என்றால் இதைப்பற்றி நாம் பேசி, விவாதித்து, ஒரு முடிவுக்கு வரமுடியும். இல்லாவிட்டால்,

மரணம் என்ற வார்த்தையை உச்சரித்தாலே பெரிய ஆர்ப்பாட்டம் ஆகிவிடும்.

மரணம் என்பது வாழ்க்கையின் தவிர்க்கமுடியாத ஒரு அங்கம் என்ற விழிப்புணர்வு சமூகம் முழுவதற்கும் இருந்தால் நாம் உட்கார்ந்து விவாதித்து, ஒருவரை ஒருவர் வழிநடத்தி, ஒரு முடிவுக்கு வர முடியும் - இதை செய்வதற்கு இதுதான் சிறந்த வழி என்று நிர்ணயிக்க முடியும். இந்தியாவில், திருமணங்களும் இப்படித்தானே நிச்சயிக்கப்படுகின்றன? உங்களுடைய மகள் பருவம் அடைந்துவிட்டாள் என்று வைத்துக்கொள்வோம். இப்போது அவளுக்கு எந்த சமயத்தில் கல்யாணம் செய்யவேண்டும்? குடும்பத்தில் எல்லோரும் ஒன்றாக உட்கார்ந்து இதைப்பற்றி பேசுவார்கள், விவாதிப்பார்கள் - அந்தப் பெண்ணின் அபிப்பிராயத்தை கேட்பார்கள், அவள் என்ன சொல்கிறாள் என்று கவனிப்பார்கள் - இப்படி அந்த சூழ்நிலையை முழுமையாக ஆராய்வார்கள். கடைசியாக, எது சிறந்தது என்று முடிவுசெய்து, கல்யாணத் தேதியை குறிப்பார்கள், அப்படித்தானே? அதுபோல, மரணம் என்பதும் உங்கள் வாழ்க்கையின் இன்னொரு அங்கம்தான்; நீங்களும் அதை அப்படித்தான் கையாளவேண்டும்.

முற்காலத்தில், பலவிதமான வடிவங்களில் இருந்தாலும், இது பரவலாக வழக்கத்தில் இருந்தது. அரசர்கள்கூட வானப்ரஸ்த ஆசிரமத்தை கடைபிடித்தார்கள். கடைசி காலத்தில், தங்களுடைய உயிரை விடுவதற்கு சல்லேகனை அல்லது பிரயோபவேசத்தை கடைப்பிடித்தார்கள். சல்லேகனை முறையை கடைப்பிடித்தவர்களில் மிகவும் புகழ்பெற்றவர்களும் இருந்தார்கள். அதில் ஒருவர் சந்திரகுப்த மௌரியர். மௌரிய சாம்ராஜ்யத்தை உருவாக்கியது சந்திரகுப்த மௌரியர்தான். இந்தியா முழுவதையும் ஒன்றுபட்ட நாடாக இணைத்த முதல் சக்கரவர்த்தியும் அவர்தான். பாரதத்தில் அவருக்குப் பிறகு எந்த பேரரசரும், அதைவிடப் பெரிய சாம்ராஜ்யத்தை உருவாக்க முடியவில்லை. கி.மு. 332 முதல் கி.மு. 298 வரை அவர் ஆட்சி செய்தார். இவருடைய பேரன்தான் சக்கரவர்த்தி அசோகர். இவருக்கு நாற்பத்திரெண்டு வயது ஆனபோது, தன்னுடைய மகன் பிந்துசாரர் நாட்டை ஆளவேண்டும் என்று முடிவெடுத்து சிம்மாசனத்தை விட்டு விலகினார். அதன்பிறகு, ஜெயின் முனிவராகிய பத்ரபாகு அவர்களிடம் தானும் ஒரு துறவியாக சேர்ந்தார். மற்ற ஜெயின் துறவிகளோடு சேர்ந்து அவர் தென்னிந்தியாவுக்கு வந்துவிட்டார். தன்னுடைய ஐம்பத்தைந்தாவது வயதில், சல்லேகனை முறைப்படி கர்நாடகாவில் உள்ள சிரவணபெலகொலா என்ற இடத்தில் தன் உடலை விட்டார். இன்றைக்கும், சல்லேகனை ஏற்றுக்கொண்ட பிறகு அவர் இருந்த சிறிய குகை போன்ற அமைப்பை சிரவணபெலகொலாவில் பார்க்கமுடியும்.

நவீன காலத்தில், ஆச்சாரியர் வினோபா பாவே போல சமூகத்தில் பிரபலமாக இருந்தவர்கள் பலரும் இந்த விதத்தில் உயிர்விடும் முறையை தேர்ந்தெடுத்து இருக்கிறார்கள். இப்படியாக, நாம் வாழ்க்கையை வாழ்வதற்கு தேவையான முயற்சிகளை மேற்கொள்வதுபோல, மரணத்திற்கு நம்மை தயார்படுத்திக் கொள்ளவும் நாம் முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். "ஒருவேளை எனக்கு மரணம் ஏற்பட்டால், நான் இப்படித்தான் இறக்கவேண்டும்," என்று நீங்கள் முடிவு செய்யவேண்டும். உதாரணமாக, நாளைக்கே நான் இறக்கப்போகிறேன் என்று வைத்துக்கொள்வோம். நாளைக்கே இறக்க வேண்டுமென்று நான் திட்டம் ஒன்றும் போடவில்லை - ஆனால் அது நாளைக்கே வந்துவிட்டால். நான் அதற்குத் தயாராக இருக்கிறேனா? ஆம், 100 சதவிகிதம் தயாராக இருக்கிறேன். ஏனென்றால் என் வாழ்க்கை முழுவதும், நான் அதற்காக என்னை தயார்படுத்திக் கொண்டேன். அப்படியென்றால், நாளைக்கே இறக்கவேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன் என்று அர்த்தமா? இல்லை, அப்படி ஒன்றும் இல்லை. நான் நலமாக வாழ்வதற்கு தேவையான அனைத்தையும் நான் செய்வேன். நான் எப்போதுமே சொல்வேன்: "வாழ்க்கையில் ஒருவருக்கு, இருப்பதிலேயே உச்சமானதை பற்றி தீவிரமான ஆர்வம் வேண்டும். எல்லா உயிர்களைப் பற்றி கருணை வேண்டும். தன்னைப் பற்றி பற்றில்லாமல் இருக்கவேண்டும்." அதேபோல, நீங்கள் நல்லமுறையில் இறக்கவேண்டும் என்றால், உங்கள் மரணத்தைப் பற்றி ஓரளவுக்கு பற்றில்லாத நிலையை நீங்கள் உருவாக்கிக்கொள்ள வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால், அடித்துக்கொண்டும், அலறிக்கொண்டும் போராடியபடிதான் போய் சேர்வீர்கள். இப்படிப் போவது, மரணத்திற்குப் பிறகு நிகழப்போகும் விஷயங்களுக்கு நல்லதே கிடையாது.

## காசியில் உயிர்விடுவதன் முக்கியத்துவம்

காசியைப் போல மரணத்துடன் அந்தளவுக்கு ஆழமான தொடர்புகொண்ட நகரம் உலகில் எங்கேயும் இல்லை. உலகிலேயே மிகவும் பழமைவாய்ந்த நகரங்களுள் ஒன்று காசி. அப்போதிலிருந்து தொடர்ச்சியாக மனிதர்கள் வசிக்கும் நகரமும் காசி. காசிக்கு குறைந்தது 12,000 வருடங்களுக்கான வரலாறு இருக்கிறது என்பதை உணர்த்தும் ஆதாரங்கள் இருக்கின்றன. ஆனால், நிச்சயமாக காசி அதைவிடவும் பழமையானதுதான். ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு தொடர்ச்சியாக மனிதர்கள் வசிக்கும் நகரமாக மட்டுமில்லை, இது பல இடங்களிலிருந்தும் மனிதர்களை கவர்ந்திழுக்கும் சக்திமிக்க, மகத்தான ஆன்மீகக் காந்தமாகவும் இருந்தது. எல்லாப் பக்கங்களிலிருந்தும், எத்தனையோ தூரத்திலிருந்தும்

மக்கள் காசிக்கு வந்துகொண்டே இருப்பார்கள். பாரதத்திலேயே, எந்த காரணத்திற்காகவாவது காசிக்கு போக விருப்பம் இல்லாத ஒருவரை கண்டுபிடிப்பது சாத்தியமே இல்லை என்று சொன்னால், அது மிகையாகாது.

காசி எல்லோரையும் ஈர்ப்பதற்கு, இங்கே உயிர்விட வேண்டும் என்ற விருப்பம் மட்டும் ஒரே காரணம் ஆகாது. காசி என்பது மரணத்தை பற்றியது மட்டுமே கிடையாது. வாழ்க்கை மரணம் இரண்டுமே சமமான மரியாதையுடனும், உற்சாகத்துடனும் காசியில் கொண்டாடப்படுகின்றன. அந்த நகரத்தின் பிரம்மாண்டத்தையும், பேரழகையும் பார்த்து ரசிப்பதற்காகவும் மக்கள் கூட்டம் கூட்டமாக வந்தார்கள். ஆயிரக்கணக்கான வருடங்களில், இந்தியா முழுவதிலிருந்தும் வந்த மக்கள் இங்கே காசியில் தங்கிவிட்டார்கள். அவர்கள் பக்கத்து பக்கத்து குடியிருப்புகளில் இங்கே வாழ்வதை நாம் பார்க்கலாம். ஒவ்வொரு சமூகத்திற்கும் அவர்களுக்கே உரிய சொந்தமான அடையாளமும் பேச்சு முறையும் இன்னும் அப்படியே ஓரளவுக்கு இருக்கிறது. பல விதங்களில், மகத்தான இந்திய நாகரிகத்தின் ஒரு சிறு மாதிரி வடிவம் காசி. இந்திய நாகரிகத்தின் மையம் என்று இதைச் சொல்லலாம்.

காசி என்ற வார்த்தைக்கு வெளிச்சம் அல்லது ஒளி என்று அர்த்தம். ஆன்மீகத்தைப் பொருத்தவரை, காசி என்பது ஒளியின் கோபுரம் என்று சொல்லலாம். உங்களுக்குள் இருக்கும் ஒரு உன்னதமான பரிமாணத்தை நீங்களாகவே எட்டிட முடிவதில்லை. அந்தப் பரிமாணத்தை நீங்கள் அடைந்து உணர்வதற்கு உதவிடவே இப்படிப்பட்ட ஒளியின் கோபுரம் உருவாக்கப்பட்டது. இதுதான் அடிப்படையான நோக்கம். பிரபஞ்சத்தின் பிரம்மாண்டமான சாத்தியம் ஒன்று இங்கே நிஜமாகி உருவம் பெற்று நிற்கிறது - அதுதான் காசி. இப்படிப்பட்ட விதத்தில் உருவாகியுள்ள ஒரே இடம் காசி மட்டுமல்ல - இதுபோல இன்னும் நிறைய இடங்கள் உருவாக்கப்பட்டிருக்கின்றன. ஆனால், காசி முக்கியமானதாக இருப்பதற்கு காரணம், அதன் மகத்தான அளவும், அங்கிருக்கும் அழகியலும், அதன் பேரழகும்தான். அப்போதெல்லாம், இதுபோன்ற விஷயங்களைப் பற்றி யாரும் கேள்விப்பட்டிருக்கக் கூட வாய்ப்பில்லை. ஆனால், அந்த காலத்திலேயே இங்கு மூன்று அடுக்கு கட்டிடங்கள் இருந்தன. மக்கள் அதைப்பார்த்து அதிசயித்துப் போனார்கள். நதிக்கரையில், மூன்று அடுக்குகளுடன் வீடுகள் அமைந்திருப்பதை பார்த்தவர்களுக்கு நம்பமுடியாதபடி பிரமிப்பான அனுபவமாக இருந்தது. அது ஒரு தொழில்நுட்ப விந்தையாகவே இருந்தது.

ஆன்மீக ஞானத்தின் மிக உயர்ந்த பீடமாகவும் காசி விளங்கியது. நூற்றுக்கணக்கான முனிவர்களும், மகான்களும், குருமார்களும்,

தன்னை உணர்ந்த ஞானிகளும், பண்டிதர்களும் இங்கு வாழ்ந்ததாக சொல்லப்படுகிறது. அவர்கள் தங்களுடைய ஞானத்தை ஆயிரக்கணக்கான மாணவர்களுக்கு பரிமாறினார்கள். பாரதம் முழுவதிலிருந்தும் மட்டுமில்லாமல், உலகின் மற்ற பகுதிகளிலிருந்தும் கூட மாணவர்கள் ஆன்மீக அறிவை பெறுவதற்காக காசிக்கு வந்தார்கள். இந்திய ஆன்மீகத்தின் ஒவ்வொரு ஆன்மீக பரம்பரையும், ஒவ்வொரு பிரிவும், ஒவ்வொரு துணைப்பிரிவும் இங்கு காணப்பட்டது. அத்தனை பாதைகளையும் சார்ந்தவர்கள் இங்கு இருந்தார்கள். இங்கே நகரப் பகுதிக்குள் மட்டுமே, கிட்டத்தட்ட 3000 கோவில்கள் இருக்கின்றன. கலை, பண்பாடு, இசை ஆகியவை உண்மையில் ஊற்றெடுத்த மையமாக விளங்கியது காசி.

அழகியலில், ஆன்மீகத்தில், பேரறிவில் - இப்படி எல்லாவிதத்திலும் அந்தக் காலத்தில் இருந்ததிலேயே அழகுமிகுந்த இடமாக விளங்கியது காசி. இதெல்லாம் ஒன்றாக சேர்ந்து, ஒரு சக்திமிக்க ஈர்ப்பை உருவாக்கியது. மக்களின் கவனத்தை கவர்ந்திழுக்கும் சூழலை உருவாக்கியது. வரலாற்றின் எல்லா காலங்களிலும், புகழ்பெற்ற எத்தனையோ அடியார்களும், தத்துவ ஞானிகளும், கவிஞர்களும், எழுத்தாளர்களும், இசைக்கலைஞர்களும் தங்களுடைய வாழ்க்கையின் ஏதோ ஒரு கட்டத்தில் காசியில் வாழ்ந்திருக்கிறார்கள். ஆதியோகி சிவன் கூட காசியில் வாழ்ந்திருக்கிறார். அகத்திய முனிவர் காசியை விட்டு கிளம்ப வேண்டிய சூழ்நிலை வந்தபோது, அவர்கூட காசியின் பேரழகையும் பெருமையையும் போற்றிப் பல பாடல்களை கண்ணீர் மல்க பாடினார். இந்த நகரை விட்டுப் போவதற்கு அவருக்கு விருப்பமே இல்லை. ஆனால், அவருடைய பணியின் காரணமாக, அவர் தென்னாட்டுக்கு போகவேண்டி வந்தது.

நமது பாரம்பரியத்தில், மரணப்படுக்கையில் இருப்பவர்கள் மட்டும்தான் காசிக்கு போவார்கள் என்று எதுவும் இல்லை. அது மடத்தனமாக இருந்திருக்கும். தங்களுடைய வாழ்க்கையின் கடைசி 15-20 வருடங்களை அவர்கள் காசியில் கழித்தார்கள். ஏனென்றால், அவர்கள் இருப்பதிலேயே அழகுமிகுந்த இடத்தில் வாழ்ந்திட விரும்பினார்கள். இங்கேயே வாழ்ந்து, இங்கேயே தங்களது உடலைவிட வேண்டும் என்பது ஒரு முக்கியமான அம்சமாகியது. இப்படியாக, இந்த நகரத்தை உருவாக்குவதற்கான அடிப்படை காரணம், இங்கு வாழ்வதற்காகத்தான். காலப்போக்கில் மெதுவாக, தங்களுடைய தொழில் வேறு ஊரில் இருந்ததால், இந்த நகரில் வாழாமல் அங்கேயே வாழ்ந்தார்கள். அப்போது கூட, தங்களுடைய கடைசி காலத்திலாவது காசியில் வாழவேண்டும் என்று விரும்பினார்கள். இறப்பவர்களின் நகரம் என்ற பெயர் காசிக்கு இப்படித்தான் வந்தது.

காசி நகரத்தின் எல்லை சுற்றளவில் மிகவும் பெரியது. இதற்கு *பஞ்ச க்ரோஷி* பாதை என்று பெயர். இந்தப் பாதை ஒரு மிகப்பெரிய வட்டமாக அமைந்துள்ளது. இது தோராயமாக 84 கிலோமீட்டர் நீளம் உடையது. நமது பாரம்பரியத்தில், *"காஷ்யாம் மரணம் முக்திஹி"* என்று நம்பினார்கள். அப்படியென்றால், இந்த சுற்றளவுக்குள் இறப்பவர்கள் எவரும் நிச்சயமாக முக்தி அடைவார்கள் என்று அர்த்தம். நீங்கள் வாழ்க்கை முழுவதும் மோசமானவராக வாழ்ந்திருந்தாலும் கூட, காசியில் உயிர்விட்டால் முக்தி அடைவீர்கள் என்று சொன்னார்கள். அது நிச்சயமாக நிகழும்படி செய்ய சிவபெருமான் காசியில் காலபைரவர் ரூபத்தில் இருக்கிறார். காலபைரவர் என்றால் கருமையானவர்; காலம்-இடம் ஆகியவற்றின் எல்லையற்ற தன்மையின் அடையாளமாக இருப்பவர். காலா என்றால் காலம், பரவெளி இரண்டுமே என்று அர்த்தம். இது சிவனின் பயங்கரமான வடிவம். காலபைரவர் என்ற ரூபத்தில் அவர் அழிக்கும் செயலில் ஈடுபட்டுள்ளார். அவர் இதையும் அதையும் அழித்திடவில்லை. அவர் காலத்தை அழிக்கிறார். பொருள்தன்மையில் நிஜமாக இருக்கும் எல்லாம் காலத்தின் வரம்புக்குள்தான் இருக்கின்றது. உங்களுடைய காலமே அழிந்துவிட்டால், உங்களுக்கு எல்லாமே முடிந்துவிட்டது என்று அர்த்தம். காலபைரவர் அதைத்தான் செய்கிறார்.

காசி க்ஷேத்திரத்தில் காலபைரவர் ரூபத்தில் இருக்கும் சிவன் இங்கு உயிர் விடுபவர்கள் ஒவ்வொருவருக்கும் *"தாரக"* மந்திரத்தை வழங்கி, தனிப்பட்ட முறையில் முக்தி அளிக்கிறார் என்று ஐதீகம். காசியின் எல்லைக்குள் மரணத்தின் தெய்வமாகிய எமனுக்கு எந்த அதிகாரமும் கிடையாது என்று சொல்கிறார்கள். எமனும், எமதூதர்களும் காசி நகரத்துக்குள் நுழையக்கூட முடியாது. ஒருவருடைய பொருள் உடல் போய்விட்ட பின், காலபைரவர் அவருக்கு *யாத்ன சரீரம்* எனப்படும் பிரத்தியேகமான சூட்சும சக்தி உடலை அளிக்கிறார். இதைப் பயன்படுத்தி அவர்கள் தங்களுடைய கர்மாவை கரைத்துக்கொள்ள முடியும். வழக்கமாக, ஒருவர் அனுபவிக்கும் துன்பத்தைவிட, இந்த யாத்ன சரீரத்தில் இருக்கும்போது அனுபவிக்கும் பாதிப்பு, நாற்பத்திரண்டு மடங்கு அதிக தீவிரத்துடன் இருக்கும் என்று சொல்கிறார்கள். இது அந்தளவுக்கு தீவிரமாக நிகழ்வதால், எல்லாம் சட்டென்று உடனடியாக முடிந்துவிடுகிறது. அதாவது, வழக்கமாக மரணத்திற்குப் பிறகு ஏற்படும் நிகழ்வுகள் எல்லாம் இங்கே செல்லுபடியாகாது. அதிதீவிரமான வேறு ஒரு நிகழ்வு இங்கே ஏற்படுகிறது என்று அர்த்தம். இதைத்தான், மேலே சொன்ன விதத்தில் நமக்கு அழகாக உணர்த்தியிருக்கிறார்கள்.

பாரம்பரியத்தில், இதற்கு *பைரவி யாத்னா* என்று பெயர். யாத்னா என்றால் உச்சக்கட்ட துன்பம் என்று அர்த்தம். இது உடலுக்கு

அப்பாற்பட்ட நிலையில் உங்களுக்கு நடக்கக்கூடிய ஒன்றாகும்; ஆனால் காலபைரவர், உங்களுக்கு அது இப்போதே, இங்கேயே நிகழும்படி செய்கிறார். அதனால், மரணம் நிகழும் கணத்தில் உங்களுடைய பலப்பல ஜென்மங்கள், தீவிரமான விதத்தில், சில கணங்களிலேயே ஓடி முடிகிறது. இன்னும் பல பிறவிகளில் விரிந்து அனுபவிக்க வேண்டிய இன்பங்கள், துன்பங்கள், வேதனைகள் எல்லாம், இப்போது இங்கேயே ஒரு மைக்ரோ செகண்டில் நடந்து முடிகிறது. உங்களால் தாங்கமுடியாத அளவுக்கு பயங்கர தீவிரத்தில் அது நடக்கிறது. இந்த பாதிப்புகள் எல்லாம் மிகவேகமாக முடிவடைய வேண்டுமென்றால், இதை நாம் அதி தீவிரமாக ஆக்கினால்தான் வேகமாக முடிந்திடும். இது உங்களுடைய கோடவுனில் இருக்கும் கர்ம சரக்குகளை எல்லாம் ஃபாஸ்ட் ஃபார்வர்ட் செய்து அதிவேகமாக ஓட்டி முடிப்பதாகும். வெதுவெதுப்பான தீவிரத்தில் இருந்தால், இது காலம்காலமாக நீண்டு போய்க்கொண்டே இருக்கும். அதனால் காலபைரவர், கற்பனை செய்யமுடியாத அளவுக்கு பயங்கரமான வேதனையை உருவாக்குகிறார். அதன்பிறகு, உங்களுக்குள் கடந்த காலத்து பதிவுகள் துளியும் மீதம் இருக்காது. இதையெல்லாம் அவர் எவ்வளவு குறுகியதாக இருக்கமுடியுமோ, அவ்வளவு குறுகியகாலத்தில் உங்களுக்கு செய்துவிடுகிறார்.

நான் இதைப் பல விதங்களில் சொல்லியபடியே இருக்கிறேன்: அடிப்படையில், ஆன்மீகம் என்றாலே, உங்கள் வாழ்க்கையை ஃபாஸ்ட் ஃபார்வர்ட் செய்து வேகமாக ஓட்டுவதுதான். எல்லாமே இப்படி அதிவேகமாக ஓடுவதால், வழக்கத்தைவிட அதிகமாகவே உங்களுக்கு பாதிப்பு வரலாம். எதை நீங்கள் பத்து வருடங்களுக்கு நீட்டியிருப்பீர்களோ, உதாரணமாக சொன்னால், ஒரு மாதத்திற்குள் நடந்துமுடிகிறது என்று வைத்துக்கொள்ளலாம். அதனால், நீங்கள் அனுபவிக்கும் பாதிப்பின் தீவிரம் மிகமிக கடுமையாக இருக்கும். ஆனந்தமான, பரவசமான கணங்களும் இருக்கும். அதேசமயம், உங்களுக்குள் வேகமாக ஏற்படும் பாதிப்பும் பெரியளவில் இருக்கும்.

காசியில் மட்டும்தான் இப்படி நடக்கிறதா? இல்லை. பிரதிஷ்டை செய்யப்பட்ட எந்த ஒரு இடத்திலும் இப்படி நடக்கும். ஒருவிதத்தில் சொல்லப்போனால், ஒருவருக்கு தீட்சை கொடுத்தோம் என்றாலே, அது அவரை பைரவி யாத்னாவில் போட்டது போலத்தான். அவர்களுக்கு வேண்டுமென்றால், அதை இன்னும் கொஞ்சம் அதிகரிக்கலாம். அதைச் சமாளிப்பதற்கு அவர்கள் தயாராக இருக்கவேண்டும், அவ்வளவுதான்! பிரதிஷ்டை செய்யப்பட்ட இடம் என்றால் - உயிர் ஒரு இடத்தில் தீவிரமாக குவிந்திருக்கிறது என்று அர்த்தம். நாற்பத்திரெண்டு மடங்கு அதிகமாக பாதிப்பு ஏற்படும் என்றால், வழக்கமாக நீங்கள் அறிந்ததைவிட அந்த

இடத்தில் உயிர்சக்தி நாற்பத்திரெண்டு மடங்கு அதிக தீவிரத்துடன் இருக்கிறது என்று அர்த்தம். அப்படியென்றால், நாற்பத்திரெண்டு மடங்கு அதிக வேகத்தில் ஓடும்படி எரிபொருளை எரிக்கிறீர்கள் என்று அர்த்தம். அதாவது எல்லாமே அதிவேகமாக இருக்கிறது, இது நல்லதுதான். கொஞ்ச நாட்களுக்கு பிறகு உங்களுக்கு பழகிப்போனவுடன், அது யாத்னாவாக இருப்பதில்லை, சும்மா அப்படியே எரிகிறது. நீங்கள் உச்சமான தீவிரத்தில் இருக்கிறீர்கள். பிரதிஷ்டை செய்யப்பட்ட ஒவ்வொரு இடத்துக்கான நோக்கமும் இதுதான். இப்படி. தங்களுடைய கர்மக் குவியல் முழுவதையும் கடைசி காலத்திலாவது மொத்தமாக காலி செய்யலாம் என்ற தீவிரமான ஆசையில்தான் காசியில் வந்து இறக்கவேண்டும் என்று விரும்பினார்கள். காசியையும் உங்களுடைய கர்மாவில் ஒன்றாக ஆக்குவது நோக்கமல்ல. கர்மா மொத்தத்தையும் காலி செய்வதின் விளைவாக எல்லா அனுபவங்களும் தீவிர வேகத்தில் ஏற்படுகின்றன.

காசி க்ஷேத்திரத்தை போல் பிரதிஷ்டை செய்யப்பட்ட இடங்களில் இது சிறப்பாக நடந்திடும். காசி நிச்சயமாக முன்பு இருந்ததுபோல் இல்லை என்றாலும், இன்றைக்கும் அது மிகவும் முக்கியமானதாகவே இருக்கிறது. கணிசமான முக்கியத்துவம் கொண்டிருக்கிறது. ஆனால், இந்த தன்மைகளுடன் உருவாக்கப்பட்ட ஒரே இடம் காசி மட்டும்தானா? அப்படி கிடையாது. இன்னும் எத்தனையோ இடங்கள் இதே தன்மைகளோடு இருக்கின்றன. ஆனால், அவையெல்லாம் காசியைப்போல மகத்தான அளவில் இல்லாமல் இருக்கலாம். தியானலிங்கம் அப்படிப்பட்ட இடம்தான். ஆனால், காசிக்கு ஈடாக அவ்வளவு பேருக்கு இங்கே இடம் போதாது. அம்மாதிரி இடங்களில், வாழ்க்கையும் இன்னும் சிறப்பாக நடக்கும், மரணமும் இன்னும் சிறப்பாக ஏற்படும். இப்படிச் செய்வது எப்பொழுதுமே மோட்சத்திற்கு கொண்டுபோகுமா? அப்படியிருக்க அவசியமில்லை. ஆனால், அதற்கு இன்னும் கொஞ்சம் நெருக்கமாக போகும் வாய்ப்பிருக்கிறது. நீங்களாகவே என்ன செய்திருக்க முடியுமோ, நிச்சயமாக அதைவிட சிறந்ததாகவே இது இருக்கிறது.

மக்கள் தங்களுடைய வாழ்வின் கடைசி பாகத்தை காசியில் கழிக்க விரும்பியதற்கு இன்னொரு காரணம் - இங்கே எந்த நேரத்திலும் ஏராளமான ஞானிகளையும், ஆன்மீகத்தில் உயர்ந்து வளர்ந்திருந்த மனிதர்களையும் பார்க்கமுடியும் என்ற நிலை இருந்தது. இந்த நகரின் ஒவ்வொரு தெருவிலும் ஞானமடைந்த ஒரு மனிதரை பார்க்கலாம். மேலும், அந்த காலத்தில் வீட்டிற்குள் குளியலறை கிடையாது. அதனால், ஊரிலிருந்த அனைவருமே நதியில் ஸ்நானம் செய்ய, காலையும் மாலையும் படித்துறைக்கு வரவேண்டும். இப்படி ஆன்மீக திறன்களில்

வல்லமை பெற்றவர்கள் எண்ணிக்கையில் ஏராளமாக இருந்ததால், அப்படிப்பட்டவர் நதிக்கரைக்கு வரும்போது, மரணத்திற்கு நெருக்கமாக இருக்கும் ஒருவரை கவனிப்பதும், தேவையான ஆன்மீக உதவியை அளிப்பதும் தவிர்க்க முடியாதது - இப்படித்தான் அன்றைய நிலை இருந்தது. அது மட்டுமில்லை, இங்கே வருபவர்கள் ஏற்கனவே ஒரு குறிப்பிட்ட மனிதரை அறிந்திருக்கவும் வாய்ப்பிருக்கிறது. அல்லது இறக்கும் நிலையில் உள்ளவர்களுக்கு உதவும் வல்லமை பெற்றவர்களைப் பற்றி விசாரித்து தெரிந்துகொள்ளவும் வாய்ப்பிருக்கிறது. இவ்வளவு சாத்தியங்களும், வாய்ப்புகளும் காசியில் நிறைந்திருந்தன. அதனால்தான், வாழ்நாள் முழுவதையும் அறியாமையிலேயே கழித்தவர்களும், வாழ்வில் ஒரு ஆன்மீக சாதனையும் செய்யாதவர்களும்கூட காசியில் உயிரைவிட்டால், அவர்களுக்கும் மரணம் மிக உயர்ந்த நிலையில் நிகழ்ந்திடும் என்ற உத்தரவாதம் இருந்தது.

காசிக்கு, "மஹா ஸ்மஷானம்" என்ற பெயரும் உண்டு - அதாவது, மகத்தான மயானம் என்று அர்த்தம். வழக்கமாக, ஒரு நகரத்தில் அல்லது கிராமத்தில் மயானம் என்பது ஊரைவிட்டு தள்ளி தூரமாகத்தான் இருக்கும். மனிதர்களின் குடியிருப்பிலிருந்து தூரமாகவே அமைந்திருக்கும். ஏனென்றால், ஒருவருக்கொருவர் மிகவும் நெருக்கமாக இருப்பது, உயிருடன் இருப்பவர்களுக்கும் நல்லதில்லை, இறந்தவர்களுக்கும் நல்லதில்லை. ஆன்மீகப் பாதையில் இருப்பவர்கள் மட்டும் தங்களுடைய சாதனாவின் ஒரு பகுதியாக அங்கே இருக்கலாம். மற்றவர்கள் தள்ளி இருப்பதே அனைவருக்கும் உகந்தது. காசியிலோ, அந்த நகரமே மகா மயானத்தை சுற்றித்தான் உருவாக்கப்பட்டிருக்கிறது.

இன்றைக்கும், 24 மணி நேரமும், படித்துறைகள் முழுக்க பிணங்கள் எரிந்து கொண்டிருப்பதை பார்க்கலாம். காரணம், உள்ளூர்க்காரர்களுக்கு மட்டுமில்லாமல், தூரமான இடங்களிலிருந்து வருபவர்களுக்கும் இங்கே சேவை அளிக்கப்படுகிறது. காசியின் சுற்றுவட்டாரத்தில் இருநூறு கிலோமீட்டர் தூரத்திற்குள், எங்கு எப்போது ஒரு மரணம் ஏற்பட்டாலும் அந்த உடலை எரித்திட காசிக்குத்தான் வருவார்கள். அந்த மனிதர் காசியில் வாழமுடியாமல் இருந்திருக்கலாம். காசியில் உயிர்விட முடியாமல் இருந்திருக்கலாம். அவருடைய உடலையாவது இங்கே எரித்துவிட்டு, அஸ்தியை கங்கையில் கரைக்கவேண்டும் என்பதே அவர்களுடைய விருப்பம். காலத்தின் தொடக்கத்திலிருந்து இந்த மயானத்தின் தீ அணையாமல் எரிந்து கொண்டிருப்பதாகவும், வழிவழியாக இப்படியே அணையாமல் பராமரிக்கப்படுவதாகும் ஐதீகம். அங்கே படித்துறைகளில் ஒரு குடும்பம், தலைமுறை தலைமுறையாக வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இந்த தீ அணையாமல் தொடர்ந்து எரிவது

அவர்களுடைய பொறுப்பில் இருக்கிறது. அவர்கள் அந்த தீயைத்தான் அங்கு எரியும் ஒவ்வொரு உடலுக்கும் அளிக்கிறார்கள்.

இப்படி காலப்போக்கில் காசியில் வாழவேண்டும் என்ற நிலையில் ஆரம்பித்து, காசியில் உயிர் விடவேண்டும் என்ற நிலைக்கு வந்து, காசியில் உடலையாவது எரிக்கவேண்டும் என்ற நிலை வந்தது. இன்றைக்கோ, வாழ்க்கையில் ஒரு தடவையாவது காசிக்கு போகவேண்டும் என்று விரும்புகிறார்கள். அதுவும் புனித யாத்திரைக்கு வருபவராக இல்லாமல், சுற்றுலாவுக்கு வருபவர்களாகத்தான் இருக்கிறார்கள். அதேபோல, காசி நகரமும் மிகப்பெரிய அளவில் மாறிவிட்டது. தன்னுடைய பண்டைய புகழ்பெற்ற மகத்தான ரூபத்தில் இல்லாமல் போனது. அதன் அமைப்பையும் வடிவத்தையும் நவீன முன்னேற்றங்கள் பெரியளவில் பாழ்படுத்திவிட்டன. அப்படியெல்லாம் இருந்தாலும் கூட, அந்த இடத்தின் சூழல் முழுவதும் மனிதர்களின் மேல் ஒரு தாக்கத்தை இன்னும் ஏற்படுத்துகிறது. ஒருவருக்கு கர்மநிலையில் ஏற்படும் தாக்கத்தைவிட, மனரீதியாக ஒரு புரிதல் ஏற்பட வாய்ப்பிருக்கிறது - அதாவது, வாழ்க்கை என்பதை துளியும் அலட்டிக்கொள்ளாமல் நடத்துகிறார்களே என்று பார்க்கும்போது ஏற்படும் அறிவுப்பூர்வமான புரிதல். வழக்கமாக எதை கண்காணாத விதத்தில், ஒதுக்குப்புறமாக செய்வார்களோ, அதை இங்கே எல்லோரும் பார்க்கும்படி திறந்தநிலையில் செய்கிறார்கள். நீங்கள் இறக்கப்போகும் மனிதர்களுக்கான விடுதியில் சேர்ந்து உயிர்விடத் தேவையில்லை. இங்கே நதிக்கரையிலேயே, சும்மா அப்படியே உட்கார்ந்து உயிர்விட முடியுமே. இங்கே நதிக்கரையிலேயே உடலையும் எரித்துவிடலாமே. இங்கே இதை சாதாரணமானதாக பார்க்கிறார்கள். சர்வ சாதாரணமானதாக பார்க்கிறார்கள். அதனால், இப்படிப்பட்ட இடத்திற்கு வந்து பார்ப்பதே ஒருவிதமான தாக்கத்தை ஏற்படுத்த முடியும். மிகவும் மோசமாக சிதைக்கப்பட்டு இருந்தாலும், ஆன்மீகத்தைப் பொருத்தவரை, இன்றைக்கும் காசி அதே ஆற்றல்மிக்க சாத்தியமாக அப்படியே இருக்கிறது. ஒளியின் கோபுரங்களை புத்தம் புதிதாக உருவாக்கிடும் நேரம் நிச்சயமாக வந்துவிட்டது.

அத்தியாயம் 7

# இறக்கும் உயிருக்கு உதவுவது எப்படி?

உடலற்ற உயிரால் தன்னை துளியளவும் பாதுகாத்துக்கொள்ள முடியாது. அதனால்தான் வாழ்வின் அந்த அம்சத்தை கையாளும்போது அதிகபட்ச பொறுப்புணர்வுடன் இருக்கவேண்டும். கடைசி கணத்தில் இந்த உயிருக்கு யாராவது சிறிதளவு உதவி செய்தால், அது நீண்ட காலத்திற்கு பயனுள்ளதாக இருக்கும். அடுத்தமுறை வரும்போது அவர் செய்யவேண்டிய சாதனாவில் பெரும்பகுதி அந்த கணத்திலேயே பார்த்துக்கொள்ளப்படுகிறது.

## கடைசி கணங்கள் முக்கியம், ஏன்?

உடலுள்ள நிலையிலிருந்து உடலற்ற நிலைக்கு மாறிடும் அந்த கணம் ஏன் அவ்வளவு முக்கியமானதாக இருக்கிறது? ஒரு உதாரணம் பார்ப்போம். இப்போது, நீங்கள் உடலில் இருக்கும்போது, நீங்கள் ஒரு நதியைப்போல ஒரே திசையில் போய்க் கொண்டிருக்கிறீர்கள். உடல் இல்லாமல் போகும்போது, அந்த நீர் ஆவியாகி ஒரு மேகமாக இருப்பதுபோல் நீங்களும் இருக்கிறீர்கள். காற்று எந்த திசையில் அடிக்கிறதோ, அந்த திசையிலெல்லாம் போவீர்கள். இப்போது உங்களுக்கென்று ஒரு திசையே கிடையாது. அந்த நதியாவது தெளிவாக கடலை நோக்கித்தான் போகிறது. ஆனால், இந்த மேகம் எங்கே போகிறது என்று நமக்குத் தெரியாதே. காற்று எந்த பக்கம் வீசுகிறதோ, அந்தப் பக்கத்தில் போகும். உடலை விடுவதும், பிரித்துப் பார்த்து புரிந்துகொள்ளும் மனத்தை இழப்பதும் இதைப் போன்றதுதான்.

பாகுபடுத்திப் பார்க்கும் மனம் இருந்தால், நீங்கள் இப்படிப் போவதா அல்லது அப்படிப் போவதா என்று பகுத்துப் பார்த்து முடிவெடுக்கலாம். ஆனால் இறந்த பிறகு, நீங்கள் காற்றில் மிதக்கும் மேகத்தைப்போல ஆகிவிடுவீர்கள். உங்களுடைய கர்ம வாசனைகளுக்கு ஏற்ப, அதன் போக்குப்படி தள்ளப்பட்டு மிதப்பீர்கள். தேவதைகள் மேகங்களில்

பறப்பதாக சிலர் சொன்னார்கள், அல்லவா? சரிதான், அவர்களும் சரியான உவமையைத்தான் பயன்படுத்தியிருக்கிறார்கள்.

உங்கள் புத்தியின் பாகுபடுத்தும் திறனை பயன்படுத்துவதும், அதன்மூலம் வாழ்க்கையின் பாதையை நீங்களே சுயமாக தேர்ந்தெடுப்பதும்தான் மனிதனாக இருப்பதின் விசேஷம். அதை நீங்கள் பயன்படுத்தவில்லை என்றால், அந்தளவுக்கு ஒன்றும் நீங்கள் மனிதனாக வாழவில்லை என்று அர்த்தம். உதாரணமாக, எனக்கு பசிக்கிறது என்று வைத்துக்கொள்வோம். ஆனால், என் முன் உணவு வந்தாலும், நான் புத்தியைப் பயன்படுத்தி, "இல்லை, நான் சாப்பிட மாட்டேன்," என்று பாகுபடுத்தி முடிவெடுக்க முடியும். எனக்குள் இருக்கும் இந்தப் பாகுபடுத்தும் திறனைப் பயன்படுத்தி, உடலில் எவ்வளவுதான் கட்டாயங்கள் எழுந்தாலும், நான் வேண்டாம் என்று முடிவெடுத்துவிட்டால், அதை நான் செய்யமாட்டேன். சாப்பாடு வேண்டாம் என்று முடிவுசெய்தால் எப்படியும் சாப்பிட மாட்டேன், அவ்வளவுதான். என்னால் பிரித்துப்பார்க்க முடிகிறது. இந்தத் திறன் இல்லையென்றால், நீங்கள் காற்றுப்போல ஆகிவிடுகிறீர்கள்; உங்களுடைய கர்மப் பதிவில் உள்ள வாசனைகளின்படிதான் உங்கள் போக்கு இருக்கும்.

உங்கள் உடலை இழக்கும்போது, உங்களுடைய பாகுபடுத்தும் திறனும் போய்விடுகிறது. ஞாபகங்கள் எல்லாமும், மனதின் மற்ற அம்சங்களும் இன்னும் அப்படியே இருக்கின்றன, பிரித்துப் பார்க்கும் செயல் மட்டும் போய்விடுகிறது. அந்த கணத்தில் உங்களுக்குள் சிறிதளவு இனிமை இல்லாத உணர்வு வந்தாலும்கூட, அப்போது அந்தத் தன்மை கோடி மடங்காக பெருகிடும். உங்களுக்குள் சிறிதளவு இனிமையை உருவாக்கினீர்கள் என்றாலும், அப்போது அந்த இனிமை கோடி மடங்காக பெருகிடும். ஏன் இப்படி ஏற்படுகிறது? இன்றைக்கு உங்களுக்கு கொஞ்சம் கோபம் வருகிறது என்று வைத்துக்கொள்வோம். உங்களுடைய பாகுபடுத்தும் புத்தியைப் பயன்படுத்தி நீங்கள் அதை கட்டுப்படுத்த முடியும். ஆனால், இந்தப் பாகுபடுத்தும் புத்தி இல்லாதபோது, அந்த துளியளவு கோபம் பெரிதாக பற்றிக்கொண்டு பைத்தியம்போல் ஆகிடும், இல்லையா? மரணத்தின் அந்தக் கணம் மிகவும் இன்றியமையாதது, முக்கியமானது. அந்தக் கணத்தில் ஒருவரின் மனதில் என்ன இருக்கிறதோ - அது இனிமையானதோ, இனிமை இல்லாததோ, பாகுபடுத்தும் புத்தி இல்லாததால், அது பலப்பல மடங்கு பெருகிடும். இதனால்தான், ஒரு மனிதர் இறக்கும்போது அவரை நிம்மதியாக இறந்திட அனுமதிக்க வேண்டும் என்று சொன்னார்கள். நீங்கள் உலகின் எந்தப் பகுதியிலிருந்து வந்தாலும், எந்த கலாச்சாரத்திலிருந்து வந்தாலும், எல்லோருக்கும் இது தெரிந்திருந்தது. ஒவ்வொரு கலாச்சாரமும் இதை கடைப்பிடித்தது.

உடலற்ற நிலையில் இருக்கும் இந்த காலகட்டத்தின்போது, உங்களுடைய இனிமை உணர்வு பெருகிப்போனால், நீங்கள் சொர்க்கத்தில் இருக்கிறீர்கள் என்று சொல்கிறோம். உங்களுக்குள் இனிமை இல்லாத உணர்வு பெருகிப்போனால், நீங்கள் நரகத்தில் இருக்கிறீர்கள் என்று சொல்கிறோம். சொர்க்கமும் நரகமும் எங்கேயோ ஒரு இடத்தில் இருக்கும் என்று கிடையாது. சொர்க்கமும் நரகமும் மனிதனின் அனுபவத்தில்தான் இருக்கின்றன. சொர்க்கத்திலோ நரகத்திலோ இருப்பதற்கு நீங்கள் உடல் இல்லாமல் இருக்கவேண்டும் என்ற அவசியமில்லை - நீங்கள் உயிருடன் இருக்கும்போது கூட, உங்களுக்குள் அது இருக்கமுடியும். இங்கே உடலோடு இருப்பதின் தனிச்சிறப்பு என்னவென்றால், சில சமயம் நமது அனுபவத்தில் நமக்குள் நரகமாகிவிட்டால், பாகுபடுத்தும் திறனைப் பயன்படுத்தி அந்தக் குழியிலிருந்து வெளியே வந்துவிட முடியும். அதேபோல, சில சமயம் உங்கள் அனுபவத்தில் உங்களுக்குள் சொர்க்கமாக இருந்தால், பாகுபடுத்தும் திறனைப் பயன்படுத்தி, அது எவ்வளவுதான் இனிமையான அனுபவமாக இருந்தாலும் அதை விட்டுவிட்டு, அதைத்தாண்டி அடுத்ததுக்கு நகரலாம். உடலுடன் இருக்கும்போதே தன்னுடைய பாகுபடுத்தும் திறனை இழந்தவர்கள் மனஅழுத்தம் ஏற்பட்டால் நீண்ட காலங்களுக்கு மனச்சோர்வில் ஆழ்ந்து விடுவார்கள். அதேபோல, அவர்களுக்கு இனிமையான அனுபவம் ஏற்பட்டால் அது அடிமைப்படுத்தும் பழக்கமாக மாறிவிடும்.

நமது கலாச்சாரத்தில், இறக்கும் நிலையில் இருப்பவர்களை எப்படி பார்த்துக்கொள்ள வேண்டும் என்பதற்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. ஒருவர் சரியான இடத்தில், சரியான சூழலில், சரியான உணர்ச்சியோடு, சரியான எண்ணத்தோடு உயிர் விடவேண்டும் என்று சொல்லப்பட்டது. ஒருவர் உயிர்விடும் நேரத்தில், சுற்றி நின்று, "ஐயோ, அம்மா" என்றெல்லாம் சொல்லக்கூடாது. "ராமா," "கிருஷ்ணா," "சிவா," - இப்படி ஏதாவது உச்சரிக்க வேண்டும் என்று சொன்னார்கள். ஒருவர் தனக்கு அப்பாற்பட்டு எதையாவது சிந்திக்கும்படி ஒரு எண்ணத்தை உருவாக்குவதுதான் இதன் நோக்கம். இது மிகவும் ஆழமான விஞ்ஞானப் பூர்வமான முறையாகும். இது உணர்ச்சிப்பூர்வமான செயல் கிடையாது. ஏனென்றால், இந்த கடைசி கணத்தில் உருவாக்கும் எண்ணமும் உணர்ச்சியும்தான் அந்த உயிரின் முக்கியமான வாசனையாக, போக்காக இருக்கும். அதனால்தான், "உங்களுடைய எதிரியாக இருந்தால்கூட, இப்போது அவர் இறக்கும் நிலையில் இருந்தால், நீங்கள் அவருக்கு ஒரு உகந்த சூழலை உருவாக்கி தரவேண்டும். அவர் நிம்மதியாக உயிர் விடும்படி நீங்கள் பார்த்துக்கொள்ள வேண்டும். அந்தச் சமயத்தில் அசிங்கமான விஷயம் எதையும் செய்யாதீர்கள்," என்று சொன்னார்கள். ஒருவேளை, நீங்களே போர்க்களத்தில் அவரை சுட்டிருக்கலாம். ஆனால்,

அவர் உயிர்விடும் சமயத்தில், உங்கள் தொப்பியை கழட்டிவிட்டு மதிப்புடன் நின்று, "ராமா ராமா" என்றோ அல்லது உங்களுக்கு தெரிந்த ஏதாவது ஒன்றை உச்சரிக்க வேண்டும் என்று சொன்னார்கள். காரணம், இந்த வாசனைகள் இப்படியே பல ஜென்மங்களுக்கு தொடரும். அவர் எந்த மாதிரி வாழ்க்கையை வாழ்ந்திருந்தாலும் கடைசி கணத்தில் அவர் சரியான தன்மையை உருவாக்கிக்கொண்டால், அவருடைய பயணம் மோசமான விதத்தில் இல்லாமல், அவர் நல்லவிதமாக பயணிக்கும்படி அமையும். இப்படியாக, ஒருவரின் வாழ்வு மேன்மை அடைவதற்கு, இது ஒரு மகத்தான வாய்ப்பாக அமைகிறது.

ஒருவர் இறந்து கொண்டிருக்கும் நிலையில், ஏற்கனவே முடிவு நெருங்கிவிட்டது, கதை முடிந்துவிட்டது என்ற நிலையில், சண்டையை தொடர்வதில் எந்த அர்த்தமும் இல்லை. அது மட்டுமில்லை, உங்கள் பகை அவருடைய உடல் இருக்கும் வரைதானே. அவர் உடலை விட்டுவிட்டால், நாடகமெல்லாம் முடிந்து போய்விடுகிறது. இனி அவர் உங்களுடைய எதிரியாக இல்லை, நண்பனாகவும் இல்லை, அவர் வெறும் உயிர்தான். இப்போது உயிரை உயிராகவே நடத்துவது அவசியம். நாடகம் நடந்து கொண்டிருக்கும்போது, நாம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக அதைப் பார்க்கிறோம். பலவிதமாக அதோடு தொடர்புபடுத்திக் கொள்கிறோம். பலவிதமாக அதற்கு எதிர்செயல் செய்கிறோம். ஆனால், ஆட்டம் முடிந்து திரை விழுந்த பிறகு, எல்லோருமே எழுந்து நிற்கிறோம். தூங்கிக் கொண்டிருக்கும் ஆள் மட்டுமே அப்படியே இருப்பார். மற்றபடி எல்லோருமே, அந்த நாடகத்தை ரசிக்காதவர்கள்கூட எழுந்து நின்று மதிப்பை தெரிவிக்கிறார்கள். நாடகத்தின் ஒவ்வொரு காட்சியும் பாராட்டு பெற்றிருந்தால் அல்லது மதிப்புடன் பார்க்கப்பட்டால்கூட பிரமாதமாக இருக்கும். அதில் நீங்கள் வெற்றி பெறவில்லை என்றாலும், கடைசி காட்சியாவது, அதாவது மரணமாவது பாராட்டும் வகையில் இருக்கவேண்டும்.

அதனால்தான், இறந்துபோனவர்களை கூட மதிப்புடன் நடத்தத் தவறும் சூழ்நிலையை எங்காவது பார்க்கும்போது, உங்களுக்குள் ஏதோ ஆட்டம் கண்டு போகிறது. மரியாதையுடன் நடத்தபடவேண்டிய அவசியம் உடலுக்கு கிடையாது. மெதுவாக பிரிந்து கொண்டிருக்கும் அந்த உயிருக்குத்தான் அது அவசியம். அவர் எப்படி வாழ்ந்தார் என்பது முக்கியமில்லை; உயிர்விடும் நிகழ்வாவது நல்லமுறையில் ஏற்படவேண்டும். ஒவ்வொரு மனிதனுக்கும் அந்தளவுக்கு நோக்கம் இருப்பது அவசியம். இதுதான் அந்த மனிதருக்காக நாம் செய்யக்கூடிய குறைந்தபட்ச செயல். நாமும் ஒரு உயிராக இதையாவது செய்வது அவசியம். உலகின் எல்லா இடங்களிலும் மனிதர்களுக்கு இதைப்பற்றி கணிசமான விழிப்புணர்வு

இருக்கிறது. இந்தியாவிலோ இந்தச் செயல் விழிப்புணர்வுடன் கவனமாக நிகழ்த்தப்பட்டது.

குருக்ஷேத்திரப் போரில், எல்லோரையும்விட திறமைமிக்க போர்வீரன் அர்ஜுனன்தான். ஆனால் அவனுடைய அண்ணனாகிய பீமன்தான் அதைவிட வீரமும், தீரமும் கொண்டவன் என்று சொன்னார்கள். ஆனால், எப்போது அவன் தன்னுடைய எதிராளியின் உடலை இழிவுப்படுத்தினானோ அப்போது அவனுடைய புகழுக்கு களங்கம் ஏற்பட்டது. போரில் ஒரு சண்டையின்போது, திரௌபதியை அவமானப்படுத்திய துச்சாதனனுக்கு எதிராக பீமன் போரிட்டான். திரௌபதியின் அந்த அவமானத்தை பழி தீர்ப்பேன் என்று பீமன் சபதம் செய்திருந்தான். அன்றைக்கு நடந்த சண்டையில், பீமன் துச்சாதனனை கொடூரமான முறையில் கொன்றான். அதோடு நிற்கவில்லை, அவனுடைய மார்பைப் பிளந்து, அவனுடைய ரத்தத்தை குடித்து தன்னுடைய சபதத்தை நிறைவேற்றினான். இரண்டு பக்கங்களை சேர்ந்த போர்வீரர்களும், பீமனின் இந்த செயலைப் பார்த்து அதிர்ந்து போனார்கள். அவன் ஏற்கனவே ஏற்பட்ட அநீதிக்குத்தான் பழிதீர்த்துக் கொண்டான். ஆனால், தன்னுடைய "இழிவுபடுத்தும்" நடத்தையால் பீமனின் புகழ் நிரந்தரமாக களங்கப்பட்டுப் போனது. போரில் வீரமரணம் அடைந்த எதிரியின் உடலை மதிப்புடன் நடத்தவேண்டும் என்பதுதான் போர்நீதி. ஆனால், பீமன் அதை மீறிவிட்டான்.

இந்தக் கடைசி கணத்தை கையாளும் முறை என்பது மிகவும் முக்கியமானதாக இருக்க இன்னொரு காரணமும் உண்டு. ஒரு உடலற்ற உயிரால் தன்னை துளியளவும் பாதுகாத்துக்கொள்ள முடியாது. அதனால்தான், வாழ்வின் அந்த அம்சத்தை கையாளும்போது அதிகபட்ச பொறுப்புணர்வுடன் இருக்கவேண்டும். கடைசி கணத்தில் இந்த உயிருக்கு யாராவது சிறிதளவு உதவி செய்தால், அது நீண்டகாலத்திற்கு பயனுள்ளதாக இருந்திடும். அடுத்தமுறை வரும்போது அவர் செய்யவேண்டிய சாதனாவில் பெரும்பகுதி அந்த கணத்திலேயே பார்த்துக்கொள்ளப்படுகிறது. நம்மை சுற்றிலும் இருக்கும் மனிதர்களை பார்க்கும்போது, சும்மா அன்பாக இருந்திட எவ்வளவு சிரமப்படுகிறார்கள் என்று பார்க்கிறோம். கோபத்தையும் வெறுப்பையும் விடுவதே பெரிய போராட்டமாக இருக்கிறது. இதெல்லாம் அவர்களுக்கு ஒரு போராட்டமாக இருப்பதை சில சமயம் பார்க்கும்போது, ஏன் இப்படி போராடுகிறார்கள் என்பது எனக்கு புரிவதேயில்லை. அவர்களுடைய பழைய உணர்வுகளையும், பழைய பழக்கங்களையும் விடுவதற்குகூட அவர்கள் போராடுகிறார்கள். ஆனால், ஒருவர் இறக்கும் நேரத்தில் அவர் நல்லமுறையில் இறப்பதற்கு உதவும்போது, இதெல்லாம் அப்படியே சுத்தமாக போய்விடுகிறது. அவர்கள் தகுந்த, சரியான தன்மைகளோடு

பிறந்திடுவார்கள். ஒரு உயிர் இனிமையான தன்மையுடன் மறுபிறப்பு எடுப்பதை நிச்சயப்படுத்த இதுதான் மிகவும் எளிமையான வழி.

இதோடு எல்லாம் முடியவில்லை. இதற்கு மேலும் நம்மால் செய்யமுடியும். ஒருவர் உடலை விட்டுப் போனபிறகும் நாம் அவருக்கு வழிகாட்டமுடியும். அவருக்கு நம்மீது போதுமான நம்பிக்கை இருந்தால், தன் வாழ்நாள் முழுவதும் அவர் சம்பாதிக்காததைக் கூட, அந்த கடைசி சில கணங்களில் அவர் சம்பாதிக்கும்படி நாம் செய்யமுடியும். அவருக்கு தேவையான சரியான சூழலை உருவாக்கி, அவர் நல்லமுறையில் இறப்பதற்கு உதவினால் இதையெல்லாம் நாம் சாதிக்க முடியும். அந்த உயிரின் வாழ்வுக்கு இது ஒரு மகத்தான பங்களிப்பாக அமையும். அது மட்டுமில்லை, ஒருவர் உண்மையிலேயே நல்லமுறையில் உயிர்விட்டால், அவருக்கு அடுத்தமுறை என்பதே இருக்காது. அந்த உயிர் எல்லையற்ற விடுதலையின் இயல்புக்கு போய்விடும். ஆனால், இதையெல்லாம் செய்ய ஒருவருடைய நல்ல நோக்கமும், நல்ல உணர்வுகளும் மட்டும் இருந்தால் போதாது. யாரோ சொர்க்கத்துக்கு போகவேண்டும் என்று நீங்கள் நினைத்துவிட்டால், உடனே அவர் சொர்க்கத்துக்கு போய்விட மாட்டார். இம்மாதிரி விஷயங்களை செய்திட முற்றிலும் வேறுவிதமான புரிதலும், விழிப்புணர்வும், உயிரின் மேல் ஆளுமையும் இருப்பது அவசியம். இல்லாதபட்சத்தில், இதற்கெல்லாம் வாய்ப்பே கிடையாது.

## அவதிப்படுபவர்கள் இறப்பதற்கு உதவமுடியுமா?

ஒருவர் ஆழமான பாதிப்பில் இருக்கும்போது, அவர் இறந்துபோக நாம் உதவக்கூடாதா? நீங்கள் பிறந்தபோது உங்கள் அம்மாவுக்கு பெரும் பாதிப்பு ஏற்பட்டது. ஒருவரின் பாதிப்பிலிருந்து அவர் விடுபட, அவருடைய உயிரை எடுப்பது சரிதான் என்று நாம் நம்பினால், அப்போது அந்த சமயத்திலேயே உங்கள் அம்மாவின் உயிரை எடுத்திருக்கலாம் அல்லது உங்களுடைய உயிரையும் எடுத்திருக்கலாம். பிரசவ பிரிவில் இருப்பவர்களை விட மரணப்படுக்கையில் இருப்பவர்களுக்கு ஏற்படும் பாதிப்பு அதிகமாக இருக்கும் அல்லது சமஅளவிலாவது இருக்கும் என நினைக்கிறீர்களா? அப்படி இருக்க அவசியமில்லை. இந்த கேள்வி வரக் காரணம் என்ன? இப்போதெல்லாம் மனிதர்கள் இங்கே நீண்டகாலத்திற்கு உயிர் பிழைத்து காய்கறிகளைப்போல கிடப்பது அதிகமாகிவிட்டது என்று பார்க்கிறோம். அதுதான் இந்த கேள்விக்கு காரணம். தேவையில்லாமல் உயிர்ச்செயலோடு தலையிட்டு, மருத்துவத்தின் மூலம் தொடர்ச்சியாக மரணத்தை தள்ளிப்போடாமல் இருந்தால், நீண்டகாலத்துக்கு தொடரும் இந்த பாதிப்புகள் இருந்திருக்காது. இந்த தலையீடுகள் இல்லாமல் யாராலும் தங்களுடைய இயற்கையான காலத்தை தாண்டி தங்கிவிட முடியாது.

அப்படியென்றால் ஒரு நோய் வரும்போது, நாம் மருத்துவ உதவிகள் எல்லாவற்றையும் தவிர்த்து விலகிட வேண்டுமா? அப்படி கிடையாது. எத்தனையோ பேர், பலவிதமான நம்பிக்கை இழந்த சூழ்நிலைகளிலிருந்தும் மீண்டு வந்து நலமாக வாழ்ந்திருக்கிறார்கள். பல நேரங்களில், ஒருவர் இறந்துவிடுவார் என்று நினைத்தார்கள் - ஆனால் அவர் மீண்டு வந்து தொடர்ந்து வாழ்ந்தார். அதேபோல, இவர்களுக்கும் ஒரு வாய்ப்பை நாம் கொடுக்க வேண்டாமா? யாருக்கு இறந்துபோக உதவவேண்டும், எப்போது உதவிட வேண்டும் என்று முடிவு செய்வது யார்? ஒருவர் குணமடைந்து மீள்வதற்கு வழியே கிடையாது என்று மருத்துவரீதியாக 100 சதவிகிதம் தெளிவுடன் முன்கூட்டியே தெரிந்துவிட்டால், அப்போது மருத்துவத்தை நிறுத்திவிடலாம். ஆனால், ஒரு விஷத்தையோ, வேறு பொருளையோ இன்ஜெக்ஷன் மூலம் செலுத்தி ஒருவரை மரணத்துக்கு தள்ளிட என்ன அவசியம்? மருத்துவத்தை விலக்கிவிட்டால், உயிரை பராமரிக்கும் திறன் உடலுக்கு இல்லாதபோது உயிர் தானாகவே போய்விடும். உடலுக்கு அந்த தகுதி இருக்கிறதா இல்லையா என்று முடிவுசெய்வது உங்கள் வேலை கிடையாது. உங்களுடைய உடலை கழட்டிவிட்டு போகும் அளவிற்கு விழிப்புணர்வு இருந்தால் தவிர, மற்ற யாரும் அப்படி முடிவெடுக்கும் நிலையில் இல்லை.

முதுமையைப் பற்றியும், பாதிப்புகளைப் பற்றியும் உங்களுக்கு பயமாக இருந்தால், இப்போதிலிருந்தே ஏதாவது ஆன்மீக சாதனாவை செய்ய ஆரம்பிக்கலாமே! அப்போது, நீங்கள் விரும்பிய நேரத்தில் உயிர்விட முடியும், இல்லையா? அந்தக் கணம் வரும்வரை காத்திருந்து விட்டு, மகனிடமோ மகளிடமோ உங்களுக்கு கொஞ்சம் விஷம் தரும்படி ஏன் கேட்க வேண்டும்? நீங்களே பாருங்கள், உங்களுக்கு விஷம் தரும்படி நீங்களே அவர்களிடம் கேட்பது அவர்களுக்கு நியாயமானதே கிடையாது. அவர்களுடைய கருணையில், அன்பில் அவர்கள் உங்களுக்கு விஷத்தை தந்தாலும்கூட, அவர்களால் அதை எப்போதாவது மறக்கமுடியுமா? நீங்கள் எப்படியும் போய்விடுவீர்கள். ஆனால், நீண்டகாலத்துக்கு வாழப்போகும் அவர்களின் மீது, இதையெல்லாம் ஏன் சுமையாக வைத்துவிட்டு போகிறீர்கள்? யாருடைய கருணையும் தேவையே இல்லாத விதத்தில் நீங்கள் வாழலாமே. ஒரு திட்டப்படி நீங்கள் வாழ்க்கையை வாழலாமே. இது திறம்பட இயங்கும்வரை நீங்கள் வாழலாம், நீங்கள் போகவேண்டிய நேரம் வந்தவுடன் அழகான விதத்தில் போய்விடலாம். கருணைக்கொலை மூலமாகத்தான் போகவேண்டும் என்ற அவசியம் இல்லையே. இந்த வாய்ப்புகளை தேர்ந்தெடுத்து, அதன்படி வாழலாம், இல்லையா?

இப்போது, இந்தக் கருணைக்கொலை என்பது சரியானதுதான் என்று தோன்றலாம். இன்றைய சமுதாயத்தில் மக்கள் இதை ஒரு

புரட்சிகரமான யோசனையாக நினைத்திடலாம். முற்போக்காக இருக்க விரும்பி, கருணைக் கொலைக்கு சாதகமாக பேசுபவர்கள் எப்போதுமே இருக்கிறார்கள். நீங்கள் உண்மையிலேயே முற்போக்கானவர் என்றால், விரும்பிய நேரத்தில் தங்களுடைய உடலைவிடும் வல்லமை பெறும்படி மனிதர்களுக்கு ஆற்றல் அளிக்கலாமே, இல்லையா? அதைத்தான் நான் செய்து கொண்டிருக்கிறேன் - மனிதர்கள் அந்தளவுக்கு திறமை பெற்றவர்களாக வளர்வதற்கு உதவுகிறேன் - இதனால், அவர்கள் நேரம் வரும்போது, சுயமாக தங்களுடைய விருப்பப்படி வாழ்வை முடித்துக்கொள்ள முடியும். விஷத்தால் அல்லது தலையணையால் உயிர்விடத் தேவை இருக்காது.

இப்போதெல்லாம், இன்னொரு விதமான சூழ்நிலையும் இருக்கிறது: நவீன மருத்துவம் தலையிடுவதால், நீண்டகாலத்திற்கு உணர்வு ஏதும் இல்லாமல் ஒரு காய்கறியைப்போல் கிடக்கும் நிலையில் இருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்களின் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டிருக்கிறது. இதில் சிலர் பல வருடங்களாக இந்த நிலையில் இருந்த பிறகும், மீண்டு வந்து வாழ்கிறார்கள். இதனால், இவர்களைச் சுற்றி இருப்பவர்களுக்கு முடிவெடுப்பதில் பெரிய போராட்டம் ஏற்படுகிறது - தங்களுக்கு நேசமானவர்களின் மருத்துவத்தை நிறுத்தவேண்டுமா இல்லையா என்று புரிவதில்லை. மொராக்கோ நாட்டில் இப்படி நடந்தது: சங்கரன்பிள்ளை ஐரோப்பாவில் வாழ்ந்துகொண்டிருந்தார். அவருக்கு கொஞ்சம் வயதாகியிருந்தது. அவர் டிவியில் ஏதோ நிகழ்ச்சியை பார்த்துக்கொண்டிருந்தார். முதியோர் இல்லங்கள் பற்றியும், இறக்கும் நிலையில் உள்ளவர்களுக்கான விடுதிகளைப் பற்றியும் அதில் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அவருடைய மனைவியும் மொராக்கோ நாட்டைச் சேர்ந்தவர். டிவி நிகழ்ச்சியை பார்த்துக்கொண்டே சங்கரன்பிள்ளை தன் மனைவியிடம், "டார்லிங், ஒருவேளை நான் இப்படி உணர்விழந்து காய்கறிபோல் ஆகிவிட்டால், நீ மருத்துவத்தை நிறுத்திவிடு, ப்ளக்கை பிடுங்கிவிடு. இப்படிப்பட்ட துன்பத்தையெல்லாம் அனுபவிக்க எனக்கு விருப்பமில்லை. நீ அவசியம் ப்ளக்கை பிடுங்கிவிட வேண்டும்," என்று சொன்னார். மனைவி அவரைப் பார்த்தார். அங்கிருந்து எழுந்துபோய், அப்படியே டிவியின் பிளக்கை பிடிங்கிவிட்டார். இப்படித்தான், எப்போது ப்ளக்கை பிடுங்கிவிட வேண்டும், அதாவது எப்போது மருத்துவ உதவியை நிறுத்தவேண்டும் என்ற முடிவை எடுப்பது ஒரு சவாலாக இருக்கலாம்.

சரி, இப்போது உணர்விழந்த நிலையில் காய்கறிபோல் இருந்தவர்கள் அல்லது மரணத்துக்கு நெருக்கமான நிலையில் இருந்தவர்கள் மீண்டு வருவதைப் பற்றி பார்ப்போம். அவர்கள் இறந்து போய்விட்டு திரும்ப உள்ளே வந்துவிட்டார்கள் என்று ஒன்றும் நினைத்துக்கொள்ள வேண்டாம்.

அது உண்மை இல்லை. ஒருவேளை, உயிர்சக்தி அந்த அளவுக்கு பெரிய அதிர்ச்சிக்கு உள்ளாகி இருக்கலாம். அதனால் அது உள்முகமாய் இல்லாமல், அதிக அளவில் வெளிமுகமாக இருந்திருக்கலாம். நீங்கள் சுயநினைவோடு இருக்கும் நிலையிலும், ஓரளவுக்கு வெளிமுகமாகவும், பெரும்பாலும் உள்முகமாகவும் இருக்கிறீர்கள். உயிர்சக்தி உள்முகமாக இருப்பதால் செல்கள் எல்லாம் ஒன்றாக பிணைந்திருக்க செய்கிறது. உயிருக்கு ஒரு உறுதியான நிலைபெற்ற அடிப்படையை தருகிறது. வெளிமுகமாக இருப்பதால் உயிரின் வெளிப்பாடு அதிகமாக இருக்கிறது, உங்களுடைய இருப்பு பலமானதாக உணரப்படுகிறது. இந்த ஊசலாட்டம் மனிதர்கள் உட்பட எல்லா உயிர்களுக்கும் இயற்கையாகவே ஏற்படுகிறது. ஆனால், தங்களுக்குள் ஒருவிதமான ஆளுமை இருந்தால், மனிதர்கள் இந்தப் பரிமாண மாற்றத்தை விழிப்புணர்வுடன் ஏற்படுத்திக்கொள்ள முடியும்.

இப்படியாக, அந்தக் கணத்தில், உங்கள் கவனம் பெரும்பாலும் வெளிமுகமாகவே இருந்து, ஓரளவுக்கு மட்டுமே உள்முகமாக இருந்திருக்கலாம். அதனால், உயிர் குழம்பிப்போய், "நான் இங்கே இருக்கவேண்டுமா, கூடாதா?" என்ற முடிவை எடுக்கவேண்டி வந்தது. இது ஏதோ தத்துவ கேள்வியாக இல்லை, நடைமுறை கேள்வியாக இருக்கிறது. அதாவது, "நாம் இதில் இருப்பதற்கு இந்த உடல் உகந்ததா, இல்லையா?" என்று உயிர் முடிவெடுக்கிறது. இப்படி, கொஞ்சகாலத்திற்கு "நான் இருக்க வேண்டுமா, கூடாதா?" என்று ஊசலாடிய பிறகு, சரி இருக்கிறேன் என்று முடிவுசெய்கிறது. அதனால், ஒருவர் இப்படி மீண்டு வருவதற்கு காரணம் டாக்டர்களோ, அற்புத நிகழ்வோ கிடையாது. ஒருவேளை டாக்டர்கள் வேண்டுமானால் உயிரை தங்கவைத்திட உடலுக்கு இருக்கும் தகுதியை இன்னும் கொஞ்சம் மேம்படுத்தி இருக்கலாம். ஆனால், தான் வாழ்வதற்கு தகுதியாக உடல் இருப்பதால், இதில் தொடர்ந்து தங்கலாம் என்ற முடிவை எடுப்பது என்னவோ உயிர்தான், எப்போதுமே உயிர்தான்.

ஒருவருடைய புரிதல் மேம்பட்டிருந்தால், ஒரு நோயாளி உயிர் பிழைத்து வாழ்வதற்கான வாய்ப்புகளைப் பற்றி அவரால் கவனித்து சொல்ல முடியும். பிராணமய கோஷம், அதாவது சக்தி உடலின் உயிர்ப்பு எந்தளவுக்கு இருக்கிறது என்ற அடிப்படையில் அவரால் கணிக்க முடியும். ஒருவர் மீண்டுவரும் அளவிற்கு அவருடைய உயிர் சக்திகள் தீவிரமாக இருக்கிறதா இல்லையா என்று சொல்லமுடியும். அதே சமயம், வெளிப்படையாக உடல் அந்தளவுக்கு மோசமாக இல்லையென்றாலும், நோயாளியின் பிராணசக்தி உயிர்ப்பின்றி அடிமட்டத்தில் இருந்தால் மீண்டு வருவதற்கு சாத்தியமே இல்லை. எவ்வளவுதான் மருத்துவ

உதவிகள் இருந்தாலும் மீண்டுவர சாத்தியமில்லை. சாஃப்ட்வேர் தீர்ந்துப் போயிருந்தால், எவ்வளவுதான் முயற்சி செய்தாலும், அது தன்னை உயிர்ப்பித்துக் கொள்ளவே முடியாது. ஆனால், இந்த மாதிரி முடிவெடுப்பதற்கு, எல்லோருக்கும் அந்தப் புரிதல் கிடையாது. அதனால், உயிர் தன் பாதையை தானே முடிவு செய்துகொள்ள அனுமதிப்பதுதான் மிகவும் சிறந்தது. உயிருடன் இருப்பவர்களுக்கு மற்றவர்கள் இறப்பு சான்றிதழ் கொடுப்பதற்கு பதிலாக, உயிரே தன் பாதையை தேர்ந்தெடுக்கட்டுமே, அதுதான் மிகவும் சிறந்தது.

உணர்விழந்து காய்கறிபோல் கிடக்கும் நிலைகளில் இரண்டு வகை இருக்கிறது. ஒரு வகையான நிலையில் உடல் எந்தளவுக்கு அசைவின்றி போய்விட்டதென்றால் - அதை இயங்க வைப்பதே முடியாமல் போகிறது. ஆனால், மனம் இயங்கிக் கொண்டிருக்கிறது, உணர்ச்சி இயங்கிக் கொண்டிருக்கிறது, மற்ற உணரும் திறன்கள் எல்லாம் அப்படியே இருக்கின்றன. உடல் அசைவதற்கே மறுப்பதால் அந்த மனிதருக்கு இப்படி இருப்பது கொடுமையானதாக இருக்கும். அவர்களால் பார்க்கமுடியும், கேட்கமுடியும், வாசனை அறிய முடியும், புரிந்துகொள்ள முடியும். ஆனால், எதையும் செய்வதற்கான திறன் துளியும் இருக்காது. இதனால், ஆழமான பாதிப்பு ஏற்படமுடியும். அவர்களுக்கு எழுந்து நடக்கவேண்டும் என்று தோன்றுகிறது, ஆனால் உடல் துளியும் அசைவில்லாமல் ஆகிவிட்டது. இந்த நிலையில் என்ன செய்வது என்று முடிவெடுப்பது, யாராக இருந்தாலும் அவருக்கு மிகவும் கஷ்டமாகத்தான் இருக்கும். அதோடு பல சமயங்களில், தன்னை சுற்றி இருப்பவர்கள் பேசுவதெல்லாம் அந்த மனிதருக்கு புரிகிறது - மருத்துவத்தை நிறுத்திவிடலாமா, கதை முடிந்துவிட்டதா என்றெல்லாம் பேசுவது புரிகிறது - இது மிகவும் மோசமான ஒரு நிலைதான். ஒருவருக்கும் இப்படி நடக்கவேக் கூடாது. ஆனால், அப்படி நடக்கும்போது, இதை எப்படி கையாள்வது? இதில் முடிவெடுப்பது மிகவும் கஷ்டம்தான் - இது தனிமனிதர்களின் புரிதலையும் உணர்வுகளையும் பொருத்து அமைகிறது. அதனால், இதைச் செய்வதற்கு குறிப்பிட்ட முறை என்று எதுவும் கிடையாது.

இன்னொரு வகை என்னவென்றால், உடல் ஓரளவுக்கு நன்றாகவே உயிர்ப்புடனும், இயங்கும் நிலையிலும் இருக்கிறது - உணவை ஜீரணம் செய்கிறது, எல்லாம் நடக்கிறது. ஆனால், மனம் இயக்கம் இல்லாமல் போய்விட்டது. அதனால் உடல் எந்த செயலையும் செய்ய முடியவில்லை. உடல் இன்னும் செயல் இழக்காமல்தான் வைக்கப்பட்டிருக்கிறது. மருத்துவக் கருவிகளின் துணையோடு இன்னும் அதை ஓடவைத்துக் கொண்டிருக்கிறார்கள். இது ஒரு காலி பாத்திரத்தை வாழவைப்பது போலத்தான் - அதற்கு பதிலளிக்கும் திறன் எதுவும் இல்லை. இதுதான்

நிலை என்றால், இருபத்தொரு நாட்களின் ஐந்து சுற்றுகள் வரை நீங்கள் காத்திருக்கலாம், அதற்குப் பிறகு முடிவெடுக்கலாம். அதற்குப் பிறகும், அதே நிலையில்தான் இருக்கிறதென்றால், நீங்கள் மருத்துவத்தை நிறுத்திவிடலாம். உயிரை மீட்க முடியாது என்று இப்போது 100 சதவிகிதம் நிச்சயமாக சொல்லமுடியும். இப்படிச் சொல்வது மிகவும் கடுமையானதாக தோன்றலாம். ஆனால், இன்றைக்கு நேர்மையான டாக்டர்கள் பலரும் நோயாளியின் விஷயத்தில் தொடர்ந்து தலையிடுவதில் எந்த அர்த்தமும் இல்லை என்று உணர்கிறார்கள். அதனால், அவரை வீட்டுக்கு கொண்டு செல்லும்படி அவர்களின் உறவினர்களிடம் சொல்லிவிடுகிறார்கள். உங்கள் பில்களை அதிகரிக்க விரும்புபவர்கள் மட்டும்தான் விஷயத்தை அலைக்கழிக்க விரும்புவார்கள்.

இன்றைக்கு, ஆதரவு சிகிச்சை பெரிய அளவில் முன்னேறிவிட்டது. வலி நிவாரணம் என்பது எந்தளவுக்கு வளர்ந்துவிட்டது என்றால், மரணப் படுக்கையில் கிடக்கும் ஒரு நோயாளி அனுபவிக்கும் வலியை மருந்துகளால் பெரும்பாலும் நீக்கிவிட முடியும். ஆனால், இப்படி வலி நிவாரணி மருந்துகளை எடுத்துக்கொள்வதால், இது சமீபத்தில் நிகழவிருக்கும் மரணத்தின் தன்மையை பாதிக்குமா? மரணப்படுக்கையில் ஏற்படும் பாதிப்பை முழுமையாக அனுபவிப்பதில் ஏதாவது பயன் இருக்கிறதா? இந்த கேள்விகள் வரக்காரணம், உலகத்தில் கொடுக்கப்படும் போதனைகள்தான் - வலியையும் துன்பத்தையும் சகித்துக்கொண்டு வாழ்வது பெரிய பண்பாக போற்றப்படுகிறது - இதுதான் ஒருவர் தன் பாவங்களை கழித்திடும் வழி என்று போதிக்கிறார்கள். ஒருமுறை இப்படி நடந்தது: சொர்க்கத்துக்கு புதுவரவுகளாக சிலபேர் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் எல்லோருமே கோல்ஃப் விளையாடுபவர்கள். அதனால் வந்தவுடனேயே செயின்ட் பீட்டரிடம், "இங்கே சொர்க்கத்தில் கோல்ஃப் மைதானம் இருக்கிறதா?" என்று கேட்டார்கள். செயின்ட் பீட்டர் அவர்களைப் பார்த்து, "ஓ, நிச்சயமாக இருக்கிறதே!" என்று சொன்னார். "ஆஹா, அப்படியா? நாங்கள் அதைப் பார்க்க வேண்டுமே, காட்டுவீர்களா?" என்று அவர்கள் ஆர்வமாக கேட்டார்கள். உடனே அவர் பரிசுத்த ஆவியை பணித்தார், அவர்களை கோல்ஃப் வண்டியில் அழைத்துக்கொண்டு போய் சுற்றிக்காட்டும்படி சொன்னார். பரிசுத்த ஆவியும் அவர்களுக்கு கோல்ஃப் மைதானத்தை சுற்றிக்காட்டியது - எங்கே பார்த்தாலும் பச்சை பசுமையாக இருந்தது, மைதானம் முழுக்க பூக்கள் நிறைந்திருந்தன, எல்லாம் அற்புதமாக இருந்தது. இந்த அழகையெல்லாம் ரசித்துக்கொண்டே கோல்ஃப் வண்டியில் போய்க்கொண்டிருந்தார்கள். அப்போது மைதானத்தின் மூன்றாவது பகுதியை கடக்கும்போது, அங்கே ஒரு ஆழமான குழியில் நெருப்பு பெரிதாக எரிந்து கொண்டிருந்தது. அதில் சில மனிதர்கள் அலறிக்கொண்டும் கூச்சலிட்டுக்கொண்டும் எரிந்து கொண்டிருந்தார்கள்.

வண்டியில் இருந்தவர்கள் இதைப் பார்த்தவுடன், "ஐயோ, என்ன இது? இங்கே சொர்க்கத்தில் துன்பமே இருக்காது என்றல்லவா நினைத்தோம். இது என்ன இப்படி இருக்கிறதே?" என்று கேட்டார்கள். அதற்கு பரிசுத்த ஆவி, "ஓ! அதுவா? அவர்களெல்லாம் மதநம்பிக்கை உடையவர்கள். இதெல்லாம் வேண்டும் என்று அவர்கள்தான் அடம்பிடிக்கிறார்கள்," என்று பதிலளித்தது.

இப்படியாக, மரணப்படுக்கையில் இருக்கும் ஒருவர் வலி நிவாரண மருந்துகளை எடுத்துக்கொள்வது சரிதானா? அந்த வலி நிவாரண மருந்து மயக்கம் ஏற்படுத்தாது என்றால், அதை எடுத்துக்கொள்பவர் ஓரளவுக்கு நல்ல விழிப்புணர்வுடன் இருந்திட முடியும் என்றால், தாராளமாக அந்த மருந்தை எடுத்துக்கொள்ளலாம். மருத்துவரீதியாக எந்த தேவையும் இல்லாதபோது, எதற்கு வலியை அனுபவிக்க வேண்டும்? ஆனால், வலி நிவாரண மருந்துகள் அதிகமான மயக்கநிலையை ஏற்படுத்தினால், துளியும் விழிப்புணர்வு இல்லாதபடி செய்துவிட்டால், அந்த விதத்தில் உயிர்விடுவது சிறந்ததே கிடையாது.

## இறப்பவருக்கு உகந்த சூழல் எது?

இதுபோன்ற ஒரு நாளை பார்ப்பதற்குத்தான் நான் ஆசைப்படுகிறேன், அதாவது, மக்கள் காயந்த ஸ்தானத்திற்கு[1] வந்து, "என்னுடைய நேரம் வந்துவிட்டது என்று நினைக்கிறேன், நான் இங்கேயே தங்கியிருந்து, உயிர்விட்டு, போய்சேர முடியுமா? அதற்கு இடம் கிடைக்குமா? யாரும் என்னை இங்கே தூக்கிக்கொண்டு வரவேண்டும் என்ற அவசியமில்லையே," என்று சொல்லும் நாளுக்காக காத்திருக்கிறேன். அது ஒரு அற்புதமான நாளாக இருக்கும். அங்கே போய் சந்தோஷமாக உட்கார்ந்து, எதையும் சாப்பிடாமல் சும்மா அப்படியே உயிர்விடலாம். இறுதிச்சடங்கு எதுவும் கிடையாது, உடலை எரிப்பது மட்டும்தான். ஆஹா, அது ஞானம் பெற்ற உலகமாக இருக்குமே! சரி, அது மிகவும் தூரத்தில் இருக்கிறது. இப்போதைக்கு அப்படி ஒன்றும் நடக்காது. ஆனால், மனிதர்கள் ஒரு இடத்தில், குறிப்பிட்ட ஒரு நோக்கத்துடன் நிம்மதியாக உயிர்விடுவதற்கு ஏற்ற சூழலைக்கொண்ட இடங்களையாவது நாம் உருவாக்கவேண்டும்.

இன்றைக்கு, வீடுகளில் நடந்துகொண்டிருப்பது துரதிர்ஷ்டவசமானது. அதாவது, எல்லோரும் ஒருநாள் இறக்கப்போகிறார்கள் என்றாலும், ஒருவருக்கும் மரணத்தை கையாள்வது எப்படி என்ற புரிதல் இல்லை.

---

1 ஈஷாவால் பராமரிக்கப்படும் மயானங்கள்.

எப்படி இருக்கிறது பாருங்கள்! அமெரிக்காவில், ஒவ்வொரு டைனிங் ஹாலிலும் முதலுதவி குறிப்புகள் கொண்ட ஒரு பட்டியல் இருக்கும் - யாருக்காவது சாப்பிடும்போது தொண்டை அடைத்துக்கொண்டு விட்டால் என்ன செய்யவேண்டும் என்று அதில் சொல்லியிருப்பார்கள். ஆனால், சாப்பிடும்போது தொண்டை ஏன் அடைத்துக்கொள்கிறது? இந்தியாவில், இப்படி ஒன்றை நான் கேள்விப்பட்டதே கிடையாது. பொதுவாக, இந்தியாவில் உள்ளவர்கள் அமெரிக்கர்களை விட அதிகப் பசியில் வாழ்கிறார்கள். ஆனாலும் சாப்பிடும்போது யாருக்கும் இங்கே தொண்டை அடைப்பதில்லை. ஒருவேளை அமெரிக்காவில், அவர்கள் பேசுவதையும் சாப்பிடுவதையும் ஒரே நேரத்தில் செய்வதால் தொண்டை அடைக்கிறது போலும். உள்ளே வருவதும் வெளியே போவதும் ஒரே குழாயின் வழியாக ஒரே சமயத்தில் ஏற்படுவதால் ஏதோ குழம்பிப் போகிறது. அவர்கள் பேசுவதை நிறுத்திவிட்டு சாப்பிட்டால், சாப்பிடும்போது யாருக்கும் தொண்டை அடைக்காது என்று நினைக்கிறேன்.

எப்படியோ, சாப்பிடும்போது தொண்டை அடைத்துக் கொள்வதற்கெல்லாம் அவ்வளவு அக்கறையும் ஏற்பாடும் இருக்கிறது. அதை எப்படி கையாள வேண்டும் என்று மக்களுக்கு தெரியப்படுத்தப் பார்க்கிறார்கள். ஆனால், மரணத்தை எப்படி கையாள வேண்டும் என்பதற்கு எதுவுமே செய்யவில்லையே. மனிதர்கள் ஒருநாள் இறந்துபோவார்கள் என்பது எல்லோருக்குமே தெரிந்ததுதான். உங்களுடைய தாத்தா பாட்டி இறந்துபோவார்கள் என்று உங்களுக்கு தெரியும். உங்களுடைய பெற்றோர்கள் இறந்துபோவார்கள் என்றும் உங்களுக்கு தெரியும். ஆனால், அது நிகழும் சமயத்தில் அதை கையாள்வது எப்படி என்று ஒருவருக்கும் தெரிவதில்லை. ஏனென்றால், உங்களுக்குள் எங்கேயோ அதை தவிர்ப்பதற்கான முயற்சி நடந்து கொண்டிருக்கிறது. அதனால்தான், மரணத்தைப் பற்றி பேசாமல் இருந்துவிட்டால், அதற்காக தயாராகாமல் இருந்துவிட்டால், அது நிகழாமல் போய்விடும் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். மிகச் சில குடும்பங்களுக்கு மட்டும்தான், "சரி, இவர் இறக்கப்போகிறார், வாருங்கள் அதற்கு தயாராகலாம்," என்று சொல்லும் புத்தி இருக்கிறது. இறந்துகொண்டிருக்கும் ஒரு மனிதர் தேவையில்லாத பாதிப்பை அனுபவிக்காமல் நல்லமுறையில் இறக்கவேண்டும். அப்படி நல்லமுறையில் உயிர்விடுவதை நிச்சயப்படுத்திட நாம் சில விஷயங்களையாவது செய்யும்படி, நம்மை இப்போதே தயார்படுத்திக்கொள்ள வேண்டும்.

இப்போது, ஒருவர் மருத்துவரீதியாக "இறந்துவிட்டார்" என்று சொல்லப் பட்டாலும், உயிரின் அடிப்படையில் அவர் இன்னும் இறக்கவில்லை. ஏனென்றால், உயிர் வெளியேறுவது மெதுவாகத்தான் நிகழ்கிறது.

அந்தக் கணத்தின் நிகழ்வு சீராக ஏற்படவும், அந்த நேரத்தில் உயிர் வெளியேறுவதற்கு உதவிடவும் சில ஏற்பாடுகளை செய்யலாம். ஒருவர் தன்னுடைய வீட்டில்தான் இறந்து கொண்டிருக்கிறார் என்றால், அப்போது அவர் ஒரு சுத்தமான, வெண்மையான அறைக்குள் போய்விடுவது சிறந்தது. அங்கே லேசான நீலநிற வெளிச்சம் இருந்தால் நல்லது. அங்கே புகைப்படங்களும் இருக்கக்கூடாது, எதுவுமே இருக்கக்கூடாது. உங்களைச் சுற்றி நீலநிறம் இருந்தால், அது நீங்கள் நல்லமுறையில் உயிர்விட உதவியாக இருக்கும். இன்னொரு எளிமையான விஷயம் என்னவென்றால், அவருக்கு பக்கத்திலேயே ஒரு தீபம் இருபத்துநான்கு மணிநேரமும் எரிந்து கொண்டிருக்க வேண்டும், இதுவும் உதவியாக இருக்கும். நெய்விளக்காக இருந்தால் நல்லது, வெண்ணையையும் பயன்படுத்தலாம். இது ஒருவிதமான ஒளிவட்டத்தை (ஆரா) அங்கே உருவாக்குகிறது. உயிர் வெளியேறும் நிகழ்வின் சீரற்ற இயல்பு இதனால் ஓரளவுக்கு சீர்செய்யப்படும்.

அடுத்து, அந்தச் சூழ்நிலையில் ஒரு மந்திரம் ஒலிக்கும்படி செய்யலாம். இந்த சூழ்நிலைக்கு உகந்த சப்தம் தொடர்ந்து ஏற்படும்படி பார்த்துக்கொள்ளலாம். அவருடைய அடிப்படையையே தொடும்படியான சப்தங்களாக அது இருக்கவேண்டும். அது சக்தியூட்டப்பட்ட சப்தங்களாகவோ, மந்திரங்களாகவோ, உச்சாடனமாகவோ இருந்தால் இன்னும் உகந்ததாக இருக்கும். அதை அவர் முன்கூட்டியே தனக்குள் புகுத்தியிருந்தார் என்றால் இன்னும் சிறப்பாக இருக்கும். ஒரு உச்சாடனத்தை உள்ளுக்குள் வைத்திருப்பது, வாழ்விலும் மரணத்திலும் சக்திவாய்ந்த ஒரு கருவியாக அமையும். தென்னிந்திய மகனாகிய சுவாமி ராமதாஸ் அவர்களின் வாழ்க்கையில் இப்படி நடந்தது. ராமநாமத்தை உச்சாடனம் செய்து ஸ்ரீராமரை வழிபடும் பாதையில் ராமதாசுக்கு அவருடைய தந்தை தீட்சை வழங்கியிருந்தார் - அதாவது, "ராம, ராம, ராம" என்ற மந்திரத்தை உச்சாடனம் செய்யவேண்டும். காலப்போக்கில், இந்த மந்திர ஜெபம் அவருக்குள் மிகவும் ஆழமாகிப்போனது. அவர் இன்னும் பிரபலமாகாத சாதாரண சாதகராக இருந்த காலத்தில், ஒருசமயம் கிராமப்புறத்தில் திரிந்து கொண்டிருந்தார். மாலைநேரம் ஆனபோது, ஒரு கிராமத்திலிருந்த புண்ணியவான் இரவுக்கு தங்கிட இடம் கொடுத்தார்.

ராமதாஸ் தனக்கு அன்புடன் பரிமாறப்பட்ட உணவை சாப்பிட்டுவிட்டு படுக்கப்போனார். நடுஇரவில் வீட்டுக்காரருக்கு யாரோ சத்தமாக "ராம, ராம, ராம" என்று உச்சாடனம் செய்வது கேட்டது. இந்த சப்தம் தொந்தரவாக இருந்ததால் அவரால் தூங்க முடியவில்லை. அதனால் ராமதாஸ் என்ன செய்கிறார் என்று பார்க்கப் போனார். ராமதாஸ் அவர்களோ தூங்கிக்கொண்டிருந்தார். ஆனால், வீட்டுக்காரருக்கு இன்னும்

"ராம, ராம" என்ற சத்தம் கேட்டுக்கொண்டிருந்தது. மெதுவாக அவர் ராமதாஸ் படுத்திருந்த இடத்திற்கு போனார். சப்தம் ராமதாஸ் அவர்களின் உடலிலிருந்துதான் வந்துகொண்டிருந்தது என்பதை உணர்ந்தார்! அவர் தூங்கும்போது கூட, உடல் "ராம, ராம, ராம," என்ற அதிர்வுடனேயே இருந்தது. அந்தளவுக்கு அவருடைய மந்திர சாதனா தீவிரமாகியிருந்தது.

இதுபோல, மந்திரங்களை தங்களுக்குள் நிலைப்படுத்திய நிகழ்ச்சிகள், இன்னும் பல மகான்களின் வாழ்விலும் நடந்துள்ளது. என்னுடைய தெய்வீக குருவுக்கும் இப்படி நிகழ்ந்துள்ளது. அந்த மாமனிதரின் மகத்தான இருப்பே தெய்வீகத்தின் அம்சத்தை எனக்குள் நிகழ்த்தியது. அதனால்தான் அவரை தெய்வீக குரு என்கிறேன். ஸ்ரீபழனி சுவாமிகள் யாரிடமும் ஒருபோதும் தன்னுடைய பெயரைச் சொல்லவே இல்லை - ஒருவேளை அவரே அதை மறந்து போயிருந்தாரோ என்னவோ! பழனி மலையை சுற்றி இருக்கும் இடங்களில் அவர் பலவிதமான பரவசநிலைகளில் இருப்பதை மக்கள் கண்டதால் அவரை ஸ்ரீபழனி சுவாமிகள் என்று அழைத்தார்கள். அவர் வெறுமனே ஒரு இடத்தில் சும்மா உட்கார்ந்து கொண்டுதான் இருப்பார். அதற்கே பெரிய அளவில் கூட்டம் ஈர்க்கப்பட்டது. இதனால், உள்ளூர் கோவில் பூசாரிகளுக்கு காழ்ப்புணர்வு ஏற்பட்டது. ஒன்றும் செய்யாத இந்த மனிதர், தன் உணவுக்காக மற்றவர்களிடம் பிட்சை கேட்கும் இந்த மனிதர் இத்தனை பேரை ஈர்க்கிறாரே என்று எரிச்சல் அடைந்தார்கள். அவர்களோ காலையிலிருந்து மாலை வரைக்கும் கோவிலில் உட்கார்ந்துக்கொண்டு சடங்குகளை செய்து தங்களுடைய கடமையை செய்துகொண்டிருந்தார்கள். அங்கே ஒரு கூட்டத்தையும் காணவில்லை, மக்கள் அந்த மனிதரிடம்தான் போய்க் கொண்டிருந்தார்கள். அதனால், அவருக்கு எதிராக எதையாவது கண்டுபிடிக்க விரும்பினார்கள். ஒருநாள் அந்த வாய்ப்பும் கிடைத்தது. ஸ்ரீபழனி சுவாமிகள் தன்னுடைய காலைக் கடன்களை கழிக்கும்போது, "ஷம்போ" மந்திரத்தை உச்சரித்தார் என்று குற்றம் சாட்டினார்கள். இது பெரிய அபச்சாரம் அல்லவா? அதனால் அவரை கிராமப் பஞ்சாயத்தின் முன்பு கொண்டுவந்து நிறுத்தினார்கள். காலைக் கடன்கள் கழிக்கும்போது கடவுளின் பெயரை உச்சரித்து அவருடைய புனிதத்தை இந்த மனிதர் குலைத்துவிட்டார் என்று பழி சுமத்தினார்கள். ஸ்ரீபழனி சுவாமிகளோ அறியாமையில் இருந்த பஞ்சாயத்து தலைவர்களின் முன்னால் சும்மா கண்மூடி வாய்மூடி உட்கார்ந்திருந்தார். அப்போது கூடியிருந்த அந்த இடத்தில் "ஷம்போ" மந்திரத்தின் அதிர்வுகள் சத்தமாக ஒலித்தது. அவ்வளவுதான், அதோடு விசாரணை முடிந்துப்போனது.

இதுபோல, அந்த சப்தத்தோடு உங்கள் சக்திகளும் ஒன்றி அதிர்ந்திடும்படி ஒரு உச்சாடனத்தை நீங்கள் உங்களுக்குள் உறுதிப்படுத்த முடியும். இப்படி

அது உள்ளுக்குள் உறுதியாகிடும் நிலைக்கு வருவதற்கு ஆரம்பத்தில் கொஞ்சம் சத்தமாக உச்சரிக்க வேண்டும். உங்களுடைய தினசரி வாழ்க்கையில் அப்படி செய்தீர்கள் என்றால், மரணம் வரும் சமயத்தில் இது மிகப்பெரிய துணையாக இருந்திடும். மந்திர உச்சாடனங்கள் அடங்கிய ஒரு தொகுப்பை நாம் உருவாக்கியிருக்கிறோம். இதற்கு வைராக்யா என்று பெயர். இதில் ஐந்து மந்திரங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு மந்திரத்திற்கும் கவனம் செலுத்தி, அந்த ஆல்பத்தை திரும்பத் திரும்ப சில தடவை கேளுங்கள். ஒவ்வொரு மந்திரமும் பத்து நிமிடங்களுக்கு ஓடும். எந்த மந்திரம் உங்களை மிகவும் கவர்கிறது என்று கவனித்துப் புரிந்துகொள்ளுங்கள். சும்மா திரும்பத் திரும்ப கேளுங்கள். அதில் ஏதோ ஒன்று உங்களை பிடித்து இழுப்பதுபோல் தோன்றினால், அதன் கூடவே போகலாம். இந்த மந்திரத்தை எப்போதும் கேட்கும்படி - உங்களுடைய காரில், உங்களுடைய வீட்டில், ஐபேடில், செல்போனில், ஐபாடில் - எல்லா இடங்களிலும் அது ஓடிக்கொண்டிருக்கட்டும்.

கொஞ்ச காலத்திற்கு, அது தொடர்ந்து ஓடிக்கொண்டே இருக்கும்படி வைத்திருங்கள். ஆரம்பத்தில், அதை சத்தமாக ஒரு பாட்டைப்போல உச்சரிக்கலாம். போகப்போக, உங்கள் வாயைமூடி உச்சரிக்கும்போதும் அதே அதிர்வை தக்கவைக்க முடிகிறதா என்று பாருங்கள். ஆரம்பகாலத்தில் சத்தமான முறையில் போதுமான அளவுக்கு உச்சாடனம் செய்யாவிட்டால், உங்களால் அதை உள்ளுக்குள் கொண்டுபோக முடியாது. வாய்மூடி இருக்கும்போதும் மந்திரம் தொடர்ந்து ஓடும்படி அந்த அதிர்வின் ஞாபகத்தை உங்களுக்குள் போதுமான அளவிற்கு உருவாக்கவேண்டும். கொஞ்சகாலம் கழித்து, சும்மா உங்களை நினைவுப்படுத்திக் கொண்ட உடனேயே அது தானாக ஓடும். நீங்கள்தான் உங்களுக்குள் அந்த அதிர்வின் ஞாபகத்தை உருவாக்கிவிட்டீர்களே, அதனால்தான்.

இப்போது இறந்துகொண்டிருக்கும் அந்த மனிதரால் தானாக உச்சாடனம் செய்யமுடியாமல் இருக்கலாம். மரணத்தின் அந்தக் கணத்தில், தான் சொல்ல விரும்புவதை சொல்வதற்கு, ஒருவருக்கு அதிக விழிப்புணர்வு வேண்டும். பெரும்பாலானவர்கள் விழிப்புணர்வு இல்லாமலேயே இறந்துபோகிறார்கள். அதனால்தான், நமது கலாச்சாரத்தில், ஒருவர் இறந்து கொண்டிருக்கும்போது அவரைச் சுற்றி இருப்பவர்கள் எப்போதுமே "ஓம் நமச்சிவாய" என்றோ, "ராம, ராம" என்றோ, தங்களுக்கு தெரிந்த ஏதோ ஒன்றை உச்சாடனம் செய்ய ஆரம்பிப்பார்கள். விழிப்புணர்வை உருவாக்கிடும் சக்தியூட்டப்பட்ட ஒரு மந்திரத்தை இறந்துகொண்டிருக்கும் அந்த மனிதரும் உச்சரிக்கவேண்டும் என்பதே அவர்களுடைய விருப்பம். அதனால், ஒருவர் தன் வீட்டில் அல்லது வேறு இடத்தில் இறந்துகொண்டிருக்கும் போது, இந்த மந்திரங்களில் ஏதாவது ஒன்றை

மிகவும் லேசான சப்தத்தில் ஒலிக்கும்படி ஏற்பாடு செய்யலாம். அவர்கள் ஏற்கனவே ஒரு மந்திரத்தை தேர்ந்தெடுத்திருந்தால், அல்லது அதை தங்களுக்குள் நிலைப்படுத்தியிருந்தால் அதையே பயன்படுத்தலாம். அப்படி ஒரு மந்திரத்தை அவர்கள் தேர்ந்தெடுக்காத பட்சத்தில் *பிரம்மானந்த* ஸ்வரூபா மந்திரத்தை எல்லோருக்கும் ஒலிக்கவிடலாம். உயிர்வெளியேறுவது சீரற்ற முறையில் இல்லாமல், நன்றாக ஏற்படும்படி இது நிச்சயம் பார்த்துக்கொள்ளும்.

உடலைவிட்டு வெளியேறுவதற்கு உகந்த மாதிரி இன்னும் சக்திவாய்ந்த மந்திரங்களை நாம் உருவாக்கமுடியும். ஏற்கனவே வெளியேறுவதற்காக தன்னை முறைப்படுத்திக் கொண்டிருக்கும் உயிருக்கு இந்த அதிர்வுகள் அற்புதமாக உதவமுடியும். இப்படி உதவிக்காக சக்திமிக்க அதிர்வுகளை ஏற்படுத்தும்போது உயிர் தன்னை நன்றாக முறைப்படுத்திக் கொள்ளும். உடலுடன் இருக்கும் பிடிப்பு மிகவும் குறைந்துபோகும். "நான் இந்த உடல் அல்ல" என்ற அனுபவம் 100 சதவிகிதம் ஏற்படும். குறைந்தது ஒரு சில நாட்களுக்கு அல்லது சில மணி நேரங்களாவது இந்த அனுபவம் இருக்கும்படி செய்துகொள்ளலாம். எந்த ஒரு மனிதனுக்கும் இது ஒரு அற்புதமான விஷயம். அதே சமயம், இதன் தாக்கம் பக்கத்தில் இருப்பவர்களுக்கும் ஏற்படும். அதனால் இதைப் பயன்படுத்தும்போது அங்கே யாரும் இருக்கக்கூடாது. அது மட்டுமில்லை, அவர்கள் இதை எப்படி பயன்படுத்துவார்கள் என்றும் தெரியாது. இது பொறுப்பான விதத்தில் மட்டுமே பயன்படுத்தப்படும் என்று உத்தரவாதம் கொடுக்க எந்த வழியும் இல்லை. அவர்கள் கார் ஓட்டும்போது இதை பயன்படுத்த வாய்ப்பிருக்கிறது. அப்படியே விபத்தில் சிக்கி உடலை விடவும் வாய்ப்பிருக்கிறது! அதனால், பொதுமக்களுடன் இதுபோன்ற விஷயங்களை முயற்சிக்காமல் இருப்பதே சிறந்தது. அதற்கு பதிலாக வைராக்யா மந்திரங்கள் போல பொதுவான ஒன்றையே பயன்படுத்திக்கொள்ளலாம்.

இப்படியாக சரியான அதிர்வுகளின் மூலம் பஞ்ச பிராணங்களில் உதான பிராணாவின் மீது தாக்கத்தை ஏற்படுத்த முடியும். நாம் ஏற்கனவே பார்த்ததுபோல், சுவாசம் நின்றுபோய் ஆறு முதல் பன்னிரண்டு மணி நேரங்களுக்குள் உதான பிராணா உடலைவிட்டு வெளியேறுகிறது. சாம்பிராணி ஏற்றிவைத்து உச்சாடனம் செய்வதால் உதானா சீக்கிரமாக வெளியேறுவதற்கு உகந்த அதிர்வுகளை உருவாக்கிட முடியும். இல்லாவிட்டால், ஒருவரின் உதான பிராணா வெளியேறுவதற்கு முன்பாகவே அவருடைய உடலை எரிப்பதால் ஒருவிதமான இடைஞ்சல் ஏற்படலாம்.

இப்போது, ஐ.சி.யு எனப்படும் தீவிரசிகிச்சை பிரிவில் ஒருவர் இறந்து கொண்டிருந்தால் என்ன செய்வது? அல்லது அதுபோன்ற இடங்களில்

டாக்டர்கள் விளக்கேற்றவோ, மந்திர உச்சாடனம் செய்யவோ அனுமதிக்காத சூழ்நிலையில் என்ன செய்வது? முதல் விஷயம், ஒருவர் இறப்பதற்காக ஐ.சி.யுவுக்கு போகக்கூடாது. ஒருவேளை தவிர்க்க முடியாத சூழ்நிலையில் நீங்கள் வீட்டிலேயே சில விஷயங்களை செய்யலாம். ஆனால், அது அந்தளவுக்கு திறம்பட வேலை செய்யாது. உதாரணமாக, அவருடைய துணிமணி எதையாவது - அவர்கள் பயன்படுத்தியதாக இருக்கவேண்டும் - அதை ஒரு வெள்ளை துணியில் வைத்து சுற்றி, அவர்களுடைய புகைப்படத்திற்கு முன்னால் வைக்கலாம், அங்கேயே ஒரு விளக்கையும் ஏற்றலாம், மந்திரத்தை அங்கேயே ஓடவிடலாம். இதில் ஓரளவுக்கு தாக்கம் ஏற்படும், ஆனால் அவர் இருக்கும் இடத்தில் நேரடியாக செய்வதுபோல் வராது.

ஒருவர் இறந்துவிட்டார் என்று சான்றுடன் உறுதியான பிறகு, பதினான்கு நாட்கள் வரைக்கும் இந்த விளக்கும் உச்சாடனமும் தொடர்ந்து இருக்கவேண்டும். மருத்துவரீதியாக அவர் இறந்துவிட்டார் என்று சொல்லப்பட்டிருக்கலாம். ஆனால், உயிரின் அடிப்படையில் அவர் இறந்தவர் ஆகமாட்டார். மரணம் என்பது மெதுவாகத்தான் நிகழ்கிறது. இந்தப் பூமியின் ஒரு பிண்டமாகிய உடலிலிருந்து உயிர் வெளியேறிடும் நிகழ்வு படிப்படியாகத்தான் நடக்கிறது. நடைமுறையில், நுரையீரல், இதயம், மூளை ஆகியவை இயங்காமல் நின்று போய்விட்டன. அதனால் அவரை இறந்தவராக அறிவிக்கிறார்கள். ஆனால், இன்னும் அது முடியவில்லை. அந்த மனிதரின் உடலை எரித்தபிறகும் கூட, அவர் இன்னும் போய்விடவில்லை. ஏனென்றால், அவர் அடுத்த பரிமாணத்திற்கு முன்னேறிப் போகும் நிகழ்வு இன்னும் ஏற்படவில்லை.

இப்போது, இறந்திடும் கணம் நெருங்கும்போது, இறந்து கொண்டிருக்கும் அந்த மனிதரை, வீட்டுக்குள் இருந்து திறந்தவெளியில் இருக்கும்படி வெளியே கொண்டுவருவது மிகவும் சிறந்தது. அங்கே திறந்த நிலத்தில், மண்ணின்மேல் ஒரு துணியை விரித்து, அதன்மேல் அவரை வைப்பது நல்லது. அங்கே அவர் வடக்கு-தெற்கு திசைகளை நோக்கி இருக்கும்படியும், தலை வடக்கு பக்கமாக இருக்கும்படியும் வைக்கலாம். மரணம் ஏற்படுவது நிச்சயம் என்று ஆனபிறகு, அந்த மரணம் சுகமாக ஏற்படவேண்டும் என்று நீங்கள் விரும்பும்போது இப்படி செய்யலாம். உடல் இன்னும் வீட்டுக்குள்ளேயே இருந்தால், கட்டிடத்திற்குள் இருக்கும் சூழலில், உடலைவிட்டு உயிர் சுலபமாக வெளியேறாது.

தலையை ஏன் வடக்கு பக்கம் வைக்கவேண்டும்? பாரம்பரியமாக இந்தியாவில், வடக்கு பக்கம் தலைவைத்து தூங்கக்கூடாது என்று சொல்வார்கள். இது பூமியின் வடதுருவத்திற்கு மட்டுமே ஒத்துவரும். பூமியின் தென்துருவத்திற்குப் போனால் - ஆஸ்திரேலியாவுக்கு

போகிறீர்கள் என்று வைத்துக்கொள்வோம். அங்கே உங்கள் தலையை தெற்கு பக்கமாக வைத்து தூங்கக்கூடாது. பெரும்பாலும், உடலை செங்குத்தாக வைத்திருப்பதே சிறந்தது என்கிற விதத்தில்தான் இந்த உடல் வடிவமைக்கப்பட்டிருக்கிறது. கீழிருந்து மேலே போகும்போது, முக்கால்வாசி தூரத்தில் உங்களுடைய இதயம் அமைந்துள்ளது. காரணம், இரத்தத்தை மேலே செல்லும்படி தள்ளுவது கடினமானது, அதைக் கீழே தள்ளுவது சுலபமானது, அதனால்தான் அதோடு, இதயத்துக்கு மேலே அமைந்திருக்கும் நரம்புகளெல்லாம் மிகவும் மெல்லியதாக இருக்கின்றன, இதுவும் ஒரு காரணம். கீழ்நோக்கி போகும் ரத்த நாளங்கள் எல்லாம் கொஞ்சம் தடியாக இருக்கும். மூளையை நோக்கி போகப்போக அதெல்லாம் மயிரிழை அளவுக்கு மெல்லியதாக ஆகிவிடுகின்றன. அதனால், நீங்கள் படுத்திருக்கும்போது உடலின் மேல்பகுதிக்கு ரத்தம் செலுத்தப்படுவது மிகவும் சுலபமாக இருக்கும். நீங்கள் படுத்தவுடன் இதயமும் அதை அனுசரிக்கும்படி தன்னை சரிசெய்து கொள்கிறது. ஆனால், இதையெல்லாம் தாண்டியும், ஒருவிதமான தாக்கம் ஏற்படுகிறது.

இப்போது, உங்களுடைய ரத்தத்தில் அடங்கியிருக்கும் முக்கியமான ஒன்று இரும்பு. உங்களுக்கு ரத்தசோகை இருந்தால், டாக்டர் உங்களுக்கு ஊட்டமளிக்க இரும்புச்சத்து மாத்திரைகளை தருவார். பூமியின் வடதுருவம், பூமியின் மற்ற பாகங்களின் மேல் மிகவும் சக்திவாய்ந்த காந்த ஈர்ப்பை ஏற்படுத்துகிறது என்று உங்களுக்கு தெரியும். இப்போது வடக்கு பக்கம் தலைவைத்து படுத்தால், இது உங்களுடைய ரத்தத்தை அந்தத் திசையில் இழுத்திடும். இதனால் உங்களுடைய மூளைக்கு அதிகப்படியான ரத்த ஓட்டம் ஏற்படும். இது அளவுக்கு அதிகமானதில்லை. இருந்தாலும், உங்கள் உடலின்மேல் தாக்கம் ஏற்படுத்தும் அளவிற்கு போதுமானது. இதனால்தான், வடக்கு பக்கம் தலைவைத்து தூங்கும்போது தூக்கத்தில் இடையூறுகள் இருக்கும். வயதானவர்கள் இப்படி வடக்கில் தலைவைத்து படுத்தால். அவர்களுடைய தூக்கத்திலேயே இறந்துபோகவும் வாய்ப்பிருக்கிறது. அல்லது அவர்களுக்கு ரத்தக்கசிவு, வலிப்பு அல்லது இதுபோன்ற ஏதாவது ஏற்படலாம். அதனால்தான், பூமியின் வட பாதியில் வாழும்போது உங்களுடைய தலையை வடக்கில் வைக்கக்கூடாது.

ஆனால், ஒருவர் இறந்து கொண்டிருக்கும்போது, அவருடைய தலையை வடக்கு பக்கமாகத்தான் வைக்கவேண்டும். அப்படிச் செய்வது உயிர் உடலைவிட்டு வெளியேறும் நிகழ்வு சுலபமாக ஏற்பட உதவியாக இருக்கிறது. கடைசி கணங்களில் பொருள் உடல் தன்னுடைய உயிர்ப்பை இழந்துவிட்டாலும், உயிருக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. அதனால், உயிர் இன்னும் அங்கேயே தங்கியிருந்து செயல்பட முயற்சிக்கும். ஆனால், திறந்தவெளியில் வடக்கு-தெற்கு அமைப்பில்

வைத்த உடனேயே எல்லாம் முடிந்துவிட்டது என்று அதற்கு புரிந்துவிடும். அதனால், முயற்சியின்றி உடலைவிட்டு எளிதில் வெளியேறிடும். இந்த நகர்வின்போது விழிப்புணர்வான நிலையில் இருந்திடவும் இது உதவியாக இருக்கும். இறந்து கொண்டிருப்பவருக்கு உதவும்படி நாம் செய்யக்கூடிய சில விஷயங்கள் இவைதான். இதெல்லாம் எளிமையான விஷயங்கள்தான் என்றாலும் மிகவும் பயனுள்ள விஷயங்களாகும்.

## சடங்குகள்: இறப்பு முதல் உடலை அப்புறப்படுத்தும் வரை

நாம் ஏற்கனவே பார்த்ததுபோல், இறப்பு என்று வரும்போது, நாம் பயன்படுத்தும் வார்த்தைகள் மிகவும் முக்கியமானது: ஒருவரை "இறந்தவர்" என்று ஆராய்ந்து கண்டறிவதில்லை, அவரை இறந்தவர் என்று அறிவிக்கிறார்கள். இது மிகவும் முக்கியமானது. இரண்டிற்கும் இடையில் வித்தியாசம் இருக்கிறது. ஒருவரை இறந்தவர் என்று அறிவிக்கும்போது, அவர் உங்களுக்கு மட்டும்தான் இறந்தவர் ஆகிறார். அந்த மனிதரைப் பொருத்தவரை, ஒருவிதத்தில், அவர் உடலற்றவர் ஆகிவிட்டார், அவ்வளவுதான் நடந்துள்ளது - அவர் தன் உடலை இழந்துவிட்டார். வாழ்நாள் முழுவதும் தான் அந்த உடல்தான் என்று நினைத்து வாழ்ந்து கொண்டிருந்தார். நாம் வைத்திருக்கும் இந்தப் பிண்டம் பொருள்தன்மை உடையது, இந்த பூமியிலிருந்து சேகரித்த ஒரு குவியல்தான் இது என்று அவருக்கு புரியவேயில்லை. திடீரென்று அவர் உடலைவிட்டு வெளியே நழுவியவுடன், அதைச் சுற்றி அலையும் போக்கு ஏற்படுகிறது. பிரித்துப் பார்த்து பாகுபடுத்தும் புத்தி போய்விட்டது அல்லவா, அதனால்தான். ஒவ்வொரு நிலையாகத்தான் இந்த உயிர் உடலுக்குள் வந்தது, உடலைவிட்டு வெளியே போவதும் ஒவ்வொரு நிலையாகத்தான் நிகழும்.

நமது பாரத கலாச்சாரத்தில் இந்த நம்பிக்கை இருக்கிறது: ஒருவர் இறந்துவிட்டார் என்று நமக்கு நிச்சயமாக தெரிந்துவிட்ட கணத்திலேயே, குறிப்பிட்ட விஷயங்களை செய்யவேண்டும் என்று சொன்னார்கள். பிரிந்துள்ள உயிருக்கு நாம் உதவிடும் சாத்தியங்களுடன் சூழ்நிலை உகந்ததாக இருப்பதால், அதைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். மரணத்தின் நுட்பங்களைப் பற்றிய சிறந்த அறிவுடையவர் அங்கே இருந்தால், பிரிந்த உயிருக்கு அவர் பெருமளவில் நன்மை ஏற்படுத்த முடியும். அதேசமயம், இறந்து கொண்டிருப்பவரை சுற்றியிருக்கும் சாதாரண மனிதர்களும் அந்த உயிருக்கு மிகப்பெரிய வித்தியாசத்தை ஏற்படுத்த முடியும். அவர்களுக்கு புரிகிறதோ இல்லையோ, சில விஷயங்களை செய்வதன்மூலம், உடலைவிட்ட அந்த உயிரின் பயணத்தை அவர்கள்

சுலபமாக்கிட முடியும். இது இறந்து போனவருக்கும் நன்மை கொடுக்கும். உயிருடன் வாழ்பவர்களுக்கும் நன்மை கொடுக்கும்.

**உடலை கிடத்தும் முறை**

மரணம் ஏற்பட்ட பிறகும் உடலை வடக்கு-தெற்கு அமைப்பில், தலை வடக்கு பக்கம் இருக்கும்படி வைப்பது நல்லது. நாம் ஏற்கனவே பார்த்ததுபோல், இறந்து போனவரை பொருத்தவரை, அவர் வாழ்நாள் முழுவதும் தான் இந்த உடல்தான் என்று நினைத்துக்கொண்டே வாழ்ந்தார். தான் இந்த உடல்தான் என்ற அனுபவத்திலேயே வாழ்ந்தார், திடீரென்று வெளியே போய்விடுகிறார். இதனால் குழம்பிப்போய் இருக்கிறார். மனதளவில் குழம்பவில்லை, உயிரின் அடிப்படையில் குழம்பியிருக்கிறார். இப்போது யோசித்துப் பார்க்க அவரிடம் பாகுபடுத்தும் மனம் கிடையாது. எல்லாம் முடிந்துவிட்டது என்று அவருக்கு புரியவில்லை. உடல் இன்னும் அங்கேயே இருப்பதால், அதையே சுற்றிக் கொண்டிருக்கிறார். திரும்ப உடலுக்குள் நுழைய முயற்சிசெய்யும் போக்கு அவருக்கு ஏற்படுகிறது. ஆனால், உடலுக்கோ உயிரை பராமரிக்கும் தகுதி போய்விட்டது. இதனால் அந்த இடத்தில் ஒருவிதமான சக்தி ஏற்பட வாய்ப்பிருக்கிறது. அது அவருக்கும் நல்லதில்லை, அந்த இடத்தை சுற்றி வாழ்பவர்களுக்கும் நல்லதில்லை.

வடக்கு-தெற்கு அமைப்பில், தலை வடக்கில் இருக்கும்படி உடலை வைக்கும்போது உயிர் உடலிலிருந்து வெளியே இழுக்கப்படும். இப்படிச் செய்தவுடன், நீக்கப்பட்ட உடலில் இன்னும் வேகமாக சில மாற்றங்கள் ஏற்படும். தன்னால் இதற்குமேல் அந்த உடலை தொடர்புகொள்ள முடியாது, அதனால் இதைச் சுற்றிக்கொண்டிருப்பதில் பயனில்லை என்று அந்த உயிருக்குப் புரிந்துவிடுகிறது. அந்த உடலுக்கும் உயிருக்கும் நடுவில் குறிப்பிட்ட தூரம் உருவாகிறது. அடுத்து அந்த உயிருக்கு இனி நிகழவிருக்கும் விஷயங்களுக்கு இது மிகவும் உகந்ததாக இருக்கும்.

**கால் கட்டைவிரல்களை சேர்த்துக் கட்டுவது**

மரணம் ஏற்பட்ட பிறகு, அடுத்து செய்யவேண்டியது என்ன? இறந்தவரின் கால் கட்டைவிரல்களை சேர்த்து கட்டவேண்டும். எதற்காக இப்படிச் செய்வது? நீங்கள் உயிரோடு இருக்கும்போது, உங்கள் உடலின் ஒவ்வொரு செல்லுக்குள்ளும் உயிர்சக்தி ஆழமாக வியாபித்திருக்கும். மரணம் ஏற்படும்போது, இந்த சக்திகள் மெதுவாக வெளியேறும். செயலளவில் அது இறந்ததாக கருதப்படலாம், ஆனால் அது இன்னும் முழுமையாக இறக்கவில்லை, மெதுவாகத்தான் இறக்கிறது. உடலிலுள்ள செல்கள் எல்லாம் இன்னும் இறக்கவில்லை. அவையெல்லாம் இன்னும் உயிர் வாழ்வதற்கு முயற்சி செய்து கொண்டிருக்கின்றன. அவை வெளியிலிருந்து

சக்தியை உள்ளிழுக்க முயற்சி செய்யும். இப்படி வெளியில் இருந்து சக்தியை இழுக்கும் முயற்சி நடக்கும்போது, குறிப்பிட்ட சக்திகள் உடலுக்குள்ளே நுழைந்திட வாய்ப்பிருக்கிறது. இந்த மாதிரி விஷயங்களை தவிர்ப்பதற்காக, கால் கட்டைவிரல்கள் இரண்டின் வெளிப்பக்கமும் ஒன்றோடொன்று தொட்டிருக்கும்படி, சேர்த்துவைத்து கட்டிவிடுவார்கள்.

இப்போதுகூட, உங்கள் கால் கட்டைவிரல்கள் இரண்டையும் சேர்த்து வைக்கும்போது உங்களுடைய மலவாயும் மூலாதாரச் சக்கரமும் எப்போதும் இறுக்கமாக மூடியிருப்பதை கவனிக்கலாம். மூலாதாரச் சக்கரம் இறுக்கமாக மூடப்படாமல் இருந்தால், பிராணாவின் மீதமுள்ள அம்சங்கள் அந்தச் சக்கரத்தின் வழியாக வெளியேறப் பார்க்கும். இது நல்லதில்லை. அதோடு, மூலாதாரச் சக்கரமும் மலவாயும் திறந்திருந்தால், அந்த உயிர் திரும்பவும் உடலுக்குள் புகுந்திட, கீழ் பக்கத்திலிருந்து அது ஒரு நுழைவழியாக அமையும் வாய்ப்பிருக்கிறது. இது மிகவும் எதிர்மறையான ஒரு சூழ்நிலையை உருவாக்கிடலாம். இது அந்த உயிருக்கு நல்லதே கிடையாது. அந்த சூழலில் இருப்பவர்களுக்கும் நல்லது கிடையாது.

மூலாதார சக்கரம் மூடப்பட்டவுடன், உயிர் உள்ளே நுழைந்து மறுபடியும் உடலை பிடித்துக்கொள்ளும் வாய்ப்பு இல்லாமல் போகிறது. இப்படி மூலாதாரச் சக்கரத்தின் மூலமாக நுழைந்து உடலை பிடித்துக்கொள்ளும் முயற்சியை, அந்த உடலை விட்ட அதே உயிர்தான் செய்யவேண்டும் என்ற அவசியம் இல்லை. இப்படி நுழைய முயற்சிக்கும் மற்ற உயிர்களும் இருக்கின்றன. இறந்து கொஞ்ச நேரமே ஆகிய உடல்களை வைத்து சில மாந்திரீக முறைகளை யாராவது செய்ய விரும்பினால், இதற்கு எப்போதும் மூலாதாரமே பயன்படுத்தப்படும். நுழைவதற்கு மிகவும் எளிதான வழி அதுதான். மற்ற வழிகள் அவ்வளவு எளிதாக அனுமதிக்கும்படி இருக்காது. மாந்திரீகம் செய்பவர்கள் அந்த உடலைப் பயன்படுத்தினால், அது அந்த உயிரையும் சிலவிதங்களில் கட்டிப்போடும். அதனால், கால் கட்டைவிரல்களை சேர்த்து கட்டுவதால் மாந்திரீகம் செய்பவர்கள் இந்த உடலைப் பயன்படுத்தாதபடியும் பாதுகாக்கமுடிகிறது.

இப்படி செய்வதால் நடைமுறையிலும் ஒரு பயன் இருக்கிறது. கால் கட்டைவிரல்களை சேர்த்து கட்டாமல் விட்டுவிட்டால், மரணம் ஏற்படும்போது இயற்கையாகவே கால்கள் இரண்டும் அகண்டு விரியும் போக்கு இருக்கும். இறந்த உடல் விறைத்து இறுகிப்போகும் போது கால்கள் இரண்டையும் திரும்பச் சேர்த்து வைக்கமுடியாது. இறந்த உடலை கையாள்வது மிகவும் கஷ்டமாகிவிடும். அப்படி தடுமாறுவது பார்ப்பதற்கும் நன்றாக இருக்காது. இப்படியாக கால் கட்டைவிரல்களை சேர்த்து கட்டுவதால் உடல் குலைவு ஏற்படாமல் இருக்கிறது.

**உடலைக் கழுவி துணி அணிவிக்கும் முறை**

இந்தியாவின் சில சமூகங்களில், இன்னமும் சில விஷயங்களைப் பற்றிய விழிப்புணர்வு அவர்களுக்கு இருக்கிறது. யாராவது இறந்துவிட்டால், முதல் காரியமாக அந்த உடலை ஆடையில்லாமல் வைப்பார்கள். அடுத்ததாக உடலை தண்ணீரில் கழுவுவார்கள். இதற்கு ஒரு காரணம், அந்த மனிதர் கடைசி கணங்களில் காயங்களோடு இருந்திருக்கலாம் அல்லது நோய்வாய்ப்பட்டு இருந்திருக்கலாம், அதனால் அவரை சுத்தப்படுத்த வேண்டியிருக்கிறது. ஆனால் அவரை கழுவுவதற்கு சுகாதாரம் மட்டுமே காரணம் இல்லை. இப்போது நாம் உயிரோடு இருக்கும்போதுகூட, யாரோ உங்களை நீராட்டும் முயற்சியில் உங்கள் முகத்தின் மேல் தண்ணீரை ஊற்றினால் மூச்சை அடைக்கும், தண்ணீரில் மூழ்குவதுபோல் தோன்றும். அதே மாதிரி இறந்த உடலில் இன்னும் ஏதாவது செயல்பாடு மிஞ்சி இருந்தாலும், அதெல்லாம் நின்றுபோகும். உடலை சுத்தப்படுத்துவது மட்டும் நோக்கமல்ல, இதனால் உடலிலிருந்து உயிர் முழுமையாக வெளியேறுவதற்கு உதவியாகவும் இருக்கிறது. பலவிதமான விஷயங்களை உடலிலிருந்து அப்புறப்படுத்தும் திறன் ஓடும் நீருக்கு இருக்கிறது.

இப்போது மறுபடியும், உடலை திறந்தவெளியில் வடக்கு-தெற்கு அமைப்பில் வைக்கவேண்டும். உடல் ஆடையில்லாமல் வைக்கப்பட்டிருக்கிறது, ஒரு வெள்ளைத் துணி மட்டும் அதை மூடியிருக்கும். இந்த துணிகூட சுற்றி இருப்பவர்களுக்காகத்தான், இறந்த உடலுக்காக இல்லை. இறந்த உடலுக்கோ மூடிமறைக்கவும் ஒன்றுமில்லை, வெளியே காட்டவும் ஒன்றுமில்லை. ஆனால் உயிருடன் இருப்பவர்களுக்குத்தான் பிரச்சனைகள் இருக்கிறது. அதனால், ஒரு போர்வையாக உடலை மறைத்திட ஒரு வெள்ளைத் துணி மட்டும் பயன்படுத்தப்படுகிறது. எதற்காக வெள்ளைத் துணி? வெள்ளை நிறம் ஒளியின் எல்லா அம்சங்களையும் பிரதிபலித்து விடுகிறது. வெப்பத்தையும் பெரும்பாலும் பிரதிபலிக்கிறது. இந்த இரண்டு அம்சங்கள்தான் செல்கள் வேகமாக அழுகிப்போகும்படி செய்கின்றன. இந்த கட்டத்தில் செல்கள் சீக்கிரமாக கெட்டுப்போவது உகந்தது கிடையாது. காரணம், உடலில் பிராணாவின் ஒருசில அம்சங்கள் இன்னும் கொஞ்சம் இயங்கிக்கொண்டிருக்கின்றன. அந்த துணி கருப்பாகவோ அல்லது வேறு நிறத்திலோ இருந்தால், அது வெளிச்சத்தையும் வெப்பத்தையும் உள்வாங்கிக் கொள்ளும், அதனால் அதை தவிர்த்திட வேண்டும்.

துரதிர்ஷ்டவசமாக, இந்த காலத்தில் இறந்த உடலுக்கு பலவிதமான உடைகளை அணிவிக்கிறார்கள், என்னென்னமோ அலங்காரம் செய்கிறார்கள். மேற்கத்திய நாடுகளில், அண்டர்டேக்கர் என்ற தொழில்

இருக்கிறது. அவர்கள், ஹாலிவுட் நட்சத்திரங்களுக்கு செய்யப்படுவதை விட அதிகமான விதத்தில் இறந்த உடல்களுக்கு மேக்கப் போடுகிறார்கள். இது பெரிய லாபகரமான தொழிலாக இருக்கிறது. ஆனால், நம் கலாச்சாரத்தில் அப்படி இல்லை. இங்கு மரணத்திடம் திரும்பிப் போகும்போது, பிறந்த மேனியாக ஆடையில்லாமல் போவதுதான் வழக்கம். வரும்போது அப்படித்தானே வந்தோம். ஒருவர் உயிருடன் இருந்தபோது அவருக்கு அது புரியவில்லை என்றாலும், இப்போது அதை பார்த்துக்கொண்டிருக்கும் மற்றவர்களாவது இதை உணர்ந்திட வாய்ப்பிருக்கிறது. இதற்குப் பிறகு இந்த விஷயங்களெல்லாம் ஒரு பொருட்டாக இருப்பதில்லை என்று அவர்களின் தலையில் கொட்டி சொல்வதுபோல் அமைகிறது.

### இறந்த உடலை சுற்றி செய்யக்கூடாத விஷயங்கள்

உலகின் பல்வேறு கலாச்சாரங்களில், இறந்தவர்களுக்காக செய்யும் பல சடங்குகளும் வழக்கங்களும் இருக்கின்றன. ஆனால், ஒரு இறந்த உடலை சுற்றி கட்டாயமாக செய்யக்கூடாத சில விஷயங்களும் இருக்கின்றன. ஒரு விஷயம் என்னவென்றால், இறந்த உடலுக்கு பக்கத்தில் தூங்கக்கூடாது. ஏனென்றால், விழித்துக்கொண்டு இருப்பதைவிட தூக்கத்தில் இருக்கும்போது எல்லோருமே அதிகமான திறந்தநிலையில் இருக்கிறார்கள். நாம் ஏற்கனவே பார்த்ததுபோல, மரணம் என்பது தொடர்ந்து ஏற்படும் ஒரு நிகழ்வு - அது கொஞ்ச நேரத்திற்கு நடந்துகொண்டே இருக்கிறது. ஆறு, பன்னிரெண்டு அல்லது இருபத்துநான்கு மணிநேரம் என்று நீண்டநேரத்திற்கு இறந்த உடலை வைத்திருந்தால், அந்த நிகழ்வு இன்னும் நடந்துகொண்டிருக்கிறது, உயிர் இன்னும் வெளியேறிக் கொண்டிருக்கிறது. அதனால், அந்த உடலுக்கு பக்கத்தில் தூங்குபவர்கள் இந்த மாதிரி விஷயங்களின் தாக்கத்திற்கு உள்ளாக முடியும். அது அவர்களுக்கு நல்லது கிடையாது.

இன்னொரு விஷயம் என்னவென்றால், இறந்த உடலுக்கு பக்கத்தில் சமைக்கவோ சாப்பிடவோ கூடாது. உணவின் இயல்பிலேயே, அந்த சக்திகளை ஈர்த்திடும் தன்மை இருக்கிறது. அதனால், உயிர்சக்திகள் இன்னும் வெளியேறிக்கொண்டிருக்கும்போது, அந்த உடலுக்கு பக்கத்தில் சமைக்கவோ சாப்பிடவோ செய்தால், உங்களுக்கு நெருக்கமான அவரையே ஒருவிதத்தில் சாப்பிடுகிறீர்கள் என்று சொல்லலாம். இது உங்களுக்கு மிகையானதாக தோன்றலாம், ஆனால் அது அப்படித்தான். உணவு இந்த சக்திகளை ஈர்த்திடும். இதனால்தான் பாரம்பரியமாக, இறப்பு ஏற்பட்ட வீட்டில் பதினான்கு நாட்கள் வரை சமைக்க மாட்டார்கள். அங்கு இருப்பவர்களுக்கு வெளியிலிருந்து சாப்பாடு கொண்டு வருவார்கள். ஆனால், அந்த இடத்தில் சாப்பிடுவதும் நல்லது கிடையாது.

சாப்பிடுவது என்னும் செயலே ஒருவரை தாக்கங்களுக்கு உள்ளாகும்படி செய்திடும். சாப்பிடும் கணங்களிலும், உடலுறவு கொள்ளும் கணங்களிலும், ஒரு மனிதன் மற்ற நேரங்களைவிட தாக்கத்திற்கு உள்ளாகும் வாய்ப்பு அதிகமாக இருக்கிறது. ஏனென்றால், அந்த சமயங்களில் அவர் ஏதோ ஒன்றை உள்வாங்கிக்கொள்ள ஒரு விதத்தில் தன்னை திறந்துகொள்கிறார், இதுதான் அடிப்படை. ஒரு நாளைக்கு நீங்கள் எவ்வளவு முறை சாப்பிடுகிறீர்கள் என்பதை குறைத்துக்கொள்ள வேண்டும் என்பதற்கு இதுதான் காரணம். அப்படி செய்தால், உங்களுடைய அமைப்பு நிலைகுலையாமல் உறுதியாக இருக்கும். இதை நீங்கள் தெளிவாக கவனிக்கலாம்: எப்போது பார்த்தாலும் சாப்பிட்டுக் கொண்டிருப்பவர்கள், அவர்கள் சாப்பிடுவது கொஞ்சமாக இருந்தாலும்கூட, அவர்களுடைய அமைப்பு உறுதியாக நிலைபெற்றிருக்காது. உடலுறவு, உணவு, தொடர்ச்சியாக தண்ணீர் குடிப்பது, இதெல்லாம் உடலை திறக்க வைக்கிறது - அதனால் பலவிதமான தாக்கங்கள் ஏற்படலாம். இந்த மாதிரி தாக்கங்கள் எல்லா நேரங்களிலும் சாதகமாகவே இருக்காது. எதிர்மறையாகவும் இருக்கலாம். இந்த அடிப்படையில்தான், மிகவும் அத்தியாவசியமான தேவையிருந்தால் மட்டுமே ஒரு யோகி தன்னுடைய உடலை திறந்துகொள்வார். அதுவும் குறிப்பிட்ட விதமாக வடிவமைக்கப்பட்ட, ஒழுங்கான முறையில்தான் அப்படிச் செய்வார். உடலில் சூட்சுமமான பரிமாணங்கள் இருக்கின்றன. எப்போது பார்த்தாலும் உடலுக்குள் உணவைப் போட்டுக் கொண்டிருந்தால், இந்த சூட்சுமமான அம்சங்களின் உறுதி குறைந்து நிலைகுலையும். எப்போது பார்த்தாலும் எதையாவது தின்று கொண்டிருப்பவர்கள், மண்டையில் தொய்வடைந்து போவதை கவனிக்கலாம். அவர்கள் குண்டாகி விடுவார்கள் என்பது விஷயம் இல்லை, எல்லா விதத்திலும் வலுகுறைந்து தொய்வடைந்து போவார்கள். அவர்களில் வலிமையோ, உயிர்ப்போ, திறமையோ அவ்வளவாக இருக்காது. ஏனென்றால், அவர்களுடைய உடலை எல்லா நேரங்களிலும் திறந்த தன்மையில் வைக்கிறார்கள், அதுதான் காரணம்.

அதேபோல, சும்மா எல்லா இடத்திலும், எல்லா நேரத்திலும் சாப்பிடுவதும் வேண்டாம். எப்போதுமே நம் தேசத்தில், நீங்கள் சாப்பிடும்போது அறிமுகமில்லாதவர்கள் உங்களைப் பார்க்கக்கூடாது என்று சொல்வார்கள். யார்கூட வேண்டுமானாலும் சாப்பிடக்கூடாது என்று சொல்வார்கள். உங்களுக்கு தெரிந்தவர்களோடு மட்டுமே, உங்களுக்காக நல்ல நோக்கங்கள் வைத்திருப்பவர்களோடு மட்டுமே சாப்பிடவேண்டும். ஆனால் இன்றைக்கோ, அது உங்களுடைய எதிரியாக இருந்தாலும்கூட, சந்திப்புகள் என்னவோ டின்னர் மீட்டிங் என்ற பெயரில் சாப்பிடும்போதுதான் நடக்கின்றன. அதனால் குறைந்தபட்சம், இறந்த உடலை சுற்றி இருக்கும் போதாவது சாப்பிடுவதை தவிர்க்கவேண்டும்.

இன்னொன்று, இறந்த உடலை தேவையில்லாமல் தொடுவதை தவிர்க்க வேண்டும். உடலை சுத்தம் செய்யும்போது அல்லது நீராட்டும்போது அல்லது உடலை நகர்த்தும்போது மட்டும் தொடலாம். ஆனால், அனாவசியமாக உடலை பிடித்துக்கொள்வது, கட்டிக்கொள்வது - இதையெல்லாம் தவிர்க்கவேண்டும். அது உங்களுக்கும் நல்லதல்ல, வெளியேறிக் கொண்டிருக்கும் அந்த உயிருக்கும் நல்லதல்ல.

இன்னொரு விஷயம் என்னவென்றால், இறந்த உடலை தனியாக இருக்கும்படி விடக்கூடாது. நமது தேசத்தில், நமக்கு நெருக்கமானவர்கள் யாராவது இறந்துவிட்டால், அந்த உடலுக்கு பக்கத்தில் அவசியம் ஒரு தீபம் எரியவேண்டும் - அதில் நெய், வெண்ணெய் அல்லது நல்லெண்ணெய் ஊற்றலாம். ஒரு இறந்த உடலை தனியாக விடக்கூடாது, யாராவது கூட உட்கார்ந்து கவனித்துக்கொள்ள வேண்டும். தீபத்தின் சுடருக்கு சுத்திகரிக்கும் திறன் இருக்கிறது. இது க்ளேஷ நாஷன க்ரியா செய்வது போலாகும். சாதாரணமான மரணமாக இருந்தால், பாதத்திற்கு பக்கத்தில் தீபத்தை வைக்கவேண்டும். அந்த மனிதர் உயர்ந்த விதத்தில் உடலைவிட்டு வெளியேறியிருந்தால், தலைமாட்டில் தீபத்தை வைக்கவேண்டும். இதனால் வெளியேறும் சக்திக்கு சுத்திகரிப்பு ஏற்படும். இறந்தவர்களுக்கு உதவும் வல்லமை பெற்றவர் ஒருவர் உடன் இருந்தால், உடலின் ஒரு குறிப்பிட்ட பகுதிக்கு மேல் தீபத்தை வைக்கும்படி அவர் சொல்லலாம். உடலை எரித்து அல்லது புதைத்து முடித்த பிறகு, பதினான்கு நாட்கள் வரைக்கும் தீபத்தை ஏற்றிவைக்கலாம்.

## இறந்தவருக்கு அஞ்சலி செலுத்துவது

கிட்டத்தட்ட உலகின் அனைத்து பாகங்களிலும், ஒருவர் இறந்தவிட்டால், அவருக்கு தெரிந்தவர்கள் வந்து அந்த மனிதருக்கு மரியாதை செலுத்தும் வழக்கம் இருக்கிறது. ஆனால் இந்தியாவில் பொதுவாக, இறந்து போனவரை ஒரு தெய்வமாகவே பார்க்கிறார்கள், அவருக்கு முழுமையாக தலைவணங்குகிறார்கள். அவர் உயிருடன் இருந்தபோது எப்படிப்பட்டவராக இருந்தார் என்பது முக்கியமில்லை. ஒருவேளை அவர் உயிருடன் வாழ்ந்தபோது, எந்த விதமான மரியாதைக்கும் தகுதி இல்லாமல் வாழ்ந்திருக்கலாம். ஆனால் இப்போது அவர் இறந்துவிட்டதால் எல்லோரும் அவருக்கு தலைவணங்குவார்கள். அவர் போய்விட்டார் என்ற சந்தோஷத்தில் ஒன்றும் இப்படிச் செய்வதில்லை, அவர் இனிமேலும் அதே ஆளாக இல்லை என்பதால் வணங்குகிறார்கள். இப்போது இங்கே இருப்பது, இங்கே சுற்றிக் கொண்டிருப்பது முற்றிலும் வேறு தன்மை கொண்டது - அதுதான் உயிர் என்பது. அதுதான் உயிரின் அடிப்படையான தன்மை, அதற்கு யாரும் எதிர்ப்பு காட்டமாட்டார்கள். உயிர்த்தன்மையின் ஞானத்தை யாரும் கேள்வி கேட்கமாட்டார்கள். அது நமக்கெல்லாம் அப்பாற்பட்டது, அதனால் அதற்கு தலைவணங்குவதே சிறந்தது.

**இறந்தவரின் உடைமைகள்**

ஒருவர் இறந்தவுடன், அவருடைய உடலோடு நெருங்கிய தொடர்பில் இருந்த துணிகளை, உள்ளாடை மற்றும் அதுபோன்ற துணிகளை உடனடியாக எரித்துவிட வேண்டும். மற்ற துணிமணிகள், நகைகள் மற்றும் பலப் பொருட்கள் அனைத்தையும் ஒருவரிடமே கொடுக்காமல், வெவ்வேறு மனிதர்களிடம் பிரித்துக் கொடுத்துவிடலாம். மூன்று நாட்களுக்குள் இதைச் செய்யவேண்டும். எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரமாக அனைத்தையும் பிரித்துக் கொடுத்துவிட்டால், அந்த உயிர் குழம்பும். இதற்குமேல் எதைச் சுற்றிவருவது என்று அதற்கு புரியாமல் போகும். அவர்களுடைய பொருட்கள் அனைத்தையும் ஒரு மூட்டையாக கட்டி ஒரே ஆளிடம் தந்துவிட்டால், உயிர் அந்த இடத்திற்கு போய்விடும். ஏனென்றால், தங்களுடைய சொந்த உடலில் இருந்த சக்தி இன்னும் அந்த உடைகளில் இருக்கிறது. அதனால் அந்த உயிர் அதை நோக்கி இழுக்கப்படுகிறது. இப்படி பிரித்துக் கொடுத்துவிடும்போது, கதை முடிந்துவிட்டது என்று புரிந்துபோகிறது, சாந்தி அடைகிறது. இறந்து போனவர் மட்டும் சாந்தி அடையவில்லை, அவருடைய குடும்பத்தாரும், உறவினர்களும் கூட, கதை முடிந்துவிட்டது என்று புரிந்து அமைதி அடைகிறார்கள். அவர் எந்தளவுக்கு பற்று வைத்து அதோடு ஈடுபட்டிருந்தாலும், இப்படி செய்தவுடன் எல்லாம் முடிந்துப் போகிறது.

**உடலை புதைப்பதா எரிப்பதா?**

உங்களுக்கு பிரியமானவர் யாராவது இறந்துபோய், அவருடைய உடல் அங்கே இருக்கிறதென்றால், உங்களுக்குள் பல கற்பனைகள் ஏற்பட்டுக் கொண்டே இருக்கும். "ஒருவேளை அவர் தூங்கிக் கொண்டுதான் இருக்கிறாரோ, ஒருவேளை எழுந்து உட்காருவாரோ, ஏதாவது அற்புதம் நடக்கப்போகிறதோ, இல்லை வேறு ஏதாவது நடக்குமோ," என்றெல்லாம் தேவையில்லாத கற்பனை நடக்கும், பிரம்மை ஏற்படும். இறந்த உடல் இருக்கும்போது, எல்லோரும் அழுதுகொண்டும், உணர்ச்சிவசப்பட்டு கொண்டும் பெரிய நாடகமே நடப்பதை பார்த்திருப்பீர்கள். ஆனால் உடல் எரிந்துபோய்விட்ட அந்த கணத்திலேயே, எல்லோரும் மௌனமாக ஆகிவிடுவார்கள். எப்போதுமே இப்படித்தான். கதை முடிந்துவிட்டது என்று இப்போது எல்லோருக்கும் புரிகிறது, அதனால் சத்தமில்லாமல் ஆகிவிடுகிறார்கள். வாழ்வைப் பற்றிய ஆழமான புரிதலிலிருந்தே உடலை எரித்திடும் வழக்கம் வந்திருக்கிறது. உங்களுடைய சுவடு துளியும் இல்லாதபடி செய்வதுதான் உடலை எரிப்பதில் உள்ள அடிப்படையான நோக்கம். நீங்கள் போய்விடும்போது, நீங்கள் சுத்தமாக போய்விடுகிறீர்கள், அவ்வளவுதான். உங்களுடைய மிச்சம் எதுவுமே இருக்கக்கூடாது. ஒருவர் உடலை விட்டபோது, விழிப்புணர்வோடு

விட்டிருந்தாலும் இல்லாவிட்டாலும், அவர் மென்மையாகவாவது வெளியேறியிருந்தால், அப்போது அவரை புதைக்கலாம். ஆனால், அவர் உடலைவிட்டு வெளியேறுவது திடீரென்றோ, அதிர்ச்சிகரமாகவோ ஏற்பட்டிருந்தால், அப்போது உடலை நிச்சயமாக எரித்துவிட வேண்டும்.

இந்தியாவில் பாரம்பரியமாக, விவசாயக் குடும்பங்களில் இருப்பவர்கள் இறந்தவர்களை புதைப்பதுதான் வழக்கம். அவர்களில் பெரும்பாலானவர்கள் முதுமையால்தான் இறந்திருப்பார்கள் - மென்மையான விதத்தில்தான் உடலைவிட்டு வெளியேறியிருப்பார்கள். சத்ரிய குடும்பங்களில், அதாவது போரிடும் வர்க்கத்தில் இறந்தவர்களை எப்போதுமே எரித்துவிடுவார்கள். ஏனென்றால் அவர்களில் பெரும்பாலானவர்கள் போரில் அல்லது வேறெங்காவது சண்டை போடும்போது அதிர்ச்சியான முறையில் உடலைவிட்டு வெளியேறியிருப்பார்கள். அப்படி இல்லாவிட்டாலும் கூட, சாதாரணமாகவே இவர்கள் மது குடிப்பது, அதையும் இதையும் செய்வது என்று ஆடம்பரமாக வாழ்பவர்கள்தான். அதனால் பெரும்பாலான நேரம், எப்படியாவது தங்களுடைய உடலை சேதமாக்கிக்கொள்வார்கள். அந்த விதத்தில் இறந்த உடல்களை உடனடியாக எரித்துவிட வேண்டும். ஆனால் இப்போதெல்லாம், இந்த மாதிரி விஷயங்களை அடையாளம் கண்டு புரிந்துகொள்பவர்கள் யாரும் இல்லை. அது மட்டுமில்லை, அவர்களை ஒரு சவப்பெட்டிக்குள் வைத்து புதைக்கும்போது, நீண்டகாலத்திற்கு அவர்கள் இந்த பூமியோடும் கலந்து போகமாட்டார்கள். அதனால் நான் சொல்வது என்னவென்றால், ஒருவர் இளமையாக உயிர்ப்புடன் இருக்கும்போதே இறந்துபோனால், அவரை எரிப்பதுதான் நல்லது. வயதாகி முதுமையால் இறப்பவர்களை மட்டுமே புதைக்கவேண்டும்.

உங்களுக்கு உயிரைப் பற்றி ஆழமான புரிதல் இருக்கவேண்டும். அப்படியிருந்தால், உடலை விடும்போது நீங்கள் முழுமையாக வெளியேறிடும்படி, எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு போய்விடும்படி உங்களால் பிரியமுடியும். ஒருவர் அவ்விதத்தில் வெளியேறினால், அப்போதும் அவரை புதைக்கலாம். நீங்கள் முழுமையாக வெளியேறி விட்டீர்கள் எனும்போது எந்த அவசரமும் இல்லை. வழக்கமாக, அப்படிப்பட்டவர்களுக்கு சமாதிகளை கட்டுவார்கள் - இதனால் அவர்கள் விட்டுச் சென்றுள்ள சக்தியை மற்றவர்கள் பயன்படுத்திக்கொள்ள முடியும்.

ஒருவரை புதைத்தாலும், உடலுக்கு மேலேயும் கீழேயும் ஒரு அடுக்கு உப்பும், ஒரு அடுக்கு மஞ்சளும் போடவேண்டும். நாம் அவர்களை வைத்து புதிய ரக சாம்பாரை உருவாக்கப் போவதில்லை. அந்த உடல் கூடிய அளவு சீக்கிரமாக மக்கிப் போகும்படி செய்வதுதான் நோக்கம். இவையெல்லாம் இல்லாமல் அப்படியே நிலத்தில் புதைத்துவிட்டால், உடல் நீண்டகாலத்திற்கு கெடாமல் அப்படியே இருக்கும். அப்போது

தேவையில்லாத நிகழ்வுகள் ஏற்பட வாய்ப்பிருக்கிறது. அப்படி நிகழ்வது நல்லதும் கிடையாது.

அதோடு நம் நாட்டில், இன்னொரு பயமும் இருந்தது - பலவிதமான மாந்திரீக சாதனைகள் செய்பவர்கள் எப்போதுமே இறந்து கொஞ்ச காலமே ஆகியிருக்கும் உடல்களை தேடிக் கொண்டிருப்பார்கள். நீங்கள் அப்படியே புதைத்துவிட்டு போய்விட்டால். நீங்கள் போனவுடனே அவர்கள் வந்து அதைத் தோண்டி எடுத்துக்கொண்டு போய்விடுவார்கள். இந்த காலத்தில் இப்படிப்பட்ட விஷயங்களை நாம் அவ்வளவாகக் கேள்விப்படுவதில்லை. ஆனால், ஒரு காலத்தில் இது அடிக்கடி நடந்துகொண்டிருந்தது. நீங்கள் உப்பு போட்டுவிட்டால், அந்த உடல் அவர்களுக்கு பிரயோஜனம் இல்லாமல் போய்விடும். நீங்கள் உப்பு போட்டுவிட்டீர்கள் என்று அவர்களுக்குத் தெரிந்தால், அவர்கள் அந்த இடத்தை தோண்டவே மாட்டார்கள்.

அழுகும் மாமிசத்தை சாப்பிடும் பறவைகளுக்கு உணவாக இறந்தவர்களின் உடல்களை அளிக்கும் வழக்கத்தை கொண்ட சில கலாச்சாரங்களும் இருக்கின்றன. கப்பல் ஓட்டுபவர்களுக்குள் கடலில் புதைக்கும் வழக்கம் இருப்பது நமக்கு தெரிந்ததே. இந்த வழக்கங்கள் எல்லாம் சில சௌகரியங்களுக்காக உருவானவை. எரிப்பதற்கு கொஞ்சம் கூட விறகே இல்லாத பிரதேசங்களில் சில மதங்கள் தோன்றின. அதனால் புதைப்பது உலகம் முழுக்க பெரிதாக பரவியிருக்கிறது. பாலைவன பகுதிகளில் எரிபொருள் கிடைப்பது மிகவும் அபூர்வம். அதனால் அங்கே உடலை எரிப்பதைப் பற்றிய கேள்வியே இல்லை. அதோடு, மணலில் புதைப்பது மிகவும் சுலபமானது. வெறும் கைகளை வைத்தே குழியை தோண்டிவிடலாம். அதை வைத்தே மூடியும் விடலாம். ஒருவேளை, காட்டு மிருகங்கள் இறந்த உடலை மோப்பம் பிடித்து தோண்டி எடுப்பதால், இறந்தவர்களை ஒரு பெட்டியில் வைத்து புதைக்கும் வழக்கம் உருவானதோ என்னவோ! காலப்போக்கில் மெதுவாக, பெட்டிகள் வகைவகையான வடிவத்தில் எடுப்பான தோற்றத்துடன் உருவாக தொடங்கியது. இன்றைக்கு அதிகப்படியான சவப்பெட்டிகள் அலங்காரத்துக்காக செய்யப்படுகின்றன. ஹார்ட்வுட் வகையை சேர்ந்த மரங்கள், ஸ்டீல் ஆகியவற்றில் இதைச் செய்கிறார்கள். இன்னும் சொல்லப்போனால், கான்கிரீட்டில் கூட சவப்பெட்டி செய்கிறார்கள். இம்மாதிரி பெட்டிகளில் உடலை அடக்கம் செய்தால், அது உள்ளுக்குள்ளேயே அழுகிப்போகும். மிக நீண்டகாலத்திற்கு அது பூமியுடன் கலந்து போகாமலேயே இருக்கும். இது நல்லதே கிடையாது.

ஒருவர் தனக்குப்பின் விட்டுப்போகும் தன்மைகளும் புதைப்பதை தவிர்க்க இன்னொரு காரணம். நீங்கள் இதைப் பரிசோதித்து பார்க்கவேண்டும். உடல்களைப் புதைக்கும் இடுகாட்டுக்குள் நுழைந்து, அந்த இடம் எப்படி

இருக்கிறது என்று உணர்ந்து பாருங்கள். பிறகு உடல்களை எரிக்கும் சுடுகாட்டுக்குள் நுழைந்து, அங்கே எப்படி இருக்கிறது என்று உணர்ந்து பாருங்கள். இன்றைக்கு அங்கே ஐந்து உடல்கள் எரிக்கப்பட்டிருக்கின்றன என்று வைத்துக்கொள்வோம். அந்த இடமே அந்த சக்தியால் மிகவும் உயிரோட்டமாக இருக்கும். அங்கிருக்கும் உயிர்த்தன்மை பெருமளவில் இருக்கும். ஆனால் ஒருவருக்கு மனத்தில் சமநிலை இல்லையென்றால், அந்த சக்தி பயமூட்டும் விதத்தில் இருக்கும். வேறொன்றுமில்லை, அது உங்களுடைய அழியக்கூடிய இயல்பை ஞாபகப்படுத்துவதால்தான் அந்த பயம் ஏற்படுகிறது. அந்த இடத்தில் ஒரு பலி கொடுத்திருந்தால் எப்படி இருக்குமோ, கிட்டத்தட்ட அந்த அளவுக்கு சக்தி இருக்கும். அந்த சக்தியை தங்களுக்கு சாதகமான விதத்தில் பயன்படுத்திக்கொள்ள தெரிந்ததால், யோகிகளும் தாந்திரீகத்தில் இருப்பவர்களும் இப்படிப்பட்ட இடத்தில் நேரம் கழிக்க விரும்பினார்கள். இப்படி உடலை எரித்தப்பின் விட்டுப்போகும் தன்மை மிகவும் உயிரோட்டமாக இருக்கிறது, புதைக்கும்போது அப்படி இருப்பதில்லை.

உடலை புதைக்கும் இடுகாட்டுக்கு போனால், அங்கிருக்கும் சக்திசூழல் சிதைந்துபோகும் விதத்தில் இருக்கும். உடல் அழுகி போவதால் அப்படி ஏற்படுகிறது என்று அர்த்தமில்லை. அதே சக்தி மிகவும் மெதுவாக வெளியேறுகிறது, அதனால்தான். அது மட்டுமில்லை, அந்த சக்தி நீண்டகாலத்திற்கு அப்படியே தொடர்ந்து இருப்பதால், அது பல விதங்களில் ஏகப்பட்ட உயிர்களோடு கலந்து போயிருக்கிறது. இதன் விளைவாக, அந்த சக்தி மிகவும் நாட்பட்டுப்போய் குலைந்த நிலையில் இருக்கும். இடுகாடுகளில் உங்களுக்கு பயம் ஏற்படாது, உங்களுக்குள் ஒருவிதமான சோகமும் சோர்வு மனப்பான்மையும் ஏற்படும். உங்களுக்கு நேசமானவர்களை அங்கே அடக்கம் செய்யாவிட்டாலும், சும்மா அந்த இடத்திற்கு போனதே இந்த மனநிலையை ஏற்படுத்தும். அரசு மருத்துவமனையின் ஜெனரல் வார்டில் எப்படி இருக்குமோ, அந்த மாதிரி உணர்வீர்கள். இப்படி இருக்கும் தன்மை உயிரும் இல்லை மரணமும் இல்லை. இதுபோன்றதொரு தன்மையை விட்டுச்செல்வது எதிர்கால தலைமுறைகளுக்கு நல்லதே இல்லை.

### இறந்த உடலை வீட்டுக்கு கொண்டு வருவது

ஒருவர் எந்த இடத்தில் இறந்து போனாலும், அவருடைய உடலை இறுதிக்காரியங்களுக்காக வீட்டிற்குத்தான் கொண்டு வரவேண்டும் என்ற சென்டிமெண்ட் மக்களிடம் ஆழமாக இருக்கிறது. ஒருகாலத்தில் இது அர்த்தமுள்ளதாக இருந்திருக்கலாம். ஏனென்றால், நம் நாட்டில் பாரம்பரியத்தை கடைப்பிடிப்பவர்கள் பலரும் இப்படித்தான் இருந்தார்கள் - தங்களுடைய வீட்டிலிருந்து நடந்துபோகும் தூரத்தில் இருக்கும் இடத்தில்

விளைந்தப் பொருளை மட்டுமே சாப்பிடுவார்கள், வேறு எதையும் சாப்பிடமாட்டார்கள். அந்த இடத்திற்கு வெளியிலிருந்து வந்த எதையுமே சாப்பிடமாட்டார்கள். அவர்கள் வெளியே பிரயாணம் செய்தபோதும், தங்களுடைய உணவையும் கூடவே கொண்டுபோய் விடுவார்கள். கண்ட இடத்தில் இருந்தும் வந்த உணவை சாப்பிட அவர்கள் விரும்பவில்லை. அதனால் அவர்கள் வாழ்ந்து வந்த அந்த நிலத்தோடு உயிர் ரீதியான தொடர்பை ஏற்படுத்திக் கொண்டார்கள். அந்த பூமியோடு ஆழமான ஒத்திசைவுடன் வாழ்ந்தார்கள். ஒருவர் அந்த மாதிரி வாழ்ந்திருந்தால், அந்த இடத்திலேயே இறப்பதும், அங்கேயே புதைக்கப்படுவதும் மிகவும் முக்கியமானதாக இருக்கலாம்.

இன்றைக்கு, உலகம் முழுவதிலிருந்தும் வரும் பொருட்களை சாப்பிடுகிறோம். அப்படி இல்லாவிட்டால் கூட, நாடு முழுவதிலிருந்து வரும் பொருட்களை சாப்பிடுகிறோம். அது மட்டுமில்லை, உலகம் முழுவதும் சுற்றித் திரிகிறோம். அதனால், உங்களை எங்கே புதைக்கிறார்கள் என்பது இனிமேல் அவ்வளவு முக்கியமானதாக இருப்பதில்லை. இது உணர்வுப்பூர்வமான விஷயமாக மட்டுமே இருக்கிறது. அதோடு நீங்கள் ஏற்கனவே வெளியே ஒரு நாட்டில் இருக்கும் பட்சத்தில், அந்நாட்டின் மண் உங்களில் எந்தளவுக்கு இருக்கிறது என்று தெரியாது. அதனால் உயிர் அடிப்படையில், உடலை எங்கே அடக்கம் செய்கிறீர்கள் என்பது முக்கியமாக இல்லை. ஆனால் உணர்வுரீதியாக, மக்களுக்கு அது ஒரு பொருட்டாக இருக்கிறது. அது மட்டுமில்லை, இதில் நடைமுறை சௌகரியங்களும் இருக்கின்றன. இறுதிக்காரியங்களுக்கு வரவிரும்பும் எல்லா நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும், அது உங்கள் வீட்டில் இருந்தால், வந்து கலந்துகொள்ளும் வாய்ப்பு அதிகமாக இருக்கிறது. அந்த மனிதர் இறந்துபோன இடத்திற்கு பலராலும் வரமுடியாது. அதனால் உடலை வீட்டிற்கு கொண்டு வருவது அர்த்தமுடையதாக இருக்கிறது.

### வீட்டை சுத்தம் செய்வது

ஒரு இடத்தில் அல்லது வீட்டில் மரணம் ஏற்பட்டால், பொதுவாகவே அதை சுத்தப்படுத்த சில முறைகள் இருக்கின்றன. வெறும் சுகாதார காரணங்களுக்காக மட்டும் இல்லை, அந்த இடத்திலிருந்து அந்த விதமான சக்தியை முற்றிலும் துடைத்துவிட வேண்டும் என்பதற்காக இதைச் செய்கிறார்கள். வீடுகளில் அல்லது வசிக்கும் இடங்களில் சுத்திகரிக்க வேண்டுமென்றால், அங்கே *புண்ணிய பூஜை*[2] அல்லது அதுபோல நன்றாக வேலை செய்யக்கூடிய ஒரு சுத்திகரிப்பு முறையை செய்யலாம்.

---

2 ஒரு இடத்தை சுத்தீகரிக்க, லிங்கபைரவி சந்நிதியிலிருந்து வருபவர்கள் செய்யும் ஒரு சுத்திகரிப்பு சடங்கு.

கற்பூர தீபம் போன்ற உயிரோட்டம் மிக்க அக்னியை வீடு முழுவதும் எடுத்துக்கொண்டு போனாலும், அந்த இடத்தை சுத்திகரிக்க முடியும். எப்படி ஒரு தனிமனிதருக்கு "க்ளேஷ நாஷன க்ரியா" செய்கிறோமோ, அதேபோல, முழு வீட்டுக்கும் க்ளேஷ நாஷனம் செய்யலாம். அந்த இடத்தில் மந்திர உச்சாடனங்கள் செய்வதாலும் அதிக பயன் ஏற்படும்.

மரணம் ஏற்படும் இடத்தில் மட்டும் சுத்திகரிப்பு தேவைப்படுகிறது என்று கிடையாது. பாரம்பரியமாகவே, இறுதிச்சடங்குக்கு போய்விட்டு வந்தால் நீங்கள் குளிக்கவேண்டும் என்பார்கள். உங்களை சரியாக சுத்தப்படுத்திக் கொள்ளவேண்டும். உடைகளை மாற்றிக்கொள்ள வேண்டும் என்று சொன்னார்கள். வீட்டிற்குள் நுழைந்து எதையும் தொடுவதற்கு முன்பாக இதையெல்லாம் செய்திருக்க வேண்டும். சில கலாச்சாரங்களில், இறுதிச் சடங்குக்கு பயன்படுத்திய உடைகளை மறுபடியும் பயன்படுத்தவே மாட்டார்கள், அதை எரித்துவிடுவார்கள். ஒருவிதத்தில், அந்தத் துணியில் மரணத்தின் ஆரா (ஒளிவட்டம்) சேர்ந்துவிடுகிறது. அதை தூக்கிக்கொண்டு சுற்ற அவர்கள் விரும்புவதில்லை, அதனால் அப்படிச் செய்கிறார்கள்.

### உடலை எரித்த பிறகு மொட்டை அடிப்பது

இந்துக்களின் சடங்குகளில், இறந்தவருடைய உறவினர்களில் இருக்கும் ஆண்கள் மொட்டை அடித்துக்கொள்வது வழக்கமான ஒன்று. மக்கள் பொதுவாகவே தலையில் நிறைய முடி வைத்துக்கொண்டிருந்த காலத்தில், இப்படி முடியை மழிக்கும் வழக்கம் வந்தது. இன்றைக்கு, எப்படியும் மாதத்திற்கு ஒருமுறை போல முடியை வெட்டிக்கொள்கிறார்கள். அதனால் முடியை எடுப்பதும் எடுக்காததும் பெரிய வித்தியாசத்தை ஏற்படுத்தப் போவதில்லை. ஆனால் அப்போதெல்லாம், சாதாரணமாகவே நீளமான தலைமுடி வைத்திருந்தார்கள். முடி என்பது ஒளிவட்டம் எனப்படும் ஆராவை எளிதில் சேகரிக்கும் தன்மை கொண்டது. ஸ்டாடிக் மின்சாரத்தை சேகரிக்கும் இயல்பு முடிக்கு உண்டு, இது உங்களுக்கு தெரியும். நிறைய தலைமுடி இருப்பவர்களுக்கு முடியில் ஸ்டாடிக் ஏற்படும் - வானிலை ஒருவிதமாக இருக்கும்போது சில சமயம் அது படபடவென்று சத்தம் செய்யும். முடிக்கு இந்த தன்மை உண்டு. அதேபோல, மரணம் ஏற்பட்ட வீட்டில் நீங்கள் இருந்திருந்தால் அல்லது அவர் உங்களுக்கு சொந்தமாக இருந்தால், நீங்கள் மரணத்தின் ஆராவை குறிப்பாக உங்களுடைய முடிகளில் சேகரிக்கிறீர்கள். இது உங்களைச் சுற்றி இருக்கும்.

இப்படி, உங்களுக்கு அதிகமான முடி இருந்தால் அதை மழித்திடும்போது, அந்த ஆரா போய்விடும். புதிதாகப் பிறந்த குழந்தைகளுக்கு மொட்டை அடிப்பதற்கு காரணமும் இதுதான். தாயின் கருவில் இருந்தபோது ஒருவிதமான ஆரா சேர்கிறது. அந்த ஆரா பிறப்பிற்குப் பிறகும் அப்படியே இருக்கிறது. அது உங்களுடனே இருந்தால் உங்களால்

நன்றாக வளரமுடியாது. அதனால் அந்த குழந்தை ஓரளவுக்கு வளர்ந்து, ஆரோக்கியம் நிலையாக ஆகிடும் வரை, நான்கைந்து மாதங்கள் காத்திருப்பார்கள், அதன்பிறகு அதற்கு மொட்டை அடிப்பார்கள். குழந்தைக்கு மொட்டை அடிக்கும்போது, சக்திகள் தலைப் பகுதியை நோக்கி நகர்கின்றன. இதனால் மூளையின் வளர்ச்சிக்கும் உதவுகிறது.

**அஸ்தியை கரைப்பது**

மரணம் ஏற்பட்ட பிறகு, அந்த உயிர் உடலைவிட்டு முழுமையாக வெளியேறுவதற்கு நாற்பது நாட்கள் வரை ஆகலாம். பொருள் உடலை எரித்திருந்தாலும், உடலின் ஏதாவது அம்சத்தை அவர் தேடுவார். அவர்களுடைய அஸ்தி, அவர்கள் பயன்படுத்திய உடைகள் அல்லது அவர்களுக்கு சொந்தமான ஒரு பொருள் என்று எதையாவது தேடுவார்கள். அது அந்த உடலின் வியர்வை அல்லது வாசனையாகவும் இருக்கலாம். ஏனென்றால், எல்லாம் முடிந்துவிட்டது என்ற புரிதல் இன்னும் அவருக்கு ஏற்படவில்லை. இப்படி நடப்பதை நாம் விரும்பவில்லை, அதனால் இந்த வாய்ப்பை அகற்றிவிட பார்க்கிறோம். இந்த நோக்கத்தில் சில விஷயங்கள் செய்கிறோம். அதில் ஒன்று, அவருடைய சாம்பலை முடிந்த அளவுக்கு பரவிப்போகும்படி செய்வது.

உடலை எரித்த பிறகு அஸ்தியை ஒரே இடத்தில் வைத்திருந்தால், அந்த உயிர் அதைத் தேடிவருவதற்கு வாய்ப்பு இருக்கிறது. அதனால், அதை பரவிப்போகும்படி நதியில் கரைத்துவிடுவார்கள். அப்படி செய்தால், அதைக் கண்டுபிடிக்க முடியாமல் போய்விடும். எல்லாம் முடிந்து போய்விட்டது என்று அந்த உயிருக்கு புரிய வைக்கவே இவற்றையெல்லாம் செய்கிறார்கள். அதே சமயம், உயிரோடு இருக்கும் மற்றவர்களுக்கும் எல்லாம் முடிந்துவிட்டது என்று புரிகிறது. இல்லாவிட்டால், அஸ்திப் பானையை வீட்டில் வைத்துக்கொண்டு தேவையில்லாமல் உணர்ச்சிவசப்படுவார்கள்.

அஸ்தியை யாரும் தவறாக பயன்படுத்தக் கூடாது என்ற நோக்கமும் அதை அகற்றுவதற்கு இன்னொரு காரணம். வழக்கமாக, மாந்திரீக முறைகளைப் பயிற்சி செய்பவர்கள் சுடுகாட்டில் இருக்கும் சாம்பலை சேர்ப்பார்கள். ஒரு உடலற்ற உயிரை தங்களிடம் ஈர்ப்பதற்காக செய்யப்படும் சடங்குகளில் அதைப் பயன்படுத்துவார்கள். உங்களுக்கு அவர்கள் ஏதோ உதவி செய்யப்போகிறார்கள் என்பதுபோல் அங்கே சுடுகாட்டில் உட்கார்ந்து கொண்டிருப்பார்கள் - உண்மையில் அவர்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள். பொதுவாக, ஒரு குறிப்பிட்ட விதமான சடங்கை செய்ய வேண்டுமென்றால் உடலையே திருடிவிடுவார்கள். வழக்கமாக அகோரிகள்தான் இப்படிச் செய்வார்கள். இறந்த உடலின் மேல் உட்கார்ந்துகொண்டு தங்களுடைய சாதனாவை செய்ய, இளமையில் இறந்த ஒருவரின் உயிர்ப்புமிக்க உடலை எப்போதும்

தேடிக்கொண்டிருப்பார்கள். அந்த உடலில் வியான வாயு இன்னும் வெளியேறிக் கொண்டுதான் இருக்கும். அதைப் பயன்படுத்தி அந்த உடலை செயல்படுத்துவார்கள். பிறகு தங்களுடைய சாதனாவுக்காக குறிப்பிட்ட விதத்தில் பயன்படுத்துவார்கள். அல்லது சில விஷயங்களை செய்ய, தங்களுடைய சொந்த சக்தியை பயன்படுத்தியும் அந்த உடலை செயல்படுத்துவார்கள். அந்தக் காலத்தில் இவையெல்லாம் வழக்கமாக நடப்பதுதான். இன்னொரு விதமானவர்களும் இறந்தவர்களின் சாம்பலை தேடுவார்கள். இவர்கள் தவறான நோக்கத்திற்காக மாந்திரீகம் செய்பவர்கள். அதைத்தான் பில்லிசூனியம் என்று சொல்கிறார்கள்.

இப்படிப்பட்ட காரணங்களுக்காகத்தான், உங்களுக்குப் பிரியமான ஒருவர் இறக்கும்போது, அவருடைய அஸ்தி முழுவதும் முடிந்தளவுக்கு பரவிப்போகும்படி செய்யவேண்டும், இறந்துபோன அந்த மனிதர் அஸ்தியை தேடி வராமல் பார்த்துக்கொள்ளலாம் அல்லது அவர்கள் மாந்திரீகத்திற்கு இரையாகாமலும் பார்த்துக்கொள்ளலாம். அதனால் அஸ்தியை நதியில் கரைத்துவிடலாம், அல்லது காற்று பலமாக அடிக்கும் மலைப்பகுதியில் வீசி எறிந்தால், அது எல்லா பக்கமும் பரவிப் போய்விடும். அந்தக் காலத்தில் அஸ்தியை தவறாக பயன்படுத்துவது சாதாரணமாக இருந்தது. ஆனால் இன்றைக்கு அப்படி செய்யும் திறமை உள்ளவர்கள் அவ்வளவாக இல்லை, கையளவுதான் இருக்கிறார்கள். அப்படியிருந்தாலும், அஸ்தியை பரவிப் போகும்படி செய்வதுதான் மிகவும் சிறந்தது. அப்படிச் செய்வதால் அந்த உயிர் அதை நோக்கி ஈர்க்கப்படாமல் இருக்கும்.

## உறுப்புகளை தானம் செய்வது சரியா?

என்னைக் கேட்டால், நீங்கள் வாழும்போது பயனுள்ளபடி வாழவில்லை என்றாலும், இறக்கும்போதாவது பயன்படும்படி போகலாமே என்று சொல்வேன். அதனால், அந்த இறந்த உடலை யாராவது பயன்படுத்த முடியும் என்றால் பரவாயில்லை, அது சரிதான். எல்லோரும் ஒரே விதமாக வாழ்வதில்லை, அதைப்போலவே அவர்கள் இறப்பதும் ஒரே விதமாக இல்லை என்று ஏற்கனவே பார்த்தோம். மரணம் ஏற்படும் நுட்பத்தின் அடிப்படையில் பார்த்தால், அவர்கள் ஏதாவது ஒரு சக்கரத்தின் மூலமாக இறந்துபோகிறார்கள் என்று சொல்லலாம். அந்தப் பரிமாணங்களில் ஏதாவது ஒன்றில் அவர்கள் இறக்கமுடியும். ஒருவர் குறிப்பிட்ட விதத்தில் இறந்திருந்தால். உடலைவிட்டு விழிப்புணர்வுடன் வெளியேறியிருந்தால், அப்போது அவருடைய உடலை அறுத்து உறுப்புகளை எடுப்பது நல்லதல்ல. ஆனால், வழக்கமான முறையில் இறந்தவர்கள் எனும்போது அப்படி செய்தால் பரவாயில்லை. மறுபடியும் அதே பிரச்சனைதான் - இதையெல்லாம் நிர்ணயிப்பதற்கு திறமை

உள்ளவர்கள் யார்? அது மட்டுமில்லை, ஒருவர் இறந்து கிடக்கும்போது, அவருடைய மகனிடம் போய், "பரவாயில்லை, உன்னுடைய அப்பா நல்லமுறையில் இறக்கவில்லை. அதனால் அவருடைய உடலை அறுத்துக்கொள்ளலாம். உறுப்புகளை தானம் செய்யலாம்," என்று சொல்லவா முடியும்? சமூகத்தில் வாழும்போது அப்படிச் சொல்வது உகந்ததில்லை, அது சாத்தியமும் இல்லை. அதனால் விதிவிலக்குகள் இல்லாமல், உறுப்புதானம் என்பது எல்லோருக்கும் பொதுவாக திறந்து இருப்பதே நல்லது. அதோடு, அது இன்னொருவருக்கு பயனுள்ளதாக இருக்கும்போது அதைச் செய்வது நல்லதுதானே! உண்மையில், உடல் உறுப்புகளை வெளியே எடுப்பது சில மனிதர்களுக்கு அவ்வளவு உகந்ததாக இருக்காது. ஆனால், பரவாயில்லை - இன்னொருவர் யாரோ உங்கள் கண்களின் மூலம் பார்க்க முடியுமென்றால், உங்கள் உறுப்புகளின் மூலம் நன்றாக வாழமுடியுமென்றால், பரவாயில்லை.

இப்போது, ஆன்மீகப் பாதையில் இருப்பவர்கள் தங்களுடைய உடல் உறுப்புகளை தானம் செய்யலாமா என்று கேட்கிறார்கள். சிறுநீரகம் மற்றும் ஒருசில உறுப்புகள் தவிர, மற்ற எல்லா உறுப்புகளையும் நீங்கள் இறந்த பிறகுதான் தானம் செய்கிறீர்கள். அதனால் அப்படி செய்யலாமே, அதில் என்ன பிரச்சனை இருக்கிறது? கேள்வி என்னவென்றால்: மரணத்திற்கு பிறகு அவர்கள் உடலை கொஞ்சம் தோண்டுகிறார்களே, அது ஆன்மீகத்தில் இருப்பவருக்கு சரியானதா? ஒருவர் இறந்தபிறகு, எப்படியும் அவரை எரிக்கவோ புதைக்கவோ செய்கிறார்கள். புதைத்தால் அந்த உறுப்புகள் புழுக்களுக்கும் செடிகளுக்கும் தானமாக போகிறது, அவர்களும் அதைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள்தான். அதிலிருந்து ஒரு கண்விழியை மட்டும் எடுத்தோம் என்றால், அந்த புழுக்களுக்கு அது ஒன்றும் ஒரு குறையாக இருக்கப் போவதில்லை. விபத்து போன்ற மரணங்களில் ஒருவர் இறக்கும்போது உடல் சிதைந்துபோன நிலையில் இருந்தாலும், உறுப்புகள் இன்னும் நன்றாகவே இருக்கிறதென்றால், அதை எடுத்துக்கொள்ளலாம், அது சரிதான். அதற்கும் ஆன்மீகத்துக்கும் எந்த சம்பந்தமும் இல்லை. இது வெறும் உணர்ச்சிப்பூர்வமான பிரச்சனைதான். யாருக்கோ ஏதோ பயனுள்ளதாக இருந்தால் அதைப் பயன்படுத்தி அவர்கள் பார்க்கவும், நன்றாக வாழவும் முடியுமென்றால், அது சரிதான். அது மட்டுமில்லை, "பத்து பேருக்கு என்னுடைய உடல் பயன்படட்டுமே!" என்ற நோக்கத்துடன் ஒருவர் உயிர்விடுவதும் அவருக்கு நல்லதுதான்.

ஒருசிலர் ஆராய்ச்சிகளுக்காக தங்களுடைய உடல் முழுவதையும் தானம் செய்கிறார்கள். இந்த உடல்கள் நீண்டகாலத்திற்கு பாதுகாக்கப்படும். எந்தளவுக்கு முடியுமோ அந்தளவுக்கு அறுத்து திறக்கப்படும். முதல்

பதினொன்றிலிருந்து பதினான்கு நாட்களுக்குள் உடலை அறுக்க ஆரம்பித்துவிட்டார்கள் என்றால், நிச்சயமாக அந்த மனிதருக்கு கொஞ்சம் தீங்கு ஏற்படும். அந்த மாதிரி பிரச்சனை என்றால், அவர் உடலைவிட்டு முழுமையாக வெளியேறும்படி நாம் ஏதாவது செய்யலாம். அதற்குப் பிறகு அந்த உடலை எப்படிப் பயன்படுத்துகிறார்கள் என்பது ஒரு பொருட்டாக இருக்காது. ஆனால் படிப்பிற்காகவும் ஆராய்ச்சிக்காகவும் அவர்கள் அதை அறுக்க ஆரம்பிக்கும்போது பதினான்கு நாட்களுக்கு மேல் அதிகமாகவே ஆகியிருக்கும் என்று நினைக்கிறேன். அந்த சமயத்தில் அந்த உடல் ஒரு காய்கறியை போலத்தான் இருக்கும். அப்போது அதை டாக்டருக்கு கொடுத்தாலும் சரி, எரித்தாலும் சரி, புதைத்தாலும் சரி, இறந்துபோன அந்த தனிமனிதருக்கு எந்த வித்தியாசமும் இருக்காது.

இப்போது, ஒருசிலருக்கு இப்படி ஒரு கவலை இருக்கிறது: கர்மா என்பது நம் வாழ்வின் மிகவும் நுட்பமான அம்சங்களில் கூட பதிக்கப்பட்டு இருக்கும்போது, தானமாகப் பெற்ற மாற்று உறுப்புடன் சேர்ந்து, அதை கொடுத்தவருடைய கர்மாவும் நமக்கு வந்துவிடுமா? எத்தனையோ காலமாக, ரத்த தானம் செய்து கொண்டிருக்கிறார்கள். மற்ற எந்த உறுப்பையும்விட, ரத்தம் என்பது மிகவும் இன்றியமையாதது. சொல்லப்போனால், அது உடல் முழுக்க ஒவ்வொரு உறுப்புக்கும் போகிறது. உங்கள் மூளை உட்பட எல்லா இடங்களுக்கும் சென்று சேர்கிறது. ஆனால், ரத்தத்தை பகிர்ந்துகொள்ளும்போது எல்லோருக்கும் எல்லாம் நன்றாகத்தான் நடக்கிறது. அப்படியென்றால் இதுவும் சரியாகத்தானே இருக்கவேண்டும். நிச்சயமாக உங்களுக்கு வந்து சேரும் விஷயம் என்று கொஞ்சம் இருக்கிறது. ஆனால் அதனால் ஏற்படும் பாதகத்தைவிட சாதகங்கள் மிகவும் அதிகமாக இருக்கின்றன. இப்படிச் செய்வதுதான் எல்லாவற்றையும்விட சிறந்ததா? இல்லை. ஆனால் நமக்கு தேவையான போது இப்படி செய்யலாமா? ஆம், செய்யலாம். அந்த உறுப்பு உகந்ததாக இல்லையென்றால் அல்லது ஏதோ ஒருவிதத்தில் உடலோடு ஒத்துப் போகவில்லை என்றால், எப்படியும் உடல் அதை நிராகரித்து விடப்போகிறது, அவ்வளவுதானே.

பிரச்சனை என்னவென்றால், இவற்றைப் பற்றி அளவுக்கதிகமாக உணர்ச்சிவசப்படுகிறோம், அவ்வளவுதான். உங்கள் சிறுநீரகம் என்பது ஒரு வடிகட்டிதான். உங்களிடம் ஒரு டீசல் கார் இருந்தால் 10,000 கிலோமீட்டர் ஓடிய பிறகு, ஒவ்வொரு முறையும் எரிபொருளை வடிகட்டும் ஃபில்டரை மாற்றித்தான் ஆகவேண்டும். அதேபோல, உங்களுடைய சிறுநீரக வடிகட்டியை மாற்றி வைக்கிறீர்கள், அவ்வளவுதான். கேள்வி என்னவென்றால், உங்களுடைய வடிகட்டி ஏற்கனவே பயன்படுத்தப்பட்டுள்ளது, அது செகண்ட் ஹேண்ட் வடிகட்டிதான்.

அதனால், ஏதாவது பிரச்சனை இருக்கிறதா? இருக்கலாம். அதனால் இப்போது இந்த மாதிரி வடிகட்டிகளை பரிசோதனை கூடத்திலேயே உருவாக்கப் பார்க்கிறார்கள். பரிசோதனை கூடத்திலேயே கல்லீரல், சிறுநீரகம், மண்ணீரல் என்று தேவையானதை எல்லாம் உருவாக்கி, பாதுகாத்து வைக்கிறார்கள். அது நல்லபடியாக இருக்கும், புது வடிகட்டியாக இருக்கும். உடல் ஒரு இயந்திரம்தானே, அதனால் நீங்கள் அதை பொருத்திக் கொள்ளலாம். ஒருவேளை எல்லா உறுப்புகளையும் மாற்றி அமைத்துக்கொண்டால் நீங்கள் எளிதில் ஆன்மீகத்தை நோக்கி திரும்புவீர்களோ என்னவோ! ஏனென்றால் அப்போது, இது என்னுடைய சொந்த உடல் என்ற உணர்வு இருக்காதல்லவா? அது நல்லதுதானே! அப்போது நான் அவர்களிடம் போய், "நீ இந்த உடல் அல்ல!" என்று சொல்லத் தேவை இல்லையே! "தான்" என்பது தங்களுடைய இதயம் அல்ல, தங்களுடைய கல்லீரல் அல்ல, தங்களுடைய சிறுநீரகம் அல்ல என்றெல்லாம் அவர்களுக்கு தெரிந்திருக்கும், இல்லையா?

## உடலை உருவழித்தல் என்றால்...

இறப்பிற்குப் பிறகு செய்யும் சடங்குகளுக்கு இரண்டு முக்கிய காரணங்கள் இருக்கின்றன - பொருள் உடலை சரியான முறையில் அப்புறப்படுத்துவதும், உடலைவிட்ட உயிர் தொடர்ந்து மேற்கொள்ளும் பயணத்தில் அதற்கு உதவுவதும்தான் இந்தச் சடங்குகளின் நோக்கம். அதேசமயம், இதுபோன்ற உதவியை யாரிடமும் பெற்றிட தேவையில்லாத சில மனிதர்களும் இருக்கிறார்கள். அவர்கள் தங்களுக்குத் தானே உதவிக்கொள்வார்கள். இவர்கள் மிகவும் உயர்ந்த வல்லமைகளையும் சித்தியையும் பெற்ற யோகிகள் - இவர்கள் விரும்பியபோது விரும்பிய விதத்தில் உடலை விடுவதோடு மட்டும் நிற்காமல், அது முற்றிலும் இல்லாமல் போகும்படி, அதை உருவழித்தும் விடுவார்கள். தங்களுடைய உடலை எரித்திடும் சிரமத்தைக் கொடுத்து யாரையும் தொந்தரவு செய்யவேண்டாம் என்று நினைத்துவிட்டார்களோ என்னவோ! அப்படிப்பட்ட உடல் அழிந்து போவதில்லை, அது உருவழிந்து போகிறது. அது படைப்பிலிருந்து படைப்பில்லாத தன்மைக்கு போய்விடுகிறது. பிரபஞ்சத்தில் நாம் பார்க்கும் நிகழ்வுகள் எல்லாமே படைப்பில்லாத நிலையிலிருந்து படைப்பாக உருவாகி வருகிறது, தோன்றா நிலையிலிருந்து தோற்றத்திற்கு வருகிறது. ஆனால், இங்கேயோ தலைகீழாக நிகழ்த்தப்படுகிறது. பஞ்சபூதங்களின் மேல் சிறந்த ஆளுமை கொண்ட ஒரு யோகியால் தன்னுடைய உடலுக்கு இப்படி செய்துகொள்ள முடியும்.

இப்படிப்பட்ட யோகிகள் எவ்வளவோ பேர் இருந்திருக்கிறார்கள். அவர்கள் போய்விடும்போது, சிலர் சாம்பலை பின்னால் விட்டுச்செல்வார்கள்.

ஆனால் பெரும்பாலான நேரங்களில் சிறிதளவு நீர்தான் மிஞ்சியிருக்கும், அங்கே கொஞ்சமாக தேங்கியிருக்கும். இதை எப்படி செய்கிறார்கள்? அடிப்படையில் இந்த உடல் என்பது பஞ்சபூதங்களின் ஒரு விளையாட்டுத்தான். இந்த உடல் 72 சதவிகிதம் நீராலானது. 12 சதவிகிதம் நிலம், 6 சதவிகிதம் காற்று, 4 சதவிகிதம் நெருப்பு, மீதம் உள்ள அளவு ஆகாயம். ஆகாயத்தைப் பொருத்தவரை நாம் செய்ய வேண்டியது ஒன்றுமேயில்லை. மற்ற நான்கையும் உருவழிப்பது எப்படி என்று உங்களுக்கு தெரிந்திருந்தால், குறிப்பாக நிலத்தைப் பற்றி தெரிந்திருந்தால், இந்த இடத்திலேயே நீங்கள் நீராவிப்போல மறைந்துப் போக முடியும். இவர்களால் நீரையும் உருவழிக்க முடியும்தான். ஆனால் அது உடலின் பெருமளவிலான பாகமாக இருப்பதால், வழக்கமாக கொஞ்சம் தண்ணீர் விட்டுப்போய்விடும், மிஞ்சிப் போகும். என்ன, அவரால் அதை கனக்கச்சிதமாக செய்யமுடியவில்லை, அவ்வளவுதான். அதனால்தான் கொஞ்சம் விட்டுப்போகிறது. தங்களுடைய வீட்டில் லிங்கபைரவி யந்த்ரா வைத்திருக்கும் நமது தியான அன்பர்கள் எத்தனையோ பேருக்கு இப்படி நடந்திருக்கிறது. சில நாட்களில் காலை வேளையில், யந்த்ராவின் பக்கத்தில் கொஞ்சம் தண்ணீர் தேங்கியிருப்பதை பார்ப்பார்கள். அதற்கு முந்தைய நாள் இரவுதான் எல்லாவற்றையும் சுத்தமாக துடைத்து, விளக்கை ஏற்றிவிட்டு போயிருப்பார்கள். ஆனால் காலையில் பார்த்தால் அந்த இடத்தில் கொஞ்சம் தண்ணீர் தேங்கியிருக்கும். இதில் கவலைப்படுவதற்கு ஒன்றுமில்லை. இதற்கு காரணம் என்னவென்றால், ஏதோ ஒரு உடலற்ற உயிர், அங்கிருக்கும் யந்த்ராவை பயன்படுத்திக்கொண்டு, தன்னுடைய கர்ம உடலை முற்றிலுமாக கரைத்துக் கொண்டுவிட்டார். அந்தச் செயலின்போது கொஞ்சம் தண்ணீர் விட்டுப்போனது, அவ்வளவுதான். இது முற்றிலும் சரியானதுதான்.

சமீபகாலத்தில் கூட இம்மாதிரி உருவழிக்கும் நிகழ்வுகள் பதிவுசெய்யப் பட்டுள்ளன. 1873ஆம் வருடம், வள்ளலார் என்று அழைக்கப்பட்ட இராமலிங்க அடிகளார் தன்னுடைய கடைசி பிரசங்கத்தை செய்தார். அப்போது, தான் "போய்விட" போவதாக அறிவித்தார். ஜனவரி 1874ல், ஒரே அறையை மட்டுமே கொண்ட தன் வசிப்பிடத்திற்கு போனார். தன்னுடைய அறைக்கு வெளிச்சம் தருவதற்காக பயன்படுத்தும் தீபத்தை வெளியே வைத்தார். அந்த தீபத்திலிருந்து ஏற்றப்பட்ட விளக்குகளை வைத்து தியானிக்கும்படி மக்களிடம் சொன்னார். யாரும் தன்னுடைய அறையை திறக்க வேண்டாம் என்று கேட்டுக்கொண்டார். அப்படி அவர்கள் திறந்தால், அங்கே தன்னை பார்க்கமுடியாது என்றும் சொல்லியிருந்தார். அதற்குப் பிறகு பிரிட்டிஷ் அரசாங்கம் கட்டாயப்படுத்தி மே மாதத்தில் அந்த அறையை திறந்தார்கள், எதிர்பார்த்தபடி அறை காலியாக இருந்தது. இதுபோல யோகிகளும், மகான்களும் தங்களுடைய

உடலால் மற்றவர்களுக்கு சிரமம் ஏற்படுத்த வேண்டாம் என்று தேர்ந்தெடுத்துள்ள சம்பவங்கள் எத்தனையோ உண்டு.

இதுபோல இன்னொரு நிகழ்வு சமீபத்தில் 1952ல் திபெத் நாட்டில் நடந்ததாக சொல்லப்படுகிறது. சோனம் நம்கியால் என்ற புகழ்பெற்ற குரு இருந்தார். அவர் மந்திரங்களையும், புனிதநூல்களையும் கல்லில் செதுக்கும் எளிமையான தொழிலில் ஈடுபட்டிருந்தார். அவர் எந்த ஆன்மீக குருகுலத்தையும் பாரம்பரியத்தையும் சேர்ந்தவர் கிடையாது. பாரம்பரியமான பாடல்களுக்கு பதிலாக அவர் தன்னுடைய சொந்தமான பாடல்களையும் உச்சாடனங்களையும் தானே உருவாக்கி பாடினார். அவர் என்ன செய்கிறார் என்று ஒருவருக்கும் ஒன்றும் புரியவில்லை. அவர் தன்னுடைய இளவயதில் ஒரு வேட்டைக்காரராக இருந்தார் என்று சொல்வார்கள். அப்போது ஒருசமயம் மலைகளில் திரிந்து கொண்டிருந்தபோது, ஒரு மகத்தான குருவிடமிருந்து போதனை பெற்றார் என்பார்கள். ஒருமுறை அவர் நோய்வாய்ப்பட்டார், ஆனால் அதற்காக வருத்தப்படவில்லை, அதை ஒரு பாரமாக உணரவில்லை. மாறாக, மேலும் மேலும் சந்தோஷம்தான் அடைந்தார். தன்னுடைய குடும்பத்தையும் மற்ற எல்லோரையும் பக்கத்தில் அழைத்து, "நான் சீக்கிரமாக இறக்கப் போகிறேன், நான் கேட்பதெல்லாம் ஒன்றே ஒன்றுதான் - நான் இறக்கும்போது என்னுடைய உடலை ஒரு வாரத்திற்கு அசைக்காமல் இருங்கள். அதற்குப் பிறகு அதை கவனித்துக் கொள்ளலாம்," என்று சொன்னார்.

அவர் சொன்னது போலவே, சில வாரங்களுக்குள் இறந்துபோனார். அதற்குப்பிறகு அவருடைய குடும்பத்தார், அவருடைய உடலை ஒரு உறையால் சுற்றி, வீட்டில் இருந்த ஒரு சிறிய அறைக்குள் வைத்துவிட்டார்கள். அந்த சமயத்தில் அவர் உடல் லேசாகவும், அளவில் சிறியதாகவும் இருந்ததுபோல் அவர்களுக்கு தோன்றியது. ஒவ்வொரு நாளும் அறைக்குள் எட்டிப் பார்த்தபோது, உடல் மேலும் மேலும் அளவில் குறைந்துகொண்டே போனதுபோல தோன்றியது. அவர் இறந்த எட்டாவது நாளன்று இறுதி காரியங்களுக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். அப்போது உடலைத் திறந்து பார்த்தபோது, உள்ளுக்குள் நகங்களும் முடியும் மட்டுமே இருந்தது, வேறு ஒன்றுமே இல்லை. நிச்சயமாக ஏதோ ஒரு சமயத்தில், அவர் இந்தியாவுக்குள் சுற்றி திரிந்திருக்க வேண்டும். அப்போது, இமயமலை யோகிகளிடம் இந்த வித்தையைக் கற்றுக்கொண்டிருக்க வேண்டும். ஏனென்றால், இது இந்திய யோகிகளின் தனித்தன்மை வாய்ந்த முத்திரை என்பது தெளிவாகத் தெரிகிறது.

மாந்திரீக முறைகள் மூலமும் உடலை உருவழிக்க முடியும். நூற்றுக்கணக்கான வருடங்களாகவே இந்த வழக்கம் இருந்திருக்கிறது.

குறிப்பாக வட அமெரிக்க பழங்குடிகளிடம் இந்த வழக்கம் இருந்திருக்கிறது. ஒருமுறை இப்படி நிகழ்வதை நான் மைசூரில் பார்த்தேன். நான் என் மோட்டார் சைக்கிளில் போய்க்கொண்டிருந்தேன். அப்போது எந்த காரணமும் இல்லாமல் ஏதோ ஒரு இடத்தில் நிறுத்தினேன். அது மாலை நேரம். சடாரென்று அந்த தாடிக்காரர் என் முன் தோன்றினார். உடலில் இடுப்பைச் சுற்றிய துண்டு மட்டுமே இருந்தது. நான் அவரைப் பார்த்தேன். அவர் சட்டென்று ஒரு தீப்பிழம்பாக, எரிந்திடும் ஜுவாலையாக மாறினார். பத்து நிமிடத்திற்கு அப்படியே எரிந்தார், அதன்பிறகு சட்டென்று மறைந்து போய்விட்டார். அதற்குப் பிறகு, ஒரு குறிப்பிட்ட காலகட்டத்திற்கு அவர் பல விதங்களில் என் முன்னே தோன்ற ஆரம்பித்தார். நான் அவருக்கு கொஞ்சம் பணம் அளிப்பதற்கு முயற்சிப்பேன், அவர் சட்டென்று அப்படியே மறைந்து போய்விடுவார்.

இதுபோல, இன்னொரு முறையும் நடந்தது. அப்போது நாங்கள் தியானலிங்க பிரதிஷ்டைக்காக தயாராகிக் கொண்டிருந்தோம். இது நடந்ததும் மைசூரில்தான். என்னுடைய நண்பர் ஒருவர் கடிகாரங்கள் விற்கும் புதிய ஷோரூம் ஒன்றை திறந்திருந்தார். அதை வந்து பார்க்கும்படி என்னைக் கேட்டுக்கொண்டார். ஒருநாள் விஜியும் நானும் அங்கே போகலாம் என்று முடிவுசெய்தோம். காரை ஒரு பக்கம் நிறுத்திவிட்டு சாலைக்கு அந்தப் பக்கம் போய்க்கொண்டிருந்தோம். அந்தக் கடைக்குள் நுழைவதற்கு சற்றுமுன் ஒரு மனிதர் எங்களிடம் வந்தார். அவர் உடலிலும் இடுப்பைச் சுற்றிய சின்ன துண்டு மட்டுமே இருந்தது. எங்களிடம் வந்து பிட்சை கேட்டார். நான் அவரைப் பார்த்தேன். பார்த்த மாத்திரத்திலேயே அவர் ஒரு பிச்சைக்காரர் இல்லை என்று எனக்கு புரிந்துவிட்டது. அதனால், என்னுடைய பர்ஸை வெளியே எடுத்தேன், அதில் இருந்த பணம் முழுவதையும் வெளியே எடுத்து அவர் கையில் வைத்தேன்[3]. அதில் எவ்வளவு பணம் இருந்தது என்றெல்லாம் நான் பார்க்கக்கூட இல்லை, அப்படியே எல்லாவற்றையும் எடுத்து அவர் கைகளில் வைத்துவிட்டேன். அடுத்த கணமே அவர் போயிருந்தார். சும்மா, அப்படியே மறைந்து போய்விட்டார்.

இதையெல்லாம் பார்த்த விஜி அரண்டு கதிகலங்கிப் போய்விட்டாள். அவளால் கொஞ்ச நாட்களுக்கு தூங்கவே முடியவில்லை, அந்த அளவுக்கு நடுங்கிப் போயிருந்தாள். அவளால் அதை ஜீரணிக்கவே முடியவில்லை. அந்த மனிதர் அங்கேதான் நின்றுகொண்டிருந்தார், சட்டென்று சும்மா அப்படியே மறைந்து போய்விட்டாரே என்பதை அவளால் ஏற்றுக்கொள்ளவே

3 சாதுக்களுக்கு தருமம் வழங்குவது நம் கலாச்சாரத்தில் ஒரு பாக்கியமாக கருதப்படுகிறது.

முடியவில்லை. நான் அதை பின்தொடர்ந்து ஆராயவில்லை. நான் பர்ஸையும் அவரிடமே கொடுக்காமல் வைத்துக்கொண்டு விட்டேனே என்று வருத்தப்பட்டேன் - நான் எல்லாவற்றையும் அப்படியே அவரிடம் கொடுத்திருக்கவேண்டும். அதில் பணத்தைத் தவிர இன்னும் சில விஷயங்கள் இருந்தது. அதனால் வைத்துக்கொண்டு விட்டேன்.

இவர்களெல்லாம் பஞ்சபூதங்களில் ஒரு குறிப்பிட்ட பூதத்தின் மீது ஆளுமை உடையவர்கள். அவர்கள் அந்த பூதமாகவே இருக்கிறார்கள். ஒருவேளை ஒரு பொருள் உடலாக தோன்றி வெளிப்படுவது முழுமையாக அவர்களின் கட்டுப்பாட்டில் இல்லாமல் இருக்கலாம், நீண்டகாலத்திற்கு அப்படியே தொடர்ந்து இருக்கமுடியாமல் போகலாம். அதனால்தான் சில கணங்களுக்கு மட்டும் அப்படித் தோன்றி வெளிப்படுகிறார்கள். அதன்பிறகு அது போய்விடுகிறது. இப்படியாக, பஞ்சபூதங்களின் மேல் ஆளுமை கொண்டுவருவதன் மூலம் அல்லது *வாமச்சாரம்* மூலம், அவர்களால் இம்மாதிரி விஷயங்களை நிகழ்த்திட முடிகிறது.

அத்தியாயம் 8

# உடலற்ற உயிருக்கு உதவுவது எப்படி?

உயிருடன் வாழ்பவர்கள் குறித்து நமக்கு பொறுப்புகள் இருப்பது போலவே, இறந்து போனவர்களை குறித்தும் நமக்கு பொறுப்புகள் இருக்கின்றன.

## இறுதிச்சடங்குகள் எதற்காக?

இதற்குமுன் நாம் ஏற்கனவே பார்த்ததுபோல[1], ஒருவர் இறக்கும்போது உயிர்சக்தி உடலைவிட்டு ஒரே சமயத்தில் வெளியேறுவதில்லை. நடைமுறை வழக்கப்படி வேண்டுமானால் அவர் இறந்தவராக இருக்கலாம். ஆனால் ஒருவர் பல மரணங்களைப் பார்த்த டாக்டராகவோ, உடலைப் பதனப்படுத்தும் அண்டர்டேக்கர் தொழிலிலோ இருந்தால், அவருக்கு நன்றாக தெரிந்திருக்கும் - மரணம் என்பது ஒரே கணத்தில் நடந்துமுடியும் நிகழ்வு இல்லை, அது தொடர்ந்து கொஞ்ச நேரத்திற்கு நிகழ்ந்திடும் என்று புரிந்திருக்கும். ஏனென்றால், உடலைவிட்டு உயிர் வெளியேறும்போது பஞ்சப் பிராணங்கள் எல்லாம் ஒரே சமயத்தில் உடனடியாக வெளியேறுவதில்லை, அவை மெதுவாக படிப்படியாகத்தான் வெளியேறுகின்றன. அதாவது, உங்களுடைய பிறப்பும் ஒரே நாளில் நிகழ்ந்து விடவில்லையே. ஒன்பது மாதங்களுக்கும் மேலாக எடுத்துக்கொண்ட பிறகுதானே உங்களால் ஒரு முழு உயிராக முடிந்தது. அதேபோல, ஒருவர் வெளியேறுவதும் சும்மா அப்படியே நடந்து விடுவதில்லை, உயிர் படிப்படியாகத்தான் உடலைவிட்டு வெளியேறுகிறது. வழக்கமாக, இறந்துபோன ஒரு உயிருக்கு உதவிடும் வகையில் இந்த காலகட்டத்தில் நாம் ஏதாவது செய்யமுடியும். ஒருநாள் இல்லை ஒருநாள், ஏதோ ஒரு கட்டத்தில் எல்லோருமே இறந்துதான்

---

1 அத்தியாயம் 2ல், "நிகழ்வல்ல இது தொடர்நிகழ்வு" என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

போகிறார்கள். எல்லோருமே தங்களுக்கு நேசமானவர்களை ஒருநாள் இழக்கிறார்கள். அதனால், இனிமையான நல்ல விஷயம் ஏதாவது அவர்களுக்கு நடக்கும்படி நாம் நிச்சயம் பார்த்துக்கொள்ள வேண்டும்.

அதாவது, நீங்கள் ஒரு வாடகை வீட்டில் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள் என்று வைத்துக்கொள்வோம். அந்த வீட்டின் சொந்தக்காரர் வந்து வீட்டை காலிசெய்ய சொல்கிறார். நீங்களும் வீட்டை காலிசெய்கிறீர்கள். ஆனால் மெதுவாக படிப்படியாகத்தான் செய்கிறீர்கள். முதலில் மேசை, நாற்காலி என்று வீட்டு உபயோகப்பொருட்களை எல்லாம் எடுத்துக்கொண்டு போகிறீர்கள். ஆனால் சமையல் சாமான்களை அங்கேயே வைத்துவிட்டு செல்கிறீர்கள்; அதன்பிறகு சமையலறை சாமான்களையெல்லாம் எடுத்துக்கொண்டு போகும்போது, பெட்டி படுக்கைகளை அங்கேயே வைத்துவிட்டு போனீர்கள். இன்னும் அந்த இடத்தை மொத்தமாக காலி செய்யவில்லை - உங்களுக்கு திரும்பத் திரும்ப வந்துகொண்டே இருக்கவேண்டும், வீட்டோடு தொடர்பிலேயே இருக்கவேண்டும். வீட்டுக்காரர் இதைப் பார்த்தால், அனைத்தையும் தூக்கி வெளியே எறிந்து விடுவார். ஒருவிதத்தில் பார்க்கும்போது, உங்களுக்கும் அதைத்தான் செய்யத் தேவையிருக்கிறது.

அது ஒரு யோகியாக இருந்தால், பஞ்ச வாயுக்களின் மேல் போதிய அளவுக்கு சாதனா செய்திருந்தால், அவர் போகும்போது எல்லாத்தையும் சேர்த்து எடுத்துக்கொண்டு ஒரே சமயத்தில் போய்விடுவார். இறந்துபோன ஒரு பிராணியை சுற்றிக்கொண்டு தொங்கிட அவருக்கு எந்த விருப்பமும் இல்லை. அதனால் அவர் காலி செய்யும்போது மொத்தமாக காலி செய்துவிடுகிறார். இந்த விதத்தில் வெளியேறுவது மிகவும் நல்லதுதான். ஆனால் இப்படி வெளியேறிட ஒருவருக்கு தன்னுடைய சக்திகளின் மேல் ஒருவிதமான ஆளுமை தேவைப்படுகிறது. ஒருவர் இப்படிப்பட்ட விதத்தில் வெளியேறினால், அவருக்கு எந்தச் சடங்குகளும் செய்யத் தேவையில்லை. ஏனென்றால், அவர் ஏற்கனவே முழுமையாக வெளியேறிவிட்டார். ஆனால், உங்களுக்கு காலி செய்துகொண்டு போவது எப்படி என்று தெரியாதபோது, உங்களுடைய வசிப்பிடத்தில் அதிகப்படியான பற்றுடன் சிக்கிப்போயிருந்தால், கொஞ்சம் கொஞ்சமாக பல படிகளில்தான் வெளியேறுவேன் என்று சொன்னால், அப்போது யாரோ ஒருவர் உங்களை வெளியே தள்ளிவிடும் தேவை இருக்கிறது. உங்களுக்காக யாராவது அப்படிச் செய்யமுடியும்.

மரணத்திற்குப் பிறகு அடுத்த மூன்றிலிருந்து ஐந்து நாட்களுக்குள் இதைச் செய்தால், இந்தச் சடங்கு மிகவும் பயனளிக்கும்படி அமையும். பதினோரு நாட்கள் வரைக்கும் கூட இந்த சாத்தியம் இன்னும் நன்றாகவே இருக்கிறது. பதினான்கு நாட்கள் வரைக்கும் இந்த சாத்தியம் இருக்கிறது.

அதற்குப் பிறகு மிகவும் கஷ்டமாகிவிடுகிறது. இறந்து போனவர் மிகவும் இளைய வயதில் போயிருந்தால், அல்லது உடலை விட்ட பிறகும் இன்னும் உயிர்ப்பாக இருந்தார் என்றால், அப்போது நாற்பதிலிருந்து நாற்பத்தெட்டு நாட்கள் வரைக்கும்கூட அவருக்கு உதவிட முடியும். அதற்குப் பிறகு, அந்த உடலற்ற உயிரோடு நாம் தொடர்பு ஏற்படுத்தும் வாய்ப்பு குறைந்துபோகிறது.

அவர்கள் உடலுடன் இருந்த நிலையிலிருந்து உடலற்ற நிலைக்கு மாறிடும் சமயத்தில்தான், அவர்கள் இன்னும் குழப்பத்துடன் இருக்கும் சமயத்தில்தான் அவர்களுடன் தொடர்பு ஏற்படுத்தும் வாய்ப்பு அதிகமாக இருக்கிறது. இது எப்படியென்றால், உங்கள் வாழ்க்கையில் ஏதோ பெரிய பிரச்சனையால் நீங்கள் குழம்பிப்போய் இருக்கும்போது என்னிடம் வந்து, "ஐயோ சத்குரு, தயவுசெய்து ஏதாவது செய்யுங்களேன்!" என்று கெஞ்சிக் கேட்பீர்கள். இந்த சமயத்தில் உங்களை சமாளிப்பது சுலபமாக இருக்கும். ஆனால், எல்லாம் கொஞ்சம் நன்றாக போய்க் கொண்டிருக்கும்போது, நீங்கள் சௌகரியமாக இருக்கும்போது, யாராலும் உங்களிடம் வாய்கொடுத்து பேசக்கூட முடியாது, அப்படித்தானே? இந்த உயிர்களுக்கும் அப்படித்தான். பதினான்கு நாட்களுக்குள், அவர்கள் தங்களுடைய புது வசிப்பிடத்தில் குடியேறி உட்கார்ந்து விடுவார்கள். அதன்பிறகு அவர்களை சமாதானப்படுத்தி புரியவைப்பது கொஞ்சம் கஷ்டமாகிவிடும்.

அது மட்டுமில்லை, உடலைவிட்டு இன்னும் மெதுவாக வெளியேறிக் கொண்டிருக்கும் வியான வாயுவை ஒருசில விஷயங்களை செய்து அகற்றிவிட்டோம் என்றால், சூட்சும உடலுக்கு தேவையான வியான வாயு கிடைக்காமல் போய்விடும். இப்போது சூட்சும உடலால் தன்னை பாதுகாத்து வைக்கமுடியாமல் போகிறது. அதனால் அது நொறுங்க ஆரம்பிக்கும். இப்போதுகூட உங்களுடைய உடலிலிருந்து வியான வாயுவை எடுத்துவிட்டோம் என்றால், உடனே அது நொறுங்கிப் போகும், உடல் தானாகவே உதிர ஆரம்பிக்கும். இறப்பிற்குப் பிறகு வியான வாயுவை எடுத்துவிட்டால் அல்லது அந்த உடலுக்குள் புகுந்திடும் வியான வாயுவை குறிப்பிட்ட அளவோடு நிறுத்திவிட்டால், தன்னைப் பாதுகாத்துக்கொள்ளும் தன்மை அதற்கு இல்லாமல் போய்விடும். இப்போது வேறு வழியே இல்லாமல் புதிய உடலைத் தேட ஆரம்பிக்கும். இப்படி, இந்தச் சடங்குகள் உடலிலிருந்து வியான வாயு வெளியேறிக் கொண்டிருக்கும் நிகழ்வில் தலையிடுகின்றன, அது மேலும் முன்னேறாமல் தடுக்கின்றன. இப்போது அந்த உயிரின் நிலை என்னவென்றால் - அவர்கள் ஒரு புதிய இடத்திற்கு அல்லது ஒரு புதிய நாட்டிற்கு போய்விட்டார்கள். ஆனால் இன்னும் அவர்களுக்கான அடையாள அட்டை கிடைக்கவில்லை. அதனால்

அவர்கள் தங்குவதற்கு எங்கேயும் இடம் கிடைக்காது. அதேசமயம், அவர்களால் வேறு எங்காவது போகவும் முடியாது. அவர்கள் நொறுங்கிப் போக ஆரம்பிப்பார்கள்.

இறந்துபோன ஒருவருக்கு அவருடைய பயணத்தில் உதவுவதற்காக மட்டும் இந்த சடங்குகள் உருவாக்கப்படவில்லை. இறந்தவர் தனக்குப் பின்னால் விட்டுச்சென்ற உயிருள்ள மனிதர்களுக்கும் பயன்படும்படி இந்தச் சடங்குகள் அமைகின்றன. ஏனென்றால், இறந்துபோகும் அந்த மனிதர், போகும்போது நம்மைச் சுற்றி நிலைபெறாத உயிர்தன்மையை ஏராளமாக விட்டுவிட்டுப் போனால், நம்முடைய வாழ்க்கைகள் நன்றாக இருக்காது. அப்படியென்றால் பேய் வந்து உங்களைப் பிடித்துக்கொள்ளும் என்று அர்த்தமில்லை. ஆனால், அந்த சூழலின் மேல் அதன் தாக்கம் ஏற்படும். சுற்றியிருப்பவர்களின் மனநிலையில் அதன் தாக்கம் ஏற்படும். சுற்றியிருக்கும் உயிரின் தன்மையிலும் அதன் தாக்கம் இருக்கும். இந்தக் காரணத்தால்தான், உலகிலுள்ள ஒவ்வொரு கலாச்சாரத்திலும் அவர்களுக்கே உரிய விதத்தில், இறந்து போனவர்களுக்கான சடங்குகள் இருக்கின்றன. பொதுவாக, இந்த சடங்குகளில் அதிகமானவை இறந்தவருக்கு நெருக்கமாகவும் நேசமாகவும் இருந்தவர்களின் மனரீதியான விஷயங்களை சரிபடுத்தவே இருக்கின்றன. ஏதோ ஒருவிதத்தில், அதற்குப் பின்னால் ஒரு அர்த்தமும் விஞ்ஞானமும் இருக்கத்தான் செய்தது. ஆனால், இந்தியர்களிடம் இருக்கும் ஆழமான நுட்பமான முறைகளைப்போல எந்த ஒரு கலாச்சாரத்திலும் இருக்க வாய்ப்பில்லை. இந்த கலாச்சாரத்தைப்போல புரிதலோடும், ஆழத்தோடும் மரணத்தை யாருமே இதுவரை நோக்கியது கிடையாது. மரணம் நிகழும் அந்த கணத்திலிருந்து அல்லது மரணம் ஏற்படுவதற்கு முன்பிலிருந்து கூட, இறப்பவருக்காக அக்கறையுடன் நுட்பத்துடன் உருவாக்கப்பட்ட விரிவான முறைகள் இருக்கின்றன. இதனால் அவர் மிகவும் பயனடையும் விதத்தில் இறக்க முடிகிறது. சாத்தியமாக இருக்கும் அத்தனை கோணங்களிலிருந்தும் வாழ்க்கையை நோக்கியிருப்பதால், இந்த நாட்டில் அத்தனையையும் முழுமையாக பயன்படுத்தி முக்தியை அடைய விரும்புகிறார்கள். மரணம் ஏற்படப் போகிறது என்றால், அதைக்கூட ஏதோ ஒருவிதத்தில் பயன்படுத்தி, தங்களுடைய முக்திக்கான வழியை உருவாக்கிக் கொள்கிறார்கள். அதனால்தான் இறந்து கொண்டிருப்பவர்களுக்கும், இறந்தவர்களுக்கும் தேவையான சக்திமிக்க சடங்குகளை உருவாக்கினார்கள்.

இன்றைய உலகில், இந்தச் சடங்குகளுக்கு இருக்கும் முக்கியத்துவம் மேலும் அதிகமாகிவிட்டது. ஏனென்றால், உலகில் இருக்கும் எல்லோருமே விழிப்புணர்வில்லாமல் இறக்க ஆரம்பித்துவிட்டார்கள். தங்களுக்குள்

உயிரைப் பற்றிய எந்த ஒரு புரிதலும் இல்லாமல் இறக்கிறார்கள். பழைய காலங்களில், பெரும்பாலானவர்கள் வியாதியாலும், தொற்றுநோயாலும் இறந்துபோனார்கள். அதனால், உடலுக்கு அப்பாற்பட்டு போனபிறகு அவர்களுக்கு உதவிட ஒரு முழுமையான விஞ்ஞானமே உருவாக்கப்பட்டது. ஒருவேளை, அவர் உடலில் இருந்தபோது அவரைச் சுற்றி இருந்தவர்களால் அந்த நோய் என்னவென்று கண்டுபிடிக்க முடியாமல் போயிருக்கலாம். அல்லது தேவையான சிகிச்சை கிடைக்காமலோ அல்லது வேறு ஏதோ ஏற்பட்டதாலும் அவர் இறந்து போயிருக்கலாம். அதனால் அவர் இறந்த பிறகாவது, அவர் நீண்டகாலத்திற்கு சுற்றிக் கொண்டிருக்காமல், சீக்கிரமாக கரைந்துபோகும்படி உதவிட வேண்டும் என்று விரும்பினார்கள். இந்தச் சடங்குகளுக்கு பின் அமைந்துள்ள விஞ்ஞானம் உருவாகி வளர்ந்தது இப்படித்தான். துரதிர்ஷ்டவசமாக, இன்று இதெல்லாம் பெரும்பாலும் அர்த்தமற்ற சடங்குகளாக ஆகிவிட்டன. தேவையான புரிதலும், வல்லமையும் இல்லாமல் செய்யப்படுகின்றன.

இறந்து போனவர்களை நாம் அக்கறையுடன் சரியாக கவனித்துக் கொள்ளாவிட்டால், அந்த சமூகத்தில் இருக்கும் டீன்ஏஜ் குழந்தைகள் இதனால் மிகவும் பாதிப்படைவார்கள். வளரும் பருவத்தில் இருப்பவர்களை நோக்கித்தான் இந்த உடலற்ற உயிர்கள் ஈர்க்கப்படும். ஏனென்றால் பருவ வயதில் இருப்பவர்கள்தான், மிகவும் எளிதாகவும் அதிகமாகவும் தாக்கத்திற்கு ஆளாகும் தன்மை கொண்டவர்கள். பாம்புகளுக்கு தோல் உரியும் காலம்போல, மனிதர்களுக்கு இந்த குறிப்பிட்ட பருவ வயது இருக்கிறது என்று சொல்லலாம். இந்த காலகட்டத்தில், வளர்ச்சி மிகவும் வேகமாக நடக்கிறது. உடல் அளவில் மட்டுமல்ல, எல்லா விதத்திலும் வளர்ச்சி மிகவும் வேகமாக நடக்கிறது. இதனால் வாழ்வின் இந்த காலகட்டத்தில், மிகவும் எளிதாக இதுபோன்ற தாக்கத்திற்கு ஆளாகும் திறந்தநிலையில் இருக்கிறார்கள். தங்களைச் சுற்றி சாதகமான சக்திகள் இருந்தாலும், எதிர்மறையான சக்திகள் இருந்தாலும், அதை முதலில் உள்வாங்கிக் கொள்பவர்கள் பருவவயதில் இருப்பவர்கள்தான்.

பருவவயதில் இருப்பவர்களில், இந்த மாதிரி விஷயங்களால் தாக்கத்திற்கு உள்ளாகும் தன்மை ஆண்களைவிட பெண்களுக்கு அதிகம். அதே சமயம், பருவவயதிற்கு கீழே இருக்கும் குழந்தைகள் - அதாவது எட்டு முதல் பத்து வயதுக்குள் இருப்பவர்கள் - பொதுவாகவே இந்த மாதிரி விஷயங்களுக்கு ஆளாகாதபடி பாதுகாப்பாக இருப்பார்கள். இயற்கையே அவர்களுக்கு அந்த பாதுகாப்பை கொடுத்திருக்கிறது. அதனால் நீங்கள் அவர்களை அவ்வளவாக பாதுகாக்கத் தேவையில்லை. பெரும்பாலும் பத்து முதல் இருபது வயதுக்குள் இருக்கும் குழந்தைகள்தான் இதனால் பாதிக்கப்பட முடியும். நான் பாதிப்பு என்று சொல்லும்போது,

அவர்களுடைய ஹார்மோன்களின் செயல்பாடு பற்றியோ அல்லது அவர்கள் மது, போதைப்பொருட்கள் என்று வழித்தவறி போவதைப் பற்றியோ பேசவில்லை. ஒருவேளை அதுவும் நடக்கலாம். ஆனால் மற்ற விதங்களிலும் அவர்களுக்கு தாக்கங்கள் ஏற்பட முடியும். இன்றைக்கு பருவவயதை எதிர்கொள்வதிலேயே குழந்தைகளுக்குள் அந்தளவுக்கு போராட்டம் ஏற்படுகிறது - இப்படி நடப்பதை நாம் பார்க்கிறோம், இல்லையா? இதற்குமுன் இருந்த தலைமுறைகளில், பருவவயது என்பது ஒருபோதும் ஒரு போராட்டமாகவே இருந்ததில்லை. இப்போது இப்படி நடப்பதற்கு ஒரு காரணம் என்னவென்றால், நாம் இறந்து போனவர்களை தகுந்த விதத்தில் கவனித்துக்கொள்வதில்லை என்பதுதான். ஹார்ட்வேரிலிருந்து விடுபட்டுப்போன சாஃப்ட்வேர் கழண்டு போனபடி அப்படியே சுற்றிக்கொண்டிருக்கிறது - பருவவயதில் இருக்கும் உயிர் இயல்பாகவே அதில் சிக்கிக்கொள்கிறது. அதனால்தான், ஒவ்வொரு கலாச்சாரத்திலும், ஏதோ ஒருவிதத்தில் தங்களுடைய பருவவயது குழந்தைகளுக்காக பாதுகாப்பான சூழலை உருவாக்கப் பார்த்தார்கள். அதை விழிப்புணர்வுடன் புரிந்துகொண்டும் செய்திருக்கலாம், இயற்கையான உள்ளுணர்வாலும் செய்திருக்கலாம்.

பல பாரம்பரியங்களில், இறந்தவர்களுக்கான இடத்தை எப்போதுமே புனிதமாக வைத்திருந்தார்கள். அந்தச் சூழலுக்குள் பெண்களையும் குழந்தைகளையும் அனுமதிக்கவே மாட்டார்கள். மாயன் நாகரிகமாகட்டும், செவ்விந்தியர்களாகட்டும், லத்தீன் அமெரிக்க மனிதர்களாகட்டும் - யாருமே பெண்களையும் குழந்தைகளையும் இந்த இடங்களில் அனுமதிக்கவில்லை. இந்தியாவிலோ, இப்படிப்பட்ட இடங்களுக்கு யார் போகவேண்டும், எப்போது போகவேண்டும் என்றெல்லாம் விரிவான, நுட்பமான வழிமுறைகள் இருந்தன. வெறும் மனரீதியான காரணங்களுக்காக மட்டுமே இப்படி அமைக்கவில்லை. உயிர் ரீதியாகவும் ஒருவரின் மீது இதன் தாக்கம் இருக்கும். அப்போது, இந்த மாதிரி தாக்கங்களை எளிதில் உள்வாங்கும் தன்மை உடையவர்கள் அதிகமாக பாதிக்கப்படுவார்கள். அதனால்தான் நமது கலாச்சாரத்தில், உடலை அப்புறப்படுத்திய பிறகு அந்த உயிரை சுத்திகரிக்கவும் விரிவான சடங்கு முறைகள் இருந்தன.

துரதிர்ஷ்டவசமாக, காலப்போக்கில். இந்தச் சடங்குகளை திரித்துவிட்டார்கள், மிகைப்படுத்திவிட்டார்கள். இன்று இந்த சடங்குகளெல்லாம் பெருமளவில் வணிகமயமாகிவிட்டன. சடங்கு என்ற பெயரில் செய்யப்படும் சர்க்கஸ் போலத்தான் இருக்கின்றன. ஆனால் இப்போதும், இதையெல்லாம் நல்லமுறையில் செய்பவர்களும் சிலபேர் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் மிகவும் குறைவாகவே இருக்கிறார்கள். சிலபேருக்கு, இது முடிவே இல்லாமல் நடக்கும் வியாபாரத்திற்கான வாய்ப்பாக இருக்கிறது.

ஏனென்றால், பொருளாதாரநிலை எப்படியிருந்தாலும், மனிதர்கள் இறந்து கொண்டுதானே இருக்கப்போகிறார்கள். அப்படிப்பட்ட வாய்ப்பு இருக்கும்போது, அதை நழுவிப்போக விடமுடியாதே! தொழில் வளர்க்கும் உற்சாகத்தில், அவர்கள் இறந்தவர்களை கூட விட்டு வைப்பதில்லை.

## ருணானுபந்தம் எனும் கடன் வலை

நம் வாழ்க்கையின் மீது இறந்து போனவர்களின் தாக்கம் ஏற்பட வாய்ப்பிருக்கிறதா? அதைப் புரிந்துகொள்ள வேண்டுமென்றால், முதலில் ருணானுபந்தம் என்றால் என்ன என்று புரிந்துகொள்ள வேண்டும். இது எப்படி என்றால்: ஒரு தனிமனிதரை, அவர் இப்போது இருக்கும் விதத்தில் ஆக்கிடும் விஷயங்கள் எத்தனையோ இருக்கின்றன. இவற்றில், பந்தம் அல்லது பிணைப்பு என்ற அம்சம் மிகவும் இன்றியமையாதது. அப்படியிருந்தும், இன்றைய நவீன சமுதாயங்கள் அதற்கு முக்கியத்துவம் கொடுக்காமல் பெரியளவில் புறக்கணித்து இருக்கின்றன. ஐம்புலன்களின் மூலம் நாம் தொடர்புகொள்ளும் ஒவ்வொன்றோடும், ஏதோ ஒருவிதத்தில் நாம் ஒரு பந்தத்தை ஏற்படுத்திக் கொள்கிறோம் - தெரிந்தோ தெரியாமலோ, இந்த பந்தத்தை உருவாக்குகிறோம். இது நம்மை சுற்றியிருக்கும் மனிதர்களோடு மட்டும் இல்லை, நாம் நடந்துபோகும் நிலம், நாம் சுவாசிக்கும் காற்று என்று எல்லாவற்றோடும் ஒரு பந்தத்தை உருவாக்குகிறோம் - பார்ப்பது, கேட்பது, நுகர்வது, சுவைப்பது, தொடுவது என்று ஒவ்வொன்றோடும் ஒரு பிணைப்பை உருவாக்கிக் கொள்கிறோம். இந்த ஒவ்வொரு விஷயத்திலும் நம்முடைய சக்தியை குறிப்பிட்ட அளவுக்கு முதலீடு செய்வதால்தான் இதெல்லாம் நிகழ்கிறது. இல்லாவிட்டால், இப்படி நிகழவே முடியாது. அதில் குறிப்பிட்ட அளவு சக்தியை செலவு செய்யாவிட்டால் நம்மால் பார்க்கவே முடியாது. அதேபோல் அதில் குறிப்பிட்ட அளவு சக்தியை முதலீடு செய்யாவிட்டால் நம்மால் கேட்கவும் முடியாது. உங்களுடைய குறிப்பிட்ட தன்மையை அதில் அளிக்காமல், உங்களால் ருசிக்கவும் தொட்டுப்பார்க்கவும் முடியாது. இப்படி ஒவ்வொன்றிலும் ஒரு முதலீடு செய்யும்போது, கூடவே ஒரு பந்தமும் ஏற்படுகிறது. நம் பாரம்பரியத்தில் இதைத்தான் ருணானுபந்தம் என்று சொல்வார்கள்.

உடலுக்கு என்று தனக்கே உரிய ஞாபகங்கள் இருக்கின்றன - ருணானுபந்தம் ஏற்படுவதற்கு காரணம் இதுதான். பொருள் உடலில் உங்களுக்குள் அமைந்துள்ள ஒருவித ஞாபகம்தான் ருணானுபந்தம். பெற்றோர்களிடமிருந்து குழந்தைக்கு வந்து சேரும் மரபணு சார்ந்த அம்சங்களிலிருந்து இது வித்தியாசமானது. வாழ்க்கையின் போக்கில்

பல வழிகளில் நாம் ருணானுபந்தத்தை சேர்த்துக்கொள்கிறோம். ருணானுபந்தம் உருவாக்கிடும் வழிகளில் பொதுவானது உடல்ரீதியான தொடர்பு என்று சொல்லலாம். எந்தப் பொருளோடும் எந்தவிதமான நெருங்கிய தொடர்பு ஏற்பட்டாலும், இந்த உடல் அதை ஞாபகம் வைத்துக்கொள்கிறது. இந்த காரணத்தால்தான், பாரம்பரியமாகவே நம் நாட்டில், ஒருவருக்கு ஒருவர் வணக்கம் சொல்லும்போது நம் கைகளை சேர்த்து வைத்துக்கொண்டு சொல்கிறோம். அந்த சமயத்தில், தேவையில்லாத இன்னொரு ருணானுபந்தத்தை உருவாக்கிக்கொள்ள வேண்டாம், நம்முடைய முக்திப் பாதையில் ஒரு தடையை உருவாக்கிக்கொள்ள வேண்டாம் என்பதே இதன் நோக்கம். குறிப்பிட்ட விதமான பொருள்களோடு தொடர்பு ஏற்பட்டால், அதன் தாக்கம் மற்றதைவிட அதிகமானதாக இருக்கும்.

இந்தியாவில், பாரம்பரிய முறைப்படி வாழ்பவர்கள் உப்பு, எள், எண்ணெய் போன்ற சிலப் பொருட்களை இன்னொருவருடைய கைகளிலிருந்து வாங்கிக்கொள்ளவே மாட்டார்கள். அதன்மூலம் ஏற்படக்கூடிய ருணானு பந்தத்தை தவிர்க்கவே அப்படிச் செய்வார்கள். நமது யோக மையத்தில், பிரம்மச்சாரிகள் எல்லோரும் தங்களுடைய உடைகளை தனியாகத்தான் துவைத்துக் கொள்வார்கள். ஏனென்றால், எல்லோருமே சாதனா செய்கிறார்கள், ஒவ்வொருவருக்கும் தனக்கென்று ஒரு தனித்தன்மை இருக்கிறது. அதெல்லாம் கலந்துபோக வேண்டாம் என்பதுதான் நம் நோக்கம். ஒவ்வொரு முறை துவைக்கும்போதும் அந்த உடைகளின் மேல் மண்ணை பூசுவதால் கூட கலந்துபோவதை தடுக்கமுடியும். எப்போதுமே, சாதுக்களும் சன்னியாசிகளும் நன்றாக வடிகட்டிய செம்மண்ணை தங்களுடைய உடையில் பயன்படுத்துவார்கள். அந்தத் துணிகள் வெள்ளை நிறத்தில் இருக்கும், அவர்கள் அதை எப்போதும் வடிக்கட்டிய செம்மண்ணில் அலசுவதால் அந்த உடை செம்மண் நிறமாக மாறுகிறது. தங்களை சுற்றியிருக்கும் மனிதர்களுடனும் பொருட்களுடனும் பிணைப்பு ஏற்படாமல் இந்த பூமியுடன் மட்டுமே ருணானுபந்தத்தை ஏற்படுத்திக் கொள்வதுதான் அவர்களுடைய நோக்கம். அதனால்தான் இப்படிச் செய்கிறார்கள்.

ருணானுபந்தத்தை உருவாக்கிக்கொள்ளும் இன்னொரு வழி, உறவு முறைகள். இன்னொருவருடைய கைகளைத் தொட்டு பிடித்துக்கொள்வது கூட ருணானுபந்தத்தை உருவாக்கிடும். இருக்கும் எல்லா உறவு முறைகளிலும், உடலுறவு மூலம் ஏற்படும் தொடர்புதான் அதிகபட்ச தாக்கத்தை ஏற்படுத்துகிறது. உங்களோடு தொடர்பில் வரும் மற்ற எல்லா விஷயங்களையும் பொருட்களையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, உடலுறவு மூலம் ஏற்படும் தொடர்புதான் அதிகபட்ச ஞாபகத்தை

உங்கள் மீது விட்டுச்செல்கிறது. இந்த விஷயம் குற்ற உணர்வை பற்றியது இல்லை. குற்ற உணர்விலிருந்து உங்களை விடுவித்துக் கொள்வது பற்றியும் இல்லை. குற்ற உணர்வு என்பது சமூகரீதியான ஒரு விஷயம். உங்களுக்கு எதைப்பற்றி குற்ற உணர்வு ஏற்படுகிறது என்பது நீங்கள் வாழும் சமூகத்தின் சட்டங்களை பொருத்தது. ஒரு சமூகத்தில் இருக்கும்போது ஒன்றைப் பற்றி குற்ற உணர்வு ஏற்பட்டால், அதே விஷயத்தைப் பற்றி இன்னொரு சமூகத்தில் இருக்கும்போது குற்ற உணர்வு ஏற்படாமல் போகலாம். ஆனால், நான் சமூகரீதியாக பழக்கப்படுத்தப்படும் விஷயத்தைப் பற்றி பேசவில்லை, உயிர் ரீதியாக இருக்கும் நிஜத்தைப் பற்றித்தான் பேசுகிறேன்.

அடிப்படையில், பாரத கலாச்சாரம் என்பதே முக்தியை நோக்கித்தான் அமைக்கப்பட்டுள்ளது. அதனால்தான் நம் தேசத்தில், தாங்கள் உயிர்வாழும் காலத்துக்கு அத்தியாவசியமாக இருந்த அளவுக்கு மட்டும் ருணானுபந்தம் ஏற்படும்படி வாழ்ந்தார்கள். ருணானுபந்தம் குறைந்தபட்சமாக இருப்பதை உறுதிசெய்வதற்கு மிகுந்த கவனத்துடன் செயல்பட்டார்கள். அவர்கள் இங்கே உடலுடன் இருந்தபோது பலவிதமான உறவுகள் இருந்தன - ரத்தம் சார்ந்த சம்பந்தம், உடலுறவு சார்ந்த சம்பந்தம், கொடுக்கல் வாங்கல் சார்ந்த சம்பந்தம் - இப்படிப் பல உறவுகள் இருந்ததால் உடல்ரீதியான சில விஷயங்கள் பொதுவாக இருந்தன. அதனால் அந்த மனிதருடன் ருணானுபந்தம் ஏற்பட்டது. அந்த மனிதர் இறந்தபிறகு, அவருடன் ஏற்பட்ட ருணானுபந்தத்தை முடிந்தளவுக்கு கரைத்துவிட வேண்டும் என்று முயற்சி செய்தார்கள். அந்தளவுக்கு விழிப்புணர்வுடன் இருந்த கலாச்சாரம் நம்முடையது.

நீங்கள் நலமாக வாழவேண்டும் என்றால், இறந்து போனவரோடு இருக்கும் பந்தத்தை உடைத்தாக வேண்டும். ஏனென்றால். சிலசமயம் உங்கள் மீது சில தாக்கங்கள் ஏற்படும்படி திறந்தநிலையில் நீங்கள் இருக்கலாம். உயிரின் இயல்பே அப்படித்தான் இருக்கிறது: அந்த சமயங்களில் - சரியானது அல்லது தவறானது - எது வேண்டுமானாலும் உங்களுக்குள் நுழையமுடியும். இந்த ருணானுபந்தத்தை சரியாக உடைக்கவில்லை என்றால், நிச்சயமாக அது உங்களுடைய உடலமைப்பை பாதிக்கும், இன்றைய நவீன சமுதாயங்களில் இப்படி நடப்பதை நாம் பார்க்கலாம். உங்களுடைய உடலும் மனமும் பலவீனமாகிவிடும் - இதனால் நீங்கள் துன்பத்தில் அவதிப்படுவது மட்டுமல்லாமல், உங்கள் உயிர்சக்தியே ஒருவிதத்தில் நிலைகுலைந்து போகமுடியும். அதனால்தான் நமது கலாச்சாரத்தில் இறந்தபிறகு செய்யப்படும் பல சடங்குகளை முறைப்படி உருவாக்கினார்கள். அதன்மூலம், ருணானுபந்தத்தை விழிப்புணர்வுடன் கரைத்துவிட முடியும்.

## காலபைரவ கர்மா: ஈஷாவில் செய்யும் சடங்கு

நீண்டகாலமாகவே, இறந்து போனவர்களுக்கான இந்த சேவையை நாம் செய்து வந்தோம். நம்மை தனிப்பட்ட முறையில் கேட்டவர்களுக்கு மட்டும் அப்படி செய்து கொடுத்தோம். ஒருவர் இறந்துபோன நேரத்தில், அவருடைய புகைப்படத்தை யாராவது என்னிடம் அனுப்பினால், அவர் இறந்து மூன்று நாட்களுக்குள் அவருக்காக நான் சில விஷயங்களை செய்வதுண்டு. சில சமயங்களில் நம்மால் நிறைய செய்யமுடிந்தது, சில நேரங்களில் கொஞ்சம்தான் செய்யமுடிந்தது, சில சமயங்களில் நாம் செய்தது பரிபூரணமாகவும் இருந்தது. இதெல்லாம் அவர் எப்படிப்பட்டவர் என்பதைப் பொருத்தது. நாம் என்ன செய்தோம் என்று அவர்களிடம் சொல்வதில்லை. ஆனால் நிச்சயமாக ஏதோ ஒன்று அவர்களுக்காக செய்யப்பட்டது. இதுவரைக்கும் ஆயிரக்கணக்கானவர்களுக்கு அப்படி செய்திருக்கிறேன். ஆனால் இந்த வேண்டுகோள்களின் எண்ணிக்கை அதிகரித்தபோது, இந்த சேவைகளின் அளவை பெரிதுபடுத்த வேண்டும் என்று தோன்றியது. இப்போது யோக மையத்தில், காலபைரவ கர்மா என்ற சடங்கை முறைப்படி செய்கிறார்கள். உடலை பிரிந்த உயிர் மேற்கொள்ளும் இந்தப் பயணத்திற்கு, காலபைரவ கர்மா மகத்தான உதவியாகவும் துணையாகவும் இருக்கும். இதைச் செய்வதற்கு இறந்தவருடைய ஒரு புகைப்படமும், அவர் பயன்படுத்திய ஒரு உடையின் சிறிய துண்டும் கிடைத்தால், அதுவே போதுமானது. இந்த சடங்கு யோக மையத்தில் செய்யப்படும்போது, இறந்தவருடைய ரத்த சொந்தங்கள் யாராவது உடன் இருந்தால் அது சிறப்பாக இருக்கும்.

இப்படி, வெறும் புகைப்படத்தையும், உடையிலிருந்து ஒரு சின்ன துண்டையும் மட்டும் வைத்துக்கொண்டு இறந்தவருடைய பயணத்திற்கு உதவிசெய்வது எப்படி சாத்தியமாகும்? இதை புரிந்துகொள்ள வேண்டுமென்றால், ஒருவிதத்தில் இப்படி பார்க்கலாம்: இப்போது நீங்கள் வாழ்க்கையை அனுபவத்தில் புரிந்து கொண்டுள்ளது எல்லாமே, ஒருவிதமான ஞாபகத்தின் அடிப்படையில்தான். நான் ஞாபகம் என்று சொல்லும்போது, உங்களுடைய மேல்மனதில் எதையோ நினைவில் வைத்திருப்பதைப் பற்றி சொல்லவில்லை. இது அதற்கு அப்பாற்பட்டும் போகிறது. இதை நாம் ஏற்கனவே பார்த்தோம்: நீங்கள் இப்படி மனித உருவத்தில் இரண்டு கால்களோடும், இரண்டு கைகளோடும், எல்லாம் அமைந்தபடி இருப்பதற்கு காரணம் என்ன? - உங்களுடைய பரிணாம ஞாபகம்தான். இந்த மனித உருவத்தில் இருக்கும்போது தோல் நிறம், மூக்கின் வடிவம், கண்களின் வடிவம் என்று பல அம்சங்கள் குறிப்பிட்ட விதத்தில் அமைவதற்கு என்ன காரணம்? உங்களுடைய மரபணு ஞாபகம்தான். இப்போது, இந்த அம்சங்களெல்லாம் ஒரே

மாதிரி அமைந்தபோதும், ஒவ்வொரு மனிதனும் ஏதோ ஒருவிதத்தில் வித்தியாசப்பட்டு தனித்தன்மையுடன் இருக்க என்ன காரணம்? கர்ம ஞாபகம்தான். இப்படியாக அடுக்கடுக்கான ஞாபகங்கள் இருக்கின்றன. இந்த ஞாபகங்கள் எல்லாம் ஒருவரின் மனதிலும், உடலிலும், சக்தியிலும் அமைந்துள்ளன - இவையெல்லாம் வாழ்க்கையில் பல்வேறு விதங்களில் வெளிப்படுகின்றன.

அடிப்படையில், தனிமனிதன் அல்லது தனிப்பட்ட உயிர் என்று நாம் சொல்வது இந்த ஞாபகங்களால் ஆன சின்னச் சின்ன குமிழிகள்தான். பல நிலைகளில் வெவ்வேறு விதமாக இருக்கும் ஞாபகங்கள்தான் வெவ்வேறு உயிரினங்களாக ஆகியுள்ளன. இந்த உயிரினங்களில், மனித உயிருக்குத்தான் மிகவும் நுட்பமான ஞாபகம் இருக்கிறது. இந்த ஞாபகங்கள் நுட்பமானதாக இருப்பதால் நம்முடைய திறன்களும் அதிகரித்தன. இதனால் பாதிப்புகளும் அதிகரித்தன. மனிதர்களைப்போல மற்ற உயிர்கள் தங்களுடைய ஞாபகங்களை பாதிப்பாக அனுபவிப்பதில்லை. சிலசமயம், அவர்கள் ஒரு குறிப்பிட்ட ஞாபகத்தை மட்டும் பாதிப்பாக அனுபவிக்க வாய்ப்பிருக்கிறது. சில பறவைகளும் மிருகங்களும் ஒரு குறிப்பிட்ட ஞாபகத்தால் மட்டும் - அதாவது அதனுடைய ஜோடி இறந்துபோனதால் அல்லது வேறு ஒரு நிகழ்வு ஏற்பட்டதால் - அவர்கள் துன்பம் அடைவார்கள். அந்த ஒரு விஷயத்தை மட்டும் நினைவில் வைத்து, அதை மட்டும் பாதிப்பாக உணர்வார்கள். ஆனால் மனிதன் என்பவன் அப்படி கிடையாது. அவனால் கோடிக்கணக்கான சின்னச் சின்ன விஷயங்களை ஞாபகம் வைத்திருக்க முடியும், அதனால் கோடிமுறை துன்பமடைய முடியும். ஏனென்றால், மனிதனின் ஞாபகம் மிகவும் விவரமாக இருக்கிறது, தெளிவாக இருக்கிறது. இந்த ஞாபகங்களுக்கு ஒரு நிஜத்தன்மை இருக்கிறது - அது நிஜத்தைவிட நிஜமாக தோன்றிடும். பெரும்பாலான மனிதர்களுக்கு, நேற்று நடந்த விஷயங்கள் இப்போது நடந்து கொண்டிருப்பதை விட அதிக நிஜமானதாக தோன்றுகிறது. அவர்களுடைய வாழ்க்கை அனுபவம் அப்படித்தான் இருக்கிறது. அவர்கள் ஞாபகங்களில்தான் வாழ்கிறார்கள். நீங்கள் வாழ்வது ஞாபகங்களில்தான் என்றால், ஒரு பாதத்தை மரணத்தின் பூமியிலும், இன்னொரு பாதத்தை வாழ்க்கையின் பூமியிலும் வைத்துக்கொண்டு வாழ்கிறீர்கள் என்று அர்த்தம். இது கொடுமையாக அல்லவா இருக்கும்!

மிகவும் சாதாரணமான விதத்தில் இதைப் பார்ப்போம்: நீங்கள் உங்களுடைய தோட்டத்தில் நடந்து போனீர்கள் என்று வைத்துக்கொள்வோம், இப்போது இங்கே ஒரு மோப்ப நாயை கொண்டுவந்தால், நீங்கள் எந்தப் பக்கமாக போனீர்கள் என்று இந்த நிலத்தை மோப்பம் பிடித்தே அது சொல்லிவிடும். மூன்று அல்லது நான்கு நாட்கள் வரைக்கும்கூட அவர்களால் இப்படி

கண்டுபிடிக்க முடியும். சில சமயம் எந்த இடையூறும் இல்லையென்றால், இதைவிட அதிக நாட்கள் ஆனாலும் அவர்களால் கண்டுபிடிக்க முடியும். ஒரு நாயால் உங்களை எப்படிக் கண்டறிய முடிகிறது? நீங்கள் நடந்து போகும்போது, உங்களுக்கு பின்னால் தேங்கி நிற்கும் ஞாபகம்தான் இதற்கு காரணம் - நம்முடைய ஞாபகத்தின் நுட்பமான கட்டமைப்பு முற்றிலும் தனித்தன்மை வாய்ந்தது, அதன் ஒரு விளைவுதான் நம்முடைய தனிப்பட்ட வாசனை. நடக்கும்போது ஒரு சில கணங்களுக்கு இந்த நிலத்துடன் சிறிய தொடர்பை உருவாக்கினீர்கள். அந்த சிறிய தொடர்பிலேயே, ஒரு நாயைப் போன்ற சாதாரண பிராணி கூட கண்டுகொள்ளும் அளவுக்கு ஞாபகங்களை தேங்கவிட்டு போகிறீர்கள். அப்படியென்றால், வாழ்நாள் முழுவதும் உங்களுக்குப் பின்னால் விட்டுப்போகும் ஞாபகங்கள் எந்தளவுக்கு இருக்கும், நீங்களே கற்பனை செய்து பாருங்களேன் - நீங்கள் அணிந்த உடைகள், நீங்கள் உட்கார்ந்த இடங்கள், படுத்துத் தூங்கிய இடங்கள், பயன்படுத்திய பொருட்களுடன் ஏற்பட்ட தொடர்பு, இதுபோன்ற மற்றும் பல விஷயங்கள் - இதெல்லாமே எவ்வளவோ ஞாபகங்களைத் தேக்கி வைத்திருக்கும், இல்லையா?

ஒருவர் இறந்து போய்விட்டால், நம் கலாச்சாரத்தில், எப்போதுமே அவருடைய ருணானுபந்தத்தை துடைத்துவிட வேண்டும் என்று விரும்பினார்கள். ஏனென்றால், நேற்று என்பதற்கு அதற்கே உரிய ஆற்றல் இருக்கிறது. அதிலிருந்து உங்களை விடுவித்துக் கொள்ளாவிட்டால், நேற்று என்பது உங்களுடைய நாளையை ஆட்டிப்படைக்கும். நேற்று என்பது உங்களுடைய நாளையை ஆட்டிப்படைப்பது என்றால் என்ன? நாளை என்பது ஒருபோதும் வரப்போவதில்லை என்று அர்த்தம். "இறந்தவர்களை இறந்தவர்களிடமே விட்டுவிடுங்கள்" என்று ஒருவர் மிகவும் ஆணித்தரமாக சொன்னார், தெரியுமா? இறந்தவர்களை இறந்தவர்களிடமே விட்டுவிடுவது என்றால், இறந்து போனவர்களை அலட்சியப்படுத்துவது என்று அர்த்தமில்லை. நேற்று என்னவெல்லாம் நடந்ததோ, போன கணத்தில் என்னவெல்லாம் நடந்ததோ, அதெல்லாமே இறந்துவிட்டது என்ற விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும் - இதுதான் அர்த்தம். ஒருவர் இறந்துபோயிருக்கலாம் அல்லது அவர் முக்தி அடைந்திருக்கலாம் அல்லது வேறெங்காவது போயிருக்கலாம் - இதெல்லாம் நமக்கு தெரியாது. இங்கே நீங்கள் அவருக்கு பிறந்ததால் அல்லது ஏதோ ஒருவிதத்தில் அவரோடு தொடர்புடன் இருந்ததால், அவருடைய ஞாபகங்கள் உங்களின் மேல் பதிந்திருக்கின்றன. இந்தப் பதிவுகள் உங்களுடைய மனதில் மட்டுமல்ல, அது உங்களுடைய உடலிலும் சக்தியிலும்கூட பதிந்திருக்கிறது. இதிலிருந்தெல்லாம் நீங்கள் விடுபட வேண்டும், இது மிகவும் முக்கியமானது. அதனால், இறந்தவர்களுக்கான சடங்குகளில் இது ஒரு முக்கியமான அம்சமாக அமைகிறது.

ஞாபகங்களிலிருந்து விடுபட்டு இருப்பதும், ஞாபகங்களை இழப்பதும் வெவ்வேறு விஷயங்களாகும். உங்களுடைய மேல்மன ஞாபகங்களை நீங்கள் இழந்துவிட்டால் அது உங்கள் நினைவில் இல்லாமல் போகிறது, அவ்வளவுதான். அதிலிருந்து விடுபட்டு போனீர்கள் என்று அர்த்தமில்லை. அது உங்களுடைய விழிப்புணர்வில் இல்லாமல் உங்களுக்குள் பலவிதமாக வேலைசெய்ய ஆரம்பிக்கும். அதனால், நம்முடைய நோக்கம் - இந்த ஞாபகங்களிலிருந்து தள்ளியிருக்கும்படி ஒரு இடைவெளியை உருவாக்கவேண்டும். நாம் அதை இழக்க விரும்பவில்லை; நம்மேல் அது பாரமாக இல்லாமல் கொஞ்சம் லேசாக இருக்கும்படி வைத்துக்கொள்ளப் பார்க்கிறோம், அவ்வளவுதான். இப்படியாக, இந்தச் சடங்குகளின் மூலம் இறந்தவர்களுக்கு உதவியாக சில விஷயங்களை செய்தாலும் உயிருடன் வாழ்ந்து கொண்டிருப்பவர்களை விடுவிப்பதும் முக்கியமானது. இப்படி ஒரு இடைவெளியை உருவாக்குவது மிகவும் அவசியம்.

தனக்கு பின்னால் விட்டுச்சென்ற ஞாபகங்கள் உறுதியாகவும், அதிக அளவிலும் தேங்கியிருந்தால், அது இறந்துப் போனவருக்கும் தொந்தரவாக இருக்கும். நெருங்கிய உறவினர்கள், குறிப்பாக அவருக்கு மிகவும் நேசமான உறவுகளாக இருந்திருந்தால், இறந்தவருக்கு தொந்தரவாக இருக்கும். அதனால்தான் நமது கலாச்சாரத்தில், உயிர்விடும் நோக்கம் வரும்போது, தங்களுடைய குடும்பத்தார் மத்தியில் இல்லாதபடி ஏதோ ஒரு இடத்திற்கு போய்விடுவார்கள். நீங்கள் இறக்கும்போது உங்களுடைய குடும்பத்தாருடன் இருக்கவேண்டாம் என்பதுதான் நோக்கம். ஏனென்றால், கடைசி கணம் வரைக்கும் இந்த பற்றுகளும் பந்தங்களும் தொடர்ந்து கொண்டே இருக்கும். இந்த உலகில் தாம் ஏற்படுத்திக்கொண்ட உறவுகள் எல்லாமே அடிப்படையில் வெறும் ஞாபகங்கள்தான் என்ற புரிதல் அவர்களுக்கு தெளிவாக இருந்தது. அதனால் தூரமான இடத்தில் தனியாக இருக்கும்படி போய்விடவேண்டும் என்று விரும்பினார்கள். இந்த ஞாபகங்களெல்லாம் துடைக்கப்பட்டு போனவுடன், எந்த உறவும் இல்லாமல் போகிறது. இப்போது நமக்குள் ஞாபகத்திற்கு அப்பாற்பட்ட பரிமாணத்தைப் பற்றிய விழிப்புணர்வு ஏற்படமுடியும். அடிப்படையில், இந்த பரிமாணம்தான் உயிர் என்பது. நமக்குள் இந்த பரிமாணத்தில் ஆழமாக வேரூன்றுவது இப்போது சுலபமாக இருக்கும். இப்படி, இறந்து போனவருக்காக எவ்வளவு முடியுமோ அந்தளவுக்கு ஞாபகங்களை கரைத்துவிட விரும்புகிறோம். இதன்மூலம், அவர்கள் விடுபடும் இந்நிகழ்வு சுலபமாகவும், சுமுகமாகவும் ஏற்படும்; அவர்கள் இங்கேயும் அங்கேயும் சிக்கிக்கிடக்க மாட்டார்கள்.

ஒருவர் இறந்தபிறகு பதினான்காவது நாள், இந்த சடங்குகளில் முக்கியமான நாளாக அமைகிறது. இறந்துபோனவருக்கு ரத்த

சம்பந்தமான உறவினர்கள் எல்லோரும் அன்றைக்கு சேர்ந்திருந்து சில சடங்குகளை செய்யவேண்டும். பாரம்பரியமாக, அப்படிப்பட்ட நாளில், அவருடைய சொந்தக்காரர்கள் யார் யார் வந்திருக்கிறார்கள், யாரெல்லாம் வரவில்லை என்று கணக்கெடுப்பதைப் பார்க்கமுடியும். இவர்களெல்லாம் இறந்துபோனவரின் ஞாபகங்களை அல்லது ருணானுபந்தத்தை கெட்டியாக வைத்திருப்பவர்கள். அதனால் எல்லோரும் வந்துவிட்டார்களா, இல்லையா என்று கணக்கு வைப்பார்கள். இவர்கள் நிச்சயமாக வரவேண்டும், இவர்கள் வந்து ஏதோ ஒருவிதத்தில் தங்களுடைய ஞாபகத்தை கழுவிவிட்டு, அந்த மனிதரை விடுவிக்க வேண்டும். இறந்துபோன அந்த மனிதர் தனக்குப் பின்னால் விட்டுப்போன ஞாபகங்களின் சின்னச் சின்ன அம்சங்களையெல்லாம் இந்த பதினான்கு நாட்களில் ஒன்றாக சேர்த்து வைத்திருப்பார்கள். இப்போது இதெல்லாம் ஒரே இடத்தில் இருக்கும்படி சேர்த்துவைத்து அதை கரைத்துவிட வேண்டும் என்பதுதான் நோக்கம். விட்டுப்போய் தேங்கியிருக்கும் இந்த ஞாபகங்கள் தொடர்ந்து வாழக்கூடாது, அது போய்விட வேண்டும். எல்லாவிதத்திலும் கழிந்துவிட வேண்டும். அதனால் இந்த ஞாபகங்களின் ஏதாவது ஒரு அம்சத்தை தன்னிடம் வைத்திருப்பவர்கள் எல்லோரும் ஒரே இடத்தில் வருவது மிகவும் அவசியம்.

ஒரு காலத்தில், இறந்துபோனவர்களின் குலத்தைச் சேர்ந்த அத்தனை பேரும் ஒன்று சேர்வது வழக்கம் - அந்தக் காலமெல்லாம் மலையேறி விட்டது. இன்றைய சூழ்நிலையில், இதற்கெல்லாம் நடைமுறையில் வாய்ப்பே இல்லை. காலபைரவ கர்மா செய்வதற்கு கூட ஒன்றிரண்டு சொந்தங்கள்தான் வருகிறார்கள். அது மட்டுமில்லை, "நான் அவசியம் வரவேண்டுமா? நான் அதை கூரியரில் அனுப்பக் கூடாதா?" என்று புலம்புவதுபோல் கேட்கிறார்கள். இப்படியாக, அந்த மனிதரின் ஞாபகங்கள் எங்கெல்லாம் ஒட்டிக் கிடக்கிறது என்று நமக்கு தெரிவதில்லை. அதனால், நம்மால் முடிந்த அளவுக்கு சிறப்பான விதத்தில் இதைச் செய்கிறோம். இப்படிப்பட்ட நேரங்களில், நாம் செய்யக்கூடிய ஒரு எளிமையான விஷயம் இதுதான்: இறந்தவருடைய ஞாபகம் அடங்கிய ஒரு பொருளை எடுத்து, இயல்பாகவே கரைதலை ஏற்படுத்தும் சூழல்கொண்ட ஒரு இடத்தில் வைத்துவிட வேண்டும். சாதாரணமாக, இதை ஒரு சிவன் கோவிலின் முன்னால் கட்டுவது வழக்கம் - சிவன் ஒரு ஆண்டி, எப்போதும் சாம்பலை பூசி இருப்பவர், அவரை எதுவும் தொடமுடியாது - அதனால் அங்கே கட்டிவிடுவார்கள்.

அதனால்தான், காலபைரவ கர்மாவில், இறந்தவருடைய ஒரு புகைப்படத்தையும், அவர் உடலோடு நெருங்கிய தொடர்பிலிருந்த ஒரு சிறிய துணியையும் பயன்படுத்துகிறோம். இந்த இரண்டு பொருட்களிலும் அந்த மனிதருடைய ஞாபகங்கள் உறுதியாக பதிந்திருக்கும். இப்போது

இந்த ஞாபகத்தை முடிந்த அளவுக்கு கரைத்திடும்படி ஒரு சடங்கை செய்கிறோம். முடியாமல் இருப்பதை சிவனிடம் விட்டுவிடுகிறோம். இந்த பொருட்களையெல்லாம் தியானலிங்கத்தின் மேல் போடவேண்டாம் என்று அதை எரித்துவிட்டு அதன் சாம்பலை ஒரு துணியில் வைத்து தியானலிங்க வாசலுக்கு வெளியே இருக்கும் புளியமரத்தில் கட்டிவிடுகிறோம், மீதியை சிவன் பார்த்துக்கொள்ளட்டும்.

காலபைரவ கர்மா என்பது ஆழமாக தோண்டி சுத்தப்படுத்தும் சடங்கு கிடையாது. இதில் மேற்பரப்பில் இருப்பதை மட்டுமே துடைத்து சுத்தம் செய்கிறோம். இதன்மூலம் முடிந்தளவுக்கு பிடித்திழுக்கும் பிணைப்புகள் எதுவும் இல்லாமல் செய்கிறோம். பெரும்பாலான நேரங்களில், இதுவே போதுமானதாக அமைகிறது. இந்த விஷயங்களுக்கு ஒரு எண்ணிக்கையை தருவது நல்லதில்லை, இருந்தாலும் என்னுடைய கணிப்பில் 10-15 சதவிகிதம் பேருக்கு மட்டுமே அவர்களை விடுவிப்பதற்காக மிகவும் சக்திவாய்ந்த சடங்குகள் தேவைப்படும். இன்னொரு 60-70 சதவிகிதம் பேருக்கு, காலபைரவ கர்மா போல ஒரு எளிமையான சடங்கை செய்தாலே அவர்களை விடுவிக்க முடியும். நடுவில் இருக்கும் இன்னொரு 10-15 சதவிகிதம் பேருக்கு, அவருடைய ஞாபகங்கள் தேங்கியிருக்கும் பொருள் எதையாவது, ஒரு சக்திமிக்க சூழலில் நாம் வைப்பது போலவே வைத்துவிட்டால், அது தன் வேலையை செய்திடும்.

சில சமயங்களில், அதை மொத்தமாக, முழுமையாக துடைத்து சுத்தப்படுத்த வேண்டிய அவசியம் ஏற்படலாம். அதற்கு சடங்கை செய்பவர், இறந்தவரின் உறவினர்கள் என்ற இரு தரப்பினரும் ஈடுபடுவது அவசியம் - அவர்கள் முற்றிலும் வேறு நிலையிலான ஈடுபாட்டோடு கலந்துகொள்ளும் தேவை இருக்கிறது. இது கொஞ்சம் சிக்கலானது. இதற்கு அதிக அளவிலான ஈடுபாடு தேவைப்படுகிறது. அதோடு, எல்லா சமயத்திலும் இது சரியாக அமைந்துவிடாது. ஒருவேளை இது சரியாக அமையாவிட்டால், உயிருடன் இருப்பவர்களின் வாழ்க்கையில் இதன்மூலம் தேவையில்லாத தொந்தரவுகள் ஏற்படலாம். மிகவும் ஆழமான, தீவிரமான விதத்தில் இதை நாம் செய்யவேண்டாம் என்பதால் மேற்பரப்பில் இருப்பதை சுத்தமாக துடைத்துவிட்டாலே போதுமானது. அதைத்தான் காலபைரவ கர்மா செய்கிறது. (காலபைரவ சாந்தி[2] என்பது பெரும்பாலும் உயிருடன் இருப்பவர்களுக்கு உதவும்படி அமைந்துள்ளது. சிலசமயம் இது இறந்தவர்களுக்கும் உதவிகரமாக அமைகிறது.)

இறந்தவரின் ஞாபகங்களை தங்களுக்குள் கெட்டியாக வைத்திருக்கும் நெருங்கிய உறவினர்கள், இங்கே வந்து தியானலிங்கத்தில் போதிய

2 லிங்கபைரவியில் வழங்கப்படும் மற்றொரு சடங்கு.

அளவு நேரம் செலவழித்தால், எந்தச் சடங்கும் செய்யவில்லை என்றாலும், அது இறந்தவருக்கு வேலை செய்ய வாய்ப்பிருக்கிறது. இதற்கு காரணம் காலபைரவ கர்மா இல்லை, இந்த இடத்தின் தன்மையே காரணம். நீங்கள் உயிரோடு இருக்கும்போதுகூட, தியானலிங்கம் உங்களுக்குள் தியானத் தன்மையை ஏற்படுத்தும் என்று சொல்கிறோம், அல்லவா? அப்படி என்றால் என்ன? அதாவது, இது ஒருவரின் மனத்தில் முடிவில்லாமல் ஓடிக்கொண்டிருப்பதை நிறுத்துகிறது, அவருடைய மனத்தில் ஏற்படும் பேதி நின்றுபோகிறது - இதுதான் அர்த்தம். மனத்தின் பேதி நின்றுவிட்டது என்றால் அழுகிப் போய்க் கொண்டிருக்கும் ஞாபகங்கள் குறைந்து போய்விட்டன என்று அர்த்தம். இப்போது உங்களுடைய வயிற்றில் எந்த உணவும் இல்லையென்றால், எந்த பேதியும் இருக்காது, இல்லையா? அதேபோல, உங்களுக்குள் அழுகிக் கொண்டிருக்கும் எந்த ஞாபகமும் இல்லையென்றால், மனதில் எண்ணங்கள் இருக்காது. இப்போது உங்களுக்கும் மனத்திற்கும் ஒரு இடைவெளி உருவாகிவிட்டது.

நீங்கள் உயிருடன் இருக்கிறீர்களா, இறந்துவிட்டீர்களா என்ற கவலையெல்லாம் தியானலிங்கத்திற்கு கிடையாது. அவருக்குத் தெரிந்ததெல்லாம் நெல்லிலிருந்து உமியை பிரித்தெடுப்பதுதான். நீங்கள் என்பதையும், எது நீங்கள் இல்லை என்பதையும் தனியாக பிரிப்பதுதான் அவருடைய நோக்கம். உங்களுக்கு உடல் இருக்கிறதா இல்லையா என்பதெல்லாம் அவருக்கு ஒரு பொருட்டில்லை. அதனால்தான், இறந்தவரின் ஞாபகங்களை தங்களுக்குள் கெட்டியாக வைத்திருக்கும் நெருங்கிய உறவினர்கள் தியானலிங்கத்தில் போதிய அளவு நேரம் செலவழித்தால் - அமாவாசை அல்லது பௌர்ணமி நாட்களை ஒட்டி, இரண்டு மூன்று நாட்கள் இருந்தால் - இறந்துபோனவருக்கு இது நல்லமுறையில் வேலை செய்யமுடியும்.

## காலபைரவ கர்மா எந்த வரம்புக்குள் செயல்படும்?

பொதுவாகவே, உலகம் முழுவதிலும் இறந்தவர்களுக்காக செய்யப்படும் சடங்குகளில் இரண்டு அம்சங்கள் இருந்தன: இறந்துபோன உயிருக்கு சரியான விதத்தில் வழிகாட்டுவது ஒரு விஷயம். அவர் போனபிறகு உயிரோடு வாழ்ந்து கொண்டிருப்பவர்களின் உணர்ச்சிகளை கையாள்வது இன்னொரு விஷயம். சில கலாச்சாரங்களில், என்ன நடந்துகொண்டிருக்கிறது என்ற புரிதலை அவர்களுக்கு கொடுப்பதற்காக சில புனித வாசகங்களை சத்தமாக வாசித்தார்கள். இதனால் அவர்களுடைய பயம் தணிந்து, எல்லாம் சரியாக இருக்கிறது என்ற உறுதி ஏற்படும் என்ற நோக்கத்தில் அப்படிச் செய்தார்கள். அவர்களுடைய உணர்ச்சிகளை இதமாக்கிட சில உச்சாடனங்களும் சடங்குகளும்கூட இருந்தன. சில கலாச்சாரங்களில்,

இறந்துபோனவருக்கு என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை சத்தமாக கேட்கும்படி வாசிப்பார்கள். அவர் தைரியமாக இருக்கவேண்டும், அடுத்த நிலைக்கு தொடர்ந்து முன்னேறவேண்டும் என்றெல்லாம் ஊக்கம் தருவார்கள். ஆனால், பொருள் உடலை விட்டபிறகு, பிரித்துப் பார்த்து புரிந்துகொள்ளும் மனம் இருப்பதில்லை, அதனால் அவருக்கு பாஷைகள் எல்லாம் புரியப்போவதில்லை. இப்போது சப்தமும் கிடையாது, நிசப்தமும் கிடையாது. அதனால், அந்த மனிதர் இதையோ அதையோ புரிந்துகொள்வதற்கான சாத்தியமே கிடையாது. அதெல்லாமே உயிருடன் இருப்பவர்களுக்காக செய்யப்படுவதுதான். வேண்டுமானால், சடங்குகளின் மூலம் அந்த உயிர் ஒரு விஷயத்தை நோக்கி ஈர்க்கப்படும்படி செய்யலாம், அந்த உயிரை ஒரு குறிப்பிட்ட திசையில் போகும்படி வழிநடத்தலாம். ஆனால் அதோடு பேசுவதெல்லாம் முடியாத காரியம்தான்.

இந்தச் சடங்குகள் மூலம் எந்தளவுக்கு செய்யமுடியும், அதன் வரம்பு என்ன? இந்த சடங்குகளின் வரம்பு மிகவும் பரந்து விரிந்திருக்கிறது. உதாரணமாக, இந்த உயிர்கள் திரும்ப பிறக்கும்போது குறிப்பிட்ட விதத்தில் பிறக்கும்படி செய்யலாம். அதாவது, ஒரு செல்வம் மிக்க குடும்பத்தில் பிறக்கும்படி அல்லது தன்னுடைய அதே குடும்பத்தில் பிறக்கும்படி அல்லது ஒரு அரச குடும்பத்தில் பிறக்கும்படி அந்த உயிர்களுக்கு வழி செலுத்திடும் மனிதர்கள் இருக்கிறார்கள். இதெல்லாம் செய்யக்கூடிய விஷயங்கள்தான் என்றாலும் இவை அபத்தமானவைதான். அவர் செல்வம் மிகுந்த குடும்பத்தில் பிறந்தார் என்பதாலேயே அவர் நன்றாக வாழ்ந்திடுவார் என்று அர்த்தம் கிடையாது. உயிரின் பல நுட்பமான விஷயங்கள் இருக்கின்றன, அதைப் பொருத்துத்தான் அவர் வாழ்க்கை அமைகிறது. அது மட்டுமில்லை, இந்த விஷயங்களில் இப்படி தலையிட்டு மாற்றங்களை செய்வது நல்லதும் கிடையாது. அது அந்த உயிருக்கு நல்லமுறையில் அமையாது. அந்த "உயிர்-குமிழியை" முடிந்த அளவுக்கு மெல்லியதாக ஆகும்படி செய்து, அதை விட்டுவிடுவதே மிகவும் சிறந்தது. அது ஒரு மேன்மையான இடத்திற்கு தானாகவே வழியை தெரிந்துக்கொள்ளும். என்னைப் பொருத்தவரை, நம்மால் முடிந்த அளவுக்கு அந்த உயிரை உரித்துவிட வேண்டும். முடிந்தால் கடைசி வரைக்கும் கொண்டு போய் சேர்க்க வேண்டும். இல்லையென்றால், அதன் தடிமத்தை முடிந்த அளவுக்கு குறைத்து அந்த உயிர்-குமிழியை முன்பைவிட மெல்லியதாக்கி விடவேண்டும். அதற்குப் பிறகு என்ன நிகழும், அதன் மறுபிறப்பு எப்படி இருக்கும் என்பதைப் பற்றி எல்லாம் நீங்கள் கவலைப்படத் தேவையில்லை.

உதாரணமாக, காற்று வீசிக்கொண்டிருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். ஒரு பொருள் எந்தளவுக்கு லேசாக இருக்கிறது என்பதைப் பொருத்து அது

எங்கேயோ போய் சேர்ந்திடும். அது ஒரு சிறிய காகிதத் துண்டாகவோ, ஒரு இறகாகவோ இருந்தால் தூரமாக போகலாம். ஆனால் அது ஒரு குச்சியாகவோ, மரக்கிளையாகவோ இருந்தால் நீங்கள் நிற்கும் இடத்தில் இருந்து கொஞ்ச தூரத்திலேயே விழுந்துவிடும். சிலநேரங்களில் அதன் எடையும் வடிவமும் சரியாக இருந்தால், அந்த இறகு கீழே விழாமல் மாதக்கணக்கில் பறந்து போய்க்கொண்டே இருக்க வாய்ப்பிருக்கிறது. இதில் முக்கியமான விஷயம் என்னவென்றால், அதை லேசாக இருக்கும்படி செய்யவேண்டும். அது எவ்வளவு தூரம் பறந்துபோகும், அதற்கு என்ன ஆகும், எங்கே போய் தரையிறங்கும் என்பதெல்லாம் அந்த உயிரைப் பொருத்ததுதான். நாம் அதை வழிநடத்த முயற்சிக்கத் தேவையில்லை. அந்த விதத்தில் தலையிட்டால் அது ஏராளமான பிரச்சனைகளை உருவாக்கிடலாம்.

இப்போது, ஒருவர் இறந்துபோன பிறகு அவர் சொர்க்கத்தில் இருக்கிறாரா, நரகத்தில் இருக்கிறாரா, அவர் எங்கே இருக்கிறார் என்றெல்லாம் தெரிந்துக்கொள்ள விரும்புவார்கள். அதையெல்லாம் தங்களால் உங்களுக்கு தெரிவிக்கமுடியும் என்றும் சிலபேர் சொல்லிக்கொள்வார்கள். இறந்துபோன உயிர் சுகமாக இருக்கிறதா, இல்லையா என்பதை ஒருவர் தெரிந்துகொள்ள வாய்ப்பிருக்கிறது. அதற்கேற்றபடி அந்த உயிருக்கு தேவையான சில சடங்குகளை அவர் செய்யமுடியும், அது சாத்தியம்தான். ஆனால், அந்த உயிர் எந்த இடத்தில் இருக்கிறது என்பதெல்லாம் அபத்தமான பேச்சுத்தான். ஏனென்றால், பூகோளரீதியாக அமைந்த "இடம்" என்பதெல்லாம் அதற்கு கிடையாது.

வரையறுக்கப்பட்ட காலத்துக்குள் காலபைரவ கர்மா செய்யப்பட்டால், அந்த உயிர் தன் இலக்கை அடைந்துவிடும். இந்த சடங்கு தாமதித்து செய்யப்பட்டால், அது அந்தளவுக்கு பயனுள்ளதாக இருக்காது. ஆனால், நிச்சயமாக இதன்மூலம் அந்த உயிர் வெறுமனே சுற்றிக்கொண்டிருக்கும் கால அளவை குறைத்திட முடியும். சரி, எந்தளவுக்கு குறைக்க முடியும்? திரும்பவும் சோப்புநுரை குமிழி உதாரணத்திற்கு போவோம்[3]. எந்தளவுக்கு குறைக்கலாம் என்பது அது எவ்வளவு பெரிய குமிழி என்பதைப் பொருத்தது. அந்த குமிழியின் தோல் எவ்வளவு மெலிதாக இருக்கிறது என்பதைப் பொருத்தது. பத்து முதல் பதினான்கு நாட்களுக்குள் செய்தால், அது பெருமளவில் கரைந்து போகும்படி செய்யமுடியும். இந்த உதாரணத்தை தொடர்ந்தோம் என்றால் - உடலை இழந்தபிறகு, எந்த உதவியும் இல்லாமல் அப்படியே விடப்பட்டால், இந்த குமிழி நீண்டகாலத்திற்கு அப்படியே மிதந்து கொண்டிருக்க வாய்ப்பிருக்கிறது.

---

3 அத்தியாயம் 2ல், "நீர்க்குமிழி பெரிதா சிறிதா?" என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

அது தன்னை இழந்திட விரும்பவில்லை, அதனால் அப்படியே மிதந்து கொண்டிருக்கும். ஆனால், காலபைரவ கர்மா செய்த உடனே, இந்த சுழற்சி வேகமாக ஏற்படும். காலபைரவ கர்மா செய்வதால், அந்த உயிர் சுற்றிக் கொண்டிருக்கும் காலஅளவு மட்டும் குறைவதில்லை, அதன் பயணம் இனிமையாக இருக்கும்படியும் செய்கிறது.

இந்த சடங்குகளைக் கொண்டு மனிதர்களை முக்திபெற செய்யலாமா? அதாவது, காலபைரவ கர்மா மூலம் ஒருவருக்கு மஹாசமாதி அளிக்க முடியுமா? சாத்தியம்தான், ஆனால் எல்லா நேரத்திலும் இல்லை. இதில் பல அம்சங்கள் இருக்கின்றன. அந்த குமிழி ஏற்கனவே அந்தளவுக்கு மெல்லியதாக இருந்தால் தவிர அது மஹாசமாதியாக இருக்க வேண்டியது இல்லை. அந்த உயிர் அவ்வளவு பெரிய குமிழியாக இருக்கிறது என்றால், அதேசமயம் தன்னுடைய இயல்பால் அதை உடைத்துக்கொள்ள முடியவில்லை என்றால், காலபைரவ கர்மா மூலம் அது உடைந்து போகலாம் - அப்போது அது மஹாசமாதியாக ஆகிடலாம். மற்ற நேரங்களில், அது அந்த குமிழியை மிகவும் மெல்லியதாக, எளிதாக உடையும் தன்மையுடன் இருக்கும்படி ஆக்குகிறது. இதனால் அந்த உயிர் சீக்கிரமாக ஒரு பொருள் உடலைத் தேடிட விரும்பும். அந்த உயிரால் இப்படியே நீண்டகாலத்துக்கு இருக்கமுடியாது. எப்படி இருந்தாலும், எல்லா நேரங்களிலும் அதன் பயணத்தை வேகமாக்கிட முடிகிறது.

நீங்கள் உயிருடன் இருக்கும்போது உங்களுக்கு காலபைரவ கர்மா செய்துகொள்ள விரும்பினால், அது காலபைரவ க்ரியா ஆகிடும். அடிப்படையில், காலபைரவ கர்மா செய்வதின் நோக்கமே, ஒருவர் இறந்த பிறகு அவருடைய உயிர்த்தன்மையின் அம்சங்கள் எல்லாவற்றையும், இங்குமங்கும் ஒட்டிக்கொண்டிருக்காமல் மொத்தமாக துடைத்து எடுப்பதுதான். நீங்கள் ஒரு யோகியாக இல்லை, உங்களால் சுயமாக உங்களை துடைத்துவிட முடியவில்லை, அதனால்தான் உங்களுக்கு காலபைரவ கர்மா செய்கிறார்கள். ஒரு யோகியாக இருந்தால், அவர் எல்லாவற்றையும் விட்டு விலகி காட்டுக்குப் போய்விடுவார், அங்கே தனிமையில் உயிர்விடுவார். தன் உயிருக்கு தேவையானது எல்லாவற்றையும் அவர் ஏற்கனவே செய்துகொண்டு விட்டதால், அதற்குப் பிறகு யாரும் அவருக்கு எதுவும் செய்யவேண்டிய அவசியமில்லை. எல்லாமே முடிந்துவிட்டது. அவருக்கு காலபைரவ கர்மா தேவையே இல்லை. அவர் போனபோது, அவர் இருந்த இடத்தை மொத்தமாக காலி செய்துகொண்டு போய்விட்டார். உங்களுடைய சக்திகளின் மேல் அந்த மாதிரி ஆளுமை இல்லாதபோது, நீங்கள் காலபைரவ க்ரியா செய்து கொள்ளலாம். இதை நாம் கற்றுக்கொடுக்க முடியும். ஆனால் இதற்கு ஒழுங்குமுறை மிகவும் அவசியம், அதிகபட்ச ஒழுங்குமுறை அவசியம்.

நீங்கள் எப்படி இருக்கிறீர்கள் என்பதைப் பற்றிய ஒழுங்குமுறையும், உங்கள் சக்திகளை எந்தளவு பராமரிக்கிறீர்கள் என்பதும் அத்தியாவசியமானது.

ஒருமுறை இப்படி நடந்தது: இதய அறுவை சிகிச்சை செய்யும் ஒரு டாக்டரின் கார் ரிப்பேர் ஆனது. அதனால், அதை சரிசெய்ய மெக்கானிக் கடைக்கு போனார். இருபத்து நான்கு மணி நேரத்திற்குள் அதை சரிசெய்து தருவதாக மெக்கானிக் சொன்னார். அடுத்தநாள் காரை எடுத்துக்கொள்ள டாக்டர் அங்கே போனார், அது தயாராகவில்லை. அதைப்பற்றி கேட்டதற்கு பொறுப்பான பதிலும் கிடைக்கவில்லை. இப்படியே ஆறு நாட்கள் போனது. ஒவ்வொரு நாளும் அந்த மெக்கானிக் அவரிடம் அடுத்த நாள் வரும்படி சொல்லிவிடுவார். ஒரு வாரத்திற்குப் பிறகு, டாக்டர் மெக்கானிக்கை பார்த்து, "எனக்கு ஏன் இப்படி செய்கிறீர்கள்? நான் வேலைக்கு போயாக வேண்டும். எவ்வளவோ விஷயங்கள் செய்ய வேண்டியிருக்கிறது. அதற்கு கார் இல்லாமல் சிரமமாக இருக்கிறது," என்று வருத்தப்பட்டார். மெக்கானிக் கொஞ்சம் திமிரான நடையோடு, இப்படியும் அப்படியும் போய்க்கொண்டே, "சரிதான், நீங்கள் இதய அறுவை சிகிச்சை செய்பவர்தானே? அப்படி என்ன பெரியதாக செய்துவிடுகிறீர்கள்? என்னைப்போல நீங்களும் என்ஜின்களைதான் சரிசெய்கிறீர்கள். ஆனால் உங்களுக்கு மட்டும் என்னைவிட ஐம்பது மடங்கு சம்பளம் தருகிறார்களே, ஏன் அப்படி?" என்று கேட்டார். டாக்டர் மெக்கானிக்கைப் பார்த்து, "நான் என்ஜின் ஓடிக்கொண்டிருக்கும் போதே அதை சரிசெய்கிறேன், உன்னால் அப்படி செய்யமுடியுமா?" என்று கேட்டார். காலபைரவ க்ரியா என்பதும் இப்படித்தான்.

இறந்து போனவர்களுக்கு ஒரு சடங்கை செய்வது ஒரு விஷயம். அதையே உயிருடன் இருக்கும்போது தனக்குத்தானே செய்துகொள்வது, என்ஜின் ஓடிக்கொண்டிருக்கும் போதே செய்துகொள்வது வேறுவிதமான விஷயம். இது ஓடிக்கொண்டிருக்கும் போதே இதை விடுவிக்க வேண்டுமென்றால், அதற்கு முற்றிலும் வேறுவிதமான ஒழுங்குமுறை தேவைப்படுகிறது. உங்கள் வாழ்க்கையில் செய்யும் ஒவ்வொரு செயலிலும் அந்தளவுக்கு ஒழுங்குமுறையை நீங்கள் வெளிப்படுத்தினால் - நீங்கள் சொதப்பல்கள் செய்யாதவராக, ஒவ்வொரு சின்ன விஷயத்துக்கும் கவனம் தருபவராக இருந்தால், அப்போது நீங்கள் காலபைரவ க்ரியா செய்துகொள்ளலாம். அதற்குப் பிறகு நீங்கள் உயிர்விடும் நேரத்தில், யாரும் உங்களுக்கு எதுவும் செய்யவேண்டிய தேவையில்லை. நிச்சயமாக இது ஒருவரின் வாழ்க்கையில் செய்யக்கூடிய மகத்தான விஷயமாக இருக்கும், ஒருவருக்கு நிகழக்கூடிய அற்புதமான விஷயமாக இருக்கும். ஆனால் இதற்கு சீரிய ஒழுங்குமுறை அவசியமானது. இன்றைய உலகில் அது எளிதில் கிடைக்காத விஷயமாக இருக்கிறது.

பாரம்பரியமாக, ஒருவர் தனக்கு காலபைரவ க்ரியா செய்துகொண்டால், அதற்குப்பின் தன்னுடைய வீட்டிற்கு அல்லது கிராமத்திற்கு திரும்பப்போய் சமூக வாழ்க்கையில் ஈடுபடக்கூடாது என்று சொல்வார்கள். அதற்குப்பின் தன்னுடைய வாழ்க்கையை சமூகத்திலிருந்து விலகி, தள்ளிவைக்கப்பட்டவர் போல் வாழவேண்டும் என்பார்கள். அவர் தள்ளிவைக்கப்பட்டவர் என்று அர்த்தமில்லை. அவர் தன்னுடைய மரபணுவிலிருந்து தள்ளி இருக்கும்படி ஒரு இடைவெளியை உருவாக்கிக் கொண்டுவிட்டார் - அதனால், இனிமேல் அவர் அந்த இடத்திற்கு சொந்தமானவர் இல்லை, அவ்வளவுதான். அவருக்கு எல்லாம் முடிந்து போய்விட்டது. அதனால், அந்த குடும்பத்தோடும் சமூகத்தோடும் அவருக்கு எந்த தொடர்பும் இனிமேல் இல்லை. உங்கள் உடலமைப்பின் அடிப்படையான அம்சங்கள்கூட மாறிப்போகும் அளவுக்கு அந்த இடைவெளியை உருவாக்கிக்கொள்ள வாய்ப்பிருக்கிறது. ஆமாம், அப்படியும் செய்துகொள்ள முடியும்.

யோக மையத்தில் காலபைரவ கர்மா செய்ய ஆரம்பித்தவுடன், சிலர் தங்களுடைய நாய்களுக்கும் பூனைகளுக்கும்கூட காலபைரவ கர்மா செய்யமுடியுமா என்று கேட்டார்கள். கொஞ்சம் தயவு செய்யுங்களேன்! அதற்கெல்லாம் அந்த அவசியம் இல்லை. உயிரின் அடிப்படையில், மிருக உயிருக்கும் தாவர உயிருக்கும் ஒரு அடிப்படையான வித்தியாசம் இருக்கிறது - ஒரு தாவரத்திற்கு சூட்சும உடல் என்பது கிடையாது. அது உயிர்ப்பு மிக்கதாக இருக்கலாம், ஆனால் ஒரு தாவரத்திற்கு சூட்சும உடல் கிடையாது. ஒரு தாவரம் தன்னைச்சுற்றி ஒரு ஒளிவட்டத்தை சேகரிக்க வாய்ப்பிருக்கிறது. மற்ற செடிகளைவிட சில செடிகளும் மரங்களும் அதிகமான அளவில் ஒளிவட்டத்தை சேகரிக்கின்றன. அதனால் நம் நாட்டில், அந்த செடிகளையும் மரங்களையும் நாம் புனிதமானதாக அடையாளப்படுத்துகிறோம், அதன் அருகாமையிலிருந்து பயனடைய விரும்புகிறோம். ஆனால், அதை இந்த தாவரங்களே உருவாக்கிக் கொள்வதில்லை. அவர்களுக்கு சூட்சும உடல் இல்லாத காரணத்தால், தாவரங்களால் அதை உருவாக்கமுடியாது.

இறப்பிற்குப் பிறகு செய்யப்படும் சடங்குகள் எல்லாமே சூட்சும உடலை சரியான இடத்திற்கு போகும்படி செய்வதற்காகத்தான் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. சூட்சும உடலே சரியாக அமையாதபோது, அதற்கு எதுவும் செய்யவேண்டிய அவசியமில்லை, எதையும் செய்வதற்கான சாத்தியமும் இல்லை. ஒரு மிருகத்திற்கு சூட்சும உடல் இருக்கிறது. ஆனால், பசுக்களையும் நாகப் பாம்புகளையும் தவிர, மற்ற எதற்கும் அது திட்டவட்டமாக அமைந்திருக்காது, நன்றாக வளர்ந்திருக்கும்படி இருக்காது. அதனால் பொதுவாகவே, மற்ற மிருகங்களின் சூட்சும உடலை பொருட்படுத்த மாட்டோம். அந்த மிருகங்களின் சூட்சும உடல்கள்

எளிதாக இயற்கையோடு கலந்து ஒன்றிட முடியும். அது எங்கேயும் போய் சேரும்படி இருப்பதில்லை.

பசுக்களும், நாகப் பாம்புகளும் வித்தியாசமானவை. அவர்களுடைய சூட்சும உடல் இன்னும் நன்றாக வளர்ந்து, வடிவம் பெற்றிருக்கிறது. பசுக்களுக்கு உணர்வுரீதியான திறன் மேம்பட்டிருக்கும் காரணத்தால், அவர்களுடைய சூட்சும உடல் பரிணாமத்தில் நன்றாக வளர்ந்திருக்கிறது. ஒரு பசுவை கவனித்துப் பார்த்தால், அந்தப் பசுவால் பல்வேறு விதமான உணர்வுகளை வெளிப்படுத்தவும் புரிந்துகொள்ளவும் முடிகிறது என்று பார்ப்பீர்கள். சில நேரங்களில் அது மனிதர்களுக்கு நிகராகவே இருக்கிறது. இந்தக் காரணத்தால் அவர்களுக்கு சூட்சும உடல் நன்றாக அமைகிறது. நாகப் பாம்புகளுக்கு அதிர்வுகளை உள்வாங்கும் கூர்மையான திறன் இருப்பதால், அவர்களுடைய சூட்சும உடல் பரிணாமத்தில் நன்றாக வளர்ந்திருக்கிறது. பெரும்பாலான பாம்புகளுக்கு கேட்கும் திறன் என்பதே சுத்தமாக இருக்காது. ஆனால், அவர்கள் தங்களுடைய முழு உடலையும் பயன்படுத்தி கவனமாக கேட்கிறார்கள். "காதை தரையில் வைத்துக் கேள்," என்று சொல்வார்கள் அல்லவா? நாகப் பாம்புகளை பொருத்தவரை நிஜமாகவே அப்படித்தான். இதனால், அவர்களுடைய உள்வாங்கும் திறன் அபாரமாக இருக்கிறது. இந்த திறன் இருப்பதால், பாம்புகளுக்கும் சூட்சும உடல் நன்றாக அமைகிறது.

இந்த காரணங்களால், இவர்கள் இறந்த பிறகு இவர்களுக்காக ஏதோ ஒரு விஷயத்தை செய்வதில் ஒரு அர்த்தம் இருக்கிறது. அதனால்தான் நம் கலாச்சாரத்தில், குறிப்பாக பசுக்களையும் நாகப் பாம்புகளையும் வணங்குகிறார்கள். பாரம்பரியமாகவே, ஒரு பசு அல்லது பாம்பு இறந்து போனால், அதன் இறந்த உடலை சும்மா அப்படியே விட்டுவிடக்கூடாது என்று சொல்வார்கள். அதை எரிக்கவோ புதைக்கவோ வேண்டும். அதன் இறந்த உடல் எங்கேயாவது கிடப்பதை பார்க்க நேர்ந்தாலும், அதை எரித்திட வேண்டும் அல்லது புதைத்திட வேண்டும் என்று சொல்லப்பட்டது.

சரி, இப்போது மனிதர்களைப் பற்றி பார்ப்போம். என்னிடமிருந்து தீட்சை பெற்றவர்களுக்கு எந்த விதமான இறுதிச் சடங்குகளும் செய்யப்பட தேவையில்லை என்பது உண்மைதான். இருந்தாலும், ஒருவேளை நீங்கள் "தவறவிட்ட" ஆளாக இருந்தால் என்ன செய்வது? அதாவது தீட்சையில் கலந்துகொண்டபோது அதை தவறவிட்டிருந்தால் என்ன செய்வது? என்னிடமிருந்து தீட்சை பெற்றவர்களுக்கு - நீங்கள் உயிருடன் இருக்கும்போதே, உயிர் உங்களுக்குள் துடிப்பாக இருக்கும்போதே, உங்களுக்கு தேவையானதை முடித்துவிட வேண்டும் என்பதுதான் என் விருப்பம். அப்போது, நீங்கள் இறந்தபிறகு எனக்கு ஒரு பாரமாக

இருக்கமாட்டீர்கள். நீங்கள் உயிருடன் இருக்கும்போதே உங்களுக்கு உதவிட நான் தயாராக இருக்கிறேன். நீங்கள் திறன் இல்லாதவராக இருந்தால், நீங்கள் இறந்தபிறகு உதவிடவும் நான் தயாராக இருக்கிறேன். ஆனால் இங்கேயும், அதற்குப் பிறகும் நலமாக இருக்கும்படி நீங்கள் உங்களை தகுந்தவராக்கி கொள்ளலாம், இல்லையா? இறந்தபிறகு உங்களுக்கு எந்த சடங்கும் தேவையேயில்லை என்ற விதத்தில் நீங்கள் வாழ்ந்திட வேண்டும். இறந்த பிறகு எனக்கு தொந்தரவு தரமாட்டீர்கள் என்று நீங்கள் எனக்கு வாக்கு கொடுக்கவேண்டும்! என்னிடமிருந்தும், வேறு யாரிடமிருந்தும் எந்த சடங்கும் உங்களுக்கு தேவைப்படவே கூடாது - அந்த நிலையில் இருக்கும்படி தயவுசெய்து உங்களை உருவாக்கிக் கொள்ளுங்கள்! இதற்குப் பிறகு, எல்லாம் நடக்கவேண்டிய விதத்தில் உங்களுக்கு நடக்கவேண்டும்.

## இறுதிச் சடங்குகளைக் கற்க முடியுமா?

சில விஷயங்கள் நம் வாழ்க்கையில் இல்லையென்றால்கூட, பெரும்பாலான நேரங்களில் அது இல்லாமலேயே நம்மால் சமாளித்துக்கொள்ள முடியும். ஆனால் இறந்தவர்களுக்காக செய்யும் சடங்குகள் அப்படி கிடையாது - அது இல்லாமல் எந்த சமூகமும் நன்றாக இருக்கமுடியாது. இதை நமக்கு நாமே செய்துகொள்ள முடியாது என்பதால் இந்தச் சடங்குகள் இன்றியமையாதவை ஆகும். அப்படியென்றால், இந்த சடங்குகளை செய்திட நாம் யாருக்காவது பயிற்சியளிக்க முடியுமா? நிச்சயமாக முடியும்.

இந்தியாவில், இறந்தவர்களையும் அது சம்பந்தப்பட்ட சடங்குகளையும் கையாளும் மனிதர்களை சண்டாளர்கள் என்று அழைத்தார்கள். ஆரியர்களின் காலத்திற்கு முன்பே, இந்தத் தொழில்தான் சமூகத்தின் மிக உயர்ந்த தொழில்களில் ஒன்றாக கருதப்பட்டது. அடுத்த சில ஆயிரம் வருடங்களில், இந்த தொழிலோடு ஒருவிதமான களங்கத்தை தொடர்புபடுத்தினார்கள் - காலப்போக்கில் சமூக வரிசையில், இந்தத் தொழில் கீழ்நிலைக்கு தள்ளப்பட்டது. பண்டைய காலத்தில் தீண்டாமை என்பது இந்தியாவில் பரவலாக இருந்தது. சில ஜாதிகளை சேர்ந்தவர்கள் தீண்டத்தகாதவர்களாக பார்க்கப்பட்டார்கள். மற்றவர்கள் இவர்களை தொடக்கூட மாட்டார்கள். ஆனால் அந்தத் தீண்டத்தகாதவர்கள் கூட ஒரு சண்டாளனை தொடமாட்டார்கள். அவர்கள் கீழானவர்களிலும் கீழானவராக பார்க்கப்பட்டார்கள். அதேசமயம், ஆதியோகியான சிவனே எப்போதும் இந்த சண்டாளர்களின் சகவாசத்தில்தான் இருப்பார். ஏனென்றால், இருப்பதிலேயே இவர்கள்தான் உயர்ந்தவர்கள் என்று பார்த்தார் சிவன். மற்ற செயல்களை எல்லாம் நடத்திடும் மனிதர்களைவிட, வாழ்க்கையைப் பற்றிய புரிதலும், ஞானமும் இவர்களுக்கு பல மடங்கு

அதிகமாக இருந்தது என்று சிவனுக்கு தெரிந்தது. அதனால், இந்த சேவையில் நீங்கள் இறங்க வேண்டுமென்றால், நாம் உங்களுக்கு ஒரு புது வகையான தோற்றத்தை கொடுக்க வேண்டும், இதற்காக வித்தியாசமான உடைகளை வடிவமைக்க வேண்டும். பாரம்பரியமாக செய்யப்படும் விதத்திலிருந்து முற்றிலும் வித்தியாசமான விதத்தில் இதை பரிமாறும்படி செய்யவேண்டும். இல்லாவிட்டால், அதோடு தொடர்புடைய மதிப்பற்ற பார்வையை மாற்றி, மனிதர்களுக்கு பயனுள்ள விதத்தில் இருப்பது மிகவும் கஷ்டமாக இருக்கும்.

இதையெல்லாம் சடங்குகள் இல்லாமலேயே செய்வதுதான் மிகவும் உன்னதமானது. ஆனால், ஒரு சடங்கை செய்வதற்கு மனிதர்களை எளிதாக தயார்படுத்தி விடலாம். அதே விஷயத்தை சடங்குகள் இல்லாமல் செய்யும்படி மனிதர்களை தயார்படுத்துவது எளிதானதில்லை. சடங்குகளை பொருத்தவரை இருக்கும் பிரச்சனை என்னவென்றால், சமூகத்தில் உண்மைத்தன்மை குறைந்திடும்போது, எல்லா சடங்குகளிலும் ஊழல் வந்துவிடும். மனிதர்களுக்குள்ளே உண்மைத்தன்மையும், தன் வாக்கை காப்பாற்றும் அசைவற்ற உறுதியும் சிறப்பாக இருந்த காலத்தில்தான் இந்த சடங்குகளெல்லாம் உருவாக்கப்பட்டன. அதனால் இதை தவறாக பயன்படுத்துவதற்கான வாய்ப்பே இல்லாத நிலை இருந்தது. ஆனால், பொதுவாகவே சமுதாயத்தில் உண்மைத்தன்மை குறைந்து போயிருக்கும் நிலையில், இந்த சடங்குகளை தவறாக பயன்படுத்தும் வாய்ப்பிருக்கிறது. அதனால் எல்லா சடங்குகளையும் சந்தேகத்தோடு பார்ப்பார்கள்.

இப்போது, இறந்த உயிர்களை எப்படி கையாளவேண்டும் என்று யாருக்காவது நான் கற்றுக்கொடுத்தால், உடனே அவர்கள் அதை தங்களுடைய நண்பர்களுக்கு செய்துகாட்ட விரும்பலாம் - இறந்துபோனவரை எழுந்து ஆட வைப்பது எப்படி அல்லது வேறு ஏதாவது வித்தை செய்வது எப்படி - இதுபோல காட்டிக்கொள்ள விரும்பலாம். இல்லாவிட்டால், அவர் இறந்தவருடன் தொடர்பு ஏற்படுத்தும் "ஊடகம்" ஆகிட விரும்பலாம். அது மட்டுமில்லை, "இப்படிப்பட்ட விஷயங்களை செய்ய விருப்பமில்லை" என்ற தெளிவுடன் நீங்கள் இருந்தாலும், யாராவது இறந்துபோன போது மற்றவர்கள் உங்களுடைய மனத்தை மாற்ற பார்க்கலாம். அவர்கள் உங்கள் கால்களில் வந்து விழுந்து, "தயவுசெய்து ஏதாவது செய்யுங்கள்! என்னுடைய அப்பாவிடம் ஒரே ஒரு விஷயம் சொல்லவேண்டும். பத்து வருஷமாக இதைச் சொல்லவேண்டும் என்று நினைத்தேன். ஆனால் நான் சொல்லவில்லை. இப்போது அதை சொல்லிவிட வேண்டும்," என்று கேட்பார்கள். அவர்கள் உங்களிடம் அழுது கெஞ்சினார்கள் என்பதற்காக நீங்களும் இறந்தவருடன் ஒரு கான்ஃபரன்ஸ் கால் ஏற்பாடு செய்தீர்கள் என்றால், அவ்வளவுதான், எல்லாம் முடிந்துபோனது. இதுவும் முறையற்ற

விதத்தில் பயன்படுத்துவதுதான். சடங்குகள் செய்வது எப்படி என்று நான் உங்களுக்கு கற்றுக்கொடுத்தால், அப்போது உங்களால் இப்படியெல்லாம் செய்ய முடியாது. நீங்கள் சும்மா சடங்குகளை செய்துவிட்டு வீட்டிற்கு போய்விடலாம். “என்ன தேவையோ அதைத் தவிர ஒரு விஷயம்கூட அதிகமாக செய்யமாட்டேன்,” என்ற பொறுப்புணர்வோடு இருக்கும் மனிதர்களை நாம் உருவாக்கினால் மட்டுமே இதுபோன்ற விஷயங்களை நாம் செய்யமுடியும். ஆனால் சடங்குகள் இன்றைய உலகத்தில் பொருந்தாமல் போக வாய்ப்பிருக்கிறது.

சில கலாச்சாரங்களில் பாரம்பரியமாகவே சுடுகாட்டிற்குள் நுழைவதற்கும், இந்த சடங்குகளை செய்வதற்கும் பெண்களுக்கு அனுமதி கிடையாது. தேவையில்லாத சில சக்திகளின் தாக்கத்திற்கு அவர்கள் ஆளாக முடியும், அதனால்தான். ஆனால் நீங்கள் செய்வது வெறும் பெயருக்கான சடங்குதான் என்றால், அதை பெண்களும் செய்யமுடியும். நிஜமாகவே அங்கு ஏதோ நிகழ்கிறது என்ற விதத்தில் செய்யப்பட்டால், ஒரு உடலற்ற உயிரை அங்கே கையாள்கிறீர்கள் என்றால், அப்போது அதில் பெண்களை ஈடுபடுத்துவது கொஞ்சம் பிரச்சனையாக இருக்கும். இதற்குப் பல்வேறு காரணங்கள் இருக்கின்றன. ஒரு காரணம் என்னவென்றால், அந்த காலங்களில், தன் வாழ்நாளில் குறைந்தது எட்டிலிருந்து பன்னிரண்டு முறையாவது ஒரு பெண் கர்ப்பமாக இருப்பாள். அதனால் பெரும்பாலான நேரம், அவள் கர்ப்ப நிலையிலோ, பாலூட்டும் நிலையிலோ இருக்க நேரிடும். அப்படிப்பட்ட நேரங்களில், குறிப்பாக கர்ப்பமாக இருக்கும்போது, அவள் அந்த மாதிரி சூழ்நிலைகளில் இருக்கவே கூடாது. இன்றுகூட இதை கடைப்பிடிக்கிறார்கள் - இறந்தவர்களுக்கான சடங்குகள் செய்யப்பட்டால் கர்ப்பிணிப் பெண்களை அங்கு இருக்க அனுமதிக்க மாட்டார்கள். அந்தப் பெண் இனி கர்ப்பம் தரிக்கும் நிலையிலோ, பாலூட்டும் நிலையிலோ இல்லாவிட்டாலும், அவளுக்கு மாதவிடாய் சுழற்சி இருக்கக்கூடும். அதனால் அவள் தாக்கத்திற்கு ஆளாக முடியும். இதனால்தான் பெண்களை சுடுகாட்டிலிருந்து தள்ளியிருக்கும்படி வைத்திருந்தார்கள். இந்த மாதிரி விஷயங்களிலிருந்து அந்தப் பெண் விடுபட்டவளாக இருந்தால், அப்போது அவள் இந்தச் சடங்குகளை செய்வதில் எந்தப் பிரச்சனையும் இல்லை.

இந்த மாதிரி விஷயங்களை செய்யும்போது ஆணைவிட பெண் அதிகமான கவனம் எடுத்துக்கொள்ள வேண்டும். ஒருவிதத்தில், ஆணுடைய உடலின் அமைப்பு உறுதியான தன்மையில் இருக்கிறது; பெண்ணுடைய உடலின் அமைப்பு சில காலகட்டங்களை அனுபவிக்க நேர்கிறது. அதனால், இந்த விஷயங்களைப் பற்றி அவள் அதிக கவனம் எடுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. உடல்ரீதியாக ஆணுக்கும் பெண்ணுக்கும் வெவ்வேறு விதமான பொறுப்புகள் இருக்கின்றன. அதைப் புரிந்துகொண்டு மகிழ்ச்சி

அடைவதற்கு பதிலாக, நாம் ஒவ்வொரு சின்ன வித்தியாசத்தையும் ஒரு பாகுபாடாக மாற்றிவிடுகிறோம் - உலகில் இப்படிப்பட்ட பாரபட்ச மனப்பான்மையை உருவாக்கிவிட்டோம். இதன் காரணமாக, பாலினங்களுக்குள் மிகப்பெரிய பாகுபாடு ஏற்பட்டிருக்கிறது. மற்றபடி, இந்த இரண்டு அம்சங்களும் ஒன்றை மற்றொன்று முழுமையாக்கும் தன்மை கொண்டதுதான், அது அப்படித்தான் இருக்கவேண்டும். ஒருவிதமான ஒழுங்குமுறை பராமரிக்கப்பட வேண்டுமென்றால், எந்த காரணத்திற்காகவும் அந்த ஒழுங்குமுறையை நாம் தளர்த்திவிடக்கூடாது. அப்படியிருந்தால், இதைப் பெண்களும் செய்யமுடியும். சொல்லப்போனால், தங்களை ஒழுங்குபடுத்திக்கொள்ள, ஆண்களைவிட பெண்களுக்கு வழிகாட்டுவது சுலபமானது. இது எல்லோருக்கும் தெரிந்ததுதான். பெண்களுக்கு இயற்கையிலேயே இனப்பெருக்கத்திற்கான பொறுப்பு அமைந்திருக்கிறது. அதை நிறைவேற்றிட, தங்களை பாதுகாப்பாக வைத்துக்கொள்ள, பிழைத்திருக்கும் உணர்வு பெண்களுக்குள் ஆழமாக இருக்கிறது. இந்தக் காரணத்தால், ஒழுங்குமுறையை உள்வாங்கிக் கொள்ளும் திறன் பெண்களுக்கு இயற்கையிலேயே இருக்கிறது.

நமது நாட்டில் இப்படிப்பட்ட விஷயங்களை செய்வதற்கு தேவையான எல்லாமே இருந்தது. ஆனால் இப்போது நமக்கு ஆங்கிலக்கல்வி கிடைத்துவிட்டதால் இதையெல்லாம் பற்றி நமக்கு வெட்கம் ஏற்படுகிறது. இதுபோன்ற சில விஷயங்களை கற்றுக்கொள்ளும் திறன் கொண்ட மனிதர்களை ஈஷாவில் உருவாக்க விரும்புகிறோம். அதோடு, ஒருசில குழந்தைகளையும் பராமரித்து கல்வி அளித்து வருகிறோம் - அவர்கள் சரியான பாரம்பரியத்தில் வளர்ந்து வருவார்கள் என்ற நம்பிக்கையில் இருக்கிறோம். அப்போது வாழ்க்கைக்கு இன்றியமையாத சில எளிமையான விஷயங்களை அவர்களுக்கு கற்றுக்கொடுக்கலாம். அவர்கள் என்ஜினியராகவோ டாக்டராகவோ ஆகாமல் இருக்கலாம். ஆனால் இம்மாதிரி திறமைகளை பெறும்படி வளர்வார்கள் என்று நம்புகிறோம். இதுபோன்ற சேவைகளை செய்திட, சில தியான அன்பர்களுக்கும் பயிற்சி அளிக்கும் செயலில் ஈடுபட்டிருக்கிறோம். இதை பரிமாறுவதில் உங்களுக்கு விருப்பம் இருந்தால், இந்த விஷயங்களை முறைப்படி செய்திட உங்களுக்கு நாம் பயிற்சி அளிக்கலாம். ஆனால், நீங்கள் இதை ஒருபோதும் உங்களுடைய தொழிலாக ஆக்கிவிடக் கூடாது. இது எப்போதும் ஒரு சேவையாகத்தான் வழங்கப்பட வேண்டும். ஒருவர் தன்னுடைய உடலை இழந்துவிட்ட பிறகு, அவர் முற்றிலும் உதவியற்றவராக இருக்கிறார்; அவருக்கு உதவி தேவை. அவருக்கு உதவுவதும் சாத்தியம்தான் - ஆனால், ஊழலின் கறைபடிந்த கைகள் உதவக்கூடாது. இந்த உதவியை செய்ய அக்கறையான ஒருவர் வேண்டும், தேவையான புத்தி உடையவர் வேண்டும்.

## சிசுக்களின் மரணம்

சிசுக்களின் மரணம் பெரியவர்களின் மரணத்திலிருந்து வித்தியாசமானதா? குறிப்பிட்ட விதத்தில் பார்த்தால் "ஆமாம்" என்று சொல்லலாம். ஒரு குழந்தையில் உயிர் வெளிப்படும் விதமும், பெரியவர்களில் உயிர் வெளிப்படும் விதமும் வித்தியாசமானது. தாய் குழந்தைக்கு பாலூட்டும் காலத்துக்குள்ளேயே அது இறந்துவிட்டால் அல்லது பிறந்து நாற்பது மாதங்களுக்குள் இறந்துவிட்டால், ஒருவிதத்தில் அந்த உயிர் இன்னும் முழுமையாக நிலைபெற்ற உயிராக இல்லை. அதனால், இது பெரியவர்களின் மரணத்தைப் போன்றது கிடையாது. இப்படிப்பட்ட நிகழ்வுகளில், பொதுவாகவே அந்த பெற்றவர்களும் குழந்தையின் மரணத்திலிருந்து மிகவும் சீக்கிரத்திலேயே மீண்டுவிடுவார்கள். உண்மையில் இது கொஞ்சம் வினோதமானதுதான். ஒரு குழந்தை நான்கு வயதுக்குப் பிறகு இறந்தால், அப்போது அவர்களுடைய வலியும் துன்பமும் அதிகமானதாக இருக்கிறது. இப்படி சொன்னால் மனிதர்கள் மிகவும் வருத்தம் அடைவார்கள் என்பது வேறு விஷயம். ஆனால் கவனித்துப் பார்த்தால், சிசுக்களின் மரணத்தில் தாக்கம் மிகவும் குறைவாகவே இருக்கிறது. பெற்றவர்களின் கவனத்தில்கூட, இன்னும் முழுமையாக நிலைபெறாத உயிராகவே அது இருக்கிறது. அது இன்னும் உருபெற்றுக் கொண்டிருக்கும் செயலில்தான் இருக்கிறது.

உங்களுடைய குழந்தை சிசுவாக இருக்கும் சமயத்தில்தான், அந்தக் குழந்தையோடு உங்களுடைய தொடர்பு அதிகப்படியாக இருக்கிறது. இந்த குழந்தைக்கு நான்கு வயது ஆனபிறகு, அது இங்கும் அங்கும் ஓட ஆரம்பிக்கிறது. அவர்களைப் பிடித்துக்கொள்ள முடியாது, அவர்கள் எல்லாப் பக்கமும் போக விரும்புவார்கள். அவர்களுக்கு இந்த உலகத்தைப் பார்க்கவேண்டும் என்று இருக்கிறது. நான்கு வயது வரைக்கும் அவர்கள் உங்களோடுதான் அதிகமான நேரம் இருக்கிறார்கள், உடலளவில் உங்களோடு நெருக்கமாக இருக்கிறார்கள். அப்படி இருந்தும், உங்களுக்கு அவர்களுடன் இருக்கும் பிணைப்பு அந்தளவுக்கு உறுதியாக இருப்பதில்லை. ஏனென்றால், அவர்களுக்கும் அவர்களுடைய உடலுக்கும் இருக்கும் பிணைப்பே அந்தளவுக்கு உறுதியாக இல்லை. அதனால்தான் உங்களுக்குள்ளும் அதே விஷயம் உறுதியாக ஏற்படவில்லை. வாழ்க்கையை நெருக்கமாக கவனித்தால் இது புரிந்திடும். இன்றைக்கெல்லாம் உதவுவதற்கு நிறைய மருத்துவ வசதிகள் இருக்கின்றன. ஆனால், கொஞ்ச காலத்திற்கு முன்புவரை, நான்கு வயதை அடைவதற்கு முன்பாகவே, ஏராளமான குழந்தைகள் எந்த நோயும் இல்லாமல் இறந்து போவார்கள். உயிர் இன்னும் முழுமையாக நிலைபெறவில்லை என்பதால் சும்மா அப்படியே இறந்துபோவார்கள்.

இப்படி ஏற்படும்போது, அந்தப் பெற்றோர்கள் என்னவோ இழப்பை உணர்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு அவ்வளவாக பாதிப்பு ஏற்படுவதில்லை.

குழந்தைகளில், நாற்பதிலிருந்து நாற்பத்தெட்டு மாதங்கள் வரைக்கும், இந்த ஜென்மத்திற்கான பிராரப்த கர்மா இன்னும் நிர்ணயம் செய்யப்படாமலேயே இருக்கிறது. உயிர்த்தன்மை இன்னும் முடிவெடுக்காத நிலையில் இருக்கிறது. அதனால்தான் நம் பாரம்பரியத்தில், இந்த காலகட்டத்தில் என்ன செய்யவேண்டும் என்பதைப் பற்றி அந்தளவுக்கு வலியுறுத்தி சொல்கிறார்கள். கர்ப்பம் அடைவதற்கு முன்பாக செய்யவேண்டியது, கர்ப்ப நேரத்தில் செய்யவேண்டியது, பிறப்பின்போது செய்யவேண்டியது, அதற்குப் பிறகு செய்யவேண்டியது - இப்படி எல்லாவற்றிற்கும் முழுமையாக வரையறுக்கப்பட்ட சடங்குமுறைகள் இருக்கின்றன. இப்படி செய்வதால், அந்த உயிருக்கு இந்த ஜென்மத்தில் அதிகபட்சமான பிராரப்த கர்மா நிச்சயமாக கிடைத்திடும்படி செய்கிறார்கள். அதிகப்பட்ச பிராரப்த கர்மாவை எடுப்பதற்கான நோக்கம் என்ன? அந்த உயிருக்கு அதிகளவில் துன்பம் ஏற்படவேண்டும் என்பதற்காக இப்படி செய்யவில்லை. அந்த உயிர் இன்னும் பெரிய அளவிலான குமிழியாக இருக்கவேண்டும், அதனால் அந்த உயிருக்கான சாத்தியங்களும் அதிகமாக இருக்கும் என்பதுதான் நோக்கம். அதேசமயம், அதிகமான சாத்தியங்கள் என்றால், அதிகமான சவால்கள் இருக்கும் என்றும் அர்த்தம் - ஒருவேளை அது அதிகமான பாதிப்பாகவும் மாறிவிட வாய்ப்பிருக்கிறது. ஒரு உயிர் அதிகமான சாத்தியங்களோடு வரும்போது, அதிகமான விஷயங்கள் தவறாக போவதற்கும் வாய்ப்புகள் இருக்கும், அந்த அபாயம் இருக்கத்தான் செய்யும். இந்த உயிர் உறுதியாக காலூன்றிவிட்டால், அது அதிகமான விஷயங்களை எடுத்துக்கொள்கிறது. அது அந்தளவுக்கு காலூன்றவில்லை என்றால், அப்போது குறைவான விஷயங்களை எடுத்துக்கொண்டு சமாளிக்கிறது. தன்னால் முடிந்தளவுக்கு எளிமையாகவும் அளவாகவும் வைத்துக்கொள்ளும். உயிரின் இயல்பு இதுதான். உள்நிலையிலும் இப்படித்தான் இருக்கும்.

இப்படி, பிறந்து நாற்பத்தெட்டு மாதங்களுக்குள் அந்த உயிர் தேவையான அளவுக்கு உறுதியாக நிலைபெற்று, அதற்கேற்ற திறனோடு அமைந்தது என்றால், அப்போது அது அதிகளவில் பிராரப்த கர்மாவை தேர்ந்தெடுக்கும். எப்போதாவது ஒருமுறை, இப்படி தேர்ந்தெடுப்பது இயற்கையில் தானாகவே ஏற்படும். ஆனால் பொதுவாக, அந்த உயிர் பெரிய அளவிலான சாத்தியங்களை எடுத்துக்கொள்வதற்கு தேவையான சூழ்நிலைகளை உருவாக்கவே விரும்புவார்கள். அதாவது, அந்த சோப்பு நுரையில் ஊதப்படும் குமிழி பெரிதாக அமையும்படி சூழ்நிலையை உருவாக்குவார்கள். இன்றைய உலகில், சாத்தியம் என்றாலே எவ்வளவு

பணம் சம்பாதிப்பது என்றுதான் புரிந்துகொள்கிறார்கள். பெரியளவில் இருக்கும் சாத்தியம் என்றால், அவர் சமுதாயத்தின் பார்வையில் வெற்றிகரமாக இருக்கவேண்டும் என்று அவசியமில்லை. ஏதோ ஒருவிதத்தில், அந்த உயிரை அலட்சியப்படுத்த முடியாதபடி அந்த வாழ்க்கை அமையும். பெரும்பாலான உயிர்கள் கண்டுகொள்ளப் படுவதே கிடையாது. அவர்கள் இருந்தார்களா, இல்லையா என்பதைக்கூட யாரும் கவனித்திருக்க வாய்ப்பில்லை. ஆனால் இப்போது குமிழி பெரிதாக இருக்கும்போது - அவர் பாலைவனத்தில் இருந்தாலும், காட்டில் இருந்தாலும், கிராமத்தில் இருந்தாலும், நகரத்தில் இருந்தாலும் - அவர் எங்கே இருந்தாலும் ஏதோ ஒருவிதத்தில் பெரிய குமிழியாக இருப்பதால், அவர் கவனிக்கப்படுவார். உலகம் முழுவதுமே கவனிக்கும் அளவுக்கு அது பெரிதானதா? அது நமக்குத் தெரியாது. ஆனால், அவர் இன்னும் கொஞ்சம் பெரிய குமிழியாக ஆனால், அது இன்னும் பெரிய சாத்தியமாக அமைகிறது.

சிசுவாக இருக்கும் காலத்தில், உயிர் இன்னும் தன்னை எப்படி வடிவமைத்துக்கொள்ள வேண்டும் என்று முடிவெடுக்காத நிலையில் இருக்கிறது. பொதுவாகவே அதனால்தான், பெரும்பாலானவர்களுக்கு நான்கு வயதுக்கு முன்னால் நிகழ்ந்தது எதுவும் நினைவில் இருப்பது இல்லை. அந்த சமயத்தில், உயிர் இன்னும் வாய்ப்புகளை ஆராய்ந்து கொண்டிருக்கிறது - விரிவடைய வேண்டுமா அல்லது சுருங்கிட வேண்டுமா, என்ன செய்யவேண்டும், எந்த அளவுக்கு செய்யவேண்டும் என்று ஆராய்ந்து கொண்டிருக்கிறது. மிகவும் பயமுறுத்தும்படியான கஷ்டமான சூழ்நிலை இருந்ததென்றால், அது சுருங்கிக்கொள்ள வாய்ப்பிருக்கிறது. அப்போது பிராரப்த கர்மா குறைவாக இருப்பதே, ஆட்டம் காணாத மேடையில் நிற்பதே தனக்கு பாதுகாப்பானது என்று உணர்கிறது. அப்போது அது தன்னை விரிவுபடுத்திக்கொள்ள விரும்புவதில்லை. இதனால்தான், நீங்கள் ஒரு குழந்தையைப் பார்க்க நேரிட்டால், உங்களுக்கு என்னதான் பிரச்சனைகள் இருந்தாலும், எப்போதுமே குழந்தையைப் பார்த்து சிரிக்க வேண்டும், அந்தக் குழந்தையோடு அன்பாக நடந்துகொள்ள வேண்டும் என்று வலியுறுத்தி சொன்னார்கள். எல்லா கலாச்சாரங்களிலும் இப்படித்தான் சொன்னார்கள். மிகவும் விலகியிருக்கும் பழங்குடி கலாச்சாரங்களில் கூட இந்த விழிப்புணர்வு இருக்கிறது. ஏனென்றால், அந்த உயிர் தன்னால் முடிந்தளவு விரிவடைவதற்கு உகந்த சௌகரியத்தை நாம் உருவாக்கவேண்டும். அந்த சூழ்நிலையில் துளியளவு உகந்ததாக இல்லாமல் போனாலும், அது தன்னை சுருக்கிக்கொள்ள முடிவெடுக்கலாம். அப்படி நிகழ்வதை நாம் விரும்பவில்லை. இந்த முடிவுகளை எல்லாம் யாரும் தெரிந்தே செய்வதில்லை. உயிருக்கே உரிய விவேகம்தான் இந்த முடிவைசெய்கிறது.

கொஞ்சம் அதிக வயதுடைய குழந்தைகளில், சில சமயம் வேறுவிதமான மரணம் ஏற்படுகிறது. சில குழந்தைகளில் சிலசமயம், இந்த ஜென்மத்திற்கான பிராரப்த கர்மா எவ்வளவு என்பது சரியாக முடிவு செய்யப்படவில்லை - அதனால் அவர்கள் எதிர்பாராத விதத்தில் இறந்து போகிறார்கள். நல்ல ஆரோக்கியத்துடன் இருக்கும் குழந்தைகள் சட்டென்று அப்படியே இறந்துவிடுவார்கள். அசாதாரணமான புத்திசாலித்தனத்துடன், மக்களின் புரிதலுக்கு முற்றிலும் அப்பாற்பட்ட விஷயங்களை செய்யும் குழந்தைகளில், ஆறு வயதுக்கு முன்பாகவே இறந்துபோகும் போக்கு ஏற்படலாம். அவர்களுடைய பிராரப்த கர்மா சரியாக நிர்ணயிக்கப்படாததே அதற்கு காரணம். ஏகப்பட்ட பிறவிகளின் தகவல்கள் அவர்களுக்குள் வெடித்து வெளிப்பட ஆரம்பிக்கிறது. பொதுவாக அப்படி ஏற்பட்டால், அதை கையாள்வதற்கு ஒருவருக்கு மிகவும் ஆழமான விழிப்புணர்வும், பற்றில்லாத தன்மையும் அவசியம். ஆனால், ஒரு குழந்தைக்கு அப்படி ஏற்படும்போது இந்த உடலால் அதை தாக்குப்பிடிக்க முடிவதில்லை, அதனால் உடல் விழுந்துவிடுகிறது. இந்த சில காரணங்களால், ஒரு சிசுவுக்கு ஏற்படும் மரணம் பெரியவர்களின் மரணத்தைவிட கொஞ்சம் வித்தியாசமாக இருக்கிறது.

## பெற்றோருக்கும் குழந்தைக்கும் இறந்த பிறகும் தொடர்பு இருக்குமா?

நம் தேசத்தில், இறக்கும்போது தங்களுடைய குழந்தைகள் தங்களை சுற்றி இருக்கவேண்டும் என்று விரும்புவார்கள். குறிப்பாக தங்களுடைய மகன்கள் பக்கத்தில் இருக்கவேண்டும் என்று விரும்புவார்கள். நம் நாட்டில் ஆண் குழந்தை வேண்டும் என்று பெற்றோர்கள் தவிப்பதற்கு காரணம் இதுதான். ஏனென்றால், குழந்தைகளுக்கும் பெற்றோர்களுக்கும் இடையே ஒருவிதமான உயிர்த்தொடர்பு இருக்கிறது. இதைப் பயன்படுத்தி பெற்றோர்களுக்கு சடங்குகள் செய்யும்போது, அது மிகவும் பயனுள்ளதாக அமையமுடியும். இந்த விஷயத்தில் மகள்களும் பயன் தரும்படி இருக்கமுடியும். ஆனால் இந்த செயலை செய்வதற்கு அவர்கள் ஆண் குழந்தைகளையே அதிகமாக சார்ந்திருந்தார்கள். அதற்கு ஒரு காரணம் இருக்கிறது. அந்த காலத்தில் பெரும்பாலான நேரங்களில், அவர்கள் இறக்கும்போது அவர்களுடைய மகன் மட்டுமே பக்கத்தில் இருப்பான். மகளுக்கு வயது வந்தவுடன், அவள் கல்யாணம் செய்துகொண்டு இன்னொருவர் வீட்டிற்கு போய்விடுவாள். அவள் தூரத்தில் இருந்ததால், பெற்றோர்கள் இறந்தவுடன் அவளால் உடனே வந்துசேர முடியாமல் இருக்கலாம். அவள் இன்னொரு கண்டத்தில் வாழ்ந்து கொண்டிருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. அவள் 200 கிலோமீட்டர்

தூரத்தில் இருந்தாலும்கூட, அவள் வந்து சேர்வதற்குள் உடலை எரித்து முடித்திருப்பார்கள். அது மட்டுமில்லை, அவளுக்கும் குடும்பம், கணவன், குழந்தைகள் என்று எல்லாம் இருக்கும். அதையெல்லாம் அப்படியே விட்டுவிட்டு சட்டென்று போகமுடியாது. தான் இல்லாத சமயத்தில் எல்லாம் சரியாக இயங்குவதற்கு, அவள் ஏற்பாடுகள் செய்ய வேண்டியிருக்கும். அதோடு அவளால் தனியாகவும் பயணிக்க முடியாது - வழியில் காடுகள் இருக்கும், அதனால் யாராவது துணைக்கு வரவேண்டும். இந்த ஏற்பாடுகளை எல்லாம் செய்வதற்கு ஓரளவுக்கு நேரம் எடுக்கும், அதனால் அவள் சரியான நேரத்திற்கு வந்துசேர முடியாது. மகன் என்றால், அவன் பெற்றோர்களோடுதான் வாழ்கிறான். அதனால் சடங்குகளை உடனே செய்ய சௌகரியமாக இருக்கிறது. அதனால்தான் இறுதிச் சடங்கை செய்வதற்கு மகன் கூடவே இருக்கவேண்டும் என்று சொன்னார்கள். மகள்கள் பன்னிரண்டாவது நாளுக்குள் வந்தால்போதும் என்று சொன்னார்கள்.

சரி, இறப்பின் சமயத்தில் பயன்படும்படி இருக்கும் இந்த உறவின் தன்மை என்ன? பெற்றோர்களுக்கும் குழந்தைகளுக்கும் இருக்கும் தொடர்பின் தன்மை என்ன? பொதுவாக, மனிதர்கள் ஒருவருக்கொருவர் வைத்திருக்கும் தொடர்புகள் உடல்ரீதியானவை அல்லது மனரீதியானவை அல்லது உணர்வுரீதியானவை - உறவுகள் ஒருபோதும் அதற்கு அப்பாற்பட்டு போவதே இல்லை. ஆனால் ஒருவர் இறக்கும்போது, அதாவது தன்னுடைய உடலை விடும்போது, இதெல்லாமே போய்விட்டது. மனம் போய்விட்டது, உணர்வுகளெல்லாம் போய்விட்டது, உடலோ நிச்சயமாக போய்விட்டது - இப்படி, உங்களுடையது என்று நீங்கள் நினைத்துக்கொண்டு இருந்ததெல்லாம் போய்விட்டது. அதனால், அந்த குழந்தைகளும் இப்போது மற்ற எல்லாரையும் போல உங்களுக்கு அறிமுகமில்லாதவர்கள்தான். அதேசமயம், ஒரு குழந்தையை பெற்றவுடன், நீங்கள் என்பதில் ஒரு சிறிய இடத்தை அந்த உயிர் வகித்துக்கொள்கிறது - உங்கள் குழந்தை என்று நீங்கள் குறிப்பிடும் அந்த உயிருக்கு நீங்கள் ஒரு உடலை வழங்கியிருக்கிறீர்கள் அல்லவா? ஒரு குழந்தைக்கும் பெற்றவருக்கும் இடையே இப்படி ஒரு தொடர்பு இருப்பதால் பெற்றோர்கள் இறந்தபிறகு அவர்களுக்கு உதவியாக சில விஷயங்களை செய்யமுடிகிறது. பெற்றோர்கள் இறந்தபிறகு குழந்தைகள் சரியான விஷயங்களை செய்தால், இந்தத் தொடர்பின் மூலம், தன்னைப் பெற்றவர் முக்தி அடையும்படி கூட செய்யமுடியும். வாழும்போது தங்களைப் பற்றி எதையும் செய்துகொள்ளாமல், துளியும் விழிப்புணர்வு இல்லாதபடி வாழ்ந்தவர்கள், தங்களை விடுவிக்க அவர்களுடைய குழந்தைகளை சார்ந்திருந்தார்கள், இதுவே ஒரு பெரிய பாரம்பரியமாகிப் போனது.

அதேசமயம், இந்த முறையை திருப்பிப் போட்டால் அது வேலை செய்யாது. அதாவது, இறந்துபோன குழந்தையை விடுவிக்க பெற்றோர்களை பயன்படுத்திட முடியாது. நாம் ஏற்கனவே பார்த்ததுபோல, நான்கு வயதுக்கு முன்பாகவே இறக்கும் குழந்தைகளின் மரணம் பெரியவர்களின் மரணத்தைப்போல் இருப்பதில்லை. அந்த சமயத்தில் உயிர் இன்னும் முழுமையாக நிலைபெற்று அமையவில்லை. குழந்தைக்கு நாற்பதிலிருந்து நாற்பத்தெட்டு மாதங்கள் ஆனபிறகு, உடலளவில், உங்களுக்கும் குழந்தைக்கும் இருக்கும் தொடர்பு ஆச்சரியப்படுத்தும் விதத்தில் அதிகரிக்கிறது. அதோடு உங்கள் உடலிலேயே இது ஏற்படுகிறது. பெரும்பாலானவர்கள் இதை அறிந்துகொள்வதே கிடையாது. குழந்தைக்கு நான்கு வயது ஆகும்வரை, தங்களுக்குள் ஏதோ நடப்பதை பெற்றோர்களால் அனுபவத்தில் உணரமுடிகிறது. நான்கு வயது ஆனபிறகு, குழந்தை சம்பந்தப்பட்ட மற்ற விஷயங்களில் மிகவும் ஈடுபட்டுப் போகிறார்கள் - அவன் எங்கே போகிறான், எங்கே இருக்கிறான், அவனுடைய ஸ்கூல் அட்மிஷன் - இப்படிப் பல விஷயங்களில் ஈடுபட்டுப் போவதால், அவர்கள் இந்த அனுபவத்தை தவறவிட்டுவிடுகிறார்கள். இல்லாவிட்டால் அந்த சமயத்தில், தங்களுக்குள் ஒரு நெருக்கம் உருவாகியிருப்பதை அவர்களால் கவனிக்க முடியும். ஏனென்றால், அந்த குழந்தையின் உடலில் அந்த உயிருடன் ஒரு நெருக்கம் ஏற்பட்டிருக்கிறது. இப்படி ஏற்படும்போது உங்களுக்குள் ஒரு இயல்புநிலை வருகிறது - இப்போது, அந்த குழந்தை உங்களுடைய ஒரு பாகமாக ஆகிவிடுவதால், நீங்கள் முயற்சிசெய்து அதை பிடித்துக்கொள்ள வேண்டியதில்லை, பிடிப்பு இயல்பாகவே ஏற்படுகிறது.

உங்கள் குழந்தைக்கு நீங்கள் உடலை மட்டும்தான் அளிக்கிறீர்கள்; ஒரு உயிரை ஒன்றும் உங்களால் உருவாக்க முடியாது - இதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். நீங்கள் அளித்த உடலோடு அந்த உயிருக்கு ஒரு பிடிப்பு ஏற்பட்டவுடன், உங்களுக்குள்ளும் ஒரு பிடிப்பு ஏற்படுகிறது. உங்களுக்குள் ஒரு இடத்தை அது வகித்துக்கொள்கிறது. இதனால்தான், ஒருவருடைய சக்தியை கவனித்துப் பார்த்தாலே, அவருக்கு குழந்தைகள் இருக்கிறதா, இல்லையா என்று நம்மால் சொல்லமுடியும்.

இந்த அடிப்படையில்தான் நம் நாட்டில், சில ஜோசியர்களால் சில சமயங்களில், உங்களுக்கு எவ்வளவு குழந்தைகள் இருக்கிறது, அவர்கள் உயிருடன் இருக்கிறார்களா இல்லையா என்றெல்லாம் சொல்லமுடிகிறது. உங்களுடைய குழந்தைகளைப் பற்றி, அவர்களுடைய குணங்களைப் பற்றி, அவர்களுடைய பெயர் என்ன என்றெல்லாம் எல்லாத்தையும் சுருக்கமாக சொல்லிவிடுவார்கள். ஏனென்றால், உங்களுடைய குழந்தைகள் உங்களுக்குள் ஒரு குறிப்பிட்ட இடத்தை

எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். நன்றாக கவனித்தால், ஒருவருக்குள் அப்படி இருப்பதை தெளிவாக பார்க்கமுடியும்.

இப்படி, உடல்ரீதியாக இருக்கும் இந்த தொடர்பு குழந்தைக்கு இருபத்தொரு வயது ஆகும்வரை உறுதியாக இருக்கிறது. அதற்குப் பிறகு, அது மறுபடியும் கரைந்துப்போக ஆரம்பிக்கிறது. இதனால்தான், ஒரு குழந்தை வளர்ந்து இருபத்தொரு வயதை நெருங்கும் காலத்தில் அவர்களைப் பார்த்தால், அவர்கள் அறிமுகமில்லாதவர்கள் போல் தோன்றுவார்கள். நீங்கள்தான் அவர்களைப் பெற்றெடுத்தீர்கள் என்று உங்களால் நம்பவே முடியாது. "இவர்கள் என்னுடைய குழந்தைகள்தானா?" என்று வியப்பாக தோன்றும். "நான் வளர்த்து வந்த குட்டிக்குழந்தை இதுதானா?" என்று தோன்றும். அவர்கள் என்ன செய்கிறார்கள் என்று உங்களால் புரிந்துகொள்ளவே முடியாது. ஏனென்றால், அவர்களுக்குள் ஒரு இடத்தை நீங்கள் எடுக்கவில்லை; ஆனால், உங்களுக்குள் அவர்கள் ஒரு இடத்தை எடுத்திருக்கிறார்கள். இது இயற்கையாக அமைந்திருக்கும் ஒரு அழகான முறை அல்லவா? - குழந்தையை அக்கறையாக கவனித்துக்கொள்வது, அதை வளர்ப்பது, பிறகு தேவையானபோது அந்த குழந்தையை உங்களிடமிருந்து விடுவிக்கும் திறனுடன் இருப்பது - இது மிகவும் அழகானது.

யாராவது என்னிடம் வந்து, "என் குழந்தைகளுக்கு ஆசி வழங்குங்கள்!" என்று சொன்னால், நான், "அவர்களுக்கு என்ன வயது?" என்று கேட்பேன். அவர்கள் இருபத்தொரு வயதுக்கு கீழே இருந்தால், நிஜமாகவே அவர்களுக்கு ஆசி வழங்குவேன். ஏனென்றால், அந்த வயதுக்கு கீழே இருந்தால் அவர்களுடைய அம்மாவுக்கோ, அப்பாவுக்கோ ஆசி வழங்குவதன் மூலம், அதன் தாக்கம் அந்த குழந்தைகளின் மீது ஆழமாக ஏற்படும்படி செய்யமுடியும். ஆனால் இருபத்தொரு வயதுக்கு மேலே இருந்தால், பெற்றோர்களோடு சும்மா கொஞ்ச நேரம் பொதுவாக பேசிவிட்டு அவர்களை அனுப்பிவிடுவோம். குழந்தைகளுக்காக அவர்களை ஆசீர்வதிப்பதில் எந்த பயனும் இல்லை, அந்த குழந்தைகளே நேரில் வரவேண்டியிருக்கும்.

இதனால்தான், உங்களுடைய பெற்றோர்கள் இறந்துபோனால், உங்கள் மூலமாக அவர்களுக்கு ஏதாவது செய்யமுடிகிறது. அதே சமயம், உங்களுடைய குழந்தைகள் இறந்துபோனால், அவர்களுக்கு இன்னும் ஏதாவது செய்திட உங்களை பயன்படுத்த முடியாது. ஏனென்றால், அவர்களுக்குள் அந்த சிறிய இடத்தை நீங்கள் வகிக்கவில்லை. எப்போதுமே இப்படித்தான். எதிர்கால சந்ததி முன்னோர்களுக்குள் சிறிதளவு இடத்தை எடுத்துக்கொள்கிறார்கள். ஆனால் முன்னோர்கள் எதிர்கால சந்ததிக்குள் எந்த இடத்தையும் எடுத்துக்கொள்வதில்லை,

அவர்களால் எடுத்துக்கொள்ளவும் முடியாது. இயற்கையிலேயே இப்படித்தான் அமைந்திருக்கிறது.

அதனால், ஒருவருடைய குழந்தை இறந்துவிட்டால், அவர் செய்யக்கூடியதெல்லாம் வரையறுக்கப்பட்ட காலத்துக்குள் அந்த குழந்தைக்கு காலபைரவ கர்மா செய்வதுதான். நிச்சயமாக அது மிகவும் பயனுள்ளபடி அமையும். அதற்குமேல் அவர்களின் மீது ஒரு தாக்கத்தை ஏற்படுத்த அதிகப்படியாக எதுவும் செய்யவேண்டாம். எப்படியும், உங்களுடைய எண்ணங்களும், உணர்வுகளும், செயல்களும், இறந்துபோன உங்களுடைய குழந்தை மீது எந்த தாக்கத்தையும் ஏற்படுத்த முடியாது. அதேசமயம், நீங்கள் உங்களுக்குள் உள்முகமாக திரும்பினால், உங்களுடைய உயிர்த்தன்மை இனிமையானதாக மாறினால், அந்த உயிரும் இனிமையை உணர்ந்திடும். இதுவும் அந்த உயிர் இன்னொரு உடலை அடையும்வரை மட்டுமே.

இதையெல்லாம் நான் சொன்னால், மக்கள் குழம்பிப் போவார்கள். ஆனால் நீங்கள் கொஞ்சம் கவனித்துப் பார்த்தால், பிரிந்துபோன அந்த உயிர் இன்னொரு உடலை எடுத்துவிட்டது என்பதை நீங்கள் உணரமுடியும். தங்களுடைய குழந்தைகளை இழந்த பெற்றோர்கள் பலருக்கும் இப்படி நடப்பதை நீங்கள் பார்த்திருக்கலாம்: தங்களுடைய குழந்தையின் மரணத்திலிருந்து மீண்டுவந்து இயல்பு வாழ்க்கைக்கு திரும்புவோம் என்று அவர்களால் ஒரு கட்டம் வரை நம்பவே முடியவில்லை. திடீரென்று ஒருநாள் அவர்களுக்கு இனிமேல் அது ஒரு பொருட்டாக இல்லை என்று தோன்றுகிறது. இப்போது எல்லாமே சரியாக இருக்கிறது, இயல்பாக தோன்றுகிறது. பெற்றவர்கள் தங்களுடைய உடல் நடந்துகொள்ளும் விதத்தை கவனித்துப் பார்த்தால் - தங்களுடைய சுவாசம் எப்படி நடக்கிறது, தங்களுடைய முடியின் தன்மை எப்படி இருக்கிறது, நகங்கள் எப்படி இருக்கிறது, தோலுடைய அமைப்பு எப்படி இருக்கிறது - இதையெல்லாம் கவனித்துப் பார்த்தால், அந்த உயிர் இன்னொரு உடலை அடைந்தவுடன் இவர்களால் உணரமுடியும். அது இவர்களின் உடலில் தெரிந்திடும். சுவாசத்தை உன்னிப்பாக கவனித்தால், அது இறுக்கமான தன்மையுடன் மேலோட்டமாக நடக்கும் நிலையிலிருந்து சுகமாக இயல்பாக நடக்கும் நிலைக்கு வந்திருப்பது தெரியும். இது பலவிதங்களிலும் பிரதிபலிக்கும். தோலில் இருக்கும் செல்களின் சுவாசத்தால் நீர் சுரந்து, தோல் வறண்ட நிலையிலிருந்து மென்மையாக மாறியிருக்கும், இன்னும் பல அறிகுறிகளும் இருக்கும் - அதையெல்லாம் நான் சொல்லப்போவதில்லை. அப்படி சொன்னால், அதைத் தேட ஆரம்பிப்பார்கள், எல்லாவிதமான விஷயங்களையும் கற்பனை செய்துகொள்வார்கள்.

இப்படியாக, அந்த உயிர் இன்னொரு உடலை அடைந்த பிறகு, அது முழுமையாகப் போய்விட்டது என்று அர்த்தம். இப்போது உங்களுக்கும் அதற்கும் எந்த தொடர்பும் இல்லாமல் போகிறது. இப்போது வேறு யாரோ வந்து, "இது என்னுடைய குழந்தை," என்று சொந்தம் கொண்டாடுகிறார்கள், இப்படியே ஒரு புதிய நாடகம் மறுபடியும் ஆரம்பிக்கிறது.

## வருடாந்திர திதிகள் முக்கியமா?

தங்களுடைய வாழ்நாளின் போது மனிதர்களுக்கு இருக்கும் பலவிதமான தேவைகளை புரிந்துகொண்டு, நமது பண்டைய முனிவர்கள் சில சடங்குமுறைகளை அமைத்தார்கள். இந்த சடங்கு முறைகளின் மூலம் ஒருவரை சுத்திகரித்து தூய்மைப்படுத்துவதால், அவர் தன் வாழ்க்கையை கடந்துபோவதற்கு அது உதவியாக அமைகிறது. இந்த சடங்கு முறைகளுக்கு *சம்ஸ்காரம்* என்று பெயர். மொத்தம் அறுபத்து நான்கு சம்ஸ்காரங்கள் இருக்கின்றன. அதில் மிகவும் முக்கியமானவை பதினாறு சம்ஸ்காரங்கள். இதற்கு *ஷோடச-சம்ஸ்காரங்கள்* என்று பெயர். ஒருவர் கர்ப்பத்தில் உருவாகும்போது அவருடைய பெற்றோர்கள் செய்யவேண்டிய சடங்கில் ஆரம்பித்து, அவர் இறந்த பிறகு அவருடைய வாரிசுகள் செய்யும் சடங்குகள் வரை இந்த சமஸ்காரங்கள் இருக்கின்றன.

இறந்த பிறகு செய்யும் சடங்குகளுக்கு *அந்த்யேஷ்டி* என்று பெயர் - இறந்துபோனவரின் மகன் இதை செய்யவேண்டும். இறந்தவரின் எதிர்காலம் நலமாக இருக்கும்படி இது நிச்சயப்படுத்துகிறது. அதோடு பெற்றோர்களுக்கு தாங்கள் பட்டிருக்கும் கடனிலிருந்து உயிரோடு இருப்பவர்களையும் விடுவிக்கிறது. இறப்பிற்குப் பிறகு செய்யும் சடங்குகள் சில சமயம், வாரிசுகளின் வாழ்நாள் முழுவதும் தொடர்ந்து நிகழும்படி இருக்கின்றன. அதே சமயம், காலம் செல்லச்செல்ல சடங்கின் அளவு குறையும்படி அமைந்துள்ளது. *ஸ்ரார்த்தம்* என்ற முறையில் இந்த சடங்குகளை செய்வது வழக்கம். தங்களுடைய முன்னோர்களில் கடைசியாக இறந்துபோனவரின் நினைவு நாளன்றும், முக்கியமானதாக பார்க்கப்படும் அமாவாசை, கிரகணம் போன்ற நாட்களிலும் இதைச் செய்வார்கள். அவர்களுடைய ஞாபகத்துக்காக மட்டுமே இது செய்யப்படுகிறது என்ற தவறான புரிதல் இன்று பொதுவாகவே இருக்கிறது. ஆனால், ஒருவர் தன்னுடைய முன்னோர்களுக்கு பட்டிருக்கும் "ருணா" எனப்படும் கடன்களை கழிப்பதில் உதவுவதுதான் இந்த சடங்குகளின் முக்கியமான நோக்கம்.

இதில் சில சடங்குகள் உணர்வுப்பூர்வமான காரணங்களுக்காக மட்டுமே இருக்கின்றன - இறந்துபோனவரைப் பற்றி நினைவுகொள்ளவும், தங்களின்

வாழ்க்கையில் அவர்களுடைய பங்களிப்பை உணர்ந்து வணங்கவும், இதுபோன்ற மற்ற காரணங்களுக்காகவும் அமைந்திருக்கின்றன. யாரோ ஒருவர் இறந்துவிட்டார் என்று வைத்துக்கொள்வோம். ஒருவேளை அவருடைய குழந்தைகளோ, பேரக்குழந்தைகளோ அந்த சமயத்தில் மிகவும் சிறிய வயதில் இருந்திருக்கலாம். அவர்களுக்கு அவரைப் பற்றிய ஞாபகமே இல்லாமல் இருக்க வாய்ப்பிருக்கிறது. அதனால் பெற்றோர்கள் அவர்களுக்கு அந்த ஞாபகத்தை திரும்பக் கொண்டுவர விரும்புகிறார்கள், குழந்தைகள் எதிலாவது வேரூன்றி இருக்கவேண்டும் என்று விரும்புகிறார்கள். அப்போது, அந்த குழந்தைகள் அதோடு தொடர்பு படுத்திக்கொள்ள முடியும். அந்த மனிதர் எப்படிப்பட்டவராக இருந்திருந்தாலும், இது அவரைப் பற்றி அற்புதமான சில விஷயங்களை சொல்லும் நேரமாக அமைகிறது - அப்போது குழந்தைகளால் அதோடு தொடர்புபடுத்திக்கொள்ள முடிகிறது. இது ஒருவிதமான பாரம்பரியமாக அவர்களுக்கு இருக்கிறது என்பது ஒரு அம்சம். இன்னொரு அம்சம் என்னவென்றால், மரபணுரீதியாக முன்னோர்களோடு தங்களுக்கு இருக்கும் இடைவெளியை அதிகப்படுத்தி விலகிப் போகிறார்கள், அவர்களோடு தங்களுக்கு இருக்கும் ருணானுபந்தத்தைக் கரைத்துக்கொள்கிறார்கள்.

உங்களுடைய மரபணு ஞாபகத்தில் இருந்தும், பரிணாம ஞாபகத்தில் இருந்தும் உங்களை தள்ளி வைத்துக்கொள்வது ஆன்மீக வளர்ச்சியில் மிகவும் முக்கியமான ஒரு அம்சமாகும். அப்படி ஒரு இடைவெளியை உருவாக்காவிட்டால், அதே விஷயங்கள் திரும்பத் திரும்ப ஏற்படும். உங்கள் தாத்தாவின் வாழ்க்கையில் நடந்தது உங்கள் வாழ்க்கையிலும் மீண்டும் ஏற்படும். நீங்கள் வேறொரு காலத்தில் வாழ்ந்து கொண்டிருக்கலாம், அதனால் நீங்கள் பார்ப்பதற்கு வேறு மாதிரி தோன்றலாம், ஆனால் நிஜத்தில் அதே விஷயங்கள் துல்லியமாக அப்படியே நடந்து கொண்டிருக்கலாம். அவர்கள் வாழ்ந்த சூழலும் நீங்கள் வாழ்கின்ற சூழலும் வித்தியாசமாக இருக்கலாம். அவர்கள் அப்போது செய்த வேலையும், நீங்கள் இப்போது செய்யும் வேலையும் வித்தியாசமாக இருக்கலாம். அந்த காரணத்தால், மேல்பரப்பில் நடப்பதைப் பார்த்து எல்லாம் வித்தியாசமாக இருக்கிறது என்று நினைத்துக்கொள்கிறார்கள். ஆனால் ஒருவரின் அனுபவத்தில் அதே விஷயம் நடந்து கொண்டிருக்கலாம். ஏனென்றால், அது திரும்பத் திரும்ப நடக்கும்படி ஏற்படும். இதனால், உங்கள் வாழ்வு ஒரு சுழற்சியாக ஆகிடும். நீங்கள் ஒரு புத்தம்புது உயிராக இருக்கமாட்டீர்கள். நீங்கள் ஒரு புதிய உயிராக இல்லையென்றால், உங்களை விடுவிப்பதைப் பற்றிய கேள்வியே இல்லை. இதற்கு அப்பாற்பட்டதைப் பற்றிய கேள்வியே இல்லை. வேறொரு பரிமாணத்தை உணர்ந்து பார்க்கும் வாய்ப்பே இல்லை.

இப்படி, உங்களுடைய முன்னோர்களுக்கும் உங்களுக்கும் ஒரு இடைவெளியை உருவாக்குவதுதான் வருடாந்திர திதி அன்று செய்யும் சடங்குகளின் முக்கியமான நோக்கம். அது வெறும் நினைவுநாளாக மட்டும் அமைவதில்லை. இறந்தவர்களுக்கும் உங்களுக்கும் ஒரு இடைவெளியை உருவாக்குவதுதான் நோக்கம். உங்களுடைய மரபணு ஞாபகத்தை முடிந்தவரைக்கும் குறைத்திடும் முயற்சியாகத்தான் வருடாந்திர சடங்குகள் உருவாக்கப்பட்டு இருக்கின்றன. பிரம்மச்சரிய தீட்சைக்[4] கூட இதைப்போலத்தான். நம் நாட்டில் ஒருவர் *சன்னியாசம்*[5] எடுக்க வேண்டும் என்றால், அவருடைய பெற்றோர்கள் உயிரோடு இருந்தாலும்கூட, முதலில் அவர்களுக்காக எல்லா க்ரியைகளையும் கர்மங்களையும் செய்துவிட வேண்டும். அவர்கள் இறந்து போகவேண்டும் என்ற நோக்கத்தில் இப்படி செய்யப்படுவதில்லை, நோக்கம் அது இல்லை. உங்களுக்கும் உங்களுடைய மரபணு ஞாபகத்துக்கும் இடையே ஒரு இடைவெளியை உருவாக்குவதுதான் நோக்கம். இப்போது நீங்கள், விடுபட்டு போவதற்கு ஒருபடி நெருக்கமாக இருக்கிறீர்கள்.

## மூதாதையர் வழிபாடு

நம்முடைய மூதாதையர்களுக்கு நாம் பட்டிருக்கும் கடன் அளவில் மிகப் பெரியது. காலம்காலமாக ஏற்பட்ட முயற்சிகளும், அதனால் அடுக்கடுக்காக அமையப்பெற்ற அறிவும் இல்லையென்றால், இன்னும் நாமெல்லாம் ஆதிமனிதன் போலத்தான் இருந்திருப்போம். அதனால், பெரும்பாலான கலாச்சாரங்களில் தங்களுடைய முன்னோர்களுக்கு நன்றியை வெளிப்படுத்துவது ஒரு சம்பிரதாயமாக இருந்துள்ளது. சில கலாச்சாரங்களில், இப்படி முன்னோர்களை போற்றுவது மிகப்பெரிய அளவில் நிகழ்கிறது, அது ஒரு வழிபாடாகவே மாறிவிடுகிறது. மூதாதையர்களுக்கு கிட்டத்தட்ட ஒரு தெய்வத்தைப் போன்ற அந்தஸ்தை அளிக்கிறார்கள். அவர்கள் தங்களை காத்து வழிநடத்துவார்கள் என்று நம்புகிறார்கள், அதனால் அவர்களை வழிபடுகிறார்கள். செவ்விந்தியர் கலாச்சாரத்தில் மூதாதையர் வழிபாடு பெருமளவில் காணப்படுகிறது. அதேபோல ஆஸ்திரேலியாவின் அபோரிஜின் பழங்குடியினரும், ஆப்பிரிக்காவின் பழங்குடியினரும்கூட இப்படிச் செய்கிறார்கள். ஆனால், இந்தியாவில் மூதாதையர்களுக்காக செய்யப்படும் சடங்குகளும் முறைகளும் வேறு காரணத்திற்காக செய்யப்படுகின்றன.

---

4 ஈஷா யோக மையத்தில் பிரம்மாச்சாரிகளுக்கு வழங்கப்படும் தீட்சையைக் குறிக்கிறது.

5 முறைப்படி துறவுகொள்வது.

நம் நாட்டில், நம்முடைய முன்னோர்களிடமிருந்து நம்மை தள்ளி வைத்துக்கொள்கிறோம், ஒரு இடைவெளியை உருவாக்குகிறோம்; அவர்களை நாம் வழிபடுவதில்லை. இங்கே இருப்பவர்கள், ஒன்று தங்களுடைய மூதாதையருக்கு நன்மை ஏற்படும்படி அவர்களை கவனித்துக் கொள்கிறார்கள், இல்லை அவர்களிடமிருந்து ஒரு இடைவெளியை உருவாக்கிக் கொள்கிறார்கள். அதே சமயம், முன்னோர்கள் உங்களை காப்பாற்றுவார்கள் என்பது நம் நாட்டில் அவ்வளவாக வழக்கத்தில் கிடையாது. மற்ற கலாச்சாரங்களில் மாந்திரீக முறைகள் அதிகமாக இருந்ததால் மூதாதையர் வழிபாடு எனும் வழக்கம் ஏற்பட்டிருக்கலாம். அவர்களுடைய சடங்குகளும் முறைகளும் பெரும்பாலும் மாந்திரீகம் சம்பந்தபட்டதாகவே இருந்தன, அவை ஆன்மீக முறைகளாக இருக்கவில்லை. போர் நேரங்களிலும் மற்றும் சில நெருக்கடியான நேரங்களிலும், இறந்துபோன மூதாதையர்கள் அவர்களுக்கு உதவிய சந்தர்ப்பங்கள் இருந்திருக்கலாம். ஒருவேளை, அவர்களுக்கு முன்னோர்களை தொடர்புகொள்ளும் வழி தெரிந்திருக்கலாம், அதை தங்களுக்கு பயன்படும்படி செய்துகொள்ளவும் தெரிந்திருக்கலாம். நிச்சயமாக அப்படிப்பட்ட நிகழ்வுகள் இருந்திருக்க வாய்ப்பிருக்கிறது. இந்த காரணத்தால், தங்களின் முன்னோர்கள் எல்லோருமே தங்களுக்கு உதவுவார்கள் என்ற பொதுவான நம்பிக்கை ஏற்பட்டிருக்கலாம்.

அது இங்கேயும் உண்மையாகவே இருக்கிறது. இதை நானே சொல்லியிருக்கிறேனே! அதாவது, நான் உடலைவிட்டு போனபிறகு எண்பது வருடங்களுக்கு இங்கே இருப்பேன் - நான் இப்போது இருப்பதைவிட, அப்போது என்னுடைய இருப்பு மகத்தான அளவில் இருக்கும் - அப்போது இங்கிருக்கும் ஒவ்வொருவரும் கடந்துபோகும்படி நான் பார்த்துக்கொள்வேன் என்று சொல்லியிருக்கிறேன்[6]. குறிப்பிட்ட தன்மைகள் கொண்ட வேறுசில உயிர்களும், அவர்களுக்குப் பின் வந்த தலைமுறைகளை வழிநடத்தியிருக்கிறார்கள். இதைப்போலவே, அந்த கலாச்சாரங்களிலும் ஏற்பட்டிருக்க வாய்ப்பிருக்கிறது. அதனால்தான், ஒவ்வொரு மூதாதையரும் இதைப்போலவே உதவமுடியும் என்ற பொதுவான நம்பிக்கை உருவாகியிருக்க வேண்டும். யாரோ ஒரு சிலர் நிச்சயமாக இப்படி செய்திருக்க வாய்ப்பிருக்கிறது. அதேசமயம், முன்னோர்களில் ஒவ்வொருவரும் இப்படிச் செய்யும் திறன் பெற்றவர்கள் கிடையாது.

கடந்துபோன தலைமுறைகளின் ஒட்டுமொத்த அறிவு நிச்சயமாக நமக்கு இலட்சக்கணக்கான விதங்களில் பயன்படுகிறது. பண்டைய பாரதத்தில்,

---

6 அத்தியாயம் 11ல், "மீண்டும் வருவீர்களா சத்குரு?" என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

குலங்களுக்குள் திருமணம் செய்துகொள்வதை கவனத்துடன் பராமரிக்க ஒரு வரைமுறை இருந்தது. அந்த முறையை விட்டு விலகாமல் அதை கவனமாக கடைபிடித்தார்கள். அந்தக் காரணத்தால், கடந்துபோன தலைமுறைகளின் ஒட்டுமொத்த அறிவை தொடர்புகொள்ளும் திறன் மேம்பட்டது, அதனால் மிகுந்த பயன்களை அடைந்தார்கள். இது இறுகிப்போன ஜாதி முறையாக இல்லாமல் மரபணு பொருத்தத்தின் அடிப்படையில் அமைந்திருந்தது. வணிகத்தில் ஈடுபட்ட பல குடும்பங்களும் இதை பிரமிப்பூட்டும் விதத்தில் வெளிப்படுத்தியிருக்கிறார்கள். அதில் சிலர், இந்த அறிவை ஒன்று திரட்டுவதில் உதவுவதற்காக சில தெய்வங்களையும் சக்தி வடிவங்களாக உருவாக்கினார்கள். அதைத்தான் குலதெய்வம் என்று சொன்னார்கள். இப்படி மரபணுரீதியாக ஏற்படும் கலப்பு, முறைப்படி நிகழும்படி பார்த்துக்கொண்டார்கள். இதைப் பராமரிக்க மிகுந்த உற்சாகத்தையும் ஈடுபாட்டையும் காட்டினார்கள். பல விதங்களில், தங்கள் மதத்தை கடைபிடிப்பதைவிட இதைக் கடைபிடிப்பதில் அதிக கண்டிப்புடன் ஈடுபட்டார்கள். பல இடங்களில் அங்கிருக்கும் நிலம், பாறைகள், அங்கிருக்கும் சூழல் என்று ஒவ்வொன்றுமே கவனத்துடன் பராமரிக்கப்பட்டன. சில கலாச்சாரங்களில், தங்களுடைய முன்னோர்களின் புகழுக்கு சாட்சியாக இருந்த நிலத்தையும், மண்ணையும், பாறைகளையும்கூட தொந்தரவு செய்ய விரும்புவதில்லை - ஏனென்றால், இதெல்லாமே அந்த முன்னோர்களின் பேரறிவைப் பாதுகாக்கும் கருவிகளாக இருந்தன, அதனால்தான்.

ஆனால், இன்று எந்திரங்களின் காலம். இன்று நமது பயணங்களுக்கு எந்த கட்டுப்பாடும், தடையும் இல்லை, மனிதர்களுக்குள் ஏற்படும் கலப்பிலும் எந்தத் தடைகளும் இல்லை. இன்றைய குழந்தைகள், உங்களுடைய முன்னோர்களும் நீங்களும் அவர்களுக்கு சொல்வதைவிட, கூகுள் சொல்வதையே அதிகமாக நம்புகிறார்கள். இப்படி, உள்ளுணர்வு மூலம் புரிந்துகொள்வதில் இருந்து விலகிப்போய், தகவல்களை மட்டுமே சார்ந்திருக்கும் நிலைக்கு வந்துவிட்டோம் - இது துரதிர்ஷ்டமானது.

## சொர்க்கமா? நரகமா?

தங்களையே ஒரு நரகமாக ஆக்கிக்கொண்டு விட்டவர்கள் எப்போதுமே சொர்க்கத்துக்குப் போக வேண்டுமென்று ஆசைப்படுகிறார்கள். வாழ்க்கை என்பது நரகமாக தோன்றும்போது, அங்கே மேலே சொர்க்கத்திற்கு போனால் எல்லாம் அற்புதமாக இருக்கும் என்று நம்புகிறார்கள். சரி, சொர்க்கத்தில் என்ன இருக்கிறது? இந்துக்களின் கதைப்படி, சொர்க்கத்தில் சாப்பாடு பிரமாதமாக இருக்கும். நீங்கள் சாப்பாட்டு பிரியராக இருந்தால், அவசியம் நீங்கள் இந்துக்களின் சொர்க்கத்திற்குப் போகவேண்டும்.

அங்கே உங்களுக்காக, இருப்பதிலேயே சிறந்த சமையல்காரரான நளனே சமைத்துக் கொடுப்பார். அதோடு நீங்கள் எவ்வளவுதான் சாப்பிட்டாலும் பாத்திரங்களில் உணவு நிரம்பியே இருக்குமாம். இன்னொரு இடத்திற்கு போனால், அங்கே வெள்ளை கவுன் அணிந்த பெண்கள் மேகங்களை சுற்றிப் பறந்து கொண்டிருப்பார்கள், உங்களுக்காக எப்போது பார்த்தாலும் கம்பிகளை மீட்டி இசைத்துக் கொண்டிருப்பார்கள். அந்த மாதிரி சூழல் பிடித்திருந்தால், நீங்கள் அங்கே போகவேண்டும். இன்னொரு விதமான இடத்திலோ, நீங்கள் கன்னிப்பெண்கள் பிரச்சனையை சந்திக்க நேரிடும். நீங்கள் தேடிக்கொண்டிருப்பது அதுதான் என்றால், நீங்கள் அங்கேதான் போகவேண்டும். ஆனால், சொர்க்கத்துக்குப் போவது எப்படி?

அமெரிக்காவின் அலபாமா என்ற ஊரில் இப்படி நடந்தது. ஞாயிற்றுக் கிழமைகளில் மதத்தை கற்றுத்தரும் சண்டே ஸ்கூல் ஒன்றில், தனக்கு முன்னால் உட்கார்ந்திருந்த சின்னஞ்சிறு குழந்தைகளைப் பார்த்து, அந்த போதகர் தீவிரமாக போதித்துக் கொண்டிருந்தார். இவர்களை "இளம் வயதிலேயே பிடித்துவிட வேண்டும்" என்பது அவர்களுடைய கொள்கை. அதனால் அந்த ஆசிரியர் படுதீவிரமாக பேசிக் கொண்டிருந்தார், குழந்தைகளோ பயங்கர அதிர்ச்சியில் அப்படியே உட்கார்ந்திருந்தார்கள். பேசிக்கொண்டிருந்தவர் திடீரென்று பரபரப்பை ஏற்படுத்திட சட்டென்று தன் பேச்சை நிறுத்தினார். நிறுத்திவிட்டு, "சொர்க்கத்திற்குப் போக வேண்டுமென்றால் நீங்கள் என்ன செய்யவேண்டும்?" என்று கேட்டார். முதல் வரிசையில் உட்கார்ந்திருந்த குட்டிப்பெண் மேரி எழுந்து நின்று, "ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் தேவாலயத்தின் தரையை சுத்தம் செய்தால், நான் சொர்க்கத்திற்குப் போவேன்," என்று சொன்னாள். "பரிபூரணமாக!" என்று ஆமோதித்தார் அவர். இன்னொரு குட்டிப்பெண் எழுந்து, "கைச்செலவுக்காக எனக்கு கிடைக்கும் பணத்தை ஏழையாக இருக்கும் என்னுடைய தோழியோடு பகிர்ந்துகொண்டால், நான் சொர்க்கத்திற்குப் போவேன்," என்று சொன்னாள். "ஆஹா! மிகவும் சரியாகச் சொன்னாய்!" என்றார் போதகர். இன்னொரு பையன் எழுந்து நின்று, "தேவையில் இருப்பவர்களுக்கு உதவி செய்தால், நான் சொர்க்கத்திற்குப் போவேன்," என்று சொன்னான். "மிகவும் சரி!" என்றார் அவர். கடைசி வரிசையில் இருந்த குட்டிப்பையன் டாம் எழுந்து நின்றான், "சொர்க்கத்திற்குப் போக வேண்டுமென்றால் முதலில் நீங்கள் இறந்துபோக வேண்டும்," என்று சொல்லிவிட்டு அமர்ந்தான். ஆமாம், சொர்க்கத்திற்குப் போக வேண்டுமென்றால் அதுதான் சரியான தகுதி, இல்லையா? நீங்கள் சொர்க்கத்திற்குப் போக வேண்டுமென்றால், முதலில் நீங்கள் இறந்துபோக வேண்டும்.

நீங்கள் இறந்துபோனால், உங்களுடைய கலாச்சாரத்தைப் பொருத்து, உங்களை புதைக்கவோ எரிக்கவோ செய்வார்கள் அல்லது பறவைகளுக்கும் மிருகங்களுக்கும் காணிக்கையாக கொடுத்து விடுவார்கள். அப்படியென்றால், சொர்க்கத்திற்குப் போகும்போது உங்களின் உடலை விட்டுவிட்டுதான் போகிறீர்கள். உடலே இல்லாமல், பிரமாதமான சாப்பாட்டையும், கன்னிப் பெண்களையும் வைத்துக்கொண்டு என்ன செய்யப்போகிறீர்கள்? எவ்வளவு சாப்பிட்டாலும் காலியே ஆகாத தனிச்சிறப்பு வாய்ந்த பாத்திரத்தைப்[7] பற்றி சொன்னார்களே - உடல் கொண்ட யாருமே அங்கே போகவில்லை என்பதுதான் அதற்குக் காரணம் என்பதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டாமா? உடல் இல்லாதவர்கள் எதை சாப்பிட்டாலும் அது அங்கேயே அப்படியேத்தான் இருக்கப்போகிறது. அப்போது பாத்திரம் நிரம்பி இருப்பது இயல்புதானே! அதேபோல், அவர்கள் என்றென்றைக்கும் கன்னிப் பெண்களாகவே இருந்ததற்கும் இதுவேதான் காரணம்.

இப்படிப்பட்ட கதைகள் நமக்கு நீண்டகாலமாக சொல்லப்பட்டே வந்திருக்கின்றன. ஆயிரக்கணக்கான வருடங்களாக ஒரே கதையை சொல்லிக் கொண்டிருக்கக் கூடாது, இல்லையா? இதைவிட கொஞ்சம் சிறப்பான கதையையாவது சொல்லலாமே - அந்த சொர்க்கத்தில் வை-ஃபை இலவசம் என்றாவது சொல்லலாமே! ஒரு கதையை ரசித்து அனுபவிப்பதில் எந்த தவறும் கிடையாது. ஆனால் ஒரு கதையை நம்பிவிடுவது முட்டாள்தனமாகும். இந்த அம்புலிமாமா கதைகளை உங்களுக்கு நீங்களே எவ்வளவு காலம்தான் சொல்லிக் கொண்டிருப்பீர்கள்? மனித இனமாக நாம் இப்போதாவது கொஞ்சம் பரிணாம வளர்ச்சியை வெளிப்படுத்த வேண்டும், இல்லையா? கதைகளையெல்லாம் விட்டொழித்து உங்களுடைய இருப்பின் உண்மையைப் பார்த்திட ஆரம்பிக்க வேண்டும்.

நீங்கள் இதையெல்லாம் நம்பவேண்டும் என்று சிலர் விரும்புகிறார்கள். அதாவது, நீங்கள் இறந்துபோன கணத்திலேயே, நேராக சொர்க்கத்திற்கு போவீர்கள், அங்கே உங்களுக்காக ஒரு பார்ட்டி ஏற்பாடு செய்யப்படும்; உங்களுடைய நண்பர்கள் உறவினர்கள் எல்லோரும் உங்களுக்காக அங்கே காத்துக் கொண்டிருக்கிறார்கள். அதை நீங்கள் அற்புதமாக அனுபவிக்கலாம் - இப்படியெல்லாம் பலவிதமாக சொல்கிறார்கள். ஒன்றை நீங்கள் நன்றாக புரிந்துகொள்ள வேண்டும் - நீங்கள் இறக்கும்போது

---

7 இந்து புராணங்களில் சொல்லப்படும் அட்சய பாத்திரத்தைக் குறிக்கிறது - இந்தப் பாத்திரம் அள்ள அள்ளக் குறையாமல் உணவுப்பொருட்களை அளிக்கும் எனச் சொல்லப்படுகிறது.

உங்களுடைய உடலை இழந்துவிடுகிறீர்கள், ஆனாலும் நீங்கள் இன்னும் இங்கேதான் இருக்கிறீர்கள். நீங்கள் எங்கேயும் போவதில்லை. நீங்கள் இருக்கும் பரிமாணம்தான் மாறியிருக்கிறது. அதாவது, உடலோடு இருக்கும் நிலையிலிருந்து உடலற்ற நிலைக்கு மாறியிருக்கிறீர்கள். பொருள்தன்மையில் இருந்து இன்னும் சூட்சுமமான பொருள்தன்மைக்கு மாறியிருக்கிறீர்கள், அவ்வளவுதான். பூகோளரீதியாக ஒரு இடத்தில் இருந்து இன்னொரு இடத்திற்கு மாறிவிட்டீர்கள் என்று அர்த்தமில்லை - இங்கிருந்து சொர்க்கத்திற்குப் போய்விட்டீர்கள் அல்லது இங்கிருந்து நரகத்திற்குப் போய்விட்டீர்கள் என்றெல்லாம் ஒன்றும் கிடையாது. எல்லாத்தையும்விட முக்கியமாக, இறந்தபின் நடக்கும் நிகழ்வுகளுக்கும் கடவுளின் தீர்ப்புக்கும் எந்த சம்பந்தமும் கிடையாது - அவர் உங்கள் மீது கோபத்துடன் இருக்கிறார். அவர் உங்களை தூக்கில் போடுவார், நெருப்பில் போட்டு எரிப்பார், எண்ணெய்யில் போட்டு வறுப்பார் - இப்படியெல்லாம் ஒன்றும் கிடையாது.

இறந்தபிறகு போய் சேரும் இடங்களாக சொர்க்கத்தையும் நரகத்தையும் பெருமளவில் மார்க்கெட்டிங் செய்துவிட்டார்கள் - இதைச் செய்தது உலகில் இருக்கும் மதங்கள்தான் - சமுதாயத்தை தங்களுடைய கட்டுப்பாட்டில் கொண்டுவருவதற்காக இப்படி மார்க்கெட்டிங் செய்துவிட்டார்கள். தனி மனிதர்களையும், குழுக்களாக இருக்கும் மனிதர்களையும் கட்டுப்படுத்துவது எப்படி என்று தெரியாதபோது இந்த யோசனையை உருவாக்கினார்கள் - "சரிதான், உன்னை இங்கே தண்டிக்க முடியாவிட்டாலும் அங்கே போனவுடன் பிடித்துவிடுவோம். அதைப்போலவே, நீ இங்கே செய்யும் நல்லதுக்கெல்லாம் தக்க சன்மானத்தை இங்கேயே தரமுடியாவிட்டால், அங்கே போனவுடன் சன்மானம் தருவோம்," என்று சொன்னார்கள். நீங்கள் துன்பத்தில் இருந்தால், "ஐயோ! கவலைப்படாதே, அங்கே போய்விட்டால் எல்லாம் சரியாகிவிடும்," என்று சொன்னார்கள். அப்போதைக்கு ஆறுதல் தந்தார்கள். யாரோ ஒருவர் ஆழமான பாதிப்பில் இருக்கும்போது அவரிடம், "கவலைப்பட வேண்டாம், நீ அங்கே போய் கடவுளின் மடியில் உட்கார்ந்துவிட்டால் எல்லாம் சரியாகிவிடும்," என்று சொல்வது ஒரு மனோதத்துவ கருவிதான். அளவுகடந்த பாதிப்பில் யாராவது இருக்கும்போது அப்படிச் செய்தால் அது பரவாயில்லை. ஆனால், அதையே ஒரு வியாபாரப் பொருளாக மாற்றி, ஒரு முத்திரை கொடுத்து எல்லா இடத்திலும் விற்கக்கூடாது. அப்படிச் செய்வதால் பயன் ஏற்படாது, அது வேலை செய்யாது. மனோதத்துவ நிபுணர் ஒருவர் இப்படியெல்லாம் சொன்னால், அது பரவாயில்லை. ஆனால், இங்கிருந்து வேறெங்கோ போனபிறகு எல்லாம் சரியாகிவிடும் என்று உண்மையிலேயே அவர்களை நம்பவைப்பது நல்லதில்லை. அதன்மூலம் அவர்கள் இங்கே வாழும் வாழ்க்கை கெட்டுப்போகிறது.

இந்த காலத்தில், மெதுவாக மனிதர்களின் மனதில் சொர்க்கங்கள் எல்லாம் இடிந்துவிழ ஆரம்பித்துவிட்டன. அவர்களிடம் மூன்றே மூன்று கேள்விகள் கேட்டால், இதெல்லாம் இடிந்து போய்விடும். இதற்குமுன் எப்போதும் இல்லாத அளவுக்கு தங்களுடைய புத்தி கூர்மையாக இயங்கும் காலகட்டத்தில் மனித இனம் இருக்கிறது. வரலாற்றில் முன்பு எப்போதும் இல்லாததுபோல் இன்று ஏராளமான மனிதர்களால் சுயமாக சிந்திக்க முடிகிறது. எப்போது மனிதனின் புத்தி இயங்க ஆரம்பிக்கிறதோ, அப்போது அதில் கேள்விகள் உதிப்பது தவிர்க்கமுடியாதது. அடுத்த இருபத்தைந்து வருடங்களுக்குள், அதிகபட்சம் நாற்பது வருடங்களுக்குள், சொர்க்கங்களும் புனித நூல்களும் முழுமையாக இடிந்துபோயிருக்கும், முடிந்துபோயிருக்கும். இப்போதும் தனிமனிதர்களின் மனங்களில் அது ஏற்கனவே இடிந்து கொண்டுதான் இருக்கிறது. இருந்தாலும், அதை சத்தமாக சொல்வதற்கு அவர்கள் தைரியமாக இல்லை. அல்லது அதை எப்படி வெளிப்படுத்துவது என்று மனதில் இன்னும் சரியாக தோன்றவில்லை. ஆனால், இதெல்லாம் இடிந்துகொண்டுதான் இருக்கின்றன. மனிதர்களின் மீது சொர்க்கமும் நரகமும் கொண்டிருந்த பிடி இன்றைக்கு நன்றாக தளர்ந்துவிட்டது. சொர்க்கத்துக்குப் போவோம் என்று நம்பிக்கொண்டு இருந்தவர்கள், போன தலைமுறையைவிட இந்த தலைமுறையில் குறைவாகவே இருக்கிறார்கள். அந்த எண்ணிக்கை ஆச்சரியப்படும் விதத்தில் குறைந்திருக்கிறது. உலகில் எல்லா இடங்களிலும் இந்த நம்பிக்கை சரிந்து கொண்டிருக்கிறது. அடுத்த சில பத்தாண்டுகளில், அது மிகவும் வேகமாக இடிந்து சரிந்துவிடும். அதேசமயம், இதனால் உலகத்தில் பலவிதமான விளைவுகள் ஏற்படும்.

அடிப்படையில், மனிதர்கள் தங்களுக்குள் இனிமையை தேடுகிறார்கள், அதனால்தான் சொர்க்கத்தை நாடுகிறார்கள். உங்களுடைய சின்ன வயதிலிருந்தே, "கடவுள் சொர்க்கத்தில்தான் இருக்கிறார். ஆனால், அது மிகவும் கொடூரமான ஒரு இடம்," என்று உங்களுக்கு சொல்லியிருந்தால், சொர்க்கத்திற்குப் போக விரும்பவே மாட்டீர்கள். நீங்கள், "இல்லை, நான் வேண்டுமானால் இங்கிருந்தே பிரார்த்தனை செய்துகொள்கிறேன். எனக்கு அங்கே ஒன்றும் போக வேண்டாம்," என்று சொல்லி இருப்பீர்கள். அடிப்படையில், மனிதன் தனக்குள் ஒரு இனிமையான அனுபவத்தைத்தான் தேடுகிறான் - உடலளவில், மனதளவில், உணர்வுகளில் - அவன் இனிமையை விரும்புகிறான். தன்னைச் சுற்றி இருக்கும் சூழலும் இனிமையாக இருப்பதை விரும்புகிறான். தன்னுடைய உயிர்ச்செயலே இனிமையாக நிகழ்வதை விரும்புகிறான். இதெல்லாம் நடந்துவிட்டால் நாம் நிறைவாக உணர்ந்திடுவோமா? இல்லை. இனிமையாக இருப்பது எப்படி என்று புரிந்தால்தான், நீங்கள் வாழ்க்கையின் மற்ற பல பரிமாணங்களை உணர்ந்து

பார்க்கவே விரும்புவீர்கள். பலவிதங்களில் உங்களுக்குள் இனிமை இல்லாத நிலையில் இருந்தால், வாழ்க்கை முழுவதும் சந்தோஷத்தை தேடுவதிலேயே போய்விடும், சந்தோஷம் என்ற ஒரு விஷயத்தை அடைவதிலேயே தங்களுடைய வாழ்க்கை முழுவதையும் மனிதர்கள் வீணடிக்கிறார்கள். சொல்லப்போனால், அவர்கள் சந்தோஷத்தைக்கூட தேடி அலையவில்லை, அந்த முயற்சியையும் கைவிட்டுவிட்டார்கள். இன்று, அவர்களுக்கு வேண்டியதெல்லாம் வெறும் நிம்மதிதான். அதுதான் அவர்களுக்கு வாழ்க்கையின் உச்சக்கட்ட நோக்கமாக இருக்கிறது.

மனிதர்களின் மனதில் சொர்க்கங்கள் இடிந்து விழுந்தவுடன், இங்கே இருக்கும்போதே வாழ்க்கையை அதிகபட்சமாக வாழவேண்டும் என்று பார்ப்பார்கள். அந்த நோக்கம், ஆரம்பத்தில் ஆசையாகவும், பேராசையாகவும் வெளிப்படும். ஆனால், கொஞ்ச காலம் கழித்து அதிலும் விரக்தி ஏற்படும் - அதிகமான பொருட்களை வைத்திருப்பதால் எந்த விதத்திலும் வாழ்க்கை அதிகமாக ஏற்படுவதில்லை என்று அவர்களுக்கு புரிகிறது. அதற்கு பதிலாக இங்கேயே இப்போதே, வேறு ஏதாவது ஒன்று பெரிய அளவில் வேண்டும் என்று தோன்றுகிறது. அதனால் இங்கேயே குடிக்கிறார்கள், இங்கேயே போதைப்பொருள் எடுத்துக்கொள்கிறார்கள். நாம் சரி-தவறு, நல்லது-கெட்டது என்ற போதனையாக இதைப் பார்க்கவில்லை. மனிதனின் புத்திக்கும், மனிதனின் விழிப்புணர்வுக்கும் இதனால் ஏற்படும் சேதத்தைப் பற்றித்தான் பார்க்கிறோம். உடல் ஆரோக்கியம் என்பது அக்கறை காட்டவேண்டிய விஷயம்தான். அதேசமயம் யாரோ ஒருவருக்கு, தான் சில வருடங்களுக்கு முன்பாகவே இறந்துபோனால் பரவாயில்லை என்றால் - அதில் எனக்கு எந்தப் பிரச்சனையும் இல்லை. பிரச்சனை என்னவென்றால், இந்த ரசாயனங்கள் மனிதர்களுக்கு வாய்த்திருக்கும் சாத்தியங்களை அழிக்கின்றன - அதுதான் பிரச்சனை. 90 சதவிகித ஜனத்தொகைக்கு இந்த நிலை ஏற்படும்போது, நாம் உருவாக்கும் அடுத்த தலைமுறை நம்மைவிட தரத்தில் மிகவும் குறைவானதாக இருக்கும். அப்படிச் செய்வது, மனித இனத்திற்கே நாம் செய்யும் மிகப்பெரிய குற்றமாகும், துரோகமாகும். ஏனென்றால், வாழ்க்கை மேலும் மேலும் சிறப்படைய வேண்டும், மேன்மை அடைய வேண்டும் என்பதுதான் அடிப்படையான நோக்கம், வாழ்க்கை அந்த நோக்கத்தில்தான் முன்னேறி நகர்கிறது.

நிஜமான சேதம் ஏற்பட்டு முடிந்தபிறகு அவர்களை வேறு பாதையில் திருப்பிட முயற்சிப்பது வேலை செய்யாது. தனக்குள் ரசாயனங்களை ஏற்றிக்கொண்டு இருப்பவரிடம் போய் அறிவுரை எல்லாம் சொல்லமுடியாது. ஒரு குடிகாரரிடம் அல்லது போதை மருந்துக்கு அடிமையாக இருப்பவரிடம் போய் அறிவுரை கொடுத்துப் பாருங்கள் - நான் என்ன சொல்கிறேன்

என்று அப்போது புரிந்திடும். சட்டென்று அப்படியே அவர்களை வேறு பாதையில் திருப்பமுடியாது. அதுதான் ரசாயனங்களுக்கு இருக்கும் இயல்பு. ஆரோக்கியம், அமைதி, சந்தோஷம், பரவசம் என்ற ஏதாவது ஒரு விஷயம் தங்களுக்குள் மேம்பட்டு இருப்பதுபோல் அவர்களுக்கு தோன்றும். ஆனால், அந்த உணர்வு செயற்கையான முறையில் ஏற்படுகிறது. அதனால் அவர்கள் அந்த ரசாயனத்திலிருந்து வெளியே வருவதற்கு விரும்பவே மாட்டார்கள்.

அதனால்தான், எல்லோருமே குடிப்பழக்கத்திற்கோ, போதை மருந்துக்கோ அடிமை ஆவதற்கு முன்பாகவே, மனிதர்களின் விழிப்புணர்வை உயர்த்துவது மிகவும் இன்றியமையாததாக இருக்கிறது. அப்போது, வெளியிலிருந்து எந்த ரசாயனமும் இல்லாமல், தங்களுக்குள் முற்றிலும் ஆனந்தமான நிலையில் போதையுடன் இருக்கும்படி உட்காருவது எப்படி என்று நாம் கற்றுத்தர முடியும். இல்லாவிட்டால் அடுத்த ஐம்பது வருடங்களுக்குள், உலகின் ஜனத்தொகையில் 90 சதவிகிதம் பேர் ஏதாவது ஒரு ரசாயனத்தை எடுத்துக்கொள்ளும் நிலை ஏற்படும்.

உயிரின் அடிப்படையில் பார்த்தால், சொர்க்கம்-நரகம் பற்றிய கருத்துக்கு சிறிதளவு அர்த்தம் இருக்கிறது. உங்கள் உயிர் என்பது மரணத்தோடு முடிந்துபோவதில்லை; அதற்குப் பிறகும் அது பல வடிவங்களை எடுக்கிறது. அப்படி அது எடுக்கும் அந்த வடிவங்கள் இனிமையாகவும் இருக்கலாம், இனிமையில்லாத வடிவமாகவும் இருக்கலாம். இது பல காரணங்களைப் பொருத்து அமைகிறது. இந்த இனிமையான வடிவங்களைத்தான் நாம் சொர்க்கம் என்று சொல்கிறோம், இனிமையில்லாத வடிவங்களை நாம் நரகம் என்று சொல்கிறோம். நாம் ஏற்கனவே பார்த்ததுபோல[8], சொர்க்கமும் நரகமும் பூகோளரீதியாக அமைந்திருக்கும் இடங்கள் இல்லை - உடலை விட்டபிறகு உயிர் எடுக்கும் வடிவங்கள்தான் சொர்க்கமும் நரகமும். ஒருவர் எல்லா வடிவங்களுக்கும் அப்பாற்பட்டு போய்விட்டால், அப்போது அதை முக்தி என்று சொல்கிறோம். ஆன்மீகத் தேடலில் இருக்கும் ஒருவருக்கு, சொர்க்கத்திற்குப் போக வேண்டும் என்றெல்லாம் விருப்பம் கிடையாது. அவர் சொர்க்கத்திற்கும் போக விரும்பவில்லை, நரகத்திற்கும் போக விரும்பவில்லை. சொர்க்கம்-நரகம் என்ற இருமைகளைக் கடந்து போவதுதான் அவருடைய விருப்பம்.

யோகாவால் ஏற்படும் முதல் பாதிப்பு சொர்க்கத்துக்கும் நரகத்துக்கும்தான். சொர்க்கமும் நரகமும் இருக்கும்வரை, உள்நிலையில் நன்மையை ஏற்படுத்தும் விஞ்ஞானங்கள் அர்த்தம் இல்லாததாகவே இருந்திடும்.

8 அத்தியாயம் 7ல், "கடைசி கணங்கள் முக்கியம், ஏன்?" என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

முக்தியை நோக்கிப்போவதும் அர்த்தமற்றதாகவே இருக்கும். ஏனென்றால், இப்போது உங்களுக்கு போய் சேர்ந்திட இரண்டு இடங்கள் இருக்கின்றன - ஒன்று நல்ல இடம், இன்னொன்று மோசமான இடம் - இந்த இரண்டு இடங்களில் ஒரு இடத்திற்கு போவீர்கள். இப்போது, அந்த நல்ல இடத்திற்கு போய்ச்சேர ஒரு டிக்கெட்டை வாங்கிவிடும் கவனத்திலேயே உங்களுடைய வாழ்நாள் முழுவதும் போய்விடும். இங்கே இருக்கும்போது எப்படி வாழவேண்டும் என்ற அக்கறையெல்லாம் உங்களுக்கு இருக்காது. மனித இனம் இப்படி இழிவான விதத்தில் வாழ்ந்திருக்கிறது என்றால், அதற்கு மதங்கள்தான் முக்கியமான காரணம். அவர்கள் பலவிதமான போதனைகளைத் தருகிறார்கள். "நீங்கள் இப்போது என்ன செய்கிறீர்கள் என்பதெல்லாம் முக்கியமில்லை. இந்த இந்த விஷயங்களை எல்லாம் நீங்கள் நம்பினால், அந்த நல்ல இடத்திற்குப் போகும் டிக்கெட் நிச்சயமாகிவிட்டது," என்று போதிப்பார்கள். உங்களுக்குள் இயங்கிக் கொண்டிருக்கும் இந்த சொர்க்கத்தையும் நரகத்தையும் நீங்கள் அழிக்கவில்லை என்றால், நீங்கள் உண்மையை நோக்கி நகர்ந்திட வாய்ப்பே கிடையாது.

யோக பாரம்பரியத்தில் ஒரு அழகான கதை இருக்கிறது. எண்பத்து நான்கு வயதை கடந்த ஒரு யோகி இருந்தார். தன்னை சுற்றியுள்ள மற்ற யோகிகளிடம் அவர் இப்படி அறிவித்தார்: "தெரியுமா? நான் இறக்கப்போகிறேன், கூடிய சீக்கிரம் சொர்க்கத்திற்குப் போகப்போகிறேன்," என்று சொல்ல ஆரம்பித்தார். இது மற்ற யோகிகளுக்கெல்லாம் வேடிக்கையாக தோன்றியது. ஒருநாள் அவர்கள் அவரை நிறுத்தி, "நீங்கள் சொர்க்கத்திற்குதான் போகிறீர்கள் என்று உங்களுக்கு எப்படி தெரியும்? கடவுளுடைய மனதில் என்ன இருக்கிறது என்று உங்களுக்கு தெரியுமா என்ன?" என்று அவரிடம் கேட்டார்கள். அதற்கு அந்த யோகி, "கடவுளின் மனதில் என்ன இருக்கிறது என்பதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. என் மனதில் என்ன இருக்கிறது என்றுதான் எனக்குத் தெரியுமே!" என்று பதிலளித்தார். உங்களுடைய சூழ்நிலை எப்படிப்பட்டதாக இருந்தாலும், உங்களை நீங்கள் இனிமையாக வைத்துக்கொள்ளும் தொழில்நுட்பத்தை உங்களுக்கு தருவதுதான் யோகா. அதைத்தான் அந்த யோகியும் சொல்லிக் கொண்டிருந்தார். சொர்க்கம்-நரகம் இரண்டுமே இருமையின் ஒரு பகுதியாகத்தான் இருக்கின்றன. முழுமையாக கரைந்துப் போவதையே முக்தி என்று சொல்கிறோம். நீங்கள் இங்கேயும் போவதில்லை, அங்கேயும் போவதில்லை. நீங்கள் எங்கேயும் போவதில்லை - நீங்கள் அப்படியே கரைந்துப் போய்விடுகிறீர்கள், அவ்வளவுதான். இதனால்தான், ஆன்மீகத் தேடலில் இருப்பவரின் குறிக்கோள் கடவுளும் இல்லை, சொர்க்கமும் இல்லை - முக்தி ஒன்றுதான் அவருடைய குறிக்கோளாக இருக்கிறது.

அத்தியாயம் 9

# துக்கத்தைக் கையாள்வது எப்படி?

ஒரு விஷயத்தை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். யாரோ ஒருவர் இறந்து போய்விட்டதால் உங்களுக்கு துயரம் ஏற்படுவதில்லை. ஒரு உயிர் மறைந்துப்போவது எந்த விதத்திலும் உங்களுக்கு ஒரு பொருட்டாக இருப்பதில்லை. உலகத்தில் ஒருநாளைக்கு ஆயிரக்கணக்கான மனிதர்கள் இறந்துபோகிறார்கள், அதனால் உங்களுக்குள் எந்த வெற்றிடமும் ஏற்படுவதில்லை. நீங்கள் இன்னும் பார்ட்டிகளில் கலந்து கொண்டுதான் இருக்கிறீர்கள். பிரச்சனை என்னவென்றால், இந்தக் குறிப்பிட்ட உயிர் மறைந்து போவது உங்களுக்குள் ஒரு ஓட்டையை விட்டுச்செல்கிறது, அதுதான் உங்கள் பிரச்சனை

## துயரம் என்பதன் அடிப்படை இயல்பு

தங்களுக்கு நேசமான ஒருவர் இறந்துவிட்ட பிறகு, அந்தத் துயரத்தை கடந்துபோவது இன்றைய உலகில் ஒரு பெரிய விஷயமாக ஆகிக்கொண்டு வருகிறது. ஒரு விஷயத்தை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும்: யாரோ ஒருவர் இறந்து போய்விட்டதால் ஒன்றும் உங்களுக்கு துயரம் ஏற்படுவதில்லை. ஒரு உயிர் மறைந்து போவது எந்த விதத்திலும் உங்களுக்கு ஒரு பொருட்டாக இருப்பதில்லை. உலகத்தில் ஒரு நாளைக்கு ஆயிரக்கணக்கான மனிதர்கள் இறந்து போகிறார்கள். உலகத்தை விடுங்கள், உங்களுடைய நகரத்திலேயே எவ்வளவோ மனிதர்கள் இறந்துபோய்க் கொண்டிருக்கிறார்கள், எவ்வளவோ பேருக்கு இறுதிச்சடங்கு நடந்து கொண்டிருக்கிறது, எவ்வளவோ பேர் துக்கத்திலும் துயரத்திலும் இருக்கிறார்கள். இருந்தாலும் அதெல்லாம் உங்களை பாதிப்பதில்லையே, அதனால் உங்களுக்குள் எந்த வெற்றிடமும் ஏற்படுவதில்லையே. நீங்கள் இன்னும் அதே நகரத்தில் பார்ட்டிகளுக்கு போய்க் கொண்டுதான் இருக்கிறீர்கள். பிரச்சனை என்னவென்றால், இந்தக் குறிப்பிட்ட உயிர் மறைந்துபோவது உங்களுக்குள் ஒரு வெற்றிடத்தை விட்டுச்செல்கிறது, அதுதான் உங்கள் பிரச்சனை. உங்களுக்கு துயரம் ஏற்பட அடிப்படையான காரணம் என்ன? பலவிதங்களில் உங்களுடைய

வாழ்க்கையின் ஒரு பாகமாக இருந்த ஒருவர் இப்போது போய்விட்டார் - அதனால் உங்களுடைய வாழ்க்கையின் ஒரு பகுதி வெறுமையாகி விட்டது - இதுதான் காரணம். உங்களால் இந்த வெறுமையை கையாள முடியவில்லை. அதாவது, ஒரு சிலபேர் குழுவாக சேர்ந்து ஒரு விளையாட்டை ஆடிக்கொண்டிருந்தீர்கள். இப்போது திடீரென்று ஒருவர் ஆட்டத்திலிருந்து வெளியேறிவிட்டார், ஆட்டத்தில் ஒரு இடைவெளி ஏற்பட்டுவிட்டது. இதை உங்களால் கையாள முடியவில்லை, அதுதான் உங்கள் துயரத்திற்கு காரணம்.

இந்த குறிப்பிட்ட ஒருவரின் மரணம் உங்களை முழுமை இல்லாதவராக விட்டுச்செல்கிறது, அதுதான் உங்கள் பிரச்சனை. யாரோ ஒருவரை சுற்றியே உங்களுடைய வாழ்க்கையை உருவாக்கினீர்கள், உங்கள் மனதில் பல திட்டங்களை போட்டீர்கள் - "நான் இந்த நபரைத்தான் திருமணம் செய்துகொள்வேன், இரண்டு குழந்தைகளைப் பெற்றுக்கொள்வேன், அந்த குழந்தைகள் இதை இதை செய்யும்படி பார்த்துக்கொள்வேன்," என்று பலவிதமாக கற்பனை செய்திருந்தீர்கள். இப்போது, இந்த மனிதர் உங்கள் வாழ்க்கையிலிருந்து மறைந்து போனவுடன், திடீரென்று உங்களுடைய கனவுகள் எல்லாம் நொறுங்கிப் போய்விட்டது. உங்களைப் பற்றி என்ன செய்வது என்று உங்களுக்கு ஒன்றும் புரியவில்லை. உங்களுடைய கற்பனைகள் கலைந்துவிட்டன. அப்படியென்றால் உங்களுடைய கற்பனைகள் எல்லாம் அழிக்கப்பட்டுவிட்டன என்றுதானே அர்த்தம்? உங்களுடைய கற்பனைகள் எல்லாம் அழிந்துவிட்டால், அப்போது மாயை என்பது விலகிவிட்டது - நிஜத்திற்கு வந்து சேர்ந்திடும் சரியான நேரம் இதுதான். துரதிர்ஷ்டவசமாக, பெரும்பாலான மனிதர்கள் இதை தங்களுக்குள் மிகவும் பாதிப்பான அனுபவமாக, கேடு விளைவிக்கும் நிகழ்வாக ஆக்கிக்கொள்கிறார்கள்.

துயரம் என்பது உங்களுக்குள் ஏற்படும் முழுமையில்லாத உணர்வைப் பற்றியதுதான். பெரும்பாலான மனிதர்கள் தங்களுடைய கணவனையோ, மனைவியையோ, குழந்தையையோ, பெற்றோர்களையோ இழப்பதால் ஏற்படும் பாதிப்பைவிட, தங்களுடைய வாழ்வாதாரத்தை இழக்கும்போதும், தங்களுடைய பணத்தையெல்லாம் இழக்கும்போதும் அதிக பாதிப்பை அனுபவிப்பார்கள் - இப்படி சொல்வது கொடூரமாக தோன்றலாம், ஆனால் இது உண்மைதான். அதனால், யாரும் இறந்து போகாவிட்டாலும்கூட உங்களுக்கு துயரம் ஏற்பட முடியும். தாங்கள் வெற்றிகரமாக இல்லை என்ற காரணத்திற்காகவே மனிதர்கள் துயரத்தில் இருக்கமுடியும். தாங்கள் விரும்பியது கிடைக்கவில்லை என்ற காரணத்தினால் மனிதர்கள் துயரத்தில் இருக்கமுடியும். தங்களுடைய வீடு எரிந்து போய்விட்டதால் துயரத்தில் இருக்கமுடியும். தங்களுடைய கார் தொலைந்துவிட்டதால்

அவர்கள் துயரமாக இருக்கமுடியும். ஒரு குழந்தை தன்னுடைய கரடி பொம்மையை தொலைத்துவிட்ட காரணத்தால்கூட துயரத்தில் இருக்கமுடியும். பெற்றோர்களை பிரிந்திருப்பதைவிட, கரடி பொம்மை இல்லாமல் இருப்பதுதான் அந்த குழந்தைக்கு அதிக பாதிப்பை ஏற்படுத்த வாய்ப்பிருக்கிறது. ஒரு சிறுவன் தன்னுடைய தாத்தாவின் பிரிவைவிட, தன்னுடைய நாயின் பிரிவால் அதிகமான துயரத்தை உணரலாம், இப்படி நடப்பதை நான் பார்த்திருக்கிறேன். அப்போது மற்றவர்கள் அதைப் பார்த்து அதிர்ச்சி அடைந்ததையும் பார்த்திருக்கிறேன். ஆனால், மனிதர்களுக்கு இப்படி நடப்பது சாதாரணம்தான். தன்னுடைய தாத்தாவோடு அந்த பையனுக்கு இருந்த தொடர்பைவிட, தன்னுடைய நாயுடன் அவனுக்கிருந்த தொடர்பு ஆழமாக இருக்கிறது, அதற்கு என்ன செய்வது?

யாரோ ஒருவரை இழக்கும்போது உங்களுக்குள் முழுமையில்லாத உணர்வு ஏற்பட காரணம் என்னவென்று நீங்கள் யோசித்துப் பார்க்கவேண்டும். இந்த உயிர் முழுமையாகவே வந்திருக்கிறது. உள்ளபடியே இந்த உயிரை நீங்கள் உணர்ந்தால், முழுமையில்லாத தன்மையை பற்றிய கேள்வியே இருக்காது. இந்த உயிர் என்பது முழுமையானது. இது முழுமை இல்லாத உயிராக இருந்தால், படைத்தவர் செய்த வேலை சரியாக இல்லை என்றுதானே அர்த்தம்? கிடையாது. இது ஒரு மகத்தான செயல் - பெரும்பாலான மனிதர்கள் புரிந்து கொண்டிருப்பதைவிட பல மடங்கு மகத்தானது இது. இது அற்புதம் மிக்க ஒரு செயலாகும். இந்த உயிர் என்பது முழுமையானதாகும். உள்ளபடியே இந்த உயிரை நீங்கள் உணர்ந்திருந்தால், அப்போது எதுவும் உங்களுக்குள் ஒரு ஓட்டையை விட்டுச்செல்லாது. அப்போது அதை உங்களுடைய தொழிலை வைத்து, காரை வைத்து, வீட்டை வைத்து, குடும்பத்தை வைத்து, இப்படி எதை வைத்தும் அடைத்துவிட முயற்சி செய்ய மாட்டீர்கள். இந்த உயிர் எத்தனையோ விஷயங்களோடு தொடர்புகொள்ள முடியும். எத்தனையோ விஷயங்களோடு இருக்கமுடியும். எத்தனையோ விஷயங்களை தனக்குள் ஒரு பாகமாக அரவணைத்து சேர்த்துக்கொள்ள முடியும். அப்படி இருந்தாலும், அது ஒரு முழுமையான உயிராகவே இருக்கிறது. அது அப்படித்தான் இருக்கிறது. அதை அனுபவத்தில் உணர்ந்து, அந்த நிலையில் நீங்கள் இருந்தால், அப்போது உங்களுடைய வேலையை இழந்தாலும், பணத்தை இழந்தாலும், உங்களுக்கு நேசமானவரை இழந்தாலும், உங்களுக்கு துயரமே ஏற்படாது.

அப்படியென்றால் இறந்து போனவர்களுக்காக நமக்கு எந்த உணர்வுமே ஏற்படாதா? அப்படி இல்லை. அவர்களுக்காக உங்களிடம் ஆழமான

அன்பு இருக்கும். அவர்கள் இங்கே இருக்கும்போது, எப்போதுமே இரண்டு பேருக்குள் சிறிதளவு பிரச்சனை இருக்கவே செய்யும். அவர்கள் உங்களுக்கு எவ்வளவுதான் நெருக்கமாகவும் நேசமாகவும் இருந்தாலும், அவர்களுடன் ஐந்தாறு மணி நேரங்களுக்கு மேல் நெருக்கமாக இருந்தால், அங்கிருந்து கொஞ்சம் வெளியே போகவேண்டும் என்று உங்களுக்கு தோன்றும். எதையாவது காரணம் சொல்லிவிட்டு, கழிவறைக்காவது போய் உட்கார்ந்து கொள்வீர்கள்! அவர்கள் எவ்வளவுதான் நெருக்கமாகவும் அற்புதமானவராகவும் இருந்தாலும், அவர்களிடமிருந்து வேறு எங்காவது போவதற்கு உங்களுக்கு ஏதாவது ஒரு காரணம் தேவைப்படுகிறது. மனிதர்கள் உடலோடு இருக்கும்போது, இரண்டு உடல்கள் எல்லா நேரங்களிலும் நெருக்கமாகவே இருக்கமுடியாது. கொஞ்சநேரம் கழித்து, இரண்டு உடல்களும் விலகிப்போக வேண்டியிருக்கும். அதே சமயம், அவர்கள் உடலில்லாமல் போனபிறகு, அவர்களுக்காக ஆழமான அன்பு வெளிப்படும். ஏனென்றால், இப்போது உடல் என்ற இடையூறு இல்லாமல் போனது.

இரண்டு பேரும் சேர்ந்து பல விஷயங்களை தெரிந்து கொண்டிருக்கலாம். பல நெருக்கமான விஷயங்களை செய்திருக்கலாம் - இரண்டு பேருக்கும் இடையே பல அற்புதமான விஷயங்கள் ஏற்பட்டிருக்கலாம். அப்படி இருந்தாலும், அவர்கள் உயிரோடு இருக்கும் வரை அவர்களுக்கு எதிராக ஏதாவது ஒரு சின்ன விஷயத்தையாவது பிடித்து வைத்துக்கொண்டு எதிர்ப்பை உருவாக்கிக் கொள்கிறீர்கள், ஒரு தடையை வைத்துக் கொள்கிறீர்கள். இப்போது அவருடைய மரணத்தோடு அந்த சின்னச்சின்ன எதிர்ப்புகள் எல்லாம் கரைந்து போய்விட்டன. இப்போது எந்த பிரச்சனையும் கிடையாது; அவர்களால் பேசமுடியாது, உங்களோடு விவாதம் செய்யமுடியாது, உங்களுடைய கருத்தை மறுக்க முடியாது. இப்போது அவர்களுடைய அற்புதமான பக்கத்தை மட்டுமே நீங்கள் பார்க்கவேண்டும். ஆமாம், அவர்களிடம் பிரச்சனை இருந்ததுதான்; அவர்களுக்கு மோசமான ஒரு பக்கமும் இருந்ததுதான். ஆனால், இதெல்லாம் இருந்ததற்குக் காரணம் - அவர்களுக்கு உடலும் மனமும் இருந்தது, அதுதான் காரணம்.

இப்படியாக, ஒருவர் காலமாகிடும்போது நீங்கள் அன்பால் முழுமையாக ஆட்கொள்ளப்பட வேண்டும். துரதிர்ஷ்டவசமாக, உங்களை துயரத்தால் நிரப்பிக் கொள்கிறீர்கள். துயரம் என்பது உங்களுக்குள் ஒரு பெரிய ஓட்டையை ஏற்படுத்துவதால், அது உங்களை முடக்கிவிடும் சக்தியாக இருக்கிறது. அப்போது, அடுத்து என்ன செய்வது என்று உங்களுக்கு ஒன்றும் புரிவதில்லை - ஏனென்றால், உயிர் என்பதை நீங்கள் அனுபவத்தில் உணரவில்லை.

சிலசமயம், துயரம் ஏற்பட உயிர்ரீதியான காரணமும் இருக்க வாய்ப்பு இருக்கிறது. ஆனால், பெற்றவர் ஒருவர் தன்னுடைய குழந்தையை இழந்த சந்தர்ப்பங்களுக்கு மட்டும்தான் இது பொருந்தும். குறிப்பாக, தந்தையைவிட தாய்க்குதான் இது அதிகமாக பொருந்தும். ஒரு தாய் இருபத்தொரு வயதுக்கு கீழே இருக்கும் ஒரு குழந்தையை இழந்தால், அப்போது அந்தத் துயரத்திற்கு உயிர்ரீதியான காரணம் இருக்கலாம். இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களைத் தவிர, மற்றதுக்கெல்லாம் ஏற்படும் துயரம் மனரீதியாக ஏற்படும் பாதிப்புதான். ஒரு குழந்தை நான்கிலிருந்து இருபத்தொரு வயதுக்குள் இறந்து போகும்போது, அந்த இழப்பு ஏற்படுத்தும் துயரம் அதிகபட்சமாக இருக்கிறது. நான்கு வயது வரைக்கும் இந்த ஞாபகம் அந்தளவுக்கு உறுதியாக பதிக்கப்படுவதில்லை. இருபத்தொரு வயதுக்குப் பிறகு இந்த ஞாபகம் நீங்க ஆரம்பிக்கிறது, விலகிப் போகிறது. இதற்கு இடைப்பட்ட காலத்தில் குழந்தை இறந்துபோனால், அப்போது பெற்றவரின் உடலளவில் பதிந்திருக்கும் ஞாபகம் பிரிந்து விலகுகிறது. இதனால் அவருக்கு ஏற்படும் பாதிப்பு உடலளவிலும் அதிகமாக இருக்கிறது. இது ஒவ்வொருவருக்கும் மாறுபடும் - உணர்வுரீதியாக, மனரீதியாக அவருடன் இருந்த தொடர்பையும், எந்தளவுக்கு சார்ந்திருந்தார் என்பதையும் பொருத்து மாறுபடும்.

தங்களுக்குள் ஆழமான தொடர்பை ஏற்படுத்திக்கொண்ட தம்பதிகளுக்கும் துயரத்தின் பாதிப்பு உடலளவில் வெளிப்படலாம். அவர்களில் ஒருவர் இறக்கும்போது, இன்னொருவரின் உடலில் ஏதோ ஒன்று பிரிந்து விலகும் நிகழ்வு ஏற்படுகிறது. அதனால் அவருக்கு பாதிப்பு ஏற்பட வாய்ப்பிருக்கிறது. அப்படிப்பட்டவர்கள், தங்களுடைய துணை இறந்துபோய் ஆறு மாதங்களுக்குள் இவர்களும் உயிரை விட்டுவிடக்கூடும். ஏதோ மனரீதியான அதிர்ச்சியால் இப்படி ஏற்படுகிறது என்ற அவசியமில்லை. அந்த உயிர்கள் ஒருவிதமாக பின்னிப்பிணைந்து இருப்பதால் இப்படி ஏற்படுகிறது. ஆனால் எல்லா நேரங்களிலும் இது உண்மையாகாது. மிகவும் சில மனிதர்கள் மட்டுமே அந்தளவுக்கு நெருக்கமாக இருப்பார்கள். பெரும்பாலான நேரங்களில், துயரத்திற்கு காரணம் உயிர்ரீதியானது கிடையாது. பெரும்பாலான துயரம் மனரீதியானதுதான். அதேசமயம், மனரீதியான பாதிப்பு ஒன்றும் முக்கியத்துவத்தில் குறைந்தது கிடையாது. மனிதனின் உணர்வு என்பது வாழ்க்கையில் மிகவும் சக்திவாய்ந்த அம்சமாகும். மனரீதியான, உணர்வுரீதியான அம்சங்கள், உடல்ரீதியான அம்சங்களைவிட எந்த விதத்திலும் முக்கியத்துவத்தில் குறைந்தது கிடையாது. அதுவும் அதே அளவு சக்திவாய்ந்ததுதான். சொல்லப்போனால், அதிக சக்திவாய்ந்தது என்றும் சொல்லலாம்.

## துயரத்தைக் கடந்துபோவது எப்படி?

இப்படி ஏற்படவேண்டும் என்று நாம் விரும்பவில்லை. இருந்தாலும், ஒருவேளை நம்முடைய குழந்தைகளோ, உடன்பிறந்தவர்களோ அல்லது நமக்கு மிகவும் நேசமானவர் யாரோ நமக்கு முன்பாகவே இறந்துவிட்டால், அந்தத் துக்கத்தை கடந்துபோவது எப்படி? ஒன்றைக் கடந்துபோவது என்று சொல்லும்போது, அதை மறந்து போகவேண்டும் என்று அர்த்தமில்லை. உங்களால் நிச்சயமாக உங்களுடைய குழந்தையை மறக்கமுடியாது, "பரவாயில்லை, இதெல்லாம் இயற்கையாக நடப்பதுதான்," என்று உங்களுக்கு நீங்களே சொல்லிக்கொள்ள முடியாது, நிச்சயமாக முடியாது. உங்களுக்கு மிகவும் விலைமதிப்பான ஒன்று, மிகவும் இன்றியமையாத ஒன்று இப்போது போய்விட்டது என்பதுதான் உண்மை. அதேசமயம், நமக்கு வாழ்க்கை என்று இப்போது என்ன தெரியுமோ அந்தப் பரிமாணத்திற்கு அப்பாற்பட்டு போனபிறகு, அந்த எல்லையைத் தாண்டி அது போய்விட்ட பிறகு, இனிமேலும் அது உங்களுடையது கிடையாது - வாழ்க்கையின் நிஜம் இதுதான். ஒன்றை நீங்கள் நன்றாக புரிந்துகொள்ள வேண்டும்: ஒருவர் இறந்துபோன பிறகு - அது உங்களுடைய பெற்றவரோ, குழந்தையோ, நண்பரோ, யாராக வேண்டுமானாலும் இருக்கலாம் - அவர் இறந்துபோன பிறகு உங்களால் அவருக்கு எந்த அக்கறையும் காட்டமுடியாது, அக்கறைக் காட்டாமல் இருக்கவும் முடியாது. இந்த இரண்டுமே உயிருடன் இருப்பவர்களுக்கு மட்டும்தான். அதாவது, அவர்கள் எல்லைக்கோட்டைத் தாண்டி போய்விட்டார்கள். அதற்கு அப்பாற்பட்ட பரிமாணம் உங்களுடையது கிடையாது, அது உங்களுடைய வேலையும் கிடையாது.

மனிதர்களோடு உங்களுக்கு இருக்கும் தொடர்புகள் எல்லாமே உடல் ரீதியானவை மட்டும்தான் என்பதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். சில தொடர்புகள் மட்டும் உடல்ரீதியானதாக இருப்பதில்லை. ஆனால், 99.99 சதவிகிதம் பேருக்கு மற்றவர்களோடு இருக்கும் தொடர்புகள் எல்லாமே உடல்ரீதியானவைதான். யாரோ உங்களுடைய அம்மாவாக இருக்கிறார், யாரோ உங்களுடைய அப்பாவாக இருக்கிறார், யாரோ உங்களுக்கு கணவராக இருக்கிறார், யாரோ உங்களுக்கு சகோதரனாக இருக்கிறார், யாரோ உங்களுடைய மனைவியாக இருக்கிறார் - இந்த உறவுகள் அனைத்துக்கும் அடிப்படைக் காரணம், இந்த உடல்தான் - இவை அனைத்துமே உடல்ரீதியான தொடர்புகள்தான். இதோடு நீங்கள் பல உணர்வுகளையும் சேர்த்து ஒட்ட வைத்திருக்கலாம். ஆனால், உயிரின் அடிப்படையில், உணர்வுகளுக்கு எந்த அர்த்தமும் கிடையாது. உங்களுடைய ஞாபகங்கள் அனைத்தையும் நான் அழித்துவிடுகிறேன் என்று வைத்துக்கொள்வோம். அப்போது உங்களுடைய உணர்வுகள்

எல்லாமே மறந்து போய்விடும். உங்களுடைய உணர்வுகளுக்கு ஏகப்பட்ட முக்கியத்துவத்தை நீங்கள் கொடுக்கிறீர்கள். ஆனால் அதுவோ மிகவும் மேலோட்டமானதாக இருக்கிறது. உங்களுக்கு இருப்பதிலேயே மிகவும் ஆழமானது என்று நீங்கள் நினைத்திருக்கும் தொடர்புகூட உடல்ரீதியானதுதான்.

இறந்துபோன ஒருவர் - அவர் உங்களுடைய நண்பராகவோ, குழந்தையாகவோ, பெற்றவராகவோ, யாராக வேண்டுமானாலும் இருக்கலாம் - அவர் உயிருடன் இருந்தபோது, அவரைப் பற்றி உங்களுக்கு தெரிந்த விஷயங்கள் என்ன? அவர்களுடைய உடல் உங்களுக்கு பரிச்சயமானது. அவர்கள் தங்களுடைய மனத்தின் சில பகுதிகளை மட்டும் உங்களுக்கு திறந்து காட்டியிருக்க வாய்ப்பிருக்கிறது. அதையும் அவர்கள் உங்களுக்கு முழுமையாக காட்டியிருக்க மாட்டார்கள் - அப்படிப்பட்ட கற்பனையெல்லாம் வைத்துக்கொள்ளாதீர்கள், சரியா? தங்களுடைய உணர்வுகளின் ஒரு சில அம்சங்களை அவர்கள் உங்களோடு பகிர்ந்திருக்க வாய்ப்பிருக்கிறது. இதைத்தவிர அவர்கள் உங்களிடம் வெளிப்படுத்தியது எதுவுமே கிடையாது. இப்போது அவர்கள் இறந்தபிறகு, அவர்கள் உடலை ஒன்றும் தூக்கிக்கொண்டு போகவில்லை. அதனால் உங்களுக்கு பரிச்சயமானதாக இருந்ததில் ஒரு மிகப்பெரிய பகுதி முடிந்து போய்விட்டது. அவர்களுடைய மனத்தில் இருந்த விஷயங்கள் எல்லாவற்றையும் - உங்களைப் பற்றிய ஞாபகங்கள், அவர்களைப் பற்றிய ஞாபகங்கள் எல்லாவற்றையுமே - போகும்போது விட்டுவிட்டுப் போய்விட்டார்கள். இது உங்களுக்குப் பிடிக்கிறதோ இல்லையோ, ஒருவர் உடலை விட்டு போய்விட்டார் என்றால் அதற்குப் பிறகு உங்களுக்கும் அவருக்கும் எந்த சம்பந்தமும் கிடையாது. நீங்கள் இன்னும் இங்கே உயிருடன் உட்கார்ந்துகொண்டு யாரோ ஒருவரை உங்களுடைய சகோதரர் என்று நினைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால் உடலைவிட்டுப் போன அவருக்கு, சகோதரன், சகோதரி, அம்மா, அப்பா என்றெல்லாம் எதுவுமே கிடையாது - அவர் இதற்கெல்லாம் அப்பாற்பட்டு போய்விட்டார். உடலோடு இருக்கும்போது மட்டும்தான் உங்களுக்கு அம்மா இருக்கிறார், அப்பா இருக்கிறார், சகோதரன் இருக்கிறார், சகோதரி இருக்கிறார். உடலை விட்டப் பிறகு அப்படியெல்லாம் ஒன்றுமே இருப்பதில்லை.

ஒருவர் இறந்துபோனப் பிறகு அவருடன் இருந்த பகையை விட்டுவிட வேண்டும், அவரோடு நட்பை வளர்த்துக்கொள்ள வேண்டும் என்று நினைக்கிறார்கள். அது முட்டாள்தனமானது. இறந்துபோன ஒருவர் உங்களுக்கு நண்பரும் கிடையாது, எதிரியும் கிடையாது. எல்லாம் முடிந்துவிட்டது. கதை முடிந்துவிட்டது. நீங்கள் இதை ஏற்றுக்கொள்ள தயாராக இல்லை, அதனால்தான் துக்கம் ஏற்படுகிறது. மெதுவாக இதை

நீங்கள் ஏற்றுக்கொள்ள, ஏற்றுக்கொள்ள துக்கம் குறைய ஆரம்பிக்கிறது, அப்படித்தானே? எப்படியும் பத்து வருடங்கள் கழித்து நீங்கள் அவர்களை மறந்துவிடுவீர்கள். அதற்கு பத்து வருடங்கள் எடுக்காது. ஒருவேளை பத்து வருடங்கள் எடுத்தாலும்கூட, அதன்பிறகு நீங்கள் நன்றாக சாப்பிடுவீர்கள், சிரிப்பீர்கள், சந்தோஷம் அடைவீர்கள், எல்லாமே செய்வீர்கள். நான் என்ன சொல்கிறேன் என்றால் - பதினோரு நாட்கள் துக்கம் அனுசரித்துவிட்டு, இதையெல்லாம் இப்போதே செய்யுங்களேன் - இதில் என்ன பிரச்சனை? யாரோ ஒருவர் இறந்திருக்க நாம் இன்னும் உயிரோடு இருக்கிறோமே என்ற குற்ற உணர்வு மனிதர்களுக்குள் எங்கேயோ இருக்கிறது. அதற்கென்ன, நீங்களும் ஒரு நாள் இறக்கத்தான் போகிறீர்கள். கொஞ்சம் காத்திருக்க வேண்டும், அவ்வளவுதான். இப்படிச் சொல்வது மிகவும் கொடூரமான அணுகுமுறையாக தோன்றலாம், ஆனால் வாழ்க்கையின் நிஜம் இதுதான்.

நம்முடைய வாழ்க்கையில் நாம் ஒரு முடிவு செய்யவேண்டும் - நமக்கு வேண்டியது நம்மை விடுவிக்கும் உண்மையா அல்லது நமக்கு ஆறுதலாக இருக்கும் அலங்காரமான பொய்களா? எது வேண்டுமென்று முடிவு செய்யவேண்டும். உங்களுக்கு ஆறுதல்தான் வேண்டும் என்றால் அப்போது நான் உங்களுக்கு வேறுவிதமான கதையை சொல்வேன். உங்களுக்கு உண்மைதான் வேண்டும் என்றால், இதிலிருந்து விடுபடுவதுதான் உங்கள் விருப்பம் என்றால், அப்போது இது முற்றிலும் வேறுவிதமான விஷயமாகும். நான் ஏதோ உணர்ச்சியற்றுப் போய் இதைச் சொல்லவில்லை. உள்ளதை உள்ளபடி ஏற்றுக்கொள்ளும் நேரம் இதுதான் என்று சொல்கிறேன், அவ்வளவுதான். மரணம் ஏற்படும்போது, பின்னால் திரும்பிப் பார்த்து ஏற்கனவே நிகழ்ந்த விஷயங்களைப் பற்றி சந்தோஷம் அடைவதற்கு நேரம் இதுதான். இதை ஏற்றுக்கொண்டு, இப்போது இங்கிருக்கும் உயிரைப் பற்றி நீங்கள் என்ன செய்யமுடியும் என்று பார்ப்பதற்கு நேரமும் இதுதான்.

உதாரணமாக, உங்களுடைய மகனோ, மகளோ, பேரனோ அல்லது உங்களுக்கு நேசமான யாரோ ஒருவர் காலமாகிவிட்டார் என்று வைத்துக்கொள்வோம். உட்கார்ந்து உங்கள் நிலையை நீங்களே குலைத்துக் கொள்வதற்கு பதிலாக, ஏன் உங்களைச் சுற்றி நீங்கள் பார்க்கக் கூடாது? தங்களை கவனித்துக்கொள்ள யாருமே இல்லாதபடி எத்தனையோ மகன்களும், மகள்களும், பேரன்களும் இருக்கிறார்களே! உங்களுடைய இந்த அன்பையும் அக்கறையையும் லட்சக்கணக்கான விதங்களில் வெளிப்படுத்துவதற்கு போதிய அளவு வாய்ப்புகள் கொட்டிக் கிடப்பதை பாருங்கள். உங்களைச் சுற்றிலும் அத்தனை உயிர்கள் இருக்கிறார்கள், அவர்களுக்கு இந்த அக்கறை தேவைப்படுகிறது - அதேசமயம், இந்த

அன்பையும் அக்கறையையும் வெளிப்படுத்தும் தேவை உங்களுக்கும் இருக்கிறது - பிறகு என்ன, தயவுசெய்து அதை செய்யுங்களேன்! நீங்கள் அதைச் செய்யாவிட்டால் உங்களுடைய துயரம் என்றென்றைக்கும் அப்படியே இருக்கும். அது உங்களுக்குள் அப்படியே அடைப்பட்டு இருக்கும், வாழ்நாள் முழுவதும் உங்களை கொடுமைப்படுத்திக் கொண்டே இருக்கும். நீங்கள் இழந்த ஒரு மகனுக்கு பதிலாக பத்து பேரை உங்களுக்கு சொந்தமாக்கிக் கொள்ளலாம், உங்களுடைய அன்பையும் தாய்மை உணர்வையும் முழுமையாக வெளிப்படுத்திக் கொள்ளலாம். ஒரு மகன் மட்டும் இருந்த சமயத்தைவிட, இப்போது உங்களுடைய வாழ்க்கை இன்னும் எவ்வளவோ அழகானதாக ஆவதற்கு இது ஒரு அடித்தளமாக அமைந்திடும். உங்களால் அப்படி உருவாக்கிக்கொள்ள முடியும். அந்தப் படியை நீங்கள் எடுக்கவேண்டும். இல்லாவிட்டால், உங்களால் மாற்றமுடியாத ஒன்றைப் பற்றியே எப்போதும் துக்கப்பட்டுக் கொண்டிருப்பீர்கள்.

உங்களுக்குள் என்ன நடந்து கொண்டிருக்கிறதோ - அது அப்படி நடப்பதற்கு காரணம் எதுவாக இருந்தாலும் - அதை உருவாக்கியிருப்பது என்னவோ நீங்கள்தான். இதை நீங்கள் ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டும், நீங்கள் விரும்பினால் அதை மாற்றிடவும் முடியும். நாம் உயிரோடு இருக்கும்வரை, இங்கே உயிர் வாழ்பவர்களுக்கு நாம் எந்த விதத்தில் ஒரு பங்களிப்பாக இருக்கமுடியும் என்று பார்க்கவேண்டும், இது முக்கியமானது. ஏனென்றால், குறிப்பிட்ட காலத்திற்குள் சில சடங்குகளைச் செய்வதைத் தவிர இறந்துபோனவர்களைப் பற்றி நாம் செய்வதற்கு ஒன்றுமே இல்லை. அது மட்டுமில்லை, நீங்கள் யாருக்காக துக்கத்தில் இருக்கிறீர்களோ அந்த மனிதர் உங்கள் வாழ்க்கையை வளமாக்கியிருக்கிறார் என்ற நம்பிக்கை உங்களுக்கு இருந்தால், அந்த வளத்தை வெளிப்படுத்துங்கள் - வாழ்க்கையை நீங்கள் வாழும் விதத்தில் அதை வெளிப்படுத்துங்கள். எஞ்சியிருக்கும் வாழ்க்கை முழுவதும் நீங்கள் அழுதுகொண்டே இருந்தால் என்ன அர்த்தம்? இறந்துபோன அந்த மனிதரே இப்போது உங்கள் வாழ்க்கையில் மிகப்பெரிய பிரச்சனை ஆகிவிட்டார் - இதுதானே அர்த்தம்? யாரோ ஒருவர் உங்களுடைய வாழ்க்கைக்குள் நுழைந்தார், இப்போது போய்விட்டார் - உங்களுடைய வாழ்க்கையை அவர் வளம்பெற செய்திருந்தால், நீங்கள் சந்தோஷமாக வாழ்வது அவசியம். அவர்கள் உங்களுக்காக என்ன செய்திருக்கிறார்களோ, அதற்கான நன்றியை அவர்களுக்கு வெளிப்படுத்துங்கள். அவர்கள் என்னவோ உங்கள் வாழ்க்கையில் விஷத்தை ஊற்றிவிட்டு போய்விட்டதுபோல தோன்ற வைக்காதீர்கள்.

இதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும்: இந்த உலகில் ஒருவர் எவ்வளவு பெரிய ஆளாக இருந்தாலும், நாளைக்கு காலையில் நான் இறந்து விழுந்தாலும் அல்லது நீங்கள் இறந்து விழுந்தாலும், இந்த உலகம் நன்றாகவே நடந்துகொண்டிருக்கும். ஒருவேளை நாம் இல்லாததால் இன்னும் சிறப்பாகவே நடக்குமோ என்னவோ! மனிதர்கள் இறந்துபோவது நல்லதுதான். ஏன், இறந்துபோனவர்கள் எல்லோரையும் திரும்பக் கொண்டுவர வேண்டுமா என்ன? இப்போது நீங்கள் உணர்ச்சிவசமாக இருப்பதால், இயல்பாகவே, "தயவுசெய்து இறந்துபோன என்னுடைய சகோதரனை திரும்பக் கொண்டு வாருங்களேன்!" என்று சொல்லலாம். ஆனால் சகோதரனை மட்டும் ஏன், உங்களுடைய தாத்தாவையும், அவருடைய அப்பாவையும், அதோடு அவருடைய அப்பாவையும், எல்லோரையுமே கொண்டு வரட்டுமா? அந்த மனிதர்கள் எல்லாம் விழித்துக்கொண்டு நடக்க ஆரம்பித்துவிட்டால் இந்த உலகத்திற்கு என்னவாகிடும், உங்களால் கற்பனை செய்யமுடியுமா? அவர்கள் இறந்துபோனது நல்லதுதான், இல்லையா? யாரோ ஒருவர் இறந்து போகக்கூடாது என்று நினைப்பது சரியானது இல்லை. மனிதர்கள் இறக்க வேண்டியது அவசியம். அவர்கள் தங்களுடைய வாழ்நாளை முழுமையாக முடித்துவிட்டு இறக்கவேண்டும் என்பதுதான் நம்முடைய விருப்பம். அவர்களுக்கு எந்த அகால மரணமும் ஏற்படக்கூடாது, அது மட்டும்தான் நம்முடைய அக்கறையாக இருக்கிறது. ஆனால், இன்றைய மனிதர்களில் இந்தப் புரிதல் இல்லவே இல்லை. அவர்கள் தங்களுடைய உடல்களோடு மோசமாக சிக்கிப் போயிருக்கிறார்கள். அதனால்தான், ஒருவருக்கு தொண்ணூறு வயது ஆனாலும், நூறு வயது ஆனாலும், அவர்கள் இறந்துவிடக்கூடாது என்று நினைக்கிறீர்கள்.

உங்களுடைய வாழ்க்கையில் உங்களுக்கு எந்த விதமான சூழ்நிலைகள் ஏற்பட்டாலும், நீங்கள் அதைப் பயன்படுத்தி அந்த சூழ்நிலையிலிருந்து அதிக வலிமையுடன் வெளிவர முடியும் அல்லது அந்த சூழ்நிலையால் நீங்கள் நொறுங்கிப் போகமுடியும். இந்த இரண்டு வாய்ப்புகளில் ஒன்றை நீங்கள் தேர்ந்தெடுக்க முடியும். ஒவ்வொரு மனிதனுக்கும் இந்த வாய்ப்பு இருக்கிறது. இந்த சூழ்நிலை ஏற்பட வேண்டுமா, கூடாதா என்பதைப் பற்றி தேர்வுசெய்யும் வாய்ப்பு நம்மிடம் எல்லா நேரங்களிலும் கிடையாது. சூழ்நிலையின் மேல் ஓரளவுக்கு மட்டும்தான் நாம் தாக்கத்தை ஏற்படுத்த முடியும். எத்தனையோ சூழ்நிலைகள் நம்மை மீறியும் ஏற்பட வாய்ப்பிருக்கிறது. ஆனால், இந்த சூழ்நிலைகளை நேர்த்தியாக நயமாக கடந்துபோவதா அல்லது நொறுங்கிப்போகும் விதத்தில் இதை அனுபவிப்பதா என்று தேர்வுசெய்யும் வாய்ப்பு நம்மிடம் எப்போதுமே இருக்கிறது. ஒவ்வொரு முறையும் இந்த வாய்ப்பு நம் கையில் இருக்கிறது.

சரி, ஏதாவது சடங்குகளை செய்து துயரத்தை கடந்துபோக முடியுமா? ஆம், அது சாத்தியம்தான். அப்படி செய்யக்கூடிய விஷயங்கள் இருக்கின்றன, ஆனால் அதைச் செய்வது தகுந்ததா என்பது கேள்விக்குரியதுதான். எல்லாவற்றிற்கும் சடங்குகளை உருவாக்குவது பின்னோக்கி எடுக்கும் படிகள்தான் என்று நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். உங்களுடைய துக்கத்திற்காக சடங்கு செய்வது என்றால் என்ன அர்த்தம்? நீங்கள் எதையும் செய்வதற்கு தயாராக இல்லை - வேறு ஒருவரின் மூலமோ, ஏதோ ஒரு விஷயத்தின் மூலமோ உங்களுடைய துயரம் தீரவேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்கள். உங்களுக்குள் விழிப்புணர்வையும், ஒருவிதமான மனப்பான்மையையும் உருவாக்கிக் கொள்ளும்போது நீங்களாகவே இந்த துயரத்தை விட்டு வெளியேறிடும் வழி இருக்கிறது. அப்படி இருக்கும்போது, சடங்குகளுக்குள் எதற்கு நுழையவேண்டும்? வாழ்க்கையில் ஒரு சில அம்சங்களுக்கு சடங்குகளை பயன்படுத்துவது சரிதான். ஆனால் வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்திலும் சடங்குகளை பயன்படுத்துவது சரியானதே கிடையாது. உங்களுக்கு நேசமான ஒருவர் இறந்துவிட்டால் அதை எப்படி கையாள்வது என்று நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும். அதை விட்டுவிட்டு, உங்களை விடுவிப்பதற்காக ஒரு சடங்கையோ, வேறு உதவியையோ எதிர்பார்ப்பது சரி இல்லை. யாரோ அந்தளவுக்கு நம்பிக்கை இழந்த நிலையில் இருக்கிறாரென்றால், அப்போது பரவாயில்லை, அப்போது அவருக்காக நாம் ஏதோ ஒரு விஷயத்தை செய்வோம். ஆனால், இதுவே சமூகத்திற்கான வழக்கமாக ஆகிவிடக்கூடாது. கொஞ்ச காலத்திற்குப் பிறகு அதுவே நம்மைக் கட்டிப்போடும் விஷயமாக ஆகிவிடும்.

காலபைரவ கர்மா செய்தால், அது துயரத்தைக் கடந்துபோகும் ஒரு கருவியாகவும் பயன்படும். காலபைரவ கர்மா உங்களுக்கும் உங்களுடைய மரபணு ஞாபகத்திற்கும் இடையே ஒரு இடைவெளியை ஏற்படுத்துகிறது. அதை முறைப்படி செய்தால் ஒரு தெளிவான இடைவெளி ஏற்படுகிறது, உங்களுக்கும் இறந்துபோன உறவினருக்கும் இடையே ஒரு இடைவெளி இருப்பதால், ஒரு தூரம் உருவாகிவிட்டதால், இப்போது சட்டென்று எல்லாம் சரியாக இருக்கிறது, நன்றாக இருக்கிறது. அதனால்தான் காலபைரவ கர்மா செய்வதற்காக வருபவர்கள் எத்தனையோ பேர், கர்மா செய்துமுடித்தவுடன் தங்களுக்குள் பெரிய பாரம் குறைந்து மிகவும் லேசானதுபோல உணர்கிறார்கள். காலபைரவ கர்மா என்பது உங்களுடைய துயரத்தை சரிசெய்வதற்கான சடங்கு கிடையாது. ஆனால், அந்தச் சடங்கின் விளைவால், உங்களுடைய துயரமும் சரிசெய்யப்படுகிறது.

## இறந்துபோனவரின் உடைமைகள்

ஒருமுறை, தன் பாட்டியை சமீபத்தில் இழந்திருந்த ஒரு பெண்மணி தனக்குள் தொந்தரவாக இருந்துகொண்டிருந்த ஒரு நிகழ்ச்சியைப் பற்றி விளக்கமாக என்னிடம் சொன்னார். அவருடைய பாட்டி சில மாதங்களுக்கு முன்தான் காலமாகியிருந்தார். ஒருநாள், தன் பாட்டியின் அலமாரியை இவர் சுத்தப்படுத்திக் கொண்டிருந்தபோது, பாட்டியின் உடைகளை எடுத்து அணிந்துகொண்டார். பாட்டியின் சொத்தாக பேத்திக்கு வந்துசேர்ந்த மோதிரத்தையும் போட்டுக் கொண்டிருந்தார். இப்படிச் செய்வது பாட்டிக்கு பிடிக்கவில்லை என்பதை அவர் தன்னிடம் வெளிப்படுத்துவதுபோல் இந்தப் பெண்ணுக்கு தோன்றியது. பாட்டி தன்னைச்சுற்றி இருப்பது போன்ற உணர்வும் அவருக்கு ஏற்பட்டது. அது மட்டுமில்லை, தன் பாட்டியின் சில பழக்கங்களும் இவருக்கு புதிதாக ஏற்பட்டன. அதுவரைக்கும் புகைப்பிடிக்கும் பழக்கம் இல்லாத இவர் புகைபிடிக்க ஆரம்பித்தார். புகைபிடிக்கும் பழக்கம் பாட்டிக்கு இருந்தது. இதுபோல இன்னும் சில விஷயங்கள் இருந்தன, இதனால் அவர் மிகுந்த கவலையில் இருந்தார். இதிலிருந்து தான் விடுபட உதவி செய்யும்படி என்னிடம் கேட்டார்.

பொதுவாகவே இதுபோன்ற பல விஷயங்கள், மனிதர்களின் கற்பனை கட்டுக்கடங்காமல் போவதால் ஏற்படும் விளைவுதான். அதேசமயம், சில நேரங்களில் இதற்கு ஒரு அடிப்படை இருந்திடவும் வாய்ப்பிருக்கிறது. இதுபோன்ற விஷயங்களில் இருந்து நீங்கள் விடுபட வேண்டுமென்றால், முதலில் இறந்துபோனவர்களுடன் தொடர்புபடுத்திக் கொள்வதை நீங்கள் நிறுத்தவேண்டும். இதை நீங்கள் நன்றாக புரிந்துகொள்ள வேண்டும்: அவர்கள் உங்களோடு எவ்வளவு நேசமாக இருந்திருந்தாலும், எவ்வளவு நெருக்கமாக இருந்திருந்தாலும், அவர்கள் உடலைவிட்ட கணத்திலேயே அவர்களுடைய மனம், புத்தி, உணர்வுகள் எல்லாம் முடிந்து போய்விட்டன. உங்களுக்கும் அவருக்கும் இருந்த தொடர்புக்கு அடிப்படையாக இருந்தவை அவைதான் - அந்த அடிப்படைகள் எல்லாமே முடிந்து போய்விட்டன. அவரைப் பற்றி உங்களுக்கு தெரிந்ததாக இருந்தவை எல்லாமே முடிந்து போய்விட்டன. வேறு ஏதோ சாறு மட்டும் இன்னும் இருக்கிறது. ஆனால் அந்த சாறுடன் உங்களுக்கு எந்த சமயத்திலும் எந்த தொடர்பும் இருந்ததே கிடையாது. உங்களுடைய தொடர்புகள் எல்லாம் அந்த மனிதரின் மற்ற அம்சங்களோடுதான் இருந்தன. அந்த அம்சங்கள் எல்லாம் அவர் இறந்தபோதே விழுந்து போய்விட்டன. அதனால், ஒருவர் இறந்து போகும்போது நீங்கள் செய்யக்கூடிய விஷயம் ஒன்றே ஒன்றுதான் - அவருடன் நீங்கள் அனுபவித்த அழகான கணங்களைப் பற்றி சந்தோஷம் அடையலாம் - அவ்வளவுதான் செய்யமுடியும். அப்படிப்பட்ட அழகான கணங்கள் இருந்தால் அதைப் பற்றி சந்தோஷப்படலாம்: அப்படி

இல்லையென்றால் அவர்களைப் பற்றி மறந்துவிடலாம், அவ்வளவுதான். உங்களுடைய குற்ற உணர்வுகளையும், பிரச்சனைகளையும் இறந்தவர் மூலமாக கழித்துக்கொள்ள பார்க்காதீர்கள், அது பெரிய சிக்கலாக மாறிட வாய்ப்பிருக்கிறது.

இறந்தவர்களை இறந்தவர்களிடமே விட்டுவிட வேண்டும். அவர்களோடு ஈடுபட உங்களுக்கு ஒரு வேலையும் கிடையாது. உங்களுடைய உயிரின் மேல் உங்களுக்கு ஒரு ஆளுமை இருந்தால் அப்போது ஈடுபடலாம், அது வேறு விஷயம். மற்றபடி நீங்கள் அந்த திசையில் திரும்பிக்கூட பார்க்கக்கூடாது. இல்லாவிட்டால், அபத்தமாக எதையாவது செய்யப்போய் உங்கள் வாழ்க்கையை மொத்தமாக குலைத்துக் கொள்வீர்கள். தன்னுடைய உடைகளின் மீதும், மற்ற பொருட்களின் மீதும் உங்கள் பாட்டி எவ்வளவுதான் பற்று வைத்து சிக்கியிருந்தாலும், அதெல்லாம் ஒரு பொருட்டே கிடையாது. உடலோடு இருந்த வரை மட்டும்தான் பாட்டியால் அதையெல்லாம் அணிந்துகொள்ள முடியும். இப்போது பாட்டிக்கு உடல் என்பது கிடையாது, அதை அவர் இழந்துவிட்டார் என்பது உங்களுக்கு தெளிவாகவே தெரிகிறது. பிறகு என்ன பிரச்சனை? இதனால் எல்லாம் அவருக்கு இப்போது எந்தப் பயனும் கிடையாது. உடலே இல்லாத ஒருவர் உணவையும், உடைகளையும் வைத்துக்கொண்டு என்ன செய்யமுடியும்? அதைப் பற்றி அவரால் ஒன்றுமே செய்யமுடியாது. உங்களுக்கு உடல் என்பது இருந்தால்தான், உணவையும் உடைகளையும் நோக்கிப் போகவேண்டும். உடலையே இழந்துவிட்ட பிறகு உணவோடும், உடையோடும் உங்களுக்கு என்ன தொடர்பு இருக்கிறது? உடல் இருக்கும்போது கூட நீங்கள் அதிகப்படியாக அதை நோக்கிப் போகக்கூடாது. ஆனால் அப்படி செய்வதற்கு போதுமான காரணமாவது உங்களிடம் இருக்கிறது! உடல் இருந்தால் அதை மறைத்துக்கொள்ள வேண்டிய அவசியம் இருக்கிறது; அதனால் அதை நல்லமுறையில் மறைத்துக்கொள்ள ஆசைப்படுகிறீர்கள், அது பரவாயில்லை. ஆனால் உடலை இழந்துவிட்ட பிறகு, அந்த உடைகளை எதன்மீது அணிந்துகொண்டு அலைவீர்கள்?

பொதுவாகவே, ஒரு சூழ்நிலையோடு அதிகப்படியான உணர்ச்சிகள் கலந்து போய்விட்டால் உங்களுக்கு உள்ளேயும் வெளியேயும் ஏராளமான விஷயங்கள் ஏற்படும். உங்களுடைய பாட்டியின் வீட்டிற்கு போனால், சும்மா அங்கே செய்யவேண்டிய வேலையை மட்டும் செய்யுங்களேன்! உங்களுடைய சாதனாவை செய்யுங்கள், இன்னும் உயிரோடு இருக்கும் உங்கள் தாத்தாவுடன் இருங்கள் - இறந்துபோனவரோடு இருக்க முயற்சிக்காதீர்கள், அதை நிறுத்துங்கள். அங்கே இருக்கும்போது பாட்டியைப் பற்றி கற்பனையான விஷயங்களையெல்லாம் செய்திட

அவசியமில்லை. அதற்கு பதிலாக, அந்த இடத்தில் நீங்கள் இருக்கும் ஒரு சில கணங்களுக்கு உங்களுடைய வாழ்க்கையையும், உங்களுடைய தாத்தாவின் வாழ்க்கையையும் வளமாக்கிக்கொள்வது எப்படி என்று பார்க்கலாமே!

பாட்டியின் விட்டுப்போன ஒரு குறிப்பிட்ட தன்மை, அவருடைய உடைகளில் இன்னும் தங்கியிருக்க வாய்ப்பிருக்கிறது, அது சாத்தியம்தான். அதனால் சில விஷயங்கள் ஏற்பட வாய்ப்பிருக்கிறது. ஆனால், அதற்கு துணைப் போகவேண்டிய அவசியமில்லை. நம் நாட்டில் பல்வேறு வழக்கங்கள் மூலம் இந்த விஷயங்களையெல்லாம் முறையாக பார்த்துக் கொண்டார்கள். அந்த முறைகள் நம்முடைய கலாச்சாரத்திலேயே பின்னப்பட்டிருந்தன. இதுபோன்ற விஷயங்களையெல்லாம் சாதாரணமான நிகழ்வாக ஏற்றுக்கொண்டார்கள். ஒருவர் இறந்த பிறகு, அவரின் உடலோடு நெருக்கமாக தொடர்பில் இருந்த எல்லா உடைகளையும் எரித்துவிடுவார்கள். ஒருபோதும் அதை வைத்திருக்கவே மாட்டார்கள். எப்போதாவது ஒருமுறை அணியப்பட்ட உடைகள் இருந்தால், அதை ரத்தசம்பந்தம் இருக்கும் உறவினருக்கு மட்டுமே கொடுப்பார்கள், வேறு யாரிடமும் தரமாட்டார்கள். அப்போதும், முதல் ஒரு வருடத்திற்கு அந்த உடைகளை அணியமாட்டார்கள்.

ஏன் இப்படியெல்லாம் செய்தார்கள்? நாம் எந்தப் பொருளோடு தொடர்பில் இருந்தாலும், நம்முடைய சக்தி ஓரளவுக்கு அந்தப் பொருளில் சேர்கிறது. அதற்கு ஒருவிதமான வாய்ப்பு கொடுத்தால், இந்த உடைகள் வினோதமாக நடந்துகொள்ள ஆரம்பிக்கும். இதற்காக உங்கள் பாட்டி வரவேண்டிய அவசியமில்லை, உடைகள் தானாகவே வித்தை காட்ட ஆரம்பிக்கும். ஸ்டாட்டிக் மின்சாரத்தைப் பற்றி உங்களுக்கே தெரியும், இல்லையா? சில பொருட்களோடு தொடர்பு ஏற்படும்போது ஆடைகளில் மின்சாரம் சேர்கிறது. அதைப்போலவே, உங்களுடைய உடலோடு நெருக்கமான தொடர்பில் இருக்கும் எந்தப் பொருளுக்கும், உங்களுடைய தன்மை ஓரளவுக்கு சேர்ந்திடும்.

யாராவது உங்கள் மீது மாந்திரீகம் செய்ய விரும்பினால், முதலில் உங்களுடைய நகங்களோ, தலைமுடியோ தங்களுக்கு அகப்படுமா என்றுதான் முயற்சிப்பார்கள். இவை இரண்டும் உங்களுடைய உடலின் பாகமாகத்தான் இருக்கின்றன, அதேசமயம் அடிக்கடி உடலால் உதிர்க்கப்படும் பாகங்களாகவும் இருக்கின்றன. அதனால் இந்த இரண்டு விஷயங்கள் மூலமாக உங்களோடு நேரடியான தொடர்பை ஏற்படுத்திக்கொள்வது சுலபம். இந்த இரண்டும் கிடைக்கவில்லை என்றால், அடுத்ததாக உங்கள் உடலோடு நெருக்கமான தொடர்பில் இருக்கும் உடை எதையாவதுதான் அவர்கள் தேடுவார்கள். இதில் முதல்

இலக்காக இருப்பது உள்ளாடைதான். அதனால்தான், அந்தக் காலத்தில் தங்களுடைய உள்ளாடைகளை ஒருபோதும் யாரும் தொடமுடியாதபடி மிகுந்த கவனத்தோடு பார்த்துக்கொள்வார்கள். இந்த காலத்தில் இதையெல்லாம் துவைக்க சலவைக்காரரிடம்தான் அனுப்புகிறார்கள். இல்லாவிட்டால் பாரம்பரியமாகவே, நமது வீடுகளில் இதையெல்லாம் மூடப்பட்ட ஒரு கூடைக்குள்தான் வைப்பார்கள். அதை வீட்டுக்குள்தான் துவைக்கவேண்டும். ஒருபோதும் அதை வெளியே எடுத்துப் போகக்கூடாது - ஏனென்றால், இதன்மூலம் உங்களுக்கு யாராவது ஏதாவது செய்ய வாய்ப்பிருந்தது. இப்படி, உடைகளுக்குள் உங்களுடைய தன்மை தேங்கியிருக்கும் வாய்ப்பிருக்கிறது. அதனால்தான் ஒருவர் இறந்தபிறகும் அதில் இன்னும் ஒருவிதமான சக்தி இருக்கிறதென்றால், சில சமயம் அந்த உடைகள் மெலிதான சத்தத்துடன் லேசாக படபடக்கலாம்.

சில நேரங்களில், அந்தப் பொருட்கள் நிஜமாகவே நகர்ந்துபோகும் நிகழ்வுகளும் இருந்திருக்கின்றன. குறிப்பாக, அவர்கள் நெருக்கமாக பயன்படுத்திய பொருட்கள் - அவை தானாகவே இங்கும் அங்கும் நகர்ந்துபோக ஆரம்பிக்கும். ஏதோ அந்த மனிதரே வந்து இதையெல்லாம் நகர்த்திவிட்டார் என்றெல்லாம் ஒன்றும் கிடையாது. என்ன, அந்தப் பொருட்களோடு தொடர்பில் இருந்த சக்தி ஒருவிதமாக விலகிப் போய்க்கொண்டிருக்கிறது, அவ்வளவுதான். விலகிப்போகும் நிகழ்வின்போது அதிகப்படியாக கொஞ்சம் அசைவு இருந்திடும். அதாவது, உங்களுடைய கார் என்ஜினை ஸ்விட்ச் ஆஃப் செய்தால், அது நிற்கும்போது காரில் அதிகப்படியாக கொஞ்சம் ஆட்டம் ஏற்படும் அல்லவா? எஞ்சின் நின்று போய்க்கொண்டிருக்கிறது என்றால் அப்போது காரின் அசைவு குறையத்தான் வேண்டும் - ஆனால், அப்படி ஏற்படுவதில்லை. அதைப்போலவே, உயிர் ஒரு நிலையில் இருந்து இன்னொரு நிலைக்கு நகரும்போது அதிகப்படியாக கொஞ்சம் அதிர்வு ஏற்படும். இந்த அதிகப்படியான அசைவைத்தான் தவறாக புரிந்துகொண்டு பேய்கள் நடமாடுவதாக நினைத்துக் கொள்கிறார்கள்.

இந்த மனிதருக்கு காலபைரவ கர்மா போன்ற ஒரு செயலை செய்தால், அவரின் விட்டுப்போன பதிவுகள் எதுவும் நிச்சயமாக இல்லாதபடி அது பார்த்துக்கொள்ளும். இப்போது இறந்துபோனவரை மூட்டைக்கட்டி அனுப்பிவிடலாம், உயிரோடு இருப்பவர்கள் தங்களுடைய வாழ்க்கையை தொடரலாம். உயிரோடு இருப்பவர்கள் இறந்தவர்களோடு ஈடுபட்டு போனால் பல விதங்களில் அவர்களின் உயிர் எடுக்கப்படுகிறது. இந்த திகிலான விஷயங்களெல்லாம் ஆர்வத்தை கிளப்பும்படி இருந்தாலும், இது பல்வேறு விதங்களில் உங்களுடைய உயிரை எடுக்கும். அது இனிமையாகவே இருக்காது. அப்படியென்றால், இறந்துபோன ஒருவர்

உங்களுடைய உயிரை குடிப்பதற்கு முயற்சிக்கிறார் என்று அர்த்தமில்லை, அப்படிக் கிடையாது. இறந்தவர்களிடம் நீங்கள் காட்டும் ஈடுபாடே இதை ஏற்படுத்த முடியும், அவ்வளவுதான். நீங்கள் போதுமான அளவுக்கு உறுதியாக நிலைபெற்றும், குறிப்பிட்ட விதமான திறமைகளுடனும் இருந்தாலே தவிர அந்தத் திசையில் நீங்கள் திரும்பியே பார்க்கக்கூடாது. அது உங்களுக்குத் தேவையானதே கிடையாது.

## குறுகிய இடைவெளிக்குள் உயிர்விடும் தம்பதிகள்

சில பறவைகளுக்கு இப்படி ஏற்படுகிறது, சில சமயம் மிருகங்களுக்கும் மனிதர்களுக்கும் கூட இப்படி ஏற்படுகிறது: அவர்கள் மிகவும் நெருக்கமான தம்பதிகளாக இருந்தால், ஒருவர் இறந்துபோன பிறகு மூன்றிலிருந்து ஆறு மாதங்களுக்குள் இன்னொருவரும் இறந்து போய்விடுவார். ஏன் இப்படி நிகழ்கிறது? ஒரு காரணம் என்னவென்றால், இந்தியாவில் இப்படி ஒரு வழக்கம் இருந்தது - அவர்களுக்கு திருமணம் ஆகும்போது, அவர்களுடைய சக்தி ஒருவிதத்தில் ஒன்றாக பிணைக்கப்பட்டது. அந்த காலத்தில், நம் தேசத்தில், பிரிந்து போவதை பாரம்பரியம் அனுமதிக்கவில்லை. அதனால், எப்படியும் இவர்கள் பிரிந்து போகமாட்டார்கள் என்பதால் இருவரையும் சக்திநிலையில் கட்டிப்போடும் உரிமையை பெரியவர்கள் எடுத்துக் கொண்டார்கள்.

பாரம்பரியமாகவே, திருமணத்திற்குப் பிறகு பெண்கள் தங்களுடைய கால் விரல்களில் மெட்டி அணிவது வழக்கம் - இது உங்களுக்கு தெரிந்ததுதான். இதை ஏன் அணிந்தார்கள்? ஏனென்றால், அந்தப் பெண் திருமணம் என்பதை தனக்குள் ஒரு மகத்தான அனுபவமாக உணர்ந்தாள் - இந்த அனுபவத்தால் அவள் உடலை விட்டே வெளியேறிவிடும் வாய்ப்பிருந்தது.

வழக்கமாக எட்டு, பத்து வயதிலேயே அவர்களுக்கு திருமணம் செய்துவிடுவார்கள். கணவனும் மனைவியும் தனித்தனியாகவே வாழ்வார்கள். பதினான்கு, பதினைந்து வயது வரும் வரைக்கும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்ள மாட்டார்கள். இந்த காலகட்டத்தில், அந்தப் பையனுக்கு உடல்ரீதியாகவும், மனரீதியாகவும் பயிற்சி அளிக்கப்பட்டது - அவனுக்காக தன்னை அர்ப்பணித்துள்ள பெண்ணைப் பாதுகாத்து காப்பாற்ற வேண்டும் என்று பழக்கப்படுத்தினார்கள். பெண்களுக்கு உணர்வுப்பூர்வமாக இருக்கும் தன்மை அதிகமாக இருக்கிறது. அதனால், அந்தப் பெண்ணுக்கு மனரீதியாகவும், உணர்வுரீதியாகவும் பயிற்சி அளிக்கப்பட்டது - தன்னுடைய கணவன்தான் அவளுக்கு கடவுள் என்று நம்பும்படி அவளை பழக்கப்படுத்தினார்கள். அவள் மனதில் இந்த சாத்தியம் உருவாக்கப்பட்டது. உடலளவில் முதிர்ச்சி ஏற்பட்ட

பிறகுதான் அவளை கணவனுடைய வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போவார்கள். அப்போது, தன்னுடைய கணவனிடம் வந்து அவனைப் பார்க்கும்போது, அது ஒரு மகத்தான அனுபவமாக அவளுக்கு இருக்கும் - அவளுடைய உயிரே அவளுக்குள் வெடித்துவிடுவது போன்ற மகத்தான அனுபவமாக இருக்கும். அந்த சமயத்தில் அவள் தன்னுடைய உடலைவிட்டு வெளியே நழுவிட வாய்ப்பிருந்தது. அப்படி நிகழாமல் தடுத்திட அந்தப் பெண்ணின் உடலில் ஏதாவது உலோகத்தை போடவேண்டும் என்பதற்காக மெட்டியின் வடிவில் அதைப் போட்டார்கள். உடலில் உலோகப் பொருளை அணிவதால் தற்செயலாக நடக்கும் அப்படிப்பட்ட நிகழ்வுகளை தடுக்கமுடியும். சிலரிடம் சில விதமான ஆன்மீக சாதனைகளை செய்யும்படி நாம் சொல்லும்போதும் இப்படி செய்கிறோம். அவர்களுக்கு ஒரு மோதிரத்தையோ, கையில் அணியும் வளையத்தையோ தருவோம். குருவின் அனுமதி இல்லாமல் அதை கழட்டவே கூடாது. அவர்கள் தற்செயலாக உடலைவிட்டு வெளியேறாமல் தடுக்கவே இப்படிச் செய்கிறோம்.

இந்த கலாச்சாரத்தில் வியாபாரம், திருமணம், குழந்தைப்பேறு, குடும்ப வாழ்க்கை - இப்படி ஒவ்வொன்றுமே முக்தியை நோக்கிப்போகும் கருவியாகத்தான் பயன்படுத்தப்பட்டது. அந்த காரணத்தால்தான் புதிதாக திருமணமான அந்தப் பெண்ணையும் பையனையும் அந்த விதத்தில் வளர்த்தார்கள் - நான்கிலிருந்து ஆறு வருடங்களுக்கு இரண்டு பேருமே ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருக்க மாட்டார்கள். அதேசமயம், அவர்கள் சந்திக்கும்போது மகத்தான ஒரு நிகழ்வு ஏதோ ஏற்படப்போகிறது என்று இருவருமே நம்பும்படி வளர்த்தார்கள். அதனால், அந்தக் குழந்தையின் மனதில் அவ்வளவு பெரிய சாத்தியமாக இது வளர்ந்தது. திருமணத்தில் இரண்டு உடல்கள் மட்டும் சந்திக்கவில்லை. இரண்டு மனங்களும் உணர்வுகளும் மட்டும் சேரவில்லை. திருமணத்தின் மூலம் அந்த இரண்டு உயிர்களுமே ஒன்றாக ஐக்கியமாகும்படி ஒரு குறிப்பிட்ட சடங்கு, முறையாக செய்யப்பட்டது.

ஒரு பெண்ணுக்கு திருமணம் ஆகும்போது அவளுடைய கழுத்தைச் சுற்றி *மங்கல சூத்திரம்* என்று அழைக்கப்படும் ஒரு நூல் அணிவிக்கப்பட்டது. *மங்கலம்* என்றால் சுபம், *சூத்திரம்* என்றால் நூல். மங்கல சூத்திரம் என்பது சக்தியூட்டப்பட்ட ஒரு நூல் - அதை ஒவ்வொரு வருடமும் மாற்றிக்கொள்ள வேண்டும். இதைப் பற்றி நன்கு அறிந்தவர் ஒருவர் இருந்தால், அவரால் உயிருள்ள ஒரு மங்கல சூத்திரத்தை தரமுடியும் - அது கணவன், மனைவி ஆகிய இருவருடைய சக்திகளும் பொருந்திப் போகும்படி அமைத்திடும் - இதனால் அவர்கள் உடலிலும், மனதிலும், உணர்ச்சியிலும் மட்டும் பிணைக்கப்படவில்லை - அந்த உயிர்கள்

இரண்டுமே ஒன்றோடொன்று பிணைக்கப்படுகின்றன. அதாவது, சூத்திரம் சரியானதாக அமைந்தால், உங்களுடைய பட்டம் நன்றாக பறக்கும் அல்லவா? அப்படித்தான் இதுவும் - மாங்கலசூத்திரம் என்பது உங்களுடைய திருமணத்தை இன்னும் அர்த்தமுள்ளதாகவும், வெற்றிகரமாகவும் ஆக்குவதற்காக அமைந்தது. ஆனால் இன்றைக்கோ, கெட்டியான தங்கச் சங்கிலிகளைத்தான் அணிகிறார்கள். இது மாங்கலசூத்திரத்திற்கு ஒரு மாற்றாக அமைய முடியாது. அந்த சூத்திரம் ஒருவரை மணவாழ்க்கையில் உயர்ந்து பறக்கும்படி செய்தது. ஆனால், இந்த தங்கச்சங்கிலி என்பது அடிமைச் சின்னமாக இருக்கிறது. துரதிர்ஷ்டவசமாக, இப்படி மாறிப் போயிருக்கிறது.

அந்தக் காலத்தில் மனிதர்களுக்கு இந்தப் புரிதல் இருந்தது: அதாவது, ஒரு திருமணத்தில் உடல்களும், மனங்களும், உணர்வுகளும் பொருந்திப் போவது முக்கியமானது கிடையாது. அந்த உயிர்கள் இரண்டும் ஒன்றோடு ஒன்று பின்னிப்பிணைந்து வேறுவிதமான பந்தம் ஏற்படுவதுதான் மிகவும் முக்கியமானது. இதற்காக அவர்கள் பல கருவிகளையும் பயன்படுத்தினார்கள். தம்பதியர்கள் பலரும் திருமணத்திற்கு முன்பாக ஒருவரோடு ஒருவர் பேசியிருக்கவே மாட்டார்கள். அதேசமயம், அவர்களுடைய திருமணம் இந்த விதத்தில் செய்யப்படும்போது, அந்த திருமணம் விவரிக்க முடியாத ஒரு பந்தத்தை அவர்களுக்குள் உருவாக்கிவிடுகிறது. ஏனென்றால், அவர்களுக்குள் பொருந்திப்போகாத தன்மைக்கு வாய்ப்பே இல்லாதபடி இரண்டு உயிர்களையும் பிணைக்கும் விஞ்ஞான முறையாக திருமணம் அமைந்தது. தான் திருமணம் செய்துகொண்டவர் ஒரு பிசாசாகவே இருந்தாலும், அவர்களுக்கு அது ஒரு பொருட்டாகவே இல்லை. அப்போதும் அவர்களுக்குள் பந்தம் ஏற்பட்டது. அவர்களுக்குள் பரவசம் ஏற்பட்டது - தங்களுக்குள் ஏற்பட்ட ஐக்கியத்தால் மட்டுமே இப்படி உணர்ந்தார்கள், அந்த இன்னொருவரின் செயலால் அப்படி ஏற்படவில்லை. இந்த நிலையில் ஒருவர் இருக்கும்போது, அவரின் கணவரோ மனைவியோ என்ன செய்கிறார் என்பது ஒரு பொருட்டாகவே இருக்காது. தங்களுக்குள் இருந்தவிதமே வெடித்துப்போகும் அனுபவமாக அவர்களுக்கு இருந்தது. ஒரு மனிதரின் அனுபவம் என்பது 100 சதவிகிதம் அவருக்குள்தான் நிகழ்கிறது. அதனால், அவருடைய வாழ்க்கைத்துணை எப்படிப்பட்டவராக இருந்தாலும், அது ஒரு பொருட்டாக இருப்பதில்லை, அவரால் தன் வாழ்வின் உச்சத்தை தொடமுடியும்.

திருமணம் என்பது இந்த விதத்தில் செய்யப்பட்டது. அதனால்தான் பல நேரங்களில் அவர்களில் ஒருவர் போய்விட்டால், அதிலிருந்து குறுகிய காலத்திற்குள் இன்னொருவரும் போய்விடுவார். இன்றைக்கோ, புள்ளிவிவரங்களின்படி, அளவுக்கதிகமான தம்பதிகள் ஒருவருக்கு ஒருவர்

ஆறு மாத இடைவெளிக்குள் இறந்துபோகிறார்கள் என்று தெரிகிறது. ஆனால் இதற்கு முக்கியமான காரணம், வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள இடையூறுகள்தான், வேறு காரணங்கள் எதுவும் அவ்வளவாக இல்லை. நாமெல்லாம் பெரிய கூட்டுக் குடும்பங்களாக வாழ்ந்தமுறையில் இருந்து இன்று தனித்தனி குடும்பங்களாக வாழும்முறைக்கு வந்துவிட்டோம். இதனால், தம்பதிகளில் ஒருவர் இறந்துபோகும்போது, பல நேரங்களில் இன்னொருவரை கவனித்துக்கொள்ள யாருமே இருப்பதில்லை. இப்போது, அவருடைய வாழ்க்கையின் போக்கு ஆட்டம் கண்டுபோவதால் இறந்துபோக வேண்டும் என்ற விருப்பம் அவர்களுக்குள் மிகவும் வலுக்கிறது. அவர்கள் இருவரும் உயிரோடு இருந்தபோது, இரண்டு பேருமே தள்ளாமையில் இருந்தாலும் ஒருவருக்கு ஒருவர் உதவியாக இருந்தார்கள். ஒருவர் இறந்துபோனவுடன், உதவிக்கு வேறு எந்தத் துணையும் இல்லாததால், இன்னொருவரும் போய்விட வேண்டும் என்று விரும்புகிறார். அன்பாகவும் அக்கறையாகவும் இருக்கும் குழந்தைகளோடு வாழ்பவர்களைத் தவிர மற்றவர்களுக்கு இப்படித்தான் இருக்கிறது. அதனால், தாங்களும் போய்விட வேண்டுமென்று விரும்புகிறார்கள்.

அதே சமயம், மரணத்தில் ஒருவரை இன்னொருவர் தொடர்வதற்கு, அவர்களின் துணை இல்லாமல் போனதோ, உணர்வுரீதியான சரிவோ எல்லா நேரங்களிலும் காரணமாக இருப்பதில்லை. சக்திரீதியாக ஒன்றோடு ஒன்று சேர்த்து கட்டப்பட்ட உயிர்கள் இருவரும் பிணைப்போடு வாழ்ந்தார்கள் - இதன் விளைவாகவே அவர்கள் உடலை நீத்திடும் போக்கும் இப்படி ஏற்படுகிறது. இது வெறும் எண்ணத்தின் அளவில் மட்டும் ஏற்படுவதில்லை; இது அதையும் தாண்டி ஆழமாக இருக்கிறது.

## சுவடுகளை விட்டுச் செல்லுமா சில மரணங்கள்?

ஒருவரின் மரணம் இயற்கையாக ஏற்படாமல் பயங்கரமான விதத்தில் நிகழ்ந்தால், அந்த உயிர் அப்படியே சுற்றிக் கொண்டிருக்கும், அதனால் அந்த இடத்தை பாதிக்கும் என்று ஏற்கனவே பார்த்தோம். அப்படியென்றால், போர்களின்போது ஏராளமான மனிதர்கள் பயங்கரமாக கொல்லப்படுகிறார்களே, அதனால் அந்த இடத்தில் எதிர்மறையான விளைவுகள் ஏதாவது இருக்குமா? இதை இரண்டு பகுதிகளாக பார்க்க வேண்டியிருக்கிறது: பண்டைய காலத்தில் ஏற்பட்ட போர்களை பார்த்தால், வாள்களும் வேல்களும் ஏந்திய மனிதர்கள் முழுவேகத்தில் எதிரெதிராக ஓடிவந்து மோதிக்கொண்டார்கள், சண்டை போட்டார்கள். அப்படிப்பட்ட சூழ்நிலையில் அந்தளவுக்கு பயம் ஏற்படாது என்று நான் நினைக்கிறேன். மரணமும் அழிவும் மிகவும் வேகமாகவே ஏற்பட்டது. இது நவீனகாலத்துப் போர்முறைகளுக்கும் பல நேரங்களில் பொருந்தும்.

அந்த விதத்தில் பார்க்கும்போது, மிச்சமாக விட்டுப்போகும் தன்மை எதுவும் இதில் இல்லை.

அவர்களுக்கு பயத்தை உருவாக்கும்படி ஒரு வாய்ப்பை ஏற்படுத்தினாலோ - அவர்களை ஓரம் கட்டினால் அல்லது வேறு ஏதாவது செய்தால் மட்டுமே அவர்கள் பயந்து நடுங்குவதற்கு வாய்ப்பிருந்தது. ஆனால், பண்டைய காலத்துப் போர்களில் அவ்வளவு பெரிய அளவில் இப்படி ஒன்றும் நடக்கவில்லை.

முதல் உலகப்போர் அல்லது இரண்டாவது உலகப்போரை எடுத்துக் கொண்டால், அந்தப் போர்கள் பெரும்பாலும் பதுங்குக் குழிகளில்தான் போரிடப்பட்டன. அந்த பதுங்குக் குழிகள் பயம் குடிகொண்டிருந்த கொடூரமான இடங்களாக இருந்தன. மனிதர்கள் குளிரின் விறைப்பிலும் பசியிலும் வாடினார்கள்; உடல் உறைந்துபோய், கைகளிலும் கால்களிலும் விரல்கள் விழுந்துபோனது, வலி ஏற்பட்டது, இப்படிப் பல பாதிப்புகள் இருந்தன. அவர்கள் அங்கே உட்கார்ந்து மரணத்திற்காக காத்துக் கொண்டிருந்தார்கள், அதனால் பயம் ஏற்பட்டது. அதற்கு பதிலாக கையில் ஒரு துப்பாக்கியை தூக்கிக்கொண்டும், சத்தமாக கத்திக்கொண்டும் ஓடினீர்கள் என்றால், ஒன்று நீங்கள் இறந்துபோவீர்கள், இல்லாவிட்டால் எதிரி இறந்துபோவார். அப்போது அது வேறுவிதமாக இருக்கும். அது ஒரு கார் விபத்தைப் போலத்தான் இருக்கும். முழுவேகத்தில் ஓட்டிக் கொண்டிருந்தீர்கள், திடீரென்று "பூம்!" என்று இடித்தது - ஒன்று, நீங்கள் இறந்துபோவீர்கள், இல்லாவிட்டால் இடித்தவர் இறந்துபோவார், அவ்வளவுதான். ஆனால் அவர்களோ, அங்கே அந்தப் பதுங்குக் குழிகளில் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள், காத்துக் கொண்டிருந்தார்கள். ஒரு சிறு சதவிகித மனிதர்கள் மட்டுமே அதிக பயமில்லாமல் இருப்பார்கள் - நாட்டிற்காக செய்கிறோம் என்ற உணர்வுடன் அவர்களுடைய நோக்கம் பெரிதாக இருந்திருக்கலாம். ஆனால், அப்படிப்பட்ட தியாக உணர்வெல்லாம் இல்லாதவர்கள் அங்கே எத்தனையோ பேர் இருந்தார்கள். அவர்கள் போர் எனும் சதுரங்கத்தில் வெட்டுக் கொடுக்கப்படும் காய்களைப்போல ஆனார்கள். இந்த நாட்டில் வந்து ஏன் பிறந்து தொலைத்தோம் என்று அவர்கள் நினைத்திருக்கலாம். இப்போது இங்கே பதுங்குக் குழிகளில் இருக்கிறார்கள், எந்த நேரத்திலும் கொல்லப்படும் சூழ்நிலையில் இருக்கிறார்கள். அப்படிப்பட்ட மனிதர்கள் பயத்தின் உச்சியில் இருந்திருப்பார்கள்.

அவர்கள் இறந்துபோயிருந்தாலும், இறக்கவில்லை என்றாலும் அந்த இடத்தில் விட்டுப் போயிருக்கக்கூடிய பயமே மிகப்பெரிய எதிர்மறை சக்தியாக இருந்திடும். உலகின் மற்ற தேசங்களைவிட ஐரோப்பாதான், இப்படிப்பட்ட நீண்டகால பயத்தையும், பாதிப்பையும் அதிகமாக அனுபவித்து

இருக்கிறது என்று நினைக்கிறேன். அந்தளவுக்கு அதிக எண்ணிக்கையில் உயிர்கள் இறந்துவிழுவது எந்த ஒரு இடத்தின் மேலும் தாக்கத்தை ஏற்படுத்தும். குறிப்பாக, பெருமளவிலான மனிதர்கள் பயத்தோடு இறந்து போகும்போது, அதன் வெளிப்பாடுகள் ஆரோக்கியத்தை பெரிதும் சீர்குலைப்பதாக இருக்கலாம். அந்த பாதிப்பு மனரீதியாக இருக்கலாம், அதைத் தாண்டி சக்திநிலையிலும் கலந்துபோகலாம். இந்த உயிருக்கு நலன் பயப்பதுதான் உயிர்சக்தியின் ஒருமுகமான நோக்கம். ஒருவரின் சக்திகள் தம் அடிப்படை நோக்கத்தையே இழக்கும்படி பாதிக்கப்படலாம். அனைத்திற்கும் மேலாக, அப்படிப்பட்ட சூழலில் வாழ்பவர்களுக்கு சந்தோஷம் என்றால் என்னவென்றே தெரியாது, அன்பு என்றால் என்னவென்றே தெரியாது - இப்படிப்பட்ட விஷயங்களெல்லாம் தங்களைச் சுற்றி வெளிப்படும் சூழலில், சந்தோஷமும் அன்பும் ஏற்படுவது மிகவும் கஷ்டமாகிவிடும். அவர்கள் காமம், உடலுறவு போன்ற இன்பங்களை உணர்ந்திருக்கலாம். ஆனால், ஒருவர் மீது ஏற்படும் அன்பால் வரக்கூடிய சாதாரண சந்தோஷத்தையும், சாதாரண பிணைப்பையும் அவர்களால் உணரவே முடியாது - சந்தோஷமாகவும் அன்பாகவும் இருக்க விரும்புவது மனிதனின் சாதாரண குணாதிசயங்கள் - இவையே அவர்களுக்கு சிக்கலான விதங்களில் வெளிப்படும்.

இதைப்போன்ற ஒரு விஷயம் குருக்ஷேத்திரப் போருக்குப் பிறகு ஏற்பட்டதாக மகாபாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. குருக்ஷேத்திரப் போர் என்பது மிகவும் கொடூரமான போராக இருந்தது. அந்தப் போரில் ஒரு லட்சத்திற்கும் அதிகமான மனிதர்கள் இறந்துபோனதாக சொல்லப்படுகிறது. அந்த காலத்து ஜனத்தொகைக்கு, ஒரு லட்சம் பேர் இறப்பது என்பது, அதுவும் வெறும் வாளுக்கும் அம்புக்கும் ஒரு லட்சம் பேர் இரையாவது என்பது மிகப் பெரிய எண்ணிக்கை. அவ்வளவு பேரை குண்டுகளும், வெடிமருந்தும் எதுவுமே இல்லாமல், வாளையும் அம்புகளையும் மட்டும் வைத்துக்கொண்டு கொன்றிருக்க வேண்டுமென்றால், அப்போது அங்கே ஏற்பட்ட சண்டையின் அளவும் தீவிரமும் அபாரமாக இருந்திருக்க வேண்டும். அந்தப் போரில் நிகழ்ந்த ஒவ்வொரு சின்ன விஷயமும் விவரமாக பதிவுசெய்யப்பட்டிருக்கிறது. அதனால் அந்தப் போரைப் பற்றி நமக்கு அத்தனை விஷயங்கள் தெரிகிறது. அதே சமயம், போருக்குப் பிறகு பாண்டவர்கள் அந்த நாட்டை முப்பத்தாறு வருடங்களுக்கு ஆட்சிசெய்தார்கள் - அதைப்பற்றி ஒரு வார்த்தைகூட நாம் கேள்விப்பட்டதில்லை. இது கொஞ்சம் விசித்திரமாகத்தான் இருக்கிறது. இந்த முழு இதிகாசத்தின் கதையிலும், போருக்குப் பிறகு நிகழ்ந்ததுதான் முக்கியமான கதையாக இருந்திருக்க வேண்டும், இல்லையா? யார் நாட்டை ஆளவேண்டும், எப்படி ஆளவேண்டும் என்று முடிவுசெய்வதற்காகத்தான் இந்தப் போரே நடந்தது. ஆனால், அதைப்பற்றி நாம் ஒரு வார்த்தைக்கூட

கேள்விப்பட்டதில்லை. ஏனென்றால், அந்த அளவுக்கு முக்கியமானதாக அவர்கள் வாழ்க்கையில் எதுவுமே ஏற்படவில்லை.

அவர்கள் சந்தோஷமான வாழ்க்கையை அனுபவிக்கவில்லை. சும்மா அப்படியே வாழ்ந்தார்கள், ஆட்சி செய்தார்கள், அவ்வளவுதான். நிச்சயமாக, அவர்கள் நாட்டிற்கு ஏதாவது செய்திருப்பார்கள். ஒருவேளை ராஜ்ஜியத்தை அவர்கள் அதிகரித்தும் இருந்திருக்கலாம். ஆனால், முக்கியமானதாக எதுவும் நிகழவில்லை. அவர்களின் வாழ்க்கை ஒருவித வறண்ட நிலையில் இருந்ததால், மனித அனுபவத்தில் முக்கியமானதாக உணரும்படி ஒன்றும் நிகழவில்லை. அந்த ஐந்து பேருக்கும் அவர்களின் குடும்பத்திற்கும் மட்டும் இப்படி இருந்திருக்காது. அந்த ஜனத்தொகை முழுவதும் இப்படித்தான் இருந்திருக்க வாய்ப்பிருக்கிறது. யாரையோ இழந்துவிட்டதால் ஏற்பட்ட மனரீதியான பாதிப்பால் அவர்கள் இப்படி இருக்கவில்லை. ஆம், அந்த தாக்கமும் இருந்திருக்கலாம், ஆனால் அனைத்திற்கும் மேலாக, அவர்களைச் சுற்றி எல்லாப்பக்கமும் மரணத்தின் சுவடுகள் உறைந்திருந்ததால் இப்படி ஏற்பட்டது.

அந்த இடம் அந்தளவுக்கு ரத்தத்தில் தோய்ந்துபோய் இருந்ததால் குருக்ஷேத்திரத்தில் இறந்துபோவது நல்லது என்று இன்றைக்கு சொல்கிறார்கள். உயிரை விடுவதற்கு அது ஒரு நல்ல இடம் என்று நம்புகிறார்கள். அதனால், இறப்பதற்காக குருக்ஷேத்திரத்திற்கு போகிறார்கள். ஒருவேளை, இது யாரோ உருவாக்கிய கட்டுக்கதையாக இருக்கலாம் அல்லது நிஜமாகவே அப்படி இருக்கலாம், எனக்குத் தெரியவில்லை. ஆனால், அந்தக் காலத்தில் அடுத்து வந்த சில தலைமுறைகளுக்கு, அவர்களுடைய *சம்ஸ்காரம்*[1] எனப்படும் வாசனைகளில், மரணத்தின் இந்த உறைந்துபோன சுவடுகள் நிச்சயமாக இருந்திருக்கும். அதனால், மனிதர்களோடு ஏற்படும் பிணைப்பால் உருவாகும் சந்தோஷத்தை அவர்கள் உணர்ந்திருக்கவே மாட்டார்கள்; வாழ்வதால் ஏற்படும் எளிமையான சந்தோஷத்தையும் உணர்ந்திருக்கவே மாட்டார்கள். அவர்கள் கஷ்டப்பட்டு உழைத்திருக்கலாம், அவர்கள் எதையாவது உருவாக்கியிருக்கலாம், பல விஷயங்களை செய்திருக்கலாம். அவர்கள் இங்கேயும் அங்கேயுமாக கொஞ்சம் சிரித்திருக்கலாம், கொஞ்சம் வாழ்ந்திருக்கலாம், எல்லா விஷயங்களையும் தெரிந்து கொண்டிருக்கலாம். ஆனால், உண்மையில் அவர்களுக்குள் சந்தோஷம் என்ற உணர்வே ஏற்பட்டிருக்க வாய்ப்பில்லை. ஐரோப்பாவுக்கும் இப்படித்தான் இருந்திருக்கும் என்று நினைக்கிறேன். அதன் தென்பகுதியைத் தவிர, மற்ற எல்லா ஐரோப்பிய நாடுகளுக்கும் இப்படித்தான் இருந்திருக்கும் என்று நினைக்கிறேன்.

---

1 ஒரு உயிருடைய ஞாபகத்தில் பதிந்து, தேங்கி இருக்கும் போக்குகள், வாசனைகள்.

அப்படியென்றால், இதை சரிசெய்ய முடியுமா? நிச்சயம் சரிசெய்ய முடியும். பிரதிஷ்டை செய்யப்பட்ட பல இடங்களை உருவாக்குவது, அதை சீரமைக்கும் ஒரு வழியாகும். நன்கு சக்தியூட்டப்பட்ட சூழல்களை உருவாக்கினால், அவை திட்டமிட்ட இடங்களில் அமையும்படி செய்தால், நிச்சயமாக ஏராளமான விஷயங்களை சீரமைக்க முடியும். அதே சமயம், ஞானம் தியானம் ஆனந்தம்[2] என்பதைப்போல பயன்தருவது வேறு ஒன்றுமே இல்லை. உண்மையை உணர்ந்த விழிப்புணர்வுதான் ஞானம். ஞானம் தியானம் ஆகிய இரண்டின் விளைவுதான் ஆனந்தம். இது வெறும் அலங்காரமான வாசகம் இல்லை, உண்மையிலேயே இவை மூன்றும் உலகத்தையே மாற்ற முடியும்.

## துக்கம் அனுசரிக்கும் காலம்

பல கலாச்சாரங்களில், ஒருவர் இறந்துபோன பிறகு குறிப்பிட்ட காலம் வரை அவருடைய நெருக்கமான சொந்தங்கள் என்னவெல்லாம் செய்யவேண்டும், என்னவெல்லாம் செய்யக்கூடாது என்ற வரைமுறைகள் இருந்தன. இறந்துபோனவருக்கும், உயிரோடு இருப்பவர்களுக்கும் இடையே கர்மரீதியான ஒரு இடைவெளியை உருவாக்குவதுதான் இதன் முக்கியமான நோக்கம். இப்படிச் செய்வதால், இரண்டு தரப்பினருமே, தங்களுடைய பயணங்களை சிரமமில்லாமல் தொடர்வதற்கு உதவியாக இருந்திடும்.

நாம் தொடர்புகொள்ளும் எல்லோருடனும், எல்லாப் பொருட்களோடும் ருணானுபந்தத்தை உருவாக்கிக் கொள்கிறோம் என்று பார்த்தோம்[3]. ஆனால், எல்லா உறவுகளிலும் நம்முடைய ருணானுபந்தம் ஒரே அளவுக்கு ஏற்படுவதில்லை. அதனால், ருணானுபந்தம் எந்த அளவுக்கு கெட்டியாக இருக்கிறது என்பதைப் பொருத்து, இறந்துபோன ஒருவரின் மரணம் இன்னொரு மனிதரை அந்தளவுக்கு பாதிக்கிறது. உதாரணமாக, ஒருவருக்கு சில சமயம் என்ன காரணம் என்று தெரியாமலேயே, காலையில் எழும்போதே வயிறு கலங்குவதுபோல் ஒரு உணர்வு ஏற்படுகிறது. இதற்கு பல காரணங்கள் இருக்கலாம். அதேசமயம், உங்களுடன் உறுதியான ருணானுபந்தம் கொண்ட யாரோ பாதிப்பில் இருக்கவோ, இறந்து போயிருக்கவோ வாய்ப்பிருக்கிறது. அந்த மனிதரை உங்களுக்கு தெரிந்திருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. ஒருவேளை,

---

2 ஒரு சமயத்தில், ஈஷா யோகாவை தமிழகம் முழுவதும் பிரபலப்படுத்துவதற்கு பயன்படுத்தப்பட்ட வாசகம்.

3 அத்தியாயம் 8ல், "ருணானுபந்தம் எனும் கடன் வலை" என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

நீங்கள் அவரை பார்த்திருக்கவே மாட்டீர்கள். இருந்தாலும், அந்த மனிதருக்கு ஏற்படும் அனுபவத்தால் உங்களுடைய உடல் எதிர்செயல் காட்டுகிறது. இப்படி நடப்பது சாத்தியம்தான். இதைப் பற்றியெல்லாம் பேசுவதில் ஒரு பிரச்சனை இருக்கிறது - மனிதர்கள் எல்லாவிதமான விஷயங்களையும் கற்பனை செய்துகொள்ள ஆரம்பித்துவிடுவார்கள். நாளைக்கே ஒருவருக்கு உடல் சௌகரியமாக இல்லையென்றால் டாக்டரிடம் போவதற்கு பதிலாக, தான் நேற்று செய்த விஷயங்களில் ஏதாவது தவறு இருக்கிறதா என்று பார்ப்பதற்கு பதிலாக, பலவிதமாக கற்பனைகளை செய்துகொள்ள ஆரம்பிப்பார்கள் - அவருக்கு நேசமானவர் யாரோ எங்கேயோ இறந்துவிட்டதாக கற்பனை செய்ய ஆரம்பிப்பார்கள். அதோடு எல்லாவிதமான குழப்பங்களும் ஆரம்பித்துவிடும்.

இந்தியாவில் ஒரு வினோதமான பாரம்பரியம் இருக்கிறது. அதில், இறந்துபோனவரோடு மரபணு சார்ந்த உறவுகொண்டவர்கள் ஒருவிதத்தில் துக்கம் அனுசரிக்கும் முறையை கடைப்பிடிப்பார்கள். அப்படிப்பட்டவர்கள் நாற்பது நாட்களுக்கு கோவில்களுக்கு போவதையும், சமூக நிகழ்ச்சிகளிலும், கொண்டாட்டங்களிலும் கலந்துகொள்வதையும் தவிர்க்க வேண்டியிருக்கும். ஏனென்றால், பண்டைய பாரதத்தில், மரபணு சார்ந்த உறவுகளின் அடிப்படையில் *குலம்* என்னும் முறையை கடைப்பிடித்தார்கள். தலைமுறை தலைமுறையாக அமையும் தெளிவான மரபணுப் பாதையை பராமரித்து பாதுகாக்கவே குலங்களை உருவாக்கினார்கள். இந்தத் தொடர்பின் மூலம் அவர்கள் உடல்ரீதியாக மட்டுமில்லாமல், மரபணுரீதியாகவும் ருணானுபந்தத்தை உருவாக்கிக் கொண்டார்கள். அவர்கள் குலதெய்வங்களை உருவாக்கினார்கள். முக்கியமாக, அந்தக் குலங்களை பராமரித்து பாதுகாப்பதற்காகவே இந்த குலதெய்வங்களை உருவாக்கினார்கள். ஒவ்வொரு குலத்திற்கும் ஒரு தெய்வம் இருந்தது. அந்த தெய்வத்திற்கு தொடர்புடைய குறிப்பிட்ட சடங்குகள் இருந்தன. பண்டைய காலங்களில் எல்லோருமே கோவிலுக்கு போகவில்லை. பொதுவான நன்மைகளுக்காக சில கோவில்கள் இருந்தன, அந்த கோவில்களுக்கு எல்லோருமே போனார்கள். ஆனால், குறிப்பிட்ட நோக்கங்களுக்காக அவர்கள் தங்களுடைய குலதெய்வத்திடம் மட்டுமே போனார்கள். அது மட்டுமில்லை, மரபணுப் பாதையை குறிப்பிட்ட விதத்தில் பராமரித்தால், வழிவழியாக பயணிக்கும் ஒருவித சக்தியை உருவாக்க முடியும், அந்தக் குலம் முழுவதற்கும் ஒரு தாக்கத்தை ஏற்படுத்த முடியும். இப்போதுகூட இப்படி நடந்துகொண்டுதான் இருக்கிறது. அதாவது, மருத்துவ விஞ்ஞானம் குறிப்பிட்ட விதமான டிஎன்ஏ அமைப்புகளுக்கு ஏற்ற மருந்துகளை கண்டுபிடித்து வருகிறது. எதிர்காலத்தில் ஒருவேளை இப்படி நடக்கலாம் - ஒரு மருந்தை சும்மா காற்றில் தெளித்துவிட்டால் போதும், உடனடியாக அந்த வகையான

டீனள்ர கொண்டவர்கள் அனைவருமே பயன்பெறுவார்கள் - இதுபோல நடக்கலாம்.

இதைப்போலவே, அந்த குலம் முழுவதற்கும் ஆன்மீகப் பயன்கள் ஏற்படும்படி சில விஷயங்களைச் செய்யவும் வாய்ப்பிருக்கிறது - அதை ஒரு இடத்தில் செய்தால் போதும், எல்லாத் தலைமுறைகளுக்கும் அந்தப் பயன் ஏற்பட முடியும். உதாரணமாக, குலங்கள் பராமரிக்கப்பட்ட காலங்களில், அந்தக் குலத்தில் இருக்கும் எல்லோருமே கோவிலுக்குப் போகவேண்டிய அவசியமில்லை. அவர்களில் ஒருவர் மட்டும் போய் வழிபட்டால் அல்லது ஒரு பெரிய சடங்கு மட்டும் செய்யப்பட்டால் எல்லோருமே பயன் அடையும்படி இருக்கும். அவர்கள் அந்த இடத்தில் நேரடியாக இருந்தாலும், இல்லையென்றாலும் அந்தப் பயன் ஏற்படும். ஏனென்றால், அவர்கள் எல்லோருமே இணைக்கப்பட்டு இருந்தார்கள். அந்த சக்தி இந்த இணைப்பின் வழியாக நகர்கிறது, அதனால் பயன் எல்லோருக்கும் கிடைக்கிறது.

ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு, இந்த மரபணுப் பாதையை தங்களுக்கே உரிய விதத்தில் தொடர்ந்து பாதுகாத்து வந்தார்கள். ஒருபோதும் அது கலக்கும்படி விடவில்லை. ஒருபோதும் அந்தப் பாதையில் இடையூறு ஏற்படும்படி எதையும் செய்யவில்லை. இதனால் அந்த வாரிசுமுறை நன்றாக பராமரிக்கப்பட்டது. திருமணம் செய்வது எப்படி, கலப்புத் திருமணம் செய்வது எப்படி, சொந்த வம்சத்திற்குள் திருமணம் செய்துகொள்ளக் கூடாது என்றெல்லாம் ஒரு விரிவான நுட்பமான வரைமுறையை உருவாக்கியிருந்தார்கள். இதெல்லாம் சேர்ந்து ஒரு வலுவான ருணானுபந்தத்தை உருவாக்கியது. இதனால் அந்தக் குலம் தொடர்ந்து தழைத்து நலமாக இருக்கும்படி நிச்சயப்படுத்தப்பட்டது. இன்று, குலம் என்றாலே ஜாதி என்று புரிந்துகொள்ளப்படுகிறது. அந்தப் பெயரால் செய்யப்பட்ட சில கொடுமைகளுக்கு நாம் எதிர்செயல் காட்டிக் கொண்டிருக்கிறோம். அனைத்தையும் ஒழித்துவிட வேண்டும் என்று நினைக்கிறோம்.

எப்படி இருந்தாலும், இதெல்லாமே இப்போது உடைந்துவிட்டன, முடிந்து போய்விட்டன. இன்றைக்கு மனிதர்களின் மரபணு பொருள் பலவிதமாக கலந்து போய்விட்டது, சமுதாயம் மாறிவிட்டது. இன்றைக்கு உங்கள் மகன் பக்கத்து வீட்டுப் பெண்ணோடு காதல் கொள்ளலாம். அந்தப் பெண் எந்த ஜாதியையும், மதத்தையும், இனத்தையும் சேர்ந்தவராகவும் இருக்கலாம். அதனால், இதெல்லாமே அப்போது இருந்ததுபோல் வேலை செய்யாது. அப்படிப்பட்ட விஷயங்களை பராமரிப்பதைவிட, நம்முடைய விருப்பங்கள்தான் இன்றைக்கு முக்கியமானதாக ஆகிவிட்டன. அதனால், அந்த விஷயங்களெல்லாம் இன்றைக்கு அர்த்தமில்லாமல் போய்விட்டன.

அதை நம்மால் திரும்பவும் மீட்க முடியாது. அதேசமயம், மகத்தான பயன்களைக் கொண்ட ஆழமான விஞ்ஞானமாக அது இருந்திருக்கிறது. அதை முறையாகப் பராமரித்த சமூகங்களுக்கு, அற்புதமான பயன்கள் கிடைத்திருக்கின்றன. அப்படி எல்லாம் முறையாக பராமரிக்கப்பட்ட போது, குறிப்பிட்ட காலத்தில் கோவிலுக்கு போகாமல் இருப்பது அர்த்தமுள்ளதாகவே இருந்தது. உயிரைப் பற்றிய அற்புதமான புரிதல் அதில் இருந்தது; மரபணுப் பற்றிய புரிதலும் இருந்தது, அதன் செயல்பாடு பற்றியும் மகத்தான புரிதல் அதில் இருந்தது.

அந்தக் காலத்தில் குலங்களை காக்கும் முறை அர்த்தமுள்ளதாக இருந்தது. ஒரு மரணம் ஏற்படும்போது, இறந்தவருக்கு குறிப்பிட்ட விதத்தில் உறவாக இருந்த குலத்தவர்கள் எல்லோருமே நாற்பது நாட்கள் வரை கோவிலுக்குப் போகக்கூடாது என்று சொல்லப்பட்டது. இது குலதெய்வ கோவிலுக்கு மட்டுமே பொருந்தும். இறந்துபோனவருக்கும், இந்த மனிதருக்கும் மரபணுவில் நெருங்கிய ஒற்றுமை இருந்தது. குலதெய்வம் உங்களையும், இறந்தவரின் சக்தியையும் ஒன்றாக புரிந்துகொள்ள வாய்ப்பிருக்கிறது, குழம்பிப்போகவும் வாய்ப்பிருக்கிறது. இதனால் உங்களுக்கு தொல்லைகள் ஏற்பட முடியும். உங்களுடைய உடல்நிலை குலைந்து போகமுடியும். சில சமயம், மிகையான நிகழ்வுகளில் மரணம்கூட ஏற்பட முடியும், இதையெல்லாம் தவிர்ப்பதற்காகத்தான் அப்படிச் சொன்னார்கள். அதனால்தான், அந்த சக்தி உங்களைச் சுற்றிக்கொண்டிருக்கும் வரை குலதெய்வ கோவிலுக்கு போகவேண்டாம் என்றார்கள். அதேசமயம், சிவன் கோவிலுக்கு அல்லது காலபைரவர் கோவிலுக்கு போகலாம் என்றும் சொன்னார்கள்.

## நினைவாலயங்கள், சமாதிகள், பிரமிட்கள்

நமக்கு மிகவும் நேசமாக இருந்தவர்களுக்கும், குறிப்பிட்ட முக்கியத்துவம் வாய்ந்த மனிதர்களுக்கும் நினைவாலயங்கள் கட்டுவது உலகத்தில் அனைத்து கலாச்சாரங்களிலும் வழக்கில் இருந்துள்ளது. உதாரணமாக, ஒரு அரசனால் தன் மனைவிக்காக கட்டப்பட்ட நினைவாலயம்தான் - புகழ்பெற்ற தாஜ்மஹால். இது துயரத்தை கையாள்வதற்கான ஒரு வழியாகவும் இருக்கிறது. அதோடு, இந்த நினைவாலயங்களுக்கு சமூகரீதியான, அரசியல்ரீதியான முக்கியத்துவமும் இருக்கிறது. அதன் உதவியால் நம்முடைய அடையாளங்களை உருவாக்கிக்கொள்ள முடிகிறது. ஆனால் இந்தக் காரணங்களைத் தவிர, உயிரின் அடிப்படையில் இதற்கு ஏதாவது முக்கியத்துவம் இருக்கிறதா? தேவை இருக்கிறதா? பல விஷயங்களைச் சார்ந்து அமையக்கூடிய விஷயமது.

ஒருமுறை இப்படி நிகழ்ந்தது: ஐந்து வயது சிறுவன் ஒருவன் தன்னுடைய அம்மாவோடு கல்லறைகள் நிறைந்த இடுகாட்டுக்குப் போனான். அவன் அதுவரை வாழ்க்கையில் இடுகாட்டுக்குச் சென்றதே கிடையாது. அவனுடைய அம்மா ஒரு குறிப்பிட்ட கல்லறையில் தன்னுடைய அஞ்சலியை செலுத்திக் கொண்டிருந்தார். பையன் எல்லாப் பக்கமும் போய், கல்லறைகளில் பதிக்கப்பட்டிருந்த வாசகங்களை படித்துக்கொண்டிருந்தான். பிறகு அம்மாவிடம் திரும்ப வந்தான். தாயைப் பார்த்து, "அம்மா, மோசமான மனிதர்களை எல்லாம் எங்கே புதைப்பார்கள்?" என்று கேட்டான். ஒவ்வொரு கல்லறையிலும், "இவர் மிக அற்புதமான மனிதர்," என்று எழுதப்பட்டிருந்தது. அதனால், மோசமான மனிதர்களை எந்த இடத்தில் புதைத்திருப்பார்கள் என்ற சந்தேகம் பையனுக்கு வந்ததால் எழும்பிய கேள்வி அது. பொதுவாகவே, இறந்துபோனவர்களைப் பற்றிய நல்ல விஷயங்களை மட்டும் ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டும் என்று மனிதர்கள் விரும்புவார்கள். அதனால் அவர்களுடைய நினைவிடங்களும், இறந்தவர்களைப் பற்றிய நல்ல விஷயங்களையே சொல்கின்றன. ஆனால், நம் நாட்டில் சமாதிகள் எனப்படும் வேறுவிதமான நினைவிடங்களை உருவாக்கினார்கள். அப்படிப்பட்ட சமாதிகளுக்கு ஆன்மீக முக்கியத்துவம் கொஞ்சம் இருக்கிறது. இறந்துபோனவரை நினைத்துக்கொள்ளவும், அவருக்காக மரியாதை செலுத்தவும் மட்டும் ஒரு சமாதிக்கு போவதில்லை. அந்த சூழலில் இருக்கவும், தியானம் செய்யவும்கூட அங்கே செல்கிறார்கள்.

நம் நாட்டில், ஒருவர் குறிப்பிட்ட விதத்தில் இறந்துபோனபோது, அந்த இடத்தை பாதுகாத்து பராமரிப்பதில் பயன் இருக்கும் என்று புரிந்து கொண்டார்கள். அங்கே விடப்பட்டிருக்கும் சக்திகளை எல்லோருக்கும் கிடைக்கும்படி செய்ய விரும்பினார்கள். உதாரணமாக, யோக மையத்தில் விஜியின் சமாதி இருக்கிறது. நீங்கள் அங்கே சும்மா உட்கார்ந்தால், அதற்கு தனக்கே உரிய ஒளிவட்டமும் சக்தியும் இருப்பது தெரியும். விஜி தன் உடலை விட்டு வெளியேறிய விதத்தால் இந்த தன்மை ஏற்பட்டிருக்கிறது. அது கரைத்திடும் தன்மைகொண்ட சக்தியாக இருக்கிறது. அங்கிருக்கும் சக்தி, உடலையே எடுத்துவிடுவது போன்ற விதத்தில் இருப்பதால், சில பேரிடம் அந்த இடத்தில் அதிக நேரம் உட்காரவேண்டாம் என்று நான் சொல்வதுண்டு. அது உங்களை மெதுவாக கரைத்துவிட முடியும். யோக மையத்தின் ஒரு மூலையில் முற்றிலும் வேறுவிதமான ஒரு சக்தியை பராமரிக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு அந்த இடம் அமைக்கப்பட்டது. அது மிதமாகவும், சூட்சுமமாகவும் இருக்கிறது. அதேசமயம், மிக அழகாகவும், இனிமையாகவும் இருக்கிறது. எதையாவது அடையவேண்டும் என்ற நோக்கம் எதுவும் இல்லாமல், எந்த விஷயத்தையும் தொடர்புபடுத்திக் கொள்ளாமல், எந்த கற்பனையும்

செய்யாமல் சும்மா அங்கே உட்கார்ந்தால், உங்களுக்கு உடலே இல்லாதது போன்ற அனுபவத்தை அது ஏற்படுத்த முடியும். ஆன்மீக சாதனா செய்யும் ஒருவருக்கு இப்படிப்பட்ட சூழல்களில் இருப்பது நல்லதாக இருக்கும். அடிப்படையில், அந்த இடம் அனாஹத சக்கரத்தின் தன்மையைக் கொண்டது. அந்த இடத்துக்கு போகும் பலரும் ஏதோ ஆர்வத்தால் அங்கே போவதற்கு வாய்ப்பிருக்கிறது; அதேசமயம், அங்கே தொடர்ந்து வழக்கமாகப் போகும் மனிதர்களை கவனித்தால், அவர்கள் குறிப்பிட்ட தன்மை கொண்டவர்கள் என்று தெரியும். அவர்கள் அனாஹதத்தை சார்ந்தவர்கள், இயல்பாகவே அந்த இடத்தை நோக்கி ஈர்க்கப்படுகிறார்கள். குறிப்பிட்ட விதமான மனிதர்களாக இருப்பதால், அவர்கள் தியானலிங்கத்தில் உட்காருவதை விட சமாதியில் உட்காருவதையே விரும்புகிறார்கள்.

இந்தியாவில் இதைப்போல பல இடங்கள் இருக்கின்றன. குமார பர்வதம் என்ற மலை அப்படிப்பட்ட ஒரு இடம்தான். இது கர்நாடகத்தின் மேற்கு தொடர்ச்சி மலைகளில் இருக்கும் "குக்கே சுப்பிரமணியா" கோவிலுக்கு பக்கத்தில் இருக்கிறது. தமிழகத்துக்கு வெளியே சிவனின் இளைய மகனை கார்த்திகேயன் அல்லது சுப்பிரமணியன் என்று அழைப்பது வழக்கம். அவர் இந்த மலையின் உச்சியில்தான் தன் உடலைவிட்டு வெளியேறினார். அவர் தீவிரமான போர்வீரராக வாழ்ந்த ஒரு யோகி. அநீதியைக் கண்ட இடத்தில் எல்லாம் அவர் அழிவை ஏற்படுத்தினார். ஒருநாள், தன்னுடைய இந்த செயல்களால் எந்தப் பயனும் இல்லை என்று உணர்ந்து, அதற்கு முடிவுகட்டலாம் என்று நிர்ணயித்ததாக சொல்கிறார்கள். ரத்தம் படிந்த தன்னுடைய வாளை கடைசியாக ஒரு தடவை குமார பர்வதத்தின் அடிவாரத்தில் ஓடிய நதியில் கழுவினார். அதற்குப் பிறகு மலைமீது ஏறினார், திரும்ப கீழே வரவேயில்லை. அவர் அந்த மலையின் உச்சியிலேயே தன் உடலை விட்டார் என்று சொல்கிறார்கள். நின்று கொண்டிருந்த நிலையிலேயே தன் உடலை விட்டுவிடும் அளவுக்கு வல்லமை நிறைந்த யோகியாக அவர் இருந்தார் என்று சொல்லப்படுகிறது. இன்றைக்கும், அவருடைய சக்திகள் அந்த இடத்தில் அப்படியே நிலைத்திருக்கின்றன.

இருபது வருடங்களுக்கு முன்பாக, யோக மையத்தில் வாழ்பவர்களோடு சேர்ந்து அந்த இடத்திற்குப் போனோம். மலை ஏறும்போது பாதிவழியில், அங்கே வசிக்கும் இரண்டு சகோதரர்களின் வீடு ஒன்று இருக்கிறது. மலையேறுபவர்கள் ஏறும்போதும் இறங்கும்போதும் வழக்கமாக இந்த இடத்தில்தான் தங்குவார்கள். நாங்கள் இந்த இடத்திற்கு வந்து சேர்ந்த உடனேயே, என்னால் உச்சிக்கு போகமுடியாது என்பதை புரிந்துகொண்டேன். அங்கு இருக்கும் சக்திகள் அந்தளவுக்கு தீவிரமாக

இருந்தன. என் வாழ்க்கையின் அந்த காலகட்டத்தில் அந்தளவுக்கு சக்தியை என் உடலால் தாங்கமுடியாது என்று புரிந்துகொண்டேன். அந்த இரவு முழுவதும் என்னால் படுக்கவும் முடியவில்லை, தூங்கவும் முடியவில்லை. ஒவ்வொரு முறையும் நான் உட்காரவோ, படுக்கவோ முயற்சிப்பேன், என்னுடைய உடலோ அப்படியே எழுந்து நின்றுகொள்ளும். நான் இருந்தது என்னவோ ஒரு கூடாரத்தில். என் உடல் அப்படியே எழுந்து நின்றுகொள்ள, அந்த கூடாரமே கழண்டு விழுந்துவிடும். அதனால், இரவு முழுவதும் நின்றுகொண்டே இருக்கும்படி ஆனது.

இதுபோன்ற இன்னொரு அனுபவம் வேலாயுதம்பாளையத்தில் ஏற்பட்டது. தமிழ்நாட்டில் இருக்கும் ஒரு சின்ன ஊர் வேலாயுதம்பாளையம். அங்கே நான் ஒரு யோகா வகுப்பை நடத்திக் கொண்டிருந்தேன். நான் தங்கியிருந்த வீட்டிற்கு எதிரே ஒரு குன்று இருந்தது. தமிழ்நாட்டில், எங்கெல்லாம் ஒரு குன்று இருக்கிறதோ அங்கெல்லாம் ஒரு கோவில் இருந்தாக வேண்டும், இல்லையா? காலியாக இருக்கும் மலை உச்சிகள் மிகவும் குறைவுதான். இந்த மலையின் உச்சியிலும் ஒரு கோவில் இருந்தது. தினமும் மக்கள் இந்த மலையின் மேலே ஏறுவதையும் இறங்குவதையும் பார்த்து வந்தேன். நான் அந்த ஊருக்கு ஏற்கனவே சில தடவை வந்திருக்கிறேன், ஆனால் இந்த மலை மீது ஏறியதில்லை. மலையின் மேல் ஒரு குகை இருப்பதாகவும், அங்கே 2400 வருடங்களுக்கு முன்பு சில சமணத் துறவிகள் வாழ்ந்ததாகவும், அங்கிருந்த அரசர் அவர்களுக்காக பாறைகளிலேயே படுக்கைகளை வடித்ததாகவும் என்னிடம் சொன்னார்கள். நான் இதைப்பற்றி யோசித்துப் பார்த்தேன் - 2400 வருடங்களுக்கு முன்பு என்றால் அவர்கள் மகாவீரரின்[4] நேரடி சிஷ்யர்களாகவோ, அவருக்குப் பின் உடனே வந்தவர்களாகவோ இருந்திருக்கலாம், அதனால் எனக்கு ஆர்வம் ஏற்பட்டது.

ஒருநாள் அந்த மலையின் மேல் ஏறினோம். மலையின் உச்சியில் அந்த குகை ஒரு பறவையின் கூட்டைபோல் தோன்றியது. பெரிய பாறைகளுக்கு நடுவில் கொஞ்சம் ஆபத்தான விதத்தில் அமைந்திருந்தது. அந்த இடம் சரியாக பராமரிக்கப்படவில்லை, எல்லாவிதமான விஷயங்களுக்கும் போக்கிடமாக இருந்தது. காலி சாராய பாட்டில்களும், அதுவும் இதுவுமாக என்னென்னமோ கிடந்தது. சுவர் முழுவதும் அலங்கோலமாக கிறுக்கப்பட்டு இருந்தது - "எல்.எம்.டி லவ்ஸ் எஸ்.பி.ஆர்" - இதுபோல பொதுவாகவே நம் நாட்டில் தென்படும் அசிங்கமான காதல் வாக்குமூலங்கள் கிறுக்கப்பட்டு இருந்தன. ஒரு மூலையில் பாறையிலேயே செதுக்கப்பட்டிருந்த படுக்கைகள் இருப்பதை பார்த்தேன்.

---

4 சமண மதத்தை தோற்றுவித்தவர், கௌதம புத்தரின் சமகாலத்தவர்.

அந்தப் படுக்கையில் 2 அங்குலத்திற்கு புடைத்துக்கொண்டு இருந்த தலையணையும் பாறையிலேயே செதுக்கப்பட்டிருந்தது. அந்தப் படுக்கைகளில் ஒன்றின்மேல் உட்கார்ந்தேன், அவ்வளவுதான். என் உடல் மேலும் கீழும் தூக்கிவாரிப் போட்டது. நான், "இந்த இடம் சக்தியால் நிரம்பியிருக்கிறது, இதை சுத்தப்படுத்தி வையுங்கள், இரவில் இங்கு வரலாம், இங்கேயே தூங்குவோம்," என்று சொல்லியிருந்தேன். அன்று இரவு, நாங்கள் ஒன்பது பேர் படுக்கைகளை எடுத்துக்கொண்டு தூங்குவதற்காக அந்த குகைக்குப் போனோம். ஒருவரும் ஒரு நொடிகூட தூங்கவில்லை, அந்தளவுக்கு அந்த இடம் விசித்திரமான விதத்தில் சக்தியால் வெடித்துக் கொண்டிருந்தது. நான் படுத்துக்கொண்டிருந்த படுக்கையை அந்த காலத்தில் பயன்படுத்திய குறிப்பிட்ட மனிதர், இடது முழங்காலுக்கு கீழே கால் இல்லாதவர் என்று என்னால் தெளிவாக உணரமுடிந்தது. அவருக்கு என்ன ஆனதோ நமக்கு தெரியாது, ஆனால் அவருக்கு இடது கால் கிடையாது. 2000 வருடங்களுக்குப் பிறகும் அவர்களுடைய சக்திகள் இன்னும் தெளிவாக உணரப்படும்படி இங்கே ததும்பிக்கொண்டு இருக்கின்றன. அப்படியென்றால், அந்தளவுக்கு தீவிரமான மனிதர்களாக அவர்கள் இருந்திருக்க வேண்டும்.

நம் பாரதத்தில், இதுபோன்ற இன்னும் எத்தனையோ இடங்கள் இருக்கின்றன. சில இடங்களை மதிப்போடு பராமரித்தும் வருகிறார்கள்; ஆனால் பெரும்பாலான இடங்கள் அறியப்படாமலும், சரியாக பராமரிக்கப் படாமலும் இருக்கின்றன. இப்படிப்பட்ட சக்தி இன்னும் மகத்தான அளவிலும், இன்னும் பலப் பரிமாணங்கள் கொண்டதாகவும், வெள்ளியங்கிரியில் ஏழாவது மலையின் உச்சியில் அமைந்திருக்கிறது. இந்த இடத்தில்தான் சத்குரு ஸ்ரீபிரம்மா ஏழு சக்கரங்களின் மூலமாகவும் தன் உடலைவிட்டு வெளியேறினார். அதனால், இன்றைக்கும் இந்த இடம் சக்திநிலையில் வெடித்துப்போகும் அனுபவத்தை ஏற்படுத்தும்படி இருக்கிறது. நிச்சயமாக இதை ஒருவர் உணர்ந்து பார்க்கவேண்டும். இது ஒரு அபரிமிதமான பரிமாணமாகவும், சாத்தியமாகவும் விளங்குகிறது.

எது எப்படியோ, வாழ்க்கையை சாதாரணமாக வாழ்ந்து இறந்து போனவர்களை நினைவில் வைத்துக்கொண்டு கௌரவிக்க நீங்கள் விரும்பினால், அது உங்கள் இஷ்டம். ஆனால் இந்த ரியல் எஸ்டேட் மிகவும் ஜாஸ்தி என்பதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். இது உணர்வுபூர்வமான விஷயமாக இருக்கிறது. உங்களுடைய உணர்வுகளில் நீங்கள் ஒரு முதலீட்டை செய்கிறீர்கள். உயிர்ரீதியாக இதற்கு எந்த அடிப்படையும் இல்லாமல் இருக்கலாம். உதாரணமாக, தாஜ்மஹாலை எடுத்துக்கொள்ளலாம். ஷாஜகான் உருவாக்கிய அந்த இடம் என்னவோ அழகாகவாவது இருக்கிறது. அதேசமயம், அவருடைய மனைவி

மும்தாஜின் சக்திகளோடு அந்த இடம் அதிர்ந்து கொண்டிருக்கிறதா? இல்லை, அப்படி ஒன்றும் கிடையாது. அது கலைநுட்பம் மிகுந்த இடமாக இருக்கிறது, ஒரு பொக்கிஷமாக இருக்கிறது. அங்கே வருபவர்கள் யாரும் மும்தாஜிற்காக துக்கம் அனுசரிப்பதற்காக வருவதில்லையே, அந்தக் கலைநுட்பத்தை ரசித்து மகிழத்தான் எல்லோரும் வருகிறார்கள். மும்தாஜின் பெயர் அங்கே எங்கேயாவது எழுதப்பட்டிருக்கலாம், ஆனால் உயிர்ரீதியாக மும்தாஜிற்கோ, ஷாஜகானுக்கோ அந்த நினைவிடத்தோடு எந்த சம்பந்தமும் கிடையாது. அதேசமயம், அதை உருவாக்க வேலை செய்தவர்களோடு அந்த இடத்திற்கு ஒரு சம்பந்தம் இருக்கிறது.

நினைவிடங்கள் பற்றிய விஷயத்தை பண்டைய எகிப்தியர்கள் முற்றிலும் வேறு நிலைக்கு எடுத்துக்கொண்டு போனார்கள். நாம் இருக்கும் இந்த பரிமாணத்தையும், இதற்கு அப்பாற்பட்டதையும் இணைப்பதற்காக செய்யப்பட்ட மிகவும் பிரம்மாண்டமான பொருள்ரீதியான முயற்சி எகிப்தின் பிரமிட்கள்தான் என்று சொல்லலாம். இந்தப் பிரமிட்களை உருவாக்குவதில் பெருமளவிலான சிந்தனையும், பொறியியல் நுட்பமும், உழைப்பும் அடங்கியிருக்கின்றன. பொருள்ரீதியாகப் பார்த்தால், இறந்தவர்களின் நன்மையை நிச்சயப்படுத்திட மனிதர்கள் செய்த வேறு எந்த முயற்சியும் இந்த அளவுக்கு கடுமையானதாக இருந்ததில்லை என்று சொல்லலாம். சரி, ஆன்மீக அடிப்படையில் இந்த பிரமிட்களுக்கு இருக்கும் மதிப்பு என்ன? இறந்துபோனவர்களின் நன்மையை நிச்சயப்படுத்திட இது எந்த அளவுக்கு பயனுள்ளதாக இருக்கிறது? இந்த காலங்களில் இதுபோன்ற ஒரு முயற்சியை செய்வது தகுந்ததாக இருக்குமா, பயன் தருமா?

எகிப்தியர்கள் மரணத்தை நோக்கிய மனிதர்களாகவே இருந்தார்கள். அதனால்தான் பிரமிட்களை உருவாக்க ஆரம்பித்தார்கள். இன்பங்களை அனுபவிக்க அவர்களுக்கு இருந்த வெறிதான் இதற்கு காரணம். மரணத்திற்கும் இன்பத்திற்கும் நேரடித் தொடர்பு இருக்கிறது. இன்பத்திற்கும் வாழ்க்கைக்கும் நேரடித் தொடர்பு இருப்பதாகத்தான் மனிதர்கள் நினைக்கிறார்கள். இல்லை, மரணத்திற்கும் இன்பத்திற்கும்தான் நேரடியான தொடர்பு இருக்கிறது. அவர்கள் உருவாக்கியதில் ஒரு அம்சம் மட்டும்தான் பிரமிட்கள். அவர்கள் சில அற்புதமான, பிரமிப்பூட்டும்படியான கோவில்களையும் உருவாக்கினார்கள். ஆனால், இந்த நவீன காலத்தில் மரணநோக்கம் கொண்ட சிலர் பிரமிட்களை பற்றித்தான் புத்தகங்களை எழுதினார்கள், அதனால் அது மட்டும் பிரபலமாகிவிட்டது.

ஒரு பொருளைப் பாதுகாத்து வைப்பதுதான் பிரமிட்களின் அடிப்படையான தன்மை. பிரமிட்களை தியானத்திற்கான முறையாக சிலர் விளம்பரப் படுத்துகிறார்கள். பிரமிடுக்கும் தியானத்திற்கும் எந்த சம்பந்தமும் கிடையாது. பிரமிடுக்குள் உட்கார்ந்து தியானம் செய்வது அறியாமையால்

செய்யப்படுகிறது. ஆரோக்கியத்திற்காக அப்படி செய்தால், அது பரவாயில்லை, நிச்சயமாக அது ஆரோக்கியத்துக்கு உதவியாக இருக்கும். ஆனால், பிரமிடுக்குள் உட்கார்ந்து தியானம் செய்தால் நம்முடைய விழிப்புணர்வு உயர்ந்த நிலைக்கு போகும் என்று நினைப்பது தவறான புரிதல் ஆகும். பிரமிட்களை பயன்படுத்தி ஆரோக்கியம் அடையலாம், செல்களின் கூட்டமைப்பு மேம்பட்டு உடல் உறுதியடையலாம், ஒருவேளை உங்களுடைய ஆயுள்காலத்தைக்கூட ஓரளவுக்கு அதிகரிக்கலாம். ஆனால், இது ஆன்மீகமுறை கிடையாது. இதனால், இறந்துபோனவருக்கு எந்தப் பயனும் ஏற்படாது, பொருள் உடலைப் பாதுகாக்க வேண்டுமானால் பயன்படலாம்.

ஜியோமெட்ரி எனும் வடிவியல் படிதான் பிரமிட் வேலை செய்கிறது. அதை காகிதத்தில் உருவாக்கினால்கூட அது வேலை செய்யும். அதன் நான்கு பக்கங்களிலும், மேல்புறத்திலும் சரியாக 51.5 டிகிரி கோணம் அமையும்படி ஒரு காகித பிரமிடை உருவாக்கினால், அதுவும் வேலை செய்யும். அதற்குள் காய்கறியை வைத்துப் பாருங்கள் - சாதாரணமாக மூன்று நாட்களில் அழுகிப்போகும் அந்த பொருள், மூன்று வாரங்கள் ஆனபிறகும் அழுகாமல் அப்படியே இருக்கும். அது சுருங்கிப் போயிருக்கலாம், ஆனால் அழுகியிருக்காது. ஒரு பிரமிட் வடிவத்தை உருவாக்கும்போது, இயற்கையாகவே அதற்குள் வியான வாயு அகப்பட்டுப் போகிறது. உடலைப் பாதுகாக்கும் செயலுக்கு அடிப்படையானது வியான வாயு. அதனால், வியான வாயுவை பிடித்து வைத்தால் ஒரு பொருளை நீண்ட காலத்திற்கு கெடாமல் பாதுகாக்க முடியும். இந்த அடிப்படையில் தான், ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு மம்மிகளை பாதுகாத்து வைத்தார்கள்.

பாரதத்தில், இறந்த உடலை பாதுகாத்து வைப்பதை நாம் ஒருபோதும் விரும்புவதில்லை. ஒருவர் இறந்துவிட்டால், நான்கிலிருந்து ஆறு மணி நேரத்திற்குள் உடலை எரித்துவிட வேண்டும் என்பதுதான் இங்கே விதிமுறையாக இருந்தது. பாரம்பரியமாகவே, மரணம் ஏற்பட்டவுடன் - அடுத்து வரும் சூரியோதயம் அல்லது அஸ்தமனம் - எது முதலில் வருகிறதோ அதற்குள்ளாக உடலை எரித்துவிட வேண்டும். உடலை உடனே எரிப்பது இறந்தவருக்கும் நல்லது, வாழ்பவர்களுக்கும் நல்லது. உடலைப் பாதுகாத்து வைப்பது, இறந்துபோன மனிதருக்கு ஒரு கொடுமையாகத்தான் இருந்திடும்.

பாகம் 3

# மரணத்திற்குப் பிறகு என்ன?

## இருளென்கிற நான்

இருளின் ஓசையும் மௌனத்தின் சப்தமும்
என்னுள் முதல்முதலாய் சந்தித்தபோது

இந்தச் சின்னஞ்சிறு மனம், வெளிச்சத்திற்காக,
உலக இயல்புகளுக்காக, வலிமைக்காக, அழகுக்காக வாதாடியது

வெளிச்சம் என்னும் சின்னஞ்சிறிய
அம்சம் என்னை சிறைப்படுத்த முடியாது
இருளின் பிரம்மாண்டம் கவர்ந்தது என்னை

எல்லையில்லாத நிரந்தரமாம் இருள்
நிகழ்ந்தவை நிகழ்பவை நிகழ இருப்பவை
எல்லாவற்றையும் சின்னஞ்சிறியதாக்குகிறது;

நிரந்தரத்தை தேர்ந்தெடுத்தேன்
இருளெனப்படுவதே நானானேன்

இறைமையும் பிசாசமும் என்னுள் சிறு பகுதிகளே
இறைமையை எளிதில் வழங்கிடுவேன்
பிசாசத்தை சந்திக்க நேர்ந்தால்
நீங்கள் விலகுவதே நல்லது

அத்தியாயம் 10

# ஒரு பேயின் வாழ்க்கை

*ஒருவிதத்தில் பார்த்தால் ஒவ்வொருவரும் ஒரு பேய்தான். நீங்கள் உடலோடு இருக்கும் பேயா அல்லது உடலற்ற பேயா என்பதுதான் ஒரே கேள்வி.*

## பேய்கள் என்றால் என்ன?

உலகில் உள்ள ஒவ்வொரு கலாச்சாரத்திலும் காலம்காலமாக சொல்லப்பட்டு வரும் கதைகளில் பேய்களும் ஒரு அம்சமாக இருந்து வந்திருக்கின்றன. பேய் கதைகளைக் கேட்காமல் வளர்ந்த குழந்தை உலகில் ஒன்றுகூட கிடையாது என்று சொல்லலாம் - பேய்களின் வாழ்வைப் பற்றி, செயல்களைப் பற்றி, விசித்திர குணங்களைப் பற்றியெல்லாம் ஏராளமான கதைகள் உண்டு.

சரி, இந்தப் பேய்கள் என்றால் என்ன? அது பேய் ஆனது எப்படி? பேய்கள் இருப்பதற்கு அடிப்படை என்ன? அவர்கள் இங்கே சுற்றுவதற்கு காரணம் என்ன? இதைப் பற்றியெல்லாம் நமக்கு எந்த புரிதலும் கிடையாது. ஏனென்றால், இப்போதைக்கு உடலோடு இருப்பதை மட்டும்தான் வாழ்க்கை என்று நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஏன்? உங்கள் அபிப்ராயத்தால் அப்படி நினைக்கவில்லை, உங்களுடைய வாழ்க்கை அனுபவத்தில் இந்த உடலை மட்டுமே உணர்ந்திருக்கிறீர்கள், அவ்வளவுதான். இந்த உடலுக்கு அப்பாற்பட்டும் வாழ்க்கை தொடர்ந்து நீடிக்கிறது. நாம் பொதுவாக பேய்கள் என்று அழைப்பவர்கள் இருந்திட காரணம் இதுதான்.

ஒருமுறை இப்படி நிகழ்ந்தது: மிகவும் கூச்ச சுபாவம் கொண்ட ஒருவர் இருந்தார். அவர் ஒரு மருத்துவ பரிசோதனைக்காக ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டார். அவரை கவனித்துக்கொண்ட நர்ஸ் மிகவும் அழகானவராக இருந்தார். நர்ஸ் இவருடைய ரத்த அழுத்தத்தை பரிசோதித்தார், ரத்தப் பரிசோதனை செய்தார், சிறுநீர் பரிசோதனை செய்தார், எனிமா, அது-இது என்று எல்லாம் செய்தார். பிறகு நர்சஸ்

கொஞ்ச நேரத்திற்கு வெளியே சென்றார். அந்த சமயத்தில் அந்த நோயாளி படுக்கையிலிருந்து எழுந்து கொள்வதற்குள், அதுவரை கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டிருந்ததை மேலும் அடக்க முடியாமல் படுக்கையிலேயே வெளியேற்றிவிட்டார். அவரால் அடக்க முடியவில்லை. அதிக கூச்சம் கொண்ட ஆளாக இருந்ததால், அவருக்கு தர்மசங்கடமாகிப் போனது. அந்த அழகான நர்ஸ் இந்த அசிங்கத்தைப் பார்ப்பதை அவர் விரும்பவில்லை. நர்ஸ் நடந்து வரும் காலடி சத்தம் கேட்கவே, அப்படியே அந்த படுக்கையின் மீது இருந்த போர்வைகளை எல்லாம் அள்ளி எடுத்து, ஜன்னல் வழியாக தான் இருந்த ஐந்தாவது மாடியிலிருந்து வீசினார்.

கீழே இருந்த தெருவில், ஒரு நபர் பார்ட்டி முடிந்து தள்ளாடியபடியே வீட்டுக்குப் போய்க்கொண்டிருந்தார். எவ்வளவு அநியாயமான உலகம் பாருங்கள்! பூமி உருண்டையாக இருக்கிறது, போதாக்குறைக்கு சுற்றிக்கொண்டு வேறு இருக்கிறது - இதில் ஒரு மனிதன் நேராக நடந்துபோக வேண்டும் என்று வேறு எதிர்பார்க்கிறார்கள், அநியாயம்தானே? மிகுந்த சிரமத்துடன் அந்தக் குடிகாரர் கோணல்மாணலாக நடந்துகொண்டிருந்தார். நமது நோயாளி மேலிருந்து வீசிய போர்வைகள் குடிகாரர்மீது வந்து விழுந்தன, அப்படியே முழுவதுமாய் மூடிக் கொண்டன. குடிகாரர் அலறினார், போர்வையோடு போராடினார், அதனுடன் சண்டை போட்டார். அந்தப் போர்வைகளை ஜெயித்து கீழே தள்ளிட அவருக்கு சில நிமிடங்கள் எடுத்தது. அதற்குள் அங்கிருந்த செக்யூரிட்டி அந்த இடத்திற்கு ஓடி வந்தார், "என்ன ஆகிவிட்டது? என்ன ஒரே சத்தம்?" என்று கேட்டார். குடிகாரர் திகைப்போடு முழித்தார். கீழே கிடக்கும் போர்வையை பார்த்தபடி, "அங்கே பாருங்கள்! நான் அடித்த அடியில், அந்தப் பேயின் மலம்கூட வெளியே தெறித்துவிட்டது பாருங்கள்!" என்று கூறினார்.

உண்மையில், பேய்கள் என்றால் என்ன? எல்லா உயிர்களுமே - காலம், ஞாபகம், சக்தி ஆகிய மூன்று அம்சங்களின் கலவைதான். இந்த மூன்றில், காலம் என்பது உங்களுடைய கைகளில் இல்லை. அதேசமயம், ஞாபகத்தையும் சக்தியையும் எந்தளவுக்கு சேகரிக்கிறீர்கள் அல்லது செலவழிக்கிறீர்கள் என்பது நீங்கள் வாழ்க்கையை வாழும் விதத்தைப் பொருத்து இருக்கிறது. உங்கள் கவனத்தை ஒருவிதமாக குவித்தும், ஏராளமான செயல்களை செய்தும் ஞாபகத்தை பெருமளவில் பயன்படுத்தி விட்டீர்கள் என்று வைத்துக்கொள்வோம் - அதாவது, ஞாபகங்களின் ஒரு பகுதியான பிராரப்த கர்மா சீக்கிரமாக தீர்ந்துவிட்டது. இப்போது, சஞ்சித கர்மா என்ற மொத்த சரக்கும் இருக்கும் கோடவுனை உங்களால் திறக்க முடியவில்லை என்றால், உங்களுக்கு அகால மரணம் ஏற்பட வாய்ப்பிருக்கிறது. உங்களுடைய சக்தி இன்னும் தீவிரமாகத்தான் இருக்கிறது, ஆனால் உங்களுக்காக ஒதுக்கப்பட்ட ஞாபகம் தீர்ந்துவிட்டது.

இந்த ஞாபகம் தீர்ந்துவிட்டால், ஒன்று நீங்கள் இறக்கமுடியும் அல்லது உணர்வற்ற நிலையில் காய்கறிபோல இருக்கமுடியும். பொதுவாகவே, ஞாபகங்கள் தீர்ந்துவிட்டால் பல அம்சங்கள் செயலிழந்து போகின்றன, அதனால் அவர்கள் இறந்துவிடுவார்கள். உங்களுடைய ஞாபகங்கள் இன்னும் நிலைத்திருந்து, சக்தி மட்டும் தீர்ந்து போய்விட்டது என்றால், அப்போதும் நீங்கள் இறந்துவிடுவீர்கள். ஆனாலும் நீங்கள் தொடர்ந்து இருந்து கொண்டிருப்பீர்கள் - இதைத்தான் பேய் என்று சொல்கிறோம்.

பேய்க்கு ஒரு வெளிப்பாடு உண்டு. ஆனால், பொருள் உடலை உறுதியாக நிலைத்திருக்க செய்து இயங்கவைக்க போதுமான சக்தி இல்லாததால் உடல் போய்விட்டது. அதேசமயம், ஞாபக உடல் இன்னும் உறுதியாகவே இருக்கிறது. மற்றவர்களால் உணரப்படும் அளவுக்கு உறுதியாகவே இருக்கிறது. ஒருவிதத்தில் பார்த்தால், ஒவ்வொருவரும் ஒரு பேய்தான். நீங்கள் உடலோடு இருக்கும் பேயா அல்லது உடலற்ற பேயா என்பதுதான் ஒரே கேள்வி. எல்லா உயிர்களுக்கும் - உடலோடு இருந்தாலும், உடல் இல்லாமல் இருந்தாலும் - வாழ்க்கையின் போக்கு அவர்களுடைய கர்மா அமைந்திருக்கும் முறைப்படிதான் நிகழ்கிறது. ஒரே ஒரு வித்தியாசம், நீங்கள் உடலோடு இருக்கும்போது உங்களுடைய சுயவிருப்பத்தை பயன்படுத்தும் வாய்ப்பு அதிகமாக இருக்கிறது, அவ்வளவுதான்.

இயற்கையான விதத்தில் உடலை விடாமல், அகாலமாக இறந்த உயிர்களைத்தான் பேய்கள் என்று அழைப்பது வழக்கம். இன்னும் தீர்த்து முடிக்காத வலுவான பிராரப்த கர்மா அவர்களுக்கு இருக்கிறது. ஆனால் விபத்து, நோய், கொலை, தற்கொலை என்று ஏதோ ஒருவிதத்தில் அவர்களுக்கு மரணம் ஏற்பட்டுவிட்டது. உடல் ஏதோ ஒருவிதத்தில் உடைந்து போய் உயிரை பராமரிக்கும் தகுதியை இழந்துவிட்டது. அப்படிப்பட்ட உயிர்களின் இருப்பு அடர்த்தியாக இருக்கும், அவர்களுடைய வாசனைகளும், கட்டாயமான போக்குகளும் வலுவாக இருக்கும். அவர்கள் ஒருவிதத்தில் இயங்கிக் கொண்டுதான் இருப்பார்கள். அதனால், அவர்களை இன்னும் சுலபமாக உணரவோ பார்க்கவோ முடியும். பேய் வடிவத்தில் இருப்பது (வேண்டுமென்றால் இதனை, பேயின் வாழ்க்கை என்றும் சொல்லலாம்) - தேவையில்லாமல் நீண்டகாலத்திற்கு நீடிக்க வாய்ப்பிருக்கிறது. அதனால் அப்படி இருப்பது விரும்பத்தக்கது கிடையாது. இறந்துபோன ஒருவருக்கு, இறக்கும் சமயத்தில் இன்னும் கொஞ்சம் பிராரப்த கர்மா முடியாமல் மிச்சம் இருந்தது என்று வைத்துக்கொள்வோம். அவர் பொருள் உடலில் இருந்திருந்தால், ஒருவேளை அவருடைய பிராரப்த கர்மா இன்னும் இருபது வருடங்களுக்கு நீடித்திருக்கலாம். இப்போது பொருள் உடல் இல்லாததால், வாசனைகளின் படி ஏற்படும் போக்கில்தான் கர்மா கரைந்துபோக வாய்ப்பிருக்கிறது. விழிப்புணர்வுடன்

செய்யப்படும் செயலின் மூலம் கர்மாவை கரைக்க வாய்ப்பில்லை. இதன் விளைவாக, அதன் ஆயுள் 200 வருடங்களுக்கு அல்லது 2000 வருடங்களுக்குக்கூட நீடிக்கலாம். இருபது வருடங்களில் முடிந்திருக்க வேண்டியது இப்படி தேவையில்லாமல் மிகவும் நீண்டகாலத்திற்கு இழுக்கப்படுகிறது.

பொதுவாக, ஒரு பேய்க்கு புத்தி என்பது போய்விட்டதால் விழிப்புணர்வுடன் ஒரு நோக்கத்தை உருவாக்க அதற்கு சாத்தியமில்லை. ஆனால் தங்களுடைய கர்ம வாசனைகளின்படி, கட்டாயமான போக்கில் அவர்கள் இயங்குவார்கள். ஒருவர் உயிரோடு இருந்தபோது, மற்றவர்களை கிள்ளவேண்டும் என்ற போக்கு அவருக்கு இருந்ததாக வைத்துக்கொள்வோம். இப்போது உடல் போய்விட்ட பிறகும், அவருக்கு கிள்ளவேண்டும் என்ற உணர்வு இன்னும் ஏற்படும். அது யாரை என்பது முக்கியமில்லை, அவருக்கு சும்மா கிள்ளவேண்டும், அவ்வளவுதான். யாரோ ஒருவர் தன் வாழ்நாள் முழுவதும் இளித்துக்கொண்டே இருந்தார் என்று வைத்துக்கொள்வோம், அவருடைய பேயும் இளித்திடும். இந்தச் செயல் விழிப்புணர்வான நோக்கத்தால் நிகழ்வதில்லை. இந்தச் செயல் அதன் வாசனைப்படி அமையும் போக்கால் ஏற்படுகிறது. பேய்களைப் பார்க்க நேரிட்டால், உங்களுக்குள் இருக்கும் தடைகளாலும், கட்டுப்பாடுகளாலும் நீங்கள் மிகவும் மிரண்டு, பயந்து, நடுங்கிப்போக வாய்ப்பிருக்கிறது. பெரும்பாலும் இது உங்களுடைய மனதில் ஏற்படும் எதிர்செயல்தான். இதற்கும் அந்த உயிருக்கும் எந்த சம்பந்தமும் கிடையாது. யாரோ ஒருவர் நடப்பதற்குப் பதிலாக உங்களுக்கு பக்கத்தில் மிதந்து கொண்டிருக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். இப்போது உங்களுக்குள் எல்லாவிதமான விசித்திர உணர்வுகளும் ஏற்படும். இது தேவையில்லாததுதான், அந்த உயிர்களுக்கும் இதற்கும் எந்த சம்பந்தமும் கிடையாது. துரதிர்ஷ்டவசமாக, இதனால் கெட்ட பெயர் என்னவோ அவர்களுக்குத்தான் ஏற்படுகிறது.

"பேய்கள்" என்ற ஒரே வார்த்தையைப் பயன்படுத்தி எல்லா உடலற்ற உயிர்களையும் ஒரே வகையை சேர்ந்தவர்களாக தொகுத்துவிட முடியாது. அவர்கள் எங்கிருந்து வருகிறார்கள், அவர்களால் என்ன செய்ய முடியும், அவர்கள் எங்கே போகிறார்கள் என்பதையெல்லாம் பொருத்து அவர்களைப் பல வகையாக பிரிக்கலாம். அவர்களில் சிலர் தங்களுடைய பிராரப்த கர்மாவை தீர்ப்பதற்கு முன்பாகவே உடலை இழந்துவிட்டு, அப்படியே அலைந்து கொண்டிருக்கிறார்கள். இதைத் தவிர, உடலற்ற சில யோகிகளும் சுற்றிக் கொண்டிருக்கிறார்கள் - அவர்கள் தங்களை கரைத்துக் கொள்வதற்கு ஒரு சாத்தியத்தை எப்போதுமே தேடிக் கொண்டிருக்கிறார்கள். அது மட்டுமில்லை, விடுமுறையில்

இருக்கும் சில வானுலக உயிர்களும் இருக்கிறார்கள். இன்னும் சிலர் இருக்கிறார்கள் - அவர்கள் முற்றிலும் வேறு பரிமாணத்தை சேர்ந்தவர்கள் - உங்கள் வாழ்க்கைக்கும் அவர்களுக்கும் எந்த சம்பந்தமும் கிடையாது. இதைத் தவிர, தெய்வீக சக்திகள் என்று நாம் பொதுவாக அழைக்கும் சில சக்திகள் இருக்கின்றன - அந்த சக்திகளால் பெரும்பாலும் தாங்கள் விரும்பிய வடிவத்தை எடுக்க முடியும். இப்படியாக, பலவகையான உடலற்ற உயிர்கள் இருக்கிறார்கள். அவர்களை எல்லாம் ஒரே வகைக்குள் தொகுத்துவிட முடியாது.

இந்த உயிர்களை எல்லாம் ஒன்றிலிருந்து இன்னொன்றை வித்தியாசப்படுத்தி புரிந்துகொள்வதும், அதை வகைப்படுத்துவதும் மிகப்பெரிய வேலையாகும். பாரம்பரியமாகவே, உடல் இல்லாமல் இருக்கும் நிலைகள் பலவிதமாக பிரிக்கப்பட்டுள்ளன - பூதம், பிரேதம், பிசாசு, சவுடி, யக்ஷர், கின்னரர், கந்தர்வர், தேவர் என்று பலவிதமாக இருக்கிறார்கள். பரிணாம வளர்ச்சியின் பல்வேறு நிலைகளில் அவர்கள் இருக்கிறார்கள். அல்லது வெவ்வேறு விதமான விடுமுறைகளில் இருக்கிறார்கள் என்று சொல்லலாம். ஒருவர் ஃபர்ஸ்ட் கிளாஸ் பிரிவில் இருக்கிறார், இன்னொருவர் செகண்ட் கிளாஸில் இருக்கிறார், இன்னொருவர் வேறொரு கிளாஸில் இருக்கிறார், இன்னொருவர் மிகவும் மோசமான நிலையில் இருக்கிறார் (அதைத்தான் நரகம் என்று சொல்கிறீர்கள்). அடிப்படையில், இவர்கள் எல்லோருமே ஏதோ ஒருவிதமான விடுமுறையில் இருக்கிறார்கள். அதேசமயம், அவர்களுடைய விடுமுறை ஏதோ ஒரு நேரத்தில் முடிந்துவிடும், அவர்கள் இன்னொரு பொருள் உடலை எடுக்கவேண்டி இருந்திடும். யாரும் பூதமாக, பிரேதமாக, யக்ஷராக, கந்தர்வராக, ஏன் தேவராகவும் கூட என்றென்றைக்கும் நிலைத்திருக்க முடியாது. அந்த நிலையை குறிப்பிட்ட கால அளவுக்கு அவர்கள் ஆனந்தமாகவோ துன்பமாகவோ உணரலாம். அதற்குப் பிறகு மறுபடியும் பொருள்நிலையில் வடிவம் எடுப்பார்கள்.

மிகவும் எளிமையான விதத்தில் புரிந்துகொள்ள இப்படிச் சொல்லலாம்: விழிப்புணர்வுடன் இருக்கும் சில உயிர்கள் இன்னொரு உடலை எடுக்க மறுத்துவிட்டு, தங்களை முழுமையாக கரைத்துக் கொள்வதற்கான வழிகளை தேடிக் கொண்டிருப்பார்கள் - அப்படிப்பட்டவர்களை வானுலக உயிர்கள் என்று சொல்லலாம். அவர்கள் ஒருவித விழிப்புணர்வோடு வாழ்ந்து, விழிப்புணர்வோடு இறந்தார்கள். அதனால் ஓரளவுக்கு பிரித்துப் பார்க்கும் திறனும், தேர்வுசெய்யும் திறனும் அவர்களுக்கு இன்னும் இருக்கிறது. மற்ற உடலற்ற உயிர்கள் எல்லோரும் உங்களைப் போலவே கட்டாய குணங்களால்தான் இயங்கிக் கொண்டிருக்கிறார்கள். பெரும்பாலும் இப்படிப்பட்டவர்களோடுதான் நீங்கள் தொடர்பில் வருவதற்கு

வாய்ப்பிருக்கிறது. மறுபடியும், எளிமையாக புரிந்துகொள்ள, இவர்களை மூன்று விதமாக வகைப்படுத்தலாம் - தீவிரமானவர்கள், மிதமானவர்கள், கூச்ச சுபாவம் கொண்டவர்கள் என்று பிரிக்கலாம்.

தீவிரமாக இருக்கும் உடலற்ற உயிர்களின் இருப்பு அதிக உயிர்ப்புடன் இருக்கும், மனிதர்களால் அதை உணர்ந்திட வாய்ப்பிருக்கிறது. அவர்களுக்கு ஒரு வடிவமும் இருக்கலாம் - மற்றவர்களின் அனுபவத்தில் அது கிட்டத்தட்ட உடலோடு இருப்பது போலவே தோன்றலாம். தீவிரநிலையில் இருக்கும் ஒரு உடலற்ற உயிரை நீங்கள் நேருக்கு நேர் தொடர்புகொண்டால், திகிலான விஷயங்கள் நிகழ்வது நிச்சயம். அவர்களுடைய வாசனைகள் மிகவும் வலுவாக இருப்பதால், அவர்கள் குறிப்பிட்ட விதத்தில் நடந்துகொள்வார்கள். அவர்களுடைய எதிர்செயல் வலுவானதாக இருக்கும். ஒரு சிலர் தீவிரமாக இருந்தாலும் அமைதியாக இருக்கலாம். ஆனால், பொதுவாக அவர்கள் ஏதோ ஒருவிதத்தில் கட்டாயப்படிதான் இருப்பார்கள்.

மிதமான உடலற்ற உயிர்களை சந்திப்பவர்கள், தங்களை அறியாமலேயே ஏதாவது தொல்லைகளை அனுபவிப்பார்கள். யாரோ ஒருவருக்கு காய்ச்சல் ஏற்படலாம், யாரோ ஒருவருக்கு எந்தக் காரணமும் இல்லாமல் தொந்தரவு ஏற்படலாம். அப்படியென்றால், ஒரு பேய் வந்து உங்கள் தலையில் உட்கார்ந்திருக்கிறது என்று அர்த்தமில்லை. அந்த சக்தி உங்களை பாதித்திருக்கலாம், அவ்வளவுதான். ஏனென்றால், அவர்கள் ஏதோ ஒருவிதத்தில் எல்லா இடத்திலும் இருக்கிறார்கள். அவர்களில் பலர் ஒரு வடிவத்தை தக்கவைக்கும் அளவுக்கு தீவிரமாக இல்லாவிட்டாலும், அவர்கள் இருக்கத்தான் செய்கிறார்கள்.

கூச்ச சுபாவம் கொண்டவர்களால் பெரும்பாலும் உங்களுக்கு எந்த பாதிப்பும் ஏற்படாது. ஆனால் சில மனிதர்களுக்கு, தாக்கத்திற்கு ஆளாகும் தன்மை மிகவும் அதிகமாக இருக்கும். அப்படிப்பட்ட ஒரு சிலருக்கு இதனால் தாக்கம் ஏற்பட வாய்ப்பிருக்கிறது. இந்தக் காரணத்திற்காகதான் க்ளேஷ நாஷனம் போன்ற விஷயங்கள் செய்யப்படுகின்றன - இப்படிப்பட்ட தாக்கங்களை எல்லாம் அது முழுமையாக அகற்றிவிடும்.

இதில் ஒரு பிரச்சனை இருக்கிறது. இதில் வெறும் மனதளவில் ஏற்படும் நிகழ்வு எது, நிஜமானது எது என்று புரிந்துகொள்வது பெரிய சவாலாகவே இருக்கிறது. ஏனென்றால், ஒவ்வொரு மடையனும் தான் ஒரு பேயை பார்த்ததாகவோ, தன்னை பேய்பிடித்து விட்டதாகவோ நினைத்துக்கொள்கிறான். இதை முழுமையாக நிராகரிப்பதும் முட்டாள்தனமாகத்தான் இருக்கும். இந்த உயிர்களுக்கு சுயமாக நோக்கம் வைத்திருக்கும் திறன் இல்லையென்றாலும், கட்டாய குணங்களால்

அவர்கள் எதையாவது செய்ய வாய்ப்பிருக்கிறது. தங்களுடைய மரபணு ஞாபகத்தைத் தேடிடும் போக்கும் அவர்களுக்கு இருந்திடும். தங்களுடைய மரபணு ஞாபகத்தைக் கொண்டிருக்கும் எதையாவது தேடிப்போக பார்ப்பார்கள். அதனால், இந்த ஞாபகங்கள் பதிந்திருக்கும் இடங்களை சுற்றிக் கொண்டிருக்கலாம். அதேசமயம், அவர்கள் உங்களுக்கு தீங்கு ஏற்படுத்துவதற்காகவா இருக்கிறார்கள்? இல்லை, கிடையவே கிடையாது. உள்ளபடியாகவே, மனிதர்களோடு தொடர்புகொள்ளும் போக்கு இந்த உயிர்களுக்கு கிடையவே கிடையாது. "நான் இந்த மனிதரோடு தொடர்புகொள்ள விரும்புகிறேன் அல்லது அந்த மனிதரோடு தொடர்புகொள்ள வேண்டும்," என்று நிர்ணயிக்க அவர்களுக்கு பாகுபடுத்தும் புத்தி கிடையாது. இவையெல்லாம் உங்களுடைய மனதில் ஏற்படும் கற்பனைதான்.

இந்தப் பிரச்சனைக்கெல்லாம் காரணம் என்னவென்றால், ஒரு சிலர் இப்படிப்பட்ட ஒரு பிம்பத்தை உருவாக்கியிருப்பதுதான் - அதாவது, இந்த பேய்களெல்லாம் காத்துக்கொண்டிருக்கின்றன, அவை உங்கள் மேல் பாய்ந்துவிடும், உங்களுக்கு ஏதோ கேடுவிளைவிக்கும் - இப்படியெல்லாம் ஒரு தோற்றத்தை உருவாக்கியிருக்கிறார்கள். இதிலிருந்து ஆதாயம் பெற விரும்பும் மனிதர்கள்தான் இந்த கட்டுக்கதைகளை எல்லாம் உருவாக்கியிருக்கிறார்கள் - அவர்களை வியாபாரப் பேய்கள் என்று சொல்லலாம். இந்த மாதிரி எடுக்கப்பட்ட சினிமாக்கள்தான் இதற்கு காரணம் - இறந்துபோன மனிதர் அங்கே ஒரு மேகத்தில் காத்துக்கொண்டிருக்கிறார், அவர் உங்களோடு பேச ஆர்வமாக இருக்கிறார், நீங்கள் சொல்வதை கேட்பதற்கு துடிக்கிறார் - இப்படியெல்லாம் காட்டினார்கள், அல்லவா? இந்த விஷயங்களெல்லாம் மனிதர்களின் மனத்தை ஆழமாக பாதித்திருக்கின்றன. அதனால், நிஜம் எது, கற்பனை எது என்று பிரித்துக் காட்டும் ஒரு கோட்டை அவர்களால் வரைய முடியவில்லை. மனிதர்களின் மனதில் ஏற்படும் விஷயங்கள் அவர்களுக்கு மிகவும் நிஜமானதாக தோன்றுகிறது. உண்மை என்பதே அதுதான் என்று நினைக்கும் அளவுக்கு அது இருக்கிறது. பேய்களைப் பற்றி நீங்கள் கேட்கும் கதைகளெல்லாம் அவ்வளவு பரவலாக இருப்பதற்குக் காரணம் இதுதான்.

செவ்விந்தியர்கள் இறந்தவர்களை அடக்கம் செய்யும் இடங்களைப் பற்றி கண்டிப்பான விதிமுறைகளை வைத்திருந்தார்கள். இறந்தவர்களுக்காக ஒரு இடத்தை அவர்கள் உருவாக்கிய பிறகு, அந்த இடத்திற்குள் ஒருவருமே நுழையமாட்டார்கள். அந்த உடலை பறவைகளுக்கும் மற்ற உயிர்களுக்காகவும் விட்டுவிடுவார்கள். ஒரு காரணம், அவர்களுடைய சொந்த பாதுகாப்பைப் பற்றியது. இன்னொரு காரணம், இறந்து

போனவர்களை அவர்கள் தொந்தரவு செய்ய விரும்பவில்லை. இறந்தவர்கள் சுகமாக இருக்கவேண்டும், அப்படியே தங்கள் காலத்தைக் கழிக்கவேண்டும் என்று விரும்பினார்கள். பாரம்பரியமாகவே, சுடுகாடுகளும் இடுகாடுகளும் மனிதர்களின் குடியிருப்பிலிருந்து தூரமாக அமைந்திருந்த வழக்கத்திற்கு இதுவும் ஒரு காரணம் - இறந்தவர்களுக்கு ஒரு சூழலும் இடமும் கொடுக்கப்பட வேண்டும் என்பதுதான். இப்படிச் செய்வதில் மிகுந்த ஞானம் இருக்கிறது.

"உடலற்ற உயிர்கள் எல்லாமே மனித வடிவங்கள் மட்டும்தானா? அல்லது மனிதர்கள் இல்லாத உடலற்ற உயிர்கள் இருக்கிறதா?" என்று கேட்கிறார்கள். சரிதான், மனிதர்களாக இல்லாத உடலற்ற உயிர்கள் என்றெல்லாம் ஒன்றும் கிடையாது. உதாரணமாக, ஒரு வெட்டுக்கிளி உடலே இல்லாமல் இங்கும் அங்கும் தாவிக்குதித்து போய்க்கொண்டு இருக்குமா? இல்லை, அப்படி கிடையாது. இதற்கு சில விதிவிலக்குகள் உண்டு, அதில் ஒன்று நாகப்பாம்புகள். நாகங்களுக்கும் பசுக்களுக்கும் சூட்சும உடலை வைத்திருக்கும் திறன் இருக்கிறது என்று ஏற்கனவே பார்த்தோம்[1]. காரண அறிவு ரீதியாக, இப்படிச் சொல்வது முழுவதும் சரியாக இருக்காது - ஆனால், இது எப்படியென்றால் - மனிதர்களைப் பொருத்தவரை மனிதப் பேய்கள் இருப்பதுபோல, சில நாகப் பேய்களும் இருக்கின்றன, அவர்களாலும் மனிதர்களை பிடித்துக்கொள்ள முடியும்.

பாரத கலாச்சாரத்தில் நாகதோஷம்[2] என்பது எல்லோருக்குமே பொதுவாக தெரிந்த விஷயம்தான். ஒரு உடலற்ற நாகப்பாம்பு உங்களை ஏதோ ஒருவிதத்தில் தொட்டிருந்தால், அப்போது நாகதோஷம் ஏற்படுகிறது. ஏற்கனவே பார்த்ததுபோல, உடலற்ற உயிருக்கு தனக்கென்று நோக்கம் எதுவுமே கிடையாது என்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும். அதற்கு நோக்கம் எதுவும் கிடையாது, அதேசமயம் கட்டாயமான போக்குகள் உண்டு. அதனால் நீங்கள் அதோடு தொடர்பில் வரும்போது, அதன் தாக்கம் உங்கள் மீது ஏற்படலாம். யாருக்காவது நாகதோஷம் ஏற்பட்டால், அது குறிப்பாக அவருடைய தோலின் சில அடுக்குகளை பாதிக்க முடியும், அப்படிப்பட்டவர்களில் வழக்கமாக தோலில் தடிப்புகள் ஏற்படும். அது பார்ப்பதற்கு சோரியாசிஸ் போல தோன்றும், இருந்தாலும் அதை சோரியாசிஸ் என்று சொல்ல முடியாது. தோல் செதில் செதிலாக உரிய ஆரம்பிக்கும். அசைவையும் அசைவற்ற தன்மையையும் பற்றி மிகவும் வினோதமான உணர்தல் ஏற்படவும் வாய்ப்பிருக்கிறது. அதை

---

1 அத்தியாயம் 8ல், "காலபைரவ கர்மா எந்த வரம்புக்குள் செயல்படும்?" என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

2 சக்திநிலையில் ஏற்படும் ஒருவித எதிர்மறையான தாக்கம்.

முறையாக கையாளாவிட்டால் மனரீதியான பாதிப்பு ஏற்படலாம் அல்லது காது கேட்பதில் பெரிய பிரச்சனைகள் ஏற்படலாம். அதேசமயம், வெறும் நாகபூஜையும் அதைப்போன்ற விஷயங்களையும் செய்து, இதிலிருந்து முழுமையாக விடுபட்டு குணமானவர்களை நான் பார்த்திருக்கிறேன்.

உடலற்ற நாகத்தின் தாக்கம் ஒருவர் மேல் ஏற்பட்டால், அந்த தாக்கத்தின் கால அளவு அதிகமாக இருக்காது. ஏனென்றால், அந்த உடலற்ற உயிரின் கட்டமைப்பே அந்த அளவுக்கு திடமாக இல்லை. தன்னை நீண்டகாலத்துக்கு அப்படியே தக்கவைத்துக் கொள்ளும்படி திடமாக இல்லாததால், அது தன்னைத்தானே கரைத்துக் கொள்ளும். வழக்கமாக அந்த கால அளவு இருபத்தேழு முதல் ஐம்பத்து நான்கு நாட்களுக்குள் இருக்கும், அவ்வளவுதான். ஆனால் அந்த நாகதோஷம், அதாவது அந்த தாக்கத்தால் ஏற்பட்ட நோய் அதிக காலத்திற்கு நீடிக்க வாய்ப்பிருக்கிறது. அதாவது, அந்த தாக்கத்தின் விளைவு எதிர்மறையான பாதிப்பாக இருந்தால் இப்படி இருக்கும். இந்த தாக்கம் உங்களுக்கு சாதகமாகவும் அமைந்திட வாய்ப்பிருக்கிறது. அதன் தாக்கம் சாதகமாக ஏற்பட்டால் உங்கள் முதுகெலும்பின் உறுதியும், அதன் இயங்கும் திறமையும், உங்களுடைய உள்வாங்கும் திறனும் மேம்பட்டு போகும். தன்னுடைய மரணத்திற்குப் பிறகு உடலற்ற ஒரு நாகப்பாம்பு கொஞ்ச காலத்திற்கு சுற்றிக்கொண்டிருக்கும் என்ற காரணத்தால்தான், நம் நாட்டில், ஒரு இறந்த நாகத்தைப் பார்த்தால் அதற்கு முழுமையான இறுதிச்சடங்கை செய்வார்கள்.

நாகப்பாம்புகளைப் பற்றியும் அவர்களின் தாக்கத்தைப் பற்றியும் பேசும்போது, நான் சாதகமான தாக்கம், பாதகமான தாக்கம் இரண்டையுமே அனுபவித்திருக்கிறேன் என்று சொல்லியாக வேண்டும். ஒருமுறை அது என்னைக் கொன்றது[3]. ஆனால், இன்னொரு முறை அது என் வாழ்வை பல விதங்களில் வளப்படுத்தியது. தியானலிங்க பிரதிஷ்டைக்குப் பிறகு என்னுடைய உடல்நலம் மிகவும் மோசமான நிலையில் இருந்தது. குணமாவதற்கு சக்தி நிலையில் பல செயல்களை செய்தோம். நான் மறுபடியும் நலம் அடைவதற்கு சில மனிதர்கள் தங்களுடைய வாழ்க்கையையே அர்ப்பணித்தார்கள். ஆனால் என்னுடைய உடலின் சில பகுதிகள் - குறிப்பாக வலது பக்கத்தில் தொப்புளுக்கு கொஞ்சம் பக்கத்தில் - வெற்றிடம்போல் இருந்தது, அதில் பலப் பிரச்சனைகள் உருவானது. அங்கே பெரிய கட்டிகள் உருவாக ஆரம்பித்தன. அந்த கட்டிகள் ஒருநாள் தோன்றிடும், அடுத்த நாள் மறைந்துவிடும். என்னுடைய

3 அத்தியாயம் 11ல், "என்னுடைய முன்பிறவிகள்" என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

கல்லீரல் செயல் இழக்க ஆரம்பித்தது. அதனால் டாக்டர்கள் என்னுடைய ரத்தத்தில் சிகப்பு அணுக்களின் எண்ணிக்கை மிகவும் அதிகப்படியாக இருப்பதாக சொன்னார்கள். நாம் இதை சரிசெய்திருக்கலாம், ஆனால், அதைச்செய்ய எனக்கு நேரம் தேவைப்பட்டது - எனக்காக செலவு செய்ய குறைந்தது ஒரு மாதமோ, இரண்டு மாதமோ தேவைப்பட்டது - ஆனால் என்னுடைய வேலைகள் ஏற்கனவே திட்டமிடப்பட்டு இருந்ததால் எனக்கு நேரம் கிடைக்கவே இல்லை. அதனால் என் நிலை இன்னும் மோசமாகிக் கொண்டே இருந்தது. அவ்வப்போது, அங்கும் இங்கும், சிறிய அளவில் ஒட்டுப்போடும் வேலைகளை மட்டும் செய்தேன். ஆனால், என்னுடைய உடலின் மேல் முழுமையான கவனம் செலுத்துவதற்கு வாய்ப்பே கிடைக்கவில்லை.

டிசம்பர் 2001ஆம் ஆண்டு, ஒருநாள் இரவில், ஈஷா யோக மையத்தில் இருக்கும் என்னுடைய படுக்கை அறையில் படுத்துக் கொண்டிருந்தேன். அதிகாலை 4:45 மணி ஆகியிருந்தது. நான் கண்விழித்தபோது உடலற்ற மிகப்பெரிய நாகம் ஒன்று எனக்குப் பக்கத்தில் இருப்பதைப் பார்க்கிறேன். அது வழக்கமான அளவைவிட மிகவும் பெரியதாக இருந்தது. அது தலையை உயர்த்தி படம் எடுத்துக்கொண்டு இருந்தது. என் படுக்கைக்கு பக்கத்தில் பித்தளையில் செய்த சிறிய நாகப்பாம்பு ஒன்றை எப்போதுமே வைத்திருப்பேன்; தினமும் அதுதான் எனக்கு முதலில் காலை வணக்கம் சொல்லும். இப்போது பார்த்தால், பிரம்மாண்டமான தலையுடன் ஒரு பெரிய நாகமே இங்கு இருக்கிறது! நான் அதைப் பார்த்துக் கொண்டிருந்தேன். பிறகு, அது என்னை நோக்கி வந்தது, என்னை கடித்தது - என்னுடைய தொப்புளுக்கு பக்கத்தில் கடித்தது. நான் என் கண்களை மூடிக்கொண்டேன். அது அங்கேயே கொஞ்ச நேரம் இருந்தது, பிறகு போய்விட்டது. அதற்குப்பின் அதை நான் பார்க்கவே இல்லை.

அந்த கடியால் என் வயிற்றில் காயங்கள் ஏற்பட்டன - நான்கு பற்கள் பதிந்ததால் ஏற்பட்ட குறி இருந்தது, ரத்தம் கசிந்து கொண்டிருந்தது. அதை சிலரிடமும் நான் காட்டினேன். ஆனால் அந்த நாளிலிருந்து அந்த வெற்றிடம் காணாமல் போனது; அந்த வானுலக நாகத்துடன் ஏற்பட்ட இந்த சந்திப்பால் அது என்னிடமிருந்து விலக்கப்பட்டது.

## பேய் தொந்தரவுகள்

பேய்களை பார்த்ததாக, பேய்களை கேட்டதாக சொல்லிக்கொள்வதும், அவை ஏற்படுத்தக்கூடிய தீங்குகள் பற்றிய பேச்சுகளும் பெரும்பாலும் தனிமனிதர்களின் மனதில் உருவாக்கப்படும் கற்பனைதான். இருந்தாலும், பொருள் உடலுக்கு அப்பாற்பட்ட நிஜம் ஒன்று இருக்கவே செய்கிறது.

தங்களுக்கென்று ஒரு நோக்கத்தை வைத்துக்கொள்ளும் திறன், பெரும்பாலான உடலற்ற உயிர்களுக்கு கிடையாது. அதனால் அவர்கள் ஒருவருக்கு தீங்கு ஏற்படுத்த முடியாது. அதேசமயம், அவர்களால் ஒருவருக்கு தீங்கு ஏற்பட வாய்ப்பிருக்கிறது. நேரடியான செயலின் மூலம் அவர்களால் உங்களை கொல்ல முடியாது. அதேசமயம், அவர்கள் ஒருவரை பிடித்துக்கொள்வது மூலமோ, பயப்படும்படியான சூழ்நிலைகளை ஏற்படுத்துவதன் மூலமோ உயிரை எடுக்கும்படி அமைந்திடலாம். இப்படிப்பட்ட உயிர்கள் ஒருவரைப் பிடித்துக்கொண்டிருக்கும்போது, வழக்கமாக அவருடைய மரணம் சீக்கிரமாகவே ஏற்பட்டுவிடும். ஏனென்றால், அப்படிப்பட்ட ஒரு சூழ்நிலையை இந்த உயிர்கள் உருவாக்கும். அந்த மனிதர் நடந்துபோய் கிணற்றுக்குள் விழுந்துவிடலாம், மலை உச்சியிலிருந்து அப்படியே நடந்துபோய் விழுந்துவிடலாம் - இதுபோன்ற சூழ்நிலை ஏதாவது ஏற்படலாம். உங்களுடைய உடல், உணர்ச்சி, புத்தி என்று அனைத்தையுமே இந்த உயிர் ஆட்கொண்டு விடும். உங்களுக்குள் ஒரு பாகம் இன்னும் தவித்து போராடிக்கொண்டு இருந்தாலும், அவர்கள் அப்படியே மலையிலிருந்து நேராக நடந்துபோய் கீழே விழுந்துவிடலாம். அது அவர்களுடைய உடல் இல்லையே, அதனால் அவர்களுக்கு வலிக்காது. ஆனால், அப்படி செய்வதில் இறந்துபோவது என்னவோ நீங்கள்தான்! இது எப்படியென்றால், வேறு யாரோ ஒருவர் உங்களுடைய காரை ஓட்டிக் கொண்டிருப்பதால் அவருக்கு அக்கறை இல்லாமல் போகலாம், பாதையில் வரும் எல்லாவற்றையும் இடித்துக் கொண்டே போகிறார் - அதைப்போலத்தான் இதுவும்.

தங்கள் விருப்பப்படி யாருக்கு வேண்டுமானாலும் அவர்களால் இப்படி செய்ய முடியுமா? முடியாது. அந்த மனிதரிடம் ஓரளவுக்கு தாக்கத்திற்கு ஆளாகக்கூடிய தன்மை இருக்கவேண்டும். ஒரு மனிதர் நன்கு உறுதியாக நிலைபெற்றிருந்தால், இந்த விஷயங்கள் எல்லாம் அவர்மீது எந்தவித தாக்கத்தையும் ஏற்படுத்த முடியாது. ஒருவர் தியானம் செய்பவராக இருந்தால், அவருக்குள் ஒருவிதமான தியானத்தன்மை வந்திருந்தால், அவரை எதுவும் பிடித்துக்கொள்ள முடியாது. அதற்கு சாத்தியமே இல்லை. அதேசமயம், மிகவும் சிதைந்துபோன வடிவங்களில் தோன்றுவதன் மூலமாகவே இந்த உயிர்கள் உங்களுக்குள் மிகுந்த பயத்தையும் நடுக்கத்தையும் ஏற்படுத்த வாய்ப்பிருக்கிறது. நீங்கள் வெளியே நடந்து போய்க்கொண்டிருக்கிறீர்கள், அப்படியே உருசிதைந்த வடிவம் ஒன்றை பார்க்கிறீர்கள் என்று வைத்துக்கொள்வோம். அது உங்களுக்கு எதையும் செய்திட தேவையில்லை, அது சும்மா அப்படியே நின்றுகொண்டிருந்தாலே போதும். தன்னுடைய தலையை தன் கையில் வைத்துக்கொண்டு ஒருவர் அங்கே நின்று கொண்டிருந்தால், அதுவே போதும், நீங்கள் அரண்டு மிரண்டு கதிகலங்கிப் போவீர்கள், இல்லையா? நீங்கள் மிகவும்

சமநிலையாக இருந்தால், சும்மா அப்படியே அவரைப் பார்த்துவிட்டுப் போய்விடலாம். அப்போது அவரால் ஒன்றும் செய்யமுடியாது. மண்டை இல்லாத ஒருவரை சமாளிப்பது மிகவும் சுலபமானது - மனைவிகளை கேட்டுப்பாருங்கள்! ஆனால், நீங்கள் பீதி அடையும் மனிதராக இருந்தால், இங்கேயும் அங்கேயும் சும்மா தோன்றுவதன் மூலமாக மனரீதியாகவே ஒருவரை அது கொன்றுவிட முடியும். வெறும் பயத்தாலும் பயங்கரத்தாலுமே மரணம் ஏற்பட முடியும்.

உடலற்ற உயிர்களால் உங்கள் உடலைக்கூட பார்க்கமுடியாது. அவர்கள் உங்களை ஒரு சக்தி வடிவமாகத்தான் பார்க்கிறார்கள். ஒருவருக்கு பேய் பிடித்து இருப்பதைப் பற்றியோ, இன்னொரு உயிரால் கொடுமைப்படுத்தப் படுவதைப் பற்றியோ நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். ஒருவேளை அப்படிப்பட்ட சூழ்நிலைகளை நீங்கள் பார்த்தும் இருக்கலாம். வழக்கமாக, அந்த சக்தியோடு ஏதோ ஒருவிதமான உறவு இருந்தால்தான் இப்படி நடக்கும். அவர்கள் ஒரே இரத்தமாக இருக்கலாம், ஒரே கர்மப்பொருளை கொண்டிருக்கலாம். ஏதோ ஒருவிதத்தில் அப்படிப்பட்ட விஷயத்தை தாங்கியிருக்கும் இந்த குறிப்பிட்ட மனிதரை நோக்கி அந்த உயிர்கள் ஈர்க்கப்படுகிறார்கள். உங்கள் குடும்பத்தில் யாரோ ஒருவர் தன் பிராரப்த கர்மா பாதியில் இருக்கும்போதே இறந்துவிட்டார் என்று வைத்துக்கொள்வோம். அவருடைய உடைகளை நீங்கள் அணியும்படி ஏற்பட்டால், தங்களை அறியாமலேயே அவர்கள் உங்களை நோக்கி வருவார்கள். அவர்கள் உங்களை தேடுகிறார்கள் என்று அர்த்தம் கிடையாது. ஏதோ ஒருவிதத்தில் தங்களுடைய உடலின் ஒரு அம்சம், தங்களுடைய சக்தியின் ஒரு அம்சம் அந்த துணிகளில் பதிந்து இருக்கிறது. அதனால், அதை நோக்கி இழுக்கப்படும் போக்கு அவர்களுக்கு ஏற்படுகிறது.

அதனால்தான் பாரம்பரியமாகவே, ஒரு மனிதர் இறந்துவிட்டால் அவருடைய மோதிரத்தை அணியக்கூடாது என்று சொன்னார்கள். ஒருவருடைய பிராரப்த கர்மா வலுவாக இருக்கும்போதே இறந்துவிட்டார் என்று வைத்துக்கொள்வோம். அதற்குப்பின் அவருடைய மோதிரத்தை உங்கள் விரலில் நீங்கள் போட்டிருந்தால், அந்த உயிர் உங்களுக்குள் நுழைவதற்கு மிகவும் சுலபமாகி விடுகிறது. உங்களை அடைவது மிகவும் எளிதாகி விடுகிறது. அவர் ஒன்றும் உங்களை கொடுமைப்படுத்த முயற்சிக்கவில்லை. அவர் எதையும் செய்ய முயற்சிக்கவில்லை. அவருக்கு அப்படி எந்த நோக்கமும் இல்லவேயில்லை. அவர் தன்னுடைய வாசனைகளின் போக்குபடிதான் இயங்குகிறார் - அது ஏதோ ஒருவிதத்தில் உங்களுக்கு கொடுமையாக இருந்திடும், அவ்வளவுதான். மற்றபடி, உடலற்ற உயிர் ஏதாவது வந்து உங்களை கொடுமைப்படுத்தும்

சூழ்நிலையோ, நீங்கள் அதை பார்க்கும்படி கண்முன் தோன்றிடும் சூழ்நிலையோகூட ஏற்பட வாய்ப்பே இல்லை.

இந்த உயிர்களை உணர்ந்திடும் அளவுக்கு உங்களுடைய விழிப்புணர்வை நீங்கள் வளர்த்துக் கொண்டிருந்தால், அப்போது அவர்களோடு உங்களுக்கு எந்தப் பிரச்சனையும் இருக்காது. அதனால் உங்களைப் பாதுகாத்துக்கொள்ள நீங்கள் எதையும் செய்யவேண்டிய அவசியமில்லை. இந்த உயிர்களை ஈடுபடுத்தும் ஏதோ ஒரு வேலையை நீங்கள் செய்து, அதற்காக அவர்களை கவர்ந்திழுக்க முயற்சித்து, அவர்களை வைத்து சில விஷயங்களை செய்யும்போதுதான் உங்களைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டிய அவசியம் உருவாகிறது. மற்றபடி, நீங்கள் அதைப்பற்றி கவலைப்பட தேவையில்லை. உங்களுக்கு தியானத்தன்மை ஏற்பட்டால், அவர்களால் உங்களை ஒன்றும் செய்யமுடியாது. சொல்லப்போனால், அவர்களுடைய சகவாசம் உங்களுக்கு நன்றாகவே இருக்கும். நீங்கள் அந்த தன்மையில் இல்லாவிட்டால் உங்களுடைய உடலில் ருத்ராட்சம் அணியலாம் அல்லது லிங்கபைரவி டாலரை அணியலாம். இவை உங்களைப் பாதுகாக்கக்கூடிய எளிமையான விஷயங்களாகும்.

செய்யக்கூடாத விஷயங்களில் ஒன்று - உங்களுடைய கட்டைவிரலில் உலோகத்தால் ஆன மோதிரங்களை ஒருபோதும் அணியக்கூடாது. இன்றைக்கு பலரும் தெரியாத்தனமாக கட்டைவிரலில் மோதிரங்களை அணிந்துகொள்ள ஆரம்பித்துவிட்டார்கள். இது சமீப காலங்களில் உருவாகியுள்ள வழக்கம்தான். அப்படி போட்டுக்கொள்ளும் ஆர்வம் அவர்களுக்கு எப்படி வந்தது என்று எனக்கு புரியவில்லை. ஒருவேளை தற்செயலாக ஏற்பட்டதா என்றும் தெரியவில்லை - எங்கெல்லாம் எதையாவது போட முடியுமோ, அங்கெல்லாம் பொருட்களை போட்டுக் கொள்கிறார்களோ என்னவோ! எந்த கலாச்சாரத்திலும், எந்த இடத்திலும் மனிதர்கள் கட்டைவிரல்களில் மோதிரங்களை போட்டுக்கொண்டதே கிடையாது. கட்டைவிரலில் ஒரு மோதிரத்தை அணிந்தால் சிலவிதமான சக்திகளை உங்களிடம் ஈர்ப்பீர்கள், அதை உங்களால் கையாள முடியாமல் போகலாம். உங்களை நோக்கி ஈர்க்கப்படும் இந்த சக்திகள் இனிமையானதாகவே இருக்கும் என்ற அவசியமில்லை. அவை உங்களுடைய புரிதலுக்கும் கையாளும் திறனுக்கும் அப்பாற்பட்டவை. அவற்றால் நோய்களும், விபத்துகளும் எளிதில் ஏற்படலாம் அல்லது ஒருவரின் வாழ்க்கையில் கடுமையான தொல்லைகள் ஏற்படலாம். அதனால் கட்டைவிரலில் மோதிரம் அணியக்கூடாது. ஒருபோதும் அணியவேக் கூடாது. பில்லிசூனியம் போன்ற விஷயங்களில் மும்முரமாக ஈடுபடுபவர்கள்தான் கட்டைவிரலில் உலோகத்தை அணிவார்கள்.

## பேய் தீர்வுகள்

உடலற்ற உயிர்களை சிறைபிடித்திட முடியும். மாந்திரீகத்தில் சிறந்த வல்லமை பெற்றவர்களால் அப்படி செய்யமுடியும். அதாவது, பிரிட்டிஷ் காலத்தில் ஒரு பக்குவம் இல்லாத சமூக அமைப்பால் சத்குரு ஸ்ரீபிரம்மாவை போன்ற ஒரு மகா முனிவரையும் சிறையில் அடைக்க முடிந்தது. அதைப்போலவே, வேறு ஒரு நிலையில், இந்த உயிர்களையும் பிடித்துவைக்க முடியும். இந்த உயிர்களுக்கு உடல் என்பது கிடையாது, அதோடு ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்திற்கு போக அவர்களுக்கு போக்குவரத்தும் தேவையில்லை. இப்படிப்பட்ட ஒரு உயிர் என்னிடம் இருந்தால், அவர் மூலமாக நான் எவ்வளவு விஷயங்களை சாதித்துக்கொள்ள முடியும் என்று உங்களால் கற்பனை செய்ய முடிகிறதா? ஆனால், ஒருபோதும் அவர்களை நான் எந்த விதத்திலும் பயன்படுத்திக்கொள்ளவே மாட்டேன். அவர்களை விடுவிப்பது மட்டும்தான் என்னுடைய ஒரே ஆர்வம்; உடலற்ற உயிர்களோடு எனக்கு இருக்கும் ஈடுபாடு அந்த நிலையில் மட்டும்தான் இருக்கிறது. அதேசமயம், இந்த உயிர்களை தங்களுக்காக பயன்படுத்திக் கொள்ளும் மனிதர்களும் இருக்கிறார்கள். ஒரு மனிதரிடமிருந்து எதையாவது கறக்கவேண்டும் என்றால், அவருக்குள் இந்த உடலற்ற உயிரை போட்டுவிடுவார்கள். இப்போது அந்த மனிதர் இவர்களுக்கு வேண்டியதையெல்லாம் செய்திடுவார்.

எதையும் பிடித்து வைப்பதில், அதற்கே உரிய கட்டுப்பாடுகளும் எல்லைகளும் இருக்கின்றன. ஒரு விஷயத்தை நீங்கள் என்றென்றைக்கும் பிடித்துவைக்க முடியாது. இந்த மாந்திரீகவாதி இறந்த பிறகாவது அது விடுவிக்கப்படத்தான் போகிறது. ஆனால், இப்படிப்பட்ட மாந்தி ரீகத்தில் ஈடுபடும் பெரும்பாலான மனிதர்களுக்கு இருக்கும் ஆற்றல், அவர்களுடைய மரணம் வரைக்கும்கூட நீடிப்பதில்லை; அதற்கு முன்பாகவே போய்விடுகிறது. ஏதோ ஒரு கட்டத்தில் அந்த உயிரின் மீது இவர்களுடைய கட்டுப்பாட்டை இழந்துவிடுகிறார்கள். அப்படி ஏற்படும்போது இந்த உயிர்கள் தானாகவே போய்விடுகிறார்கள். பொதுவாகவே அப்படிப்பட்ட ஒரு மனிதர் இருக்கும் இடத்தில் இந்த உயிர்கள் சுற்ற மாட்டார்கள். அவர்களால் அதை எளிதாக உணர்ந்திட முடியும். விழிப்புணர்வு இல்லாத உயிர் அல்லது அறியாத உயிர் ஒன்றுதான் எளிதில் சிக்கிக்கொள்ளும். கொஞ்சம் விழிப்பாக இருப்பவர்கள் அவ்வளவு சுலபமாக அகப்பட மாட்டார்கள். எது எது எப்படிப்பட்டது என்று அவர்களுக்கு தெரிந்திருக்கும். தங்களைச் சுற்றியிருக்கும் சக்தியை அவர்களால் உணர்ந்திட முடியும், அவர்கள் ஜாக்கிரதையாக இருப்பார்கள்.

இந்த உயிர்களெல்லாம் மிகவும் உதவியற்ற நிலையில் இருக்கிறார்கள். இப்படிப்பட்ட உயிர்களை பிடித்துவைத்து பயன்படுத்துவது மிகவும் மோசமான கர்மாவாகும். இது ஒரு சின்ன குழந்தையை உடல் இன்பத்திற்காக பயன்படுத்துவதற்கு நிகரான வஞ்சகச் செயலாகும். அதோடு, இப்படிச் செய்வது எந்த நேரத்திலும் உங்களுக்கு எதிராக திரும்பிட வாய்ப்பிருக்கிறது. ஆனால் அப்படி செய்பவர்கள் பொதுவாகவே தங்களுக்கென்று பாதுகாப்பு முறைகளை வைத்திருக்கிறார்கள். தங்களை ஒருவிதமாக கவனித்துக் கொண்டுதான் இதில் ஈடுபடுகிறார்கள். ஆன்மீகத்தில் இருக்கும் ஒருவர் ஒருபோதும் இப்படி செய்யவே மாட்டார். அதேசமயம், மற்றவர்களுக்குள் ஆழமான பயத்தை ஏற்படுத்துவதில் சிலர் மிகுந்த மகிழ்ச்சியடைகிறார்கள். இது அவர்களுக்கு செல்வத்தை உருவாக்கும் வழியாக அமையவும் வாய்ப்பிருக்கிறது. ஆனால் வழக்கமாகவே, இப்படிப்பட்ட உயிர்களை பயன்படுத்திக் கொள்பவர்கள் மிகவும் மோசமான மரணத்தையே அடைகிறார்கள். காலப்போக்கில் அவர்களை அது துரத்திப் பிடித்துவிடுகிறது.

உடலற்ற உயிர்களுக்கு உதவி அவசியமா? அவர்களை கரைத்திடுவது சாத்தியமா? ஆமாம், முடியும். உடலோடு இருக்கும் உயிர்களுக்கும், உடல் இல்லாத உயிர்களுக்கும் ஒரே வித்தியாசம்தான் இருக்கிறது - உடலோடு நீங்கள் இருக்கும்போது உங்களுக்கு பிரித்துப் பார்த்து பாகுபடுத்தும் திறன் இருக்கிறது, அவ்வளவுதான். உங்களுடைய விழிப்புணர்வு அதிகரிக்கும்போது உங்களுடைய பாகுபடுத்தும் திறன் அதிகரிக்கிறது. உங்களுடைய விழிப்புணர்வு குறையும்போது, உங்களுடைய பாகுபடுத்தும் திறனும் குறைகிறது. நீங்கள் ஒரு உடலைப் பெற்று இங்கே ஒரு மனிதனாக இருக்கும்போது, நீங்கள் பரிணாமத்தில் முன்னேறவும் முடியும், பின்னடையவும் முடியும். இந்த சாத்தியங்கள் இரண்டுமே உங்களுக்கு இருக்கின்றன. பிரித்துப்பார்த்து தேர்வுசெய்யும் புத்தியை கொண்டிருப்பதில் உள்ள அழகே இதுதான். ஒரு மனிதனாக உங்களுடைய விழிப்புணர்வையும், பாகுபடுத்தும் திறனையும் நீங்கள் பயன்படுத்தவில்லை என்றால், உங்களுடைய மனித வாழ்க்கையை வீணடித்தீர்கள் என்றால், உங்களுக்கு நீங்களே பெரிய பிரச்சனையை உருவாக்கிக் கொண்டீர்கள் என்று அர்த்தம்.

ஆனாலும், தாங்கள் உடலைவிட்டு வெளியேறியபோது இருந்த விழிப்புணர்வு நிலையில்தான் இந்த உடலற்ற உயிர்கள் தொடர்ந்து நீடிக்கமுடியும். அவர்களுடைய விழிப்புணர்வு அதிகமாகவும் முடியாது, குறையவும் முடியாது. இது ஒருவிதமான திரிசங்கு நிலைதான், ஒரு தேக்கநிலைதான். இது ஒரு லைட் பல்பு போன்றது. ஒரு குறிப்பிட்ட ஆயுள் காலத்திற்குப் பிறகு அந்த பல்பு காலாவதி ஆகிவிடும். எவ்வளவு

காலம் எரிந்து கொண்டிருக்க வேண்டும் என்றும், எப்போது முடிந்து போகவேண்டும் என்றும் தேர்ந்தெடுப்பது அந்த பல்புடைய கையில் இல்லை. அத்தனை மணிநேரங்களுக்கு அது எரிகிறது, பிறகு முடிந்துபோகிறது. இந்த உடலற்ற உயிர்களும் இப்படித்தான். அவர்களால் பரிணாமத்தில் வளரவும் முடியாது, பின்னடையவும் முடியாது. அவர்களிடம் இப்போது என்ன இருக்கிறதோ அதை மட்டும் அனுபவிக்க வேண்டும், அவ்வளவுதான். அதனால், கொஞ்சம் விழிப்புணர்வுடன் இருக்கும் உடலற்ற உயிர்களுக்குகூட, அவர்கள் முன்னேறி நகர்ந்திட கொஞ்சம் உதவி தேவைப்படும்.

அவர்களுக்கு கர்ம கட்டமைப்பு இருக்கிறது - பிரபஞ்சத்தில் இருக்கும் மற்றதிலிருந்து தனிப்பட்டு விளங்கும்படி தங்களுடைய வடிவத்தை அவர்கள் தக்கவைத்துக்கொள்ள - கர்ம கட்டமைப்புதான் ஒரே காரணம். அவர்களுடைய பொருள் உடல் போய்விட்டாலும், கர்ம உடல் இன்னும் அப்படியே இருக்கிறது. கர்ம உடல் அப்படியே இருப்பதால்தான், அவர்களுக்கு ஒரு வடிவம் இருக்கிறது, தனிப்பட்ட ஒரு அம்சமாக விளங்கும் தன்மை இருக்கிறது. அவர்களுக்கும் தனிப்பட்ட விருப்பு வெறுப்புகள், கட்டாயங்கள், ஆசைகள் எல்லாம் இருக்கின்றன. ஆனால், வானுலக உயிர்கள் என்று நாம் அழைக்கும் இந்த உடலற்ற உயிர்கள் ஒரு உயர்ந்த விஷயத்திற்காக ஏங்கினார்கள், அதை வந்தடைந்தார்கள். ஆனால், அவர்களுக்கும் கொஞ்சம் உதவி தேவைப்படும். அதாவது, யாரோ ஒருவர் பணக்காரர் ஆகவேண்டும் என்று ஏங்கினார், பணக்காரர் ஆகிவிட்டார். ஆனால், அந்தப் பணக்காரருக்கு மட்டும்தான் தன்னுடைய போராட்டங்களும் பிரச்சனைகளும் தெரியும். மெர்சிடீஸ் காரில் போகும் மனிதரும் அவதியில் இருப்பார் என்ற விஷயம் தெருவில் இருக்கும் ஏழைக்கு ஒருபோதும் புரியாது. ஆனால், அந்தப் பணக்காரருக்கும் தனக்கே உரிய பிரச்சனைகள் இருக்கின்றன. தன்னுடைய செல்வம் தன்னை எங்கும் கொண்டு சேர்க்கவில்லை என்பது அவருக்குப் புரிகிறது, அதனால் அவருடைய சந்தோஷம் அதிகமாகவில்லை என்று புரிகிறது. தான் உள்முகமாக திரும்புவது அவசியம் என்பதை இப்போது அவர் புரிந்துகொள்வது மிகவும் சுலபம். இந்த வானுலக உயிர்களின் நிலையும் இப்படித்தான்.

சரி, இப்போது அந்த உயிரை கரைப்பதற்கு என்ன செய்கிறோம்? - அவர்களுடைய கர்மாவை உடைத்து விடுகிறோம், அவ்வளவுதான். ஒருவரின் கர்மாவை உடைப்பது எப்படி? கர்மா என்பது உங்களுடைய மனம், பொருள் உடல், உணர்ச்சிகள், சக்தி ஆகிய நிலைகளில் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. உடல் என்பதை இழந்துவிட்ட பிறகு, உடலின் உணர்ச்சிகளும் இல்லாமல் போகின்றன. மனம் இன்னும் இருக்கிறது,

ஆனால் அதுவும் தன்னுடைய பிரித்துப் பார்க்கும் திறனை இழந்துவிட்டது, காரண அறிவு போய்விட்டது. அதாவது, அடிப்படையாக ஒரு உடலற்ற உயிருக்கு கர்மாவெல்லாம் சக்தி உடலில் பதிந்திருக்கின்றன. பண்டைய காலங்களில், செல்வந்தர்களை மகிழ்விக்கும் விலைமாதர்கள் உடல் முழுக்க நகைகளை அணிந்திருப்பார்கள். அதை வைத்து, தங்களைத் தேடி வரும் ஆண்களுக்கு நீண்டநேரம் விளையாட்டு காட்டுவார்கள். அவர்களுடைய உடல் முழுவதும் நகைகளால் மூடப்பட்டு இருக்கும். இந்தப் பெண்களை தேடி வரும் ஆண்கள் காமம் நிறைந்தபடி வருவார்கள். ஆனால், அவர்களால் அந்த நகைகளை அகற்ற முடியாது. அதை கழட்டுவதில் பல மணிநேரம் போராடுவார்கள். அவர்கள் எந்த விதத்தில் முயற்சி செய்தாலும் அந்த நகைகளை கழட்டவே முடியாது. அதேசமயம், அதை கழட்டிடும் தந்திரம் அந்தப் பெண்ணுக்கு தெரியும். ஒரே ஒரு குண்டூசி இருக்கும். போதிய நேரம் அவருக்கு ஆசைக்காட்டி விளையாடிய பிறகு, அவள் அந்த ஒரு குண்டூசியை வெளியே இழுப்பாள். உடனே எல்லா நகைகளும் கழண்டு விழுந்துவிடும்.

உங்களுடைய மன உடலும், சக்தி உடலும் இப்படித்தான். உங்களுடைய கர்மா அத்தனையும், சில குண்டூசிகளால் பிடித்து வைக்கப்பட்டுள்ளது. இந்த ஊசிகள் உங்களுடைய உடலின் குறிப்பிட்ட சில இடங்களில் இருக்கின்றன. ஒருவிதத்தில், அந்த இடங்களை நாம் சக்கரங்கள் என்று சொல்லலாம். அதாவது, இந்த ஏழு சக்கரங்களில் மட்டும் இருக்கவேண்டிய அவசியமில்லை; அதைத் தவிர மற்ற இடங்களும் இருக்கின்றன. அதனால், இந்த ஊசிகளை நாம் பிடுங்கிவிட்டால், கர்ம உடல் அப்படியே விழுந்து நொறுங்கி விடுகிறது. இன்று, எல்லாவிதமான கோமாளிகளும் சக்கரங்களை தூண்டி விடுவதாக பேசுகிறார்கள், அதை வைத்து பொறுப்பில்லாத விஷயங்களை செய்கிறார்கள். அது மிகவும் ஆபத்தானது. இந்த விஷயங்களைப் பற்றி ஒன்றும் தெரியாமல் அதில் கை வைத்தால், அது மிகப்பெரிய பாதிப்பை ஏற்படுத்தலாம். சக்கரங்கள் அந்த ஊசிகளைப் போன்றவை. அதை நான் இழுத்துவிடுவதால், இப்போதே உங்களை விடுவித்துவிட முடியும். ஆனால், உங்களால் உங்களுடைய பொருள் உடலை தக்கவைத்துக்கொள்ள முடியாது. உங்களுக்கு என்னவோ விடுதலை ஏற்படும், ஆனால் உலகைப் பொருத்தவரையோ நீங்கள் இறந்தவர் ஆகிவிடுவீர்கள்.

இதையே நாம் உடலற்ற உயிர்களுக்கும் செய்யமுடியும். எல்லா உயிர்களுக்கும் ஒரே தேடல்தான் - கரைந்து போவதுதான். அதைப்பற்றிய விழிப்புணர்வு அவர்களுக்கு இருந்தாலும் இல்லாவிட்டாலும் கரைதலையே அவர்கள் நாடுகிறார்கள். அவர்களுக்கு இருக்கும் கட்டுப்பாடுகளாலும், பயங்களாலும், தவறான புரிதல்களாலும் - தாங்கள் தேடுவது அதுவல்ல

என்று அவர்கள் நினைக்கலாம். ஆனால், ஒவ்வொரு உயிரும் நாடுவது கரைந்து போவதைத்தான், எப்போதுமே அவர்கள் தேடுவது அதைத்தான். என்னால் உங்களை கரைத்துவிட முடியும், ஆனால் உங்களுடைய உடலோ என் கைகளில் அல்லவா கிடக்கும். அப்படி இல்லாவிட்டால் உங்களை கரைத்துவிடுவது மிகவும் சுலபமாக இருக்கும். அதனால்தான், எப்போதுமே ஒரு குரு உங்களுடைய உடல் பழுத்துப் போகும்வரை காத்திருக்கிறார். மரணத்தின் கணம் இயற்கையாக வரும்போது அவர் தலையிடுவார், தான் செய்யவேண்டியதை செய்திடுவார். ஒருவேளை, கொஞ்ச நாட்களுக்கு முன்பாகவே நீங்கள் போகும்படி அவர் செய்யலாம், ஆனால், ஊசியை இழுத்துவிட்டு உங்களை பரிபூரணமாக அவர் கரைத்துவிடுவார்.

## உறைந்துபோன உயிர்களை கரைப்பது

நான் எத்தனையோ உடலற்ற உயிர்களை கடந்து வந்திருக்கிறேன், அவர்களோடு தொடர்புகொண்டு ஈடுபட்டிருக்கிறேன். அதில் ஒரு செவ்விந்திய உயிரோடு ஏற்பட்ட சூழ்நிலை வினோதமானது. செவ்விந்தியர்கள் பெருமை மிக்கவர்கள், தகுந்த உடற்கட்டு கொண்டவர்கள், வலிமையுடைய மனிதர்கள் என்றெல்லாம் எப்போதுமே சித்திரிக்கப்பட்டுள்ளது. அவர்கள் சிறந்த போர் வீரர்களாகவும், தங்களுடைய பண்பாட்டில் மிகுந்த பெருமை கொண்டவர்களாகவும், மிகவும் நேர்மையானவர்களாகவும் இருந்தார்கள். இன்றைக்கு அவர் உங்களோடு போர் செய்து கொண்டிருப்பார்; நாளைக்கே அவரை "சகோதரா" என்று அழைத்துவிட்டீர்கள் என்றால், அவ்வளவுதான், உங்களுக்காக உயிரை விடவும் தயாராக இருப்பார், அப்படிப்பட்டவர்கள்தான் அவர்கள். கொல்வதும், போரில் உயிரை விடுவதும் அவர்களுக்கு பெரிய கௌரவமாக இருந்தது. யாரோ வந்து அவர்களுடைய நிலத்தை அபகரித்து விடுவார்கள் என்றோ, பிடுங்கிக்கொள்வார்கள் என்றோ அவர்களுக்கு தெரியவே தெரியாது. அவர்களுடைய புரிதலிலேயே அது கிடையாது. பூமி என்பது உயிருள்ள சக்தி என்றுதான் அவர்கள் பார்த்தார்கள், தங்களை பாதுகாத்து பராமரிப்பது இந்த பூமிதான் என்று பார்த்தார்கள். கடவுள் என்று சொன்னவுடனே தலையைத் தூக்கி மேலே பார்க்காதவர்கள் உலகில் மிகச்சில கலாச்சாரங்கள்தான், அதில் இவர்களும் ஒன்று. தங்களை உருவாக்கி, வளர்த்துப் பராமரிக்கும் சக்தியாக இந்த பூமியைத்தான் அவர்கள் பார்த்தார்கள்.

அமெரிக்காவின் சரித்திரம் உங்களுக்கு தெரிந்திருந்தால், டென்னிஸீ மாநிலத்திற்கு தெற்கே இருக்கும் பாதையை "கண்ணீர் தடம்" என்றுதான்

அழைப்பார்கள். பத்தொன்பதாம் நூற்றாண்டின் மத்தியில், ஐரோப்பியர்கள் குடியேறுவதற்காக தங்களின் நிலத்தை காலிசெய்யும்படி பழங்குடி தேசத்து மக்கள் எல்லோருமே கட்டாயப்படுத்தப்பட்டு மேற்கு பக்கமாக அனுப்பப்பட்டார்கள். அதனால், பழங்குடி மக்கள் அத்தனை பேரும் நடந்தே வெளியேறினார்கள். ஆயுதங்களோடு இருந்தால் அவர்களால் ஆபத்து ஏற்படலாம் என்று, அவர்களுடைய ஆயுதங்கள் எல்லாம் பிடுங்கிக் கொள்ளப்பட்டன. ஆயுதங்கள் இல்லாததால் அவர்களால் உணவுக்கு வேட்டையாட முடியவில்லை. அப்படியே பட்டினியாகவே நடந்துபோனார்கள். வயதானவர்களும் வலிமை குறைந்தவர்களும் இறந்துபோனார்கள். செவ்விந்தியர்களின் கலாச்சாரப்படி இறந்தவர்களை எங்காவது அடக்கம் செய்தால், அந்த இடத்தை அவர்கள் பராமரித்து கவனித்துக்கொள்ள வேண்டும். பிரயாணத்தில் இருந்ததால் இறந்தவர்களை அவர்களால் அடக்கம் செய்யமுடியவில்லை. அதனால் இறந்தவர்களை தூக்கிக்கொண்டே நடந்தார்கள். இறந்த உடல்கள் அழுகிப்போய் உதிர்ந்துவிழ ஆரம்பித்தன. அவர்கள் அழுதார்கள், அழுதுகொண்டே நடந்தார்கள். அவர்கள் அடையவேண்டிய இடத்திற்கு வந்து சேர்ந்தபோது, 70 சதவிகிதம் பேர் இறந்து போயிருந்தார்கள். அதனால்தான், இந்த பாதையை "கண்ணீர் தடம்" என்று அழைக்கிறார்கள்.

இவர்கள் பூமியுடன் ஆழமான உறவுகொண்டவர்கள் - பூமியைப் பற்றிய உணர்வு கொண்டவர்கள். அவர்களுக்கு தங்களுடைய மதம், மாந்திரீகம், பயிற்சிமுறைகள் என்ற எல்லா விஷயங்களும் பூமியை சார்ந்துதான் இருந்தன. இந்த பூமியோடு அவர்களுக்கு ஆழமான தொடர்பு உண்டு. இப்படிப்பட்டவர்கள் பாதிப்பை அனுபவிக்கும்போது, அவர்களின் பாதிப்பு எல்லாப் பக்கமும் தேங்கிப் போகும்படி விட்டுப்போகிறார்கள். தேங்கிய அந்த பாதிப்பு அப்படியே நிலைத்திருக்கிறது.

சில வருடங்களுக்கு முன்பாக, டென்னிஸீ மாநிலத்தில், அப்பலேச்சியன் மலைத்தொடரின் ஒரு பகுதியில், நடந்து போய்க்கொண்டிருந்தேன். அப்போது அங்கே ஒரு மனிதன் அசையாமல் நின்றுகொண்டிருந்ததை பார்த்தேன். அவன் அப்படியே அசையாமல் நின்றுகொண்டிருந்தான். விரக்தியும் வெட்கமும் நிறைந்த நிலையில் உறைந்துபோய் நின்றான். பண்டைய செவ்விந்திய பழங்குடியின் முழு அரச அலங்காரத்துடன் அப்படியே உறைந்துபோய் நின்று கொண்டிருந்தான் - அவன் காலத்தில் உறைந்து போயிருந்தான். யாராவது அளவுக்கதிகமான அசைவில் இருந்தாலும், அசைவற்ற நிலையில் தீவிரமாக இருந்தாலும், எப்போதுமே அதில் என்னை ஈடுபடுத்திக்கொள்வேன். ஏனென்றால், இந்த இரண்டு நிலைகளுமே நான் ஏதாவது செய்வதற்கு சாத்தியங்களாக அமைகின்றன. அளவுக்கதிகமான அசைவில் இருப்பவர்கள் ஒரு

சாத்தியமாக இருக்கிறார்கள். துளியும் அசையாது இருப்பவர்களும் ஒரு சாத்தியமாக இருக்கிறார்கள். என்னால் இந்த இரண்டு வகையான மனிதர்களிடமிருந்து தள்ளி இருக்கமுடியாது. நடுவில் இருப்பவர்கள், மிதமான அசைவில் இருப்பவர்கள், அவ்வளவாகப் பொருட்படுவதில்லை.

இப்படியாக, அந்த மனிதன் ஏறக்குறைய 200, 300 வருடங்களாக, அங்கேயே உறைந்துபோய் நின்று கொண்டிருக்கிறான் என்று பார்த்தேன். அதற்கு காரணமான சூழ்நிலையையும் பார்க்கமுடிந்தது. அதாவது, இந்த மனிதனுடைய அண்ணன் அவர்களுடைய சமூகத்தின் தலைவராக இருந்திருக்கிறார். தன்னுடைய அண்ணனாக இருக்கும் தலைவரை பாதுகாப்பது இவனுடைய பொறுப்பாகவும், சிறப்பு உரிமையாகவும் இருந்திருக்கிறது. அவருக்கு வலதுகையாக இருந்து, எல்லாவிதத்திலும் அவருக்கு பாதுகாப்பாக இருந்திருக்கிறான். அந்த பாரம்பரியத்தில், சகோதரன் என்றால் ஒரே தாய் தந்தையருக்கு பிறந்திருக்க வேண்டிய அவசியமில்லை. நீங்கள் நண்பர்களை ஏற்றுக்கொள்வது போல, சகோதரர்களையும் ஏற்றுக்கொள்ளலாம். இந்த மூத்த சகோதரரை அவன் மிகவும் உயர்ந்த ஸ்தானத்தில் வைத்து மதித்தான். அவருக்கு பக்கத்தில் நடந்துபோவதும், அவரை பாதுகாப்பதும் தனக்கு கிடைத்த பாக்கியம் என்று நினைத்தான்.

ஒருநாள் ஒரு சூழ்நிலை ஏற்பட்டது - சில ராணுவக்காரர்கள் தன்னுடைய தலைவரை சந்திப்பதற்கு இவன் ஏற்பாடு செய்திருந்தான். அவர்களோ வெள்ளையர்கள். அந்த வெள்ளையர்கள், ஏதோ ஒருவிதத்தில் தலைவரை ஏமாற்றிக் கொன்றுவிட்டார்கள். இப்படி ஏற்பட்டதற்கு தானே பொறுப்பு என்று இவனுக்கு தோன்றியது - விரக்தியும், தோல்வியும், துன்பமும், வெட்கமும் நிறைந்திருக்க அவன் அப்படியே நின்றுவிட்டான். அவனுக்குள் இருந்த உணர்ச்சிகள் எந்தளவுக்கு மிகைப்பட்டு இருந்ததென்றால், அவன் அங்கேயே, அப்படியே சில நூற்றாண்டுகளாக நின்றுகொண்டிருந்தான். நான் அவனைப் பார்த்தபோது, அவன் இன்னும் அங்கேயே நின்று கொண்டிருந்தான். அவனுடைய பொருள் உடலோடு நிற்கவில்லை - பூமியானது திரும்ப பூமியில் விழுந்துவிடும், இது உங்களுக்கு தெரிந்துதான் - ஆனால், அவனுடைய மற்ற அம்சங்கள் எல்லாம், அவன் அந்தக் கணத்தில் இருந்தது போலவே நின்றுகொண்டிருந்தன. அதனால், அவன் இப்போதாவது முன்னேறி நகர்ந்து போகவேண்டும் என்று நினைத்தேன். அதிகப்படியான காலத்துக்கு வெட்கத்தில் இருப்பதும், அதிகப்படியான காலத்துக்கு தோல்வியில் இருப்பதும் நல்லதே இல்லை. அந்த சூழ்நிலையிலிருந்து அவன் நகர்ந்து முன்னேறுவதற்கு நான் உதவினேன்.

அந்த நிகழ்ச்சி நடந்து முடிந்தவுடன், நான் எழுதியிருந்த கவிதை இது.

## அமெரிக்கா

*அடர்ந்த காடுகள் அடைகாத்த இருள்*
*அப்பூர்வக்குடியின் உதிரத்தில் தோய்ந்தது!*
*சாய்ந்த மரங்களின் சிக்கலான முடிச்சுகளுக்குள்*
*வீழ்ந்த இந்தியரின் ஆன்மா நின்றது!*
*சகோதரர்களே! உங்கள் அடையாளம் தவறானது - அது*
*கடல்தாண்டி வந்தவர்கள் செய்த பிழை!*
*பொன்னுக்கும் மண்ணுக்குமான பேராசை*
*அறிவின், அருளின் ஆர்வத்தை வீண்போகச் செய்தது!*
*கொலைசெய்து கொள்ளையடித்தோரின் குழந்தைகள்*
*கறைபடியவில்லை தம் முன்னோர்களின் களங்கத்தால்! - ஆனால்*
*வீரத்தின், பெருமையின் பாலருந்தி வாழ்ந்தவர்கள்*
*தோல்வியின், அவமானத்தின் சின்னமாய் நிற்கின்றனர்!*
*கொலையுண்டவரே! கொலைசெய்தவர்களே!*
*அரவணைத்திடுங்கள் என்னை!*
*உங்கள் ஆன்மாக்களை ஆசுவாசப்படுத்துகிறேன்!*

அந்தக் கணம்தான் - இந்த உயிருடன் எனக்கு ஏற்பட்ட சந்திப்புதான் - என் வாழ்க்கையிலேயே, அனைத்தையும்விட அதிக வலியை ஏற்படுத்திய கணமாக இருந்திருக்கலாம். அந்தப் பகுதியின் பல இடங்களிலும் அப்படிப்பட்ட ஆழமான வலி நிறைந்திருக்கிறது என்பதை அப்போதுதான் கவனிக்க ஆரம்பித்தேன். அதைப்பற்றிய கவனம் நமக்கு இருந்தாலும் இல்லாவிட்டாலும், மனிதர்களின் வாழ்க்கையிலும் இந்த வலி வெளிப்படும். ஒரு பாறைக்கே பாதிப்பு ஏற்படும்போது, நிச்சயமாக மனிதர்கள் விட்டுவைக்கப்பட மாட்டார்கள். எந்தக் காரணமும் இல்லாமல் விவரிக்க முடியாத துன்பம் அப்படியே ஏற்படும். நீங்கள் வாழ்ந்திடும் பூமியின்மீது பாதிப்பு என்பது குட்டைகளாக தேங்கிப் பதிந்திருக்கும்போது, உங்கள் வாழ்க்கையில் உண்மையான நலன் என்பதை உணர்ந்திட வாய்ப்பே இல்லை. நீங்கள் மிகப் பெரிய வீட்டை கட்டலாம், கையில் ஒரு துப்பாக்கியை வைத்துக் கொண்டிருக்கலாம், நீங்கள் விரும்பியதை எல்லாம் சுட்டுத் தள்ளலாம்[4]. ஆனால், உங்கள் வாழ்க்கையில் ஒரு கணத்திற்குகூட ஆசுவாசம் அடைய மாட்டீர்கள். நீங்கள் நடந்துபோகும் பூமியே இந்த நிலையில் இருக்கும்போது - உங்களை ஆக்கிடும் பொருளையே கவனித்துக்கொள்ள தெரியாதபோது - வாழ்க்கையில் ஒரு

4 அந்தப் பகுதிகளில் நிலவும் துப்பாக்கி கலாச்சாரத்தை குறிக்கிறது.

கணத்திற்குகூட நன்மை என்பதை நீங்கள் உணர்ந்திட வாய்ப்பே இல்லை.

நீண்டகாலத்திற்கு தொடர்ந்து நீடித்த இன்னொரு சூழ்நிலையும் உண்டு. தியானலிங்க பிரதிஷ்டையின்போது, என் வீட்டுக் கூரையின் மேல் அடிக்கடி வரும் ஒரு உடலற்ற பெண் இருந்தாள். பிரதிஷ்டைக்கு முன்பாக இப்படிப்பட்ட உயிர்களோடு நாம் பல விஷயங்களை செய்திருக்கிறோம், அவர்களை கரைத்து விட்டிருக்கிறோம். ஆனால் இந்த குறிப்பிட்ட உயிரோ கிட்டத்தட்ட இரண்டு வருடங்களாக சுற்றிக் கொண்டிருந்தது. பிரதிஷ்டை முடிந்தபிறகு என்னுடைய உடல் ஒரு நிலைகுலைந்த தன்மையில் இருந்தது. அதனால் அவரது விஷயத்தில் நான் ஈடுபட விரும்பவில்லை. இந்த உயிர்களுக்கு யோசித்து முடிவெடுக்கும் திறன் கிடையாது, அவர்களுக்கு ஏக்கங்கள் மட்டுமே உண்டு. அதாவது ஆழமான ஆசையும் வேட்கையும் கொண்டிருக்கும் ஒரு மனிதனுக்கு வாழ்க்கையைப் பற்றி யோசித்து முடிவெடுக்கும் திறன் எதுவும் இருக்காது அல்லவா, அதைப்போலத்தான் - உதாரணமாக, ஒருவருக்கு தான் குடித்தாக வேண்டும், ஒருவருக்கு தான் பலாத்காரம் செய்தாக வேண்டும் - அவ்வளவுதான். அவர்கள் நல்லவர்களாகவோ கெட்டவர்களாகவோ இருப்பதால் அப்படிச் செய்வதில்லை. அவர்களுக்கு வாழ்க்கையைப் பற்றி நிர்ணயிக்கும் புத்தி இல்லை, அந்த வேட்கை மட்டும்தான் இருக்கிறது. தங்களுடைய கர்மாவுக்கு ஏற்றபடி அவர்களுக்கு சில வாசனைகள் இருக்கின்றன, கட்டாயப் போக்குகள் இருக்கின்றன, அதன்படி அவர்கள் அப்படியே போகிறார்கள்.

தங்களுடைய வடிவம் முழுமையாக குலைந்து போனபடி இருக்கும் வேறுவிதமான உயிர்களும் இருக்கிறார்கள். அவர்களால், தங்களுடைய மனித வடிவத்தை தக்கவைக்க முடியவில்லை. அவர்கள் சூட்சுமமாக ஆகிவிட்டார்கள். ஆனால், இது தன்னுடைய வடிவத்தில் அதிகப்படியான பெண் தன்மையை தக்க வைத்திருந்த பெண்ணாக இருந்தது. உலகில் உள்ள எந்த பெண்ணும் இப்படி இருக்கமாட்டாள். இவள் மிகவும் அழகானவளாக இருந்தாள், உருவத்தில் வழக்கத்தைவிட மிகவும் பெரிதாக இருந்தாள். தான் அழகான ஆடைகளை அணிந்துகொண்டு, தன்னை நல்லமுறையில் வெளிப்படுத்திக் கொள்வதைப் போன்ற ஒரு நிஜமற்ற தோற்றத்தையும் அவள் உருவாக்கினாள். அவளுடைய கர்ம வாசனை பெண்தன்மையாக இருந்தது, அதாவது அது எப்போதுமே ஆண்தன்மைக்கு மாற்றாக, எதிர் இணையாக இருந்தது. அதனால் அவளுடன் தலையிட முயற்சித்தால், இயல்பாகவே அவள் ஒரு பெண்ணாகத்தான் வருவாள். வேறு எந்த விதத்திலும் அணுகுவதை அவள் அறிந்திருக்க மாட்டாள். இதனால் தேவையில்லாத சூழ்நிலைகள்

பல உருவாகியிருக்கலாம். ஆனால், அவள் தானாகவே எதுவும் செய்யமாட்டாள். அவளைக் கரைத்துவிட என் வீட்டிற்குள் இருக்கும் சந்நிதிக்கு வரும்படி நான் அவளுக்கு அழைப்பு வைத்திருந்தால், ஒரே கணத்தில் எல்லாம் முடிந்துபோயிருக்கும்.

இருந்தாலும் நான் ஏற்கனவே சொன்னதுபோல, அந்த நாட்களில் பிரதிஷ்டைக்கு பிறகு என்னுடைய உடல் மிகவும் உறுதியில்லாத நிலையில், எளிதில் பாதிக்கப்படும் நிலையில் இருந்தது. அதனால் அவள் விஷயத்தில் இறங்கிட நான் விரும்பவில்லை. இரவில், என் வீட்டிற்குள் இருக்கும் நடைபாதையில் அவள் நடந்து கொண்டிருப்பாள், அவளுடைய கொலுசுகள் ஜிங், ஜிங், ஜிங், ஜிங் என்ற சத்தத்தை ஏற்படுத்தும். இதை நான் மட்டும் கேட்கவில்லை. வீட்டில் யார் தங்கியிருந்தாலும் அவர்களுக்கும் இரவு முழுவதும் இவள் நடந்துபோகும் சத்தம் கேட்டது. நாம் கதவைத் திறந்து கொண்டு நடைபாதைக்கு வந்தால், அவள் பரிதாபமான முகத்தோடு கூரையின் மேல் உட்கார்ந்திருப்பாள். அவள் அங்கேயே இரண்டு வருடங்களுக்கு உட்கார்ந்திருந்தாள். சந்நிதிக்குள் நுழையவே மாட்டாள், அதைச் செய்ய அவளுக்கு தைரியம் வரவில்லை. அதேசமயம், நடந்துகொண்டும், காத்துக்கொண்டும் இருந்தாள். நான் அவள் குறித்து எதுவும் செய்யவில்லை. அவளை சும்மா அங்கேயே இருக்கும்படி விட்டுவிட்டேன். என்னுடைய மகளுக்கு அப்போது எட்டு வயது, அவளாலும் கொலுசு சத்தத்தை கேட்க முடிந்தது. இதனால் லேசான கவலை ஏற்பட்டது. இப்படிப்பட்ட உடலற்ற உயிர்களால் பெண் குழந்தைகளுக்கு தீங்கு ஏற்பட வாய்ப்பிருக்கிறது, அதனால் குழந்தையின் அறையில் பாதுகாப்பு ஏற்பாடுகளை செய்ய வேண்டியிருந்தது. ஆனால், அந்தப் பெண்ணிடம் ஒருபோதும் ஆர்வத்தின் அறிகுறியோ அல்லது வன்முறையின் அறிகுறியோ தென்படவே இல்லை - ஆதரவற்ற நிலையின் பரிதாபம்தான் வெளிப்பட்டது.

அவள் ஆதரவற்று தொலைந்து போனதுபோல ஒரு ஏக்கத்தோடு இருந்தாள், எதையோ தேடிக்கொண்டு இருந்தாள். அதனால் நான் அவளை விரட்டவில்லை. என்னுடைய உடல் இன்னும் உறுதியாக நிலைபெற்றவுடன் அவளை கரைத்துவிட முடிவுசெய்தேன். அவளுடைய உடல் மிகவும் சூட்சுமமாக ஆகிவிட்டதால், உடல் கொண்ட மனிதர்களைவிட அவளுடைய ஊசிகளை இழுத்துவிடுவது மிகவும் சுலபமானதுதான். அவளுக்கு உகந்த சௌகரியமான சூழலில் அவள் வெளியேற வேண்டும் என்று விரும்பினேன். அவளுக்குள் பயமோ, தொந்தரவோ ஏற்படுவதை நான் விரும்பவில்லை. அதனால் அவளை உள்ளே அழைத்து வந்தேன், சந்நிதிக்கு முன் தலைவணங்கும்படி கேட்டுக்கொண்டேன். அவள் அப்படி செய்தபோது அவளுடைய ஊசிகளை

எடுத்துவிட்டேன், அவளை கரைத்துவிட்டேன். எல்லாம் முடிந்துபோனது. அவள் இல்லாமல் போனாள்.

தேவையான சூழ்நிலை நல்லமுறையில் அமைந்தால், உடலற்ற உயிர்களை கரைத்திடுவது மிகவும் எளிமையானது. இந்த பூமியில் இருக்கும் பெண்கள் அனைவரும் அடுத்த ஒரு வருடத்திற்கு கர்ப்பம் அடையமாட்டோம் என்று நிர்ணயிக்கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம், அப்போது, தங்களுடைய காலம் முடிந்துபோய் ஒரு கர்ப்பத்தை அடைந்திடும் அவசியம் கொண்ட உடலற்ற உயிர்களெல்லாம் இமுபறி நிலையில் அலைந்து கொண்டிருப்பார்கள். அவர்களை அறியாமலேயே, ஒரு கர்ப்பத்தை அடைவதுதான் அவர்களுடைய ஆசையாக இருக்கும், ஆனால் எந்த கர்ப்பமும் கிடைக்கும் நிலையில் இல்லை - இப்படி இருந்தால், அவர்கள் இன்னொரு சுழற்சிக்குள் போய்விடுவதற்கு முன்பாக அவர்களை கரைத்துவிட இதுதான் மிகவும் உகந்த சூழ்நிலையாக இருக்கும். அவர்கள் இறந்துபோன உடனே சுற்றிக் கொண்டிருக்கும் சமயத்தில் மிகவும் விழிப்புணர்வுற்ற நிலையில் இருக்கிறார்கள். அப்போது அவர்களை சரிகட்டுவது முடியாத காரியமாக இருக்கிறது. ஆனால், அவர்களின் பிராரப்த கர்மா ஒரு கர்ப்பத்தை அடைந்திடும்படி அவர்களை கட்டாயப்படுத்தும்போது, அதேசமயம் எந்தப் பெண்மணியும் அதற்கு ஒத்துழைக்காதபோது - அவர்களை கரைத்துவிட மிகவும் உகந்த சூழ்நிலையாக அமைகிறது.

இன்றைக்கு நம்மோடு இருக்கும் இளம்பெண்கள் எத்தனையோ பேர் கர்ப்பம் தரிக்கவில்லை, அவர்கள் கர்ப்பம் அடையவும் மாட்டார்கள் - தங்கள் வாழ்க்கையை தீவிரமான ஈடுபாட்டுடன் வாழ்ந்திட அவர்கள் முடிவுசெய்திருக்கிறார்கள் - அதனால் உடலின் உந்துதல்களுக்கு முக்கியத்துவம் இல்லாமல் போகிறது. உலகத்தில் இருக்கும் பெண்கள் எல்லோருமே அடுத்த ஒரு வருடத்திற்கு கர்ப்பம் அடையமாட்டேன் என்று முடிவுசெய்தால், அப்போது குறைந்தது 13 கோடி உயிர்களாவது ஒரு கர்ப்பத்திற்காக காத்திருப்பார்கள்.

இதை உடலோடு இருப்பவர்களுக்கும் சுலபமாக செய்யலாம். ஆனால், தங்களுடைய கடைசி கணம் வரும் வரை மனிதர்கள் தங்களுடைய அடையாளங்களையும், விருப்பு-வெறுப்புகளையும் விடமாட்டேன் என்கிறார்களே! விமலாவும் கமலாவும் சகோதரிகள். ஒரு குடும்பத் தகராறு காரணமாக இரண்டு பேரும் முப்பத்தேழு வருடங்களாக பேசிக்கொள்ளவே இல்லை. ஒருநாள் விமலா மிகவும் நோய்வாய்ப்பட்டுப் போனார். தன் சகோதரிக்கு ஒரு கடிதம் எழுதினார். அதை ஆரம்பிக்கும்போது "கமலா," என்று எழுதினார் - கோபம் தணியாததால் "அன்புள்ள கமலா," என்று எழுதவில்லை. "இப்போது நான் இறந்து கொண்டிருப்பதால், நீ எனக்கு

செய்த மோசமான விஷயங்களுக்கு எல்லாம் உன்னை மன்னிக்கிறேன். இப்படிக்கு, விமலா," என்று எழுதினாள். கொஞ்ச நேரம் யோசித்த பிறகு இன்னொரு வரியை சேர்த்தார்: "பின்குறிப்பு: ஆனால் ஒருவேளை நான் பிழைத்துவிட்டால், இப்போது இருக்கும் நிலையில்தான் எல்லாம் தொடரும்."

மரணம் உங்களுடைய கதவை தட்டும்போது உங்களுடைய உயிர் ஒருமுகமாக இருக்கும். வெளிமுகமாக இருப்பதில் எந்த பயனும் இல்லை என்பதால், இயல்பாகவே நீங்கள் உள்முகமாகத் திரும்புவீர்கள். மனிதர்கள் தங்களுடைய மரணத்தை நெருங்கும்போது அவர்களுடைய அடையாளங்களும், விருப்பு-வெறுப்புகளும் விழுந்து போகின்றன. வெளிசூழ்நிலைக்காக அவர்கள் போடும் நடிப்புகள் எல்லாம் அப்போது முக்கியமில்லாமல் போய்விடுகின்றன.

## யார் நிர்மாணகாயா?

ஆன்மீக வட்டங்களில் சிலவிதமான யோகிகளைப் பற்றிய பேச்சு எப்போதுமே இருந்து வந்திருக்கிறது - அதாவது, இந்த பூமியில் பல காலங்களுக்கு முன்பாக வாழ்ந்த யோகிகள் சிலர், இப்போதும் தங்கள் உடலை விரும்பிய நேரத்தில் தோன்ற வைத்தும், மறைய வைத்தும் மனிதர்களுக்கு காட்சி அளிக்கிறார்கள் - இப்படிப்பட்ட பேச்சு எப்போதுமே இருந்திருக்கிறது. இன்றைக்கு பாபாஜியைப்[5] பற்றி எல்லா இடங்களிலும் அதிகமாக பேசப்படுகிறது. அதனால்தான் உடலை தோற்றுவிப்பது, மறையச் செய்வது பற்றியெல்லாம் மிகப்பெரிய ஆர்வம் இன்று ஏற்பட்டிருக்கிறது. இந்தியாவில் அவரைப் பற்றி பிரபலமாக பேசப்பட்டு வரும் விஷயம் என்னவென்றால் - அவர் என்றென்றும் வாழ்ந்து கொண்டிருப்பவர், தான் விரும்பியபோது அவரால் மீண்டும் மீண்டும் தோன்ற முடியும் என்று சொல்லப்படுகிறது - அது அப்படிக் கிடையாது. நம்பமுடியாத பழங்கால கதைகள் என்றால் மக்களுக்கு மிகவும் பிடிக்கும். அதனால், பகட்டுக்காக இப்படிப்பட்ட விஷயங்களைப் பற்றி பேசுவது ஒரு வழக்கமாகிவிட்டது. உயிரோடு இருப்பவர்களை இவர்களுக்கு பிடிக்காது. பழைய கதைகள் என்றால் தாங்கள் விரும்பியபடி அதை திரிக்கவும் மாற்றவும் சுதந்திரம் இருக்கிறது, அதை அளவுக்கதிகமாக ஊதிப் பெரிதாக்கலாம், என்ன வேண்டுமானாலும் செய்யலாம். உயிரோடு இருப்பவர்களுக்கு அப்படி செய்யமுடியாதே! உதாரணமாக, என்னைப் பற்றி மிகைப்படுத்தப்பட்ட விஷயத்தை இப்போது நீங்கள் பேசினால், நான் உங்கள் தலையிலே

5 மஹா அவதார் பாபாஜி அவர்கள் நம் நாட்டில் வாழ்ந்த புகழ்பெற்ற ஆன்மீக குரு. இவர் கி.பி 2ஆம் நூற்றாண்டில் வாழ்ந்ததாக நம்பப்படுகிறது.

ஒரு கொட்டு வைப்பேன். நீங்கள் சொன்னது சரியில்லை என்று சொல்லிவிடுவேன், இல்லையா?

இந்த விஷயத்தைப் பற்றி ஒரு குழப்பம் இருப்பதற்கு ஒரு காரணம் இருக்கிறது. நிர்மாண காயா என்று அழைக்கப்படும் சில யோகிகள் இருக்கிறார்கள். நிர்மாணம் என்றால் "உருவாக்குவது," காயம் என்றால் "உடல்." இப்படி நிகழ்வது மிகவும் அபூர்வமானது, ஆனால் சில உயிர்கள் இப்படிச் செய்திருக்கிறார்கள். இந்த யோகிகளுக்கு உச்சபட்ச வல்லமைகள் இருக்கின்றன. அவர்களால் விரும்பிய நேரத்தில் உடலை உருவாக்கிட முடியும். அடிப்படையாக, அவர்கள் விழிப்புணர்வுமிக்க ஒரு சக்தி உடலை உருவாக்குகிறார்கள். அது முழுவதுமாக அவர்களாலேயே உருவாக்கப்படுகிறது, அதேசமயம், அது பொருள் உடலில் இருக்கும் தேவைகளை நிறைவேற்றுவதற்காக இருப்பதில்லை. உங்கள் சக்தி உடலில் 20 சதவிகிதமாவது பொருள் உடலின் இயக்கத்தை நிறைவேற்றவே துணைசெய்கிறது. அதனால், அவர்கள் அளவில் பெரிதான ஒரு சக்தி உடலை உருவாக்கிக் கொள்கிறார்கள், இதற்கும் பொருள் உடலுக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது, அதேசமயம் பொருள் உடலில்தான் இது அமைந்திருக்கிறது. இப்படியாக, அவருக்கு இரண்டு சக்தி உடல்கள் இருக்கின்றன - ஒன்று, அவர் பிறந்தபோது கிடைத்த சக்தி உடல்; இன்னொன்று, தான் பரிமாற விரும்பியதை பரிமாறுவதற்கான சக்தி உடல், அது வேறு பரிமாணத்தை சேர்ந்தது. இரண்டாவதாக சொல்லப்பட்ட சக்தி உடல் இல்லாமல் அவரால் மற்றவர்களுக்கு பரிமாற முடியாது. ஆனால் மனிதர்களின் புரிதலைப் பொருத்தவரை, அவர்கள் இரண்டையும் ஒன்றாகத்தான் உணர்கிறார்கள். சொல்லப் போனால், இப்படிப்பட்ட ஏற்பாடு செய்துகொள்ளாமல், வெறும் பொருள் உடலை மட்டும் வைத்துக்கொண்டு "சம்யமா" போன்ற ஆன்மீக வகுப்பையெல்லாம் பரிமாறுவதற்கு சாத்தியமே கிடையாது. அங்கு செய்யப்படும் விஷயங்களுக்கு இருக்கும் தீவிரத்தையும், நுட்பங்களையும் அது தாக்குப்பிடிக்க முடியாது. அது அங்கேயே இறந்து விழுந்துவிடும்.

ஒருவரின் பொருள் உடல் இறந்துபோன பிறகும், சூட்சும உடல் இன்னும் அழியாமல் அப்படியேதான் இருக்கிறது. அதைத்தான் அந்த யோகி இப்போதும் அப்போதும் கண்ணுக்கு தோன்றும்படி செய்கிறார். அது எலும்பும் சதையும் கொண்டதாக இருக்கவேண்டிய அவசியமில்லை, அது கண்ணுக்குத் தெரியும்படி இருக்கிறது, அவ்வளவுதான். வழக்கமாக, இந்த யோகிகள் இத்தனை வருடங்களுக்கு ஒருமுறை மீண்டும் தோன்றும்படியான பொறுப்பை ஏற்றிருக்கிறார்கள். அப்படியென்றால் அவர்கள் எங்கேயோ வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்று அர்த்தம் கிடையாது. பொருள் உடல் போய்விட்டாலும், தங்களுடைய உடலின்

சூட்சுமமான அம்சங்கள் அப்படியே இருந்திடும்படி வைத்திருக்கிறார்கள். இப்போதும் அப்போதுமாக அதை மறுபடியும் உருவாக்கிக்கொள்கிறார்கள். அவர்கள் மறுபடியும் பிறப்பது இல்லை, இப்படி இருப்பதும் என்றென்றைக்கும் நிலைக்கப் போவதில்லை.

நீங்கள் ஒரு கர்ப்பத்தின் மூலம் பிறக்கும்போது, நீங்களும் ஒரு உடலை உருவாக்கவே செய்கிறீர்கள். உங்களுக்குரிய சக்திதான் அதை உருவாக்குகிறது. அம்மாவிடம் இருந்து நீங்கள் ஊட்டச்சத்துக்களை மட்டுமே எடுத்துக்கொள்கிறீர்கள், அந்த உடலை உருவாக்குவது என்னவோ நீங்கள்தான்! அம்மா உடலை உருவாக்குவதில்லை. நீங்கள் பிறந்த பிறகும் இந்த உடலை இன்னும் நீங்கள்தான் உருவாக்கிக் கொண்டிருக்கிறீர்கள், இல்லையா? அதே விதத்தில்தான் இந்த உடலை உருவாக்கிக் கொண்டிருக்கிறீர்கள் - உணவின் மூலம் ஊட்டச்சத்து கிடைக்கிறது, சுவாசிக்கும் காற்றின் மூலமும், குடிக்கும் நீரின் மூலமும் கிடைக்கிறது. நீங்கள் பிறப்பதற்கு முன் அந்த வாய்ப்புகள் அப்போது அமையப் பெறவில்லை. அதனால், உங்கள் உடலை அமைப்பதற்கு அம்மாவின் வாய்ப்புகளை பயன்படுத்திக் கொண்டீர்கள் - உணவுக்கும் நீருக்கும் காற்றுக்கும் தாயின் அமைப்பை பயன்படுத்திக் கொண்டீர்கள். அப்படியிருந்தாலும், உங்களுடைய சொந்த சக்திகளைப் பயன்படுத்தித்தான் உடலை கட்டமைத்துக் கொண்டீர்கள்.

இப்போது, அம்மாவுடைய கர்ப்பத்தின் துணை இல்லாமலேயே உடலை உருவாக்கிக்கொள்ளும் திறமையை ஒருவரால் பெறமுடியும். அதை நீங்களாகவே உருவாக்கிக்கொள்ள முடியும். அந்த உடல், அளவில் சின்னதாக இருந்திட அவசியமில்லை. உங்களுடைய உடல் அம்மாவின் கர்ப்பத்துக்குள் பொருந்துவதற்காகத்தான் அளவில் சின்னதாக உருவானது. இப்போது நீங்களே உட்கார்ந்து உருவாக்கிக் கொள்ளும்போது, அந்த உடல் சராசரியான அளவிலும் இருக்கலாம், வேண்டுமென்றால் 20 அடிக்கும் இருக்கலாம். பொதுவாக, அப்படி செய்பவர்கள் தங்களுடைய இளமைக் காலத்து வடிவத்தை உருவாக்கிட விரும்புவார்கள்.

இப்படியாக, இந்த நிர்மாண காயர்கள் சூட்சும நிலைகளில் இருக்கிறார்கள், நுட்பமான முறைகளை பயன்படுத்துகிறார்கள். அவர்கள் மிகவும் குறைந்தபட்சமாக வாழ்கிறார்கள். இந்த நிலையில் இருப்பதற்கு அவர்களாகவே விரும்பித் தேர்வு செய்திருக்கிறார்கள். ஆனால் ஏன் அப்படி நிர்ணயிக்கிறார்கள்? ஒன்று தங்களுடைய கருணை மிகுதியால் அப்படிச் செய்யலாம் அல்லது அவர்களுடைய குருமார்கள், "உன்னுடைய முக்தியைப் பற்றியெல்லாம் கவலைப்படாதே! இதை மட்டும் செய்!" என்று அவர்களிடம் ஆணையிட்டு இருக்கலாம். எப்போதாவது ஒருமுறை மீண்டும் வந்து சில விஷயங்களை செய்வதற்கு, அவர்கள் ஒரு

ஸ்தூல உடலை உருவாக்கிக் கொள்ளலாம். அதேசமயம், அவர்களால் குறிப்பிட்ட அளவுக்கு மட்டும்தான் செயல்பட முடியும். ஒவ்வொரு முறை அவர்கள் உடலை உருவாக்கிக் கொள்ளும் போதும், அவர்கள் இயங்கும் அவகாசத்திற்கு ஒரு அளவு இருக்கிறது, செயலுக்கும் ஒரு எல்லை இருக்கிறது. பெரும்பாலான நேரங்களில், அவர்களால் தோன்றி காட்சி தருவதை மட்டும்தான் செய்ய முடிந்திடும். அதேசமயம், அவர்கள் இப்படி செய்து வரும் மொத்த கால அளவு சாதாரண மனிதர்களைப் பொருத்தவரை மிகவும் நீண்டதாக இருக்கலாம். அது 2,000 முதல் 10,000 வருடங்கள் வரைகூட இருக்கலாம். ஆனால் அதுவும் ஒரு எல்லைக்குட்பட்ட கால அளவுதானே! கடைசியில், அவர்களும் முழுமையாக கரைந்து போவார்கள்.

பெரும்பாலான நேரங்களில், தங்களுடைய பாரம்பரியத்தை பாதுகாத்திட வேண்டும் என்ற நோக்கத்தில்தான் இப்படிச் செய்வார்கள். தங்களுடைய பாரம்பரியத்தில் நுட்பமான திருத்தங்களை செய்வதற்காக தோன்றவேண்டும் என்று நினைப்பார்கள். பொதுமக்களோடு அவர்களால் அவ்வளவாக ஒன்றும் செய்யமுடியாது. இப்போது உதாரணமாக, ஈஷா என்பது ஒருவிதமான யோகா, இது ஒரு பாரம்பரியம். காலப்போக்கில் சிலர் பாதையிலிருந்து கொஞ்சம் விலகிப்போக வாய்ப்பிருக்கிறது, அதனால் சில விஷயங்கள் திரிந்துபோக வாய்ப்பிருக்கிறது. நான் இப்படிப்பட்ட விஷயங்களை செய்யப் போவதில்லை, அதனால் நான் திரும்ப வந்துவிடுவேனோ என்ற பயம் உங்களுக்கு தேவையில்லை. நான் வரப்போவதில்லை. ஆனால் உதாரணத்திற்காக, நூறு வருடங்களுக்கு ஒருமுறை நாம் சில திருத்தங்களை செய்ய விரும்புகிறோம் என்று வைத்துக்கொள்வோம். அப்போது, நூறு வருடங்களுக்கு ஒருமுறை நான் மறுபடியும் தோன்றி சில திருத்தங்களை செய்துவிட்டு போய்விடலாம். மிகவும் குறுகிய காலகட்டத்திற்குள் இப்படித் தோன்றி, இந்த விஷயங்களை செய்துவிட்டு போகமுடியும்.

நிர்மாண காயத்தை உருவாக்கிடும் ஒவ்வொருவரும், அதை ஒரேவிதமாக உலகில் பயன்படுத்துவதில்லை என்று நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும். எல்லோருமே உலகத்தில் தோன்றவும் மறைவதற்கும் அதைப் பயன்படுத்துவதில்லை. அதாவது, உங்களிடம் அற்புதமான ஒரு கார் இருக்கிறது, ஆனால், அதை எப்படி பயன்படுத்துகிறீர்கள் என்பது உங்களுடைய விருப்பம்தான். அதில் ஏறி ஆபீசுக்கு போவதா, பந்தயத்தில் கலந்துகொள்வதா அல்லது மகிழ்ச்சிக்காக சும்மா ஓட்டுவதா - இதெல்லாமே உங்களுடைய விருப்பத்தைப் பொருத்ததுதான். அதை வைத்து நீங்கள் எதையும் செய்ய விரும்பவில்லை என்றாலும், உங்களுக்கு என்று சொந்தமாக ஒரு வண்டியை வைத்துக்கொள்ள முடியும்தானே? சேர்த்து

வைக்கும் விருப்பத்திற்காகவே தங்களுடைய கேரேஜில் கார்களை நிறுத்தி வைத்திருக்கும் ஆர்வலர்களும் இருக்கிறார்கள், இல்லையா? நிர்மாண காயர்களுக்கும் இப்படித்தான். இப்படிப்பட்ட விஷயங்கள் நடப்பது மிகவும் அபூர்வமானது, ஆனால் அப்படிப்பட்ட விஷயங்களை செய்திருக்கும் உயிர்களும் இருக்கிறார்கள். அவர்களெல்லாம் இல்லாமல், இந்த அளவுக்கு அறிவு மிகுந்தவனாக நான் இருக்கமுடியாது. அதேசமயம், இந்த விஷயம் அதிகப்படியாக மிகைப்படுத்தப்பட்டிருக்கிறது, பல விதங்களில் திரித்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

## உயிர்களை டவுன்லோடு செய்தல்

35,000 வருடங்களுக்கு முன்பாக, சுனீரா என்ற யோகி இருந்தார். இந்த யோகி ஒரு குறிப்பிட்ட விதமான உயிரை உருவாக்கி வைத்தார். இந்த உலகம் முழுவதையுமே ஒரே வீச்சில் மாற்றிடும் திறன்பெற்ற, உதாரண புருஷராக விளங்கும் ஒரு உயிரை உருவாக்குவதுதான் நோக்கம். இந்த உயிர் நீண்டகாலமாக இருந்து கொண்டிருக்கிறது. இன்னும் பல யோகிகளும், தங்களுடைய பங்களிப்புகளை இந்த உயிருக்குள் போட்டிருக்கிறார்கள். கௌதம புத்தர்கூட இதைப் பற்றி பேசுகிறார், அவரும் தன்னுடைய பங்களிப்பை இந்த உயிருக்குள் போட்டிருக்கிறார். ஸ்ரீ கிருஷ்ணரே இந்த உயிரைப் பற்றி சில விஷயங்களை செய்திருக்கிறார். தன்னுடைய காலத்திலிருந்து ஏறக்குறைய 2500 முதல் 3000 வருடங்களுக்குள் இந்த உயிர் முழுமைபெற்று, உலகில் ஒரு உடலைப் பெற்றிடும் என்று கௌதம புத்தர் கணித்துச் சொல்லியிருந்தார். அப்படி வரும் அந்த உதாரண புருஷர் இந்தப் படைப்பில் இருப்பதிலேயே உச்சமான குருவாக விளங்குவார் என்றும் சொல்லப்பட்டுள்ளது.

அப்படிப்பட்ட எதையும் செய்வது குறித்து நாம் முயற்சிக்கவில்லை. என்ன, தங்களுக்காக நாம் எதையாவது செய்யவேண்டும் என்று எப்பொழுதுமே நம்மை சுற்றிக் கொண்டிருக்கும் உன்னதமான உயிர்கள் பலர் இருக்கிறார்கள், அவ்வளவுதான். கொஞ்ச காலத்திற்கு, அவர்களில் சிலருக்கு நம்முடைய உடலிலேயே தங்கும்படி இடம் கொடுத்திருந்தோம். ஒரு காலகட்டத்தில் நாம் குறிப்பிட்ட விதமான யோக சாதனைகளைச் செய்து கொண்டிருந்தபோது, குறிப்பிட்ட நிலைகளில் இருந்தபோது, நம்முடைய அனுமதி இல்லாமலேயே இந்த உயிர்களில் சிலர் நமக்குள் நுழைந்தார்கள், நீண்டகாலத்திற்கு நம்முடனேயே தங்கிவிட்டார்கள். நாமும் கொஞ்ச காலத்திற்கு அவர்களை வைத்துக்கொண்டிருந்தோம். ஆனால், உடல் அளவில் அது எளிதாக இருக்கவில்லை - ஏதோ ஒருவிதத்தில் எதையாவது வெளிப்படுத்துவதற்கு அவர்கள் தவித்துக் கொண்டிருந்தார்கள். அந்த சமயத்தில், நம்மை சுற்றி

வாழ்ந்து கொண்டிருந்தவர்களுக்கு பல நேரங்களில் பயங்கர குழப்பமாக இருந்திருக்கிறது. விஜி பல நேரங்களில் இதனால் மிகவும் பயந்து போயிருக்கிறாள். நாம் சும்மா நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருப்போம், அவள் வேறு எங்கேயோ பார்த்துவிட்டு மறுபடியும் திரும்பும்போது நாம் முற்றிலும் வேறு யாராகவோ ஆகியிருப்போம். அவள் அரண்டு மிரண்டு போய்விடுவாள், பயத்தில் விறைத்துப் போயிருப்பாள்! நாம் தியானலிங்க பிரதிஷ்டையில் ஈடுபட்டிருந்ததால், அந்த விஷயங்களை எல்லாம் கொஞ்ச காலத்திற்கு அனுமதித்து இருந்தோம்.

இந்த உயிர்களில் சிலரை டவுன்லோடு செய்வதைப் பற்றி கொஞ்ச காலத்திற்கு யோசித்தோம். இந்த உயிர்கள் மிகவும் உயர்ந்த நிலையில் வளர்ச்சி அடைந்தவர்கள்; இன்னொரு புதிய உடலை எடுப்பதில் இவர்களுக்கு விருப்பம் கிடையாது. அந்த அளவுக்கு அவர்களால் சுயமாக தேர்வு செய்யமுடிகிறது - அவர்களை கட்டாயத்தால் ஒரு கர்ப்பத்துக்குள் ஈர்த்துவிட முடியாது. தாங்களே தேர்வுசெய்து கொள்ளும் அளவுக்கு அவர்களுடைய விழிப்புணர்வு வளர்ந்திருக்கிறது. அதனால், தங்களுடைய வாழ்வின் கடைசி காலகட்டத்தை நிறைவேற்றிக்கொள்ள பொருத்தமான ஒரு வாகனத்தை அவர்கள் தேடிக் கொண்டிருக்கிறார்கள். அதனால் உங்களுடைய உடலை நீங்கள் அவர்களுக்கு கிடைக்கச் செய்தால் - அதாவது நீங்கள் போதுமான செயல் செய்து தயாராகி இருந்து, பரிபூரண விருப்பத்தோடு இருந்தால் மட்டுமே - உங்களுடைய உடல்களுக்குள் அவர்களை டவுன்லோடு செய்யமுடியும். இப்படிப்பட்ட ஒரு விஷயத்திற்கு அவசியமான திறந்தநிலையை மனிதர்களுக்குள் கொண்டுவர ஏராளமான தயார்படுத்தும் செயல்கள் தேவைப்படும், ஏராளமான சாதனா தேவைப்படும். அவர்கள் போதிய அளவுக்கு திடமாக இருக்கவேண்டும், அதேசமயம் அதிகப்படியான திடத்துடனும் இருக்கக்கூடாது. அவர்கள் போதிய அளவுக்கு எளிதில் தாக்கத்திற்கு ஆளாகும்படி இருக்கவேண்டும், அதேசமயம், தாக்கத்திற்கு அதிகப்படியாக ஆளாகக்கூடாது. இது முற்றிலும் வேறு நிலையிலான சாதனாவாக இருக்கும்.

அந்த உயிரை, இன்னொரு உயிர் வாழ்ந்து கொண்டிருக்கும் அதே உடலில் போட வேண்டுமென்றால், அப்போது இந்த மனிதரும் அதே தன்மைகளுடன் இருப்பது அவசியம். இல்லாவிட்டால், இந்த மனிதரின் சகவாசம் அவர்களுக்கு மோசமானதாக இருக்கும்! அவர்கள் எதையும் அவ்வளவு எளிதாக தேர்ந்தெடுத்து விடமாட்டார்கள், மிகவும் நுட்பமாக ஆராய்ந்துதான் முடிவெடுப்பார்கள்; எந்த அளவுக்கு என்றால், தாங்கள் நுழைவதற்கு தகுதியுடையதாக உலகில் எந்த கர்ப்பமும் இல்லை என்று அவர்கள் பார்க்கிறார்கள். அந்த அளவுக்கு விலக்கிப்பார்த்து

தேர்வு செய்பவர்களாக அவர்கள் இருக்கும்போது, நீங்கள் அவர்களோடு சிரமமான காலத்தைதான் அனுபவிப்பீர்கள், இல்லையா? அப்படிப்பட்ட ஆளோடு வாழ்வது கஷ்டம். அப்படியென்றால் உங்களுக்கு என்னவாகும், நீங்கள் எங்கே போவீர்கள்? நீங்கள் எங்கேயும் போவதில்லை. நீங்கள் இல்லாமல் போகிறீர்கள். இதை ஒரு ஆக்கிரமிப்பு என்று சொல்லலாமா? இல்லை, இது ஒரு முழுமையான அழிப்பு. இன்னும் நேர்மறையான வார்த்தையில் சொல்ல வேண்டுமென்றால் இதுதான் முக்தி என்று சொல்லப்படுவது. இதுதான் மோட்சம் என்று சொல்லப்படுவது. எதிர்மறையான வார்த்தையில் சொல்ல வேண்டுமென்றால், இதுதான் நிர்வாணா என்று சொல்லலாம்.

இப்படிப்பட்ட விஷயங்களை செய்ய, ஏற்கனவே உடலில் இருக்கும் இந்த உயிர் விருப்பத்துடன் இருக்கவேண்டும் - அதாவது, உயிர்ச்செயலை பரிபூரணமாக கட்டவிழ்த்துவிட்டு தன்னை கரைத்துவிட - விருப்பத்துடன் இருக்கும் நிலைக்கு வரும்படி அவர் தயாராவது அவசியம். அப்போது அவர் பரிபூரணமாக முடிந்து போய்விடும்படி செய்யலாம்.

இப்போது பொருள் உடல் இன்னும் அப்படியே நன்றாக இருக்கிறது என்றால், அது குறிப்பிட்ட சூழலில் வைக்கப்பட்டிருந்தால் - அதேசமயம், இன்னொரு உயிரையும் தேவையான அளவுக்கு ஈர்த்து அழைத்திருந்தால் - அந்த உயிரை இந்த உடலுக்குள் போட்டுவிட முடியும். இது மிகவும் நுட்பமான ஒரு செயலாகும். அதோடு, இப்படிப்பட்ட ஒரு விஷயத்தில் நாம் ஒவ்வொரு முறையும் வெற்றிகரமாக இருக்க முடியாது. ஒரு விண்கலத்தில் இருந்து வெளியே வந்து அதை சரிசெய்துவிட்டு, திரும்பவும் அதற்குள் போவது எவ்வளவு நுட்பமானதோ, அதைவிடவும் இந்த செயல் நுட்பமானது, அதைவிட பலமடங்கு நுட்பமானது என்று சொல்லமுடியும். ஏனென்றால், உடலை இயங்கும் நிலையில் வைத்திருக்க வேண்டும் - அதேசமயம், ஒருவரை உடலிலிருந்து வெளியேற்றுவது மிகவும் கஷ்டமாக இருக்கலாம். வாடகை வீட்டில் வசிக்கும் மனிதர்களை வெளியேற்றுவதே, வாடகைக்காரர்களை வீட்டிலிருந்து வெளியே அனுப்புவதே அவ்வளவு பெரிய கஷ்டமாக இருக்கிறது, இல்லையா? அதனால், உடல் இன்னும் நன்றாக தகுதியோடு இருக்கும்போதே அந்த மனிதரை தன் உடலைவிட்டு வெளியேற்றுவது அவ்வளவு சுலபம் இல்லை. அவரை இசைய வைப்பதற்கு ஏராளமான விஷயங்களை செய்ய வேண்டும். பல விஷயங்களிலிருந்தும் வெளியே வருவதற்கு ஒரு மனிதனை சம்மதிக்க வைத்துவிடலாம். ஆனால், தன்னுடைய உடலிலிருந்து வெளியே போவதற்கு அவரை இசைய வைப்பதுதான் இருப்பதிலேயே மிகவும் கஷ்டமானது. ஆனால் தேவையான விதங்களில் தயார்செய்தால், அதை செய்திட முடியும். நாம் பேசிக்கொண்டிருப்பது, ஒரு

உயிர் தன்னுடைய பொருள் உடலுக்கு எந்த சேதமும் ஏற்படுத்தாமல் அந்த உடலைவிட்டு வெளியேறுவதைப் பற்றி - அப்போதுதான் அந்த உடல் இன்னொரு உயிர் தங்குவதற்கு நல்ல நிலையில் இருக்கும்.

நாம் இன்றைக்கு வாழும் சமூகம் காரணஅறிவை அதிகப்படியாக சார்ந்திருக்கிறது என்று நினைக்கிறேன், வாழ்க்கையின் மற்ற அம்சங்களைப் பற்றிய பக்குவம் இன்றைய சமூகத்தில் மிகவும் குறைவாகவே இருக்கிறது. அதனால், அவர்களுடைய அறிவுக்கு எது மிகவும் அர்த்தமுள்ளதாக தோன்றுகிறதோ, அதை செய்திடவே நாம் பார்க்கிறோம் - மரங்கள் நடுவது, மருத்துவமனைகள், பள்ளிகள் என்று நடத்திக் கொண்டிருக்கிறோம். மக்கள் என்னை "மரம் நடுபவர்!" என்றுகூட அழைக்க ஆரம்பித்துவிட்டார்கள். இந்த உயிர்களை டவுன்லோடு செய்வது என்பது வெறும் பொழுதுபோக்குக்காக கிடையாது. சமூகத்திற்கு இது மகத்தான ஒரு வரப்பிரசாதமாக இருந்திடும். ஆனால் இந்த உலகில் இத்தனை காலம் வாழ்ந்துவிட்ட பிறகு, அந்தளவுக்கு உயர்ந்த நிலைக்கு வளர்ந்துள்ள மனிதர்களை நம்மால் போதிய எண்ணிக்கையில் உருவாக்க முடியவில்லை என்றால், பிறகு வேறு ஏதோ ஒரு இடத்தில் இருந்துதான் அவர்களை இறக்குமதி செய்யவேண்டியிருக்கும். நமக்கு அப்படிப்பட்ட அவசியம் ஏற்படாது என்று நான் நம்புகிறேன், நாம் செய்து கொண்டிருக்கும் பணி சிறப்பாகவே இருக்கிறது. இங்கு நடந்து கொண்டிருக்கும் பணி மிகவும் தீவிரமானது. அசைவிலும், அசைவற்ற நிலையிலும் இருக்கும் எரிமலை போன்ற மனிதர்கள் நம்மிடம் ஏராளமாக இருக்கிறார்கள். இவர்கள் எல்லாம் இங்கு இருக்கும்போது, உயிர்களை இறக்குமதி செய்யும் அவசியம் நமக்கு ஏற்படாது என்று நம்புகிறேன். அதனால், ஏற்கனவே கர்ப்பத்திலிருந்து வெளியே வந்திருக்கும் மனிதர்களோடே நம் வேலையை செய்வோம். நீங்கள் எல்லோரும் இங்கே இருக்கிறீர்களே! நீங்கள் எப்படி வந்தீர்கள் என்பது முக்கியமில்லை, உங்களை வைத்து என்ன செய்யலாம் என்றுதான் பார்த்துவிடுவோமே!

அத்தியாயம் 11

# மறுபிறப்பு எனும் புதிர்!

*இப்போதைக்கு பெரும்பாலான மனிதர்களால் இந்த ஜென்மத்தில் நிகழ்ந்துகொண்டிருக்கும் விஷயங்களையே கையாள முடிவதில்லை. அப்படி இருக்கும்போது, அவர்கள் ஏன் முந்தைய ஜென்மங்களை தோண்டிப் பார்க்க விரும்ப வேண்டும்? இந்த ஜென்மத்தின் எண்ணங்களையும், உணர்ச்சிகளையும், உறவுகளையும் கையாள்வது எப்படி என்றே அவர்களுக்கு புரியவில்லை. அப்படி இருக்கும்போது, பல ஜென்மங்களின் எண்ணங்களையும், உணர்ச்சிகளையும், உறவுகளையும் அவர்களால் எப்படி கையாள முடியும்?*

## ஒரு புதிய உடல்!

கர்ப்பம் ஏற்பட்ட பிறகு, பொருள் உடல் ஒரு பெண்ணின் கருவறைக்குள் மெதுவாக வளர ஆரம்பிக்கிறது. ஆனால், இது ஒரு பறவைக்கூட்டைப் போன்றதுதான். இயற்கையில் சில பறவைகள் தங்களுடைய கூடுகளைக் கட்டுவார்கள். வேறு சில பறவைகள் அந்த கூட்டிற்குள் வந்து தங்கள் முட்டையை இட்டு, தங்கள் வாழ்வை அங்கே அமைத்துக்கொள்வார்கள். இந்த கர்ப்பம் என்பதும் அப்படித்தான். இரண்டு பேர் ஒன்றாக இணைந்தார்கள், அதன்மூலம் ஒரு உடலை உருவாக்க ஆரம்பித்தார்கள். ஒரு உடலை தேடிக்கொண்டிருக்கும் வேறொரு மனிதர் இதற்குத் தகுதியாக இருக்கிறார், அதில் வந்து குடியேறி விடுகிறார். இதுவரைக்கும் அந்தக் கரு ஒரு உயிராக இருக்கவில்லை - அதற்கு காரணம், உடல் சின்னதாக இருக்கிறது என்பது கிடையாது - இன்னும் அந்த கர்ப்பத்தில் யாரும் குடியேறவில்லை, அதுதான் காரணம். அதுவரைக்கும் அது பல செல்களால் அமையப்பெற்ற ஒரு பிண்டமாகத்தான் இருந்தது. பிறகு, அந்த இன்னொரு உயிர் கர்ப்பத்தில் குடியேறுகிறது. இப்போது செல்களால் அமைந்த பிண்டம் ஒரு உயிராக மாறிவிடுகிறது. அவர் இன்னும் முழுமையான ஆளாக இல்லையென்றாலும் பல விதங்களில் அவர் ஒரு ஆளாகத்தான் இருக்கிறார்.

பொதுவாகவே, கர்ப்பத்தில் இருக்கும் பொருள் உடல் நாற்பது நாட்களுக்குப் பிறகு குடி கொள்வதற்கு தகுந்ததாகி விடுகிறது. 99.9 சதவிகித நேரங்களில் கர்ப்பம் தரித்து நாற்பதிலிருந்து நாற்பத்தெட்டு நாட்களுக்குள் உயிர் கர்ப்பத்துக்குள் நுழைகிறது, பொருள் உடலை எடுத்துக்கொள்கிறது என்று சொல்லலாம். சில சமயம் அபூர்வமான சில நிகழ்வுகளில், அது இன்னும் கொஞ்சம் காலம் எடுத்துக்கொள்ள வாய்ப்பிருக்கிறது. விழிப்புணர்வில் ஒரு உயர்ந்த நிலைக்கு வளர்ந்திருக்கும் உயிர்கள் சிலர், கர்ப்பத்தில் இருக்கும் உடல் இன்னும் கொஞ்ச காலம் வளர்ந்திடும் வரை காத்திருப்பார்கள். அதேசமயம், வேறு எந்த உயிரும் அந்த கர்ப்பத்தில் நுழைந்துவிட அவர்கள் அனுமதிக்க மாட்டார்கள். அப்படிப்பட்ட விஷயம் நிகழும்போது அதைத் தெரிந்துகொள்வது மிகவும் சுலபமானது. நான் அந்த விவரங்களுக்குள் போகமாட்டேன். பிறகு ஒவ்வொரு கர்ப்பிணிப் பெண்ணையும் பார்த்து அவர்களை ஆராய ஆரம்பித்துவிடுவார்கள் - அவளுடைய குழந்தை விழிப்புணர்வு மிக்கதா இல்லையா என்று ஆராய்வார்கள்.

கர்ப்ப காலத்தின்போது, கருவுக்குள் உயிர் நுழைந்துவிட்டதா இல்லையா என்பதை சுட்டிக்காட்டும் பல அறிகுறிகள் உண்டு. நாம் அந்த தாய்க்கு கொஞ்சம் பயிற்சி அளித்தால், அவரால் அதை எளிதில் உணர்ந்திட முடியும். கர்ப்பம் தரித்து நாற்பத்தெட்டு நாட்களுக்கு பிறகும் கருவுக்குள் உயிர் நுழையவில்லை என்றால், அப்போது அந்த குழந்தையின் விஷயத்தில் கொஞ்சம் அசாதாரணமான நிகழ்வு ஏதோ ஏற்படப் போவது நிச்சயம், அதைப் பற்றிய கேள்வியே இல்லை. நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம், கௌதம புத்தரின் தாயைப் பார்த்து யாரோ ஒருவர், "நீங்கள் மகத்தான ஒரு உயிரை பிரசவிக்கப் போகிறீர்கள்!" என்று சொன்னாராம். இப்படிப்பட்ட விஷயங்களை முன்கூட்டியே சொல்வது மிகவும் சுலபமானதுதான். கர்ப்பமாகி நாற்பத்தெட்டு நாட்களுக்குப் பிறகும் உயிர் கர்ப்பத்துக்குள் நுழையாமல், கொஞ்சம் தாமதித்து நுழைந்திருப்பதை யாரோ கவனித்திருக்கலாம். ஒரு மகத்தான உயிர் வரப்போகிறார் என்பதற்கான அறிகுறிதான் அது. அந்த உயிருக்கு சில தன்மைகள் இருப்பதால் அந்த கர்ப்பத்தை அது பாதுகாத்து இருக்கிறது, இருந்தாலும் உடனே நுழைவதில்லை. உடல் இன்னும் கொஞ்சம் வளர்ந்திடும் வரை அது காத்திருக்கும், அதற்குப் பிறகுதான் நுழைந்திடும்.

இப்படிப்பட்ட சூழ்நிலையில் அந்த தாய்க்கு வேதனையான நிலை ஏற்படலாம் அல்லது அவளுடைய அடிப்படையான நிலையில் அசௌகரியம் ஏற்படலாம். உடல்நிலையில் அசௌகரியம் ஏற்படும் என்று அர்த்தமில்லை, உயிர்ரீதியாகவே அவளுக்கு ஒருவித தவிப்பு ஏற்படுகிறது. அப்போது, நாற்பத்தைந்து முதல் அறுபத்து நான்கு நாட்களுக்குள் அவளுக்கு -

வழக்கமான தாய்மை உணர்வுகளைத் தாண்டி கண்களில் காரணமே இல்லாமல் கண்ணீர் நிரம்பினால், அல்லது நீல நிறத்தில் பிரகாசிக்கும் ஒளி அவ்வப்போது மின்னி மறைவது தெரிந்தால், அல்லது பாம்புகளைப் பற்றிய நல்லவிதமான கனவுகள் வந்தால் - பிறக்கப் போகும் மனிதர் ஒரு மகானாக இருக்கலாம், அல்லது இருண்ட மாந்திரீகத்தில் வல்லமை பெற்றவராகவும் இருக்கலாம், அல்லது மிகப்பெரிய வெற்றிவீரனாகவும் இருக்கலாம் என்று அர்த்தம். இதைப்போன்ற அறிகுறிகள் தென்பட்டவுடன், பிறக்கப் போகும் உயிர் குறிப்பிட்ட தன்மையில் இருக்கும்படி அதை மாற்றுவதற்கு தேவையான செயல்முறைகளை செய்திடுவார்கள். ஒரு மகான் என்றாலும், மாந்திரீகவாதி என்றாலும், வெற்றிவீரன் என்றாலும், எல்லோருக்குமே குறிப்பிட்ட நிலையிலான திறமைகளும் வல்லமைகளும் அமைந்திருக்கும். அவர்களுடைய நோக்கத்தில் மட்டுமே வித்தியாசம் இருந்திடும். தங்களுடைய திறமைகளை எந்த நோக்கத்திற்காக அவர்கள் பயன்படுத்துவார்கள் என்பதுதான் மாறுபடும். அதனால்தான் கர்ப்பம் ஏற்பட்ட உடனேயே, எல்லாவற்றையும் அரவணைத்து ஏற்றுக்கொள்ளும் மனோபாவத்தை அந்த உயிருக்குள் வேரூன்ற செய்ய விரும்புவார்கள், அதற்காக பல விஷயங்களை செய்ய முயற்சிப்பார்கள். ஏனென்றால், இந்த உலகத்திற்குள் நாம் அழைத்துவரும் உயிர் எப்படிப்பட்ட உயிராக இருக்கிறது என்பது நம்முடைய பொறுப்புதான். அந்த உயிர் உலகை விட்டுப் போகும்போது, எந்தளவுக்கு விழிப்புணர்வுடன் வெளியேறுகிறது என்பதும் நம் பொறுப்புதான். ஒருவர் விழிப்புணர்வுடன் இறப்பதற்கு உதவும் திறன்கொண்ட சமூகமாக நாம் இருந்தால், எதிர்காலத்தில் ஒரு மேம்பட்ட தலைமுறை உருவாக அது பெரும் பங்களிப்பாக இருக்கும்.

இப்படியாக இந்த கட்டத்திற்கு பிறகுதான், தோராயமாக எண்பத்து நான்கு முதல் தொண்ணூறு நாட்களுக்குள் ஒரு உயிருக்கும் உடலுக்கும் உண்டான நிஜமான தொடர்பு ஆரம்பமாகிறது. அதுவரைக்கும் அந்த உயிர் இன்னும் ஒரு உடலை தேடிக்கொண்டிருக்கும் நிலையில்தான் இருக்கிறது. இந்த கர்ப்பம் தனக்கு உகந்ததா இல்லையா என்று இன்னும் ஆராய்ந்து கொண்டுதான் இருக்கிறது. இது விழிப்புணர்வால் சுயமாக செய்யப்படும் தேர்வு கிடையாது, விழிப்புணர்வு இல்லாமல் நிகழ்ந்திடும் தேர்வுதான். தன்னுடைய வாசனைகளின்படி ஏற்படும் போக்கால் அந்த கர்ப்பம் தனக்கு பொருந்துமா இல்லையா என்று பார்க்கிறது. பாரம்பரியமாகவே, இதைத்தான் நாம் வாசனைகள் என்று சொல்கிறோம். உங்களுடைய வாசனைகளைப் பொருத்து அதற்கேற்ற உடலைத் தேடுவீர்கள். இந்த காலகட்டத்தில், அந்த உயிர் எந்தளவுக்கு விழிப்புணர்வோடு இருக்கிறது என்பதைப் பொருத்து அவர் எந்த மாதிரி உடலை தேர்வுசெய்கிறார் என்பதில் சிறிதளவு சுதந்திரம் இருக்க வாய்ப்பிருக்கிறது.

தேர்வு செய்யும் வாய்ப்பிருக்கிறது என்றால், ஏதோ ஒரு கடைக்குள் நுழைந்து இந்த சட்டையை வாங்கலாமா அல்லது அந்த சட்டையை வாங்கலாமா என்பதைப்போல் கிடையாது. இது கர்மாவின் அடிப்படையில் செய்யப்படும் தேர்வாகும். குறிப்பிட்ட திசையில், குறிப்பிட்ட விதமான கர்ப்பத்தை நோக்கி, குறிப்பிட்ட விதமான உடலைத் தேடி ஈர்க்கப்படும் போக்கு அந்த மனிதருக்கு இயற்கையாகவே இருக்கிறது. நீங்கள் பொருள் உடலுக்குள் இருக்கும் போதுகூட குறிப்பிட்ட விதமான மனிதர்களை நாடிடும் போக்கு இயற்கையாகவே உங்களுக்கு அமைந்திருக்கிறது - உங்களுடைய கர்மா அப்படித்தான் இருக்கிறது. அதைப்போலவே, பொருள் உடல் இல்லாத நிலையிலும் நீங்கள் அதையேதான் செய்கிறீர்கள், இதில் விழிப்புணர்வற்ற தன்மை இன்னும் அதிகமாக இருக்கிறது. ஆனால், உங்களுக்குள் நீங்கள் வைத்திருக்கும் கர்மப்பொருள் இருக்கிறதே - அது நீங்கள் குறிப்பிட்ட விதமான உடலை தேடிப்போக காரணமாக அமைகிறது.

கர்மா என்பது இப்படித்தான்: பல பேர் ஒரு குழுவாக ஒரு ஹாலுக்குள் முதல்முறையாக நுழைகிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். ஒவ்வொருவரும் தன் விருப்பப்படி போய் தனக்கென்று ஓரிடத்தில் உட்கார்ந்து கொள்வார்கள். ஆனால் இந்த தேர்வு முற்றிலும் தற்செயலானது என்று சொல்லமுடியாது. பெரும்பாலும் இந்த தேர்வு உங்களுடைய கர்மாவை பொருத்துத்தான் ஏற்படுகிறது. உங்களுக்கு முதுகுவலி கர்மா இருந்தால், நீங்கள் போய் சுவற்றில் சாய்ந்து உட்காருவீர்கள். இன்னொருவருக்கு எப்போதும் மறைந்திருந்தே பார்க்கும் கர்மா இருக்கலாம். அவருக்கு அந்த சூழ்நிலையில் இருக்க வேண்டும் என்று விருப்பம்தான், அதேசமயம், அவருக்கு யார் கண்ணிலும் படக்கூடாது என்று இருக்கிறது. அதனால் பெரிதாக இருக்கும் ஆளுக்கு பின்னால் போய் உட்கார்ந்து கொள்வார். இன்னொருவருடைய கர்மா எப்போதுமே முதல் வரிசையில் உட்காரும்படி இருக்கலாம், அவர் அங்கேயே வந்து அமருவார். இதைப் பற்றிய கவனமில்லாமல் இருந்திருக்கலாம், ஆனால் அதை நீங்கள் அந்த விதத்தில்தான் செய்வீர்கள். உங்களை ஓரிடத்தில் போய் உட்கார வைப்பது உங்களுடைய கர்மாதான். அதைப்போலவே, லட்சக்கணக்கான கர்ப்பங்கள் இருக்கின்றன, உடலை தேடிக்கொண்டிருக்கும் லட்சக்கணக்கான உயிர்களும் இருக்கிறார்கள் - அவர்களெல்லாம் தங்களுடைய வாசனைகளையும் குணங்களையும் பொருத்து, அதற்கேற்ற ஒரு கர்ப்பத்தில் போய் குடிகொள்வார்கள், அவ்வளவுதான்.

இப்படியாக, ஒரு உடல் கிடைத்துவிட்ட பிறகு, அந்த உயிருடைய பிராணசக்தியின் உயிர்ப்புதான் பொருள் உடலின் தன்மைகளை வளரச்செய்கிறது. இந்த கட்டத்திலிருந்து, குழந்தையை உருவாக்குவதில் அந்த தாய் மட்டுமே ஈடுபடுகிறார் என்ற நிலை மாறுகிறது. அதனால்தான்,

சில சமயம், தெருக்களில் வாழும் ஒரு தாய் பலவீனமாகவும், ஊட்டம் குறைந்தும் இருந்தபோதும், அவள் பிரசவிக்கும் குழந்தை மிகவும் ஆரோக்கியமாக இருக்கிறது - இதுபோன்ற நிகழ்வுகள் லட்சக்கணக்கில் இருக்கின்றன. அதேசமயம், குடும்ப சூழலில் இருக்கும் ஒரு தாய் நல்ல முறையில் கவனிக்கப்பட்டு, நன்றாக சாப்பிட்டு ஊட்டத்துடன் இருந்தாலும், அவள் பிரசவிக்கும் குழந்தை நோஞ்சானாக இருந்திட வாய்ப்பிருக்கிறது. பிராணப் பொருள், அதாவது அந்த உயிருடைய பிராண சக்தியின் உயிர்ப்புதான் உடலை இப்படி உருவாகச் செய்திருக்கிறது. அதற்கேற்றபடி, அந்த புதிய உயிர் ஒரு புதிய பொருள் உடலை எடுக்கிறது.

கர்ப்பத்தில் இருக்கும்போது மெதுவாக சக்கரங்களும் வளர ஆரம்பிக்கின்றன. தோராயமாக பன்னிரெண்டாவது வாரத்தில் மூலாதார சக்கரம் மட்டுமே உருவாகி அமைந்திருக்கும். முதல் இருபத்தெட்டு முதல் முப்பது வாரங்களுக்குள், கருவின் வளர்ச்சித் தரத்திற்கு ஏற்ப, விஷூத்தி சக்கரம் வரை இருக்கும் முதல் ஐந்து சக்கரங்கள் முழுமையாக நிலைபெற்று அமைந்திருக்கும். மற்ற இரண்டு சக்கரங்களும் - அதாவது, ஆக்ஞா சக்கரமும் சஹஸ்ரார சக்கரமும் - எல்லா உயிர்களிலும் ஒரே அளவுக்கு நிலைபெற்று அமையாது. புதிதாக பிறந்த சிசுக்களில் கிட்டத்தட்ட 30-35 சதவிகிதம் பேருக்கு ஆக்ஞா சக்கரம் அவ்வளவாக வளர்ந்திருக்காது. ஒரு சிசுவின் விழிகள் நகர்ந்திடும் விதத்தை கவனித்தாலே, அதனுடைய ஆக்ஞா சக்கரம் நன்கு நிலைபெற்று இருக்கிறதா இல்லையா என்று தெரிந்துவிடும். அதனால்தான் இந்தக் கலாச்சாரத்தில், ஒரு குழந்தை பிறந்தவுடன் முதல் காரியமாக, சிசுவை கழுவிய பிறகு புருவங்களுக்கு நடுவில் கொஞ்சம் விபூதியை வைப்பார்கள். தமிழ்நாட்டில், ஒரு குறிப்பிட்ட மரத்தின் பிசினிலிருந்து செய்யப்பட்ட பொட்டை புருவங்களுக்கு நடுவில் ஒரு நாணயத்தின் அளவுக்கு பெரிதாக வைப்பார்கள். அந்த மை காயும்போது இந்த பிசின் தன்னைச் சுற்றி இருக்கும் தோல் பகுதியை இழுத்துக்கொள்கிறது, அதனால் புருவமத்தியில் இருக்கும் பொட்டை நோக்கி வலுவான உணர்ச்சி ஏற்படும்படி செய்கிறது. ஒருவேளை ஆக்ஞா சக்கரம் இன்னும் முழுமையாக வளர்ச்சியடையாமல் இருந்தால், அந்த இடத்தை நோக்கி குழந்தையின் கவனத்தை செலுத்த வேண்டும் என்பதற்காக இப்படி செய்கிறார்கள்.

பாரம்பரியமாக, ஒரு சிசுவின் விழிகள் அசைந்திடும் விதத்தை கவனித்துப் பார்த்தே, அது ஒரு மகானாக வந்திடுமா இல்லையா என்று சொல்லிவிடுவார்கள். அப்படியென்றால், அவர் ஒரு காட்டிற்கோ, குகைக்கோ போய் உட்கார்ந்துவிட வேண்டிய அவசியமில்லை. ஒரு மகான் என்றால், மற்றவர்களால் பார்க்க முடியாத விஷயங்களை அவரால் பார்க்க முடிகிறது. அது ஒரு தொலைநோக்கு கொண்ட தொழிலதிபராகவும்

இருக்கலாம், அல்லது தொலைநோக்கு கொண்ட பெருந்தலைவராகவும் இருக்கலாம் - அடிப்படையில் மற்றவர்களைவிட இவரால் விஷயங்களை அதிகத் தெளிவுடன் பார்க்க முடிகிறது. அப்படியென்றால், பிறப்பின்போது ஆக்ஞா சக்கரம் அந்தளவுக்கு வளர்ச்சியடையாது இருப்பவர்கள், தங்களுடைய வாழ்நாளில் அதை வளர்த்துக்கொள்ள முடியாது என்று அர்த்தம் கிடையாது - அவர்கள் அதற்கு முயற்சித்தால் அப்படி செய்யமுடியும். அதேசமயம், மற்றவர்களைவிட அவர்கள் கொஞ்சம் அதிகமாக முயற்சிக்க வேண்டியிருக்கும்.

பொதுவாகவே பெரும்பாலானவர்களுக்கு, பிறப்பின்போது சஹஸ்ரார சக்கரம் வளர்ந்த நிலையில் அமையாது. அதற்குப் பிறகுதான் அது மெதுவாக வளர்ச்சியடைகிறது. உச்சந்தலையில் பிரம்மரந்திரம் என்ற ஒரு பொட்டு இருக்கிறது என்று ஏற்கனவே பார்த்தோம். சமஸ்கிருதத்தில் "ரந்திரம்" என்கிற வார்த்தை இருக்கிறது - அதற்கு பாதை என்று அர்த்தம் - ஒரு சின்ன ஓட்டை அல்லது சின்ன சுரங்கம் போன்ற பாதை என்று அர்த்தம். உடலில் இருக்கும் இந்த வெளியின் மூலமாகத்தான் உயிர் கருவுக்குள் இறங்குகிறது. ஒரு குழந்தை பிறக்கும்போது அந்த இடம் மிகவும் மென்மையாக இருக்கிறது, குறிப்பிட்ட வயது வரைக்கும் அந்த இடத்தில் எலும்பு அமையப் பெறுவதில்லை. ஏனென்றால், தன்னை பராமரிக்கும் திறன் இந்த உடலுக்கு இருக்கிறதா இல்லையா, இந்த உடலில் இருக்கலாமா வேண்டாமா என்று தேர்ந்தெடுக்கும் வாய்ப்புகளை உயிர் திறந்தே வைத்திருக்கும்; அந்தளவுக்கு விழிப்புணர்வு உயிருக்கு இருக்கிறது. அதனால் அந்த வாசலை குறிப்பிட்ட காலம் வரைக்கும் அது திறந்தே வைத்திருக்கிறது - ஒருவேளை தான் இருப்பதற்கு இந்த உடல் பொருத்தமாக இல்லையென்றால், அந்த உயிரால் வெளியேறிட முடியும். உடலில் இருக்கும் வேறு எந்த வழியின் மூலமாகவும் வெளியேறிட அது விரும்பவில்லை, தான் வந்த வழியாகவே போய்விட விரும்புகிறது - எப்படி ஒரு நல்ல விருந்தாளி வாசல் வழியாகவே வந்து வாசல் வழியாகவே திரும்புவாரோ - அப்படித்தான் இதுவும். நீங்கள் ஒருநாள் வெளியேறும் போதும், உடலின் எந்தப் பகுதி வழியாக வெளியேறினாலும், நீங்கள் விழிப்புணர்வோடு வெளியேறினால் அது நல்லதுதான். அதேசமயம், பிரம்மரந்திரம் வழியாக உங்களால் வெளியேற முடிந்தால், அதுதான் இருப்பதிலேயே சிறந்ததாக இருக்கும்.

## உயிர்களின் எண்ணிக்கை மாறிடுமா?

மறுஜென்மங்களைப் பற்றி முதலாவதாக கேட்கப்படும் கேள்விகளில் ஒன்று - மனிதர்களின் ஜனத்தொகை அதிகரித்துக் கொண்டிருக்கிறதே, அப்படியென்றால் நிறைய மிருகங்கள் மனிதர்களாக மாறிக்

கொண்டிருக்கிறார்களா? சமீபகாலங்களில் மிருகங்களின் எண்ணிக்கை உலகில் குறைந்து வருவதற்கு காரணம் இதுதானா? உலகில் இருக்கும் உயிர்களின் எண்ணிக்கை மனிதர்களையும் மிருகங்களையும் சேர்த்து - எப்போதும் நிலையான எண்ணிக்கையில் இருக்குமா?

பிரபஞ்சத்தைப் பற்றி எண்ணிக்கையின் அடிப்படையில் யோசிப்பதும், நம்பிக் கொண்டிருப்பதும் அறியாமைதான் - இந்த அறியாமையிலிருந்து தான் மேலே கேட்கப்பட்ட கேள்விகளும் உருவாகின்றன. உயிர் சக்தியைப் பற்றி பேசும்போது, அது எண்ணிக்கை சார்ந்த விஷயம் கிடையாது. "இன்று இறந்துபோனவர் ஒருவர்தான், ஆனால் இன்றைக்கு பத்து பேர் பிறந்திருக்கிறார்களே! இது எப்படி வந்தது?" என்ற விதத்தில் நாம் யோசிக்க முடியாது. இப்படியான எண்ணிக்கை சார்ந்த விஷயம் அல்ல இது. உடல்களுக்கு மட்டும்தான் எண்ணிக்கை உண்டு. உயிர் என்பது எண்ணிக்கைகளில் நிகழ்வதில்லை. எல்லையற்ற தன்மையைப் பற்றி பேசும்போது, அதில் அப்படிப்பட்ட கணக்குகள் எதுவும் கிடையாது.

நாம் உயிர்த்தன்மையைப் பற்றி பேசும்போது, ஒருவேளை ஒரு ஆத்மா இருக்கிறது என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால், அப்படி ஒரு ஆத்மா இல்லவே இல்லை என்றால் என்னவாகும்? அதனால்தான் கௌதம புத்தர், நீங்கள் ஒரு *அனாத்மா* என்று சொன்னார், தொடர்ந்து அப்படியே சொன்னார். அந்த சமயத்தில் இந்துக்களுக்கு இது பெரிய அபச்சாரமாக பட்டது. புத்தர் ஏன் அப்படி சொன்னார்? அது ஆத்மாவாக இருந்தால், அது எண்ணிக்கையில் எவ்வளவு வேண்டுமானாலும் இருக்கலாம். ஆனால் அது அனாத்மாவாக இருந்தால், அது எந்த எண்ணிக்கையில் இருக்க முடியும்? அன்-ஆத்மாக்களை, அதாவது இல்லாத-ஆத்மாக்களை எந்த எண்ணிக்கையில் நீங்கள் உருவாக்க முடியும்? "வெறுமைகளை" எந்த எண்ணிக்கையில் நீங்கள் உருவாக்க முடியும்? அதே கேள்வி இப்போது அபத்தமாக தோன்றுகிறது. நாம் எப்போதுமே எண்ணிக்கைகளில் யோசிப்பதற்கு காரணம் என்னவென்றால், அது உங்களுடைய இப்போதைய பரிமாணத்தின் அனுபவத்திலிருந்து வருகிறது - உங்களுடைய இந்த அனுபவம் ஒரு எல்லைக்கு உட்பட்டதே.

நிஜத்தில் பார்த்தால், நீங்கள் உடல்களை உருவாக்கிக்கொண்டே போனால், எப்படியும் அவை எடுத்துக்கொள்ளப்படும், உயிர் நிகழ்ந்துகொண்டே இருக்கும். அப்படியென்றால், அவர்களுக்கான கர்மா எல்லாமே எங்கிருந்து வரும்? அவர்களுக்கான கர்மப் பொருள் எங்கே இருக்கிறது? பிரபஞ்சத்தில் இந்த கர்மப்பொருள் ஏராளமாக இருக்கிறது. நிஜத்தில் பார்த்தால், ஒருவர் விரும்பினால், இப்போது உங்களுக்கு பக்கத்தில் ஒரு ஆளாக உட்கார்ந்திருக்கும் ஒருவரே, தான் இப்போது வைத்திருக்கும்

அதே கர்மப்பொருளைக் கொண்டு பத்து லட்சம் உடல்களை எடுக்கமுடியும், இது சாத்தியமானதுதான். பல சூழ்நிலைகளில் யோகிகள் இரண்டு உடல்களை எடுத்திருக்கிறார்கள் - ஒரே கர்மப் பொருளை வைத்துக்கொண்டு இரண்டு உடல்களை எடுத்தார்கள். அதனால், எண்ணிக்கை பற்றிய கேள்வி அர்த்தம் கொண்டதாக இல்லை. அந்த கேள்வி காரண அறிவை சார்ந்தது, கணிதத்தை சார்ந்தது. ஆனால், உயிர் என்னவோ அந்த விதத்தில் நிகழ்வதில்லையே!

உயிர் என்பது ஒன்றுதான். எண்கள் உங்களுடைய மனத்தில்தான் இருக்கின்றன, பிரபஞ்சத்தில் அப்படி எதுவும் கிடையாது. ஒரு குளம் நிறைய தண்ணீர் நிரம்பியிருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். நீங்கள் உங்களுடைய வாளியை குளத்துக்குள் அமிழ்த்தி தண்ணீரை வெளியே எடுத்தீர்கள். நான் இந்த குறிப்பிட்ட தண்ணீரைத்தான் எடுத்தேன் என்று உங்களால் சொல்ல முடியுமா என்ன? அது கொஞ்சம் நீர், அவ்வளவுதான். மறுபடியும் குளத்துக்குள் வாளியை அமிழ்த்தினால் இன்னும் கொஞ்சம் தண்ணீர் கிடைக்கும். ஆனால், அந்தத் தண்ணீர் என்றும், இந்தத் தண்ணீர் என்றும் எதுவுமே கிடையாது, இல்லையா? அதைப்போலத்தான் இந்த உயிரும். அடிப்படையான உயிர் சக்தி என்பது எண்ணிக்கையின் அடிப்படையில் இருப்பதில்லை. ஒன்றே போதுமானது. ஒன்றே முழு ஜனத்தொகையையும் நிரப்பிட முடியும். வழக்கமாக நாம் ஒரு உயிர் என்று எதை சொல்கிறோமோ, அது பொருள் தன்மைக்கு அப்பாற்பட்டதாகும். எப்போது பொருள் தன்மை என்பது இல்லையோ, அப்போது எல்லை என்பதே கிடையாது. எல்லையே இல்லாததுக்கு ஒன்று, இரண்டு, பத்து, நூறு, லட்சம் என்றெல்லாம் எதுவுமே கிடையாது. அதனால், இந்த விதத்தில் யோசிப்பதே சரியாக இருக்காது.

கடந்த பல ஆண்டுகளாக, தாவர உயிர்களை க்ளோன் செய்வதில் விஞ்ஞானம் வெற்றிகரமாக இருந்திருக்கிறது. சமீபகாலங்களில் செம்மறி ஆடுகளையும், நாய்களையும் போன்ற மிருகங்களைக்கூட க்ளோன் செய்ய முடிந்துள்ளது. தற்போது, மனிதர்களையும் க்ளோன் செய்வதற்கு பலவிதமான ஆராய்ச்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன. ஏதோ ஒரு காலத்தில் அவர்கள் வெற்றி பெறுவது நிச்சயம் என்று பரவலாக நம்பப்படுகிறது. க்ளோனிங் முறைக்கும் கர்மாவுக்கும் சம்பந்தம் இருக்கிறதா? க்ளோன் செய்யப்பட்ட உயிருக்கு தேவையான கர்மா, அதாவது சாஃப்ட்வேர் எங்கிருந்து வரும்?

இதை நீங்கள் நன்றாக புரிந்துகொள்ள வேண்டும்: க்ளோனிங் முறை மூலம் நீங்கள் உருவாக்குவது - வெறும் மனித உடலை மட்டும்தான். அது தனக்கு சௌகரியமாக இருக்கிறதென்றால், தனக்கு தேவையான அம்சங்கள் எல்லாமே அதில் இருக்கிறது என்றால், உயிர் அதில் வந்து

குடியேறும், அவ்வளவுதான். அந்த உடலை நீங்கள் எந்த விதத்தில் உருவாக்கினீர்கள் என்பது ஒரு பொருட்டாகாது. ஆனால், குழந்தைகளைப் பெற்றிடும் முழுமையான தகுதியோடு ஏராளமான பெண்கள்தான் ஏற்கனவே இருக்கிறார்களே! பிறகு எதற்காக கோடிக்கணக்கான டாலர்களை செலவு செய்து ஒரு பரிசோதனை கூடத்திற்குள் அதை செய்ய வேண்டும்? இது எனக்கு புரியவேயில்லை. குழந்தைகளை உருவாக்கிடத் தான் இன்பமான ஒரு வழி இருக்கும்போது, அதை அந்தளவுக்கு அசிங்கமாக செய்ய தேவையில்லையே! டெஸ்ட் ட்யூபுகளையும் மற்றதையும் வைத்துக்கொண்டு ஒரு குழந்தையை வெளியே எடுப்பது அசிங்கமான முறைதானே? எல்லாவற்றிற்கும் மேலாக, ஒரு பெண் என்பவள் அந்த குழந்தைக்கு வெறும் உடலை மட்டும் தருவதில்லை. தன்னுடைய கர்ப்பத்தில் இருக்கும்போது அந்த குழந்தையை அவள் ஒருவிதமாக வடிவமைக்கிறாள். கர்ப்ப காலத்தின்போது தாய் எந்த விதத்தில் இருக்கிறாள் என்பதைப் பொருத்து, கர்ப்பத்தில் இருக்கும்போதே குழந்தைக்குள் ஏராளமான விஷயங்கள் உருவாகி வளர்கின்றன. நம் நாட்டில் இந்த விஷயங்களுக்கு மிகவும் ஆழமான கவனத்தையும் அக்கறையையும் செலுத்தினார்கள். ஒரு பெண் கர்ப்பம் அடைந்த உடனே அவள் என்ன செய்யவேண்டும், என்ன செய்யக்கூடாது, அதை அவள் எப்படி செய்திட வேண்டும், அவள் யார் முகத்தைப் பார்க்க வேண்டும், அவள் யார் முகத்தைப் பார்க்கக் கூடாது என்றெல்லாம் ஒவ்வொரு படியும் கவனத்துடன் முறைப்படுத்தப்பட்டது - ஏனென்றால், ஒவ்வொன்றுமே பிறக்க இருக்கும் குழந்தையின் மீது ஒரு தாக்கத்தை ஏற்படுத்திடும், அதனால்தான். நீங்கள் அடுத்த தலைமுறைக்கான மனிதர்களை உருவாக்கிக் கொண்டிருக்கிறீர்கள் என்பது உங்களுக்குப் புரியவேண்டும். நாளைய உலகம் எப்படி இருந்திடும் என்பது இப்போது உங்களுடைய உடலில் முடிவுசெய்யப்பட்டுக் கொண்டிருக்கிறது. இது மிகவும் மகத்தான ஒரு பொறுப்பாகும். அதனால், இதை தகுந்த முறையில் கையாள்வது அவசியமாகும்.

இப்போது, தொழில்நுட்பத்தை வைத்துக்கொண்டு வெளி உலகத்தில் சில பகட்டான வித்தைகளை நம்மால் செய்யமுடிகிறது என்பதாலேயே நம்மால் செய்யமுடிந்தது எல்லாவற்றையும் நாம் செய்தாக வேண்டும் என்ற அவசியம் கிடையாது. அப்படி செய்வது மிகவும் குழந்தைத்தனமானதுதான். உலகில் ஏற்படும் அழிவுக்கெல்லாம் மூலக்காரணம் அதுதான். ஒரு இனமாக, மனிதர்களாகிய நாம் மனதளவில் பக்குவப்படவே இல்லை. நாம் எதை செய்யவேண்டும், எதை செய்யக்கூடாது என்பதை எப்படி முடிவுசெய்வது? இப்போது என்ன தேவை என்ற அடிப்படையில்தான் நாம் முடிவெடுக்க வேண்டும் - நம்மால் ஒன்றை செய்யமுடியும் என்ற காரணத்தால் மட்டுமே முடிவெடுக்கக் கூடாது.

சரி, விழிப்புணர்வில் உயர்ந்த நிலையில் இருக்கும் ஒரு உயிர் குழந்தையாக வருகிறது என்று வைத்துக்கொள்வோம். ஒரு பெண் அப்படிப்பட்ட சாத்தியத்திற்கு தன்னை தயார்படுத்திக்கொள்ள முடியுமா? நிச்சயமாக முடியும். அந்தப் பெண்ணுக்கு அப்படிப்பட்ட நோக்கங்கள் இருந்தால், அவள் கர்ப்பமடைவதற்கு போதிய காலத்திற்கு முன்பாகவே முயற்சிசெய்வது சிறந்ததாக இருக்கும். ஏனென்றால், கர்ப்ப காலத்தின் போது இருக்கும் சூழ்நிலைகளில், இதுபோன்ற சூட்சுமமான விஷயங்களுக்கு கவனம் செலுத்த முடியாமல் ஆகிடலாம். அதனால், அந்த சமயத்தில் தன் விழிப்புணர்வை குறிப்பிட்ட நிலையில் வைத்திருப்பது எப்போதாவதுதான் ஏற்படும். அதேசமயம், அது சாத்தியமில்லை என்றும் சொல்ல முடியாது. இன்னும் சில விஷயங்களையும் செய்ய முடியும், ஆனால் இதையெல்லாம் அவளாகவே செய்துகொள்ள முடியாமல் போகலாம். தனக்கு தேவையான உதவியை சரியான மூலத்திலிருந்து அவள் நாடினால், அப்போது அவளுக்கு அது செய்து கொடுக்கப்படலாம்.

சரி, வழக்கமாக தானாகவே செய்துகொள்ளக் கூடியது என்ன? அவள் தனக்குள் தியானதன்மையை உருவாக்கிக்கொள்ள முடியும். தன்னுடைய உடலில் அப்படிப்பட்ட சூழ்நிலை ஏற்படுவதற்கு முன்பாகவே தியான தன்மையைக் கொண்டுவந்தால் விளைவுகள் நன்மையாக அமையும். தியானத் தன்மையோடும், அன்போடும் இருப்பதன் மூலம் ஒரு இனிமையான உயிர் உருவாவதை நிச்சயிக்க முடியும். இதற்கு இன்னும் பல அம்சங்கள் இருப்பதால், எப்போதுமே இப்படி நிகழ்ந்திடும் என்ற அவசியமில்லை. ஆனால் பெரும்பாலான நேரங்களில், இதன்மூலம் ஒரு இனிமையான உயிர் உருவாவது நிச்சயம்.

ஒருவேளை, நீங்கள் உதாரண புருஷர் ஒருவரை உருவாக்க விரும்பினீர்கள் என்றால், அதை செய்திடும் வழிகளும் உண்டு. இருப்பதிலேயே மிகவும் உன்னதமான உயிர் உங்களுடைய கர்ப்பத்தில் குடிகொள்ளும்படி செய்திட முடியும். அப்படிச் செய்ய வேண்டுமென்றால், உங்களுக்குள் நீங்கள் கொண்டிருக்கும் கர்மப்பொருளுக்கு, அதாவது உங்களுடைய கர்ம சாஃப்ட்வேருக்கு அப்பாற்பட்டு போகவேண்டும். அப்போது நீங்கள் இருக்கும் விதத்திலிருந்து முற்றிலும் மாறுபட்ட தன்மைகள் கொண்ட ஒரு உயிரை நீங்கள் ஈர்த்திட முடியும். அப்படி நிகழ வேண்டுமென்றால், முற்றிலும் வேறுவிதமான செயல்களை செய்ய வேண்டியிருக்கும். வழக்கமாக அந்த தாயால் அதை தானாகவே செய்துகொள்ள முடியாது. அந்த சூழ்நிலையை அமைத்துக் கொடுப்பதற்கு வேறு ஒருவருடைய உதவி தேவைப்படும்.

அப்படிப்பட்ட தாய்மார்கள் செய்யவேண்டிய சில முறைகளை தியானலிங்கத்தில் உருவாக்கித் தரலாம் என்று ஒரு காலத்தில்

நினைத்துக் கொண்டிருந்தேன். அப்படி செய்யாவிட்டாலும், கர்ப்பம் தரித்த நாளிலிருந்து இதுபோன்ற சூழ்நிலையில் தினமும் இருப்பதன் மூலம், நிச்சயமாக அவரால் குறிப்பிட்ட விதமான உயிரை ஈர்த்திட முடியும். ஆனால் அப்படிச் செய்வது தியானலிங்கத்தை குறிப்பிட்ட நோக்கத்திற்கான இடமாக ஆக்கிவிடும். மற்றபடி, இதைப்போன்ற பிரதிஷ்டை செய்யப்பட்ட சூழ்நிலையில் இருப்பதால் குறிப்பிட்ட விதமான உயிர்களை ஈர்த்திட முடியும்.

நாம் இன்னும் கொஞ்சம் அதிகமான விஷயங்களை செய்தால், மறுபிறப்பு எடுக்க விரும்பாத சில உன்னதமான உயிர்களும் கீழே இறங்கி வந்திடும்படி செய்யலாம். இங்கே இறங்கி வந்து திரும்பவும் பிறந்திட அவர்களுக்கு விருப்பமில்லை - அதேசமயம், முழுமையாக கரைந்துபோகும் தகுதியும் அவர்களுக்கு அவ்வளவாக இல்லை. உடலற்ற நிலையில் இருக்கும் இந்த உயிர்கள் சிலவிதமான எல்லைகளையும் கட்டுப்பாடுகளையும் கடந்து போயிருக்கிறார்கள் - தங்களுடைய வாசனைகளின் கட்டாயத்தால் தள்ளப்படாத அளவுக்கு விழிப்புணர்வுடன் இருக்கிறார்கள் - அதே சமயம், குமிழியை மொத்தமாக உடைத்துவிட்டு போகும் அளவுக்கு அவர்கள் இன்னும் விடுபடவில்லை. அவர்கள் இன்னும் முக்தி பெறும் நிலைக்கு வரவில்லை. அதே சமயம், அவர்கள் ஓரளவுக்கு விடுபட்டவர்களாக இருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்களை நாம் கீழே இறங்கி வரச் செய்யலாம். நம்முடைய உலகத்தைச் சேராத உயிர்களையும் மனித கர்ப்பங்களுக்குள் இறங்க வைத்த நிகழ்வுகளும் இருந்திருக்கின்றன. இதற்கு பலவிதமான நிபந்தனைகள் இருக்கின்றன. அதையெல்லாம் நிறைவேற்றினால், குறிப்பிட்ட விதமான உயிர்கள் நிச்சயமாக ஈர்க்கப்படும்படி நாம் செய்திட முடியும்.

## குழந்தைகளில் முன்ஜென்ம ஞாபகங்கள்

தங்களுடைய முன்ஜென்ம ஞாபகங்களை தெளிவாக நினைவுபடுத்திய குழந்தைகளைப் பற்றி ஏராளமான நிகழ்வுகள் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. இந்த குழந்தைகள் அளித்த விவரங்களையும், தகவல்களையும் கடந்த பல ஆண்டுகளில் ஆராய்ச்சியாளர்கள் சரிபார்த்து உறுதிப்படுத்தி இருக்கிறார்கள். ஆனால், இந்த ஆராய்ச்சிகளில் சொல்லப்படும் அளவை விடவும் பரவலாகவே இந்த நிகழ்வுகள் இருக்கின்றன. மூன்றிலிருந்து ஆறு மாதத்திற்குள் இருக்கும் குழந்தைகளில் 70-80 சதவிகிதம் பேருக்கு, தங்களுடைய பூர்வ ஜென்மத்தின் ஞாபகம் இருக்கும் என்று நான் சொல்லியிருக்கிறேன். ஏனென்றால், இன்னும் அந்த குழந்தையின் ஞாபகத்தில் ஜென்மங்களுக்கு இடையில் இருக்கும் மறைப்பு அமையப் பெறவில்லை. தான் எவ்வளவு பிராரப்த கர்மாவை எடுத்துக்கொள்வது

என்ற முடிவை உயிர் இன்னும் எடுக்கவில்லை, இன்னும் நிலைபெறாமல் இருக்கிறது. இந்த காலகட்டத்தில், வெறும் பிழைப்பு உணர்வால் மட்டும்தான் குழந்தை அம்மாவை நோக்கி ஈர்க்கப்படுகிறது. மற்றபடி, அந்த குழந்தை யாரையும் இன்னாரென்று துளியும் பொருட்படுத்துவதில்லை. நீங்கள் கவனித்துப் பார்த்தால், குழந்தைகளிடம் யார் இனிமையாக நடந்துகொண்டாலும் அவர்களிடம் போவார்கள். அந்த குழந்தை தன் அம்மாவை மிகவும் நேசிப்பதுபோல் தோன்றலாம். அப்படி கிடையாது, அவர்கள் யாரையும் துளிக்கூட பொருட்படுத்துவதில்லை. ஏனென்றால், இன்னும் அவர்களுடைய அடையாளங்கள் உறுதியாக அமையவில்லை. அவர்களுடைய பிழைப்புணர்வு மட்டும்தான் அம்மாவின் மார்பகத்தை நோக்கியபடி அவர்களை வைத்திருக்கிறது. அதனால், அங்கே போகவேண்டும் என்று அவர்களுக்கு தெரிகிறது.

இந்த காலகட்டத்தில், அந்த குழந்தைக்குள் பல பிறவிகளின் ஞாபகங்கள் பலவிதமாக ஓடிக்கொண்டிருக்கின்றன. மெதுவாக அது நிலைபெறுகிறது. இந்த விஷயத்தில் தாய்ப்பால் ஊட்டுவது மிகவும் முக்கியமான ஒரு பங்களிப்பாக இருக்கிறது. தாய்ப்பாலின் மூலம், "உன் வாழ்க்கையின் தொடர்பு இங்கேதான் இருக்கிறது," என்று சொல்லும் விதத்தில் இயற்கை அந்த குழந்தையின் ஞாபகச் சுழற்சியை நிலைப்படுத்தப் பார்க்கிறது. ஒரு விஞ்ஞான ஆராய்ச்சி செய்தால் தாய்ப்பால் ஊட்டுவதற்கும், குழந்தைகளில் ஏற்படும் பூர்வஜென்ம நினைவுகளுக்கும் உள்ள தொடர்பை புரிந்துகொள்ள வாய்ப்பிருக்கிறது. வழக்கமாக தாய்ப்பால் ஊட்டப்படும் குழந்தையின் ஞாபகத்தில், ஜென்மங்களுக்கு இடையில் இருக்கும் மறைப்புத் திரை உறுதியாக அமைந்திருக்கும். தாய்ப்பால் இல்லாத குழந்தைக்கு மறைப்புத் திரை அந்தளவுக்கு உறுதியாக அமைந்திருக்காது. அவர்களின் திரையில் ஓட்டைகள் கொஞ்சம் அதிகமாக இருக்கலாம், அதன் விளைவாக வாழ்க்கையின் எல்லா விஷயங்களிலும் விவரிக்கமுடியாத அளவுக்கு குழப்பங்கள் ஏற்படலாம்.

இந்தக் கலாச்சாரத்தில், குறிப்பாக ராஜ குடும்பங்களில், ஒரு அரசருக்கு குழந்தை பிறந்தது என்றால், அவன் நல்ல அரசனாக வரவேண்டும் என்றால், அவனுக்கு மூன்று பெண்கள் பாலூட்ட வேண்டும் என்ற நம்பிக்கை இருந்தது. ராணிக்கு கர்ப்பம் ஏற்பட்ட உடனேயே, கர்ப்பத்தின் அதே கட்டத்தில் இருக்கும் இன்னும் இரண்டு பெண்களை தேர்ந்தெடுப்பார்கள். இளவரசன் பிறந்தவுடன் அந்த பெண்களை மாளிகையில் வந்து வாழும்படி கேட்டுக்கொள்வார்கள். மூன்று பேரும் முறைப்படி மாறி மாறி இளவரசனுக்கு தாய்ப்பால் ஊட்டுவார்கள். அந்த குழந்தைக்கு சிறந்த ஊட்டம் கிடைக்கச் செய்வது இதற்கு ஒரு காரணம். இன்னொரு காரணம் - தன்னுடைய பிறப்பின் மூலத்தைப் பற்றி அந்த

குழந்தை குழம்பிப்போக வேண்டும் என்பதும் ஒரு காரணம். ஒரு அரசனுக்கு எந்த ஒட்டுதலும் இருக்கக்கூடாது, தன்னுடைய தாய் தந்தையிடம்கூட ஒட்டுதல் இருக்கக்கூடாது. அப்படி இல்லாவிட்டால், அவனால் நல்ல அரசனாக இருக்க முடியாது. அதனால்தான், ஒரு அரசனின் மகனுக்கு மூன்று பெண்கள் தாய்ப்பால் ஊட்ட வேண்டும் என்று சொல்லப்பட்டது.

என்னிடம் அடிக்கடி கேட்கப்படும் ஒரு கேள்வி - ஒருவர் போன பிறவியில் இருந்த அதே பாலினமாகவே இந்த முறையும் பிறப்பாரா? அப்படியிருக்க வேண்டிய அவசியமில்லை. இந்த விஷயத்தில் பல மனிதர்களோடு எனக்கு நேரடியான அனுபவம் இருக்கிறது. போன பிறவியில் இருந்ததுபோல் இல்லாமல், இந்த முறை இன்னொரு பாலினமாக வந்திருப்பவர்கள் என்னைச் சுற்றி இருக்கிறார்கள். உங்களுக்குள் எந்த விதமான ஆசையை உருவாக்கிக் கொள்கிறீர்கள் என்பதைப் பொருத்துத்தான், உங்களுடைய பாலினம் அல்லது வடிவம் நிர்ணயிக்கப்படுகிறது. ஒருவரின் கர்ம வாசனைகள் பெண்தன்மை மிக்கதாக இருந்தால், அவர்கள் உடலில் ஆண்தன்மை வாய்ந்தவராக ஆகிடும் போக்கு ஏற்படுகிறது. ஒருவரின் கர்ம வாசனைகள் ஆண்தன்மை மிக்கதாக இருந்தால், அவர்கள் உடலில் பெண்தன்மை வாய்ந்தவராக ஆகிடும் போக்கு ஏற்படுகிறது. இருமைகளின் சந்திப்பு ஏற்பட வேண்டும் அல்லவா, அதனால்தான். கர்ம வாசனைகள் அதிகப்படியான ஆண்தன்மை வாய்ந்ததாக இருந்து, ஆண்தன்மை வாய்ந்த உடலையே அடைய நேர்ந்தால், இவர் வழக்கத்துக்கு மாறானவராக இருந்திடுவார்.

## முன்ஜென்மங்களைத் தேடி...

ஆன்மீக வட்டங்களில், இந்த முன்ஜென்ம சம்பந்தங்களைப் பற்றிய கற்பனைகள் பெரிய அளவில் இருக்கும். நிச்சயமாக, நமது யோக மையத்தில்கூட பலரும், "நான் சத்குருவின் முந்தைய ஜென்மத்தில் அவருடன் இருந்தேன், அதற்கு முன்பாகவும் இருந்தேன், அதற்கு முந்தைய பிறவியிலும் அவருடன் இருந்தேன்," என்றெல்லாம் பேசிக்கொண்டிருக்க வாய்ப்பிருக்கிறது. தங்களுடைய முந்தைய பிறவியில் என்னோடு வாழ்ந்துவிட்டு இப்போதும் வந்திருப்பவர்கள் எல்லாம் தோல்வி அடைந்த மாணவர்கள்தான் என்று அடிக்கடி சொல்வேன். அப்படி வாழ்ந்ததை அவர்கள் ஒரு பெருமையாக தூக்கிக்கொண்டு திரியக்கூடாது என்பதற்காக அப்படிச் சொல்கிறேன். அப்போதும் என்னோடு இருந்து அந்த வாய்ப்பை தவறவிட்டீர்கள், என்னுடைய உயிரையும் செயலையும் வீணடித்தீர்கள், இப்போதும் எனக்கு தொல்லை கொடுக்க மறுபடியும் வந்துவிட்டீர்களே! இது ஒன்றும் நல்ல விஷயம் இல்லை.

கடந்த பிறவிகளைப் பற்றி தெரிந்துகொள்வது ஒருவரின் தற்போதைய உறவுகளில் இருக்கும் பிரச்சனைகளை சரிப்படுத்த உதவிடுமா? கடந்த காலத்து விஷயம் எதுவாக இருந்தாலும், அதோடு நீங்கள் தொடர்பு படுத்திக்கொள்வது - உங்களுடைய எண்ணம், உணர்வுகள், அனுபவங்கள், உறவுகள் ஆகியவற்றின் மூலமாகத்தான் - இந்த விதத்தில் மட்டும்தான். அது வேறு உடலோடு இருந்தாலும் சரி, இந்த உடலோடு இருந்தாலும் சரி, மேலே சொல்லப்பட்ட இந்த விதங்களில் மட்டும்தான் நினைவுகொள்கிறீர்கள். ஒருவேளை நாம் திரும்பிப் பார்த்து, போன பிறவியில் நீங்கள் எப்படி எல்லாம் எனக்கு தொல்லை கொடுத்தீர்கள் என்று பார்க்கலாம்; அதனால் இப்போது நான் உங்களுக்கு தொல்லை செய்கிறேன் என்பதையும் பார்க்கலாம். இதையெல்லாம் கண்டுபிடித்தோம் என்று வைத்துக்கொள்வோம். அதன்பிறகு நாம் என்ன செய்வோம்? நம்முடைய சச்சரவை இன்னொரு பிறவிக்கும் நீட்டிக்கலாம்! நிஜமாகத்தான்! நீங்கள் முற்பிறவியில் எனக்கு செய்த கொடுமைகளை எல்லாம் தெரிந்து கொண்டால், நான் விடுபட்டு போவேனா? அல்லது இந்த பிறவியில் உங்களுக்கு தொல்லை கொடுப்பதில் அதிக முனைப்புடன் இருப்பேனா?

வாழ்க்கை மிகவும் சிக்கலானது என்று சொல்கிறார்கள். இதில் சிக்கலான விஷயம் என்ன இருக்கிறது? உள்ளபடியே வாழ்க்கை என்பது சிக்கலானது கிடையாது. உலகத்தை குறிப்பிட்ட பாதையில் போகும்படி நகர்த்தவேண்டும் என்றால்தான் கொஞ்சம் சிக்கலாக இருக்க முடியும். நீங்கள் எந்த விதத்திலும் உலகத்தை நகர்த்த முயற்சிக்கவில்லை, உண்டு களிக்கும் விஷயங்களோடே திருப்தி அடைந்து விடுகிறீர்கள் என்றால், அதில் என்ன சிக்கல் இருக்கிறது? உங்களுடைய ஞாபகங்கள்தான் எல்லாவற்றையும் சிக்கலாக மாற்றுகிறது. நீங்களே பாருங்கள், ஒவ்வொரு விஷயத்திற்கும் மனஅழுத்தம் ஏற்பட்டு, வருத்தப்பட்டு, பாதிப்படைபவர்கள் இருக்கிறார்கள், இல்லையா? அவர்களுக்கு அல்சைமர் நோய் ஏற்பட்டு ஞாபகங்கள் எல்லாம் போய்விட்டது என்று வைத்துக்கொள்வோம். இப்போது சட்டென்று அவர்கள் எளிமையானவர்களாக மாறிவிடுகிறார்கள், இனிமையானவர்களாக மாறிவிடுகிறார்கள். வாழ்க்கை சும்மா தானாகவே நிகழ்கிறது.

இப்போது மூன்று அல்லது பத்து ஜென்மங்களின் ஞாபகங்கள் உங்களுக்குள் இறங்கிவிட்டது என்று வைத்துக்கொள்வோம். அநேகமாக உங்கள் மனத்தின் அமைப்பில், இதையெல்லாம் பிடித்துக்கொள்ளும் அளவிற்கு இடம் இருக்காது. அது விரிசல் ஏற்பட்டு நொறுங்கிப் போகலாம். என் அனுபவத்திலேயே, எனக்குள் ஏற்பட்ட ஞாபகங்களின் அளவால் மனம் குழம்பிப் போய்விட்டேன். இதைக் கையாள்வது அந்தளவுக்கு கஷ்டமானது. அவ்வளவு அனுபவபூர்வமான ஞாபகங்களை உள்ளெடுக்கும்

திறன் மனதுக்கு கிடையாது. அதற்கு தேவையான மன உறுதி என்னிடம் இல்லாமல் போயிருந்தால், அது என்னை நொறுக்கியிருக்கும். இதற்காக ஒருவிதத்தில் நீங்கள் ஏற்கனவே தயாராகியிருந்தாலே ஒழிய, அதை நீங்கள் சமாளிப்பதற்கு வாய்ப்பே இல்லை. அதனால்தான் நாம் சாதனா சாதனா சாதனா என்று சொல்லிக்கொண்டே இருக்கிறோம். சாதனா என்பது ஞாபகங்களை டவுன்லோட் செய்வதற்காக செய்யப்படுவதில்லை. ஆனால், இந்தப் பிறவியின் ஞாபகங்களையாவது குறிப்பிட்ட விதத்தில் வைத்திருக்க முடியும் - நீங்கள் அதிலிருந்து வேண்டியதை பார்த்து எடுத்துக்கொள்ள முடியும், மற்ற நேரங்களில் அது உங்களை தொடாதபடி வைத்திருக்க முடியும். எல்லா நேரங்களிலும் அது உங்கள் முகத்தின் மேல் விழுந்து கொண்டிருந்தால், அது எப்படி பயனுள்ளதாக இருக்கும்?

இப்போதைக்கு பெரும்பாலான மனிதர்களால் இந்த ஜென்மத்தில் நிகழ்ந்து கொண்டிருக்கும் விஷயங்களையே கையாள முடிவதில்லை. அப்படி இருக்கும்போது, அவர்கள் ஏன் முந்தைய ஜென்மங்களை தோண்டிப் பார்க்க விரும்பவேண்டும்? உங்கள் பக்கத்து வீட்டுக்காரரின் நாய்தான் போன ஜென்மத்தில் உங்களுடைய கணவராக இருந்தது என்று உணர்ந்து விட்டீர்கள் என்று வைத்துக்கொள்வோம். இப்போது நீங்கள் போய் அவருக்கு முத்தம் கொடுப்பீர்களா அல்லது அவர் மீது கற்களை வீசுவீர்களா என்று எனக்கு தெரியவில்லை! இரண்டுமே ஆபத்துதான், ஏனென்றால் அவருக்கு என்னவோ அந்த ஞாபகம் இருக்காதே! அது மட்டுமில்லை, அவர் மேல் கற்களை வீசுவதால் பக்கத்து வீட்டுக்காரருடன் பிரச்சனையில் மாட்டிக்கொள்வீர்கள். அவருக்கு போய் முத்தம் கொடுத்துவிட்டால் நாயுடன் பிரச்சனையில் மாட்டிக்கொள்வீர்கள். அதனால், எந்த விதத்திலும் இது உங்களுக்கு பாதுகாப்பானது கிடையாது. கடந்த காலம் உங்களுக்குள் திறந்து கொண்டது என்றால், அன்பு, வெறுப்பு, கோபம், நேசம் என்ற பல உணர்ச்சிகளும் ஏற்பட வாய்ப்பிருக்கிறது.

பத்து வருடங்களுக்கு முன்னால் நடந்த விஷயத்தைப் பற்றிகூட உங்களால் இப்போது பாதிப்படைய முடியும். இந்த நிலையில் நீங்கள் இருக்கும்போது, கடந்த பத்து ஜென்மங்களின் ஞாபகங்கள் எல்லாம் நினைவுக்கு வந்தால், அது உங்களுக்கு பைத்தியம் பிடிக்கும்படி செய்துவிடும். கடந்த பத்து ஜென்மங்கள் ஏன், இந்த ஜென்மத்தில் நடந்த விஷயங்களை எல்லாமே நீங்கள் நினைவில் வைத்திருந்தால் - உங்களுடைய எண்ணங்கள் உணர்வுகள், அனுபவங்கள், பத்து வயதாக இருந்தபோது யாரோ சொன்ன விஷயம், உங்கள் நண்பர் செய்த விஷயங்கள், உங்கள் ஆசிரியர் செய்த விஷயங்கள் - இதெல்லாம் இப்போதும் உங்கள் மனதில் ஓடிக் கொண்டிருந்தால், உங்களால் சாதாரண வாழ்க்கையை வாழ

முடிந்திடுமா? அந்த ஜென்மங்களில் இருந்த அன்பு, வெறுப்பு, கோபம், நேசம் என்ற எல்லா விஷயங்களும் இப்போது இருக்கும் வாழ்க்கையில் கொட்டியது என்றால் நீங்கள் பைத்தியம் பிடித்துப் போவீர்கள்.

அது மட்டுமில்லை, இந்த நான்கு விஷயங்கள் - அன்பு, வெறுப்பு, கோபம், நேசம் - இதில் இரண்டு விஷயங்களை - அன்பையும், நேசத்தையும் - நேர்மறையான விஷயங்களாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். நிஜத்தில் இந்த நான்குமே எதிர்மறையானவைதான். ஏனென்றால், இந்த நான்குமே கட்டாயத்தால்தான் ஏற்படுகின்றன. எனக்கு உங்களைப் பற்றி ஆழமான காழ்ப்புணர்ச்சி இருந்ததென்றால் - "உங்களை வெறுக்கிறேன், உங்களை வெறுக்கிறேன்," என்றபடியே இருந்தால் - இது நல்ல விஷயம் இல்லை என்று உங்களுக்கு புரிகிறது. அதேசமயம், தேவையில்லாமல் நான் உங்களுக்காக நேசம் வைத்திருந்தால் - "உங்களை நேசிக்கிறேன், உங்களை நேசிக்கிறேன்," என்றபடியே இருந்தால் - இதுவும் நல்ல விஷயமாக இருப்பதில்லை. ஒருவேளை, தெருவில் நாம் இரண்டு பேர் மட்டுமே நடந்துபோய்க் கொண்டிருக்கிறோம் என்று வைத்துக்கொள்வோம். எனக்கு உங்களைத் தெரியாது, உங்களுக்கும் என்னைத் தெரியாது. இப்போது, உங்களுக்காக நான் ஆழமான நேசத்தை வைத்திருக்கிறேன் என்றால், உங்களுக்கு அது பிடிக்குமா என்ன? உங்களைப் பற்றி நான் ஆழ்ந்த காழ்ப்புணர்ச்சியை வைத்திருந்தால்கூட, அதனால் உங்களுக்கு கவலை ஒன்றும் இருக்காது. "சரிதான் போய்யா, நீதான் காழ்ப்புணர்ச்சியில் எரிந்து போவாய். எனக்கு என்ன பிரச்சனை?" என்று நினைப்பீர்கள். அதேசமயம், உங்களுக்காக ஆழமான நேசம் வைத்திருந்தேன் என்றால் உங்களுக்கு அது பிடிக்காது.

அதனால், கேள்வி நேசத்தைப் பற்றியோ காழ்ப்புணர்ச்சியைப் பற்றியோ கிடையாது. அன்பு, வெறுப்பு ஆகிய இரண்டுமே கட்டாயத்தால் ஏற்படுகின்றன, அதுதான் பிரச்சனை. கட்டாயமாக ஏற்படும் அன்பு, நேசம், கோபம், வெறுப்பு ஆகிய எல்லாமே ஒரே அளவுக்கு பாதிப்பை தரக்கூடியவைதான், ஒரே அளவுக்கு சிக்கிப்போக வைப்பவைதான். வாழ்க்கையில் நிகழும் ஒவ்வொன்றுக்கும் உங்களுடைய பதில்செயல் விழிப்புணர்வுடன் நிகழவேண்டும், அப்படி இருக்க கற்றுக்கொள்ளுங்கள். உங்களுடைய பதில்கொடுக்கும் திறன் எல்லையற்றதாக இருக்க வேண்டும். எல்லாப் பக்கங்களிலும் உங்களால் பதில்கொடுக்க முடியும் என்றபடி இருக்கவேண்டும். "என்னுடைய பதில்செயல் இந்த விஷயத்துக்கு மட்டுமே, அந்த விஷயத்துக்கு என்னால் பதில்கொடுக்க முடியாது," என்ற நிலை உங்களுக்குள் இருக்கக்கூடாது. உங்களால் எந்த ஒரு விஷயத்துக்கும், எந்த ஒரு நிகழ்வுக்கும் பதில்கொடுக்க முடிகிறது - இப்படிப்பட்ட நிலைக்கு நீங்கள் வரும் வரை கடந்தகாலம்

என்பது ஒரு பிரச்சனையாகத்தான் இருக்கும், எதிர்காலம் என்பதும் பிரச்சனையாகத்தான் இருக்கும். இரண்டுமே உங்களுக்குள் திறந்துகொள்ளக் கூடாது. அப்படி திறந்துகொண்டால், அது தொல்லை தருவதாகத்தான் இருக்கும். கடந்த காலத்திலிருந்து தெரிந்துகொள்ளும் விஷயங்கள், இப்போதைய நிகழ்வுகளுக்கான ஒரு விளக்கமாக தோன்றலாம். ஆனால், உங்களுடைய முக்திக்கான பாதையில் அது ஒரு இடையூறாகவே இருக்கும், நீங்கள் சிக்கிப்போகும்படி செய்திடும்.

நாம் இதைப் புரிந்துகொள்வோம்: நான் பேசிக் கொண்டிருக்கும் இந்த முக்தி என்ற விஷயம், இந்துக்களின் கண்டுபிடிப்பு கிடையாது. முக்திதான் இந்த உயிரின் நோக்கமே! ஒரு சாதாரண உயிரினமாக இருக்கும் இது, இந்த பிரபஞ்சமாகவே மாற விரும்புகிறது. இந்தப் படைப்பில் இருக்கும் ஒரு உயிரினமாக இருப்பதற்கு பதிலாக, படைப்பு முழுவதுமே தானாகிட விரும்புகிறது. ஒன்றி ஐக்கியமாகிட விரும்புகிறது. இதுதான் முக்தி என்பது. இது இந்துக்கள் உருவாக்கிய கருத்து கிடையாது. இந்தியர்கள் உருவாக்கிய கருத்தும் கிடையாது. உயிர் என்பதே இப்படித்தான் இருக்கிறது. இந்த முக்தி பாதையில் இடையூறுகள் குறைந்தபட்சமாக இருக்கவேண்டும், இல்லையா? அந்த அடிப்படையில் பார்க்கும்போது, கட்டாயமாக ஏற்படும் அன்பு, கட்டாயமாக ஏற்படும் வெறுப்பு - இரண்டுமே இடையூறுகள்தான்.

இதை இன்னொரு விதமாகவும் நாம் பார்க்கலாம். இதையெல்லாம் கடந்த ஜென்மங்கள் என்றும் இந்த ஜென்மம் என்றும் அழைப்பதற்கு பதிலாக, ஞாபகங்களின் வெவ்வேறு பெட்டிகளாக இதைப் பார்க்கலாம். அவை அப்படித்தான் இருக்கின்றன. உங்களுடைய ஞாபகத்தில் ஒன்று இருப்பதால்தான், அது வெளியே வருகிறது, இல்லையா? அது ஒன்றும் அங்கே வானத்தில் மிதந்து கொண்டிருக்கவில்லையே! எல்லாம் உங்களுக்குள்தான் அமைந்திருக்கிறது. ஒருவேளை, இந்த பெட்டிகளெல்லாம் உடைந்து போகிறது என்று வைத்துக்கொள்வோம். திடீரென்று உங்களுடைய பரிணாம ஞாபகங்கள் திறந்துகொண்டது என்றால் இப்போது உங்களுடைய வாழ்வில் பெரிய களேபரமே ஏற்பட்டு போகும். அவ்வளவு தூரம் போக வேண்டாம். நாளை காலையில் எழுந்து கொள்ளும்போது, உங்களுக்குள் கடந்த மூன்று பிறவிகளின் ஞாபகங்கள் திறந்து கொண்டன, எல்லா ஞாபகமும் ஒன்றாகக் கலந்து போய்விட்டன என்று வைத்துக்கொள்வோம். இப்போதைக்கு, பத்து வருடங்களுக்கு முன்பாக நடந்ததெல்லாம் ஒரு பெட்டியில் இருக்கிறது, நேற்று நடந்தவை எல்லாம் இன்னொரு பெட்டியில் இருக்கிறது. அதனால், குறுகியகால ஞாபகம், நீண்டகால ஞாபகம் போன்ற விஷயங்களெல்லாம் நமக்கு இருக்கின்றன. சாதாரண வாழ்க்கையில், ஒரு ஜென்மத்திற்கு

முன்பாக நடந்ததெல்லாம் திரைபோட்டு மறைக்கப்பட்டிருக்கிறது. இப்போது இந்த மறைப்புத் திரை நொறுங்கிவிட்டது என்று வைத்துக்கொள்வோம் - ஒரு ஜென்மத்திற்கு முன்பாக நடந்ததெல்லாம் ஏதோ நேற்று நடந்ததுபோல் தோன்றுகிறது. போன பிறவியில் நீங்கள் வேறு ஆளாக இருந்தீர்கள் - ஒரு பெண்ணாக இருந்தீர்கள், இப்போது ஒரு ஆணாக இருக்கிறீர்கள் என்று வைத்துக்கொள்வோம். இப்போது காலையில் எழுந்து கொண்டவுடனே தவறான பாத்ரூமுக்குள் போய்விடுகிறீர்கள் - இங்கேயிருந்து ஆரம்பிக்கின்றன எல்லா பிரச்சனைகளும்! இதனால் பிரச்சனைகள்தான் ஏற்படும், இல்லையா? இதுபோன்று நிறைய விஷயங்கள் திறந்துகொள்ளும். இதனால் ஒருவருக்குள் ஏராளமான குழப்பமும் போராட்டமும் ஏற்படும். ஏனென்றால், எல்லாம் கையாள முடியாத அளவுக்கு அதிகப்படியாக இருக்கின்றன.

கடந்த ஜென்மங்களை எல்லாம் ஆராய்வதற்கான நோக்கம் என்ன? நீங்கள் பிரச்சனையின் காரணத்தை கண்டுபிடிக்க விரும்புகிறீர்களா அல்லது அதற்கு தீர்வுகாண விரும்புகிறீர்களா? அதுதான் என்னுடைய கேள்வி. தீர்வுக்கான வழிகளைத்தான் ஈஷா யோகா மூலம் எளிமையான விதத்தில் நாம் கற்றுக்கொடுக்கிறோம். அப்படி இருக்கும்போது, கடந்த ஜென்மங்களுக்குள் போய் தீர்வைத் தேடுகிறீர்களே என்பதுதான் என்னுடைய வருத்தம். தீர்வு என்பது இதற்குள்ளேயே இருக்கிறது. இதற்கு போதிய கவனம் செலுத்தினீர்கள் என்றால், இதுவே எல்லாவற்றையும் பார்த்துக்கொள்ளும். இதை நீங்கள் ஆழமாக புரிந்துகொள்ள வேண்டும் - நான்தான் பொறுப்பு, 100 சதவிகிதம் நான்தான் பொறுப்பு, பரிபூரணமாக நான்தான் பொறுப்பு என்பதை நீங்கள் உணரும்போது - இதுவே கடந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் எல்லாவற்றையும் பார்த்துக்கொள்கிறது. உங்களுடைய பொறுப்புணர்வுக்கு எல்லையே இல்லாதபோது - அதாவது உங்கள் பதில்கொடுக்கும் திறனுக்கு எல்லையே இல்லாதபோது - எந்த சூழ்நிலையிலும் அதற்கான பதில்செயல் எப்படி இருக்கவேண்டும் என்று உங்களுக்கு தெரிந்திருக்கும். அந்த சூழ்நிலை ஏற்படக் காரணம் எதுவாக இருந்தாலும், அது உங்களுக்கு ஒரு பொருட்டாகவே இருக்காது. சொல்லப்போனால் கடந்தகாலம், எதிர்காலம் ஆகிய இரண்டுமே உங்களுடைய அனுபவத்தில் திறந்துகொள்ளும். எல்லையில்லாத விதத்தில் பதில்கொடுக்கும் நிலையில் இருக்கும்போது, கடந்தகாலம் திறந்து கொண்டாலும், பத்துப் பிறவிகள் திறந்து கொண்டாலும் எந்த பிரச்சனையும் இருக்காது. எதிர்காலம் திறந்து கொண்டாலும் எந்த பிரச்சனையும் இருக்காது. ஆனால், உங்களுடைய பதில்செயல் பாரபட்சமாக விருப்பு-வெறுப்புக்கு உட்பட்டு இருக்கும் நிலையில், கடந்தகாலம் திறந்து கொண்டால் அது ஒருவிதமான பிரச்சனையை

ஏற்படுத்தும். எதிர்காலம் திறந்து கொண்டால் அது இன்னொரு விதமான பிரச்சனையை ஏற்படுத்தும்.

கடந்த ஜென்மங்களை ஆராய்வதற்காக உலகில் பல வேடிக்கையான விஷயங்களை செய்கிறார்கள் என்று எனக்கு தெரியும். அதெல்லாமே வெறும் அபத்தமான மனோதத்துவ முறைகள்தான். உண்மையிலேயே கடந்தகாலத்தில் இருந்து எதையாவது உணரவேண்டும் என்றால், நம் ஞாபகங்களை மறைத்திருக்கும் திரை விலகும்படி நம் விழிப்புணர்வை உயர்த்திக்கொள்வது அவசியம். மனதில் அடுக்கடுக்காக இருக்கும் ஞாபகங்கள் உங்களுடைய விழிப்புணர்வில் இல்லாமல் இருக்கின்றன - இதைத்தான் கடந்த ஜென்மம் என்று சொல்கிறீர்கள். விழிப்புணர்வு உயர்ந்த நிலைக்கு வரும்படி அதை வளர்த்துக் கொண்டால், விழிப்புணர்வில் இல்லாமல் உங்களுக்குள் இருந்து உங்களை ஆட்டிப்படைக்கும் இந்த ஞாபகங்களின் அடுக்குகளை உடைத்திடலாம், அதை கரைத்துவிடலாம்.

ஒரு சமயத்தில் இப்படிப்பட்ட விஷயங்களை சம்யமா வகுப்பில் செய்துகொண்டிருந்தோம். நீங்கள் உட்கார்ந்து தியானம் செய்து கொண்டிருப்பீர்கள். கொஞ்ச நேரம் கழித்து, நீங்கள் முழு விழிப்புணர்வுடன் இருக்கும் நிலையில், உங்களுடைய உடல் திடீரென்று ஒரு பாம்பைப் போல தரையில் நெளிய ஆரம்பிக்கும். இப்படி நடப்பது உங்களுடைய கவனத்தில் இருக்கிறது, அதை நிறுத்திட வேண்டும் என்றும் நினைப்பீர்கள். ஆனால் உடலோ பாம்பைப் போல நெளிந்துகொண்டே இருக்கும். தியானத்திலிருந்து வெளியே வந்துவிட்டால், எல்லாம் வழக்கம்போல சரியாக கச்சிதமாகவே இருக்கும். மறுபடியும் தியானத்தில் உட்கார்ந்தால், மறுபடியும் உடல் தரையில் நெளிந்திட ஆரம்பிக்கும். அதன் பிறகு ஒரு பறவையைப்போல் தத்தித்தத்தி போகலாம், ஒரு நாயைப்போல் ஆகலாம் அல்லது ஒரு புலியைப் போலவோ, வேறு ஏதாவதாகவோ ஆகலாம் - இது பல வடிவங்களை எடுத்திடலாம். இப்போதெல்லாம் இதுபோன்ற விஷயங்கள் பெரும்பாலும் நடக்காதபடி வகுப்பை அமைத்திருக்கிறோம். எப்போதாவது ஒருமுறைதான் யாரோ ஒருவர் இந்த தடுப்புகளை தாண்டிப் போய் பார்ப்பது நிகழலாம். பரிணாம ஞாபகங்களை நாம் திறந்து விடுவதால்தான் இதுபோன்ற விஷயங்கள் நிகழ்கின்றன. அவை எல்லாமே உடலின் மூலமாக வெளிப்பட்டுக் கொண்டிருந்தன. சிலபேருக்கு இந்த ஞாபகங்கள் மனரீதியாக நினைவில் வந்துவிட்டன, அதற்குப் பிறகு அதை அகற்றுவதற்கு நாம் சில விஷயங்களை செய்ய வேண்டியிருந்தது. உதாரணமாக, தெரியாத்தனமாக யாருக்காவது தான் வேறொரு சமயத்தில் ஒரு நரியாகவோ ஓநாயாகவோ இருந்ததெல்லாம் மேல்மனத்தின் நினைவுக்கு வந்துவிட்டது என்று வைத்துக்கொள்வோம்.

இப்போது அவர் காலையில் எழுந்தவுடன் பலவிதமாக ஊளையிட ஆரம்பித்துவிட்டால், அதையெல்லாம் அவரால் சமாளிக்க முடியுமா என்ன?

இதெல்லாம் ஏன் நடக்கிறது? விழிப்புணர்வில் இல்லாத ஆழ்மனத்தின் அடுக்குகளில் பல பரிமாணங்கள் இருக்கின்றன. அதெல்லாம் உங்களுக்கு எட்டும்படியாக இல்லாவிட்டாலும், நீங்கள் செய்யும் ஒவ்வொரு விஷயத்திலும் அவற்றின் தாக்கம் இருக்கிறது. சில தியானங்களில் ஈடுபடும்போது மிக உயர்ந்த விழிப்புணர்வு நிலைகள் ஏற்படுகின்றன. இந்த நிலையில், விழிப்புணர்வில் இல்லாத ஆழ்மன அடுக்குகளை நம் விழிப்புணர்வுக்குள் கொண்டு வரமுடியும் - அது நம் மனத்தின் நினைவுகளில் வராமல், சக்தி நிலையில் மட்டும் ஏற்படும் அனுபவமாக உணர முடியும் - அப்போது அதையெல்லாம் கரைத்துவிட முடியும். இதன்மூலம் உங்களுக்குள் மிகப்பெரிய விடுதலையை உருவாக்கிக் கொள்ளலாம். இப்படிச் செய்வதில் ஒரு அர்த்தம் இருக்கிறது. ஆனால், அந்த ஞாபகங்களை வெறும் மனரீதியான நினைவுகளாக அறிந்து கொள்வதில் எந்தப் பயனும் கிடையாது. அப்படி செய்வதால், உங்கள் வாழ்க்கையில் குழப்பமும் சிக்கலும்தான் ஏற்படும்.

உங்களுடைய பதில்கொடுக்கும் திறன் எல்லையற்றதாக, பாரபட்சம் இல்லாததாக இருந்தால் மட்டுமே, இதையெல்லாம் சமாளிக்கும் திறமை இருக்கும். விருப்பு-வெறுப்புகளின் அடிப்படையில் தேர்ந்தெடுத்து, வாழ்க்கையில் சில விஷயங்களுக்கு மட்டும் பதில் தருபவராக நீங்கள் இருந்தால், அப்போது உங்களுடைய கர்மா பல மடங்காக அதிகரிக்கும். பத்து ஜென்மங்களுக்கு முன் நான் உங்களுக்கு மிகவும் நேசமானவராக இருந்தேன் என்று வைத்துக்கொள்வோம். நீங்கள் அதை உணர்ந்துவிட்டீர்கள் என்றும் வைத்துக்கொள்வோம். இப்போது என்னைப் பற்றி உங்களுடைய பதில்செயல் ஒருவிதமாக இருக்கும். பல ஜென்மங்களுக்கு முன் நான் உங்களுடைய எதிரியாக இருந்தேன் என்று நீங்கள் தெரிந்துகொண்டால், என்னைப் பற்றி உங்களுடைய பதில்செயல் வேறுவிதமாக மாறிவிடும். உங்களால் அதை தவிர்க்கவே முடியாது. ஏனென்றால், உங்களுடைய பதில்கொடுக்கும் திறன் எல்லை கொண்டதாக இருக்கிறது. உங்களுடைய பதில்கொடுக்கும் திறன் எல்லைக்குள் இருக்கும்போது, உங்களுடைய ஞாபகம் என்பது தொல்லை தருவதாக இருந்திடும். ஞாபகங்கள் அதிகமாக திறந்துகொள்ளும் போது, தொல்லையின் அளவும் அதிகரிக்கும். உங்களுக்குள் அப்படிப்பட்ட தடைகள் எதுவும் இல்லாதபோது, சூழ்நிலைக்கு தேவைப்படும் விதத்தில் உங்களால் பதில்கொடுக்க முடியும். இந்தத் தன்மையில் இருக்கும்போது, பத்து பிறவிகளுக்கு முன்பே என்னை அறிந்தது உங்கள் நினைவுக்கு

வந்தாலும், அது எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்தாது. ஏனென்றால், நீங்கள் எப்படியும் ஒரே விதத்தில்தான் இருப்பீர்கள். உங்களுடைய பதில்செயல் அதற்கேற்றபடிதான் இருக்கும். இல்லாவிட்டால், கடந்தகாலம் உங்களுக்குள் திறந்துகொள்ளும்போது, உங்கள் கர்மாவை பல மடங்காக அதிகரித்துக்கொள்வீர்கள், அவ்வளவுதான்.

## ஹிட்லரின் மறுபிறப்பு

சில சமயம் இப்படிப்பட்ட கேள்வியையும் நான் சந்தித்திருக்கிறேன்: ஹிட்லர் கொடூரமான மனிதனாக வாழ்ந்தார். இரண்டாம் உலகப் போரின் கொடூரங்களுக்கும், லட்சக்கணக்கான மனிதர்களின் மரணத்திற்கும் காரணமாக இருந்தவர் அவர். அவருடைய மறுபிறப்பு என்னவாக இருக்கும்? அவர் ஒரு மிருகமாக பிறப்பாறா? காந்தியின் மறுஜென்மம் என்னவாக இருக்கும்? அவர் பெரிய பணக்காரராக, பிரபலமானவராக, புகழுடையவராக இருப்பாரா? இதை அடிப்படையாகக் கொண்டு மறுபிறவி அமைந்திடும் முறையை புரிந்துகொள்ளலாம் என்று நினைக்கிறார்கள்.

முதலில், எல்லோருக்குமே மறுபிறப்பு உண்டு என்று உங்களுக்கு யார் சொன்னது? அது மட்டுமில்லை, அவர்களுடைய வாழ்க்கையைப் பற்றி உங்களுக்கு எல்லாம் தெரியும் என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால், உலகம் அவர்களைத் தெரிந்துகொண்ட விதத்தில்தான் தங்களுக்குள் அவர்கள் இருந்தார்கள் என்று சொல்ல முடியாது. அப்படி இருக்கவேண்டிய அவசியமில்லை. அவர்கள் தங்களுக்குள் உயிர்ரீதியாக எப்படி இருந்தார்கள் என்பது மட்டும்தான் பொருள்படும். நீங்கள் ஒரு மகானாக போற்றப்பட்டீர்களா அல்லது கொடுங்கோலனாக நிந்திக்கபட்டீர்களா என்பதெல்லாம் உயிருக்கு ஒரு பொருட்டாகவே இருப்பதில்லை. அதனால், மரணத்திற்குப் பிறகு நிகழ்வதும் அதைப் பொருத்து அமைவதில்லை.

உங்களுடைய சமூகத்தில் வேண்டுமானால் கொடுங்கோலன் என்பவர் தீயவராகவும், மகான் என்பவர் உயர்ந்தவராகவும் பார்க்கப்படலாம். ஆனால், உயிர்ரீதியாக அது தலைகீழாக இருந்திடவும் வாய்ப்பிருக்கிறது. அது அப்படித்தான் இருக்கிறது என்று நான் சொல்லவில்லை. ஆனால் அதற்கும் சாத்தியம் இருக்கிறது என்று சொல்கிறேன். உண்மையில் இது தலைகீழாக இருக்கவும் வாய்ப்பிருக்கிறது. ஏனென்றால், அவர்கள் தங்களுக்குள் எந்தளவுக்கு கொடுமையை அனுபவித்தார்கள் என்று நமக்கு தெரியாது, இல்லையா? தன்னைச் சுற்றி எல்லோரையும் கொடுமைப்படுத்திய ஒரு மனிதன், தனக்குள் நலமாக வாழ்ந்திருக்கலாம்

- நிச்சயமாக அதற்கு சாத்தியம் இருக்கிறது. அதேசமயம், தன்னைச் சுற்றி எல்லோருக்கும் நன்மையே செய்த மனிதன் தன்னையே கொடுமைப்படுத்திக் கொண்டிருக்கலாம் - அந்த சாத்தியமும் நிச்சயம் இருக்கிறது. ஆனால், உயிரின் அடிப்படையில் வாழ்க்கை எந்தளவுக்கு வித்தியாசமாக இருக்கமுடியும் என்பதை இது காட்டுகிறது. நீங்களும் சமுதாயமும் ஒருவிதமாக புரிந்துகொண்டிருக்கலாம். உயிர்ரீதியாகவோ அது முற்றிலும் வித்தியாசமாக இருக்கலாம். மறுஜென்மம் என்பது சமூக பார்வையைப் பொருத்து அமைவதில்லையே!

சரி, மனிதனாக இருக்கும் ஒருவர் அடுத்த பிறவியில் ஒரு மிருகமாக வந்திடும் வாய்ப்பிருக்கிறதா? மனிதர்களுக்கு சிலவிதமான ஆசைகளும், ஏக்கங்களும் இருக்கின்றன. இந்த ஆசைதான் கர்மாவாக மாறுகிறது. வாழ்க்கையைப் பற்றி ஒருவருக்கு இருக்கும் மனப்பான்மை, இச்சைதான் அது. அடிப்படையில், இதை ஆசை என்று அழைக்கலாம். இப்போது உங்களுக்கு சில நிறைவேறாத ஆசைகள் இருக்கின்றன என்று வைத்துக்கொள்வோம். உங்களுக்கு நூறு கோடி ரூபாய் சேர்க்கவேண்டும் என்ற ஆசை இருந்தது என்று வைத்துக்கொள்வோம். ஆனால், அதை சம்பாதிப்பதற்கான மூளை உங்களுக்கு இல்லை. அதேசமயம், ஒரு வங்கியை கொள்ளை அடிக்கும் தைரியமும் திறமையும் உங்களுக்கு இல்லை. நீங்கள் அப்படிப்பட்டவர் இல்லை. இப்போது, உங்களுக்கு பத்து ரூபாய் கிடைத்தால், அதில் ஐந்து ரூபாயை சேமித்து வைப்பீர்கள். நீங்கள் பட்டினி கிடப்பீர்கள் - சேமிக்க வேண்டும், சேமிக்க வேண்டும், சேமிக்க வேண்டும் என்பதற்காக - எல்லாவிதமான சிரமத்தையும் அனுபவிப்பீர்கள். இப்படி சேமித்து சேமித்து, நீங்கள் இறந்துபோவதற்குள் சில லட்சங்களை சேர்த்துவிட்டீர்கள் என்று வைத்துக்கொள்வோம். இப்போது, இன்னும் அதிகமாக சேர்த்தாக வேண்டும் என்ற பெரிய ஏக்கம் உங்களுக்குள் இருக்கிறது. ஆனால், அதற்கு முன்பே நீங்கள் இறக்கிறீர்கள், அந்த தீராத ஆசையோடே இறக்கிறீர்கள். இப்போது, "நீங்கள் சேர்க்க விரும்பியது என்ன?" என்றெல்லாம் உங்களுடைய கர்மாவுக்கு புரியாது - அது பணமா அல்லது வெறும் கற்களா - அதெல்லாம் கர்மாவுக்கு புரியாது. தான் ஏராளமாக சேர்க்க வேண்டும் என்பது மட்டும்தான் கர்மாவுக்கு புரிகிறது. தான் சேகரிக்கும் குப்பை என்ன என்பது அதற்கு ஒரு பொருட்டாக இருப்பதில்லை. அதற்கு பாகுபடுத்திப் பார்க்கும் திறன் கிடையாது. உங்களுடைய மரபணுக்களை போன்றுதான் அது இருக்கிறது. உடலளவில் இருக்கும் மரபணுவாக இல்லை, சூட்சுமமான மரபணுபோல இருக்கிறது. நீங்கள் ஏராளமாக சேர்த்துவைக்க விரும்புகிறீர்கள் என்பது மட்டும்தான் அதற்கு புரிகிறது. அதனால் அடுத்தப் பிறவியில், இந்த கர்மா இப்படி முடிவுசெய்யலாம்:

"ஓஹோ! என்னுடைய எஜமானருக்கு ஏராளமாக சேர்த்து வைக்க வேண்டும் என்றுதான் ஆசை. இப்படி சேமிக்க உகந்ததாக இருப்பது எது? ஒருவேளை நான் ஒரு எறும்பாகவோ, தேனீயாகவோ ஆகிடலாம்!" என்று முடிவுசெய்யும். நீங்கள் அதுவாகவே ஆகிறீர்களோ என்னவோ! - அது நமக்குத் தெரியாது. நீங்கள் என்னவோ தேனை சேகரிப்பீர்கள், ஆனால் அதை வேறு யாரோ சாப்பிடுவார்கள்.

உங்களுக்குள் ஒரு குறிப்பிட்ட தன்மை ஆதிக்கம் மிக்கதாக இருந்தால், அந்தத் தன்மையை நிறைவேற்றிட உகந்ததாக இருக்கும் உடலையும், சூழலையும் உங்களுடைய கர்மா தேடிப் போகும். ஒருவேளை உங்களுக்கு - சாப்பிட வேண்டும், சாப்பிட வேண்டும், சாப்பிட வேண்டும் - என்றபடியே இருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். உங்களுடைய சாப்பாட்டு ஆசை நிறைவேறாமல், மரணப் படுக்கையில் கூட உணவைப் பற்றியே நினைத்துக்கொண்டு இறந்துபோனீர்கள் என்று வைத்துக்கொள்வோம். அடுத்தமுறை நீங்கள் நன்றாக சாப்பிடும்படி, யார் வீட்டிலாவது ஒரு செல்லப் பன்றியாக வர வாய்ப்பிருக்கிறது. ஒரு பன்றியாக வருவதென்றால், அது ஒரு தண்டனை என்று நினைக்கிறார்கள். இது உங்களுக்கு தண்டனை கிடையாது. தண்டனை, பரிசு என்ற விதத்தில் எல்லாம் இயற்கை யோசிப்பதில்லை. உங்களுடைய கர்ம வாசனைகளுக்கு ஏற்றபடி, உங்களுக்குள் நிறைவேறாமல் இருப்பது என்னவோ, அந்த வாசனைகள் நிறைவேறிட பொருத்தமான உடலை பெறுகிறீர்கள், அவ்வளவுதான். அது மிருக வடிவத்தில்தான் இருக்கவேண்டும் என்ற அவசியமில்லை. அது நிறைவேறும்படி அமைந்திருக்கும் சூழ்நிலையையும், அதற்கேற்ற மனித வடிவத்தையும்கூட அது தேர்ந்தெடுக்க வாய்ப்பிருக்கிறது. ஆனால், அது எந்த விதமாகவும் அமைந்திடலாம்.

இது "பரமபதம்" விளையாட்டைப் போலத்தான் இருக்கிறது. நீங்கள் படிப்படியாக முன்னேறிப் போவீர்கள். சில சமயம் சில படிகளை தாண்டி குதித்தும் போகிறீர்கள். சில சமயம் ஏராளமான படிகளை தாண்டியும் போகிறீர்கள். சில சமயம் கீழே விழுவீர்கள். ஒரு ஏணியின் மேல் ஏறுவீர்கள். அதே சமயம், அந்த பாம்புகள் இருக்கும் வரை அவை உங்களை விழுங்கி மறுபடியும் முதல் கட்டத்திற்கே கொண்டு வரும் வாய்ப்பும் இருக்கிறது. சில நாட்களுக்கு நீங்கள் மேலே ஏறுகிறீர்கள், பிறகு மறுபடியும் கீழே போகிறீர்கள். இது இப்படியே போய்க் கொண்டிருக்கிறது. நீங்கள் ஆன்மீகப் பாதையில் ஈடுபடும்போது, அனைத்து பாம்புகளையும் அகற்றிடும் கருவிகளை உங்களுக்கு தருகிறோம். நீங்கள் முழுமையான பொறுப்பை ஏற்றுக்கொள்ளும் போது, உங்களுடைய பலகையில் இனி எந்தப் பாம்பும் இருக்காது. அதன்பிறகு, உங்களால் இனி எந்த கர்மாவையும் அதிகரிக்க முடியாது; அது முடிந்துபோகிறது.

உங்களுடைய கவனம் முழுவதையும் உங்கள் மேல் செலுத்தும்போது, இங்கே நிகழும் ஒவ்வொன்றுக்கும் மூலமாக இருப்பது நீங்கள்தான் என்பதை உணர்வீர்கள். இந்த விழிப்புணர்வு உங்களுக்குள் வந்தவுடன், உங்களால் இன்னும் அதிகமான கர்மாவை உருவாக்க முடியாது; அது முடிந்து போய்விட்டது. ஏற்கனவே சேர்த்து வைத்திருக்கும் கர்மாவை மட்டும்தான் இப்போது நீங்கள் கையாள வேண்டியிருக்கும். அது மிகவும் எளிமையானதுதான். இல்லாவிட்டால், நீங்கள் ஒரு பக்கத்தில் காலிசெய்து கொண்டிருப்பீர்கள், இன்னொரு பக்கத்திலிருந்து அதை நிரப்பிக் கொண்டிருப்பீர்கள். இதற்கு ஒரு முடிவே இருக்காது. அதனால், உங்களுடைய குறிக்கோளில் நிலையான கவனம் வைக்கவேண்டும், எல்லைகளுக்கு அப்பாற்பட்டதுக்காக ஆசைப்பட வேண்டும். உங்களைப் பற்றி என்ன செய்வது என்றே புரியாமல் இயற்கை குழம்பிப் போகும்படி செய்வதற்கு இதுதான் மிகச் சிறந்த வழி.

உங்களைப் பற்றி என்ன செய்வதென்று இயற்கைக்கு புரியாத நிலை உங்களுக்கு சாதகமானதுதான். அதை பயன்படுத்தி நீங்கள் உங்கள் விஷயங்களை எளிதாக கரைத்துக்கொள்ளலாம். உங்களைப் பற்றி என்ன செய்வது என்று இயற்கைக்கு தெரிந்திருக்கும்போது, அது உங்களை இந்த அறைக்குள்ளோ, அந்த அறைக்குள்ளோ போடுகிறது - ஆண்களின் அறை, பெண்களின் அறை அல்லது பன்றிகளின் அறை, கரப்பான்பூச்சிகளின் அறை - இப்படி ஏதோ ஒரு அறைக்குள் உங்களை போடுகிறது. இந்த உடல் என்பது ஒரு அறை, அவ்வளவுதான். நீங்கள் இதற்கும் அதற்கும் அப்பாற்பட்ட ஒன்றுக்கான ஏக்கத்தை உருவாக்கிக்கொள்ள வேண்டும். அந்த ஏக்கத்தை தொடர்ச்சியாக வைத்திருக்கும்போது, உங்களைப் பற்றி என்ன செய்வது என்று இயற்கைக்கு புரியாமல் போகும். அப்போது இயற்கையால் உங்களை இந்த வழியிலும் அந்த வழியிலும் தள்ள முடியாது. உங்களைப் பற்றி எந்த முடிவையும் எடுக்க முடியாது. மனதில் ஏற்படுத்திக்கொள்ளும் சமநிலையின் முக்கியத்துவம் இதுதான்.

## ஜென்ம ஜென்மமாக தொடருமா கணவன்-மனைவி உறவு?

ஒரு கணவனும் மனைவியும் தங்கள் வாழ்க்கையின் பெரும்பாலான பகுதியை சேர்ந்தே கழிக்கிறார்கள். மற்ற உறவுகளை விட, இந்த உறவில்தான் அதிகமான விஷயங்களை தங்களுக்குள் பகிர்ந்துகொள்கிறார்கள். பெரும்பாலானவர்களுக்கு, கணவன்-மனைவி உறவுதான் மனித உறவுகளிலேயே ஆழமானதாக இருக்கிறது.

அதனால்தான், மரணத்திற்கும் அப்பால் ஏதாவது நீடிக்கும் என்றால், வாழ்க்கையின் அடுத்த கட்டத்திற்கும் ஏதாவது தொடரும் என்றால், அதற்கு மிகவும் தகுந்தது இந்த உறவுதான் என்று பலரும் எதிர்பார்க்கிறார்கள். "திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகின்றன," என்ற வழக்கு உருவாகிட ஓரளவுக்கு இதுவும் ஒரு காரணமாக இருக்கிறது. ஆனால், நிஜத்தில் இந்த விஷயம் உண்மையானதா? கணவனும் மனைவியும் அடுத்த பிறவியிலும் இணைவார்களா?

இன்றெல்லாம் மேற்கத்திய நாடுகளில், மனிதர்கள் தங்களுடைய ஆத்மகாதலர் யார் என்று விடாப்பிடியாக தேடிக்கொண்டிருக்கிறார்கள். பல திருமணங்களை செய்துகொண்ட பிறகும், அவர்கள் இன்னும் தேடிக்கொண்டுதான் இருக்கிறார்கள்! இந்தியாவில் இருப்பவர்களோ, திருமணம் செய்துகொண்டவரோடு போன பிறவியிலும் இதே உறவு இருந்ததா என்று தெரிந்துகொள்ள விரும்புகிறார்கள். ஆனால் உண்மையில் அவர்கள் கேட்பது என்னவென்றால், "உன்னை போய் எப்படி திருமணம் செய்துகொண்டேன்?" என்றுதான் கேட்கிறார்கள். அப்படிப்பட்ட கேள்வி உங்களுக்கு வந்தால், உங்களுக்குள் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று நீங்களே பார்த்துக்கொள்வது அவசியம். திருமணமாகி பல வருடங்களுக்கு பிறகும், "உன்னைப் போய் எப்படி திருமணம் செய்துகொண்டேன்?" என்று யோசித்துக் கொண்டிருந்தால் - நீங்கள் ஆராயவேண்டியது உங்களுடைய முந்தைய வாழ்க்கைகளை கிடையாது - இப்போது வாழ்ந்து கொண்டிருக்கும் வாழ்க்கையைத்தான் நன்றாக கவனிக்கவேண்டிய அவசியம் இருக்கிறது. 1970களிலும், 80களிலும் வந்த சினிமாக்கள்தான் இந்தக் கருத்தை பெரிதாக விளம்பரப்படுத்தின என்று நினைக்கிறேன் - "ஜென்ம ஜென்மமாக வந்த துணையே" என்றெல்லாம் பாடுவார்கள், இல்லையா? இன்றைய தலைமுறைக்கு இது அவ்வளவு பெரிய பிரச்சனையாக இருப்பதில்லை. இன்றைய படங்களில், வெறும் உறவுகளைப் பற்றியும், அந்த உறவு முடிந்து போகும் எக்ஸ்பைரி டேட் பற்றியெல்லாம்தான் யோசிக்கிறார்கள். வியாபாரத்திற்காக எடுக்கப்படும் சினிமாக்கள்தான் உங்களுடைய உண்மைக்கான தேடலை வழிநடத்துகிறது என்றால், இப்படிப்பட்ட விஷயங்கள் உங்களுக்கு ஏற்படலாம்தான்.

கணவனும் மனைவியும் ஏழு ஜென்மங்களுக்கும் தொடர்ந்து இணைந்தே இருப்பார்கள் என்று யாரோ எங்கேயோ சொல்லிவிட்டார் - அதனால் இப்படிப்பட்ட நம்பிக்கை வந்திருக்கலாம். இது உண்மைதான் என்று நான் சொல்லிவிட்டால் பெரும்பாலான மனிதர்கள் திருமணமே செய்துகொள்ள மாட்டார்களோ என்னவோ! அதேசமயம், இதற்கான சாத்தியத்தை மறுப்பதும் சரியாக இருக்காது. அவர்களின் திருமணம்

குறிப்பிட்ட விதத்தில் செய்யப்பட்டிருந்தால், தம்பதியர்கள் மீண்டும் சேர்ந்து வருவது சாத்தியமான ஒரு விஷயம்தான். அவர்களுக்கு திருமணம் செய்து வைத்தவர், அந்தளவுக்கு சக்திமிக்க விதத்தில் அந்தப் பந்தத்தை உருவாக்கியிருக்க வேண்டும் - முக்திக்கு வழிவகுக்கும் விதத்தில் அந்த இரண்டு உயிர்களையும் ஒன்றாக பிணைத்திருக்க வேண்டும் - அப்போது இதற்கான சாத்தியம் இருக்கிறது. ஆனால் இது மிகவும் அபூர்வமான ஒன்றுதான்.

இன்றைக்கோ, தங்களுடைய பந்தத்தை விடாமல் பிடித்துக்கொள்ளவே அவர்களுக்கு ஒரு விசேஷ காரணம் தேவைப்படுகிறது. அதனால்தான் முன்ஜென்ம உறவைப் பற்றி தெரிந்துகொள்ள விரும்புகிறார்கள். நாம் பல பிறவிகளாக சேர்ந்தே சிக்கிக் கிடக்கிறோம் என்ற நம்பிக்கையை ஏற்படுத்திக் கொள்வதுதான், இன்னொரு மனிதரை பிடித்துக்கொள்ளும் ஒரே வழியாக அவர்களுக்கு இருக்கிறது - இப்படிப்பட்ட விதத்தில் வாழ்வது கொடுமையானது. இதுபோன்ற கொடூரங்களை உங்கள் வாழ்க்கையில் உருவாக்கிக் கொள்ளாதீர்கள். "நான் உன்னுடன் இருக்க விரும்புகிறேன், அதனால்தான் இப்போது உன்னோடு இருக்கிறேன்" - இது ஒருவருடன் இருப்பதற்கு மிகவும் அழகான வழி, இல்லையா? அது மட்டுமில்லை, மூன்று ஜென்மங்களாக நீங்கள் சேர்ந்தே இருந்திருந்தால், நீங்கள் பிரிவதற்கு இதுதான் சரியான வாய்ப்போ என்னவோ! இதுபோன்ற கேள்விகளை கேட்பவர்கள் எப்போதும் இருக்கிறார்கள். அவர்கள் என்னிடம், "சத்குரு, உங்களுடைய முந்தைய பிறவியில் நான் உங்களோடு இருந்தேனா?" என்பார்கள். எந்த அடிப்படையில் இப்படி கேட்கிறார்கள் என்று தெரியவில்லை - நான் போன பிறவியிலேயே உங்களைப் பார்த்திருந்தால், திரும்பவும் உங்கள் முன் வருவேனா என்ன?

"நேற்று என்ன நடந்தது?" என்பதால் எந்த பயனும் கிடையாது. ஆனால் இப்போதோ, "என்ன நடந்திருக்கக் கூடும்?" என்பதைப் பற்றி ஒரு பயனை உருவாக்க முயற்சிக்கிறீர்கள். இந்த பழைய ஞாபகங்கள் மூலம் நீங்கள் முடக்கப்பட்டுத்தான் போகிறீர்கள். ஆழமாக ஊடுருவும் கருவியாக உங்கள் மனத்தைப் பயன்படுத்த இது ஒரு தடையாக அமைகிறது. வாழ்க்கையின் பரிமாணங்களை திறக்கும் கருவியாக உங்கள் மனதை பயன்படுத்த இது ஒரு தடையாக அமைகிறது. அந்த ஒருவிதத்தில் மட்டும்தான் உங்கள் கணவன் அல்லது மனைவியோடு நீங்கள் தொடர்புபடுத்த முடியும் என்றால் - உறவு கொள்வதற்கான பரிதாபமான வழி அல்லவா இது! எதிரில் நிற்கும் அந்த மனிதர் இப்போது என்னவாக இருக்கிறார் என்பதில் மதிப்பைக் காண்பது அவசியம். அவர் வேறு எங்கேயோ என்னவாக இருந்தார் என்பது இப்போது முக்கியமில்லை.

இன்றைய நவீன சமூகங்களில், "நீங்கள் இப்போது என்னவாக இருக்கிறீர்கள்," என்பதற்காகத்தான் உங்களை மதிக்கிறார்கள். உங்களுடைய அப்பா என்னவாக இருந்தார் என்பதைப் பொருத்து உங்களை மதிப்பிடுவதில்லை. இது ஒரு மகத்தான சாதனைதான். ஜமீந்தார் கால வாழ்க்கை முறைகளிலிருந்து விலகி, நவீன சமுதாயத்தில் ஏற்பட்டிருக்கும் இந்த மாற்றம் மகத்தானதுதான். இந்தியாவில், ஐம்பதில் இருந்து நூறு வருடங்களுக்கு முன்பு பார்த்தால், உங்கள் முகத்தைப் பார்த்து நீங்கள் யார் என்று யாரும் கேட்கமாட்டார்கள். உங்களுடைய அப்பா யார் என்றுதான் கேட்பார்கள். இப்போது அது மிகப்பெரிய அளவில் மாறியிருக்கிறது. நாம் கொஞ்சம் தாறுமாறாகத்தான் இருக்கிறோம். அப்படி இருந்தாலும், இது மிகவும் முக்கியமான ஒரு மாற்றமாகத்தான் இருக்கிறது.

உங்களுடைய அப்பா யார் என்று கேட்பதைப் போலத்தான், முன் ஜென்மத்தில் நீங்கள் என்னவாக இருந்தீர்கள் என்று கேட்பதும். இப்போது நீங்கள் என்னவாக இருக்கிறீர்கள், உங்கள் வாழ்க்கையை எப்படி உருவாக்கிக் கொண்டிருக்கிறீர்கள் என்பதுதான் மிகவும் முக்கியமான விஷயம். அதனால், உங்கள் நேரத்தையும் வாழ்க்கையையும் கடந்த காலத்தை தோண்டிப் பார்ப்பதில் வீணடிக்க வேண்டாம். சில சமயம் ஆன்மீக காரணங்களுக்காக இது தேவைப்படலாம் அல்லது முன்ஜென்ம தொடர்பு கொண்டவர்கள் சிலர் ஈடுபட்டால் மட்டுமே செய்யப்படக்கூடிய ஒரு பணி ஏதும் இருக்கலாம். அப்படிப்பட்ட சூழ்நிலைகளை தவிர, மற்றபடி இந்தப் பரிமாணங்களை திறக்கவேக் கூடாது. பெரும்பாலானவர்களுக்கு, இந்தப் பிறவியில் இருக்கும் ஞாபகத்தையும், எண்ணங்களையும், உணர்வுகளையும் கையாள்வதே முடியாத காரியமாக இருக்கிறது. அப்படி இருக்கும்போது, பல பிறவிகளை திறந்து பார்ப்பது ஒருபோதும் நன்மையை ஏற்படுத்தாது.

## நீடித்து நிலைக்கும் ஒரே உறவு

ஆன்மீக பாரம்பரியத்தில் அடிக்கடி இப்படிச் சொல்வதுண்டு: அதாவது, உங்கள் வாழ்க்கையில் ஒரு குரு அமைந்தார் என்றால், நீங்கள் மறுபடியும் பிறக்கும்போது அதே குருவின் சிஷ்யராக ஆவீர்கள் என்று சொல்லப்படுகிறது. பொதுவாக மற்ற எல்லா உறவுகளும் ஜென்மங்களை கடந்து தொடர முடியாது என்றிருக்கும்போது, இந்த விதிவிலக்கு மட்டும் எப்படி?

முதலில், ஒரு உறவுமுறை என்றால் என்ன என்பதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். மனிதர்களுக்குள் உறவுகள் இருப்பதற்கு

காரணம் என்ன என்றும் புரிந்துகொள்ள வேண்டும். இப்போது உங்களுடைய வாழ்க்கையில் பல்வேறு காரணங்களுக்காக நீங்கள் பல்வேறு விதமான உறவுகளை உருவாக்கியிருக்கலாம். உங்களுடைய உணர்வுரீதியான தேவைகளுக்காக சில உறவுகள், உடல்ரீதியான தேவைகளுக்காக சில உறவுகள், சௌகரியத்திற்காக சில உறவுகள் என்று பலவிதமான உறவுகளை அமைத்துக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் எந்தவிதமான உறவை ஏற்படுத்திக் கொண்டாலும் - உணர்வு ரீதியானது, மனரீதியானது, சமூக ரீதியானது, பொருளாதார ரீதியானது அல்லது உடல்ரீதியானது - இப்படி எந்தவிதமான உறவாக இருந்தாலும், அடிப்படையில் அது உடல் சார்ந்த உறவாகத்தான் இருக்கிறது. அந்த உறவின் அடிப்படை உடல் சார்ந்ததாக இருக்கும்போது, உடல் என்பது விழுந்துபோனவுடன், அந்த உறவும் முடிந்துபோகிறது. அந்த உறவு அப்படியே கரைந்து போகிறது.

ஒரு உறவுமுறை பொருள்ரீதியான எல்லைகளுக்கு அப்பாற்பட்டு இருந்தால் மட்டுமே, அந்த உறவு பொருள் உடலின் எல்லைகளுக்கு அப்பாற்பட்டு நீடிக்க வாய்ப்பிருக்கிறது. அப்படிப்பட்ட உறவுமுறை பிறவிகள் தாண்டியும் ஜென்ம ஜென்மமாக நீடிக்க முடியும். ஏதோ ஒரு விதத்தில் நீங்கள் பொருள்தன்மையின் எல்லைகளுக்கு அப்பாற்பட்டு போனால் மட்டுமே, அது ஜென்மங்களுக்கும் நீடிக்க வாய்ப்பிருக்கிறது. பொருள் தன்மை என்று சொல்லும்போது, மனத்தின் அமைப்பையும், உணர்வுகளின் அமைப்பையும் சேர்த்துத்தான் சொல்கிறேன். அதுவும் பொருள்தன்மை கொண்டதுதான். ஜென்ம ஜென்மமாக ஒன்றாக இணைந்த காதலர்களும் தம்பதிகளும் இருந்திருக்கிறார்கள். அவர்களுடைய அன்பு அவ்வளவு ஆழமாக இருந்திருக்கிறது. அதனால் தேவைகள் சார்ந்த உறவின் அடிப்படையை கடந்து, அதற்கு அப்பாற்பட்டு போனார்கள். பொருள் எல்லைகளை கடந்துபோன மற்ற உறவுகள் பற்றிய உதாரணங்களும் சில இருக்கலாம். ஆனால், அவை மிகவும் அபூர்வமானவைதான். வழக்கமாக, குரு-சிஷ்ய உறவுமுறை மட்டும்தான் ஜென்ம ஜென்மமாக தொடர்ந்திடும். மற்ற எல்லா உறவுகளும் உடலின் சௌகரியத்திற்காகவே ஒன்றாக சேர்கின்றன; உடல் போய்விட்டது என்றால், அந்த உறவுமுறையும் உடைந்து போகிறது.

குருவின் உயிரைப் பற்றி அந்த சிஷ்யனுக்கு எந்த புரிதலும் இல்லாத போதும், குருவின் தொடர்பு என்னவோ சிஷ்யனின் உயிரோடு மட்டும்தான். எப்போதுமே இந்த உறவுமுறை சக்திரீதியாகவே அமைகிறது. இந்த உறவுமுறை உணர்வுரீதியானது கிடையாது, மன ரீதியானது கிடையாது, உடல்ரீதியானதும் கிடையாது. ஒரு உறவுமுறை சக்திரீதியாக அமைந்திருக்கும்போது, ஜென்ம ஜென்மமாக உடல்கள்

மாறிப்போனதுகூட அந்த உறவுக்கு புரிந்திருக்காது. அந்த சக்திகள் கரைந்து போகும்வரை அந்த உறவு தொடர்ந்துகொண்டே இருக்கும், அவ்வளவுதான். சக்தியைப் பொருத்தவரைக்கும் மறுபிறப்பு என்றெல்லாம் ஒன்றுமே கிடையாது. உடலுக்கு மட்டும்தான் மறுபிறப்பு இருக்கிறது. சக்தியின் ஓட்டம் ஒரே பாதையில் தொடர்ந்து கொண்டிருக்கிறது, அதற்கேற்றபடி அந்த உறவையும் தொடர்கிறது.

இங்கே ஈஷாவில் நம்மோடு இருக்கும் பலரும், முந்தைய காலத்தில் நம்முடன் தொடர்பில் இருந்தவர்கள்தான். ஆனால், எல்லோருக்கும் இருந்த தொடர்பு குரு-சிஷ்ய உறவாகவே இருக்கவில்லை. கிட்டத்தட்ட 400 வருடங்களுக்கு முன்பிலிருந்து என்னுடன் கர்மரீதியாக தொடர்பில் இருந்தவர்களும் சிலர் இருக்கிறார்கள். நமக்கு உதவியாக இருந்தவர்கள் மட்டுமல்ல, நம்மை கொடுமைப்படுத்தியவர்கள், துன்பப்படுத்தியவர்கள் கூட எப்படியோ இன்று பெரும்பாலும் கோயம்புத்தூரில் இருக்கிறார்கள். அவர்கள் எல்லோருமே நம்முடைய தியான அன்பர்களாக இல்லை என்றாலும் நம்மோடு இருக்கிறார்கள், அது அப்படித்தான். வாழ்க்கை அப்படித்தான் இயங்குகிறது.

சரி, இந்த மனிதர்கள் எல்லாம் ஏன் ஒரே இடத்தில் வந்து சேரவேண்டும்? தென்றல் காற்று ஏன் குறிப்பிட்ட திசையில் வீசுகிறது, ஏன் வேறு திசையில் வீசவில்லை? உலகில் காற்று நகர்ந்திடும் விதமே இப்படித்தான் இருக்கிறது - அழுத்தமும் அடர்த்தியும் அதிகமாக இருக்கும் இடத்தில் இருந்து, அழுத்தமும் அடர்த்தியும் குறைவாக இருக்கும் இடத்திற்கு காற்று நகர்கிறது. பகலில் நிலம் சூடாகும்போது அடர்த்தி குறைந்து போகிறது. எங்கெல்லாம் அடர்த்தி குறைவாக இருக்கிறதோ, அங்கே காற்று விரைந்து போகிறது. பிறகு குளிர்ந்து போனவுடன், சில சமயம் மழை வந்தவுடன் அடர்த்தி அதிகமாகி போகிறது. அப்போது காற்று பின்னோக்கி நகர்கிறது. இயற்கையிலேயே, எங்கெல்லாம் வெற்றிடம் இருக்கிறதோ, எல்லாமே அங்கேதான் விரைந்துபோய் சேரும்.

கர்மாவுக்கும் இப்படித்தான். ஒருவரின் கர்ம மூட்டை காலியாகிவிட்டால், அவரோடு ஏதோ ஒருவிதத்தில் பல ஜென்மங்களாக சம்பந்தப்பட்டிருக்கும் மற்ற கர்ம மூட்டைகள் எல்லாம் அவரை நோக்கியே நகர்ந்திடும் போக்கு ஏற்படுகிறது - தெரிந்தும் ஏற்படுகிறது, தெரியாமலும் ஏற்படுகிறது - பெரும்பாலும் தெரியாமலே ஏற்படுகிறது. இப்போது அவர்கள் எல்லோருக்குமே ஒரு சாத்தியம் இருப்பதால் இப்படி ஏற்படுகிறது. ஒரு மூட்டை காலியாகிவிட்டால், அதோடு சம்பந்தப்பட்டிருக்கும் ஒவ்வொரு மூட்டைக்கும் காலியாகும் வாய்ப்பு உருவாகியிருக்கிறது. அதேசமயம், இதற்கெல்லாம் ஆன்மீக முக்கியத்துவம் இருந்தால் தவிர, கடந்தகால தொடர்புகளை எல்லாம் நாம் பொருட்படுத்துவதில்லை.

என்னை நோக்கி வரும் அவர்களில் பெரும்பாலானவர்கள் அப்படி வருவதற்கு, இன்னொரு பிறவியில் அவர்களுக்கு இருந்த கர்மாதான் காரணம். அது அவர்களுடைய விழிப்புணர்வால் ஏற்பட்ட தேர்வு கிடையாது. பல நேரங்களில், அவர்களுடைய தற்போதைய மனப்பான்மையையும், அவர்களுடைய வாழ்க்கை அமைந்திருக்கும் விதத்தையும் பார்த்தால் - இங்கே இருக்கவேண்டும் என்ற அவர்களுடைய தவிப்புக்கும் ஏக்கத்திற்கும் முரண்பட்டதாக அவை இருக்கும். தாங்கள் கர்மரீதியாக நிறைவேற்ற வேண்டிய விஷயத்தை அவர்கள் முடித்துவிட்ட பிறகு பலருக்கும், "எதற்காக நாம் இங்கே இருக்கிறோம்?" என்ற வியப்பு ஏற்படுகிறது. அப்பாற்பட்ட பரிமாணத்தை இந்தப் பிறவியில் கொஞ்சம் சம்பாதித்தவர்கள் தொடர்ந்து இருக்கிறார்கள். தங்களுடைய பழைய தொடர்பின் காரணமாக மட்டுமே இங்கே இருப்பவர்கள், துரதிர்ஷ்டவசமாக போய்விட வேண்டியிருக்கிறது. ஆன்மீக தேவைகளை நிறைவேற்றுவது மட்டும்தான் நான் கொடுத்திருக்கும் உறுதி. நீடித்துக் கொண்டிருக்கும் இந்த உறவுகளின் உணர்வுரீதியான, சமூகரீதியான தேவைகளையெல்லாம் எல்லா நேரத்திலும் நான் பூர்த்திசெய்து கொண்டிருக்க முடியாது.

## ஆயிரம் பௌர்ணமி கண்டவருக்கு...

84 வயதுக்குப் பிறகு இறந்துபோகும் மனிதர்களுக்கு, அதாவது 1008 பௌர்ணமிகளைக் கண்டவர்களுக்கு ஏற்படும் மரணம் மற்ற விதமான மரணங்களிலிருந்து முற்றிலும் வித்தியாசமானதாக இருக்கும். அப்படிப்பட்டவர் ஒரு முட்டாள்தனமான வாழ்க்கையை வாழ்ந்திருந்தாலும், அவர் உயிருடன் இருந்தபோது ஒருமுறைகூட வானத்தை நோக்கி பார்த்ததில்லை என்றாலும், அவருக்கு மறுபிறப்பு என்பதே இருக்காது. ஒருமுறை, அமெரிக்காவிலுள்ள நம் ஆசிரமத்தின் சுற்றத்தில் வசிக்கும் ஒருவரை பார்ப்பதற்காக போயிருந்தோம். அவருக்கு முன்கூட்டியே சொல்லாமல் போயிருந்தோம். நாம் நுழைவாயிலில் இருந்த கதவைத் தாண்டி உள்ளே புகுந்தபோது, வந்திருப்பது யார் என்று பார்க்க கையில் ஒரு துப்பாக்கியோடு அவர் வெளியே வந்தார். அவருக்கு நன்றாக வயதாகி இருந்தது. அதோடு, அவர் கையில் துப்பாக்கியோடு வருவது கொஞ்சம் விசித்திரமாகவும் தோன்றியது. அதனால் நான் அவரைப் பார்த்து, "யார் வந்திருக்கிறார்கள் என்று பார்ப்பதற்கு ஏன் துப்பாக்கியோடு வருகிறீர்கள்? உங்களுக்கு ஏராளமான எதிரிகள் இருக்கிறார்களோ?" என்று கேட்டேன். அவர் அலட்சியமாக தோள்களை அசைத்தபடி, "இல்லை இல்லை, அந்த பயல்கள் எல்லோருமே போய் சேர்ந்துவிட்டார்கள்," என்று சொன்னார். இப்படியாக, நீங்கள் நீண்டகாலத்திற்கு வாழ்ந்தால் உங்களுடைய எதிரிகளைக்கூட வென்றுவிடலாம்! அப்படித்தான் இதுவும்.

ஒருவரின் காலத்தில் 1008 முழு நிலவுகளை கடந்துவிட்டார் என்றால், அதாவது கிட்டத்தட்ட எண்பத்திரண்டு வயதை தாண்டும்போது, அந்த மனிதருக்குள் அற்புதமான ஒரு விஷயம் நிகழ ஆரம்பிக்கிறது. அவ்வளவு காலம் வாழும் மனிதர்களில், எண்பத்திரண்டு முதல் எண்பத்தாறு வயதுக்குள் ஒருவிதமான தளர்வு திடீரென்று அவர்களுக்குள் ஏற்படுகிறது. திடீரென்று அவர்களில் பலரும் மிகவும் இனிமையானவர்களாக மாறுவதை நீங்கள் கவனிக்க முடியும். அவர்களுடைய சிடுசிடுப்பு போய்விட்டது, அவர்கள் குறை சொல்வதில்லை, அவர்களுக்கு எல்லாம் நன்றாகவே இருக்கிறது. ஏனென்றால், வாழ்க்கையின் மேல் அவருடைய கர்மா வைத்திருந்த பிடி கொஞ்சம் தளர்ந்து போயிருக்கிறது. ஒருவர் எண்பத்து நான்கு வயதை கடக்கும்போது இந்த நிகழ்வு போதிய அளவு முதிர்ந்த நிலையில் இருக்கிறது. உங்களுடைய உடல் அமைப்பில் பிராணங்களும், பஞ்சபூதங்களும் உறுதியாக நிலைபெற்று அமைந்திருப்பதற்கும் எண்பத்து நான்கு வயதுக்கும் ஒரு தொடர்பு இருக்கிறது. இந்த மைல்கல்லை ஆரோக்கியமாகவும் விழிப்புணர்வோடும் கடக்கும்போது, எப்போதுமே வழக்கத்திற்கு மாறான ஒரு விவேகமும் சமநிலையும் ஒருவருக்குள் ஏற்படுகிறது. அடிப்படையில், பிறப்பு-இறப்பு எனும் மாயை கரைந்து போய்விட்டது, அதனால் ஏற்படும் விளைவுதான் இது.

சந்திரனும், பூமியும் சேர்ந்து உருவாக்கிய சதித்திட்டம்தான் நம்முடைய பொருள் உடலின் பிறப்பு. நம்முடைய தாயின் மாதாந்திர சுழற்சிகள்தான் நம்முடைய பிறப்பிற்கு அடிப்படையாக இருக்கின்றன. அந்த சுழற்சிக்கும் நிலவின் சுழற்சிக்கும் தொடர்பு இருக்கிறது. பிறகு, அந்த உயிரை வெளிக்கொண்டு வருவதற்கு தேவையான அடிப்படை சக்தியையும், உகந்த சூழலையும் சூரியன் அளிக்கிறது. பெண்மையின் சுழற்சியும், சந்திரனின் சுழற்சியும் மனித உடலில் அந்தளவுக்கு ஒத்திருக்கும் நிலையை அடைந்துள்ளன. அதனால்தான், உடலமைப்பு ரீதியாக இதற்குமேல் மனிதர்களுக்கு பரிணாம வளர்ச்சி ஏற்பட வாய்ப்பே இல்லை. இதன் விளைவாகத்தான் இயற்கையாகவே இந்த பரிணாம வளர்ச்சி விழிப்புணர்வு ரீதியாக நிகழ்ந்திருக்கிறது. அதாவது, உடல்தன்மை இல்லாத மற்ற விதங்களில் வளர்வதற்கு பார்க்கிறது.

இந்த பூமியில் வாழும் ஒரு உயிராக நாம் செய்யும் பல விஷயங்களில், மூன்று அத்தியாவசியமான அம்சங்கள் இருக்கின்றன. எல்லா அடையாளங்களையும் கடந்துபோய் தன்னை முற்றிலுமாக மாற்றிக் கொள்வது ஒரு அம்சம். இனி பிறக்கப்போகும் உயிரின் தன்மை உயர்ந்த விதத்தில் இருக்கும்படி பார்த்துக் கொள்வது இரண்டாவது விஷயம். இறந்துபோன உயிர் மேம்பட்டு முன்னேறவோ அல்லது முற்றிலுமாக விடுபடவோ வழிவகுப்பது மூன்றாவது அம்சம். இந்த

மூன்று அத்தியாவசியமான அம்சங்களை நிறைவேற்றுவதில் சந்திரனின் சுழற்சிகளுக்கு மிகவும் முக்கியமான பங்கு இருக்கிறது. பௌர்ணமி, அமாவாசை ஆகிய இரண்டு சூழ்நிலைகளையும் ஒருவிதமான புரிதலோடு நாம் பயன்படுத்திக் கொண்டால், நாம் எதிர்நீச்சல் போட வேண்டிய அவசியமே இருக்காது.

நம்முடைய வாழ்க்கை சுழற்சியின் போதும் பல விஷயங்களில் சந்திரனின் சுழற்சிக்கு முக்கியமான பங்கு இருக்கிறது - நம்முடைய உடல்நிலையிலும், மனநிலையிலும் இதன் தாக்கம் முக்கியமாக இருக்கிறது - ஆனால் கர்ப்பம் கொள்வதில் சந்திரனின் சுழற்சிகள் ஏற்படுத்தும் தாக்கம் மிகவும் பெரியது. விழிப்புணர்வாக இருக்கும் தம்பதிகள், பௌர்ணமிக்கு பன்னிரண்டிலிருந்து பதினாறு நாட்கள் முன்பாக கர்ப்பம் தரிக்கும்படி முயற்சி செய்வார்கள். அப்போது கர்ப்பத்துக்குள் வரப்போகும் உயிரால் அடுத்த பௌர்ணமியன்று நுழைந்திட முடியும். இதற்குப் பங்களிக்கும் இன்னும் பல அம்சங்களும் உண்டு. ஒருவருக்கொருவர் வைத்திருக்கும் ஆசையின் விளைவாகவும், காமத்தை நிறைவேற்றிக் கொண்டதன் விளைவாகவும் மட்டும் இதைப் பார்க்காமல், உயிர்செயல் நிகழ்வதற்கு உதவிடும் புனிதக் கடமையாக இதை அணுகிட ஒருவர் விரும்பும்போது, கர்ப்பம் அமைந்திடும் இயல்பைப் பற்றியும், நேரத்தைப் பற்றியும் இன்னும் விவரமாக நாம் சொல்லலாம்.

இதைப்போலவே, மரணத்தின் நிகழ்விலும் இதன் தாக்கம் ஏற்படுகிறது. இந்த உடல் 1008 பௌர்ணமிகளை பார்த்துவிட்ட பிறகு, சக்தி உடலில் ஒருவிதமான நிலையற்ற தன்மை ஏற்படுகிறது. நிலையற்ற தன்மை என்று சொல்லும்போது, இதை சாதகமாக குறிப்பிடுகிறேன். தன் அமைப்பை அது திட்டவட்டமாக தக்கவைத்துக்கொள்ள முடியவில்லை. குமிழியின் சுவர்கள் தேய்ந்து மெல்லியதாக ஆகிட ஆரம்பிக்கிறது. ஏனென்றால், அது தன்னுடைய முழுமையான சுழற்சியை முடித்துவிட்டது. அதனால், அந்த மனிதர் இறந்து போகும்போது, அவரால் இன்னொரு கர்ப்பத்தை தேடிட முடியாது. ஏனென்றால், தேவையான கர்ம நெருப்பு அவருக்குள் எரிந்து கொண்டிருக்கவில்லை. அதனால், அவர் சும்மா சுற்றிக் கொண்டிருப்பார். இப்போது அவருக்கு முக்தி அளிப்பது மிகவும் சுலபமானது. அப்படியே அது ஒரு உடலை எடுத்தாலும்கூட, அது நிச்சயமாக இப்போதை விட மிகவும் பெரிய குமிழியாகவே இருக்கும். அதேசமயம், அது கொஞ்ச நேரம் சும்மா சுற்றிக்கொண்டு இருந்துவிட்டு வெடித்துப் போகவும் வாய்ப்பிருக்கிறது. பெரும்பாலானவர்களுக்கு இதுவே நிஜமாக இருக்கிறது. அதேசமயம், ஒரு சிலர் கொஞ்ச காலம் சுற்றிக் கொண்டிருந்துவிட்டு, இன்னும் பெரிய குமிழாக, இன்னும் சிறந்த உயிராக இருக்கும்படி ஒரு உடலை எடுத்துக்கொள்ளலாம். தங்களுக்கு 84 வயது ஆகும்வரை

மனிதர்கள் வாழ்ந்தால், அவர்கள் தங்கள் வாழ்க்கையை எந்த விதத்தில் வாழ்ந்திருந்தாலும், அவர்கள் மஹாசமாதி அடைவதற்கு வாய்ப்பிருக்கிறது. வாய்ப்பு இருக்கிறது என்றுதான் சொல்கிறேன், அதற்கு உத்தரவாதம் இருக்கிறது என்று நான் சொல்லவில்லை. அந்த முட்டாள்கள் போதிய காலத்துக்கு தாக்குப் பிடித்துவிட்டார்கள் - அந்த ஒரே காரணத்தால் அவர்களுக்கான சாத்தியம் இப்போது அதிகமாக இருக்கிறது.

1008 பௌர்ணமிகளை கடந்து வாழ்வதில் இயற்கையாக அமைந்துள்ள சாதகமான விஷயத்தை பல நேரங்களில் மனிதர்கள் இழந்துவிடுகிறார்கள். அந்த காலம் வருவதற்குள், அவர்கள் முற்றிலுமாக நினைவிழந்து போய்விடுகிறார்கள். அதாவது, கர்ம ஞாபகங்களுடன் இருக்கும் தொடர்பை இழந்துவிடுகிறார்கள். 84 வயதைக் கடந்து வாழ்கிறார்கள், ஆனால் தங்களை ஆக்கிடும் பொருளுடன் தொடர்பை இழந்துவிட்டார்கள் - இப்போது ஒரு பேய் போல ஆகிவிடுவார்கள் அல்லது வாழ்ந்து கொண்டிருக்கும் இறந்தவராக இருப்பார்கள். கர்மத்து பொருள்தான் ஒருவரை குறிப்பிட்ட விதமான ஆளாக இருக்க செய்கிறது. பிராரப்த கர்மா[1], அதாவது இந்தப் பிறவிக்காக ஒரு பாத்திரத்தில் வெளியே எடுத்த ஞாபகங்கள் எல்லாம் தீர்ந்து போய்விட்டது. உங்களுக்கு அந்த வாளியிலிருந்து, அதாவது சஞ்சித கர்மாவிலிருந்து இன்னொரு பாத்திரத்துக்கான ஞாபகத்தை எடுப்பது எப்படி, இங்கேயே தொடர்வது எப்படி என்று புரியவில்லை. இப்படி ஒவ்வொரு பாத்திரமாக எடுத்துக்கொண்டு தொடர்வது எப்படி, அல்லது அந்த வாளி முழுவதையும் திறந்து பயன்படுத்துவது எப்படி என்று புரிந்துகொண்டால், நீங்கள் 200 வருடங்களுக்குகூட வாழலாம், அதில் எந்த பிரச்சனையும் இல்லை. இப்போது எல்லாவற்றையும் தீர்த்து முடித்தபிறகு நீங்கள் முக்தியை அடைகிறீர்கள், போய்விடுவீர்கள். ஆனால், உடல் தொடர்ந்து நீடிக்கும்படி வைத்திருந்து, அடுத்த பாத்திரத்தில் ஞாபகங்களை வெளியே எடுக்க முடியாவிட்டால், அப்போது நீங்கள் ஒரு பேயைப் போல ஆகிவிடுவீர்கள். அதனால்தான் நீடித்த ஆயுளையும், மரணமில்லாத வாழ்வையும் இயற்கைக்கு மாறான விதங்களில் தேடிப்போவது ஏராளமான அபாயங்கள் நிறைந்ததாக இருக்கிறது.

## ஞானோதயம் அடுத்தப் பிறவியிலும் நீடிக்குமா?

ஞானோதயம் அடைந்தவர்கள் மறுபிறப்பு எடுத்தால், அவர்கள் பிறவியிலேயே ஞானம் அடைந்தவர்களாக இருப்பார்களா? ஞானோதயம் அடுத்த பிறவியிலும் நீடித்து நிலைக்குமா? குறிப்பாக, என்னுடைய

1 அத்தியாயம் 2ல், "உயிரின் இயக்கம் எப்படி நிகழ்கிறது?" என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

விஷயத்தில் கேட்கப்படும் கேள்வி என்னவென்றால், இதற்கு முன்னால் ஏற்கனவே இரண்டு பிறவிகளில் ஞானமடைந்தவராக இருந்தால், சாமுண்டி மலையில் ஏற்பட்ட அனுபவம் எனக்கு இருபத்தைந்து வயதாகும் வரை ஏன் காத்திருக்க வேண்டும்?

பெரும்பாலானவர்களுக்கு ஞானோதயம் நிகழும் கணமும், அவர்கள் உடலை விட்டு வெளியேறும் கணமும் ஒன்றாகவே அமைகிறது என்று ஏற்கனவே பார்த்தோம். அவருடைய சக்திநிலை ஒரு குறிப்பிட்ட உச்சத்தை தொடும்போது, தங்களுடைய உடலை விட்டு வெளியேறி விடுவார்கள். உடலை விடும் அந்த கணம்தான் அவர்களுக்கு ஞானோதயமாகவும் அமைகிறது. அவர்களுக்கு தங்களுடைய உடலின் தொழில்நுட்பத்தைப் பற்றி குறிப்பிட்ட ஆளுமை இருந்து, ஏதோ ஒரு பணியை முடிப்பதற்காக தங்களுடைய உடலை தக்க வைத்துக்கொண்டால் ஒழிய, அவர்கள் திரும்பவும் வருவதைப் பற்றிய கேள்வியே இருப்பதில்லை. ஒருவருடைய நோக்கம் முக்தி மட்டும்தான் என்றால், எப்போதும் ஞானோதயமும், உடலை விட்டு வெளியேறுவதும் சேர்ந்துதான் நிகழும். தனக்குள் அடைந்துள்ள விடுதலையை வைத்து இன்னும் சில விஷயங்களை செய்ய வேண்டும் என்ற நோக்கம் இருந்தால் - இப்போது அவர் செய்வதற்கு இன்னும் வேலைகள் இருக்கின்றன.

இது எப்படி என்றால், சிறைக்குள் இருக்கும் ஒரு கைதியை விடுவிக்கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். அவர் விடுதலையாகி விடுகிறார், அவர் போய்விடுகிறார். ஆனால் ஒரு சிலர் இருக்கிறார்கள் - அவர்கள் பெரிய லட்சியத்துடன் இருக்கிறார்கள் அல்லது முட்டாள்தனமாக இருக்கிறார்கள் என்றும் சொல்லலாம் - சிறையில் இருந்து விடுபடுவதுடன், அந்த சிறையை தானே இயக்கிட வேண்டும் என்ற விருப்பமும் அவர்களுக்கு இருக்கிறது. அந்த சிறையில் இருந்த கைதிதான் அவர் - இப்போது சிறையின் அதிகாரியாகவே ஆகிட விரும்புகிறார். இந்த மாதிரி பிரச்சனை ஒருவருக்கு இருந்தால் மட்டும்தான், அவர் உடலை தக்க வைத்துக்கொள்வார். இல்லாவிட்டால், சாதாரணமான ஒரு கைதிக்கு எப்படியாவது வெளியே போய்விட்டால் போதும் என்பதுதான் நோக்கமாக இருக்கிறது. அவருக்கு அந்த சிறையில் வேலைவாய்ப்பெல்லாம் தேவையில்லை. என்னைப் போன்ற ஒரு முட்டாள்தான் அப்படிச் செய்வார்!

சரி, ஞானம் அடைந்த ஒருவர் மீண்டும் பிறக்கும்போது ஞானத்துடன் பிறப்பாரா? ஒரு மாஞ்செடியைப் பார்த்தால், அதில் ஒரு மாமரத்திற்கான அத்தனை தன்மைகளும் இருக்கின்றன - மாம்பழங்களை உருவாக்கிடும் திறமை அதில் இருக்கிறது. அதேசமயம், பூமியை விட்டு முளைத்த உடனேயே, அது மாம்பழங்களை தந்துவிடுவதில்லை, அதற்கே

உரிய நேரத்தை எடுத்துக்கொள்கிறது. இயற்கையே மாஞ்செடிக்கு அந்த நேரத்தை அளிக்கிறது - அதற்கு குறிப்பிட்ட விதமான உறுதியும், வலிமையும், பக்குவமும், சமநிலையும், திறமையும் ஏற்படும்வரை நேரம் அளிக்கிறது. அதற்குப் பிறகுதான் அதில் பூக்களும் பழங்களும் வருகின்றன. முளைத்து மூன்று இலை விட்ட உடனேயே மாம்பழங்கள் தோன்றினால், அந்த மரம் இறந்து போய்விடலாம். அதனால்தான், குறிப்பிட்ட உயரமும், உறுதியும் கொண்ட நிலைக்கு தான் வளரும்வரை அது காத்திருக்கும். அதற்குப் பிறகுதான் மாம்பழங்கள் தோன்றும்.

அதைப்போலவே, ஞானமடைந்த ஒருவர் தனக்குள் சிலவிதமான குணங்கள் பொதிந்து இருக்கும்படி விளங்குகிறார். அதை யாராலும் பறிக்க முடியாது. அதேசமயம், அவர் பிறக்கும்போது மற்ற எல்லோரையும் போலவே பிறக்கிறார். அந்த குணங்கள் எல்லாம் இன்னும் அவருக்குள் பொதிந்துதான் இருக்கின்றன. தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் சரியான நேரமும் சூழலும் அமையும் வரை அது காத்திருக்கும். இதுதான் இயற்கையின் புத்திசாலித்தனம். அதிகபட்ச பழங்களை உருவாக்கும்படி எந்த சமயத்தில் பூக்கவேண்டும் என்று அதற்கு மிகச்சரியாக தெரியும். அது மிகவும் சீக்கிரமாகவே பூத்துவிட்டால், தன்னுடைய முழுமையான பயனை எட்டாது. அதனால் அது காத்திருக்கும். இதைப்போலவே, அவர் எந்த விதமான பணியை மேற்கொள்ள இருக்கிறார் என்பதைப் பொருத்து, அதற்கேற்ற விதத்தில் அவர் வளர்வார்.

நீண்டகாலமாக நம் தேசத்தில் இதைப் பார்த்து வருகிறோம்: ஆறு அல்லது ஏழு வயதிலேயே ஞானம் பெறும் *பால யோகிகள்* எத்தனையோ பேர் இருந்திருக்கிறார்கள். அவர்களில் பெரும்பாலானவர்கள் இருபத்தைந்து அல்லது முப்பது வயதை கூட தாண்ட மாட்டார்கள். அதற்கு முன்பாகவே அவர்கள் போய்விடுவார்கள். ஏனென்றால், உயிரின் அந்த தீவிரத்தை உடலால் தொடர்ந்து தாக்குப்பிடிக்க முடியாது. அதனால், உடல், மனம், உணர்வுகள் ஆகியவை எல்லாம் நன்றாக வளர்ந்து ஒருவிதமான பக்குவத்தை அடையும் வரை இயற்கை போதுமான இடைவெளியை அளிக்கிறது. அதன்பிறகு, அந்த மனிதருக்குள் வேறு ஒரு பரிமாணம் உயிர் பெறும்போது, அவரால் அதை இன்னும் சிறப்பாக தக்க வைத்துக்கொள்ள முடிகிறது.

என்னுடைய அனுபவத்திலும் இதுவே உண்மை. ஏற்கனவே இரண்டு பிறவிகளாக ஞானத்தில் வாழ்ந்திருந்த அனுபவம் இருந்தபோதும், இருபத்தைந்து வயது ஆகும்வரை நான் காத்திருக்க வேண்டி இருந்தது. அதற்குப் பிறகுதான் அதன் ஞாபகம் எனக்கு ஏற்பட்டது. ஏனென்றால், இந்த முறை இந்த உடலை எடுத்ததற்கான அடிப்படையான காரணமே, தியானலிங்கத்தை பிரதிஷ்டை செய்யவேண்டும் என்பதுதான். இதற்கு

ஞானம் மட்டும் போதாது, பலவிதங்களில் உடல் கச்சிதமாக இருக்க வேண்டியது அவசியம். கச்சிதம் என்றால், கட்டுக்கோப்பான உடற் பயிற்சியால் ஏற்படும் கச்சிதம் என்று சொல்லவில்லை. தன் சக்திநிலையை கையாளவும், அதை வைத்து செய்யக்கூடிய விஷயங்களுக்கும் கச்சிதமான உடல் என்று சொல்கிறேன். ஒரு குழந்தைக்கு இது சாத்தியமாகாது. அந்த இருபத்தைந்து வருடங்களை நான் திரும்பிப் பார்க்கும்போது, என் வாழ்க்கையில் ஏற்பட்ட நிகழ்வுகள் எல்லாமே, என்னுடைய நோக்கத்திற்காக படிப்படியாக முறைப்படி கச்சிதமாக நிகழ்ந்திருக்கின்றன. என்னுடைய உடலும் மனமும் நன்றாக வளர்ந்து, என்னுடைய உணர்வுகள் உறுதியாக சமநிலை அடைவதற்கு தேவைப்பட்ட விஷயங்களெல்லாம், வாழ்க்கையின் ஓட்டத்தில் இயல்பாகவே அமைந்திடும்படி நிகழ்ந்திருக்கின்றன.

உதாரணமாக, பன்னிரண்டு வயதில் நான் கட்டற்ற விதத்தில் இருந்தேன். விளையாடிக்கொண்டும், மரமேறிக்கொண்டும், மலையேற்றம் செய்துகொண்டும் இருந்தேன். நான் இப்படிப்பட்ட விஷயங்களை செய்துகொண்டிருந்தாலும், தென்னிந்தியாவிலேயே சிறந்த யோகப் பயிற்சியாளர் என்னிடம் வந்தார்[2]. நான் யோகப் பயிற்சிகளை கற்றுக்கொள்ளும்படி எனக்குள் எப்படியோ ஆர்வத்தை ஏற்படுத்தினார். அதைப்போல, ஒரு சின்ன யோசனையும், மறுபேச்சும் இல்லாமல் நானும் அதை அப்படியே ஏற்றுக்கொண்டேன். இன்னொரு பன்னிரெண்டு வருடங்கள் கழித்து மகத்தான விஷயங்கள் எனக்குள் நிகழ்ந்தன. இப்படியாக, இது எப்போது நிகழவேண்டும் என்பதை நிர்ணயிப்பது இயற்கையின் புத்திசாலித்தனம்தான். இயற்கையின் புத்திசாலித்தனத்தை நாம் ஒருபோதும் கேள்வி கேட்கக் கூடாது. இயற்கையின் புத்திசாலித்தனத்தை கேள்வி கேட்கும் அளவிற்கு நம்முடைய புத்திசாலித்தனம் இல்லை, அது மிகவும் சிறியதுதான். இயற்கையாக நிகழ்வது எப்போதுமே சரியாகத்தான் இருக்கிறது. அதைப்பற்றிய கேள்வியே கிடையாது. என்ன, உங்களுடைய குறுகியகால நோக்கங்களும், குறிக்கோள்களும் இப்போது நடந்து கொண்டிருக்கும் விஷயங்களோடு பொருந்திப் போகாமல் இருக்கலாம், அவ்வளவுதான். அதனால் உங்களுக்குள் போராட்டம் ஏற்படுகிறது. நிஜத்தில் பார்த்தால், இயற்கை தவறாகவே இருந்திட வாய்ப்பில்லை. இயற்கை என்பது எண்ணங்களையும், உணர்வுகளையும் வைத்து முடிவுகளை எடுப்பதில்லை. அதனால், அது எப்போதுமே சரியான பாதையில்தான்

---

2 மல்லாடிஹள்ளி சுவாமிகளுடன் தனக்கு ஏற்பட்ட முதல் சந்திப்பைப் பற்றி குறிப்பிடுகிறார். சத்குருவை அவருடைய பதினொராவது வயதில் ஹடயோகாவுக்கு அறிமுகப்படுத்தியவர் மல்லாடிஹள்ளி சுவாமிகள்.

நகர்கிறது. அது, உங்களுடைய வாசனைகளுக்கு ஏற்றபடிதான் முடிவுசெய்கிறது. இது ஒரு எண்ணம் கிடையாது. எண்ணங்களை வைத்து நாம் எப்போதுமே தவறு செய்திட வாய்ப்பிருக்கிறது. ஆனால், வாசனைகளை பொருத்தவரை தவறு என்பதற்கு வாய்ப்பில்லை.

ஒரு குறிப்பிட்ட விஷயத்தை செய்வதுதான் சரியானது என்ற எண்ணம் இன்றைக்கு இருக்கலாம். நாளைக்கே நீங்கள் வேறுவிதமாக யோசிக்க ஆரம்பித்தால், நாளை மாலைக்குள், அந்த விஷயத்தை செய்வது சிறந்ததே இல்லை என்ற தெளிவான முடிவுக்கு வர வாய்ப்பிருக்கிறது. எண்ணத்தின் இயல்பே இதுதான். எண்ணம் என்பது அளவுக்குட்பட்ட தகவல்களோடு செயல்படுகிறது. அதனால், எண்ணத்தைப் பொருத்தவரை எப்போதுமே ஒரு தவறு ஏற்பட வாய்ப்பிருக்கிறது. இயற்கையோ வாசனைகளின் அடிப்படையில் இயங்குகிறது. ஒரு மாமரம், மாம்பழத்தை எப்படி தரவேண்டும் என்ற எண்ணத்தை உருவாக்குவதில்லை. அதன் இயல்பான குணமே அப்படித்தான் இருக்கிறது. அதன் வாசனையே அப்படித்தான் இருக்கிறது. அந்த பாதையிலேயே அது முன்னேறி நகர்கிறது, தான் செய்ய வேண்டியதை மட்டும் செய்கிறது. எல்லாம் சரியான நேரத்தில் நிகழ்கிறது.

என்னுடைய இளமைப் பருவத்தில், நான் ஆன்மீகத்தை நோக்கி ஈர்க்கப்பட்ட ஆளாகவே இருக்கவில்லை. ஆனால், என் வாழ்க்கையின் அந்த காலகட்டத்தில், அப்படியே தற்செயலாக இங்கேயும் அங்கேயும் ஆன்மீகப் பாதையில் இருந்த மனிதர்களை சந்திக்க ஆரம்பித்தேன். அந்த சமயத்தில், சும்மா அப்படியே, எல்லாம் சரியாக அமைய ஆரம்பித்தது. ஏனென்றால், உள்ளிருக்கும் குணங்கள், அதாவது வாசனைகள் மெதுவாக மேற்பரப்பிற்கு வர ஆரம்பித்தன. அதோடு, அது வெளிப்படுவதற்கு தேவையான உதவியும் கூடவே வந்தது.

இப்படியாக, மீண்டும் பிறந்து வரும் ஒரு ஞானிக்கு, இந்தப் பிறவியில் எந்த விதமான பணியை நோக்கமாக கொண்டிருக்கிறார் என்பதைப் பொருத்து அமைகிறது. அதற்கு ஏற்றபடி, சரியான நேரத்தில் எல்லாம் நிகழும்படி அமைகிறது. ஞானம் என்பது தனிமனிதராக இருப்பதை கடந்து பிரபஞ்சத்துடன் ஒன்றி ஐக்கியமாவது பற்றியதாகும்.

## லாமாக்களின் மறுபிறப்பு

தங்களுடைய குருமார்களின் மறுபிறப்புக்கு அதிகமான முக்கியத்துவம் கொடுப்பவர்களில் திபெத்தியர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். இமயமலையின் மேல் பகுதிகளில் இருந்த தாந்திரீகர்கள் பௌத்த மதத்திற்கு மாறினார்கள் - அவர்கள்தான் இந்த திபெத்திய லாமாக்கள் என்ற அடிப்படையை நாம்

புரிந்துகொள்ள வேண்டும். அவர்களுடையது தாந்திரீக கலாச்சாரம் ஆகும். தாந்திரீக முறைகள்[3] நிறைந்த நாடு நேபாளம். தாந்திரீக சடங்கு முறைகளை செய்வதற்காக அங்கே ஐந்து ஆலயங்கள் இருக்கின்றன. அந்த காலத்தில், இந்தியாவில் இருந்த பௌத்த துறவிகள், திபெத் நாட்டுக்குப் போய் தீவிரமாக போதித்தார்கள், ஏராளமான ஜனத்தொகையை பௌத்த மதத்திற்கு மாற்றினார்கள். அவர்கள் பௌத்தர்களாக மாறினாலும், அடித்தளத்தில் இருந்த தாந்திரீக கலாச்சாரம் அப்படியே தங்கிவிட்டது. தாங்கள் வழிபடும் உருவங்களை அவர்கள் மாற்றிக் கொண்டார்கள், அதேசமயம், அடிப்படையான தாந்திரீக கலாச்சாரம் என்னவோ அப்படியே இருந்தது. இப்படியாக, பௌத்தமும் தாந்திரீக வாழ்க்கைமுறையும் சேர்ந்த ஒரு கலவையாக திபெத்திய கலாச்சாரம் ஆனது. சொல்லப்போனால், இந்த இரண்டுமே ஒன்றுக்கொன்று நேர் எதிரான விஷயங்கள்தான். தாந்திரீகம் முழுவதும் சடங்குகளாக இருக்கும். ஆனால் கௌதம புத்தருக்கோ சடங்குகள் என்றால் ஆகவே ஆகாது. எல்லா சடங்குகளையும் ஒழித்துவிட்டு, வாழ்க்கையில் தியானத்தன்மையை கொண்டு வருவதுதான் கௌதம புத்தரின் முக்கியமான பணியாக இருந்தது. இன்றைக்கோ, சடங்குகள் நிறைந்த பௌத்தர்களாக இருக்கிறார்கள் திபெத்திய பௌத்தர்கள். இந்துக்களின் சடங்குகளை விட மிகவும் விலாவரியாக இருக்கும் சடங்குகளை அவர்கள் வழக்கத்தில் வைத்திருக்கிறார்கள்.

அந்தக் கலாச்சாரத்தில் வாழ்ந்த சிலருக்கு, தங்களுடைய மறுபிறப்பை விழிப்புணர்வோடு நிர்ணயிப்பது போன்ற சில திறன்கள் நிச்சயமாக இருந்தன. சில குருமார்கள் திரும்பத் திரும்ப வந்திடுவதற்கு நிர்ணயித்திருந்தார்கள். சொல்லப்போனால், சில உதாரணங்களில் ஒரே மனிதர் முப்பது பிறவிகள் வரை மீண்டும் மீண்டும் வந்ததற்கான பதிவுகளும் இருக்கின்றன. வழக்கமாக அப்படிப்பட்டவர் இறக்கும்போது, "அடுத்த பிறவியில் நான் இப்படிப்பட்ட அறிகுறிகளோடு பிறந்திடுவேன். நீங்கள் வந்து என்னை அடையாளம் கண்டுகொள்ளுங்கள்," என்று சொல்லிவிட்டு இறப்பார். அவர் இந்த உலகத்தில் எங்கே இருந்தாலும், அவரைத்தேடி இவர்கள் போவார்கள். அவரை கண்டுபிடித்து அந்த குழந்தையை மடாலயத்திற்கு திரும்ப கொண்டு வருவார்கள். அதேசமயம், எல்லா குருமார்களும் இப்படிச் செய்வதில்லை. அவர்களில் எத்தனையோ பேர் அப்படியே கரைந்து விடுவார்கள், மறைந்து விடுவார்கள். ஆனால் காலப்போக்கில், மறுபிறப்பை முன்கூட்டியே அறிவிப்பதும், மீண்டும் பிறந்தவரை அடையாளம் காண்பதும் - இதெல்லாம் கட்டாயம் என்று ஆகிப்போனது, அதுவே ஒரு வழக்கமாகிப் போனது.

---

3 வெகு சிலருக்கு மட்டுமே பரிமாறப்பட்ட ஒரு புராதன இந்திய ஆன்மீக வழிமுறை.

ஒரு குறிப்பிட்ட மடாலயத்தில் இருந்த குரு இறந்துபோனார் என்று வைத்துக்கொள்வோம். அதிலிருந்து பதினொன்றாவது நாள் தன் மறுபிறப்பைப் பற்றிய தகவலை ஏதோ ஒருவிதத்தில் மற்றவர்களுக்கு வெளிப்படுத்துகிறார் என்று வைத்துக்கொள்வோம். மெதுவாக, காலப்போக்கில், ஒரு குரு அல்லது மூத்த துறவி இறந்த போதெல்லாம், அவரும் குறிப்பிட்ட விதத்தில் மறுபிறப்பு எடுப்பார் என்று இவர்களாகவே ஒரு வழக்கத்தை உருவாக்கிவிட்டார்கள். அப்படி எதுவும் நிகழவில்லை என்றால், அந்த குரு உயர்ந்த நிலைக்கு வளர்ந்த உயிராக இருக்கவில்லை என்று ஒத்துக்கொள்ள வேண்டும். அல்லது இவர்களாகவே ஒரு அற்புதத்தை உருவாக்கி, பாரம்பரியக் கதையை தொடரவேண்டும். வழக்கமாக, ஒரு அற்புதத்தை தாங்களாக உருவாக்குவதைத்தான் அவர்கள் தேர்ந்தெடுப்பார்கள். தங்களுடைய மடாலயத்தின் கௌரவம் மண்ணில் விழுந்து விடக்கூடாது என்று நினைப்பார்கள், இல்லையா? அதனால், இதுவே பாரம்பரியம் ஆகிப்போனது. இதைப்போன்ற அற்புதத்தை எல்லாம் இந்த உலகம் நம்புவது துரதிர்ஷ்டவசமானதுதான்.

உயிர்ப்புடன் வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு ஆன்மீக வழிமுறை செத்துபோன பாரம்பரியமாக மாறிடும் சோக நிகழ்வு, ஒரு குறிப்பிட்ட பிரதேசத்திற்கு அல்லது இனத்திற்கு மட்டும் நிகழும் தனிப்பட்ட ஒன்று கிடையாது. ஏராளமான கலாச்சாரங்களில் இந்த துர்ப்பாக்கியம் நிஜமாகியிருக்கிறது. அது உயிரற்ற பாரம்பரியமாக ஆகிவிடாமல் ஒரு உயிரோட்டமான வழிமுறையாக அதை வைத்திருப்பது சவாலானதுதான், ஒவ்வொரு ஆன்மீக வழிமுறையும் அதை நிறைவேற்றிட முனைந்து கொண்டே இருக்க வேண்டும். திபெத்திய பௌத்த முறை எத்தனையோ அற்புதமான குருமார்களை உருவாக்கியிருக்கிறது, அதன் மதிப்பு மிகவும் மகத்தானது. அந்த பாரம்பரியத்திற்கு பல விதங்களில் இன்றியமையாதவராக இருந்த பத்மசம்பவர் தன் கையில் திரிசூலத்துடன் வலம் வந்தார், அவருக்கு இரண்டு மனைவிகள் இருந்தார்கள். மக்கள் அவரை திபெத்திய சிவன் என்றே அழைத்தார்கள், ஒரு குறிப்பிட்ட பாரம்பரியத்தை சேர்ந்த பௌத்த துறவியாக பார்க்கவில்லை.

## என்னுடைய முன்பிறவிகள்

என்னுடைய ஞாபகத்தில் எத்தனையோ ஜென்மங்களின் நினைவுகள் இருக்கின்றன என்றாலும், அதற்கெல்லாம் நான் முக்கியத்துவம் கொடுப்பதில்லை. உதாரணமாக, ஆப்பிரிக்காவின் ஜாம்பியா நாட்டில்கூட எனக்கு ஒரு பிறவி இருந்திருக்கிறது. ஆனால் அதை நான் பொருட்படுத்துவதில்லை. ஏதோ ஒருவிதத்தில் ஆன்மீக முக்கியத்துவம்

கொண்டதற்கு மட்டும்தான் நான் கவனம் செலுத்துவேன். மற்றதெல்லாம் எந்த விதத்திலும் பயனுடையதாக இல்லை. என்னுடைய கடந்த காலத்தோடு தொடர்புகொண்ட எத்தனையோ விஷயங்கள் இன்றைக்கு என்னைச் சுற்றி இருக்கின்றன. ஆனால், அதில் ஆன்மீக முக்கியத்துவம் கொண்ட விஷயங்களை மட்டும்தான் என்னுடன் வைத்திருக்கிறேன். அந்தப் பிறவிகளில் எல்லாம் என்னுடைய அம்மாவாக இருந்தது யார், அப்பாவாக இருந்தது யார், கூடப்பிறந்தவர்கள் யார், குழந்தைகளாக இருந்தவர்கள் யார் என்பதையெல்லாம் என்னால் மிகவும் எளிதாக தேடி கண்டுபிடிக்க முடியும். ஆனால் அப்படி செய்யமாட்டேன். அதெற்கெல்லாம் நான் கவனம்கூட செலுத்தவில்லை. என்னோடு உயிர்தொடர்பில் இருந்தவர்களை மட்டும்தான் நான் பாதுகாத்து வளர்க்கிறேன், சதையிலும் ரத்தத்திலும் சம்பந்தப்பட்டவர்களை கிடையாது. என்னுடன் சதையிலும் ரத்தத்திலும் சம்பந்தப்பட்டவர்களை பூமியிடமே விட்டுவிடுகிறேன், அவர்கள் பூமிக்கு சொந்தமானவர்கள்தான். இந்த அடிப்படையில் பார்த்தால், என் கடைசி நான்கு பிறவிகள்தான் முக்கியமானவை என்று நான் நினைக்கிறேன்.

**பில்வா**

1600களின் ஆரம்பகாலத்தில், ஒரு சின்ன கிராமத்தில் வாழ்ந்த இளைஞர் இருந்தார். அந்த இடம் இன்று சத்தீஸ்கர் மாநிலத்தில் இருக்கும் ராய்கர் என்ற நகரமாக இருக்கிறது. அந்த இளைஞரின் பெயர் பில்வா. ஒரு பழங்குடி இனத்தைச் சேர்ந்த அவர் மிகவும் தீவிரமான, கட்டற்ற வாழ்க்கையை வாழ்ந்தார். நம் தேசத்தில் ஒரு குறிப்பிட்ட விதமான பாரம்பரியம் இருக்கிறது - அவர்களை குடுகுடுப்பைக்காரர்கள் என்று சொல்வார்கள். வழக்கமாக அவர்கள் அதிகாலையில், இன்னும் நல்ல இருட்டாக இருக்கும்போதே தெருவில் நடந்துபோவார்கள். தங்களுடைய தம்பட்டையின் சத்தத்தால் மக்களை எழுப்பி விடுவார்கள். தங்களுடைய உள்ளுணர்வால் அவர்களுக்கு ஏதாவது தென்பட்டால், அதை உங்களிடம் சொல்வார்கள். உதாரணமாக, ஒரு குறிப்பிட்ட வீட்டில் இரண்டு வாரங்களுக்குள் மரணம் ஏற்படும் என்று அவர்கள் சொல்லலாம், அல்லது யாரோ நோய்வாய்ப்படுவார் என்று சொல்லலாம் - இப்படி பல விஷயங்களை அவர்கள் சொல்லமுடியும். இதெல்லாம் உண்மையாகிட வாய்ப்பு இருக்கிறது என்று தெரிந்ததால், தானாகவே தோன்றிடும் இந்த வாக்கிற்கு மக்கள் முக்கியத்துவம் கொடுப்பது வழக்கம். அப்படி அவர்களுக்கு எதுவும் தோன்றாத நாட்களில், அவர்கள் சிவனைப் புகழ்ந்து பாடிக்கொண்டு போவார்கள். அதன்பிறகு, அவர்கள் ஒரு கோவிலில் போய் கொஞ்சநேரம் உட்கார்ந்து கொள்வார்கள். மக்கள் அங்கே வந்து சில தட்சணைகளை அவர்களுக்கு அளிப்பார்கள்.

சைவ கலாச்சாரத்திற்குள் இது ஒரு பாரம்பரியமாக இருந்தது - அதாவது, இந்த குறிப்பிட்ட பழங்குடி மக்கள் பாம்புகளை கவர்வதிலும் ஈடுபட்டிருந்தார்கள். பாம்புகளுக்கும் சிவனுக்கும் ஆழமான தொடர்பு இருக்கிறது, இல்லையா? இப்படிப்பட்ட ஒரு பழங்குடி இனத்தை சேர்ந்தவர்தான் பில்வா. தான் செய்வதை ஆழமாக நேசிப்பவராக இருந்தார் பில்வா. இந்த மனிதர்கள் வாழ்க்கையை பரிபூரணமாக வாழ்ந்தார்கள், வாழ்க்கையை உள்ளது உள்ளபடியே நேசித்தார்கள். அவர்கள் எதையும் சேகரித்து வைத்துக்கொள்ளும் மனிதர்களாக இல்லை. அவர்களுக்கு பணம், சொத்து, உடைமை பற்றிய உணர்வெல்லாம் எதுவுமே கிடையாது. அவர்கள் சும்மா வாழ்ந்தார்கள். அவர்கள் வாழ்க்கையின் முக்கியம் மிக்க அம்சம் சிவன்தான்.

பில்வா பாம்புகளை மிகவும் நேசித்தார். கவனிக்கவும்: வழக்கமாக பாம்புகள் விஷம் மிக்க உயிர்களாகும். விஷம் மிக்க உயிர்களை நேசிக்க வேண்டுமென்றால், அவர் வேறுவிதமான ஆளாகத்தான் இருக்கவேண்டும். பாம்புக்கு முத்தம் அளிக்கவேண்டும் என்றால், அவருக்கு ஏகப்பட்ட தைரியம் இருக்கவேண்டும். நேசிப்பதுதான் அவருக்கு எல்லாமே, மற்றதெல்லாம் இரண்டாம் பட்சம்தான் - உயிரோடு இருப்பதுகூட இரண்டாம் பட்சம்தான் - அப்படிப்பட்டவனாகத்தான் இருந்தார் பில்வா. அவரால் சமூக கட்டமைப்புக்குள் பொருந்திப் போக முடியவில்லை. அதனால் அவர் எதிர்ப்பாளராகவே பார்க்கப்பட்டார். சமூகத்தை எதிர்த்து அவர் செய்த பல விஷயங்களில் ஒரு காரணத்திற்காக - பரவலாக இருந்த ஜாதி வேற்றுமையை மதிக்காமல் செய்த செயலுக்காக - மிகவும் இளவயதிலேயே, அவர் ஒரு மரத்தில் கட்டப்பட்டு இருக்க, அவரை நாகப்பாம்பு கடிக்கு ஆளாகும்படி செய்தார்கள்.

அந்த சமயத்தில், அவர் ஆன்மீக நோக்கம் கொண்டிருந்தார் என்று சொல்ல முடியாது; அவர் ஒரு சிவபக்தனாக இருந்தார், அவ்வளவுதான். ஆனால், தன்னுடைய வாழ்க்கையின் அந்த கடைசி சில கணங்களுக்கு தன்னுடைய சுவாசத்தை கவனித்தார். அவரால் அப்போது செய்யக்கூடிய விஷயம் எதுவுமில்லை, சுவாசத்தின் மேல் கவனம் தானாகவே ஏற்பட்டது. நாகப்பாம்பின் விஷம் அவருடைய உடலுக்குள் புகுந்து சுவாசிப்பது மிகவும் கஷ்டமாகி போனது. மரணத்திற்கு இன்னும் சில நிமிடங்கள்தான் இருந்தன. இந்த சமயத்தில் அவர் தன் சுவாசத்தை கவனித்தார். விழிப்புணர்வால் அந்த கவனம் வந்தது என்று சொல்வதைவிட, இந்த நிகழ்வின் விளைவால் அந்த கவனம் ஏற்பட்டது என்றுதான் சொல்ல முடியும். நாகப்பாம்பு கடித்து இறக்கும்படி விடப்பட்ட நிலையில் அவர் குப்புற விழுந்து கிடந்தார், கிட்டத்தட்ட இறந்தேவிட்டார். இருந்தாலும் அந்த கடைசி சில நிமிடங்களுக்கு அந்த விழிப்புணர்வை தக்கவைத்துக்

கொண்டார். இது சாதனா மூலம் ஏற்பட்டது என்று சொல்வதைவிட, அருளால் ஏற்பட்டது என்றுதான் சொல்லவேண்டும். இப்படியாக, அந்த சில நிமிடங்களுக்கு சுவாசத்தை கவனித்ததால் அவருக்குள் ஒரு புதிய ஆன்மீகப் பாதை உருவானது. இது அந்த மனிதரின் எதிர்காலத்தை பலவிதங்களில் மாற்றிப் போட்டது.

**சிவயோகி**

தன்னுடைய அடுத்த இரண்டு பிறவிகளில், வாழ்வின் உச்ச தன்மையை தேடும் தீவிரமான சாதகராக அவர் இருந்தார். சிவன்தான் தன்னுடைய பாதை என்று கொண்டிருந்தார். இரண்டு முறையுமே அவர் சிவயோகி என்றுதான் அழைக்கப்பட்டார். ஆன்மீக சாதகராக இருந்த முதல் பிறவியில் அவர் முப்பத்தேழு வயதிலேயே இறந்து போனார். எந்த நோயும் கிடையாது; வெறும் பசியாலும், தன்னுடைய சாதனையின் தீவிர தன்மையாலும் போய்விட்டார். அவர் ஞானம் பெற்றவராக இறக்கவில்லை. ஆனால் முழு கண்ணியத்தோடு இறந்து போனார். கத்திக்கொண்டும், கதறிக்கொண்டும் உயிரை விடாமல், தன்னுடைய சாதனாவை செய்து தியானத் தன்மையில் உயிர் விடவே முயற்சித்தார். இரண்டாவது முறை, அவர் இதைவிட சிறந்த பயனை பெற்றவராக விளங்கினார். இந்த முறை ஐம்பத்தைந்து வயது வரை வாழ்ந்தார். இதயத்தை நொறுக்கிடும் அளவிற்கு கடுமையான ஆன்மீக சாதனைகளை செய்தார். ஆனால் இன்னும் தன்னை உணராமல் இருந்தார். இந்தக் கட்டத்தில்தான் இவர் உச்சபட்ச அருளுக்கு பாத்திரமானார்.

வழக்கமாக, நான் என் குருவைப் பற்றி பேசுவது கிடையாது. அவருடைய பெயர் ஸ்ரீபழனி சுவாமிகள். அளவிடமுடியாத பிரம்மாண்டம் அவர். அது அவருடைய நிஜமான பெயர் இல்லை. தமிழ்நாட்டில், பழனிக்கு பக்கத்தில் ஓரிடத்தில் குறிப்பிட்ட சமாதி நிலையில் அவர் இருந்தார் - அதனால் அந்த பெயரை கொண்டு அவரை அழைத்தார்கள். அவர் ஏறக்குறைய இரண்டரை வருடங்கள் வரை அந்த நிலையிலேயே இருந்தார். அதற்குப் பிறகு தேசம் முழுவதும் பயணம் செய்தார், ஏராளமானவர்களுக்கு ஞானம் அளித்தார். சிவயோகியின் இரண்டாவது பிறவியில் அவரிடம் வந்தார். தனித்து, உதவியற்ற நிலையில் பரிதாபமாக இருக்கும் அந்த சாதகருக்கு தன்னுடைய அருளை வழங்கினார்.

அவரைப் பார்த்த மாத்திரத்திலேயே அவர்தான் தன்னுடைய குரு என்பது சிவயோகிக்கு புரிந்தது. அதுவரை எந்த மனிதரையும் தன்னுடைய குருவாக அவர் ஏற்றுக்கொண்டிருக்கவில்லை. சிவன்தான் ஒரே குரு என்றபடி வாழ்ந்தார். சிவனே நேரில் வந்து தனக்கு தீட்சை அளிக்கவேண்டும் என்று விரும்பினார். ஆனால் ஸ்ரீபழனி

சுவாமிகளை பார்த்தவுடன், அவர் உள்தன்மையின் உச்சத்தில் இருக்கும் உயிர் என்பதை சிவயோகி புரிந்துகொண்டார். தன்னை அவரிடம் அர்ப்பணித்தார். ஆனாலும், அவருக்குள் இன்னும் எங்கேயோ கொஞ்சம் தடை இருந்தது. அவரால் இன்னொரு மனிதரிடம் தன்னை சமர்ப்பிக்க முடியவில்லை. சிவனைத் தவிர வேறு யாரிடமும் தன்னை முழுமையாக அர்ப்பணிக்க முடியாதவராக அவர் இருந்தார். அதனால், குருநாதர் தன்னுடைய கருணையின் மிகுதியால், தானே அவர் முன் சிவனின் உருவத்தில் தோன்றினார். சிவயோகி சரணடைந்தார். ஸ்ரீபழனி சுவாமிகள் தன்னுடைய கைகளாலோ பாதத்தாலோகூட அவரை தொடவில்லை; அவர் தன்னுடைய கையிலிருந்த கோலால் சிவயோகியின் ஆக்ஞா சக்கரத்தில் தட்டினார். அந்தக் கணத்திலேயே சிவயோகி தன்னை உணர்ந்தார், பரிபூரண நிலை அடைந்தார்.

குருவுடன் ஏற்பட்ட இந்த தொடர்பு சில மணிநேரங்களுக்கு மட்டுமே இருந்தது. அதற்குப் பிறகு அவர்கள் இருவரும் ஒருபோதும் சந்தித்துக் கொள்ளவில்லை. ஆனால் எப்போதும் தொடர்பிலேயே இருந்தார்கள். ஸ்ரீபழனி சுவாமிகள் வெள்ளியங்கிரி மலைகளில் மஹாசமாதி அடைந்தார். ஏதோ ஒரு காரணத்தால், தியானலிங்கத்தை உருவாக்குவதற்கு தகுந்த மனிதர் சிவயோகிதான் என்று குருநாதர் அடையாளம் கண்டார். அந்தப் பொறுப்பை அவரிடம் ஒப்படைத்தார்; பேச்சின் மூலம் அல்ல, வார்த்தைகளின் மூலம் அல்ல - தியானலிங்கத்தை பிரதிஷ்டை செய்வதற்கு தேவைப்படும் மகத்தான நுட்பங்கள் அத்தனையும் வார்த்தைகளே இல்லாமல் குருநாதரிடமிருந்து சிவயோகிக்கு பரிமாறப்பட்டன. தியானலிங்கத்தை அமைத்திடும் தன் பணியை நோக்கி செயல்பட ஆரம்பித்தார் சிவயோகி. ஆனால் தேவையான வளமும் ஆதரவும் இல்லாததால், தன்னுடைய குருவின் கனவை அந்தப் பிறவியில் அவரால் நிறைவேற்ற முடியவில்லை. அதனால், அந்த பிறவியில் அதற்குப்பின் வாழ்ந்த காலத்தை பெரும்பாலும் கண்மூடிய நிலையிலேயே கழித்தார்.

### சத்குரு ஸ்ரீபிரம்மா

தியானலிங்கத்தை உருவாக்கும் பணியை தொடரும் நோக்கத்தில், சிவயோகி மறுபடியும் சத்குரு ஸ்ரீபிரம்மாவாக வந்தார். இதற்கான பணியை தமிழ்நாட்டில் ஆரம்பித்தார். மாநிலம் முழுவதும் பரவலாக பயணித்தார், பல்வேறு இடங்களில் சிறிய ஆசிரமங்களை அமைத்தார். ஆனால், தியானலிங்கத்திற்கான பணி கோயம்புத்தூரை சுற்றித்தான் அமைந்திருந்தது. இங்கே இருக்கும் சமுதாயத்திடமிருந்து பெரிய எதிர்ப்பை சந்திக்க வேண்டியிருந்தது. தெய்வீகத்தின் உச்சபட்ச வெளிப்பாடு தியானலிங்கம். அதனால் அது வாழ்க்கையின் எல்லா அம்சங்களையும், வெளிப்பாடுகளையும் உள்ளடக்கியதாக இருக்கிறது. இதன் காரணமாக,

இதை பிரதிஷ்டை செய்வதற்கு ஆண்களும் பெண்களும் சேர்ந்து தீவிரமான தியானப் பயிற்சிகளில் ஈடுபடுவது அவசியமாக இருக்கிறது. ஆனால், ஒரு ஆணும் பெண்ணும் சேர்ந்து இருப்பது என்ற உடனேயே, மக்களால் நினைக்க முடிந்த விஷயம் ஒன்று மட்டும்தான். அதனால் இந்தப் பணிக்கு பலத்த எதிர்ப்பு உருவானது, அவர் அந்த இடத்தை விட்டே வெளியேறும் சூழ்நிலை உருவாக்கப்பட்டது. தன்னுடைய குருவின் சங்கல்பத்தை நிறைவேற்ற முடியவில்லை என்பதால் அவருக்கு மிகுந்த கோபம் ஏற்பட்டது. நெருப்பில் எரிந்து கொண்டிருப்பதை போன்ற கடுமையான கோபத்தோடு கோயம்புத்தூரை விட்டு அவர் வெளியேறினார்.

சத்குரு ஸ்ரீபிரம்மாவின் வாழ்க்கையில் மிகவும் மோசமான காலம் இதுதான். அதேசமயம் பலவிதங்களில், இந்த காலத்தில்தான் மிகச் சிறந்த விஷயங்கள் வெளிப்பட்டன. சில பிறவிகளாக செய்திருந்த ஆன்மீக சாதனையும், அதற்குப்பின் குருநாதர் அருளிய அளப்பரிய கருணையும் தன்னுடன் இருந்ததால், தான் எடுத்த காரியம் நிச்சயமாக நிறைவேறும் என்ற உறுதி அவருக்கு இருந்தது. ஆனால், மிகச் சாதாரணமான மனிதர்கள் சிலர் அதைத் தன்னிடமிருந்து பறித்துவிட்டார்கள் என்பதால் கடுமையான கோபத்தில் எரிந்தார். அவர்களை குறைத்து மதிப்பீடு செய்துவிட்டோம் என்று உணர்ந்தார். அறியாமையின் ஆற்றலை ஒருபோதும் குறைத்து மதிப்பிடக்கூடாது என்பதை புரிந்துகொண்டார். அது மிகவும் சக்திவாய்ந்ததாக இருக்கிறது; பெரும்பாலான நேரங்களில் அறியாமைதான் உலகத்தை ஆட்சி செய்கிறது. தன்னுடைய புரிதலும், தனக்குள் இருக்கும் நெருப்பும், தன்னுடைய ஞானமும் மட்டுமே வேலையை முடித்துவிடும் என்று நினைத்தார். ஆனால் ஞானிகள் எப்போதும் தனியாளாகவே இருக்கிறார்கள். அறியாமையில் இருப்பவர்கள் கூட்டம் கூட்டமாக இருக்கிறார்கள். அதில் மிகப்பெரிய சக்தியே அடங்கி இருக்கிறது.

உலகத்தில் இயங்குவதற்கு தேவையான சாமர்த்தியமான கணக்குகளை அவர் போட்டிருக்கவில்லை. அதற்கான திறமை இல்லாததால் அப்படி இருக்கவில்லை - இதை முடித்திட தன்னுடைய நெருப்பும், ஞானமும் மட்டும் போதுமானதாக இருக்கும் என்று நினைத்திருந்தார் - அதனால் தந்திரமான கணக்குகள் எதையும் அவர் செய்யவில்லை. ஆனால் உலகம் என்னவோ எல்லா நேரத்திலும் அப்படி செயல்படுவது கிடையாது. உலகின் பொருள்ரீதியான விஷயங்களை, பல்வேறு விதமான மனிதர்களை, கையாளும் விதத்தில்தான் கையாளவேண்டும். இல்லாவிட்டால் அது வேலை செய்யாது. எல்லோருக்குமே இது ஒரு அற்புதமான பாடமாக அமைந்திருக்கிறது - இந்த பாடத்தை என்

வாழ்க்கையில் ஒரு கணத்திற்குகூட நான் மறப்பதில்லை - உங்களுக்குள் தெய்வீகத்தின் வெளிச்சம் இருந்தாலும், உங்களைச் சுற்றிலும் இருட்டு இன்னும் இருந்து கொண்டுதான் இருக்கும். உங்களுக்கு பின்னால் இருக்கும்படி இன்னும் பல விளக்குகளை நீங்கள் உருவாக்காமல் இருந்தால், நீங்கள் தொடர்ச்சியாக திரும்பித் திரும்பி என்ன நடக்கிறது என்று பார்த்துக்கொண்டே இருக்க வேண்டியிருக்கும்.

சத்குரு ஸ்ரீபிரம்மா தனித்தே இருந்தார். அவர் ஏற்றிவைத்த தீபங்களாக இங்கேயும் அங்கேயும் பல மனிதர்கள் இருந்தாலும், அவர்கள் தன்னை பின்தொடர்ந்து வருவதை அவர் விரும்பவில்லை. அதனால் அவர் தனித்துதான் இருந்தார். அவர் தனியாக இருந்ததால், அவருக்குப் பின்னால் இருள் படர்ந்து இருந்தது. அது அவரை எப்போதும் பின்தொடர்ந்தது. அது அவருடைய வாழ்க்கையின் நோக்கத்தை நிறைவேற்ற விடாமல் தடுத்தது. இது எல்லோருக்குமே ஒரு நல்ல பாடம்தான்: சத்குரு ஸ்ரீபிரம்மாவை போன்ற மகத்தான ஒரு மனிதரால் கூட தன்னுடைய பிறவியின் நோக்கத்தை நிறைவேற்ற முடியவில்லை. மனிதர்களால் செய்ய முடியாத விஷயங்கள் என்று நினைக்கப்பட்டதை எல்லாம் அவரால் எளிதில் செய்திட முடியும். அப்படிப்பட்டவர் வெற்றி அடைய முடியவில்லை.

நீங்கள் எத்தனை விஷயங்களை செய்தாலும், நீங்கள் எடுத்துக்கொண்ட நோக்கத்தை நிறைவேற்ற முடியவில்லை என்றால், அது ஒரு தோல்வியாகத்தான் பார்க்கப்படுகிறது. சத்குரு ஸ்ரீபிரம்மா தோல்வி அடைந்தார், அது அவருக்கு பிடிக்கவே இல்லை; அது அவருக்கு துளியும் பிடிக்கவில்லை. அதனால் அவர் கடுமையான கோபம் அடைந்தார். அவர் எப்போதும் கோபமாகவே இருந்தார் - அவர் குறிப்பிட்ட யாரைப் பற்றியும், எதைப் பற்றியும் கோபமாக இருக்கவில்லை, மிகத் தீவிரமான நிலையில் இருப்பதற்கு கோபத்தை ஒரு கருவியாகப் பயன்படுத்தினார்.

அந்த கோபத்தில் அவர் நடந்துபோக ஆரம்பித்தார் - எந்த குறிப்பிட்ட திசையிலும் நடக்கவில்லை - அப்படியே நடந்துபோனார். அவருடைய உக்கிரத்தைப் பார்த்து யாராலும் அவரை நெருங்கக்கூட முடியவில்லை. விபூதி என்ற ஒரே ஒரு சிஷ்யர் மட்டும் அவரைப் பின்தொடர்ந்து நடந்தார். மூன்று நான்கு நாட்களுக்கு உணவுக்கும், தூக்கத்திற்கும், ஏன் உட்காருவதற்குக்கூட நிற்காமல் நடந்துகொண்டே இருந்தார் சத்குரு ஸ்ரீபிரம்மா. இந்த சமயத்தில் சிஷ்யர் அவரை பின்தொடர்ந்து போவார், குருநாதர் போகும் திசையை கணித்து, உணவை சமைத்து எடுத்துக்கொண்டு ஓடிப்போய் குருநாதரை அடைவார். அவருக்கு முன்னால் உணவை வைத்துவிட்டு தள்ளி நின்றுகொள்வார். குருநாதர் சாப்பிடுவார் என்ற நம்பிக்கையில் காத்திருப்பார்.

அவர் எங்கே போய்க் கொண்டிருக்கிறார்? தனக்கு கிடைத்த அருளின் மணம் எந்தத் திசையில் வந்துகொண்டிருந்ததோ அந்த வழியில் அவர் தானாகவே நடந்துபோய்க் கொண்டிருந்தார். இப்படியாக, ஆந்திராவில் உள்ள கடப்பா என்ற ஊரை நோக்கிப் போய்க்கொண்டிருந்தார். அவர் நடக்க ஆரம்பித்தபோது தான் எங்கே போகிறோம் என்பதைப் பற்றியெல்லாம் அவர் யோசிக்கக்கூட இல்லை. தன்னுடைய கோபத்தை தணித்துக்கொள்ள, கால்போன போக்கில் அப்படியே நடந்துபோனார். ஆனால், இயல்பாகவே இந்த திசையில் வந்துவிட்டார். ஏனென்றால், கடப்பாவில் இருக்கும் அந்த கோவிலில்[4] ஸ்ரீபழனி சுவாமிகள் அதிககாலம் வாழ்ந்திருந்தார். ஒருவேளை அந்த இடத்தை அவர் மறுபிரதிஷ்டை செய்திருக்கலாம்.

ஒருவழியாக, அந்த கோவிலை வந்தடைந்தபோது அவருடைய கோபம் இன்னும் தணிந்திருக்கவில்லை. நான்கைந்து மாதங்கள் ஆனபிறகும், இன்னும் கோபமாகவே இருந்தார். சத்குரு ஸ்ரீபிரம்மாவையும், அவருடைய சிஷ்யரையும் யாராலும் நெருங்கக்கூட முடியவில்லை. அவர்கள் ஒன்றுமே செய்யவில்லை. யாருக்கும் தீங்கு ஏற்படுத்தவில்லை. அவர்கள் மிகவும் உக்கிரமாக இருந்தார்கள், அவ்வளவுதான். காட்டு விலங்குகளை விட உக்கிரமாக இருந்தார்கள். அவர்கள் வெறுமனே உட்கார்ந்து கொண்டு இருந்தாலும், அவர்களுக்குப் பக்கத்தில் போக யாருமே விரும்பவில்லை. சில நாட்களுக்குள், கோவிலில் இருந்த பூஜாரிகள் எல்லோரும் வெளியேறிவிட்டார்கள். அந்த மனிதரின் தீவிரத்தை அவர்களால் தாக்குப்பிடிக்க முடியவில்லை. தனக்கு காலம் குறைவாகவே இருக்கிறது என்பதை சத்குரு ஸ்ரீபிரம்மா அறிந்திருந்தார். கர்மரீதியான சில கட்டுப்பாடுகளால், அடுத்த இரண்டு வருடங்களுக்குள் தன் உடலை விடவேண்டியிருக்கும் என்று அவருக்கு தெரிந்திருந்தது.

அவர் கொஞ்சம் சாந்தம் அடைந்தபிறகு, தோல்வியால் ஏற்பட்ட கோபத்தையும் அவமானத்தையும் கொஞ்சம் இறக்கி வைத்தபிறகு, உட்கார்ந்து சில சாமர்த்தியமான கணக்குகளை போட ஆரம்பித்தார். உக்கிரமான, கட்டற்ற, எதைப்பற்றியும் கவலைப்படாத யோகியாக இருப்பதிலிருந்து நடைமுறைக்கு தகுந்த, கணக்குகளில் கைதேர்ந்த, கட்டுப்படுத்தப்பட்ட நெருப்பாக இருக்கும் நிலைக்கு இறங்கி வந்தார். அடுத்த ஜென்மத்தில் தியானலிங்கத்தை உருவாக்கி முடிப்பது எப்படி என்று தன்னுடைய சிஷ்யரோடு உட்கார்ந்து திட்டம் தீட்டினார். பல விஷயங்கள் அங்கேதான் நிர்ணயிக்கப்பட்டன - பிரதிஷ்டையில் ஈடுபட வேண்டியவர்கள் யார், அவர்கள் எங்கே பிறக்கவேண்டும், யாருடைய

4 ஆந்திர மாநிலத்தின் தேவூனி கடப்பாவில் உள்ள சோமேஸ்வரர் கோவில்.

கர்ப்பத்தில் பிறக்கவேண்டும், எப்படி எந்த சமயத்தில் பிறக்கவேண்டும் - தேவைப்பட்ட ஒவ்வொரு அம்சமும் கவனமாக திட்டமிடப்பட்டது. தன் நோக்கத்தில் இடையூறாக தோன்றக்கூடிய விஷயங்களுக்கும் உறுதியான தீர்வுகள் உருவாக்கப்பட்டன. தான் எப்படிப்பட்ட மனிதராக பிறக்கவேண்டும், தன்னுடைய உடல் அமைப்பு எப்படி இருக்கவேண்டும், தன்னுடைய மனநிலை எப்படி இருக்கவேண்டும் என்றுகூட முன்கூட்டியே நிர்ணயித்தார் சத்குரு ஸ்ரீபிரம்மா. எல்லாமே அந்த இடத்திலேயே உருவாக்கப்பட்டது. தியானலிங்கத்திற்கான அடிப்படை செயல்திட்டம் அந்த கடப்பா கோவிலில்தான் உருவாகியது.

அதற்குப்பின் கடைசி முறையாக சத்குரு ஸ்ரீபிரம்மா கோயம்புத்தூருக்கு திரும்ப வந்தார். தன்னுடைய குருவின் சமாதி அமைந்திருந்த வெள்ளியங்கிரி மலைகளை நோக்கி போய்க்கொண்டிருந்தார். அன்று மலையடிவாரத்தில் ஏராளமானவர்கள் கூடியிருந்தார்கள். அவர்களிடம் சத்குரு ஸ்ரீபிரம்மா, "இவன் மீண்டும் வருவான்" என்று எல்லோர் முன்பும் அறிவித்தார். கடைசி முறையாக அந்த மலையின் மேல் ஏறினார். தன்னுடைய குருவின் சங்கல்பத்தை நிறைவேற்ற முடியாமல், தோல்வியால் தீவிரமாக எரிந்துகொண்டிருந்த சத்குரு ஸ்ரீபிரம்மா இப்போது அபூர்வத்திலும் அபூர்வமான ஒரு விஷயத்தை செயல்படுத்தினார் - அவர் ஒரே சமயத்தில் ஏழு சக்கரங்களின் மூலமாகவும் உடலை விட்டு வெளியேறினார். எல்லா சக்கரங்களின் மீதும் முழுமையான ஆளுமைகொண்ட மிகச்சில குருமார்களில் ஒருவராக இவர் இருந்தார். அதனால் அவர் சக்ரேஷ்வரர் என்று அழைக்கப்பட்டார்.

அந்த சமயத்தில் அவருக்கு நாற்பத்திரண்டு வயதுதான் ஆகியிருந்தது. அதிஅபூர்வமான இந்த சாதனையை அவர் தியானலிங்க பிரதிஷ்டைக்கு தயாராகும் நோக்கத்தில் செய்தார். தன்னால் சமூக சூழ்நிலையை சமாளிக்க முடியாமல் போனதால்தான் அவர் தோல்வி அடைந்தார் என்று அவருக்குத் தெரிந்திருந்தது. இருந்தாலும், தன்னுடைய திறமைகளில் எந்த குறையும் இல்லை என்பதை தனக்குத்தானே உறுதி செய்துகொள்ள விரும்பினார், அதற்காகவே இப்படி செய்தார். ஏழு சக்கரங்களின் மூலமும் உடலைவிட்டு வெளியேறுவது என்றால், அந்த மனிதருக்கு 114 சக்கரங்களின் மீதும் முழுமையான ஆளுமை இருக்கிறது என்று அர்த்தம். அந்த வல்லமையின் காரணமாகத்தான், இப்போது நாம் எங்கே போனாலும் மனிதர்களுக்குள் வெடித்திடும்படி நிகழும் தீவிரமான அனுபவங்களை அளிக்க முடிகிறது. அவருடைய குருவின் சமாதி வெள்ளியங்கிரி மலைகளில்தான் இருந்தது. அதனால், இந்த நம்பமுடியாத சாதனையை நிகழ்த்திட அவர் வெள்ளியங்கிரி மலையின் உச்சியை தேர்ந்தெடுத்தார் - தன்னுடைய குருவின் மடியில்

அது நிகழ்ந்தது. இப்படியாக, அடுத்தமுறை வரும்போது தோல்வி ஏற்படவோ, குறிதவறி போகவோ வாய்ப்பே இல்லாதபடி தனக்குள் உறுதிப்படுத்திக் கொண்டார்.

அவர் தன் உடலை நீத்து சமாதி அடைந்த இடம் இன்றைக்கும் இருக்கிறது. அது அதிர்வுமிக்க தன்மையோடு இருக்கிறது; சக்தியால் அதிர்வுற்றுக் கொண்டிருக்கிறது. அங்கே போகும் மனிதர்கள் அதை உணர்ந்து அனுபவிக்க முடியும். ஏழாவது மலையின் உச்சி, குளிர்ச்சி மிகுந்த காட்டுத்தனமான காற்று எப்போதுமே வீசிக்கொண்டிருக்கும் இடம், அது சரியாக மலையின் விளிம்பில் அமைந்திருக்கும் விதம் - இந்த தன்மைகளே அந்த மனிதரைப் பற்றி அத்தனையும் சொல்லிவிடுகின்றன - இப்படிப்பட்ட இடத்தில்தான் அவர் மிகவும் சௌகரியமாக இருந்தார். இது மிகவும் சக்திமிக்க இடமாகும். நீங்கள் தியானம் செய்பவராக இருந்தால், கொஞ்சம் உணரும் தன்மை இருந்தால், அங்கே போகும்போது உங்களுக்கு கிறுக்குபிடித்தது போல் ஆகிவிடும். அவர் இந்த இடத்தில் குறிப்பிட்ட நோக்கத்தோடு வெளியேறியதால் அந்தளவுக்கு சக்திமிக்கதாக இருக்கிறது. அவர் நிறைவேற்றுவதற்கான ஒரு குறிக்கோள் இருந்தது, அதனால் குறிப்பிட்ட விதத்தில் அவர் வெளியேறினார். இது முக்தியையும் கரைதலையும் பற்றியது மட்டும் இல்லை. தன்னுடைய சக்திகளை, ஏன் தன்னுடைய மரணத்தையும்கூட, எதிர்காலத்தில் தான் விரும்பிய விதத்தில் தோன்றுவதற்கு பயன்படுத்திக் கொண்டார்.

சத்குரு ஸ்ரீபிரம்மா தன்னுடைய உடலை விடுவதற்கு முன்பாக, தான் ஆரம்பித்த பணியை சாதிப்பதற்கு இன்னொரு முயற்சியையும் செய்தார். ஆனால் அது பயன் அளிக்கவில்லை. இந்தியாவின் மத்திய பாகத்தில் வாழ்ந்த ஒரு யோகி அப்போதுதான் தன்னுடைய உடலை விட்டு வெளியேறி இருந்தார். அவருக்கு இருபத்தாறு வயதுதான் ஆகியிருந்தது. பதினோரு வயதில் ஞானமடைந்த பாலயோகியாக அவர் இருந்திருந்தார். இந்த யோகி மூன்றரை வருடங்களுக்கு சமாதி நிலையில் இருந்தார். அவர் வெளியே வந்தவுடன், தன்னுடைய அனுபவத்தை பகிர்ந்துகொள்ள ஆவலாக இருந்தார். இதை பரிமாறுவதற்கு ஐந்து ஆறு சிஷ்யர்கள்தான் அவருக்கு கிடைத்தார்கள். அவர்களும் போதிய அளவுக்கு உண்மையாக ஈடுபடவில்லை. அதனால் அவர் கோபம் அடைந்தார், தன் உடலை விட்டு போய்விட்டார்.

உடனடியாக சத்குரு ஸ்ரீபிரம்மா இந்த பாலயோகியின் உடலை எடுத்துக் கொண்டார். அதன்மூலம் தன்னுடைய குறிக்கோளை நிறைவேற்றிக் கொள்ள பார்த்தார். மறுபடியும் பிறந்து வந்து, வாழ்க்கையின் நிகழ்வுகளையெல்லாம் இன்னொரு முறை அனுபவித்திட அவருக்கு பொறுமையில்லை என்பதால் இப்படி செய்தார். ஒரே சமயத்தில் சத்குரு

ஸ்ரீபிரம்மா இரண்டு வெவ்வேறு உடல்களில் இருந்தார். சிலமாதங்களுக்கு இப்படி இருந்தார். தியானலிங்கத்தை உருவாக்கிடும் இந்த முயற்சியில், தன்னைச் சுற்றி சில சிஷ்யர்களை சேகரித்தார். தனக்கு கிடைத்திருக்கும் கால அவகாசம் மிகவும் குறைந்ததாக இருப்பதால், பயங்கரமான தீவிரத்தோடு அவர்களுடன் செயலில் ஈடுபட்டார். அவர்கள் தன்னுடைய எதிர்பார்ப்புகளுக்கு ஈடுகொடுக்க முடியாதபோது, தன் முயற்சியை அப்போதைக்கு தள்ளிவைக்க முடிவுசெய்தார். "இவன் மீண்டும் வருவான்," என்ற பிரகடனத்தோடு விடைபெற்றார்.

## "மீண்டும் வருவீர்களா சத்குரு?"

மக்கள் என்னிடம் கேட்கும் கேள்வி: "பௌத்த பாரம்பரியத்தில் எத்தனையோ குருமார்கள் தங்களை பின்பற்றுபவர்களுக்காக மீண்டும் மீண்டும் பிறந்து வந்திருக்கிறார்கள். நீங்களே உங்களுடைய குருவின் கனவை நிறைவேற்றுவதற்காக ஞானத்திற்கு பிறகு இரண்டு பிறவிகளை எடுத்திருக்கிறீர்கள். அதனால், நீங்கள் மீண்டும் ஒருமுறை வருவீர்களா? ஒருவேளை இந்தப் பிறவியில் நாங்கள் தேரவில்லை என்றால், கடைசியாக இன்னொரு முறை வருவீர்களா?"

இப்போது இன்னொரு முறை உங்களிடம் உறுதிப்படுத்தும்படி சொல்லி விடுகிறேன்: நிச்சயமாக நான் திரும்பி வரப்போவதில்லை. என்னுடைய எக்ஸ்பைரி டேட் எப்போதோ முடிந்துவிட்டது, நான் எப்போதோ காலாவதி ஆகிவிட்டேன். உணரும் திறன் கொஞ்சம் அதிகமாக இருப்பவர்களுக்கு, நான் இல்லவே இல்லை என்பது தெளிவாக தெரிகிறது. நிஜமாகவே இந்த நிகழ்ச்சி நடந்தது: ஈஷா தியான அன்பர்களைக் கொண்ட ஒரு பெரிய குழுவை ஒவ்வொரு வருடமும் இமயமலைக்கு நாம் அழைத்துப்போவது வழக்கம். அவர்கள் போகும் இடங்களில் தபோவனம் என்ற இடமும் ஒன்று. அந்த வருடம் ஏதோ ஒரு காரணத்திற்காக நான் கோமுக் என்ற இடத்திலேயே தங்கிவிட்டேன். நான் அவர்களோடு தபோவனத்துக்கு போகவில்லை. தபோவனத்தில் பெங்காலி மா என்ற பெண்மணி இருக்கிறார். பல வருடங்களாக அவர் அங்கே வாழ்ந்து கொண்டிருக்கிறார். அவர் நம் தியான அன்பர்களிடம், "நீங்களெல்லாம் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று கேட்டிருக்கிறார். இவர்கள், "நாங்கள் ஈஷா தியான அன்பர்கள், எங்களுடைய குருவோடு வந்திருக்கிறோம்," என்று சொல்லியிருக்கிறார்கள். அவர், "உங்கள் குருவின் புகைப்படத்தை நான் பார்க்கலாமா?" என்று கேட்டிருக்கிறார். அவர்களும் என்னுடைய ஒரு படத்தை எடுத்து காட்டியிருக்கிறார்கள். அவர் அதைப் பார்த்துவிட்டு, "ஆஹா, இவர் அற்புதமான மனிதராக இருக்கிறாரே! ஆனால், இவர் போய்ச்சேர்ந்து பல காலமாகிறதே!" என்று சொல்லிவிட்டார். அதற்கு

இவர்கள், "இல்லை இல்லை, அவர் எங்களோடு வந்திருக்கிறார், எங்கள் கூடவே நடந்துகொண்டுதான் இருக்கிறார்," என்று சொல்லியிருக்கிறார்கள். அவரோ, "அதற்கு வாய்ப்பே இல்லை! அவர் போய்விட்டார்," என்று சொல்லிவிட்டார்.

இவர்கள் திரும்பவும் கோமுக் வந்து சேர்ந்தார்கள். தாங்கள் தபோவனத்துக்கு போயிருந்த சமயத்தில் நான் போய்ச் சேர்ந்துவிட்டேன் என்று இவர்கள் நினைத்துக் கொண்டார்கள். என்னைப் பார்த்தபோது கொஞ்சம் மிரண்டு போனார்கள். நடந்த விஷயத்தை என்னிடம் சொன்னார்கள். நான் என்னை சிறப்பான விதத்தில் மறைத்து வைத்துக் கொண்டிருக்கிறேன் என்று நினைத்திருந்தேன். ஆனால், இந்தப் பெண்மணி அதை பார்க்க முடிந்திருக்கிறது என்றால், அதை அந்தளவுக்கு சிறப்பாக நான் மறைக்கவில்லை என்றுதானே அர்த்தம்! நான் நிஜமானவன்; அல்லது பெரும்பாலானவர்கள் இருக்கும் விதத்தைவிட அதிக நிஜமானவனாக என்னை ஆக்கிக் கொண்டிருக்கிறேன். ஆனால் மனிதர்களின் பட்டியல் கொண்ட கணக்கு புத்தகத்தின்படி - நான் போய்ச்சேர்ந்து பல காலம் ஆகிறது. எது எப்படியோ, இது எனக்கு ஏராளமான சுதந்திரத்தை அளித்திருக்கிறது. அதேசமயம், இன்னொரு முறை வரும்படி இதை நீட்டிப்பது சரியாக இருக்காது. இந்த முறைகூட, தியானலிங்க பிரதிஷ்டை என்ற திட்டத்தால் நான் கட்டப்பட்டு இருந்ததால்தான் இப்படி செய்யும்படி ஏற்பட்டது. இல்லாவிட்டால் இப்படி இருந்திருக்காது.

இப்போது இருக்கும் நிலையிலேயே, உயிர் தொடர்வதற்கான அடிப்படை கட்டமைப்பு எல்லாம் கரைந்து போய்விட்டது. அப்படி இருந்தாலும் நான் இன்னும் இருந்து கொண்டிருக்கிறேன். இதுவே நல்லது கிடையாது, உயிரின் அடிப்படையில் இது நல்ல விஷயமாக பார்க்கப்படுவதில்லை. இந்த உயிரை தொடர்வதற்கு தேவையான அடிப்படை கட்டமைப்பு போய்விட்டது என்றால், அந்த மனிதருக்கு இங்கே எந்த வேலையும் கிடையாது; அவர் போய் சேர்ந்திருக்க வேண்டும். நாம் முக்தியை நோக்கி தீவிரமாக இருந்ததால், கட்டமைப்புகள் எல்லாவற்றையும் கரைத்துக் கொண்டோம். அதன்பிறகு, அசாத்தியமான குறிக்கோளை கொண்ட ஒரு செயல்திட்டம் நமக்கு வந்துசேர்ந்தது. அதனால் மறுபடியும் மறுபடியும் தொடர்ந்துகொண்டே இருந்தோம். இப்போது அந்த நோக்கமும் முடிந்து போய்விட்டதால், நான் எதற்காக இன்னும் தொடர்ந்து கொண்டிருக்கிறேன் என்று ஒருவருக்கும் புரியவில்லை. ஒருவேளை, இன்னும் சில பௌர்ணமிகளை பார்ப்பதற்காக தங்கியிருக்கிறேனோ என்னவோ! அப்படியெல்லாம் இல்லை. எத்தனையோ எத்தனையோ முழு நிலவுகள் என் நினைவில் இருக்கின்றன. அதோடு, அந்த நிலா ஒன்றும் மாறுவதே இல்லை, அப்படியேத்தான் இருக்கிறது!

எல்லாம் எப்படி நிகழ்கிறது என்பதை ஒருவர் புரிந்துகொண்ட பிறகு, நாளைக்கு முற்றிலும் புதிய பிரபஞ்சம் ஒன்று உருவாக்கப்பட்டாலும், அங்கே போய் பார்க்கவேண்டும் என்ற ஆர்வம் எதுவும் ஏற்படாது. அதாவது, ஒரு லட்சம் அறைகள் கொண்ட ஒரு பிரம்மாண்ட ஹோட்டல் இருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். அங்கே ஒரு கஸ்டமராக போனீர்கள் என்றால், உங்களின் அறையை மட்டும் திறந்திடும் சாவியை தருவார்கள். நீங்கள் ஒரே ஒரு அறைக்குள் மட்டும்தான் நுழைகிறீர்கள், அதனால் நுழையும்போது உங்களுக்கு ஒரே உற்சாகமாக இருக்கிறது. “இதைவிட சிறந்த காட்சியை இன்னொரு அறையிலிருந்து பார்க்கமுடியும்,” என்று ஹோட்டலின் மேனேஜர் சொல்கிறார். “உங்களுக்கு அது வேண்டுமா?” என்று கேட்டால், “ஆமாம், ஆமாம், எனக்கு விருப்பம்தான்!” என்று சொல்வீர்கள். அதேசமயம், அந்த ஹோட்டலை சுத்தப்படுத்தும் ஒரு பணிப்பெண் இருக்கிறார். அவரிடம் எல்லா அறைகளையும் திறந்திடும் எளிமையான சாவி ஒன்று இருக்கிறது. நீங்கள் விரும்பும் அந்த இன்னொரு அறையைப் பற்றி அவருக்கு ஆர்வம் ஏற்படுவதில்லை. அவர் ஏராளமான அறைகளைப் பார்த்திருப்பார். ஒவ்வொரு அறையையும் வித்தியாசப்படுத்திக் காட்டும் மேலோட்டமான, சின்ன சின்ன அலங்கரிப்புகளை எல்லாம் அவர் பார்த்துவிட்டார்.

நிச்சயமாக அந்த ஒரு லட்சம் அறைகளையும் அவர் திறக்கவில்லை. ஆனாலும், அவர் ஏராளமான அறைகளைப் பார்த்திருக்கிறார், தினமும் அதை சுத்தப்படுத்துகிறார். அதனால் இன்னொரு புதிய அறைக்குள் நுழைந்து பார்த்திடும் ஆர்வம் அவருக்கு ஏற்படுவதில்லை. ஞானமும் இதைப் போன்றதுதான். உங்களிடம் இந்த சாவி கிடைத்துவிட்டால், நீங்கள் எத்தனை அறைகளை வேண்டுமானாலும் திறந்து பார்க்கலாம். நாம் அத்தனையும் திறந்து பார்த்திருக்கிறோமா? கிடையாது. அதற்கான நேரமும், ஆர்வமும் இருந்தால் அத்தனையும் திறந்து பார்ப்பது சாத்தியம்தான். ஆனால், ஒரு அறைக்கும் இன்னொரு அறைக்கும் அவ்வளவாக வித்தியாசம் இருப்பதில்லை. அதைப்போலவே, ஒரு புதிய பிரபஞ்சத்திற்குள் நுழைந்தாலும், எல்லாம் வித்தியாசமாக தென்படலாம். ஆனால் அந்த வித்தியாசம் அவ்வளவாக இருப்பதில்லை. அனைத்துக்கும் அடிப்படை ஒன்றாகத்தான் இருக்கிறது. அதனால், ஒருவர் போதிய அளவுக்கு பார்த்துவிட்ட பிறகு, இந்த உயிரை பராமரித்து தொடர தேவையான அடிப்படை கட்டமைப்பை கரைத்துக்கொள்ள ஆரம்பிக்கிறார்.

உயிர் ஒரு குறிப்பிட்ட கால அளவுக்கு மட்டும்தான் இருந்திட முடியும். இப்போதுகூட, என்னைச் சுற்றி இருக்கும் சில மனிதர்களின் துணை இல்லையென்றால், என்னுடைய உடலை என்னால் இப்படியே தக்க வைத்திருக்க முடியாது. நான் நன்றாகவே இருக்கிறேன். அதேசமயம்,

என்னைச் சுற்றி கொஞ்சம் உதவி இல்லையென்றால், என்னுடைய உடலை நிலைபெற்று இருக்கும்படி வைத்திருக்க முடியாது. அது காலாவதியாகி பல காலம் ஆகிறது. அதோடு, டெக்னாலஜியின் அடிப்படையில் பார்த்தால்கூட, நான் மறுபடியும் வருவது என்பது நுட்பம் இல்லாத டெக்னாலஜிதான். அதைவிட கொஞ்சம் சிறப்பாக இயங்கும் விதத்தை நாம் உருவாக்கிக் கொண்டு வருகிறோம். அது மட்டுமில்லை, "இந்த மனிதர் இல்லாமல் போய்விட்டால், என்ன ஆகிடுமோ?" என்று யோசிப்பது சரியானதில்லை. காமராஜர் தமிழ்நாட்டின் முதலமைச்சராக இருந்தபோது இப்படி நடந்தது. இந்த மாநிலத்தில் காணப்படும் அடிப்படை வசதிகளும், கட்டமைப்புகளும் பெரும்பாலும் அவர் காலத்தில் உருவானவைதான். அவருடைய செயல்களின் பலனை நாம் இன்னும் அனுபவித்துக் கொண்டிருக்கிறோம்.

முதல்வராக இருந்த சமயத்தில், ஒருமுறை காமராஜர் மாநிலம் முழுவதும் பயணித்தார். அப்போது மதுரைக்கு பக்கத்தில் எங்கேயோ இருந்தார். அது ஒரு சின்ன கிராமம். அங்கிருந்த போலீஸ் சப்-இன்ஸ்பெக்டரை அப்போதுதான் வேறு இடத்திற்கு மாற்றியிருந்தார்கள். அவர் அந்த இடத்தில் சில வருடங்களாக இருந்திருக்கிறார். மக்களோடு நல்ல உறவும், பந்தமும் இருந்திருக்கிறது, அவர்களுக்காக நிறைய விஷயங்களை செய்திருக்கிறார். மிகவும் பிரபலமான சப்-இன்ஸ்பெக்டராக இருந்திருக்கிறார். அதனால், அவருடைய பணி மாற்றத்தால் மக்கள் வெகுண்டு போயிருந்தார்கள். இந்தியாவில் ஒரு போலீஸ்காரரை மக்கள் நேசிப்பது மிகவும் அபூர்வமான விஷயம், இல்லையா? இவரோ மக்களின் அன்பை சம்பாதித்திருந்தார். அதனால் அவர்கள் எல்லோரும் தங்களுடைய எதிர்ப்பைத் தெரிவித்தார்கள். முதலமைச்சர் அவர்களுடைய ஊருக்கு வந்தபோது, அவரிடம், "இந்த சப்-இன்ஸ்பெக்டரை இடம் மாற்றுவதை நாங்கள் விரும்பவில்லை!" என்று சொன்னார்கள். காமராஜர் அவர்களைப் பார்த்து, "இங்கே இப்படிப்பட்ட அற்புதமான சப்-இன்ஸ்பெக்டர் இருப்பது பிரமாதமான விஷயம்தான். அதேசமயம், இன்னும் எத்தனையோ அற்புதமான சப்-இன்ஸ்பெக்டர்களை உருவாக்கும் திறமை நம்மிடம் இருக்கிறது, அதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். அடுத்து வருபவர் இவரைவிட மேலானவராக இருப்பதை நீங்களே பார்ப்பீர்கள்," என்று சொன்னார். ஒரு அரசியல் தலைவருக்குக்கூட அவ்வளவு விவேகம் இருந்திருக்கிறது. அதிர்ஷ்டவசமாக, நம் நாட்டில் அற்புதமான மனிதர்கள் இருந்தார்கள். ஆனால், துரதிர்ஷ்டவசமாக, அவர்கள் எதையும் செய்திடும் அளவுக்கு அவர்களிடம் அதிகாரம் இருக்கவில்லை!

அதனால் நீங்கள், "தயவுசெய்து மறுபடியும் வாருங்கள் சத்குரு! மறுபடியும் வாருங்கள் சத்குரு!" என்று சொல்லிக் கொண்டிருக்காதீர்கள். இல்லை!

அது தேவையே இல்லை. நாம் உருவாக்கும் அடுத்த தலைமுறை நம்மைவிட எவ்வளவோ மேம்பட்டதாக இருக்கவேண்டும், இல்லையா?

நான் எப்போது போகிறேனோ - அது எப்போதாக இருந்தாலும் சரி - அதற்குப்பின் எண்பது வருடங்களுக்கு என்னுடைய இருப்பு இருந்திடும். இப்போது இருப்பதைவிட, பல மடங்கு அதிக சக்திவாய்ந்ததாக என்னுடைய இருப்பு இருந்திடும். நான் முழுமையாகப் போய்ச் சேர்வதற்கு முன்பாக நீங்கள் எல்லோரும் இறந்துவிட்டீர்கள் என்பதை நிச்சயப்படுத்திக் கொள்ளவே இப்படி! ஆமாம். மனிதர்களை சில பயிற்சிகளில் ஈடுபடுத்திவிட்டால், அவர்களை அதில் முழுமையடையச் செய்யும் பொறுப்பும் நம்மிடம் இருக்கிறது. அதனால்தான் நான் முற்றிலுமாக போய்விடுவதற்குள், என்னால் ஏதோ ஒருவிதத்தில் தொடப்பட்ட ஒவ்வொருவருமே இந்த பூமியிலிருந்து சுத்தமாக துடைக்கப்படுவதை நிச்சயப்படுத்த விரும்புகிறேன். நீங்கள் 160 வயது வரை வாழ வாய்ப்பிருக்கிறது என்று சொல்லி, ஈஷா யோகா வகுப்பில் சில பயிற்சிகளை கற்றுக்கொடுத்தார்கள் அல்லவா? அதனால், என்னுடைய உடல் போனபிறகு இன்னும் எண்பது வருடங்களுக்கு இதை வைத்துக்கொள்கிறேன் - ஒருவேளை நீங்கள் 160 வயது வரைக்கும் வாழ்ந்துவிட்டீர்கள் என்றால்! அதற்காகத்தான் இந்த எண்பது வருடங்கள். எண்பது வருடங்கள் என்பது கிட்டத்தட்ட இன்னொரு பிறவி போன்றதுதான் - என்ன, பொருள் உடல் மட்டும் இருக்காது, அவ்வளவுதான். பொருள் உடல் சார்ந்த விஷயங்களுக்கு போதுமான செயல்முறைகளை அமைத்து வைத்திருப்போம். ஆனால், என்னுடைய இருப்பு இப்போது இருப்பதைவிட மிக மிக சக்தி வாய்ந்ததாக இருக்கும். பொருள் உடலை வைத்திருக்கும் சுமை இல்லாததால், அப்படி இருக்கும்.

அப்படியென்றால், நான் ஒரு உடலற்ற உயிராக இருக்கப் போகிறேனா? என்னுடைய உடலை எரித்துவிட்டாலோ, புதைத்துவிட்டாலோ நான் உடல் இல்லாமல்தானே இருப்பேன் - வேண்டுமென்றால் அப்படி சொல்லிக்கொள்ளலாம். ஆனால், உடல் பல அடுக்குகளில் இருக்கிறது. பூமியிலிருந்து எடுத்துக் கொண்டதை என்னவோ திரும்பக் கொடுக்க வேண்டியிருக்கும். உடலின் மற்ற அம்சங்கள் எல்லாம் - நவீன வார்த்தைகளில் சொல்ல வேண்டுமென்றால் - ஒரு சாஃப்ட்வேர் போல இருக்கிறது என்று சொல்லலாம். அந்த சாப்ட்வேர், குறைந்தபட்சமாக இருக்கும் ஒரு மேடையின் மேல் இன்னும் நின்று கொண்டிருக்கும். இப்போதைக்கு இந்த மேடை பொருள்நிலையில் உறுதியாக இருக்கிறது. இந்த மேடை போய்விட்டால், மிகவும் குறைந்தபட்சமாக இருக்கும் மேடை மேல் அது நிற்கும். பொருள்நிலையில் இருக்கும் இன்னொரு மேடையை அது எடுக்காது, அவ்வளவுதான். பல காரணங்களால்,

பொருள்நிலையில் இருக்கும் மேடையைவிட மிகவும் சிறந்த பலன்களை அளிக்கும்படி இது இருந்திடும்.

அப்படியென்றால், நீங்கள் என்றென்றைக்கும் இருந்துவிட கூடாதா? நீண்டகாலம், குறுகியகாலம், என்றென்றைக்கும் - இப்படியெல்லாம் எதுவுமே கிடையாது. ஏதோ தேவையிருந்தால், ஒருவர் தங்கியிருந்து அதுபோன்ற விஷயங்களை செய்யலாம். ஆனால் அப்படிப்பட்ட தேவை எதுவுமே இல்லையே! இந்த நோக்கத்திற்காக, அதைவிட சிறந்த நுட்பமான ஏற்பாடுகளை நாம் உருவாக்கியிருக்கிறோம். மிகப்பெரிய கூட்டங்களில் பரிமாறக்கூடிய ஆன்மீகப் பயிற்சிகளை நாம் எதிர்காலத்தில் கற்றுக்கொடுப்போம். அதைச் செய்வதற்கு, அந்தளவுக்கு தயாராக வேண்டிய தேவை இருக்காது. அப்படியிருந்தாலும், அது பரிசுத்தமான பயிற்சியாகத்தான் இருக்கும், போலியானதாக ஒன்றும் இருக்காது. இப்போதைக்கு நான் இன்னும் இங்கே இருப்பதால், அதை இப்போது செய்ய அவசியமில்லை என்று நினைத்தேன். இப்போது கூட்டங்களில் வழங்கப்படும் பயிற்சிகளை நான் இன்னும் அதிக நுட்பங்களுடன் வழங்குகிறேன். பெரிய கூட்டங்களில் இருக்கும்போது, மிகவும் நுட்பமான ஒரு பயிற்சியை அங்கிருக்கும் அந்த குறிப்பிட்ட மனிதர்களுக்கு ஏற்றபடி சரிசெய்து அளிக்கிறேன், அவர்களுக்கு அது நிகழும்படி செய்கிறேன். இப்போதைக்கு அந்த விதத்திலேயே அதை நிகழ்த்துவது இன்னும் சாத்தியமாகத்தான் இருக்கிறது. ஆனால், கொஞ்ச காலம் கழித்து பெரும் கூட்டங்களில் வழங்குவதற்கான சில பயிற்சிகள் வெளியிடப்படும், அது ஒரு நீண்டகால காப்பீடு போல அமைந்திடும். எல்லாவற்றுக்கும் மேலாக, தியானலிங்கமே இருக்கிறது. அதனால், நான் என்றென்றைக்கும் நீடித்து தங்குவதற்கு எந்த அவசியமும் கிடையாது. அது சரி, இதையெல்லாம் பற்றி நீங்கள் ஏன் கவலைப்பட வேண்டும்? நீங்கள் எப்படியும் மரணமடைந்து போய் சேர்ந்திருப்பீர்களே!

அத்தியாயம் 12

# இறுதிச்சுற்று

*இந்தப் பிறவியே உங்களுடைய கடைசி பிறவியாக இருக்கும்படி நாம் செய்திடலாம். ஆனால், இதுவே அனைத்தையும்விட அற்புதமான பிறவியாக இருக்கும்படி நாம் செய்யமுடியாது. அதை நீங்கள்தான் செய்துகொள்ள வேண்டும். அதற்கு நீங்கள் சாதனா செய்ய வேண்டியது அவசியம். அந்த வாக்குறுதியை நீங்கள் எனக்கு தந்திட வேண்டும்.*

## ஒரு துளி ஆன்மீகம்

எனக்கு இருபத்தைந்து வயது இருக்கும்போது, எதிர்பாராத விதத்தில் இந்த மகத்தான ஆன்மீக அனுபவம்[1] எனக்குள் வெடித்து எழுந்தது. அதற்குப் பிறகு, பரவசமாக வாழ்வது எப்படி என்று இந்த உலகம் முழுவதற்குமே கற்றுக் கொடுப்பேன் என்று நினைத்தேன் - உண்மையான பரவசத்தில் வாழ்ந்திட கற்றுக்கொடுக்கலாம் என்று நினைத்தேன். "இதுதான் இருப்பதிலேயே உச்சமானது! இதை கற்றுக்கொடுப்பதில் என்ன பிரச்சனை இருக்கமுடியும்? எல்லோருமே இதை பெற்றிட முடியுமே!" என்று நினைத்தேன். ஆனால் இப்போது வயது என்னை துரத்திப் பிடிக்க, என் முடியெல்லாம் நரைத்துப்போக, நானும் பக்குவம் அடைந்துவிட்டேன். இப்போது என்ன நினைக்கிறேன் என்றால், "இவர்களுக்கு நல்லமுறையில் வாழ்வது எப்படி என்று கற்றுக்கொடுக்க முடியவில்லை என்றாலும், நல்லமுறையில் இறப்பது எப்படி என்றாவது கற்றுக்கொடுக்கலாமே!" என்று நினைக்கிறேன். இந்த பூமியில் இருக்கும் பெரும்பாலான மனிதர்கள் மோசமான விதத்தில் இறந்துபோவதை நான் பார்க்கிறேன். அதனால் இது எனக்கு மிகவும் முக்கியமானதாகப் படுகிறது. நலமாக வாழ்வது எப்படி என்று கற்றுக்கொள்பவர்கள் இருந்தால், அது

---

1 1982ல் சாமுண்டி மலையில் சத்குரு அவர்கள் உணர்ந்த ஞானோதய அனுபவத்தைக் குறிக்கிறது.

அவர்களுக்கு அற்புதமாக இருக்கும். ஆனால், மற்றவர்களெல்லாம் நலமாக இறப்பது எப்படி என்றாவது கற்றுக்கொண்டால் அது சிறந்ததாக இருக்கும்.

நலமாக வாழ்வது எப்படி என்று கற்றுக்கொடுப்பதற்கு கொஞ்சம் அதிக செயல் தேவைப்படும். அது எல்லோருக்கும் போய் சேரும்படி நாம் செய்திட முடியாது. ஆனால், அவர்களுடைய மரணமாவது நல்லமுறையில் ஏற்பட வேண்டும், இது மிகவும் முக்கியமானது. ஏனென்றால், ஒரு உயிர் உடலோடு வாழ்ந்திடும் கால அளவைவிட, அது உடலற்ற நிலையில் இருந்திடும் கால அளவு மிக மிக அதிகமானதாகும். உடலை விட்டுப் பிரிந்தபின், அந்த உயிரின் அனுபவம் சொர்க்கத்தைப்போல் இருக்கிறதா, நரகத்தைப்போல் இருக்கிறதா என்பது அவர் எந்த முறையில் இறக்கிறார் என்பதைப் பொருத்துதான் பெரும்பாலும் அமைகிறது. முழுமையாக அதைப் பொருத்துதான் அமைகிறது என்று சொல்லமுடியாது. ஆனால், பெரும்பாலும் மரணம் ஏற்பட்ட விதத்தைப் பொருத்துதான் அமைகிறது[2]. அதனால்தான், உலகின் ஜனத்தொகை முழுவதற்கும் ஒவ்வொரு கணத்திலும் இனிமையாக வாழ்வது எப்படி என்பதை கற்றுக்கொடுக்க முடியாவிட்டாலும், தங்களுடைய வாழ்வின் கடைசி கணத்தையாவது அர்த்தமுள்ளபடி கையாள்வதற்கு நாம் கற்றுக்கொடுக்க வேண்டும். இதனால், அவர்கள் உடலற்ற நிலையில் இருக்கும் காலம் மிகவும் இனிமையாக இருக்கும்படி செய்யமுடியும்.

தாங்கள் நலமாக வாழ்ந்து கொண்டிருப்பதாக மனிதர்கள் நினைத்துக் கொள்ளலாம். ஆனால், அவர்கள் அப்படி இருப்பதில்லை. அவர்கள் நல்ல வீடுகளில் வாழ்கிறார்கள், நல்ல கார்களை ஓட்டுகிறார்கள், நல்ல உடைகளை அணிகிறார்கள், அதனால் நலமாக வாழ்வதாக நினைத்துக் கொள்கிறார்கள். தங்களிடம் இருக்கும் இந்தப் பொருட்கள் எல்லாம் மற்றவர்களிடம் இல்லை என்ற காரணத்தால்தான் அவர்களுக்கு சந்தோஷம் ஏற்படுகிறது. இது ஒன்றும் நலமான வாழ்க்கை கிடையாது. இது நோய்பிடித்த வாழ்க்கைத்தான். தங்கள் அளவுக்கு நல்லமுறையில் இல்லாதவர்களுடன் தங்களை ஒப்பிட்டுப் பார்த்து அவர்கள் சந்தோஷம் அடைகிறார்கள். பெரும்பாலான மனிதர்களுக்கு தங்கள் வாழ்க்கையில் இருக்கும் சந்தோஷம் எல்லாம் இவ்வளவுதான். அதனால், இதை நலமாக வாழ்வது என்று நான் சொல்லவே மாட்டேன்.

---

2 அத்தியாயம் 6ல், "இறப்பதற்கு தயாராவது அவசியமா?" என்ற தலைப்பின் கீழ் பார்க்கவும்.

என்னைப் பொருத்தவரை, நலமாக வாழ்வது என்றால் - எதுவுமே உங்களுக்கு ஒரு பிரச்சனையாக இல்லாதபடி நீங்கள் சும்மா உட்கார முடியும் - உங்களிடம் என்ன இருக்கிறதோ இல்லையோ, சாப்பிடுவதற்கு உணவு இருந்தாலும் இல்லாவிட்டாலும்கூட, அது உங்களுக்கு ஒரு பிரச்சனையாக இல்லை, நீங்கள் நலமாகவே இருக்கிறீர்கள். நீங்கள் உணவையும் மற்ற விஷயங்களையும் சம்பாதிக்கும் திறமை இல்லாமல் இருக்கவில்லை. என்ன, அந்த விஷயங்கள் எல்லாம் இப்போது நீங்கள் யாராக இருக்கிறீர்கள் என்பதை நிர்ணயிப்பதில்லை, அவ்வளவுதான். எந்த விதமான உடைகளை அணிந்து இருக்கிறீர்கள் என்பது நீங்கள் இருக்கும் தன்மையை நிர்ணயிப்பதில்லை. இப்போது எப்படிப்பட்ட வீட்டில் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள் என்பது நீங்கள் இருக்கும் தன்மையை நிர்ணயிப்பதில்லை. இன்னொருவர் உங்களை எப்படி நடத்துகிறார் என்பது நீங்கள் இருக்கும் தன்மையை நிர்ணயிப்பதில்லை. இன்னொருவர் உங்களிடம் சொல்லும் சொற்கள் நீங்கள் இருக்கும் தன்மையை நிர்ணயிப்பதில்லை. நீங்கள் உயர்வாக பார்க்கப்படுவதும், தாழ்வாக பார்க்கப்படுவதும் நீங்கள் இருக்கும் தன்மையை நிர்ணயிப்பதில்லை. நீங்கள் இப்படிப்பட்ட நிலையில் இருந்தால், நிச்சயமாக நீங்கள் நலமாகத்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் எங்கே உட்கார்ந்தாலும், வாழ்க்கையின் அனுபவம் உங்களுக்கு இனிமையாகவே இருந்திடும்.

இந்த விஷயத்தில் நான் மிகவும் அக்கறை கொள்கிறேன். கொஞ்ச காலத்திற்கு முன், எனக்கு நேசமாக இருந்தவர்கள் சிலர் இறக்கும்போது, அவர்கள் மோசமான விதத்தில் போவதைப் பார்த்திருக்கிறேன். அவர்கள் ஒன்றும் வாழ்க்கையில் தோல்வி அடைந்தவர்கள் அல்ல. தாங்கள் வாழ்க்கையை மிகுந்த நலத்துடன் வாழ்ந்ததாகத்தான் அவர்கள் நம்பிக் கொண்டிருந்தார்கள். வாழ்க்கையில் அவர்கள் விரும்பியதெல்லாம் அவர்களுக்கு நிகழ்ந்தது. அவர்கள் படித்து முடித்தார்கள், வேலை கிடைத்தது, திருமணம் ஆனது, குழந்தைகளைப் பெற்றார்கள், குழந்தைகளும் வளர்ந்தார்கள், அவர்களுக்கும் திருமணம் ஆகி வெளிநாட்டில் நல்லபடியாக அமைந்தார்கள், பேரக்குழந்தைகளும் வந்தார்கள். பெரும்பாலான மனிதர்களுக்கு, இதுதான் அவர்களுடைய வாழ்க்கையின் கனவாகவே இருக்கிறது. இவர்களுக்கோ வாழ்க்கை முழுவதும் தாங்களின் கனவுப்படியே எல்லாம் நடந்தது. ஆனால் வாழ்க்கையின் கடைசி கட்டத்திற்கு வரும்போது, அவர்கள் முற்றிலும் மனம் நொந்துபோனார்கள். அவர்கள் முற்றிலும் உடைந்து போனவர்களாக இருந்தார்கள். மோசமான விதத்தில் இறந்துபோனார்கள். தாங்கள் மிகவும் வெற்றிகரமானவர்கள் என்றும், தாங்கள் மிகவும் நலமாக வாழ்ந்து

கொண்டிருக்கிறோம் என்றும் நம்பிக்கை வைத்திருக்கும் மனிதர்களில் 90 சதவிகிதம் பேர் மோசமாகவே இறந்துபோகிறார்கள். நலமாக இறந்துபோவது எப்படி என்பது மிகவும் முக்கியமான அம்சமாகும். நவீன சமூகங்களில் இந்த அம்சத்தைப் பற்றிய கவனமே இல்லை, அதைப்பற்றி அவர்கள் எந்த அக்கறையும் எடுத்துக்கொள்ளவில்லை.

அதனால், சில நிமிடங்களில் கற்றுக்கொடுக்கக்கூடிய எளிய ஆன்மீக முறையையாவது எல்லோருக்கும் கற்றுக்கொடுக்க வேண்டும் என்று நினைத்தேன். இதன்மூலம், அவர்கள் தங்களுடைய கடைசி கணத்தையாவது அர்த்தமுள்ளதாக, அற்புதமானதாக இருக்கும்படி நிகழ்த்திக்கொள்ள முடியும். மனிதர்கள் ஆனந்தமாக வாழ்ந்திட வேண்டும் என்பதுதான் என்னுடைய கனவு, அது சாத்தியமானதுதான். ஆனால், எத்தனையோ மனிதர்கள் நம்பிக்கையை இழந்துவிட்டார்கள், எத்தனையோ மனிதர்கள் விடாப்பிடியாக துன்பத்தில் இருக்கிறார்கள். நீங்கள் என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள், அவர்கள் விடாப்பிடியாக இருக்கிறார்கள்; தங்களுடைய துன்பத்தில் முதலீடு செய்வதைத்தான் அவர்கள் விரும்புகிறார்கள். அதனால் இப்போதெல்லாம் என்ன நினைக்கிறேன் என்றால், "சரி, ஆனந்தமாய் வாழ்வது எப்படி என்று எல்லோருக்கும் கற்றுக்கொடுக்க முடியாவிட்டாலும், அவர்கள் இறக்கும் போதாவது நலமாக இறக்க வேண்டும்," என்று நினைக்க ஆரம்பித்துவிட்டேன். இது மோசமான சமரசம்தான். ஆனால், இந்த உலகத்தில் 700 கோடி பேர்கள் இருக்கிறார்களே! 700 கோடி மனிதர்களையும் 7 நாட்களுக்கு, தினமும் 3 மணிநேரம் உட்கார வைத்து, அவர்களுக்கு கற்றுக்கொடுத்து, வாழ்க்கையில் இந்தப் பயிற்சிகளை தொடரும்படி செய்வது ஒருபோதும் சாத்தியமில்லை. ஒருபோதும் அப்படி நடக்கப்போவதில்லை. மக்கள் இதை கற்றுக்கொள்வதற்காக போவார்கள் என்ற நம்பிக்கை இன்னும் நமக்கு இருக்கிறது. ஆனால், வாழ்க்கையை துன்பத்தில் வாழவேண்டும் என்ற உறுதியோடு இருக்கும் மனிதர்களுக்கு, அவர்களுடைய மரணமாவது கண்ணியமாக ஏற்படட்டுமே! குழப்பத்திலும், மிரட்சியிலும், துயரத்திலும் சாகாமல் நல்முறையில் இறக்கட்டுமே! இதாவது நிச்சயமாக நடக்க வேண்டும்.

என் வாழ்க்கையில் ஒருபோதும் இப்படிச் செய்யமாட்டேன் என்று நினைத்தேன். ஆனால் பாருங்கள், இப்போது நடைமுறையோடு ஒத்துப்போக ஆரம்பித்துவிட்டேன். இந்த நிஜத்தை ஏற்றுக்கொள்ள ஆரம்பித்துவிட்டேன். எப்போதுமே ஒரு சாத்தியத்திற்கும், அது நிஜம் ஆவதற்கும் நடுவில் ஒரு இடைவெளி இருக்கிறது, ஒரு தூரம் இருக்கிறது. அந்த தூரத்தைக் கடக்க எல்லோருமே விரும்புவதில்லை. ஒருவருக்கு

விருப்பமே இல்லாதபோது, இதைச் செய்வதற்கு வாய்ப்பே இல்லை. நாம் நயமாக கொஞ்சிப் பேசி அவர்களை இசைய வைக்க முயற்சிக்கலாம், ஓரளவுக்கு அவர்களை தள்ளவும் செய்யலாம்; அதற்குமேல் அவ்வளவாக ஒன்றும் செய்ய முடியாது. அதையும் தாண்டிச் செய்தால், அவர்கள் போய்விடுவார்கள். அதைப்பற்றி எனக்கு எந்த கற்பனைகளும் கிடையாது. யாராக இருந்தாலும், அவரை குறிப்பிட்ட அளவுக்குமேல் தள்ளினால், அவர்கள் போய்விடுவார்கள். எனக்கு அது நன்றாகத் தெரியும்.

காற்று புகமுடியாத ஒரு டப்பாவுக்குள் அவர்களை வைத்திருந்தால், அப்போது அவர்களை நலமாக வாழச்செய்யும் சாத்தியத்தை நான் கைவிட்டிருக்க மாட்டேன். ஆனால், உலக ஜனத்தொகை மொத்தத்தையும் நம்மால் டப்பாவுக்குள் போட முடியாது, இல்லையா? ஈஷா யோக மையத்தில்கூட இப்படிப்பட்ட நிலை கிடையாது. அதிகபட்சம், கையளவு இருக்கும் ஒரு சிலரை மட்டுமே காற்று புகமுடியாத டப்பாவுக்குள் போட முடியும். அவர்களை கடைசிவரைக்கும் நம்மால் தள்ளமுடியும். ஆனால், நலமாக இறப்பது எப்படி என்று நாம் அனைவருக்குமே கற்றுக்கொடுக்க முடியும். ஏனென்றால், அதற்கு அதிகநேரம் எடுப்பதில்லை. அது சுலபமானது, எளிமையானது. அதோடு, அவர்களுக்கு விருப்பம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் இதைக் கற்றுக்கொடுக்கும் வழிகளை நான் கண்டுபிடித்துக் கொண்டிருக்கிறேன். நம்மால் அவர்களுக்குள் ஏதோ ஒன்றை விதைத்திட முடியும், இது கடைசிக் கணம் வரும்போது வெளிப்பட்டு செயல்படும்.

ஆன்மீகமுறை என்பது மனிதர்கள் நலமாக வாழ்வதற்கு மட்டும் உதவுவதில்லை, அவர்கள் நல்லமுறையில் இறப்பதற்கும் உதவியாக இருக்கிறது. நலமாக இறப்பதற்கு உதவுவது என்றால், கருணைக்கொலை ஆதரவாளர்கள் சொல்வதுபோல் கிடையாது - ஒருவர் இறந்துபோவதற்கு துணைசெய்வது என்று அர்த்தமில்லை. நலமாக இறப்பதற்கு உதவுவது என்றால் - ஒருவர் பொருள் தன்மையிலிருந்து, அப்பாற்பட்ட பரிமாணத்திற்கு கடந்துபோகும் கணத்தில், உடலோடு இருக்கும் நிலையில் இருந்து உடல் இல்லாத நிலைக்கு மாறிடும் கணத்தில் - அவர்கள் அதிகபட்ச விழிப்புணர்வுடனும், இனிமையுடனும், பாங்குடனும் அதை கையாளும்படி உதவுவது என்று அர்த்தம். ஒருவர் இதை தானாகவே நிறைவேற்றிக்கொள்ள விரும்பினால், அவர் ஓரளவுக்கு தயாராக வேண்டியது அவசியம். இந்த விழிப்புணர்வை உருவாக்கிக் கொள்வதற்கு பல வழிமுறைகள் இருக்கின்றன. மரணம் ஏற்படும் கணத்தில், அருளோடு கடந்துபோக இவை முழுமையாக உதவிடும். மற்றபடி, ஒவ்வொரு மனிதருக்கும் நாம் அந்தக் கணத்தை உருவாக்கி

கொடுக்கமுடியும். அந்த மனிதர் ஒத்துழைக்க விருப்பமாக இருந்தால், இப்போதே தன்னைப் பற்றி கொஞ்சம் கவனம் செலுத்த தயாராக இருந்தால், அவருக்கு அந்தக் கணத்தை உருவாக்கிக் கொடுக்கலாம்.

கடந்த காலத்தில், பெரும்பாலான தீட்சைகள் இப்படித்தான் அளிக்கப்பட்டன. ஒரு யோகி ஒரு இடத்தில் உட்கார்ந்துகொண்டு மக்களுக்கு இந்த விதத்தில் தீட்சை கொடுப்பார். அதனால் என்ன நடந்தது? எதுவும் நடக்கவில்லை. யாரோ ஒருவர், "என் வாழ்க்கையில் எதுவுமே நடக்கவில்லையே!" என்று தர்க்கம் செய்யலாம். அது ஒரு பொருட்டே கிடையாது. இறக்கப்போகும் கணம் நெருங்கும்போது, இது வெளிப்பட்டு செயல்படும். நாமும் இதை செய்யாமல் இல்லை. நாம்கூட இதை செய்திருக்கிறோம், அந்தளவுக்கு பரவலாக செய்யவில்லை. இப்போது இதைப் பரவலான விதத்தில், மிகப்பெரிய ஜனத்தொகைக்கு அளிக்கும் அளவில் செய்ய விரும்புகிறோம். இதனால், ஒவ்வொருவரின் வாழ்விலும் அவரிடம் ஏதாவது ஒன்று இருக்கும்படி செய்யலாம். இது இப்போது செயல்படாவிட்டாலும், அந்தக் கணம் நெருங்கும் போதாவது நிச்சயமாக செயல்படும்.

பல சமயங்களில், மிகவும் வயதான நிலையில் நோய்வாய்ப்பட்டிருக்கும் சிலர் தங்களை வந்து பார்க்கும்படி என்னிடம் கேட்பார்கள். சில சமயங்களில், தங்களுடைய பெற்றோர்கள் பழுத்த முதுமையை அடைந்து பாதிப்பில் இருப்பதால், அவர்களுடைய புகைப்படங்களை என்னிடம் அனுப்பி வைப்பார்கள். அவர்களை சரிபடுத்தும்படி கேட்காமல், அவர்களை விடுவிக்கும்படி கேட்கும் அளவுக்கு பக்குவம் கொண்டவர்களா இவர்கள் என்று பார்ப்பேன். அல்லது அந்த மனிதர்களின் பிராரப்த கர்மா முடிவடையும் நிலையில் இருக்கிறதா என்று பார்ப்பேன். அப்படி இருக்கும்போது, அந்த மனிதரை நான் போய் பார்த்தாலும், அந்த மனிதரின் புகைப்படத்தை நான் பார்த்தாலும், ஏழிலிருந்து எட்டு நாட்களுக்குள் அவர்கள் போய்விடுவார்கள். ஏனென்றால், சாஃப்ட்வேர் இல்லாமல் அந்த உயிர் எப்படியும் விளிம்பில்தான் இருந்து கொண்டிருக்கிறது.

அதேசமயம், இது இரண்டு விதத்திலும் வேலை செய்யும். சிலசமயம் ஒருவரின் வாழ்க்கையை நீட்டிப்பதும் நல்லதுதான். மற்ற சமயங்களில், அவர்களுடைய வாழ்க்கையை நிறுத்துவதும் நல்லதுதான். அதாவது, நீங்கள் ஒரு படகில் பயணம் செய்கிறீர்கள் என்று வைத்துக்கொள்வோம். அடுத்தக் கரையை அடைந்தவுடன் நீங்கள் படகிலிருந்து வெளியே இறங்கவேண்டும். ஆனால், ஏதோ ஒரு காரணத்திற்காக நீங்கள் இன்னும் படகிலிருந்து வெளியேறாவிட்டால், அப்போது தேவையில்லாமல் படகு நகர்ந்து போகும்படி ஆகும். அதனால், சில சமயம் இரண்டு

விஷயங்களுமே செய்யப்பட வேண்டியிருக்கிறது. சில சமயம் ஒரு மனிதர், தான் அடையவேண்டிய இடத்தை இன்னும் அடையவில்லை, ஆனால் அவருக்கு எரிபொருள் தீர்ந்துவிட்டது - இப்போது அவருடைய வாழ்நாளை நீட்டிக்க வேண்டியிருக்கிறது. சில சமயங்களில், அவர் வரவேண்டிய இடத்திற்கு என்னவோ வந்து சேர்ந்துவிட்டார், ஆனால் இன்னும் எரிபொருள் இருக்கிறது - அப்போது அதை விடுவிக்க வேண்டி இருக்கிறது. இரண்டுமே வாழ்க்கையில் அவசியமாக இருக்கிறது.

அந்த மனிதர் முக்தி அடைய வாய்ப்பிருக்கிறதா? ஒரு மனிதர் தன்னுடைய பிராரப்த கர்மாவை முழுமையாக தீர்த்துவிட்ட சூழ்நிலையில்தான், அவர் முக்தி அடைவதற்கான வாய்ப்பு இருக்கிறது. இப்போது எல்லாம் முடிந்து போயிருக்கும்போது, கர்மாவில் ஒரு இடைவெளி ஏற்பட்டிருக்கும் நிலையில் இருக்கிறார். முதுமையால் இறந்துபோகும் மனிதர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள்; அவர்கள் வாழ்க்கையில் சுத்த முட்டாள்களாகவே வாழ்ந்திருக்கலாம். ஆனால், கடைசி சில நாட்களில், திடீரென்று அவர்களுக்குள் புதுவிதமான ஒரு விவேகம் ஏற்படுகிறது, புதுவிதமான ஒரு விழிப்புணர்வு ஏற்படுகிறது. ஏனென்றால், அவர்களுக்கு ஒதுக்கப்பட்ட கர்மா முடிந்து போய்விட்டது[3], சின்ன சின்ன விஷயங்கள்தான் மீதமாக விட்டுப்போய் இருக்கின்றன. கர்மாவின் அடுத்த ஒதுக்கீடு இன்னும் ஏற்படவில்லை. இப்படிப்பட்ட காலகட்டம் ஒரு வரப்பிரசாதம் போன்றது. அறியாமையிலேயே வாழ்ந்த ஒரு மனிதருக்கும், திடீரென்று, "அடுத்த மூன்று நாட்களில் நான் இறக்கப்போகிறேன்," என்று புரிந்துவிடுகிறது. அப்படிப்பட்டவர்களை கரைத்து விடுவது மிகவும் சுலபம். ஏனென்றால், அவர்கள் அந்த கர்ம சுமைகள் இல்லாத வரப்பிரசாத நிலைக்கு வந்திருக்கிறார்கள். இன்னும் அவருடைய கணக்கில் வேறு எங்கேயோ சரக்கு இருக்கிறது. ஆனால் கர்மா எதுவும் இல்லாதபடி அமைந்திருக்கும் இந்த சிறிய இடைவெளி இப்போது இருக்கிறது. விழிப்புணர்வில்லாமல் இறப்பதைவிட, அவர்கள் விழிப்புணர்வோடு இறந்து போகும்படி நாம் உதவமுடியும். அதேசமயம், ஒரு சாதகமான சூழல் இருந்தால், அவரை கரைத்து விடுவதும் சாத்தியம்தான். அவர் முக்தி அடையும்படி செய்திட முடியும். ஆனால், பிராரப்த கர்மா முடிவதற்கு முன்பாகவே நோய்வாய்ப்பட்டு இறந்துபோனவரை கரைத்திட நான் முயற்சித்தால், அது வேலை செய்யப்போவதில்லை. அப்படிப்பட்ட ஒரு விஷயத்தை நான் செய்யவும் மாட்டேன். அவருக்கு நாம் செய்யக்கூடியது எல்லாம் - விழிப்புணர்வோடு இறந்துபோகும்படி உதவமுடியும், அவ்வளவுதான்.

---

3 பார்க்கவும் - அத்தியாயம் 3: "மரணத்தின் தரம்"

அதற்குப் பிறகு கொஞ்சம் மேம்பட்ட வாழ்க்கையை அவர் வேறெங்கோ பெற்றிடுவார்.

அந்த மனிதரை எனக்கு தெரியவே தெரியாது என்றாலும், இப்படி செய்ய வாய்ப்பிருக்கிறதா? நான் இந்த நிலையில் பேசும்போது, அடையாளங்களைக் கொண்ட ஒரு தனி ஆளாக என்னை குறிப்பிடவில்லை. சில பழக்கங்களையும், குணங்களையும், போக்குகளையும் கொண்ட ஒரு குவியலாக என்னை குறிப்பிடவில்லை. ஒரு ஆளாக என்னை உங்களுக்கு தெரிந்திருக்கலாம், தெரியாமலும் இருக்கலாம். ஆனால், நான் குறிப்பிடும் இந்த நிலையில் - என்னைத் தெரியாதவர்கள் யாருமே இல்லை. ஏனென்றால் இந்த நிலையில் "நான்" என்று எதை குறிப்பிடுகிறேனோ - அதுதான் நீங்களும். அந்தப் பரிமாணத்தில், தனியாள் என்று யாருமே கிடையாது. அதனால், ஒரு ஆளாக உங்களுக்கு என்னைத் தெரியுமா தெரியாதா என்பதில் எந்த வித்தியாசமும் ஏற்படாது. நான் அடிக்கடி சொல்வதைப்போல, நான் நேரில் பார்த்தவர்களைவிட, நான் பார்த்தே இருக்காத மனிதர்களுக்கு தீட்சை அளித்திருப்பதுதான் அதிகம். இதுவும் அப்படித்தான்.

## எப்போது அந்த தவறைச் செய்தீர்களோ...

மரணம் ஏற்படும் அந்தக் கணம் இன்னொருவர் தலையிடுவதற்கு மகத்தான சாத்தியமாக அமைகிறது. நீங்கள் நல்லமுறையில் இறப்பதற்கு என்னால் உதவமுடியும். அதேசமயம், நீங்கள் நலமாக வாழ்ந்திடவும் என்னால் உதவ முடியுமே! நல்லமுறையில் இறப்பதற்கு மட்டும் பார்க்காமல், நீங்கள் நல்லமுறையில் வாழ்வதுதான் சிறந்தது. இன்னும் நூறுமுறை திரும்பத் திரும்ப வந்திடும் திட்டம் உங்களுக்கு இருக்கிறது என்றால், அப்போது வேண்டுமானால் நீங்கள் முட்டாள்தனமாக வாழ்ந்து கொள்ளலாம். ஆனால், இதுவே கடைசி பிறவியாக இருக்கவேண்டும் என்று நீங்கள் விரும்பினால், குறிப்பாக இப்போதுதான் இதை நல்லமுறையில் வாழ்ந்திட நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டும். இந்த கடைசி பயணம், இருப்பதிலேயே சிறந்த பயணமாக இருக்கவேண்டும், இல்லையா?

எல்லாமே உச்சக்கட்டத்திற்கு வந்திருக்கும் நிலையில் - வாழ்க்கையும் மரணமும் மட்டுமே இப்போது இருக்கிறது, வேறெதுவும் ஒரு பொருட்டாக இல்லை என்ற அளவுக்கு சூழ்நிலை முதிர்ந்திருந்தால் - அதை செய்திட எனக்கு ஒரு கணம் மட்டுமே தேவைப்படும். ஆனால், இந்த நிலைக்கு வந்திட எவ்வளவு காலம் எடுத்துக்கொள்ளப் போகிறீர்கள் என்பது

உங்களைப் பொருத்தது. நீங்கள் இன்று மாலையே அப்படி நிகழும்படி செய்யலாம் அல்லது அதற்காக சில ஜென்மங்களுக்கும் காத்திருக்கலாம். எப்போது என்னிடம் வந்துவிட்டீர்களோ, "சில ஜென்மங்கள்" என்ற வாய்ப்பை நான் உங்களுக்கு கொடுக்கவே மாட்டேன். ஆனால், நீங்கள் வேண்டுமானால் உங்களுடைய வாழ்க்கையின் முடிவு வரைக்கும் காத்திருக்கலாம். அதுவரைக்கும் இதைத் தள்ளிப்போட்டுக் கொண்டிருந்தீர்கள் என்றால், மரணம் கதவைத் தட்டும்போது, நீங்கள் ஆதரவற்ற நிலையில் பரிதாபமாக இருப்பீர்கள். மரணம் கதவைத் தட்டி வரும்போது, திடீரென்று உங்களுக்கு உடல் என்பது அர்த்தமற்றதாக தோன்றும். உங்களுடைய படிப்பும் தகுதிகளும் அர்த்தமற்றதாக தோன்றும். உங்களுடைய கணவன், மனைவி, குழந்தைகள் என்ற எல்லாமே அர்த்தமற்றதாக தோன்றும். உங்களுடைய ஆடம்பரமான உடைகளுக்கு எந்த அர்த்தமும் இருக்காது. நீங்கள் ஆதரவற்ற நிலையில் இருப்பீர்கள். நான் அந்தக் கணத்திற்காக, ஒரு கழுகைப்போல காத்துக் கொண்டிருப்பேன். ஏனென்றால், அப்போது நீங்கள் விருப்பத்துடன் தயாராக இருப்பீர்கள். ஆனால் நீங்கள் புத்திசாலியாக இருந்தால், புத்தி என்பது உங்களுக்குள் கொஞ்சமாவது இருந்தால், அந்த விருப்பத்தை இப்போதே உருவாக்கிக்கொள்வீர்கள்.

உங்களுக்குள் அந்த விருப்பத்தை உருவாக்கிக் கொள்ளவில்லை என்றால், நடக்கவேண்டிய விஷயத்தை நீங்கள் எதிர்த்து கொண்டிருப்பீர்கள். உங்களுக்கு பிரித்துப் பார்த்து புரிந்துகொள்ளும் மனம் இருக்கும்போது, எதிர்ப்புச் சுவர்களோடு இங்கே வந்தீர்கள் என்றால், அது தேய்ந்து போகும்படி செய்ய முயற்சிப்போம். அது முழுமையாக போய்விடவில்லை என்றாலும், அது தேய்ந்து போகும்படி நாம் செய்திடுவோம். இது மிகவும் நீண்டதாகவும், சிரமமானதாகவும் இருந்திடும். இறந்துபோன ஒருவருக்கோ பாகுபடுத்தும் புத்தி கிடையாது. அதனால், உங்களைவிட அவர்மேல் தாக்கத்தை ஏற்படுத்துவது மிகவும் சுலபமானது. அதாவது, நீங்கள் உடலோடு இருக்கும் கடினமான பேயாக இருக்கிறீர்கள். உடல் இல்லாத பேய்க்கு பிரித்துப் பார்க்கும் மனம் இல்லாததால், உங்களுடன் ஒப்பிடும்போது அவரை கையாள்வது சுலபமானதுதான். நாம் சொல்வது அத்தனையும் அவர் உள்வாங்கிக்கொள்வார். ஒரே ஒரு விஷயம் என்னவென்றால், உடலோடு சேர்த்து தன்னுடைய காதுகளையும் அவர் இழந்துவிட்டதால் அவரோடு தமிழில் பேச முடியாது, அவ்வளவுதான்! அதனால் வேறொரு மொழியில் அவருடன் பேச வேண்டும். ஆனால், சொன்னதை கேட்பதற்கு என்னவோ அவர் தயாராகவே இருக்கிறார். அவருக்கு பாகுபடுத்தும் மனம் இல்லாததால், அவர் பரிபூரண விருப்பத்துடன் இருக்கிறார். அவரால் எந்த எதிர்ப்பையும் உருவாக்கிட

முடியாது. அதனால் அவரிடம் நாம் இனிமையாக எதையாவது சொன்னால், உடனே அவரும் இனிமையாக மாறிவிடுகிறார். இப்போது அவருக்கு செய்யவேண்டிய விஷயத்தை நம்மால் செய்திட முடிகிறது. ஆனால், நீங்கள் விருப்பத்துடன் இருந்தால் அதுவரைக்கும் காத்திருக்க வேண்டிய அவசியமில்லை.

என்னிடம் தங்களை முழுமையாக கொடுத்துவிட்டவர்கள், ஒரே ஒரு கணத்திற்கு மட்டும் அப்படிச் செய்திருந்தாலும், அவர்கள் தங்களுடைய முக்தியைப் பற்றி கவலைப்பட வேண்டிய அவசியமே இல்லை. முக்திக்கு உத்தரவாதம் ஆகிவிட்டது. வாழ்க்கையை நயமான விதத்தில் அற்புதமாக வாழ்வீர்களா இல்லையா - அதற்கு ஒன்றும் உத்தரவாதம் கிடையாது. அது என்னவோ நீங்கள் சம்பாதிக்க வேண்டிய ஒன்று. ஆனால், முக்திக்கு உத்திரவாதம் உண்டு. சரி, இது எப்படி வேலை செய்கிறது? கிழக்கு நாடுகளின் ஆன்மீக அரங்குகளில் பரவலாக இருக்கும் ஒரு வார்த்தை "மாயை." நாம் அந்த வார்த்தையை பயன்படுத்துவதே இல்லை என்றாலும், அந்த வார்த்தை என்னவோ அற்புதமானதுதான். நாம் என்ன சொல்ல விரும்புகிறோமோ, அதே விஷயத்தைதான் அந்த வார்த்தை மிகச்சரியாக சொல்கிறது. ஆனால், காலப்போக்கில் இந்த வார்த்தை மிகவும் மோசமான விதத்தில் தவறாக பயன்படுத்தப்பட்டுள்ளது. அதனால்தான் வழக்கமாக அதை பயன்படுத்தாமல் தவிர்க்கிறோம். மாயை என்றால் என்ன? மாயை என்றால் - நீங்கள் இப்போது இருக்கும் விதம் கற்பனையானது - வாழ்க்கையைப் பற்றிய உங்களுடைய உணர்தலும், புரிதலும் கற்பனையானது என்று அர்த்தம். இந்த கற்பனையின் மிக முக்கியமான அம்சம் என்னவென்றால் - நீங்கள் ஒரு தனிமனிதன் என்ற எண்ணம்தான், தனியொரு உயிராக இருக்கிறீர்கள் என்று நினைத்துக் கொண்டிருப்பதுதான் - இதுதான் கற்பனையானது. இப்போது நான், "உங்களுக்கும் பூமிக்கும் இணைப்பு இருக்கிறதா?" என்று கேட்கிறேன். நீங்கள், "ஆமாம்" என்று சொல்கிறீர்கள். அது உண்மை கிடையாது. அது உண்மைதான், ஆனால் உங்களுடைய அனுபவத்தில் அது உண்மையாக இல்லை. நீங்கள் என்னவோ இந்த பூமிக்குள் ஊன்றப்பட்டு இருக்கிறீர்கள், அதனால்தான் அது உண்மை என்று அர்த்தமில்லை. நீங்களே இந்த பூமியின் ஒரு சிறு துண்டுதான், பூமியின் பாகம்தான் - அந்தக் காரணத்தால்தான் அது உண்மையாக இருக்கிறது. ஆனால், "நான் ஒரு தனி ஆள்" என்ற கற்பனையான எண்ணத்தை உங்களால் கைவிட முடியவில்லை. அதனால்தான், நீங்கள் பூமியோடு தொடர்புகொண்டவராக மட்டும் உணர்கிறீர்கள். பூமியின் ஒரு பாகமாகவே உங்களை உணரவில்லை. நீங்கள் ஒரு தனிமனிதராகவே உயிர் வாழ்கிறீர்கள்.

ஈஷா யோக மையத்தில் இருக்கும் பிரம்மச்சாரிகள் எல்லோரும் ஒரே விதமாக மொட்டை அடித்துக்கொண்டும், ஒரே விதமான உடைகளை அணிந்துகொண்டும் இருக்கிறார்கள், ஏன்? அவர்கள் தங்களைச் சுற்றி பார்த்தால், தான் என்பது இவரா அல்லது தான் என்பது அவர்களா என்று புரியக்கூடாது, அதனால்தான் இப்படிச் செய்யப்படுகிறது. மற்ற எல்லா விஷயங்களும் ஒரே விதமாக இருந்தாலும், அவர்கள் செய்யும் சின்னச் சின்ன விஷயங்களில், நெற்றியில் விபூதியை வைத்திருக்கும் விதத்தில்கூட, தங்களுடைய சொந்த பாணியில் அதை செய்யவேண்டும் என்று சிலர் விரும்புகிறார்கள். உலகத்தில் வாழ்ந்திடும் செயலில், ஒவ்வொருவருமே தங்களுடைய வேலிகளை உறுதிப்படுத்திக்கொள்ளவே தொடர்ந்து முயற்சிக்கிறார்கள். பிரம்மச்சரியம் என்றால் இறைத் தன்மையின் பாதை என்று அர்த்தம். இறைத்தன்மையின் பாதை எது? தனி ஒரு ஆளாக விளங்கிடும் அடையாளங்கள் எதுவும் இல்லாமல் இருப்பதுதான் இறைத்தன்மையின் பாதை. இது பிரபஞ்சமயமான நிகழ்வாக இருக்கிறது. இப்படியாக, உங்களுடைய எல்லைகளை பலப்படுத்திக் கொள்ளாமல் ஒரு கணத்திற்கு நீங்கள் உட்கார்ந்தால்கூட அது அற்புதமானதாக இருக்கும். ஒரு மரத்துடன் உங்களால் அப்படிச் செய்ய முடியாது. ஆனால், என்னுடன் உங்களால் அப்படி எளிதில் செய்துவிட முடியும். அதற்கு பல காரணங்கள் இருக்கின்றன. மரத்தில் எதுவும் தவறாக இல்லை. ஆனால், அந்த மரத்திற்கும் விழிப்புணர்வு கிடையாது, உங்களுக்கும் விழிப்புணர்வு கிடையாது. விழிப்புணர்வு இல்லாத இரண்டு அம்சங்களால் ஒன்றாக சேர முடியாது. தங்களுடைய சூழலில் ஒருவருக்கொருவர் காற்றைப் பரிமாறிக் கொண்டாலும், அவர்கள் எப்போதுமே இரண்டு தனித்தனி குமிழிகளாகத்தான் இருக்கிறார்கள்.

இப்படியாக, நீங்கள் ஒரு தனிப்பட்ட அம்சமாக விளங்கும் மாயைதான் மிகப்பெரிய பிரச்சனையாக இருக்கிறது. ஒரு குருவுடன் உட்காருவதற்கான நோக்கமே, உங்களுக்கு எந்த எல்லைகளும் இல்லாமல் உட்கார வேண்டும் என்பதுதான். நீங்கள் சும்மா உட்கார்ந்தாலே அது நிகழ்ந்திடும். அதனால்தான் நான், “என்னுடன் ஒரு கணத்திற்கு நீங்கள் உட்கார்ந்தால்கூட, உங்களால் என்னோடு முழுமையாக இருக்கமுடியும் என்றால், இது முடிந்துபோனது,” என்று சொன்னேன். அது ஒரு தீட்சையின் மூலமாக ஏற்பட்டிருக்கலாம் அல்லது சும்மா ஒரு பார்வையின் மூலமாகவும் நிகழ்ந்திருக்கலாம். அவர்கள் என்னை ஒருபோதும் பார்த்திருக்கவே மாட்டார்கள், என்னைப் பற்றி கேள்விதான் பட்டிருக்கிறார்கள் என்றாலும், அது நிகழ்ந்திட வாய்ப்பிருக்கிறது. அப்படிப்பட்ட மனிதர்கள் ஏராளமாக இருக்கிறார்கள்.

உடலளவில் அவர்கள் என்னைப் பார்த்ததே கிடையாது. சும்மா ஒரு புகைப்படத்தை பார்த்ததிலேயே அவர்கள் திறந்து கொண்டார்கள். எத்தனையோ மனிதர்களுக்கு இந்த அனுபவம் ஏற்பட்டிருக்கிறது.

ஏதோ ஒன்றுடன் இருப்பது என்றால் இதுதான் - ஒரு கணத்திற்கு உங்களுடைய எல்லைகளை வைத்துக்கொள்ளாமல் இருந்தீர்கள், அவ்வளவுதான். உங்களுக்கு எந்த எல்லைகளையும் வைத்துக் கொள்ளாமல் ஒருநாள் முழுவதும் இருக்க முடிந்தால் - நீங்கள் வெறுமனே இங்கே இருந்தீர்கள் என்றால் - இப்போது உங்களை நாம் வழிபடுவோம். எல்லையில்லாதது எதுவோ, அதுதானே இறைத்தன்மை! இப்படியாக, ஒருநாள் முழுவதும் வேண்டாம், ஒரு கணத்துக்குக்கூட எல்லைகள் இல்லாத நிலையை நீங்கள் உணர்ந்திருந்தால், உங்களுக்கு மறுபிறப்பு என்பது இனி கிடையவே கிடையாது.

நான் சில விஷயங்களைச் சொல்வதால் நீங்கள் நாளை காலையிலேயே சோம்பேறி ஆகிவிட வாய்ப்பிருக்கிறது. அதனால் அதையெல்லாம் சொல்லாமல் தவிர்த்துவிடுகிறேன். ஒரே ஒரு கணத்திற்கு - மணிக்கணக்கில் இல்லை, நாள் கணக்கில் இல்லை - ஒரே ஒரு கணத்திற்குகூட நீங்கள் உண்மையிலேயே என்னுடன் இருந்திருந்தால், இதுதான் உங்களுடைய கடைசி பிறவி. ஆனால் இந்த உத்தரவாதத்தைக் கொடுத்து, உங்களை சோம்பேறி ஆக்கிவிட நான் விரும்பவில்லை. உங்களுடைய கடைசி பிறவி என்பது அனைத்தையும்விட அற்புதமான பிறவியாகவும் இருக்கவேண்டும், இல்லையா? இந்தப் பிறவியே உங்களுடைய கடைசி பிறவியாக இருக்கும்படி நாம் செய்திடலாம். ஆனால், இதுவே அனைத்தையும்விட அற்புதமான பிறவியாக இருக்கும்படி நாம் செய்யமுடியாது. அதை நீங்கள்தான் செய்துகொள்ள வேண்டும். அதற்கு நீங்கள் சாதனா செய்யவேண்டியது அவசியம். அந்த வாக்குறுதியை நீங்கள் எனக்கு தந்திட வேண்டும்.

ஒருமுறை நாம் கைலாஷ் யாத்திரையில் டிரெக்கிங் போயிருந்தோம். பகலில் மலை ஏறிக்கொண்டிருந்தோம். மாலை நேரத்தில் சத்சங்கங்கள்[4] இருந்தன. இது ஒரு சின்ன குழுவாக இருந்ததால், சூழல் அந்த அளவுக்கு முறைபட்டதாக இல்லை, கொஞ்சம் சாமானியமாகவே இருந்தது. நாம் பல விஷயங்களைப் பற்றி பேசிக்கொண்டு இருந்தோம் - வாழ்க்கை, மரணத்திற்கு பின் நடக்கும் விஷயங்கள், வேற்றுக்கிரக உயிர்கள் - இப்படி பலவிதமாக பேசிக்கொண்டிருந்தோம். அப்போது, அமெரிக்காவிலிருந்து

---

4 ஒரு குருவின் முன்னிலையில் நிகழும் ஆன்மீகக் கூட்டம்.

வந்திருந்த ஒரு தியான அன்பர், "சத்குரு, உங்களுடைய சிஷ்யர்களாக இருப்பது எங்களுக்கு பிரமாதமாக இருக்கிறது. எங்களுடைய குருவாக இருப்பது உங்களுடைய அனுபவத்தில் எப்படி இருக்கிறது?" என்று கேட்டார். இப்படிப்பட்ட கேள்வியை ஒரு அமெரிக்கர் மட்டும்தான் கேட்க முடியும். நான், "ஒரு யோகியாக இருப்பது மிகவும் அற்புதமானதாகவே இருக்கிறது. ஆனால், ஒரு குருவாக இருப்பது என்னவோ விரக்தியை ஏற்படுத்துவதாக இருக்கிறது. ஒரு கணத்தில் செய்யக்கூடிய விஷயத்திற்கு, மனிதர்கள் ஒரு வாழ்நாளையே எடுத்துக்கொள்கிறார்கள்," என்று சொன்னேன்.

ஒரு கணத்திற்கு உங்களை என்னிடம் கொடுத்தீர்கள் என்றாலும், நீங்கள் உண்மையாகவே முடிந்து போகும்படி நான் நிச்சயம் பார்த்துக்கொள்வேன். யாராவது உங்களை துப்பாக்கியால் சுட்டுவிட்டால், மறுபடியும் நீங்கள் வேறு எங்காவது தோன்றிட வாய்ப்பிருக்கிறது. ஆனால் எனக்கு அனுமதி அளித்தீர்கள் என்றால், நீங்கள் இதற்குப் பிறகு எந்த கர்ப்பத்திலும் மறுபடியும் தோன்ற முடியாத அளவிற்கு உங்களை சுட்டு வீழ்த்திவிடுவேன். பல பிறவிகள் தேவையில்லை - ஒரே ஒரு கணம் மட்டும்தான்!

எப்போது என்னுடன் உட்கார்ந்து விட்டீர்களோ, எப்போது அந்த தவறை செய்தீர்களோ, உங்களின் சில விஷயங்கள் ஏற்கனவே நிர்ணயிக்கப்பட்டு விட்டன. நிஜமாகவே விழவேண்டும் என்று நீங்களாக விரும்பி, உங்களுக்குள் இதற்கு எதிராக போக நினைத்தாலே தவிர, எல்லாம் ஏற்கனவே முடிவுசெய்யப்பட்டு போனதுதான். பலவிதங்களில், உங்களை சரிகட்டியாகிவிட்டது. உங்களுடைய வாழ்க்கையில் தலையிடுவதற்கு என்னவோ எனக்கு விருப்பமில்லை. ஆனால், உங்களுடைய மரணத்தை... வழக்கமாக என்னுடைய கைகளில்தான் வைத்திருக்கிறேன்.

